வசிட்டமாமுனிவர்
ஸ்ரீராமருக்குபதேசித்தருளிய
வமலராமாயணம் என்னும்

# ஞானவாசிட்டம்

இஃது
வீரை-ஆளவந்தாரென்னுமுனிவர்
அருளிச்செய்த மூலமும,

..................

பிறைசை - அருணாசலசுவாமிகள்
இயற்றிய உரையுடன

..................

பேறை - தசாவதானம,
செ. நா நாப்பிள்ளையவர்களால்
இயற்றிய நூதன கருததுரையுடன்

இரண்டாம்  புத்தகம்.



பிருஙகிமாநகரம
வேம்புலிமுதலியாரவர்கள் குமாரர்

## நமசிவாயமுதலியாரவர்களது

சென்னை - சூளை
நிரஞ்சனவிலாச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிககபபட்டன.

1924.

ஸ்ரீ

இரண்டாவது புத்தகம்

# ஞானவாசிட்டக் கதையினகராதி.



ஆக கதைகள் 20 - க்கு கவிதை 1043.

ஞானவாசிட்டக் கதையினகராதி

முற்றிற்று.

# ஞானவாசிட்டப்பாடலினகராதி.

ஞானவாசிட்டப்பாடலினகராதி

முற்றிற்று.

---

உ

ஓம்

சிவமயம்

# ஞானவாசிட்டம்

## உத்தாலகன் கதை

(அவதாரிகை.)

முற்கதையின் மனோரூபமான மாயையைத் தரிசித்ததற்குக் காரணமான பிரமத்தைத் தரிசிக்கில் ஜெகமில்லவேயில்லை என்று சொல்லி இவ்வனுபவம் ஆத்மவிசாரஞ் செய்தபடி சமாதி கூடியதனால் நவநவமாய் அனுபவிக்கும் நிரதிசயானந்தத்தை அறிவிக்கு நிமித்தம் உத்தாலகன் கதையை நிரூப்பிக்கிறார்.

மாயையானது ஸ்வானுபவம் இல்லாதவர்களை

வருத்துமென்றறிவித்தல்

இவ்வகையே யிம்மாயை யறநெடிதாய் வெலற்கரிதா யேறித்
தாழ்ந்து, வெவ்விய மாமோகங்கள் விளைவித்துப் பரமத்தின் மேவி
நிற்கு, மவ்வகையா லுரைக்கின்றே னநவரதஞ் சொரூபத்தை யடை
யாதாரைப், பவ்வமென வருந்துயரி னழுத்திவிடு மிம்மாயைப்
பண்புதானே.

### இதன்பொருள்.

இவ்வகையே - இந்தப்பிரகாரமே, இம்மாயை - இந்த மாயையானது, அறநெடிதாய்-மிகவும் விஸ்தாரமாய், வெலற்கரிதாய் - ஜெயித்தற்கரியதாய், ஏறித்தாழ்ந்து - உயர்ந்துதாழ்ந்து, வெவ்விய மாமோகங்கள் - கொடிய மகாமயக்கங்களை, விளைவித்து - உண்டாக்கி, பரமத்தின்மேவி நிற்கும்- பிரமத்திற் பொருந்தியிருக்கும், அவ்வகையால - அந்தப்பிரகாரத்தினால், உரைக்கின்றேன் - சொல்லுகின்றேன், அநவரதம் - சதாகாலமும், சொரூபத்தை அடையாதாரை - (பிரம) ஸ்வரூபத்தை அடையாதவர்களை, பவ்வமென - சமுத்திரத்தைப்போல, வருந்துயரில் - வருகின்ற துன்பத்தில், இம்மாயைப்பண்புதான் - இந்த மாயையின் குணமானது, அழுத்திவிடும்- அழுத்திவிடும்:—எ-று.

### என்பது.

இந்தப்பிரகாரமே இந்த மாயையானது மிகவும் விஸ்தாரமாய் ஜெயித்தற்கரியதாய் உயர்ந்து தாழ்ந்து கொடிய மகா மயக்கங்களை

உண்டாக்கி பிரமத்திற் பொருந்தியிருக்கும். அந்தப்பிரகாரத்தினால் சொல்லுகின்றேன். சதாகாலமும் பிரமஸ்வரூபத்தை அடையாதவர்களை சமுத்திரத்தைப்போல வருகின்ற துன்பத்தில் இந்த மாயையின் குணமானது அழுத்திவிடும்.—ப-ம்.

### மாயாநாசவுபாயமானது மனோநாசத்தைத் தவிர வேறின்றெனல்

சித்தசய மாத்திரமாந் தெய்வமருந் தாலன்றிச் சென்ம வெந்
நோய் சத்தியமே பிறமுயற்சி யாலவையினுந் தீராது தகைமை மிக்
கோய், வைத்தநிகழ் காலத்துக் கணத்தில்வரு மியல்புறவா கியத்
தாற் பற்றி, யொத்துவரு மெதிர்கால மிறந்தகா லங்கருதா ருளமி
லாதார்.

இ-ள். **சித்தசயமாத்திரமாய்** - மனோசயமாத்திரமான, **தெய்வமருந்தாலன்றி** - தேவாவிடதத்தினாலல்லாமல் **செம்மவெந்நோய்** - சநநமென்னுங்கொடிய வியாதியானது, **சத்தியமே** - பிரமாணமே, **பிறமுயற்சியாலவையினும்** - மற்றெந்த முயற்சியினாலும், **தீராது** - நீங்காது, **தகைமைமிக்கோய்** - சற்குணத்தின் மிகுந்த ஸ்ரீராமா, **வைத்த** - (கிரமமாக) வைத்த, **நிகழ்காலத்து** - வர்த்தமானகாலத்தில், **கணத்தில்** - க்ஷணத்தில், **இயலபுற** - (வன்னாச்சிரம) கிரமமாக, வருகின்ற (தொழிலை), **வாக்கியத்தாற் பற்றி** - புறம்பிற்பிடித்து, **ஒத்துவரும்** - பொருந்தாநின்ற, **எதிர்காலம்** - வருங்காலத்தையும், **இறந்தகாலம்** - சென்றகாலத்தையும், **உளமிலாதார்** - மனஇல்லாதவர்கள், **கருதார்** - (உள்ளே) நினைக்கமாட்டார்கள்-எ-று.

எ-து. மனோசயமாத்திரமான தேவாவிடதத்தினாலல்லாமல் ஜநநமென்னுங் கொடிய வியாதியானது பிரமாணமே மற்றெந்த முயற்சியினாலும் நீங்காது. சற்குணத்தின் மிகுந்த ஸ்ரீராமா! கிரமமாகவைத்த வர்த்தமானகாலத்தில் க்ஷணத்தில் வன்னாச்சிரம கிரமமாக வருகின்ற தொழிலை புறம்பிற்பிடித்து பொருந்தாநின்ற வருங்காலத்தையும் சென்றகாலத்தையும் மனதில்லாதவர்கள் உள்ளே நினைக்கமாட்டார்கள்—ப-ம. (௨)

### மனோநாச வுபாயம் பிரத்தியகாத்தும ஸ்வரூப தெரிசனத்தைத் தவிர வேறின்றெனல்

சங்கற்ப வேட்கையானு சந்தானங் கணந்தோறுந் துயிர்த்தி
யென்னின், மங்குற்ற மனையந்தா னதுவாகு மனமேயத் தநுமருவு
போதம், பங்கற்ற பிரத்தியகீச தனமாகு மதற்கு மனோ பாவமெ
ன்ப, தங்குதந்தா னிலவியல்பா மாதலினான் மனோவிகற்ப மின்றிப்
போமே.

**சற்புருடர்களிடத்திலும் குற்றமற்ற ஆத்மஞான சாஸ்திரங்களிலும், என்றும் - எப்பொழுதும், மனத்தைக்கூட்டி - மனதைச்சேர்த்து—எ-று.**

இ-ரை. மநோயந்தமானது முழுதாநீங்குதலே மறைவில்லாத உண்மையும, மேலானசிவமும், பிரமாவநந்தையும, சர்வக்கியத்துவமும், பூரணாநந்தமும், களங்கமில்லாததுமாம். பொருந்திய அஞ்ஞானத்தைக்கெடுக்கு திடவற்சாகத்தினால் நிச்சயமாக குற்றமற்ற சற்புருடர்களிடத்திலும் குற்றமற்ற ஆத்மஞான சாஸ்திரங்களிலும் எப்பொழுதும் இம்மனதைச் சேர்க்கு—எ-ம். (4)



### அதனால் விடய இச்சையைக்கெடுத்து ஆநந்தபோத மாவாயெனல்

அனவரத முரைத்தல்விடல் பற்றலிமைப் புறல்விழித்த லினைத்துஞ் செய்து, மனனமறுசுகவானாய்ச் சற்சின்மாத் திரபரனாய் வாழ்தி மைந்தா, கனமலமாங் காண்பமைதீர்த் துள்ளத்தின் மலமறுத்துக் காதற் பாச, மெனவுயர்கோ ரையையறுத்து நின்னறிவிற் றற்பரனா யிருத்தி யன்றே.

**இ-ள். அனவரதம் - சதாகாலமும், உரைத்தல் - சொல்லுதலும், விடல் - விடுதலும், பற்றல் - பற்றுதலும, இமைப்புறல் - கண்மூடுதலும், விழித்தல் - கண்டிரத்தலுமாகிய, அனைத்துஞ்செய்தும் - சகலதொழில்களையுஞ்செய்தும், மனனமறு - சிந்தனையில்லாத, சுகவானாய் - ஆநந்தத்தையுடையவனாய் சற்சின்மாத்திரபரனாய்- சற்சின்மாத்திரபரனாக, மைந்தா - குழந்தாய், வாழ்தி - வாழக்கடவாய், கனமலமாம் - மிகுந்தகளங்கமாகிய, காண்பமைதீர்த்து - திரிஸ்யத்தைநீக்கி, உள்ளத்தின்மலமறுத்து- மனதின்களங்கத்தைக்கெடுத்து, காதற்பாசமெனா - ஆசாபாசமென்னும், உயர்கோரையையறுத்து-வளராநின்ற கோரையையறுத்து, நின்னறிவில் - உனதாத்மஞானத்தில், தற்பரனாயிருத்தி- பிரமஸ்வரூபனாயிருப்பாய்-எ-று.**

எ-து. சதாகாலமும் சொல்லுதலும், விடுதலும், பற்றுதலும, கண்மூடுதலும், கண்விழித்தலுமாகிய சகல தொழில்களையுஞ்செய்தும சிந்தையில்லாத ஆநந்தத்தையுடையவனாய் சற்சின்மாத்திரபரனாக குழந்தாய்! வாழக்கடவாய் மிகுந்த களங்கமாகிய திரிஸ்யத்தை நீக்கி மனதின் களங்கத்தைக் கெடுத்து ஆசாபாசமென்னும் வளரா நின்ற கோரையையறுத்து உனதாத்மஞானத்தில் பிரமஸ்வரூபனா யிருப்பாய்—எ-ம.

இரண்டற்றொன்றாய் - துவிதமிறந்து அத்துவிதமாய், கனவயிரத்தம்பமென - கனமுள்ள வயிரஸ்தம்பத்தைப்போல, உணர்வுருவைப்பற்றி - ஆத்மஞான ஸ்வரூபத்தைப்பிடித்து, நிலைகண்டு நிற்பாய் - அந்நிலையைத் தரிசித்திருப்பாய், அனகமுடன் - பாவமின்மையுடன், அமலமதாய் - மாசின்மையாய், அகண்டமாம் - பூரணமாகிய, தன்னறிவில் - தனதுஞானத்தில், அமைவென்றுண்டாம் - பொருந்துதல் எப்போதுண்டாகுமோ, அன்று - அப்பொழுதே, சனனமயக்கத்துக்குக் காரணமாம்பிரிவு - பிறவி மயக்கத்துக்கு மூலமாகின்ற பேதமானது, தவிர்த்துபோம் - நீங்கிப்போம்—எ-று.

எ-து. என்னதும் அன்னியருமென்று சொல்லப்பட்ட நினைப்பறும்படி உலகத்தின்கண் துவிதமிறந்த அத்துவிதமாய் கனமுள்ள வயிரஸ்தம்பத்தைப்போல ஆத்மஞானஸ்வரூபத்தைப் பிடித்து அந்நிலையைத் தரிசித்திருப்பாய். பாவமின்மையுடன் மாசின்மையாய் பூரணமாகிய தனது ஞானத்தில் பொருந்துதல் எப்போதுண்டாகுமோ அப்பொழுதே பிறவி மயக்கத்துக்கு மூலமாகின்றபேதமானது நீங்கிப்போம்—எ-ம். (7)

---

பேத ரூபமான மனந்தடிக்காவிடிற் பேராநந்த முதிக்குமெனல்



பேராநந் தத்தின்ப நிலையினியல் பினைநோக்காய் பின்னை நிற்கும், வாராத நல்லமுதம் வந்தாலு முயிர்தொலைக்க வருநஞ் சொக்கும், சோராமெய்யுணர்வுடைமை தூரிதா மனந்தடித்துத் துன்றுமாகிற், காரான முகில்சூழ மறைந்தாலுண்டோ மதியங் கண்ணின் காட்சி.

இ-ள். பேராநந்தத்தின்பம் - பேராநந்தவிரசத்தின், நிலையினியல்பினை - நிலையினுடைய சுபாவத்தை, நோக்காய் - பார்ப்பாய், பின்னை நிற்கும் - பின்பு நிற்கின்ற, வாராத - வருதற்கரிய, நல்லமுதம் - நல்லதேவாமிர்தமானது, வந்தாலும் - வந்துபொருந்தினாலும், உயிர்தொலைக்க வருநஞ்சொக்கும் - உயிரைப்பிரிக்கவாநின்ற விடத்துக்குச் சமானமாம், சோரா - சோர்வில்லாத, மெய்யுணர்வுடைமை - உண்மைஞானமுடைமையானது, மனந்தடித்து - மனமானதுபருத்து, துன்றுமாகில் - நெருங்குமானால், தூரிதாம் - தூரமாகும், காரானமுகில் - கறுத்தமேகமானது, சூழமறைத்தால் - சூழும்படி மறைக்கில், மதியம் - பூரணச்சந்திரனது, கண்ணின்காட்சி - கண்ணுக்குக் காட்சியானது, உண்டோ - உண்டாகுமோ— என்றவாறு.

எ-து. பேராநந்தவிரசத்தின் நிலையினுடைய சுபாவத்தைப் பார்ப்பாய். பின்பு நிற்கின்ற வருதற்கரிய நல்ல தேவாமிர்தமானது வந்து பொருந்தினாலும் உயிரைப் பிரிக்கவாநின்ற

விடத்துக்குச் சமானமாம். சோர்வில்லாத உண்மைஞான முடைமையானது மனமானது பருத்து நெருங்குமாகில் தூரமாகும். கறுத்த மேகமானது சூழும்படி மறைக்கில் பூரணச்சந்திரனது கண்ணுக்குக் காட்சியின்று உண்டாகுமோ—எ-ம்.

(இ-அ-க-ம்) மாயைக்கு மூலமான மனதைக்கெடுக்கில் அப்பொழுதே சச்சிதானந்தமாய் விளங்குவாய் என்பதாம். (8)

## மனந்தடிப்புற்ற தறிவித்தல்.

சரீரமாத் திரத்தாசை புந்தியாற் றானல்லா தனதா னென்றே, பரிவுறலான் மக்கண்மனை குடும்பமெனும் பாவனையாற் பருக்குமுள் ளம், விரியுமகங் காரவிகா ரத்தினன் மமதைமல விநோதந் தன்னு, லுரியமென திதுவென்னும் பாவனையான் மிகப்பருக்கு முள்ளந் தானே.

இ-ள். சரீரமாத்திரத்தாசை - தேகமட்டுமிச்சையையுடைய, புந்தியால் - புத்தியினால், தானல்லாதன - தானல்லாத (வனாத்மாவை), தானென்று - ஆத்மாவென்று, பரிவுறலால்-அன்புபொருந்துவதால், மக்கள்-புத்திரர்களும், மனை - இல்லாளுமாகிய, குடும்பமெனும் - சம்சாரமென்கின்ற, பாவனையாய் - நினைப்பினால், உள்ளம் - மனமானது, பருக்கும் - வளரும், விரியும் - விஸ்தாரமாகின்ற, அகங்காரவிகாரத்தினால் - அகங்கார வேற்றுமையினால், மமதை - மமதையான, மலவிநோதந்தன்னால் - களங்கவிளையாட்டினாலும், உரிய - உரித்தான, எனது இது என்னும் பாவனையால் - இது எனதென்கின்ற பாவனையினாலும், உள்ளந்தான் மிகப்பருக்கும் - மனமானது மிகவும் வளரும்—எ-று.

எ-து. தேகமட்டும் இச்சையையுடைய புத்தியினால் தானல்லாதவனாத்மாவை ஆத்மாவென்று அன்புபொருந்துவதால் புத்திரர்களும் இல்லாளுமாகிய சம்சாரமென்கிற நினைப்பினால் மனமானது வளரும். விஸ்தாரமாகின்ற அகங்காரவேற்றுமையினால் மமதையான களங்கவிளையாட்டினாலும் உரித்தான இது எனதென்கின்ற பாவனையினாலும் மனமானது மிகவும் வளரும்—எ-ம். (9)

இதுவுமது

ஆதிவியா தியின்விரிவா லவமாதித் தேறுதலா லகற்றல் பற்ற, லூதியமா முயற்சியினாற் பிறவினொ டுயர்வு மிகப்பருக்கு முள்ளமைந்தா, மாதர்மணி தனமுதலா நேயத்தா லாபத்தால் வருலோ

பத்தாற், போதுபொழு திவைநன்று நலத்தினாற் பருத்துள்ளம் பூரிப் பாமே.

**இ-ள். ஆதிவியாதியின்விரிவால் - ஆதிவியாதியினது விஸ்தாரத்தினாலும், அவைமாறித்தேறுதலால் - அவைகண்மாறி (சம்சார) த்தில் விசுவாசித்துத் தங்குதலினாலும், அகற்றல் - நீக்குதலுக்கும், பற்றல் - பிடித்தலுக்கும், ஊதியமாமுயற்சியினால் - இலாபமான எத்தனத்தினாலும், பிறவிதொறும் - ஜநநங்கடோறும், மைந்தா - குழந்தையான ஸ்ரீராகவா, உள்ளம் - மனமானது, மிகப்பருக்கும் - மிகவும் வளரும், மாதர் - ஸ்திரீகள், மணி இரத்தினங்கள், தனம் - திரவியங்கள், முதலாம் - முதலானவைகளில் (உண்டான), நேயத்தால் - ஆசையினாலும், இலாபத்தால் - இலாபத்தினாலும், வருலோபத்தால் - வாராநின்ற உலோபத்தினாலும், போதுபோழுது - வருகின்ற காலத்தில், இவை நன்றும் - இவைகள் நல்லனவாம், நலத்தினால் - இந்நன்மையினால், உள்ளம் - மனமானது, பருத்து - பெருத்து, பூரிப்பாம் - பூரிக்கும்—எ-று.**

எ-து. ஆதிவியாதியினது விஸ்தாரத்தினாலும், அவைகண் மாறி சம்சாரத்தில் விசுவாசித்துத் தங்குதலினாலும், நீக்குதலுக்கும் பிடித்தலுக்கும் இலாபமான எத்தனத்தினாலும், ஜநநங்கடோறும் குழந்தையான ஸ்ரீராகவா! மனமானது மிகவும் வளரும் ஸ்திரீகள், இரத்தினங்கள் முதலானவைகளில் உண்டான ஆசையினாலும் இலாபத்தினாலும் வாராநின்ற உலோபத்தினாலும் வருகின்ற காலத்தில் இவைகள் நல்லனவாம். இந்நன்மையினால் மனமானது பெருத்து பூரிக்கும்—எ-ம்.

**(இ-உ-க-ம்.) தேகபோகமுதலிய அகம்பாவத்தினா லுண்டான ஆதிவியாதிமுதலிய சங்கற்பத்தான் மனம் விருத்தி யடையுமென்பதாம். (40)**

---

**பஞ்சவிடயங்களால் பருக்கின்ற மனமஃதுகெடில் இஃதுங்கெடுமென்பதற்குத் திருஷ்டாந்தம் அறிவிக்கத் தொடங்கல்.**

---

துராசையெனும் பால்பருகித் தொல்போகம் எனுங்காற்றாற் றொடர்மெய்ப் புண்டா யிராக முறு வழியுலவி மனப்பாம்பு மிகப்பருக்கு மிராம கேளாய், புராதனைத் தாலகன்போ லெம்புத்தை யுமொழியாய்ப் போகப் பன்னி, நிராகுலமாம் புந்தியினு லிதயத்தை நினைந்தியென கிழ்த்த லோடும்.

**இ-ள். துராசையெனு பால்பருகி - துராசை யென்கின்ற, பாலைப்புசித்து, தொல்போகமெனும்-பழமையான போகமென்கின்ற, காற்றால்-வாயுவினால், தொடர்மெய்ம்புண்டாய் - தொடர்பான பலமுண்டாய், இராக**

முறைவழியுலவி - இச்சிக்கப்பட்ட மார்க்கத்திற் சஞ்சரித்து, மனமென்னுஞ் சற்பமானது, மிகப்பெருக்கும் - மிகவும்பெருக்கும், இராமசேனாய் - ஸ்ரீராமா நீ கேட்பாய், புராதன வுத்தாலகன்போல் - பழைய உத்தாலகமுனியைப்போல, ஐம்பூதங்களையும் - பஞ்சபூதங்களையும், பொடியாய்ப்போகப் பண்ணி - தூளியாய்ப்போகச்செய்து, நிராகுலமாம் புத்தியினால் - வருத்தமற்ற புத்தியினால், இதயத்து - மனதில், நினைத்திடென - விசாரிப்பாயென்று, செழித்தவேதமும் - வசிட்டமுனி சொன்னமாத்திரத்தில்—எ-று.

எ-து. ஆசையென்கின்ற பாலைப்புசித்து *பழமையான போகமென்கின்ற வாயுவினால் தொடர்பான பலமுண்டாய் இச்சிக்கப்பட்ட மார்க்கத்திற் சஞ்சரித்து மனமென்னுஞ்சற்பமானது மிகவும்பெருக்கும். ஸ்ரீராமா! நீ கேட்பாய்; பழைய உத்தாலகமுனியைப்போல பஞ்சபூதங்களையும் தூளியாய்ப் போகச்செய்து வருத்தமற்ற புத்தியினால் மனதில் விசாரிப்பாயென்று வசிட்டமுனி சொன்னமாத்திரத்தில்— எ-ம்.

ப-ம். பஞ்சவிடயங்களைக் கெடுக்கவேண்டுமென்பார், ஐம்பூதத்தையும் பொடியாய்ப் போகப்பண்ணியென்றார். (இ-ம்.) உத்தாலகமுனியை இப்போல இம்மனதைக் கெடுக்கவேண்டுமென்பதாம். 11)

## இராமன் வினவுதல்.

அருளியவுத் தாலகனெந் நெறியா லைம்பூத மறுத்துத் தன்னுட், கருதியதென் னென்றிராகவன்கேட்ப வசிட்டமுனி கருணை வள்ளால், பெருமையைம் பூதத்தை விசாரத்தாற் பேதித்துப் பிரமமெய்தி, யொருமையுறு நிலையுடைய வுத்தாலகன் கதையா மூரைப்பக் கேட்பாய்.

இ-ள். அருளியவுத்தாலகனார் - நீரருளிச்செய்த உத்தாலகமுனியானவர், எந்நெறியால் - எந்த மார்க்கத்தினால், ஐம்பூதமறுத்து - பஞ்சபூதத்தையுங்கெடுத்து, தன்னுட்கருதிய தென்னென்று - தனக்குட்சிந்தித்த தென்னவென்று, இராகவன்கேட்ப - ஸ்ரீராமன்கேட்க, வசிட்டமுனி - வசிட்டமுனியானவர், கருணைவள்ளால் - கிருபையுள்ள ஸ்ரீராமா, பெருமையைம்பூதத்தை - விரிந்த பஞ்சபூதத்தை, விசாரத்தால் - (ஆத்ம) விசாரணையினால், பேதித்து - கெடுத்து, பிரமமெய்தி - பிரமத்தையடைந்து, ஒருமையுறு நிலையுடைய - அத்துவித நிலையையுடைய, உத்தாலகன்கதை - உத்தாலகமுனியினுடைய கதையை, யாமுரைப்பக்கேட்பாய - நாஞ்சொல்லக் கேட்பாய்—எ-று.

எ-து. நீரருளிச்செய்த உத்தாலகமுனியானவர் எந்தமார்க்கத்தினால் பஞ்சபூதத்தையுங் கெடுத்து தனக்குட்சிந்தித்ததென்ன

வென்று ஸ்ரீராமன்கேட்க, வசிட்டமுனியானவர் கிருபையுள்ள ஸ்ரீராமா! விரிந்தபஞ்சபூதத்தை ஆத்மவிசாரணையினால் கெடுத்து பிரமத்தை யடைந்து அத்துவித நிலையையுடைய உத்தாலகமுனி யினது கதையை நாஞ்சொல்லக்கேட்பாய்--ஏ-ம்.

இ-ம். உத்தாலகமுனி ஞானமடைந்த மார்க்கம் இதுவென்றறிவிக்கத் தொடங்கினதாம். (12

## முனியின் முமுக்ஷுத்துவப் பருவமுணர்த்தல்.

கந்தமா தனமென்னுங் கனவரையிற் கர்ப்பூரங் கமழா நின்ற, கொந்தலர்சோ லைச்சார லுறைபவனுத் தாலகப்பேர் கோதிலாதோ, னந்தமுனி வரன்முன்னே சிற்றறிவின் விசாரதோ னகண்ட வாழ் விற், சிந்தையிடர் தீரவிளைப் பாராதோன் புந்திநலந்திருந்தப் பெற் றோன்.

இ-ள. கந்தமாதனமென்னும் - கந்தமாதனமென்கின்ற, கனவரை யில் - மேன்மைபொருந்திய மலையில், கர்ப்பூரங் கமழாநின்ற - கருப்பூரம் பரிமளிக்கின்ற, கொந்தலர் சோலைச்சாரல் - பூங்கொத்துகளையுடைய வனங்கள் சூழ்ந்த மலைச்) சாரலில், உறைபவன்-வசிப்பவன், உத்தாலகப் பேர் - உத்தாலகனென்னு நாமத்தையுடையவன், கோதிலாதோன் - குற் றமற்றவன், அந்தமுனிவரன்-அழகியமுனிசிரேஷ்டன், முன்சிற்றறிவன் முன்பு கொஞ்ச வறிவை யடையவன், விசாரதோன - விசாரணையை யுடையவன், அகண்டவாழ்வில் - பரிபூரணவாழ்வில், சிந்தையிடர்தீர - மனதிற்றுன்பங்கெட, இளைப்பாராதோன - விஸ்ராந்தியடையாதவன், புந்திநலந் திருந்தப்பெற்றோன் - புத்தியினது நன்மையைத் திருந்தமாகப் பெற்றவன்—எ-று.

எ-து. கந்தமாதனமென்கின்ற மேன்மை பொருந்திய மலையில் கருப்பூரம் பரிமளிக்கின்ற பூங்கொத்துகளை யுடைய வனங்கள் சூழ்ந்த மலைச்சாரலில் வசிப்பவன். உத்தாலகனென்னு நாமத்தையுடையவன். குற்றமற்றவன். அழகிய முனிசிரேஷ்டன். முன்புகொஞ்ச வறிவையுடையவன். விசாரணையை யுடையவன். பரிபூரண வாழ்வில் மனதிற றுன்பங்கெட விஸ்ராந்தி யடையாதவன். புத்தியினது நன் மையைத் திருந்தமாகப்பெற்றவன்—எ-ம.

இ-ம். சித்தசுத்தி வந்து விஸ்ராந்தி வரவில்லை என்பதாம். (13)

விஸ்ராந்தியுள்ள பரபத மியாதென விசாரித்தல்.



பூதநெறி யாற்றவமுற் றூற்பொருளால் யமநியமம் பொருந்து
நீரால், தீதறுநல் விவேகந்தான் சேர்தலுமே யவனிலைய சிந்தை செ
ய்தான், கேதமற விளைப்பாறும் பதமேது மறுபிறவிக் கேடிலாத, மே
தகைய பதமேதிங் கிதுவன்றோ முதல்விரைவின் மேவற் பாற்றே.

இ-ள். பூதநெறியால் - பரிசுத்தமார்க்கத்தினாலும், தவத்தால் - (நிட்காம) தவத்தினாலும், நூற்பொருளால் - (ஞான) சாஸ்திரார்த்தங்களினாலும், யமம் - இயமமும், நியமம் - நியமமும், பொருந்து நீரால் - பொருந்துந் தன்மையினாலும், தீதறுநல்விவேகந்தான் - குற்றமற்ற நல்விவேகமானது, சேர்தலும் - வரவும், அவன் - அந்த உத்தாலகன், இனைய சிந்தை செய்தான் - இத்தன்மையாகச் சிந்தித்தான், கேதமற - துன்பமற, இளைப்பாறும்பதமேது - விஸ்ராந்தியடைகின்ற இடமியாது, மறுபிறவி - மறுஜநநமென்னும், கேடிலாத - கெடுதலில்லாத, மேதகையபதமேது - மேன்மையான பதமியாது, இங்கிதுவன்றோ - இவ்விடத்திலிதுவல்லவா, முதல் விரைவில் - முன்பு சீக்கிரத்தில், மேவற்பாற்று - பொருந்தத்தக்கது—எ-று.

எ-து. பரிசுத்தமார்க்கத்தினாலும், நிட்காமதவத்தினாலும், ஞான சாஸ்திரங்களினாலும், இயமமும் நியமமும் பொருந்துந்தன்மையினாலும், குற்றமற்ற நல்விவேகமானது வரவும அந்த உத்தாலகன் இத்தன்மையாகச் சிந்தித்தான். துன்பமற விஸ்ராந்தியடைகின்ற இடமியாது? மறுஜநநமென்னும் கெடுதலில்லாதமேன்மையான பதமியாது? இவ்விடத்தில் இதுவல்லவா முன்பு சீக்கிரத்தில் பொருந்தத்தக்கது—எ-ம். (14)

போகவிச்சை யெப்போது எனதுள்ளத்தில் நின்று நீங்குமெனல்.



உளநினைவி லாவிமல பரபதத்தே நெடுங்கால மொன்றி யொன்
றாய்க், கிளர்கனக வரைச்சிகரத் துறைமுகில்போ லிளைப்பாறக்
கிடைப்ப தென்றோ, டளர்வறவி தியற்றின்மே லெல்லையிலுற்றக்
தக்கதெனச் சுகிக்குச் செல்லு, மளவறுபோ கச்செல்வ மெனதுள
நின் றெக்கால மவிழ்ந்து போமே.

இ-ள். உளநினைவிலா - மனோசங்கற்பமில்லாத, விமலபரபதத்து - நிருமலமான பரமபதத்தில், நெடுங்காலம் - அளவிலகாலம், ஒன்றியொன்றாய் - கலந்தேகமாய், கிளர்கனகவரைச்சிகரத்து - விளங்காநின்ற மகா மேருவின்முடியில், உறைமுகில்போல் - பொருந்திய மேகத்தைப்போல,

இவைப்பாற (யான்) விஸ்ராந்தியடைய, எக்கான்-எப்போது, கிடைப்பது கிடைக்கும், தளர்வற - தளர்விலலாமல், சந்தபற்றி - இதைசம்செய்து, மேலவை இயற்றத்தக்கதென - இனியதை முயற்சிக்கத்தக்கதென்று, சலித்துச்செல்லும் - சலனமாகிச்செல்கின்ற, அளவறுபோகச்செல்வம் - அளவற்ற போகசம்பத்துகள், எனதுளமின்று - எனதுமனதின்கணணின்றும், எக்காலமவிழ்ந்துபோம் - எந்தக்காலத்தில விடுபட்டுப்போகும்—எ-று.

எ-து. மனோசங்கற்பமில்லாத நிருமலமான பிரமபதத்தில அளவில்காலம் கலங்கேகமாய் விளங்காநின்ற மகாமேருவின்முடியில பொருந்திய மேகத்தைப்போல யான் விஸ்ராந்தியடைய எப்போது கிடைக்கும். தளர்வில்லாமல இதைசசெய்து இனியதை முயற்சிக்கத்தக்கதென்று சலனமாகிசசெல்கின்ற அளவற்றபோக சமபத்துகள் எனது மனதின்கண்ணின்றும எநதக்காலத்தில விடுபட்டுப்போகும்—எ—ம். (௧௫)

## ஆத்மசுகம் எப்போது வருமெனல்.

மனனமெனுந திரைமோதி மதத்தெழுநத பேராசை வாரிதனனிற், புனிதமுறும புந்தியிஞ லழுந்தாமற கரையேறிப போவ தெந்நா, ளனவரதந தொழிலொழிவி லாமைகள் போய்ப்பற றுவீடின்றி யுள்ளே, தனதொழியாம பதமேவி யெககால மகிழ்வுறுவேன் றளராநின்றேன்.

இ-ள். மனனமெனுந் திரைமோதி - மனனமென்கின்ற வலையைய யடித்து, மதத்தெழுந்த - மதத்தோடும வளர்ந்த, பேராசைவாரிதன்னில்-மிருந்த இச்சையென்னுஞ் சமுத்திரத்தில், புனிதமுறுபுந்தியினுல் - பரிசுத்தம்பொருந்திய அறிவென்கின்ற (வங்கத்) தினுல், அழுந்தாமல்-முழுகாமல், எக்கான் - எக்காலத்தில், கரையேறிப்போவது - கரையேறுவது, அனவரதம் - சதாகாலமும், தொழிலொழிவிலாமை - கிரியாக்கிரியைக ளில்லாமைகளும், போய் - நீங்கி, பற்றுவீடின்றி - பற்றுதல் விடுதலில்லாமல், உள்ளே தனதொழியாம்பதமேவி - அகத்திற் சுப்பிரகாசமான பதத்தைப்பொருந்தி, எக்காலம் - எப்போதும், தளராநின்று-(மனந்) தளராமனின்று, மகிழ்வுறுவேன் - மகிழ்ச்சியடைவேன்—எ-று.

எ-து. மனனமென்கின்ற வலையை யடித்து மதத்தோடும வளர்ந்த மிருந்த இச்சையென்னுஞ் சமுத்திரத்தில பரிசுத்தம பொருந்தி அறிவென்கின்ற வங்கத்தினுல் முழுகாமல் எக்காலத் தில் கரையேறுவது? சதாகாலமும் கிரியாகிரியைக ளிலலாமைகளும் நீங்கி பற்றுதல் விடுதலில்லாமல் அகத்திற் சுப்பிரகாசமான

ந்தவிருந்த விடங்களோறும், வேகத்துகளும் - வேகத்துடன் பாய்கின்ற, மனக்குரங்கு - மனமென்னு மற்கடமானது, விடயக்கொம்புகளிற்பாய - விடயமென்னும் பணைகளிற்றாவுதலால், சோகத்திறந்தீர் - துன்பத்தின் தன்மைகளில்லாத, மகிழ்ச்சிபெறும் - மகிழ்ச்சியையடைகின்ற, சொரூப சமாதி பெற்றிலன் - ஸ்வரூபசமாதியை யடைந்திலன்—எ-று.

எ-து. மனதில் இந்தப்பிரகாரஞ் சிந்தித்து மிகவும் உத்தாலக முனியானவர் உள்ள பரவசத்தை யுடையவனாய் ஒன்றானபிரமத் தியானத்தைச் சாதிக்கும்பொருட்டு இருந்த இருந்த இடங்களோறும் வேகத்துடன் பாய்கின்ற மனமென்னு மற்கடமானது விடய மென்னும் பணைகளிற் றாவுதலால் துன்பத்தின் தன்மைக ளில்லாத மகிழ்ச்சியை யடைகின்ற ஸ்வரூபசமாதியை யடைந்திலன்—ஏ-ம்.

(இ-கு-க-ம்.) விடய சுகம் துன்பமென்று வருந்திப் பரமசுகங்கூடாமல் பரதவித்துக்கொண்டிருக்கின்ற, தீவாதா முண்டாயின தென்பதாம்.

## ஒன்றிலும் தரிகொள்ளாமல் சுழலுதல்.

நிறனார் கானி லிவ்வகையே நிலைபற்றலைவோன் பின்னொருநாட்
புறனார் காட்சி யொழிந்திடலாற் பொல்லா மனமாம் வன்குரங்கு
திறனா ரிருண்மூ டியதென்னத் தியானங்களிலே யுள்ளழியா
வறனார் கிரியி னுலைந்துழல்வுற் றறவே வாடி யலமந்தான்.

இ-ள். நிறனார் கானிலிவ்வகை - விளங்காநின்ற கானகத்தில் இந்தப் பிரகாரம், நிலைபற்றலைவோன் - நிலையில்லாமல் அலைகின்ற உத்தாலகன், பின்னொருகால் - பின்பொருநாளில், புறனார் காட்சி - புறம்பிலுள்ள விடய திருஷ்டி, ஒழிந்திடலால் - தவிர்ந்தபடியால், பொல்லாமனமாம் - பொல்லாதமனமாகிய, வன்குரங்கு - பலம்பொருந்திய மற்கடமானது, திறனாரிருண்மூடியதென்ன - திடமான அந்தகார மூடினதுபோல, தியானங்களில் - சமாதிகளில், உள்ளழியா - அகம் வருத்தமுற்று, அறனார் கிரியில் - தருமமிருந்தமலையில், உலைந்துழல்வுற்று - வருத்தங்களோடுஞ் சுழன்று, அறவேவாடி - மிகவுஞ்சோர்ந்து, அலமந்தான் - சுழன்றான்—எ-று.

எ-து. விளங்காநின்ற கானகத்தில் இந்தப்பிரகாரம் நிலையில்லா மலலைகின்ற உத்தாலகன் பின்பொருநாளில் புறம்பிலுள்ள விடய திருஷ்டி தவிர்ந்தபடியால் பொல்லாத மனமாகிய பலம்பொருந்திய மற்கடமானது திடமான அந்தகாரமூடினதுபோலசமாதிகளில் அகம் வருத்தமுற்று தருமமிருந்தமலையில் வருத்தத்தோடுஞ் சுழன்று மிக வுஞ்சோர்ந்து சுழன்றான்—ஏ-ம்.

இ-ம். மனமானதொருகாற் பரிகிய வடிவத்தை விடுதலும் மனோரத பரிகற்பிதமான ஆனந்தவிடயத்தை யடைதலும் ஒருகாலவிலத்தை விட்டிலத்தை விர்ஜித்தலும் ஒருகாற்பயமடைந்த பக்ஷியைப்போலத் துள்ளியோடுதலும், ஒருகாலிராசதகுண பிரகாசத்தையுஞ் சத்துவகுணம்பாத்தையுந் தமோகுணவந்தகாரத்தையும் பார்த்தலுமென்பதாம்.

நிருவிகற்ப சமாதியினிமித்தம் ஆசனங்கட்டி யிருத்தல்.



யாருமின்றி யாராலு மெய்தற் கரிதா கியமுழைதான்
சாரு முத்திப் பதமெனலாந் தன்னிலொருகாற் றனிமேவி
யாரு மலைக்குன் றயின்றழைமே லருணச்சருமம் விரித்ததன்மே
லோரு மனத்தின் செயல்குறுக்கி யுணர்வான் புத்தன்போலாகி.

இ-ள். யாருமின்றி - ஒருவருமில்லாததாகியும், யாராலுமெய்தற்கரிதாகிய - யாவராலும் அடையக்கூடாததாகியு மிருக்கின்ற, முழைதான் - குகையானது, சாருமுத்திப்பதமெனலாம் - சேராநின்ற மோக்ஷ இடமென்று சொல்லப்படும், அதனில் - அக்குகையில், ஒருகாற்றனிமேவி - ஒருபொழுது தனித்துச்சென்று, ஆருமலைக்குன்றயின்றழைமேல் - பொருந்திய மலைக்குன்றாமணித்தழையின்மேல், அருணச்சருமம்விரித்து - மான்றோலை விரித்து, அதன்மேல் - அதின்மேல், ஒரு மனத்தின் - ஆராயாநின்ற மனதினது, செயல்குறுக்கி - தொழிலைச்சுருக்கி, புத்தன்போலாகி - புத்தனைப்போல, உணர்வான் - தியானிப்பான்—எ-று.

எ—று. ஒருவரு மில்லாததாகியும் யாவராலும் அடையக்கூடா ததாகியு மிருக்கின்ற குகையானது சேராநின்ற மோக்ஷவிடமென்று சொல்லப்படும். அக்குகையில் ஒருபொழுது தனித்துச்சென்று பொருந்திய மலைக்குன்றுமணித் தழையின்மேல் மான்றோலை விரித்து அதின்மேல் ஆராயாநின்ற மனதினது தொழிலைச் சுருக்கி புத்தனைப் போல தியானிப்பான்—எ-ம்.

புண்டரீக வாகனத்திற் புத்தன்போலுத் தரமுகனா
யண்டமிரண்டு மிருகுதிமே லாக்கிப்பிரமாஞ் சலிபண்ணி
மண்டுகின்ற வாதனையின் மருளுமனத்தை மீள்வித்துத்
தண்டலில்லா நிருவிகற்ப சமாதிப்பொருட்டில் வகைநினைந்தான்.

இ-ள் புண்டரீகவாசனத்தில் - பத்மாசனத்தில், புத்தன்போல் - புத்தனைப்போல, உத்தரமுகனாய் - வடக்குமுகமானவனாய், அண்டமிரண்டும் - இரண்டு பீஜத்தையும், இருகுதிமேலாக்கி - இரண்டு குதிகால் மேல்வைத்து, பிரமாஞ்சலிபண்ணி - பிரமாஞ்சலிசெய்து, மண்டுகின்ற வாதனையில் - ஒருங்காநின்றவாசனையினால், மருளுமனத்தை - மயங்குகின்ற மனதை, மீள்வித்து - திருப்பி, தண்டலில்லா - தடையில்லாத நிருவிகற்ப

மிகுந்த, விடவெங்கானுறுவார் - விடம்போன்ற வெப்பம்பொருந்திய (பால வனத்திற்) பொருந்துவார்கள்—எ-று.

எ-து. மூடத்தன்மையுடைய மனதே வருவாய் உனதுபொய் வாழ்வுகளில் பிரயோசனமென்ன? நீங்காத துன்பமே முடிவிலுண்டாகின்ற தொழிலில சத்துக்கள் அடைவார்களோ? தெவிடாத அமுதமாகிய உபசாந்தியை நீக்கி கெடாநின்றபோகத்தை யிச்சிப்பவர்கள் அழகுபொருந்திய புஷ்பங்களையுடைய கற்பகவனந்தனைவிட்டு கொடுமை மிகுந்த விடம்போன்ற வெப்பம் பொருந்திய பாலைவனத்திற் பொருந்துவார்கள்—எ-ம். 22

சாந்தியே சுகமாமென்று சரியை கிரியைகளைக் களைதல்.



அயனுடற்றாய் பாதலத்தி லணுகினுயா கினுஞ்சாந்தி
வியனூமுதை யொழிந்தந்த மிககநிருவா ணம்பயிலாய்
பயனுயதுபோல் விசித்திரமாய்ப் பாவாபாவ மபவடிவா
யியல்பாமிந்தச செயல்கள்பெரி திடாமென்று மினிதாகா.

இ-ள். அயனுடறறாய் - பிரமலோகத்திலடைந்தாய் (ஆனாலும்,பாதலத்திலணுகினுயாகினும் - பாதாளலோகத்தில் அடைந்தாயானாலும், சாந்தியனூமுதை யொழிந்து - சாந்தமென்னும் பெருமை நிறைந்த அமுதத்தை நீங்கி, அந்தமிக்க நிருவாணம் பயிலாய் - அமமேலான நிருவாணசுகத்தைக் கூடமாட்டாய், பயனுயதுபோல் - பிரயோசனமானதுபோல, விசித்திரமாய் - நாநாவிதமாய, பாவாபாவ மயவடிவாய் - உள்ளத்தில் அதின் மயரூபமே, இயல்பாம் - சுபாவமாயிருக்கின்ற, இந்தச்செயல்கள்-இததொழில்கள், பெரிதிடராம - மகாதுன்பமாம், என்று மினிதாகா - எப்போது மின்பமாகமாட்டாது—ஏ-று.

எ-து. பிரமலோகத்தில் அடைநதாயானாலும பாதாளலோகத்தில் அடைந்தாயானாலும் சாநதமென்னும பெருமை நிறைந்த அமுதத்தை நீங்கி அம்மேலான நிருவாண சுகத்தைக் கூடமாட்டாய்,பிரயோசன மானதுபோல நானாவிதமாய் உள்ளத்தில அதின் மயரூபமே சுபாவமாயிருக்கின்ற இந்தொழில்கள் மகாதுன்பமாம எப்போது மின்பமாகமாட்டாது—எ-ம். 23

## பஞ்சவிடயத்தின் தொழிலைக் களைதல்.



சத்தாதிகளா மித்தொழில்க டன்னுள்மண்டு கமபோலப்
பித்தாய்மூர்க்க மனமேயேன் பிரமிக்கின்றாய் விடாதவமே
யெத்தாறசிறிது த்தைமபடைந்து மெதிர் யினைப முழுங்கினாய்
நித்தாமுதாய்ச சமமாகு மனிநிகேந்தே ராவெந்நியென.

இ-ள். சத்தாதிகளாம் - (சத்தமுதலிய விடயங்களிற் செல்லும்), இத்தொழில்கடன்னால் - இச்செயல்களினால், பைங்கொம்போல - தவளையைப்போல, பிததாய் - பயித்தியமுடையதாயிருக்கின்ற, மூர்க்கமனமே - மூடமனமே, விடாதவமே - விடாமல் வீணாக, எனபிரமிக்கின்றாய் - ஏனுழலுகின்றாய், எத்தாற்சிறிதுதனையடைந்தாய் - யாதினால் சிஞ்சிற்றின்பமடைந்தாய், எதிலே யின்பமுறுகின்றாய் - யாதில் பரமசுகமடைகின்றாய், நித்தாரமுதாய் - சதாகாலமும் நிறைந்த அமுதமாயும், சமமாருமதின் - சமமாயுமிருக்கின்ற அந்தச்சாந்தத்தில், நீ நிலைசேரா நெறியென் - நீ நிலைபெறாத விதமென்ன—எ-று.

எ-னு. சத்தமுதலிய விடயங்களில் செல்லும் இச்செயல்களினால் தவளையைப்போல பயித்தியமுடையதாயிருக்கின்ற மூடமனமே விடாமல் வீணாக ஏனுழலுகின்றாய், யாதினால் சிஞ்சிற்றின்பமடைந்தாய் யாதிற் பரமசுகமடைகின்றாய், சதாகாலமு நிறைந்த அமுதமாயும் சமமாயுமிருக்கின்ற அந்தச்சாந்தத்தில் நீ நிலைபெறாத விதமென்ன—எ-ம்.

ப-ம். நிறைமையென்பது கறபனைவடிவங் குறைந்து எதார்த்தவடிவம் வியாபித்த நிலையென்க. 24

## சத்தபரிசவிடயங்களைக் களைதல்.



வேறு.

படர்மூர்க்க மாமனமே வீணாய்த்தோன்றிப் பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்றுசத்தந, தொடர்கின்ற புந்தியினாலசுணமா போற் றுஞ்சுறவேண் டாதோலின் றொழிலைமேவி, யடர்பரிசமூகமா மதனாற்றுன்ப மடியாகப்பிடிக்கன்பா மியானைபபோல, மடமைமிகு மூர்க்கமா மனமேயென்று மாறாதவா பதனை மருவவேண்டா.

இ-ள். படர் மூர்க்கமாமனமே - விரிகின்ற மூடதையுடைய மனமே, வீணாய்த்தோன்றி - விருதாவாக வுண்டாய், பருகின்ற - பருகாநின்ற, செவித்தொழில்கள் பயின்று - காதின்றொழில்களைக்கூடி, சத்தந்தொடாநின்ற புந்தியினால் - சத்தவிடயத்தைத் தொடாநின்ற புத்தியினால், அசுணம்போல் - அசுணப்பக்ஷியைப்போல, துஞ்சுறவேண்டா - மரணமடையவேண்டாம், தோலின்றொழிலைமேவி - தொக்கின் வியாபாரத்தைப் பொருந்தி, அடர் - நெருங்கிய, பரிசமூகமாமதனால் - பரிசவிடயமான மூடத்தன்மையினால், துன்பமடியாக - துயரமேதுவாக, பிடிக்கன்பாம் யானைப்போல - பெண்யானைக் காதையான ஆணானையைப்போல, மடமைமிகு - அறியாமைமிகுந்த, மூர்க்கமாமனமே - மூடமான மனமே, என்று மாறாத - எப்போதுந்தவிராத, ஆபத்தை மருவவேண்டா - ஆபத்தை யடையவேண்டாம்—எ-று.

சு - ரை. விரிகின்ற மூடத்தையுடைய மனமே, விருதாவாக உண்டாய் பருக்காநின்ற காதின்றொழில்களைக்கூடி சத்தவிடயத்தை த்தொடராநின்ற புத்தியினால் அசுணப்பக்ஷியைப்போல மரணமடைய வேண்டாம். தொக்கின் வியாபாரத்தைப் பொருந்தி நெருங்கிய ஸ்பரிசவிடயமான மூடத்தன்மையினால் துயரமேதுவாக பெண்யானைக்கு ஆசையான ஆணானையைப்போல அறியாமை மிகுந்த மூடமான மனமே எப்போதுந் தவிராத ஆபத்தை யடையவேண்டாம்—எ-ம்.

## ரூபரசகந்த விடயங்களைக் களைதல்.

ஒளியுருவத்திரளுக்கு விழியின்செய்கை யுற்றுநீவெவ்விளக்கை புணராதாகி, விளிதலுறும் விட்டில்போல் வேகவேண்டா வெய்யமனமே நாவின் விருத்திமேவி, யெளிதருந்தி யுணவுகளின் மணத்தினாலே யிரைதருதூண்டிற் கவர்மீன்போலிறக்கவேண்டா, நளினவிதயத்துளுயிர் நெறிபோய்க்கந்த நாட்டத்தாற் கட்டுண்டேனா னவளைவண்டேபோல்.

இ - ள். ஒளியுருவத்திரளை - பொருந்திய ரூபவிடய சமூகத்தை நோக்கும் - பார்க்கின்ற, விழியின்செய்கையுற்று - கண்ணினுடைய தொழிலைப் பொருந்தி, நீ - (மனமே) நீ வெவ்விளக்கை புணராதாகி - வெப்பம்பொருந்திய தீபமென்றறியாமல், விளிதலுறும் - மரணமடைகின்ற, விட்டில்போல் - விட்டிற்பூச்சியைப்போல, வேகவேண்டா - வெந்துபோகவேண்டாம், வெய்யமனமே - கொடியமனமே, நாவின் விருத்திமேவி - நாக்கினுடைய தொழிலைப்பொருந்தி, எளிதருந்தி - அற்பம்புசித்து, உணவுகளின் - புசிப்புகளினது, மணத்தினாலே - இரசவிடய வாசனையினால், இரை - இரையையுடைய, தூண்டிற்கவர்மீன்போல - தூண்டிலைக்கிரகிக்கின்ற மச்சத்தைப்போல, இறக்கவேண்டா - நாசமடையாதே, அளவண்டேபோல் - தேனுக்காசித்த வண்டினைப்போல, நளினவிதயத்துள் - தாமரை மலர்போன்ற விருதயத்துள், உயிர்நெறிபோய் - சுவாசமார்க்கத்திற் சென்று, கந்தநாட்டத்தால் - வாசனைவிடயத்தைத் தேடுதலினால், கட்டுண்ணேல் - (மனமே நீ) கட்டுப்படாதே எ - று.

எ - ரை. ஒளிபொருந்திய ரூபவிடய சமூகத்தைப் பார்க்கின்ற கண்ணினுடைய தொழிலைப்பொருந்தி மனமே நீ வெப்பம் பொருந்திய தீபமென்றறியாமல் மரணமடைகின்ற விட்டிற் பூச்சியைப்போல வெந்துபோக வேண்டாம். கொடிய மனமே நாக்கினுடைய தொழிலைப்பொருந்தி அற்பம்புசித்து புசிப்புகளினது இரசவிடயவாசனையினால் இரையையுடைய தூண்டிலைக் கிரகிக்கின்ற மச்சத்தைப்

போல நாசமடையாதே. தேனுக்காசித்த ஞிமிறைப்போல தாமரை மலர்போன்ற இருதயத்துள் சுவாசமார்க்கத்திற் சென்று வாசனை விடத்தைத் தேடுதலினால் மனமே நீ கட்டுப்படாதே—எ-ம். 26

ஞிமிறு - வண்டு.

## ஐந்து விடயங்களையுங் கூட்டிக்களைதல்.



உரைத்தவசு ணங்களிறு விட்டின்மீன்றே ளோசையூறொளியிர தநாற்றமென்ன, நிரைத்தவிவற்றொன்றொன்றான் மாய்ந்துபோகு நிலையழிக்கு மவையைந்து நேரேகூடிக், கரைத்தலுறுபவர்க்கின்ப மெங்கேயுன்றன் கட்டுக்குவாதனையே கயிற்றுச்சாலம், புரைத்தெழு நெஞ் சேயதுவே போகுமாகிற் பொருவில்சய மஃதுனக்குப் புகலுங்காலே.

இ - ள். உரைத்தவசுணம்-சொல்லிய அசுணப்பக்ஷியும், களிறு-யானையும், விட்டில் - பதங்கப்பக்ஷியும், மீன் - மச்சமும், தேன் - வண்டும், ஓசை-சத்தமும், ஊறு - பரிசமும், ஒளி - உருவமும், இரதம் - சுவையும், நாற்றம்-கந்தமும், என்ன - என்று, நிரைத்த இவற்றுள் - நேர்நிரையாக வைக்கப்பட்ட இவற்றுள், ஒன்றொன்றான் மாய்ந்துபோகும் - ஒன்றினால் ஒன்று மரணத்தையடையும், நிலையழிக்கும் - நிலையைக்கெடுக்கின்ற, அவையைந்தும்-அப்பஞ்சவிடயமும், நேரேகூடி - ஒன்றாகச்சேர்ந்து, கரைத்தலுறுபவர்க்கு - மெலிவு செய்யப்பட்டவர்களுக்கு, இன்பமெங்கே - அகமகிழ்ச்சி யெங்கே (யுண்டாகும்) உன்றன்கட்டுக்கு - உன்னைக்கட்டுதலுக்கு,வாதனையே- இந்த) வாசனை யென்பதே, கயிற்றுச்சாலம் - கயிறாற பின்னின வலையாம், புரைத்தெழு நெஞ்சே - குற்றத்தோடும் எழாநின்ற மனமே, அதுவே போகுமாகில் - அவ்விடயவாசனையே நீங்குமானால், புகலுங்கால் - சொல்லுமிடத்தில், அஃதுனக்கு - அதுவேயுனக்கு, பொருவில சயம் - சமானமில்லாத வெற்றியாம்—எ-று.

எ - து. சொல்லிய அசுணப்பக்ஷியும், யானையும், பதங்கப்பக்ஷியும், மச்சமும், வண்டும், சத்தமும், பரிசமும், உருவமும், சுவையும், கந்தமும் என்று நேர்நிரையாக வைக்கப்பட்ட இவற்றுள் ஒன்றினாலொன்று மரணத்தையடையும். நிலையைக்கெடுக்கின்ற அப்பஞ்சவிடயமும் ஒன்றாகச்சேர்ந்து மெலிவுசெய்யப்பட்டவர்களுக்கு அகமகிழ்ச்சி யெங்கே யுண்டாகும். உன்னைக்கட்டுதலுக்கு இந்த வாசனை யென்பதே கயிறாற் பின்னின வலையாம். குற்றத்தோடு மெழாநின்றமனமே அவ்விடயவாசனையை நீங்குமானால் சொல்லுமிடத்தில் அதுவேயுனக்கு சமானமில்லாத வெற்றியாம்—எ-ம்.

(இ-ஃ-க-ம்.) மனதைப் பிரமாணத்திற் செலுத்தும் பொருட்டுப் பஞ்சவிடய முதலிய போகங்களிற் செலுத்தாமற் றடுத்ததென்பதாம். ()

அற்பமான மனதில் அகண்டமான சித்தெப்படி இருக்குமெனல்.

வேறு.

எதுபயனுகநிற்கிங் கித்தண்டம்யான்செய்கின்றேன்
முதுவிசாரத்தின்மிக்க முதன்மையோர்க்குளமொன்றில்லை
யதிகமாமுடிவில்சித்துக் கற்பமாநிலையென்னெஞ்சில்
விதியதாயுளதேயானை வில்வக்காய்புகுதலுண்டோ.

இ - ள். எதுபயனுக - யாது பிரயோசனமாக, நிற்கு-உனக்கு, இங்கு-இவ்விடத்தில், இத்தண்டம் - இந்த வாக்கினை, யான் செய்கின்றேன் - நான் செய்கின்றேன், முதுவிசாரத்தில் - முதிர்ந்த ஆத்மஞான விசாரணையில், மிக்க முதன்மையோர்க்கு - மிகுந்த முதன்மையான சத்துக்களுக்கு, உளமொன்றில்லை - ஒருமனமுமில்லை, அதிகமாம் - வியாபகமாகிய, முடிவில் சித்துக்கு - முடிவில்லாத ஞானத்துக்கு, அற்பமாநிலை-சூட்சுமமான ஸ்திதி, என்னெஞ்சில் விதியதாயுளதோ - என்மனதில் நியமமாயுண்டோ, யானை வில்வக்காய் புகுதலுண்டோ-களிறு வில்வப்பழத்தினுள் நுழையுமோ—எ-று.

எ - ம். யாது பிரயோசனமாக உனக்கு இவ்விடத்தில் இந்த வாக்கினை நான்செய்கிறேன். முதிர்ந்த ஆத்மஞானவிசாரணையில் மிகுந்த முதன்மையான சத்துக்களுக்கு ஒருமனமுமில்லை. வியாபகமாகிய முடிவில்லாத ஞானத்துக்கு சூட்சுமமான ஸ்திதி என்மனதில் நியமமாயுண்டோ? களிறு வில்வப்பழத்தினுள் நுழையுமோ—எ-ம்.

தேகமுதலியவைகளைக் களைந்ததற்கு விலக்ஷணமான ஆத்மஸ்வரூபத்தைத் தரிசித்தல்.

தசையயில்பாதந்தொட்டுத் தலைமட்டும்வெவ்வேறுய்ந்தா
லிசைவுறயானங்கில்லை யானெனுநிலையெங்குண்டோ
திசையெலாம்விழுங்கிமேலாஞ் சித்ததாய்க்காண்பதின்றி
யசைவறவெங்குந்தானு மென்றுலகனைத்துங்காண்கேன்.

இ - ள். தசையயில்-மாமிசம் பொருந்திய சரீரத்தில், பாதந்தொட்டு-பாதமுதலாக, தலைமட்டும் - சிரசுபரியந்தம், வெவ்வேறுய்ந்தும் - வேறுவேறாக ஆராய்ந்தும், இசைவுறயான் - பொருந்தகானென்பது, அங்கில்லை-அச்சரீரத்திலில்லை, யானெனுநிலை - நானென்னுந் தன்மையானது, எங்குண்டு-எவ்விடத்தில் இருக்கின்றது, திசையெலாம் விழுங்கி - திக்குகளனைத்திலும் வியாபித்து, மேலாஞ்சித்ததாய் - மேலான ஞானஸ்வரூபமாகி, காண்பதின்றி - காணப்படாததாகி, அசைவற - சலனமில்லாமலா

மல், எங்குந்தானுமென்று - எவ்விடத்துந்தானாக (விளங்கினது) என்று, உலகனைத்துங்காண்பேன் - சகங்களனைத்தையும் பார்ப்பேன்—எ-று.

எ-து. மாமிசம்பொருந்திய சரீரத்தில் பாதமுதலாக சிரசு பரியந்தம் வேறுவேறாக ஆராய்ந்தும் பொருந்தநானென்பது அச்சரீரத்திலில்லை. நானென்னுந் தன்மையானது எவ்விடத்திலிருக்கின்றது? திக்குகளனைத்திலும் வியாபித்து மேலான ஞானஸ்வரூபமாகி காணப்படாததாகி சலனமில்லாமல் எவ்விடத்துந் தானாக விளங்கினதென்று சகங்களனைத்தையும் பார்ப்பேன்—எ-ம்.

ஆத்மதரிசனமாய் அதி லுதிக்கின்ற மனதைக்
கண்டிக்கத் தொடங்கல்.

உயர்வுறுமதற்குநாமங் கற்பனையொருமைபன்மை
வியன்மகத்தணுவென்றேதும் விதமுறுகுறிகள்காணே
னியலறிவாதலாலே யான்காணுமென்பானீயே
துயர்தருமேதுவாகத் தோன்றினைபேதநெஞ்சே.

இ-ள். உயர்வுறுமதற்கு - மேன்மைபொருந்திய அந்தஞானத்துக்கு, நாமகற்பனை - பெயரின்கற்பனையும், ஒருமை - ஏகத்துவமும், பன்மை - அநேகத்துவமும், வியன்மகத்து-பெருமைமிகுந்த மகத்துவமும், அணுவு - அணுத்துவமும, என்றேதும் - என்றுசொல்லுகின்ற, விதமுறு - நானாவிதமாகிய, குறிகள்காணேன் - அடையாளங்களைக் கண்டிலன், இயலறிவாதலால் - சுபாவமான ஞானமானதினால், யான்காணும் - சுகம்வேத்தியமான, என்பால் - என்னிடத்தில், பேதநெஞ்சே - வேற்றுமையுள்ள மனதே? நீயே துயர்தரு வேதுவாகத் தோன்றினை - நீயே துன்பங்கொடுக்குங் காரணமாக உண்டானாய்—எ-று.

எ-து. மேன்மைபொருந்திய அந்தஞானத்துக்கு பெயரின் கற்பனையும், ஏகத்துவமும், அநேகத்துவமும், பெருமைமிகுந்த மகத்துவமும், அணுத்துவமும் என்று சொல்லுகின்ற நானாவிதமாகிய அடையாளங்களைக் கண்டிலன். சுபாவமான ஞானமானதினால் சுகம்வேத்தியமான என்னிடத்தில் வேற்றுமையுள்ளமனதே நீயே துன்பங்கொடுக்குங் காரணமாகவுண்டானாய்—எ-ம்.

மனதிற் குருவம் இன்றெனக் கண்டித்தல்.

முதுவிவேகத்தாற்போத மொய்ம்பினுவிந்தவுன்னைக்
கதுமெனக்கொல்லாநின்றேன் காணுதிகவலைநெஞ்சே

யிதுதசையிதுபுண்ணீ ரிதென்பிவையுளவுயிர்ப்பாய்
பொதுளியவாதமிங்கே யகமெனல்பொருந்திற்றெங்கே.

இ-ள். முதிர் விவேகத்தால் - முதிர்ந்தவிவேகத்தினாலுண்டான, போதமொய்ம்பினால் - ஞானார்த்தவலியினால், இந்தவுன்னை - இப்படிப்பட்ட உன்னை, கதுமெனக்கொல்லாநின்றேன் - சீக்கிரமாகக்கெடுக்கின்றேன், கவலைநெஞ்சே - துன்பத்தையுடைய மனதே, காணுதி - நீகாணக்கடவாய், இதுதசை - இதுமாமிசம், இதுபுண்ணீர் - இது இரத்தம், இதென்பு - இது அஸ்தி, இவை - இவைகள், உளவுயிர்ப்பாய் - உள்ளபிராணனாய், பொதுளியவாதம் - நிறைந்தகாற்று, இங்கு - இவ்விடத்தில் (இவைகளில்) அகமெனல் - நானென்பது, பொருந்திற்றெங்கே - பொருந்தினதெங்கே—எ-று.

எ-து. முதிர்ந்த விவேகத்தினாலுண்டான ஞானார்த்தவலியினால் இப்படிப்பட்ட உன்னை சீக்கிரமாகக் கெடுக்கின்றேன் துன்பத்தையுடைய மனதே நீ காணக்கடவாய். இது மாமிசம், இது இரத்தம், இது அஸ்தி, இவைகள் உள்ள பிராணனாய் நிறைந்த காற்று இவ்விடத்தில் இவைகளில் நானென்பது பொருந்தினதெங்கே.

தசைகள்வேறுதிரம்வேறு தடியென்புவேறுமெய்யி
லசைவுவேறறிவுவேறு வகமெனல்பொருந்திற்றெங்கே
விசைவிழியிதுதோலீது வியன்செவியிதுமூக்கீது
பசையுறுநாவிதிங்கே யகமெனல்பயின்றதெங்கே.

இ-ள். தசைகள்வேறு - மாமிசங்கள்வேறு, உதிரம்வேறு - இரத்தம் வேறு, தடியென்புவேறு - தடித்த அஸ்திவேறு, மெய்யில் - சரீரத்தில், அசைவுவேறு - கன்மேந்திரியங்கள் வேறு, அறிவுவேறு - ஞானேந்திரியங்கள் வேறு, அகமெனல் - நானென்பது, எங்கே பொருந்திற்று - எவ்விடத்திற் பொருந்தியிருக்கும், விசைவிழியிது - விரசையாகியகண்ணிது, தோலிது - தொக்கிது, வியன்செவியிது - பருத்தகாதிது, மூக்கிது - நாசியிது, பசையுறுநாவிது - பசைபொருந்திய நாக்கிது, இங்கே யகமெனல் - இவ்விடத்தில் நானென்று, பயின்றதெங்கே - சொன்னதெங்கே—எ-று.

எ-து மாமிசங்கள்வேறு, இரத்தம்வேறு, தடித்த அஸ்தி வேறு, சரீரத்தில் கன்மேந்திரியங்கள்வேறு, ஞானேந்திரியங்கள் வேறு, நானென்பது எவ்விடத்திற் பொருந்தியிருக்கும். விசையாகியகண்ணிது, தொக்கிது, பருத்தகாதிது, நாசியிது, பசைபொருந்திய நாக்கிது, இவ்விடத்தில் நானென்றுசொன்னதெங்கே-எ-ம்.

## சித்தைச் சடமயக்குமோ வெனல்.

அகமெனவெங்குமாகு மற்பமிங்கமன்றாகு
நிகழுமிந்நல்லநோக்கே நோக்கயனெறிவேறில்லை
புகரில்சின்மயனுமென்னைப் போதமிற்றூர்த்தநெஞ்சே
மிகவருத்தினையான்கன்றை வனச்செந்நாய்வெருட்டுமாப்போல்.

இ-ள். அகமெனவெங்குமாகும் - நானென்பதெங்குமாயிருக்கும், அற்பமிங்கமன்றாகும் - அற்பமும் இவைகளினுமென்பதல்லாததாம், நிகழும் - இப்படி விளங்காநின்ற, இந்நல்லநோக்கே - இவ்வனுபவதிருஷ்டியே, நோக்கு - திருஷ்டியாம், அயனெறிவேறில்லை - வேறுமார்க்கமில்லை, புகரில் - குற்றமற்ற, சின்மயனுமென்னை - ஞானவடிவமாகிய என்னை, போதமில் - அறிவில்லாத, தூர்த்தநெஞ்சே - வஞ்சகமுள்ளமனமே, ஆன்கன்றை - பசுவின்கன்றை, வனச்செந்நாய் - வனத்திலுள்ள செந்நாயானது, வெருட்டுமாப்போல் - மருட்டுவதுபோல, மிகவருத்தினை - மிகவும் வருத்தப்படுத்தினாய் — எ-று.

எ-து. நானென்பதெங்குமாயிருக்கும். அற்பமும் இவைகளில் நானென்பதல்லாததாம். இப்படி விளங்காநின்ற இவ்வனுபவதிருஷ்டியே திருஷ்டியாம். வேறுமார்க்கமில்லை. குற்றமற்றஞானவடிவமாகிய என்னை அறிவில்லாத வஞ்சகமுள்ள மனமே பசுவின்கன்றை வனத்திலுள்ள செந்நாயானது மருட்டுவதுபோல மிகவும் வருத்தப்படுத்தினாய்— எ-ம். 33

## இனி மனதின் வசத்திற் செல்லேனெனல்.

தெய்வயோகத்தாலின்றி தேறினேன்சொரூபச்செம்பொன்
கைவழிகவராஞ்ஞானக் கள்வனைமீண்டிவனைச்சேரே
னைவகைப்பொறிகளொன்றா வாதனையற்றிருந்துந்
தைவருபுறனிற்றந்தம் புலன்களிற்றாவாநின்ற.

இ-ள். தெய்வயோகத்தால் - தேவாதீனமாய், சொரூபச்செம்பொன் - ஆத்மவஸ்துவை, கைவழிகவர் - கைவசமாய் அபகரிக்கின்ற, அஞ்ஞானக்கள்வன் - அஞ்ஞானமென்னுந் திருடனை, இன்று தேறினேன் - இப்போது தெளிந்துகொண்டேன், மீண்டிவனைச்சேரேன் - திரும்ப இவனைச்சாரேன், ஐவகைப்பொறிகள் - பஞ்சேந்திரியங்கள், ஒன்றாவாதனையற்றிருந்தும் - ஒன்றியவாசனையை விட்டிருந்தும், தைவரு - ஸ்பரிக்கின்ற, புறனில் - புறம்பில், தந்தம்புலன்களில் - தங்கடங்கள் விடயங்களில், தாவாநின்ற - தாவுகின்றன — எ-று.

எ-து. தேவாதீனமாய் ஆத்மவஸ்துவை கைவசமாய் அபகரிக்கின்ற அஞ்ஞானமென்னுந்திருடனை இப்போது தெளிந்து

கொண்டேன். திரும்ப விவனைச்சாரேன் பஞ்சேந்திரியங்கள் ஒன்றியவாசனையைவிட்டிருந்தும் ஸ்பரிக்கின்ற புறம்பில் தங்கடங்கள் விடயங்களில் தாவுகின்றன—எ - ம்.

(இ-எ-க-ம்.) ஆத்மஸ்வரூபத்தைத்தவிர மனதிற்கோர் உருவமின்றென்றனத் தரிசித்ததாம். (34)

பொறிகளை மனோவாசனையில் செல்லாமல் நீக்குதல்.

வாதனைபொறிகட்கெல்லா மன்னுகாரணமன்றாகு
மாதலான்மூர்க்கமான வைம்பொறிநீவிர்நெஞ்சி
னேதவாதனைகண்மாற்றிக் கருமங்களெல்லாஞ்செய்வீர்
வேதனைத்துன்பமொன்றுங் கிஞ்சினுமேவாதென்றும்.

இ - ள். வாதனை - வாசனையானது, பொறிகட்கெல்லாம் - இந்திரியங்களனைத்துக்கும், மன்னுகாரணமன்றாகும் - நெருங்கிய காரணமில்லாததாம், ஆதலால் - ஆதலினால், மூர்க்கமானவைம்பொறி - மூடமாகிய பஞ்சேந்திரியங்களே, நீவிர் - நீங்கள், நெஞ்சில் - உள்ளத்திலுள்ள, ஏதவாதனைகண்மாற்றி - குற்றமுள்ள வாதனைகளைக்கெடுத்து, கருமங்களெல்லாஞ்செய்வீர் - தொழில்கள் அனைத்தையுஞ் செய்வீர்களானால், வேதனைத்துன்பம் - வருத்தஞ்செய்கின்ற துன்பங்கள், ஒன்றும் - ஒன்றானாலும், கிஞ்சினும் - அற்பமும், என்றும் - எப்போதும், மேவாது - பொருந்தாது—எ-று.

எ - து. வாசனையானது இந்திரியங்கள் அனைத்துக்கும் நெருங்கிய காரணமல்லாததாம். ஆதலினால் மூடமாகிய பஞ்சேந்திரியங்களே நீங்கள் உள்ளத்திலுள்ள குற்றமுள்ள வாதனைகளைக் கெடுத்து தொழில்கள் அனைத்தையுஞ் செய்வீர்களானால் வருத்தஞ் செய்கின்ற துன்பங்கள் ஒன்றானாலும் அற்பமும் எப்போதும் பொருந்தாது—எ - ம். (35)

மனதைப் பொறிவசத்தில் செல்லாமல் தடுத்துப்
பொறிவசத்தில் செலுத்துதல்.

வேறு.

கூடுசெயுந்தன்வாயி னூலாற்போன்றுங் கோசகாரக்கிருமி கூட்டம்போல, கோடுபொறி யெனுஞ்சிக்கான் மயலால்வினை யுள்ளிர்ந்திடுவீர்பொறிக்கெல்லா முறைபயனான, நீடுமனத்தினையொடுக்கிப் பொறியனோடு நீவேறற்றுக்குமதத் தாவற்றைமேவே, நாடுபெற்றற் கொண்முத்தியான ஞானவடிவினையாய் நன்றுவாயே.

இ - ள். கூடுசெயுந் தன்வாயினூலால் - கூண்டுசெய்கின்ற தனது வாயினூலினால், பொன்றும் - மரணமடைகின்ற, கோசகாரக் கிருமிகூட்டம் போல - கோசகாரப் புழுவினது கூட்டத்தைப்போல, ஒடுபொறியெனுஞ் சிசுக்கள் - விஷயத்திற்றாவுகின்ற இந்திரியங்களென்னுங் குழந்தைகளை, மயலால் - மயக்கத்தினால், வீணேயுலர்த்திடுவீர் - வீணாகக்கெடுவீர்கள், பொறிக்கெல்லாம் - இந்திரியங்களனைத்திற்கும், உறையுளான நீண்மனனே - வசிக்குமிடமாகிய நீண்டமனமே, ஒடுக்கி - அடக்கி, பொறிகளோடு - இந்திரியங்களுடன், நீவேறற்று - நீவேறுபடாமல், ஆத்மதத்துவத்தை - ஆத்மஞானத்தை, நேரோடு நீ - நேரேபார்ப்பாய், பற்றற்று - பற்றில்லாமல், ஒன்றாய் - ஏகமாய், முத்தியான - நிருவாணசுகமாயிருக்கின்ற, ஞானவடிவை - ஞானஸ்வரூபத்தை, நிலையாய் கண்ணுவாய் - நிலையாகப்பொருந்துவாய்—எ - று.

எ - று. கூண்டுசெய்கின்ற தனது வாயினூலினால் மரணமடைகின்ற கோசகாரப்புழுவினது கூட்டத்தைப்போல விஷயத்தில் தாவுகின்ற இந்திரியங்களனைத்திற்கும் வசிக்குமிடமாகிய நீண்டமனமே அடக்கி இந்திரியங்களுடன் நீ வேறுபடாமல் ஆத்மஞானத்தை நேரே பார்ப்பாய். பற்றில்லாமல் ஏகமாய் நிருவாண சுகமாயிருக்கின்ற ஞானஸ்வரூபத்தை நிலையாகப் பொருந்துவாய்—எ - ம்.

மநோசங்கற்பத்தைக்கெடுத்து ஆத்மசுகத்தில் சுகிப்பையெனல்.

ஆசகலா விடயவிட விருசியாகி யநந்தமா காமெனும் வாதனை
யைத்தீர, மாசறவிட் டிச்சையெலா மொழிப்பதென்று மந்திரயுத்தி
யினால் மறுசென்மம்போய்த், தேசமுறு பகவானு யச்சமெல்லாந்
தீர்விடமா வாய்மனமே தீராசங்கற்பம், வீசுதரு மயல்கொடியாய்
நீயாங்காட்டை. வெட்டிநெடும் பூமியிலே விநோதஞ் செய்வேன்.

இ - ள். ஆசகலாவிடயமும் - குற்றநீங்காத விடயமென்னும், விடவிருசியாகி - விடமுள்ளவிருசியாகியும், அநந்தமாம் - அளவில்லாததாகியுமிருக்கின்ற, காமெனும் வாதனையை - ஆசையென்கின்ற வாசனையானது, தீர - தீரும்படி, மாசறவிட்டு - களங்கமில்லாமல்விட்டு, இச்சையெலாம் - ஆசைகளனைத்தையும், ஒழிப்பதென்னும் - கெடுப்பதென்கின்ற, மந்திர யுத்தியினால் - மந்திரவுபாயத்தினால், மறுசென்மம்போய் - மறுபிறப்பு நீங்கி, தேசமுறுபகவானும் - பிரகாசம்பொருந்தி பகவத்ஸ்வரூபமாய், மனமே - மனமே, அச்சமெல்லாந்தீர் விடமாவாய் - பயங்களனைத்துந்தீர்ந்தவிடமாவாய், தீராசங்கற்பம் - நீங்காத சங்கற்பமே, வீசுதரு - வீசப்பட்ட விருக்ஷமாகவும், மயல்கொடியாய் - ஆசையே கொடிகளாகவும் இருக்கின்ற,

நீயாங்காட்டை - நீயென்னும் வனத்தை, வெட்டி - அறுத்து, நெடும்பூமி யில் - நீண்ட (ஞான) பூமியில், விநோதஞ் செய்வேன் - விளையாடுவேன்.

எ-து. குற்றநீங்காத விடயமென்னும் விடமுள்ள விருக்ஷமாகியும், அளவில்லாததாகியுமிருக்கின்ற யானென்கின்ற வாசனையானது நீங்கும்படி களங்கமில்லாமல் விட்டு ஆசைகளனைத்தையும் கெடுப்பதென்கின்ற மந்திரவுபாயத்தினால் மறுபிறப்பு நீங்கி பிரகாசம் பொருந்திய பகவஸ்வரூபமாய் மனதே பயங்களனைத்துந் தீர்த்துவிடமாவாய். இருந்த சங்கற்பமே விசப்பட்ட விருக்ஷமாகவும், ஆசையே கொடிகளாகவும் இருக்கின்ற நீயென்னும் வனத்தை அறுத்து நீண்ட ஞான பூமியில் விளையாடுவேன். (37)

### மங்கலகரமான பிரமஸ்வரூபமாய் அதன்பின் சத்தியினியல்பைத் தரித்தல்.

வேண்டியவா விளையாடித் தற்பதத்தை மேவினன்கே வலமா
னேன் வெற்றியுற்றே, னீண்டுயர் நிருவாணமானேன்செய்வ திலதா
னேன் பிறிவற்றே னிடம்வேறற்றே, னீண்டதெளிவுடைமை நீங்
காமெய்ம்மை, மாண்டசுக முடைமையுப சாந்தநீர்மை மகிழுடை
மை நிறையுடைமை மகிமைமாண்மை.

இ-ள். வேண்டியவா - வேண்டினபிரகாரம், விளையாடி - விளையாடல் செய்து, தற்பதத்தை மேவினன் - பிரமபதத்தைப் பொருந்தினேன், கேவலமானேன் - தனிமையானேன், வெற்றியுற்றேன் - சயமடைந்தேன், ஈண்டு - இவ்விடத்தில், உயர் நிருவாணமானேன் - உயர்ந்தமோக்ஷஸ்வரூபியானேன், செய்வதிலதானேன் - தொழிலில்லாதவனானேன், பிறிவற்றேன் - பகுப்பற்றேன், இடம் வேறற்றேனை - வேறிடமில்லாதவனானேன், நீண்டதெளிவுடைமை - மிகுந்ததெளிவுடைமையும், ஒளிவுடைமை - விளக்கமுடைமையும், உண்மை நிகழுடைமை - தத்துவ பிரகாசமுடைமையும், அறிவுடைமை - ஞானமுடைமையும், நீங்காமெய்ம்மை - நீங்காத உண்மையும், மாண்டசுகமுடைமை - சிறந்த சுகமுடைமையும், உபசாந்த நீர்மை - உபசாந்தமுள்ள குணமுடைமையும், மகிழ்வுடைமை - (சற்கருமத்தின் மகிழ்ச்சியுடைமையும், நிறைவுடைமை - பூரணவுடைமையும், மகிமை - பெருமையுடைமையும், மாண்மை - நற்குணமுடைமையும்.

எ-று. வேண்டின பிரகாரம் விளையாடல் செய்து பிரமபதத்தைப் பொருந்தினேன். தனிமையானேன், சயமடைந்தேன், இவ்

விடத்தில் உயர்ந்த மோக்ஷஸ்வரூபியானேன், தொழிலில்லாதவனு னேன், பருப்பற்றேன், வேறிடமில்லாதவனுனேன், மிகுந்ததெளிவு டைமையும், விளக்கமுடைமையும், தத்துவப் பிரகாசமுடைமையும் ஞானமுடைமையும், நீங்காதவுண்மையும், சிறந்த சுகமுடைமையும், உபசாந்தமுள்ள குணமுடைமையும், சற்கருமத்தின் மகிழ்ச்சியுடை மையும், பூரணவுடைமையும், பெருமையுடைமையும், நற்குணமுடை மையும்---எ-ம். (38

ஆவரண மில்லாமை யுதாரத்தன்மை யழியாத தேசுடைமை யகண்டநீர்மை, யாவதுந்தா ஞமுறைமை யச்சமின்மை யேகமாந் தன்மைமன மெழூந்தோடாமை, யோவலிலா துடனுறையிக் குணங் களென்னு முத்தமிகள் சுமங்கலிக ளொப்பிலாதார், பாவனையொன் ருஞ்சொரூப மடைந்தேற்கென்றும் பன்னியராயுளங்கவரும் பாவை மாரே.

இ-ள். ஆவரணமில்லாமை - மறைப்பில்லாமையும், உதாரத்தன்மை- உதாரமான குணமும், அழியாததேசுடைமை - கெடாத பிரகாச வுடைமை யும், அகண்டநீர்மை - பூரணத்தன்மையும், யாவதுந்தாஞமுறைமை - சகல மூந் தன்மயமான குணமும், அச்சமின்மை - பயமில்லாமையும், ஏகமாந்தன் மை - ஒன்ருகிய தன்மையும், மனமெழூந்தோடாமை - சித்த சஞ்சல்லியமில் லாமையுமாகிய, ஓவலிலாது - ஒழிவில்லாமல், உடனுறை - என துடன் பொருந்தியிருக்கின்ற, இக்குணங்களென்னும் - இந்தக்குணங்களென்கின்ற, உத்தமிகள் - உத்தமிகளாகிய, சுமங்கலிகள் - சுமங்கலி ஸ்த்ரீகள், ஒப்பிலா தார் - சமானமில்லாதவர்கள், பாவனையொன்ருஞ்சொ - ஏகபாவனையான,சொரூ பமடைந்தேற்கு - (ஆத்ம) ஸ்வரூபத்தையடைந்த எனக்கு, என்றும் பன்னி யராய் - எப்போது மனைவியர்களாக, உளங்கவரும் - மனதைக்கிரகிக்கின்ற, பாவைமார் ஸ்த்ரீகளாம்—எ-ழ.

எ-து. மறைப்பில்லாமையும், உதாரமான குணமும், கெடாத பிரகாசவுடைமையும், பூரணத்தன்மையும், சகலமூந் தன்மயமான குணமும், பயமில்லாமையும், ஒன்ருகிய தன்மையும், சித்தசாஞ் சல் லிய மில்லாமையுமாகிய ஒழிவில்லாமல் எனதுடன் பொருந்தி யிருக் கின்ற இந்தக் குணங்களென்கின்ற உத்தமிகளாகிய சுமங்கலி ஸ்த்ரீ கள் சமானமில்லாதவர்கள். ஏகபாவனையான ஆத்மஸ்வரூபத்தை யடைந்த எனக்கு எப்போது மனைவியர்களாக மனதைக் கிரகிக்கின்ற ஸ்த்ரீகளாம்---எ-ம். (39)

**(இ-ந-கம்.) சடிந்திரியங்களையுங்கண்டித் தாத்மஸ்வரூபத்தைத் தரிசித்து தன் சுபாவசத்திகளோடும் விளையாடிப் பரமசுகியாயிருந்தா ரென்பதாம்.**

ஞானம்பெற்று மனிச்சர் பிராரத்த கன்மசேட நீங்கும்பொருட்டு யோகம் வந்தடுத்ததை யறிவிக்கத் தொடங்கிப் பிரணவ வுச்சாரணம் அறிவித்தல்.

தேங்காது தன்வசமாய் விரிந்த புந்திச் செயலாலே யிவ்வாறு திறத்திலெண்ணி, பூங்காவி சிறிதலர்ந்தாற் போலபாதிப் புரைவிழி யோன் புண்டரிகா தனத்திற்புல்கி, யோங்கார மேனோக்குந் தொனி யதான வுத்தமனீண் முழக்காலே யுச்சரித்தான், பாங்காக நாவறையு மணியினூடு பயின்றுதடை யற்றோசை படர்வதேபோல்.

இ - ள். தேங்காது - அலையாமல், தன்வசமாய்விரிந்த - தன்வசப்பட்டு வியாபித்த, புந்தி - புத்தியினது, செயலால் - தொழிலினால், இவ்வாறு - இந்தப் பிரகாரம், திறத்திலெண்ணி - வலிமையாகச் சிந்தித்து, பூங்காவி - கருங்குவளைப் புட்பமானது, சிறிதலர்ந்தாற்போல - கொஞ்சம் விகசிதமானது போல, பாதிப்புரைவிழியோன் - பாதிதிறந்த விழியையுடையவனாய், புண்டரிகாதனத்திற்புல்கி - பத்மாசனத்திலிருந்து, ஓங்காரம் - பிரணவத்தை, மேனோக்கும் - மேனோக்கிய, தொனியதான - ஒலியதான, உத்தமன் - உத்தமனான உத்தாலகன், நீண்டமுழக்கால் - உயர்ந்த சத்தத்தினால், பாங்காக - உரிமையாக, நாவறையு மணியினூடு - நாவானது அடிக்கப்பட்ட மணிக்குள், பயின்று - கூடி, தடையற்று - தடையில்லாமல், ஓசைபடர்வதேபோல் - சத்தமெழும்பினதுபோல, உச்சரித்தான் - உச்சரித்தான் — எ - று.

எ - து. அலையாமல் தன்வசப்பட்டு வியாபித்த புத்தியினது தொழிலினால் இந்தப் பிரகாரம் வலிமையாகச் சிந்தித்து கருங்குவளைப் புட்பமானது கொஞ்சம் விகசிதமானது போல பாதிதிறந்த விழியையுடையவனாய் பத்மாசனத்திலிருந்து பிரணவத்தை மேனோக்கிய ஒலியதான உத்தமனான உத்தாலகன் உயர்ந்த சத்தத்தினால் உரிமையாக நாவான அடிக்கப்பட்ட மணிக்குள் கூடி தடையில்லாமல் சத்தமெழும்பினது போல உச்சரித்தான் — எ - ம். (40)

பிரணவத்தின் முதற்கூறான அகாரத்தை யுச்சரித்தல்.

சான்றபிர ணவமோது மவன்றன்சித்த சற்பதத்தை நோக்கு தலுந் தனியோங்கார, மூன்றறவெவ் வளவுமே லூற்றுநின்ற துயர்ந்த கன்று விமலமா முணர்வின்கண்ணே, மூன்றரை மாத்திரையு டைய பிரண வத்தின் முற்கூறு வெளியாக முழங்கியெங்கு, மான்ற பிரா ணங்கடொனி கிளப்புமெய்யி லழகிதாய்க் கிளர்ந்தோங்கி யதி ருமெல்லை.

இ - ள். சான்றபிரணவம் - ஞான (ஸ்வரூபமாகிய) பிரணவத்தை, ஒருமவன்றன்சித்து - உச்சரியாநின்ற உத்தாலகமுனியின் ஞானமானது, தற்பதத்தை நோக்குதலு-பிரணவஸ்வரூபமான பிரமத்தைப்பார்க்கவும் தனியோங்காரம் - தனிமையான பிரணவமானது, ஊன்றற-சார்பில்லாமல், எவ்வளவும் - எந்தமட்டும், மேலுற்று நின்றது - உயர்ந்துநின்றதோ (அந்தமட்டும்), உயர்ந்து - உயர்வாகவும், அகன்று - வியாபகமாகவும், விமலமாமுனைத்திங்கள் - நிருமலமாகவும் இருக்கின்ற ஞானத்தினிடத்தில், மூன்றரையாத்திரையுடைய - மூன்றரைமாத்திரையை யுடையதாகிய, பிரணவத்தின்மூற்கூறு - பிரணவஸ்வரூபத்தின் (அகாரத்மகமான) முதற்பங்கு, வெளியாகமுழங்கி - வெளிப்படவொலித்து, எங்கும் - எவ்விடத்தும், ஆண்டபிராணனகள் - மாசுநிறைப்பட்ட பிராணவாயுக்கள், தொனிகிளப்பும் - சத்தத்தை யெழுப்புகின்ற, மெய்யில் - சரீரத்தில், அழகிதாய் - அழகாக, ஓங்கிதோங்கி - மிகவும் பிரகாசித்து, அதிருமெல்லை - ஒலிக்கின்ற காலத்தில்—எ - று.

எ - து. ஞான ஸ்வரூபமாகிய பிரணவத்தை உச்சரியா நின்ற உத்தாலகமுனியின் ஞானமானது பிரணவஸ்வரூபமான பிரமத்தைப் பார்க்கவும், தனிமையான பிரணவமானது சார்பில்லாமல் எந்தமட்டும் உயர்ந்து நின்றதோ அந்தமட்டும் உயர்வாகவும், வியாபகமாகவும், நிருமலமாகவு மிருக்கின்ற ஞானத்தினிடத்தில் மூன்றரைமாத்திரையை யுடையதாகிய பிரணவஸ்வரூபத்தின் அகாரத்மகமான முதற்பங்கு வெளிப்பட வொலித்து எவ்விடத்தும் மாசுநிறைப்பட்ட பிராணவாயுக்கள் சத்தத்தை யெழுப்புகின்ற சரீரத்தில் அழகாக மிகவும் பிரகாசித்து ஒலிக்கின்ற காலத்தில்—எ-ம். (41)

இன்னுயிரைப் புறத்தகற்றவல்லதான விரேசகப்பேர் கிரமந்தானியாக்கைமுற்றுங், கொன்னுறுபாழாக்கினதானிறைந்துயர்ந்த கும்பமுனி குரைகடலைக் குறைத்ததேபோற், பின்னமில்சிற் சுவைநிறைந்த வாகாசத்திற் பிரானிறைந் துளவிதயப் பெருந்தீமண்டி, அன்னவுடன் முழுதுமெரித் துளதோங்காரத் தாநியாங் கிரமத்தி லவத்தையிதே.

இ-ள். இன்னுயிரை - இந்தப் பிராணவாயுவை, புறத்தகற்றவல்லதான - புறமபில் நீக்கவல்லமையாகிய, இரேசகப்பேர் - இரேசகமென்னு நாமமுடைய, கிரமந்தான் - கிரமமானது, யாக்கைமுற்று - சரீரமெல்லாவற்றிலும், நிறைந்துயர்ந்த - நிறைந்துயர்ந்திருக்கின்றது, கும்பமுனி - அகத்திய முனியானவர், குரைகடலை - சத்திக்காநின்ற சமுத்திரத்தை, குறைந்ததுபோல் - (ஆசமனஞ்செய்து) பாழாக்கினதுபோல, கொன்னுறு பாழாக்கினது - கொன்று பாழாக்கினது, பின்னமில் - பிரிவில்லாத, சிற்சுவை நிறைந்த - ஞானவிரச நிறைந்திருக்கின்ற, ஆகாசத்தில் - (பிர) மாகாயத்தில் .

த்த கிரமமானது, இயம்பிய இப்பிராணன்களெல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய கூறுயிர்த்தப் புராணவாயுவான சகலத்திற்கு முண்டானது—எ-று.

எ - து. அந்த ரேசகாவத்தை யானது வேண்டிய மட்டும் பிரகாசித்ததே யன்றி அடையோகத்தினாலல்லவாம். அடையோக மானது கொடிய துன்பத்தைக் கொடுக்கின்றதல்லவா? அதன் பின்பு பெருமைபொருந்திய பிரணவத்தினுடைய இரண்டாவதாகிய உகாரத்மகமான பகுதி கடையில்லாமலிருக்கின்ற சமநிலையான அவசரத்தில் அசைவில்லாத கும்பகமென்னும் பெயரை இடப்பட்ட தனித்த கிரமமானது கூறும் இந்தப்பிராணவாயுவான சகலத்திற்கு முண்டானது- எ - ம். (43)

புறத்தகத்துங் கீழ்மேறிக் காகாசத்திற் புரிந்தசையாப் பிராணன்கள் பூரணமாகித், துறத்துருத்தி யிடைதடைப்பட்டன போனின்று தோனின்றி முதலேயுடலைச்சுட்டவங்கி, திறத்தவிடி போற்கணத்தி லவிந்ததன்றே நீகார வெளியென வெண்ணீறுயங்க, முறத்தெறிந்த தாலதற்கே யுடலென்பெல்லா மொழுங்காகத் தோன்றிநரம் புடனேநின்ற.

இ-ள். புறத்து - புறம்பிலும், அகத்தும் - உள்ளிலும், கீழ் - கீழிலும், மேல் - மேலிலும், திக்கு - திசைகளிலும், ஆகாசத்தில் - ஆகாயத்திலும், புரிந்தசையா - முயற்சித்தசையாத, பிராணன்கள் - பிராணவாயுக்களானவை, பூரணமாகி - பூரணமாகி, துறத்துருத்தியிடை - குவிந்திருக்கின்ற துருத்தியினிடத்தில், தடைப்பட்டனபோல் - தடைபட்டவைபோல, நின்று - நிலையாயிருந்து, தோன்று - உண்டாகி, முதல் - முதன்மையாக, உடலைச்சுட்டவங்கி - சரீரத்தையெரித்த அக்கினியானது, திறத்தவிடிபோல் - பிரகாசத்தினையுடைய இடியைப்போல, கணத்திலவிந்தது - க்ஷணநேரத்தி லணைந்தது, நீகாறவெளியென - பனியினது வெண்மையைப்போல, அங்கம் வெண்ணீறுய் - சரீரமானது வெண்ணீறாகி, உறத்தெரிந்ததால் - நன்றாகத் தெரிந்தபடியினால், அதற்கு - அச்சரீரத்துக்கு, உடலென்பெல்லாம் - சரீரமுமஸ்திகளனைத்தும், ஒழுங்காகத்தோன்றி நரம்புடனேநின்ற - வரிசையாகத்தோற்றி நரம்புகளுடனிருந்தது—எ-று.

எ - து. புறம்பிலும், உள்ளிலும், கீழிலும், மேலிலும், திசைகளிலும், ஆகாயத்திலும், முயற்சித் தசையாத பிராண வாயுக்களானவை பூரணமாகி குவிந்திருக்கின்ற துருத்தியினிடத்தில் தடைபட்டவைபோல நிலையாயிருந்து உண்டாகி முதன்மையாக சரீரத்தை யெரித்த அக்கினியானது பிரகாசத்தினையுடைய இடியைப்போல க்ஷணநேரத்திலணைந்தது. பனியினது வெண்மையைப்போல் சரீரமானது வெண்ணீறாகி நன்று

கத்தெரித்தபடியினால் அச்சரீரத்துக்கு சரீரமும் அஸ்திக ளனைத்தும் வரிசையாகத் தோற்றி நரம்புகளுடனிருந்தது — எ - ம். (44)

சுகமாய கருப்பூரப் பாயறன்னிற் றுயில்வருபோ லெலும்பு நிரை தோன்றிற்றன்றே, மிகமோது பவனத்தா லங்கிநீறு விரைந் தெழுந்து கணப்போதில் விசும்பைச்சுற்றித், திகழ்வான சாற்கா லந் தன்னின்மேகஞ் செறிபனிப்போ லோரிடத்திற் சென்றுசேர்ந்து, விகலாத விவ்வவத்தை வேண்டுமட்டு மியலோங்கா ரத்திரண் டாங் கிரமத்தெய்த.

இ-ள். சுகமாய - சுகமாயிருக்கின்ற, கருப்பூரப்பாயறன்னில் - கருப்பூரசயனத்தில், துயில்வருபோல் - நித்திரைசெய்வதுபோல, எலும்பு நிரைதோன்றிற்றே - அஸ்தியின் வரிசைதோற்றினது, மிகமோதுபவனத்தால் - மிகவும் அடிக்கின்றகாற்றினால், அங்கிநீறு - அக்கினிநீறானது, விரைந்தெழுந்து - வேகமாகக்கிளம்பி, கணப்போதில் - க்ஷணநேரத்தில், விசும்பைச் சுற்றித்து - ஆகாயத்தைச் சுற்றிக்கொண்டது, திகழ்வானசாற்காலந்தன்னில் - பிரகாசமாகியசாற்காலத்தில், செறிமேகப்பனிப்போல் - செறிந்த பனிமேகத்தைப்போல, ஓரிடத்திற்சென்றுசேர்ந்த - ஓரிடத்திற்போய்ச் சேர்ந்தன, இகலாதவிவ்வவத்தை - எதிரில்லாத இந்த அவத்தையை, வேண்டுமட்டும் - வேண்டுகின்ற பரியந்தம், இயலோங்காரத்து - இயல்பை யுடைய பிரணவத்தின், இரண்டாங்கிரமத்தெய்த - இரண்டாவதான கிரமத் திலடைய — எ - ம.

எ - து. சுகமாயிருக்கின்ற கருப்பூரசயனத்தில் நித்திரை செய் வதுபோல அஸ்தியின் வரிசை தோற்றினது. மிகவும் அடிக்கின்ற காற்றினால் அக்கினிநீறானது வேகமாகக்கிளம்பி க்ஷணநேரத்தில் ஆகாய த்தைச் சுற்றிக்கொண்டது. பிரகாசமாகிய சாற்காலத்தில் செறிந்த பனிமேகத்தைப்போல ஓரிடத்திற் போய்ச்சேர்ந்தன. எதிரில்லாத இந்தவவத்தையை வேண்டுகின்ற பரியந்தம் இயல்பையுடைய பிர ணவத்தின் இரண்டாவதான கிரமத்திலடைய — எ - ம்.

(இ-கூ-க-ம்.) இரண்டாவதான உகாரமானது சமமாய் நிறைந்து பிராணன் கும்பகமாய்ச் சரீரமுழுது நிறைந் தக்கினியை யவித்து வெண் ணீறு வடிவமா யஸ்திரூபமாய்த் தோன்றச்செய்து அக்கீற்றை யெழுப்பிச் சாகாயத்திற் சேர்த்ததென்பாம். (45)

பிரணவத்தின் மூன்றாங்கூறான மகாரம் உச்சரிக்கல்.



அவத்தையிது நிகழ்ந்ததடை யோகந்தன்று லடையோகம்பேரி டரை யளிப்பதன்றோ, வமற்றினிற்பின் பிரணவத்தின் மூன்றாங்கூ

ருயமையுமுப சாந்திதரு மவதாத்தி, னுவப்புறு பூரணத்தாலே பூரக
ப்பே ருளகிரமம் பிராணன்கட் குண்டாய்ற்றன்றே, யுவத்திரமிலா
வந்த வவதாத்தி னுயிரெல்லா முணர்வினமுறு தத்துட்புக்க.

இ-ள். இது அவத்தைநிகழ்ச்சதூ - இந்த அவத்தை பிரகாசிக்கது; அடையோகத்தன்று - அடையோகத்திலைல்ல, அடையோகம - அடையோகமானது, பேரிடையளிப்பதன்றே - மகாநன்பதைக் கொடுக்கின்றதல்லவா, அவற்றினிற்பின் - அதற்குப்பின்பு, பிரணவத்தின - பிரணவத்தினது, மூன்றாங்கூறாய் - (மகாரத்மகமான) மூன்றாங்கூறுகி, அமையுமுபசாந்திதரும் - அமைவான உபசாந்தத்தைக்கொடாநின்ற அவசாத்தில் - அவசாத்தில், உவப்புறு பூரணத்தால் - பொலிவுள்ள பூரணத்தினுல், பூரகப்பேருளகிரமம் - பூரகமென்னு நாமமுள்ள கிரமமானது; பிராணன்கட் குண்டாயிற்று - பிராணவாய்வுகளுக்குண்டானது, உவத்திரமிலா - வருத்தமில்லாத, அந்த அவசாத்தில் - அச்சமயத்தில், உயிரெல்லாம் பிராணங்களனைத்தும், உணர்வினமுறுதத்துட்புக்க - அறிவினமுறுதத்துட்புகின. எ-று.

எ — று. இந்த அவத்தை பிரகாசித்தது, அடையோகத்தினுலல்ல, அடையோகமானது மகாநன்பத்தைக் கொடுக்கின்றதல்லவா, அதற்குப் பின்பு பிரணவத்தினது மகாரத்மகமான மூன்றாங்கூறுகி அமைவான உபசாந்தத்தைக் கொடாநின்ற அவசரத்தில் பொலிவுள்ள பூரணத்தினுல் பூரகமென்னும் நாமமுள்ள கிரமமானது பிராணவாய்வுகளுக் குண்டானது, வருத்தமில்லாத அந்தச்சமயத்தில் பிராணன்களனைத்தும் அறிவினமுறுத்துட் போன — எ - ம். (46)

உகுபனிதோய்ந் தாலொப்பவுதி சீதத்தை யுற்றபிராணன்களெ
லாமொழுங்கினுலே, ககனமுறு புகைதன்கா ராகுமாப்போற் ககன
நடுவுறமதியாய்க் கலையின்கூட்ட, மிகவுநிறைந்தமுதி மண்டலத்
தில் வியன்சுதைதா ரையையுயிர்கண் மேவப்பெற்ற, நிகழ்விசும்பி
னின்றிழிந்த வமுததாரை சேடமாமுடனீற்றிற் சென்று வீழ்ந்த.

இ-ள். உகுபனிதோய்ந்தாலொப்ப - சொரிகின்ற பனியிற்குளித்ததற்குச் சமானமாக, அதிசீதத்தை - அதிசீதளத்தை, உற்றபிராணன்களெலாம் - பொருந்திய பிராணவாய்வுகளனைத்தும், ஒழுங்கினுல் - முறைமையினுல், ககனமுறுபுகை - ஆகாயத்திற்பொருந்திய தூமமானது, தன்காராகுமாப்போல் - குளிர்ந்த மேகமானதுபோல, ககனநடுவுற - ஆகாயமத்தியிற்பொருந்த, மதியாய் - சந்திரமண்டலமாய், கலையின்கூட்டம் மிகவுநிறை

ந்து - கலையின்கூட்டமானது மிகவும் நிறைந்திருக்கின்ற, அந்த மதிமண்டலத்தில் - அச்சந்திரமண்டலத்தில், வியன்சுதாதாரையை - பெருமை பொருந்திய அமுததாரையை, உயிர்கள் மேவப்பெற்ற - பிராணன்கள் பொருந்தப்பெற்ற, திகழ்விசும்பினின்று - பிரகாசிக்கின்ற ஆகாயத்திலிருந்து, இந்தவமுததாரை - இறங்கிய அமுததாரையானது, சேடமாமுடனீற்றின் - மிஞ்சின சரீரச்சாம்பலில், சென்றுவீழ்ந்த - போய்விழுந்தது - எ - று.

எ - று. சொரிகின்ற பனியிற் குளிர்ந்ததற்குச் சமானமாக அதிசீதளத்தைப் பொருந்திய பிராணவாயுக்கள் அனைத்தும் முறைமையினால் ஆகாயத்திற் பொருந்திய ஞாயமானது குளிர்ந்த மேகமானது போல ஆகாயத்திலிற் பொருந்த சந்திரமண்டலமாய் கலையின் கூட்டமானது மிகவும் நிறைந்திருக்கின்ற அச்சந்திரமண்டலத்தில் பெருமைபொருந்திய அமுததாரையை பிராணன்கள் பொருந்தப்பெற்ற பிரகாசிக்கின்ற ஆகாயத்திலிருந்து இறங்கிய அமுத தாரையானது மிஞ்சின சரீரச் சாம்பலில்போய் விழுந்தது—எ - ம். (47)

அரன்சிரத்தினிழிதரு கங்கைபோன்ற அமுததாரையினாலே யமலமாகிக், கரங்களொரு நான்குடன்வெண் மதித்தேசாகிக் கருணைமால் வடிவென்னக் காணலாகி, யுரங்கிளருத்தாலகன் மெய்த்தோன்றிற்றன்றே யமுதமயமான வுயிர்களெல்லாம், தாமையுறு தனைநினைத்துச் சூழ்ந்துள்ளான குண்டலிமற் றினைப்பூசை குயிற்றி நின்ற.

இ - ள். அரன் சிரத்தினிழி - சிவனது சிரசிலிருந்து இறங்காநின்ற, அமுதகங்கைபோன்ற - தேவகங்கையையொத்த, அமுததாரையினால் - அமுதவருடத்தினால், அமலமாகி - களங்கமில்லாததாய், கரங்களொரு நான்குடன் - ஒப்பற்ற சதுர்ப்புயங்களோடும், வெண்மலத்தேசாகி - வலிதான சந்திரபிரகாசமாய், கருணைமால் வடிவென்ன - கிருபையையுடைய திருமால் வடிவத்தைப்போல, காணலாகி - காணத்தக்கதாய், உரங்கிளருத்தாலகன் - பலமாகப் பிரகாசிக்கின்ற உத்தாலகமுனியின், மெய்தோன்றிற்று - சரீரந்தோன்றியது, அமுதமயமான - மேலான அமுதமயமாகிய, உயிர்களெல்லாம் - பிராணன்களனைத்தும், தாமையுறுதனை - அச்சரீரத்தை, நினைத்து - நினைவித்து, சூழ்ந்து - வியாபித்து, உள்ளான குண்டலிமற்றினை - உள்ளேயிருக்கின்ற குண்டலி சத்தியை, பூசைகுயிற்றி - ஆராதனைசெய்து, நின்ற - (நின்றன)—எ - று.

எ - று. சிவனது சிரசிலிருந் திறங்காநின்ற தேவகங்கையை யொத்த அமுதவருடத்தினால் களங்கமில்லாததாய் ஒப்பற்ற சதுர்ப் புயங்களோடும் வலிதான சந்திர பிரகாசமாய் கிருபையை யுடைய

திருமால் வடிவத்தைப்போல காணத்தக்கதாய் பலமாக பிரகாசிக்கின்ற உத்தாலகமுனியின் சரீரந்தோன்றினது. மேலான அமுதமாகிய பிராணன்களனைத்தும் அந்தர்சரீரத்தை நிறைவித்து வியாபித்து உள்ளேயிருக்கின்ற குண்டலிசத்தியை ஆராதனைசெய்து சுற்றி நின்றன—எ-ம்.

**(இ-௩-௩-ம்) உபசாந்திமயமான மகாநாதமானது நிறைந்து பிராணன் பூரகதினுல் வாய்வுகளறிவின்முகத்திற் செல்லக் குளிர்ச்சியடைந்த பிராணவாய்வுகள் சிதாகாயத்திற் கலைகணிறைந்த ஞானசந்திரனுய் அதிலுண்டான அமுதமிறங்கித்தேகத்தை நனைக்கச் சுபோத வடிவமாயதிலமுதமயமான பிராணனிலிருந்து குண்டலி சத்தியைப் பூசைசெய்தனென்பதாம்.**

பஞ்சபூத காரியமான உடலைப் பிராணவத்தால் கெடுத்து
ஞானவடிவமாகிப் பாகியவிடயங்களையும் அறிந்செல்லு மனத்தையும்
அப்படியே கெடுக்கத் தொடங்கல்.

இத்திறத்திற் பங்கயவா தனத்திருந்தோ னியாக்கை நிலையழியாம வியற்றிப்பின்னர், மத்தமுறு பிரமரம்போற் சுழலுநெஞ்சை வன்பினுற் றகைவுற்றுன் மௌனியாகி, மெத்தபிராணுபான வேக நோக்கி மெல்லெனவுண் டாக்கினன்வல் விடயநின்று, தத்துபொறி கலைவருந்தி வேறுசெய்தான் சற்றுமறப்புறப்பரிசந் தள்ளினுனே.

இ - ள். இத்திறத்தில் - இப்பிரகாரத்தால், பங்கயவாதனத் திருந்தோன் - பத்மாசனத்திலிருந்த உத்தாலகமுனியானவர், யாக்கைநிலையழியாமல் - தேகஸ்திதிகெடாமல், வியற்றி - செய்து, பின்னர் - பின்பு, மத்தமுறு பிரமரம்போல் - மதமுள்ள வண்டைப்போல, சுழலுநெஞ்சை - சுழலாநின்ற மனதை, வன்பினுற்றகையுற்றுன் - பலத்தினுல் தடுத்தான், மௌனியாகி - மௌனத்தையுடையவனுய், மெத்துபிராணுபானவேக நோக்கி - மிருதுவானபிராணுபானன்களுடைய வேகத்தை (முகத்திற்) பார்த்து, மெல்லென வுண்டாக்கினன் - சவுமியமாகச்செய்தான், வல்விடயநின்றுதத்துபொறிகளை - வலியவிடயத்தினின்று தாவுமிந்திரியங்களை, வருந்திவேறுசெய்தான் - வருத்தப்பட்டு வேறுபடுத்தினுன், சற்றுமற - எவ்வளவேனு மில்லாமல், புறப்பரிசந்தள்ளினுன் - புறம்பிலுள்ள விடயத்தை நீக்கினுன்—எ-று.

எ - து. இப்பிரகாரத்தால் பத்மாசனத்திலிருந்த உத்தாலகமுனியானவர் தேகஸ்திதி கெடாமல் செய்து பின்பு மதமுள்ளவண்டைப்போல சுழலாநின்ற மனதை பலத்தினுல் தடுத்தான். மௌனத்தை யுடையவனுய் மிருதுவான பிராணுபானன்களுடையவே

கத்தை முகத்திற்பார்த்து சவுமியமாகச்செய்தான். வலிய விடயத்தினின்று தாவுமிந்திரியங்களை வருத்தப்பட்டு வேறுபடுத்தினான். எவ்வளவேனுமில்லாமல் புறம்பிலுள்ள விடயத்தை நீக்கினான்—எ - ம்.

**மூலவாசன்முதல் நவத்துவார பந்தனஞ்செய்து**

**அந்தரவிடயங்களைத் தள்ளி மனதை யிதயாம்பரத்தில் அடக்கல்.**

பற்றறுதிண் ணியமதியோ னுள்ளேதோன்றும் பரிசமெலாந் தன்றுகின்ற பார்வையாலே, யற்றனவாக் கினன்மூல வாயல்செம்மி யங்கத்தொன்பதுவாய லனைத்துமெல்லாங், குற்றமற முகமடைத்தாற் புறத்துவாரங் கும்பத்துக் கடைபடல்போற் குறித்தடைத்தா, னுற்றலயமெனுங்குணத்தைச் சேர்ந்தநெஞ்சை யுயரிதய வாகாயத் தொடுக்கினனே.

இ - ள். பற்றற - பற்றற்ற, திண்ணியமதியோன் - திடமுள்ள அறிவையுடைய உத்தாலகன், உள்ளேதோன்றும் - உள்ளத்திற் றோற்றுகின்ற, பரிசமெலாம் - விடயங்களனைத்தையும், தன்றுகின்ற பார்வையால் - நீக்குகின்ற திருஷ்டியினால், அற்றனவாக்கினன் - இல்லாததாகச்செய்தான், மூலவாயல்செம்மி - மூலவாசலையடைத்து, அங்கத்தொன்பதுவாயல் - சரீரத்தின் நவத்துவாரங்களிலுள்ள, அனைத்துமெல்லாம் - வாய்களனைத்தையும், குற்றமற முகமடைத்தால் - குற்றமின்றி முகவாசலையடைத்தால், புறத்துவாரங் கும்பத்துக்கடைபடல்போல் - புறத்துள்ள துவாரங்கள் குடத்துக் கடைபடுகின்றதுபோல, குறித்தடைத்தான் - மதித்தடைத்தான், உற்றலயமெனுங்குணத்தை - பொருந்திய விறந்ததென்னுந் தன்மையை, சேர்ந்தநெஞ்சை - சார்ந்த மனதை, உயரிதயவாகாயத்தொடுக்கினன் - மேலான இதயாகாசத்தி லடக்கினன்—எ - று.

எ — து. பற்றற்றதிடமுள்ள அறிவையுடையஉத்தாலகன் உள்ளத்திற் றோன்றுகின்ற விடயங்களனைத்தையும் நீக்குகின்ற திருஷ்டியினால் இல்லாததாகச் செய்தான். மூலவாசலை யடைத்து சரீரத்தின் நவத்துவாரங்களிலுள்ள வாய்களனைத்தையும் குற்றமின்றி முகவாசலை யடைத்தால் புறத்துள்ள துவாரங்கள் குடத்துக் கடைபடுகின்றதுபோலமதித்தடைத்தான். பொருந்திய விறந்ததென்னுந்தன்மையைச் சார்ந்தமனதை மேலான இதயாகாசத்திலடக்கினான்—எ - ம்.

**இதயாம்பரத்தினின்று மனதைக் கண்டத்திற் சீவனையுஞ் செலுத்தல்.**

உரத்தமத கரியையுபாயத்தால்விந்தத் தாட்குழியில் சேர்ப்பதுபோ லொடுக்கிநெஞ்சை, சாற்கனம்போனிமல தெளிவைச் சேர்

ந்து தள்ளினன் பற்றியாய் தன்மையாலே, வாத்துடைய விகற்பமெ
லா மீளமீள வருவனவேண் டினபடியே வந்துதோன்ற, பரப்புறு
தோற் றங்களைவன் னெஞ்சான்மாய்த்தான் பகைவரை வாளாற்
சூரன் படுப்பதேபோல்.

இ - ள். உரத்தமதகரியை - பலத்தையுடைய மதயானையை, உபாயத்தால் - தந்திரத்தினால், விர்த்தநட்டகுழியில் - மலையிலுள்ள படுகுழியில், சேர்ப்பதுபோல் - சேர்ப்பதுபோல, நெஞ்சையொடுக்கி - மனதையடக்கி, சரற்கனம்போல் - சரற்காலத்தாகாயம்போல, நிமலதெளிவைச்சேர்ந்து - நிருமலமானதெளிவை யடைந்து, பற்றியாய்தன்மையால் - பிரதிபலிக்கின்ற விகற்பங்களியாவையும், தள்ளினன் - நீக்கினன், மீளமீள - திரும்பத் திரும்ப, வருவன - வாரத்தக்கன, வேண்டினபடியே - வேண்டிய பிரகாரமே, வந்துதோன்ற - வந்துண்டாக, பகைவரை - சத்துருக்களை, வாளால் - கத்தியினால், சூரன்படுப்பதேபோல் - வீரன் கொல்லுவதுபோல, வன்னெஞ்சால் - கொடியமனதில், பரப்புறு தோற்றங்களை - விரிந்தவிடயங்களை, மாய்த்தான் - கெடுத்தான் — எ - று.

எ - து. பலத்தையுடைய மதயானையை தந்திரத்தினால் மலையிலுள்ள படுகுழியில் சேர்ப்பதுபோல, மனதையடக்கி சரற்காலத்தாகாயம்போல நிருமலமான தெளிவையடைந்து பிரதிபலிக்கின்ற குணத்தினால் உதித்துக் கொண்டிருக்கின்ற விகற்பங்களியாவையும் நீக்கினன் திரும்பத்திரும்ப வாரத்தக்கன, வேண்டிய பிரகாரமே வந்துண்டாக சத்துருக்களை கத்தியினால் வீரன்கொல்லுவதுபோல கொடிய மனதினால் விரிந்தவிடயங்களைக் கெடுத்தான் — எ - ம். (51)

சமாதிக்கண்டோற்றின வைந்தவத்தையும் கெடுத்தல்.

விகற்பமெலா மிறந்தலுமே யிதயவிண்ணில் விவேகபானுவை
மறைத்து விரிந்தகங்குல், சகத்தினிலு ளஞ்சனைத்தின் பார்த்தப்போ
தே தன்னுள்விவே கத்தாலே தவிர்த்தானத்தை, யகத்திருணன்
றுய்க்கெடலுஞ் சுடர்வர்தெய்த வம்புவியை னத்தையுங்கண் டகற்றி
மாய்த்தான், நிகழ்ச்சியொளி யகலுதலுஞ் சுழன்று நெஞ்ச நிசியி
னடுப் போலுறக்க நேர்ந்ததன்றே,

இ - ள். விகற்பமெலாமிறந்தலும் - விகற்பங்களனைத்து மிறந்தவுடன், இதயவிண்ணில் - இருதயாம்பரத்தில், விவேகபானுவை - விவேக சூரியனை, சகத்தினிலுளஞ்சனைத்தின் - உலகத்திலுள்ள மையைப்போல, மறைத்தவிரிந்த கங்குல் - மூடிப்பரந்த அந்தகாரத்தை, பார்த்தப்போது - பார்த்தவப்

பொழுதே, தன்னுள்விவேகத்தால் - தனக்குள் விளங்கிய விவேகத்தினால், அத்தைத்தவிர்த்தான் - அவ்விருளைக் கெடுத்தான், அகத்திருள் - உள்ளத்தின் கண்ணுள்ள விருளானது, நன்றாய்க்கெடலும் - நன்றாய் கெட்டமாத்திரத்தில், சுடர்வந்தெய்த - பிரகாசம் வந்தடைய, அம்முனிவன் - அந்த முனிவன், அதனையுங்கண்டு - அவ்வொளியையும் பார்த்து, அகற்றிமாய்த்தான் - நீக்கிக்கெடுத்தான், கிழச்சியொளியகலுதலும் - பிரகாசமுள்ள வொளிநீங்குதலும், நெஞ்சந்தூற்ற - மனஞ்சுழல்வுற்று, கிளியினைப் போலுறக்கஞ்சேர்ந்தது - அர்த்தசாமம்போல் நித்திரையடைந்தது—எ - று.

எ — து. விகற்பங்களனைத்தும் இறந்தவுடன் இதயாம்பரத்தில் விவேகசூரியனை உலகத்திலுள்ளமையைப்போல மூடிப் பரந்த அந்தகாரத்தைப்பார்த்த அப்பொழுதே தனக்குள்விளங்கிய விவேகத்தினால் அவ்விருளைக்கெடுத்தான். உள்ளத்தின்கண்ணுள்ள இருளானது நன்றாய் நசித்தமாத்திரத்தில் பிரகாசம் வந்தடைய அந்த முனிவன் அவ்வொளியையும் பார்த்து நீக்கிக்கெடுத்தான். பிரகாசமுள்ளவொளி நீங்குதலும் மனஞ்சுழல்வுற்று அர்த்தசாமம்போல் நித்திரையடைந்தது—எ - ம். (52)

போகாத துயிலினையு மறுத்தானுறக்கம் போக்குதலு மாகாச போதம்வந்த, தாகாச போதமழிந் திடலுமவ்வலையவன்மன மோகஞ்சேர்ந்த வந்தமோக, நோகாமன் மனத்தினைவிட் டேகுமாறு தூக்கினான் பெரிய நோக்குமிக்கோ, னேகாத விரவுதரு மந்தகார மிவ்வுலகி னின்றகற்று மிரவிபோல.

இ - ள். போகாதநுயிலினையும் - நீங்காத நித்திரையையும், அறுத்தான் - கெடுத்தான், தூக்கம்போகுதலும் - நித்திரை நீங்கவும், ஆகாசபோதம்வந்தது-சூனியவாகாசஞானம் வந்தது, ஆகாசபோதமழிந்திடலும் - அவ்வாகாயஞானம் அழிந்தமாத்திரத்தில், அவன்மனம் - அவன்மனது, வல்லை - சீக்கிரமாக, மோகஞ்சேர்ந்தது-மோகத்தை யடைந்தது, அந்தமோகம் - அம்மோகமானது, நோகாமல் - வருந்தாமல், மனத்தினைவிட்டேகுமாறு - மனதைவிட்டு நீங்கும்படி, பெரியநோக்குமிக்கோன் - மேலான ஆனந்தநிருஷ்டியிருந்த உத்தாலகமுனியானவர், ஏகாத - நீங்காத, இரவுதருமந்தகாரம் - இராவைக்கொடுக்கின்ற இருளை, இவ்வுலகினின்று - இந்த உலகத்தின் கணின்று, அகற்றுமிரவிபோல - நீக்குகின்ற சூரியனைப்போல, தூக்கினான் - தள்ளினான்—எ - று.

எ - து. நீங்காத நித்திரையையும் கெடுத்தான். நித்திரை நீங்கவும் சூனியவாகாசஞானம் வந்தது. அவ்வாகாயஞானமழிந்த மாத்திரத்தில் அவன் மனது சீக்கிரமாக மோகத்தையடைந்தது. அம்மோகமானது வருந்தாமல் மனதைவிட்டு நீங்கும்படி

மேலான ஆனந்தநிருஷ்டியிருந்த உத்தாலகமுனியானவர் நீங்காத இராவைக்கொடுக்கின்ற இருளை இந்த உலகத்தினின்று நீக்குகின்ற சூரியனைப்போலத் தன்னினின்றும் — எ — ம்.

(இ-உ-க-ம்.) சமாதியின் மனோவிகற்ப நீங்கலையின் அந்தகாரந்தோன்ற, அதனை ஞானதிருஷ்டியாற்கெடுத்தபின் பிரகாசந்தோன்ற, அதனைச் சுயம்பிரகாசத்தாற் கெடுத்தபின் சுழுத்திதோன்ற, அதனைத்தவிர்சுழுத்தியாற் கெடுத்தபின் சூனியாகாயந்தோன்ற, அதைச்சிதாகாயத்தாற் கெடுத்தபின் ஜடாகாரமான மோகந்தோன்ற அதைப்பரிபூரணதிருஷ்டியாற் கெடுத்தனென்பதாம். (53)

## மனம் சைதன்யத்தை அடைதல்.

அன்னகாலையி லிருள்சுடர் துயில்மயக் கனைத்தையு மறுத்
தோட்டி, மன்னுமோனவத் தையைப்படைந் தொருகணம் வருத்த
மா றியதுள்ளம், பின்னர்நீர்ந்துட னேயனைத்துருவமா மறிவையெ
ய்திய தன்றே, நன்னெடுங்கரை தடுக்கநின்றெதிர்த்து முற்றல
நந்திடு நீர்போல்.

இ-ள். அன்னகாலையில் - அத்தன்மையான காலத்தில், இருள் - இருட்டும், சுடர் - பிரகாசமும், துயில் - நித்திரையும், மயக்கம் - மோகமுமுதலான, அனைத்தையு மறுத்தோட்டி - சகலத்தையும் அறுத்துத்துரத்தி, மன்னும் - நிலைபெற்ற, ஓமவத்தையைடைந்து - ஒப்பற்ற (நிருவிகற்ப) சமாதியையடைந்து, ஒருகணம் - ஒருக்ஷணநேரம், உள்ளம் - மனமானது, வருத்தமாறியது - விச்ராந்தியடைந்தது, துன்பநீர்ந்துடன் - துன்பம் விடுபட்டவுடன், அனைத்துருவமாமறிவை - சகல வடிவங்களாய் பிரகாசிக்கின்ற ஸ்வரூபஞானத்தை, நன்னெடுங்கரைதடுக்க - நன்மைபொருந்திய நீண்டவணைதடுக்க, நின்றெதிர்த்து - நின்றெதிர்வுற்று, முற்றலநிறைந்திடு நீர்போல் - முன்னுள்ள இடத்தினிறைகின்ற சலத்தைப்போல, எய்தியது - அடைந்தது — எ - று.

எ-று. அத்தன்மையான காலத்தில் இருட்டும் பிரகாசமும், நித்திரையும், மோகமுமுதலான சகலத்தையும் அறுத்துத் துரத்தி நிலைபெற்ற ஒப்பற்ற நிருவிகற்பசமாதியை யடைந்து ஒரு க்ஷண நேரம் மனமானது விச்ராந்தியை யடைந்தது. துன்பம் விடுபட்ட வுடன் சகலவடிவங்களாய் பிரகாசிக்கின்ற ஸ்வரூபஞானத்தை நன்மைபொருந்திய நீண்டவணைதடுக்க நின்றெதிர்வுற்று முன்னுள்ள விடத்தினிறைகின்ற சலத்தைப்போல அடைந்தது.

முதலியவின்றதனால் முன்னைக்கிருந்த ஆகாயபோதமுங்கெட்டு. ( )

## மனஞ்சின்மாத்திரமாதல்.

விஞ்சுகீள்பகற் பரிசயத்தாலுந் தன்மெய்யறிவுணர் வாலும்,
நெஞ்சுசின்மய மடைந்ததா லிரணியநிகழ்சிலம் பாமாபோல், வஞ்சக
வன்மனத் தன்மைபோச்சின்மய மருவியமனந்தீர, செஞ்செவ்வே
வல்லை வேற்றுமையானதாற் சேற்றினுட் குடமென்ன.

இ - ள். விஞ்சுகீள்பகற்பரிசயத்தாலும் - மிகுந்த வெகுகாலப்பழக்கத்தினாலும், தன்மெய்யறிவுணர்வாலும் - தனதுண்மைஞானத்தின் அனுபவத்தினாலும், இரணியம் - தங்கமானது, நிகழ்சிலம்பாமாபோல் - பிரகாசிக்கின்ற நூபுரமானதுபோல, நெஞ்சுசின்மயமடைந்தது - மனது ஞானாகாரம் அடைந்தது, வஞ்சகவன்மனம் - வஞ்சகமும் வலிமையுமுள்ள மனதின், தன்மைபோய் - குணநீங்கி, சின்மயமருவியமனம் - சின்மயத்தை யடைந்தமனமானது, தீரச்செஞ்செவ்வே - மிகவுஞ் செவ்விதாக, சேற்றினுட் குடமென்ன - பங்கத்தினுள்ளிருந்த குடத்தைப்போல, வல்லைவேற்றுமையானது - சீக்கிரமாகச் சித்தானது — எ - று.

ப - ரை. மிகுந்த வெகுகாலப் பழக்கத்தினாலும் தனதுண்மை ஞானத்தின் அனுபவத்தினாலும், தங்கமானது பிரகாசிக்கின்ற நூபுரமானதுபோல மனது ஞானாகாரம் அடைந்தது. வஞ்சகமும் வலிமையுமுள்ள மனதின் குணநீங்கி சின்மயத்தை அடைந்த மனமானது மிகவுஞ் செவ்விதாக பங்கத்தினுள்ளிருந்த குடத்தைப்போல சீக்கிரமாகச் சித்தானது — எ - ம். (55)

## முனிவர் பூரணஞானத்தை அடைதல்.

தங்குகாட்சிவிட் டமலமாய்ஞானத்தின் சாமடைந்தது போ
தம், பொங்குவாரிதி நிரைமுதற்பகிர்ச்சிபோய்ப் புனலசமமடைந்
தன்ன, வெங்குமோர்மெய்யாயறிவுற்றவனிறல் போகத்தையுன்ன, மங்
கிபோலண்டம் பரித்துயார்க்கமலசின்மயவிசும்புரு வானான்.

இ - ள். தங்குகாட்சிவிட்டு - தங்குகின்ற விடயக் காக்ஷியைவிட்டு, அமலமாய் - நிருமலமாய் - ஞானத்தின்சாமம் - சிற்சாமானியத்தை, பொங்குவாரிதி - பொங்குகின்ற சமுத்திரசலமானது, நிரைமுதற்பகிர்ச்சிபோய் - அலைமுதலான பகுப்புகணீங்கி, புனலசமமடைந்தன்ன - சலமானது சாமானியம் அடைந்ததுபோல, போதம் - ஞானமானது, அடைந்தது - சேர்ந்தது, எங்குமோர்மெய்யாய் - எவ்விடத்திலும் ஒப்பற்ற ஞானமாய், அறிவுற்றவன் - ஞானத்தையடைந்த உத்தாலகமுனியானவன், இறல்போகத்துன்னை மனதி - அனைத்துப்போக்கினைவிட்டு, ஆண்டு - அவ்விடத்தில், அண்டம்பரித்து -

அண்டங்களைத்தாங்கி, உயர்ந்து - மேலான வியாபகமாய், அமலம் - நிரும லமான, சின்மய விசேஷருனாகுன் - ஞானகாய வடிவமானுன் —எ - று.

எ - து. தங்கா நின்ற விடயக் காக்ஷியைவிட்டு நிருமலமாய் சிற் சாமானியத்தை பொருங்கா நின்ற சமுத்திரசுகமானது அலைமுதலான பகுப்புக்களின்றி சலமானது சாமானியம் அடைந்தாற்போல ஞான மானது சேர்ந்தது எவ்விடத்திலும் ஒப்பற்ற ஞானமாய் ஞானத் தையடைந்த உத்தாலகமுனியான வன் அளவற்ற போகசித்தனையை விட்டு அவ்விடத்தில் அண்டங்களைத் தாங்கி மேலான வியாபகமாய் நிருமலமான ஞானகாயவடிவமானுன்—எ—ம். (56)

முனிவர் ஆநந்தசாகரமாய்ச் சத்தாசாமானியமாதல்.

அவ்விடத்தினிற் காண்பதுகாட்சியற் றநந்தமாநல்லின்பஞ்
செவ்வியாநந்த முற்றனனமுதமார் தெண்கடற்குளித்தன்ன
மெய்விடக்கழன் றதீதனுயொருதல மேவினன்சதாநந்தப்
பௌவமாயினனெங்கணுமொத்தசற் பாவமேவடிவானுன்.

இ - ள். அவ்விடத்தினில் - அந்தச் சிதாகாசமான விடத்தில், காண்பது - திரிஸ்யமும், காட்சி - தரிசனமும், அற்று - இல்லாமல், அநந்தமாய- அளவில்லாததாகிய, நல்லின்பம் - பரமசுகத்தையுடைய, செவ்வியாநந்தம்- செவ்வையான (அனுபவ) ஆநந்தத்தை, அமுதமார்தெண்கடல் - அமுதநிறை ந்ததெள்ளிய சமுத்திரத்தில், குளித்தன்ன - முழுகினதுபோல, உற்றனன் பொருந்தினன், மெய்விடக்கழன்றதீதனுய் - உண்மைதவிர (மற்றவை) நீங்கி அதீதத்தன்மையை யுடையவனுய், ஒருதலமேவினன் - ஒப்பற்ற ஞானபதஞ் சேர்ந்தான், சதாநந்தப்பௌவமாயினன் - சதாநந்தசாகரமானுன், எங்கணு மொத்த - எங்குநிறைந்த, சற்பாவமேவடிவானுன் - சத்தசாமானியமே படி வமானுன் —எ - று.

எ - து. அந்தச் சிதாகாசமானவிடத்தில் திரிஸ்யமும் தரிசன மும் இல்லாமல் அளவில்லாததாகிய பரமசுகத்தை யுடைய செவ் வையான அனுபவாநந்தத்தை அமுதநிறைந்த தெள்ளிய சமுத்தி ரத்தில் முழுகினதுபோலப் பொருந்தினன். உண்மை தவிர மற்ற வை நீங்கி அதீதத்தன்மையை யுடையவனுய் ஒப்பற்ற ஞானபதஞ் சேர்ந்தான். சதாநந்தசாகரமானுன். எங்கு நிறைந்த சத்தாசாமானி யமே படிவமானுன்—எ - ம். (57)

முனிவர் சிதாநந்தவைக்கியமாய் விளங்குதல்.

அந்தணன்றனை தறிவெனு மன்னமா நந்தமாநிலையோடை,
வந்தமர்ந்தது சாற்கணத்திலே வயங்குமாமதியென்ன, வந்து

காற்றிலா விளக்கென வொளியு முருவெழுதித் திரையில்லாச்
சிந்துவென்னநீர் கருக்கொண்டு பொழியலாச் செண்முகிலென
நின்றான்.

இ-ள். அந்தணன்றனது உத்தாலகனென்னும் பிராமணனுடைய, அறிவெனும் - அறிவென்கின்ற, அன்னம் - அதிசயமானது, ஆநந்தமாகிய ஓடை - ஆநந்தமாகிய நிலையான தடாகத்தில், வந்தமர்ந்தது - வந்து பொருந்தினது, சரற்ககனத்தில் - சரற்காலத்தாகாயத்தில், வயங்கும் - பிரகாசிக்கின்ற, மாமதியென்ன - பூரணசந்திரனைப்போலவும், உந்து - அடிக்கின்ற, காற்றிலாவிளக்கென - காற்றில்லாத தீபத்தைப் போலவும், எழுதி - சித்திரத்தினது, உருவென - வடிவத்தைப்போலவும், திரையில்லா - அலையில்லாத, சிந்துவென்ன - சமுத்திரத்தைப்போலவும், நீர் கருக்கொண்டு - சலத்தைச் சூலாகக்கொண்டு, பொழியலா - வருஷியாத, செண்முகிலென - ஆகாயத்திலுள்ள மேகத்தைப்போலவும், நின்றான் - ஆத்மாவிற்றிரமாயிருந்தான் — எ - று.

எ - று. உத்தாலகனென்னும் பிராமணனுடைய அறிவென்கின்ற அதிசயமானது ஆநந்தமாகியநிலையான தடாகத்தில் வந்து பொருந்தினது. சரற்காலத்தாகாயத்தில் பிரகாசிக்கின்ற பூர்ணசந்திரனைப்போலவும், அடிக்கின்றகாற்றில்லாத தீபத்தைப்போலவும், சித்திரத்தினதுவடிவத்தைப்போலவும், அலையில்லாத சமுத்திரத்தைப்போலவும், சலத்தைச் சூலாகக்கொண்டு வருஷியாத ஆகாயத்திலுள்ள மேகத்தைப் போலவும், ஆத்மாவிற்றிரமாயிருந்தான்.

(இ-ரு-க-ம்) ஸ்வாநுபவ அத்வைத நிலையங்களை விபரமாயறிவித்ததாம்.

## தேவர்கண்முனியைப் பரிசோதித்தல்.

இந்தமிக்கபே ருலகினிற்றற்பதத் திருக்குமம்முனியைக்கண்
டந்தரஞ்செறி சித்தர்விண்ணவர்குழா மற்புதப்பலபேரும்
வந்துசுற்றினர் மாமறையவர் நிரம்பினர் வாசவன்றனிமூதூர்
தந்தளிப்பவு மங்கவையனைத்தையுந் தள்ளினன்விருப்பின்றி.

இ-ள். இந்தமிக்க பேருலகினில் - இந்த விருத்தியான உலகத்தில், தற்பதத்திருக்கும் - பிரமபதத்திலிருக்கின்ற, அம்முனியைக்கண்டு - அந்த உத்தாலகமுனியைப் பார்த்து, அந்தரஞ்செறி - ஆகாயத்தில் நெருங்கிய, சித்தர் - சித்தர் (கூட்டமும்), விண்ணவர்குழா - தேவர்கூட்டமும், அற்புதப்பலபேரும் - (இன்னும்) அதிசயமுள்ள அநேகர்களும், வந்து சுற்றினர் - வந்து சூழ்ந்தார்கள், மாமறையவர் நிரம்பினர் - வேதஸ்ரீசனிறைந்தார்கள், வாசவன் - தேவேந்திரன், தனிமூதூர் - ஒப்பற்ற தெய்வலோகத்தை, தந்தளிப்ப - தயவோடுங்கொடுக்க, அவன் - அவ்வுத்தாலகமுனியான

வர், அங்கவையமைத்தையும் - அவ்விடத்திலுள்ள அச்சகலத்தையும், விருப்பின்றித் தள்ளினன் - விருப்பமில்லாமல் நீக்கினேன்—எ-று.

எ - து. இந்த மிகுந்த பெரிதானவுலகத்தில் பிரமபதத்திலிருக்கின்ற அந்த உத்தாலகமுனியைப்பார்த்து ஆகாயத்திலொருங்கிய சித்தர்குழுவும், தேவர்குழுவும், இன்னபதிசயமுள்ள அநேகர்களும் வந்து சூழ்ந்தார்கள். தேவஸ்திரீகளிறைந்தார்கள். தேவேந்திரன் ஒப்பற்ற தெய்வலோகத்தை நயவோடுங்கொடுக்க அவ்வுத்தாலக முனியானவர் அவ்விடத்திலுள்ள அச்சகலத்தையும் விருப்பமில்லாமல் நீக்கினேன்—எ-ம். (59)

முனிவரானவர் ஆத்மபோதமாய் விளங்குதல்.

அலங்கன்மாதரிந் திரங்களைச் சேய்த் தறிவிலாதெனைச்
சற்றுங், கலங்கலாதகெம் பீரமாமதியினன் கடவுள்வான்பேற்றெண்
ணம், விலங்கியன்னதன் றூநந்த வீட்டிலே மேவினன் மதியாறு,
துலங்கியோங்கிய வுத்தராயணத்திலே சுடர்விடுதிநேசனை.

இ - ள். அலங்கன்மாதர் - மாலையையணிந்த ஸ்திரீகள், இந்திரங்களை - இங்கிதசாங்களை, சேசவந்து - குழந்தைப்பருவத்தில், அறிவிலாதெனை - அறியாதவனைப்போல, சற்று - எவ்வளவேனும், கலங்கலாத - கலக்கமில்லாத, கெம்பீரமாமதியினன் - ஆழ்ந்தகருத்தையுடைய உத்தாலகன், கடவுள்வான்பேற்றெண்ணம் - தேவர்களது மேலான போகக்கருத்தை, விலங்கி - நீங்கி, அன்னதன்றூநந்தவீட்டில் - அத்தன்மையான தனதானந்த வீட்டில், ஆறுமதி - ஆறுமாதம், உத்தராயணத்தில் - உத்தராயணகாலத்தில், துலங்கியோங்கிய - ஓங்கிவிளங்கிய, சுடர்விடுதிநேசனை - பிரகாசிக்கின்ற சூரியனைப்போல, மேவினன் - பொருந்தினான்—எ - று.

எ - து. மாலையையணிந்தஸ்திரீகள் இங்கிதசங்களை குழந்தைப்பருவத்தில் அறியாதவனைப்போல் எவ்வளவேனும் கலக்கமில்லாத ஆழ்ந்த கருத்தையுடைய உத்தாலகன் தேவர்களது மேலான போகக்கருத்தை நீங்கி அத்தன்மையான தனதானந்தவீட்டில் ஆறு மாதம் உத்தராயன காலத்தில் ஓங்கி விளங்கிய பிரகாசிக்கின்ற சூரியனைப்போலப் பொருந்தினன்—எ-ம். (60)

முனிவரானவர் ஆனந்தபோதமாய் விளங்குதல்.

மூவராகிய முதல்வருமமரரு மொய்த்தசித்தரும்வாழுஞ்
சீவன்முத்தியாம் பதமடைந்தருந்தவன் செறியுமாநந்தத்தி

னோவலின்றிய நிறைவினானந்த முதிர்ச்சியாம்பதமுற்றா
னவதானபோ ரானந்தமதுவிலவ் வறிவினாற் றிகழ்வுற்றான்.

இ - ள். மூவராகிய முதல்வரும் - முதன்மையான மும்மூர்த்திகளும், அமரரும் - தேவர்களும், மொய் சித்தரும் - நெருங்கியிருக்கின்ற சித்தர்களும், வாழாநின்ற, சீவன்முத்தியாம்பதம் - சீவன்முத்தியான பதத்தை, அடைந்த - பெற்ற, அருந்தவன் - அரியதவத்தையுடைய உத்தாலகமுனி, செறியுமானந்தத்தில் - நிறைந்திருக்கின்ற ஆநந்தத்தில், ஓவலின்றிய நிறைவினால் - ஒழிதலில்லாத பூரணத்தால், ஆநந்தமுதிர்ச்சியாம்பதமுற்றான் - ஆநந்த முதிர்ந்த அதீதபதத்தையடைந்தான், அவதான - அவதாகிய போரானந்தம் அதுவில் - போரானந்தம் அதுவில்லாததுமாகிய, அவ்வறிவினால் - அந்தஞான த்தினால், திகழ்வுற்றான் - பிரகாசித்தான் — எ - று

எ - து. முதன்மையான மும்மூர்த்திகளும், தேவர்களும், நெருங்கியிருக்கின்ற சித்தர்களும், வாழாநின்ற சீவன் முத்தியான பதத்தைப்பெற்ற அரியதவத்தையுடைய உத்தாலகமுனி நிறைந்திருக்கின்ற ஆநந்தத்தில் ஒழிதலில்லாத பூரணத்தினால் ஆநந்தமுதிர்ந்த அதீதபதத்தை யடைந்தான், அவதாகிய போரானந்தமும் அதுவில்லாததுமாகிய அந்தஞானத்தினால் பிரகாசித்தான் — எ — ம். (61)

முனிவரானவர் ஆறுமாதம் ஸ்வரூபசமாதியில் இருத்தல்.

ஒருகணந்தொட்டி வருடநாளென்னினு முயர்ந்தவப்பதமுற்றோர்
வருபவந்தரு செகதுவாய்க்காண்பன மருவுமிவ்வழிமேலோர்
பெருமையாவிப் பதத்தினுத்தாலகன் பிறங்கினோராறுமா
தருநுகர்வகை சித்திபூமியைக்கடிந் தமர்ந்திருந்துணர்வுற்றான்.

இ - ள். ஒருகணம் - ஒருக்ஷணநேரமானாலும், தொட்டிவருடநாளென்னினும் - நெருங்கிய நூறுவருடமானாலும், உயர்ந்தவப்பதமுற்றோர் - மேலான அப்பிரமபதத்தைப் பொருந்தின சத்துக்கள், வருபவந்தரும் - வாராநின்ற சகத்தைத்தொடுப்பதற்கு, ஏதுவாய் - காரணமாயிருக்கின்ற, காண்பனமருவும் - விடயங்களை யடைப்பட்டு, இவ்வழிமேலோர் - இத்திருஷ்டியை விரும்பார்கள், பெருமையான விப்பதத்தில் - மாட்சிமையான இச்சீவன் முத்தியில், உத்தாலகன் - உத்தாலகமுனியானவர், பிறங்கினோராறுமா - ஆறுமாதங்களினால், அருநுகர்வகை - சமீபத்திற்பொருந்தாதபடி, சித்திபூமியைக்கடிந்து - சுவர்க்காதிபதப்பிராப்தியை நீக்கி, அமர்ந்திருந்து (சமாதியிற்) பொருந்தியிருந்து, உணர்வுற்றான் - விழித்துக்கொண்டான் — எ - று

எ - து. ஒருக்ஷணநேரமானாலும், நெருங்கிய நூறுவருடமானாலும், மேலான அப்பிரமபதத்தைப் பொருந்தின சத்துக்கள் வா

ராநின்ற சுகத்தைக் கொடுப்பதற்குக் காரணமாயிருக்கின்ற விடயங்களை யடையப்பட்ட இத்திருஷ்டியை விரும்பார்கள். மாட்சிமையான இச்சீவன் முத்தியில் உத்தாலகமுனியானவர் ஆறுமாதங்களினால் சமீபத்திற் பொருந்தாதபடி சுவர்க்காதிபதப்பிராப்தியை நீக்கி சமாதியிற் பொருந்தியிருந்து விழித்துக்கொண்டான்—எ - ம். (62)

முனிவரானவர் சித்தர்கள் ஸோத்திரக்கு உட்படாமை.

விழித்துநோக்கினன் சித்தரையவர்களு மிக்குயரிவன்றன்னைப், பழிச்சியன்பொடு பகவனீகாண்டியெம் பணிதல்பொன்னுலகத்தி லிழிச்சுமிவ்விமா னத்துவந்தேறுதி யிந்திரபதத்தின்பங், கழிந்தபூமிக ளனைத்தினுமில்லதோர் கற்பமப்பயன்றுய்ப்பாய்.

இ - ள். விழித்து - கண்விழித்து, சித்தரை - சித்தர்கணங்களை, நோக்கினன் - பார்த்தனன், அவர்களும் - அச்சித்தர்களும், மிக்குயரிவன்றன்னை - மேலான இவ்வுத்தாலகமுனியை, அன்பொடும்பழிச்சி - அன்புடன் தோத்திரஞ்செய்து, பகவ-பகவானே, எம்பணிதல் - எமது வணக்கத்தை, நீகாண்டி - நீர்பாரும், பொன்னுலகத்தில்-தெய்வலோகத்தில், இழிச்சும் - கொண்டுபோய்விடும், இவ்விமானத்து - இத்தெய்வவிமானத்தில், உவந்தேறுதி- சந்தோஷித்தேறுவாய், இந்திரபதத்தின்பம் - தேவேந்திர பதத்தின் சுகமானது, கழிந்த பூமிகளனைத்தினும் - (அது) நீங்கிய வுலகங்களிலெல்லாம், இல்லது - இல்லாதது, ஓர்கற்பம்-ஒருகற்ப பரியந்தம், அப்பயன்றுய்ப்பாய் அந்த பிரயோசனத்தை யனுபவிப்பாய்—எ - று.

எ - று. கண்விழித்து சித்தர் கணங்களைப் பார்த்தனன். அச்சித்தர்களும் மேலான இவ்வுத்தாலகமுனியை அன்புடன்றோத்திரஞ்செய்து பகவானே! எமது வணக்கத்தை நீர்பாரும், தெய்வலோகத்தில் கொண்டுபோய்விடும், இத்தெய்வவிமானத்தில் சந்தோஷித்தேறுவாய், தேவேந்திரபதத்தின் சுகமானது அது நீங்கிய உலகங்களிலெல்லாம் இல்லாதது ஒரு கற்ப பரியந்தம் அந்த பிரயோசனத்தை யனுப்பவிப்பாய்—எ - ம். (63)

பகவசெய்தன தவமெலா மிந்திரபதமுறற் பொருட்டேயென், றகமலர்ந்துரை பன்னியசித்திரை யதிதியரெனநோக்கி, முகமலர்ந்துபூ சித்தனன்மயங்கலன் முந்துறுபெருஞ்செல்வ, மிகவிரும்பலன் வெறுக்கலன்றிண்ணியோன் விபுதரேகுதிசென்றான்.

இ - ள். பகவ - பகவானே, செய்தன தவமெல்லாம் - செய்த தவங்களியாவும், இந்திரபதமுறற் பொருட்டேயென்று - சுவர்க்கத்தை யடையுநிமித்தமேயென்று, அகமலர்ந்து - மனமலர்ச்சியாய், உரைபண்ணிய சித்தரை - சொல்லிய சித்தர்களை, அதிதியரெனநோக்கி - மகான்களென்று பார்த்து, முகமலர்ந்தாபூசித்தனன் - முகம்விகசித்தாராதனைசெய்தான், மயங்கலன் - மயங்காதவன், முந்துறும்பெருஞ்செல்வம் - முதன்மையான தேவபோகத்தை, மிகவிரும்பலன் - மிகவும்விரும்பாதவன், வெறுக்காதவன், திண்ணியோன் - திடமுள்ளவன், விபுதரேகுதிரென்றான் - தேவர்களே போங்களென்று சொன்னான்—எ - று.

எ - து. பகவானே, செய்த தவங்களியாவும் சுவர்க்கத்தையடையுநிமித்தமேயென்று மனமலர்ச்சியாய் சொல்லிய சித்தர்களை மகான்களென்று பார்த்து முகம் விகசித்தாராதனை செய்தான். மயங்காதவன், முதன்மையான தேவபோகத்தை மிகவும் விரும்பாதவன், வெறுக்காதவன், திடமுள்ளவன், தேவர்களே [illegible]பாங்களென்று சொன்னான்—எ - ம்.

(இ-௬-௪ ம்.) அமரர்போகம் விடமாமெனக்கண்டு ஆத்மசுகத்தில் அமர்ந்திருந்ததாம். (64)

## சாதுக்களோடுஞ் சஞ்சரித்தல்.

மொய்த்தகூட்டத்தை விடுத்தனன்றன்செயல் முயன்றிருந்தனன்போக, பெத்தநீங்கிய விவனையச்சித்தரும் பின்புசென்றேபேணி, சித்தம்விட்டனர் தாங்களேயகன்றனர் சீவன்முத்தனுங்கானின், மெய்த்தமாதவ ரிடங்களிற்சுகத்திலே வேண்டளவுலாவுற்றான்.

இ - ள். மொய்த்தகூட்டத்தை - மிகுந்த (தேவர்) குழாத்தை, விடுத்தனன் - விட்டவனாய், தன்செயல் - தனதுகிரிகையில், முயன்றிருந்தனன் - முயற்சித்திருந்தவனாய், போகபெத்தநீங்கிய - போகபந்த நீங்கி யிருக்கின்ற, இவனை - இவ்வுத்தாலகனை, அச்சித்தரும் - அந்தச்சித்தர்களும், புன்பு சென்றேபேணி - பின்சிறிதுகாலமனுசரித்து, சித்தம்விட்டனர் - (வருவானென்கிற) மனதை விடுத்தார்கள், தாங்களேயகன்றனர் - தாங்களே நீங்கினார்கள், சீவன்முத்தனும் - சீவன்முத்தனாகிய உத்தாலகமுனியும், கானில் - காட்டிலும், மெய்த்த - உண்மையான, மாதவர்களிடத்தில் - மாதவர்களிடத்திலுமிருந்து, சுகத்தில் வேண்டளவுலாவுற்றான் - (திருவான) சுகத்தில் வேண்டிய மட்டுஞ் சஞ்சரித்தான்—எ - று.

எ - து. மிகுந்த தேவர்குழாத்தை விட்டவனாய் தனது கிரியையில் முயற்சித்திருந்தவனாய் போகபந்த நீங்கியிருக்கின்ற இவ்வுத்தா

இ - ள். பார்க்கவுள்ளத்தின் - விரிந்தமனத்தினது, ஒருமையின்செறிவினை - (அந்த) ஐக்கியமான கலத்தலை, பழகலால் - பழகுதலினால், பெருஞ்சித்து நிரம்பித்து - பூரணஞான சித்தராகப் பெற்று, புவிநிறைவுறும் - உலகத்தில் நிறைந்திருக்கின்ற, ஒளியிலென்ன - சூரிய கிரணத்தைப்போல, எங்குஞ் சமமதாயினன் - எவ்விடத்திலுஞ் சமமாயிருந்தான், இரக்கருஞ்சித்தின் - இரக்கத்தைக் கொடுக்கின்ற சிற்சாமானியத்தின், ஒருமையை - ஐக்கியத்தை, நெடும்பகல் - அநேககாலம், செறிபரிசயஞ்செய்ய - மிகுந்த பழக்கஞ்செய்ய, அரந்தைதீர்ந்த - துன்பநீங்கிய, அகத்தால் - அதினால், சற்பாவசாமானிய அடைந்தனன் - சத்தாசாமானியத்தை அடைந்தான் — எ - று.

எ - று. விரிந்த மனத்தினது ஐக்கியமான கலத்தலைப் பழகுதலினால் பூரணஞான சித்தராகப்பெற்று உலகத்தில் நிறைந்திருக்கின்ற சூரியகிரணத்தைப்போல எவ்விடத்திலுஞ் சமமாயிருந்தான். இறக்கத்தைக் கொடுக்கின்ற சிற்சாமானியத்தின் ஐக்கியத்தை அநேககாலம் மிகுந்த பழக்கஞ்செய்ய துன்பநீங்கிய அதினால் சத்தாசாமானியத்தை யடைந்தான் — எ - ம். (67)

## சமாதிசித்தாய் விளங்குதல்.

தெரிவதாமிவற் றுதயமத்தமுறுநன் சித்திரமதிபோலப்
பெரியதாய்ச்சமவின்பமாம்பதவியின் பேற்றினுலுபசாந்தி
புரியநெஞ்சினன் பிறவியுமையமும் போய்ச்சாற்ககனம்போல
விரியுநின்மல சாந்தமெய்யொளிநிறை வேதனைவடிவானான்.

இ - ள். சித்திரமதிபோல - சித்திராதித்தனைப்போல, தெரிவதாமிவற் றுதயமத்தமுறுநன் - (விருத்தசகங்)களில், உதயமத்தமுறாதவன் - தோன்றி மறையாத உத்தாலகன், பெரியதாய்ச் சமவின்பமாம் - மகத்தாயிருக்கின்ற பூரணாநந்தமான, பதவியின் பேற்றினால் - ஜீவன் முத்திபதத்தினது பிரயோசனத்தினால் உபசாந்திபுரிய நெஞ்சினன் - உபசாந்தத்தையடைந்த மனத்தையுடையவனாய், பிறவியும் - சகநமும், ஐயமும்போய் - சந்தேகமுநீங்கி, சாற்ககனம்போல - சாற்காலத்தாகாயம்போல, விரியுநின்மல சாந்தம் - வியாபகமாயிருக்கின்ற மாசற்ற உபசாந்தமான, மெய்யொளிநிறை - உண்மையான ஸ்வயம் பிரகாசநிறைந்த, வேதனைவடிவானான் - ஞானஸ்வரூபமானான் — எ - று.

எ - து. சித்திராதித்தனைப்போலக் காண்கின்ற விருத்தசகங்களில் தோன்றி மறையாத உத்தாலகன் மகத்தாயிருக்கின்ற பூரணாநந்தமான ஜீவன் முத்திபதத்தினது பிரயோசனத்தினால் உபசாந்தத்தையடைந்த மனத்தையுடையவனாய்ப் சகநமும் சந்தேகமுநீங்கி சாற்

சத்தாசாமானியம் - சத்தாசாமானியமாகும், தோற்றும்புறன் - தோற்றுநின்ற புறப்பொருளும், உள்ளாய் - உட்பொருளுமாகி, பலவாய் - நாநாவிதப் பொருளுமாகியும், துவக்குமாகும் - உடல்களுமாகியுமிருக்கின்ற, இவையனைத்து மாற்றி - இச்சகலமுங்கெடுத்து, அகன்று - நீங்கி, மனநிற்கில் - மனது (சித்தாய்) நிற்குமானால், அது - அச்சிற்சாமானியமே, சத்தாசாமானியம் - சத்தாசாமானியமாகும்—எ - று.

எ - து. சொல்லுகின்ற சசவிஷாணத்தைப்போல நிச்சயமாக திரிஸ்யம்விடுபட்டு ஆத்மசைதன்னியத்தில் விருத்தி ஞானம் லயமானால் சொச்சமாகிய அச்சிற்சாமானியமே சத்தாசாமானியமாகும். தோற்றுநின்ற புறப்பொருளும் உட்பொருளுமாகி நாநாவிதப் பொருளுமாகியும் உடல்களுமாகியும் இருக்கின்ற இச்சகலமுங் கெடுத்து நீங்கி மனது சித்தாய் நிற்குமானால் அச்சிற்சாமானியமே சத்தாசாமானியமாகும்—எ - ம். (70)

இதுவுமது.

உன்னுமெதிர் காண்பனவொன் றுமொழியா தியாமையுறுப்பென்ன
தன்னுற்றன்பா லிறக்குமெனிற் சத்தாசாமா னியமதுவே
முன்னுமுடல்சேர் முத்தருடலிலதாமுத்த ரிருவர்க்கு
மென்னுளினுஞ்சேர் பெருங்கண்ணீதிதன்பேர் துரியாதீதபதம்.

இ - ள். எதிர்காண்பன - நேரேகாணப்பட்ட விடயங்கள், உன்னு - நினைக்கப்படாமலும், ஒன்றுமொழியாது - ஒன்றுந்தவிராமலும், ஆமையுறுப்பென்ன - கூர்மத்தின் அவயவத்தைப்போல, தன்னுல் - தாமே, தன்பாலிறக்குமெனில் - ஆத்மாவில் இறக்குமேயானால், அதுவே - அவ்வாத்மாவே சத்தாசாமானியம் - சத்தாசாமானியமாகும், முன்னும் - முதன்மையான, உடல்சேர்முத்தர் - சீவன்முக்தர்களும், உடலிலதாமுத்தர் - விதேகமுத்தர்களுமான இருவர்க்கும் - இவ்விரண்டுபேர்களுக்கும், என்னுளினும் - எப்போதும், சேர்பெருங்கண் - சேர்ந்திருக்கின்ற பரமதிருஷ்டி, ஈது - இச்சத்தாசாமானியமாம், இதன்பேர் - இதனுமம், துரியாதீதபதம் - துரியாதீத பதமாகும்—எ - று.

எ - து. நேரேகாணப்பட்ட விடயங்கள் நினைக்கப்படாமலும், ஒன்றுந்தவிராமலும், கூர்மத்தின் அவயவத்தைப்போல தாமே ஆத்மாவிலிறக்குமேயானால் அவ்வாத்மாவே சத்தாசாமானியமாகும். முதன்மையான சீவன்முத்தர்களும், விதேகமுத்தர்களுமான இவ்விரண்டுபேர்களுக்கும் எப்போதும் சேர்ந்திருக்கின்ற பரமதிருஷ்டி இச்சத்தாசாமானியமாம். இதனுமம் துரியாதீதபதமாகும்—எ - ம்.

(இ-௬-௧-ம்) சயஞ்சித்தின் மனங்கலைதலும் சிதறுக்கரைதலும் வேறு திருஷ்டி நீங்குதலும் யாவுஞ்சின்மயமாய் விளங்குதலுமாகிய சிற்சாமானியஞ் சத்தாசாமானியமாய்க் கரைந்த சத்தாசாமானியமே துரியாதீதமென்பதாம். (71)

## ஞானதிருஷ்டியில் அருமையை உரைத்தல்.

அறிந்துசமாதி யடைந்தோர்க்கு மனுபூதியினின்றெழுந்தோர்க்குஞ், செறிந்துதோன்றுமூடர்க்குத் தெரியாதாமிப்பெருங்கண்ணுங் முறிந்துபிறவி யறுஞ்சீவன் முத்தரான சித்தரெலாம், பிறிந்திடார் விண் பயில்காற்று பெருதாமண்ணி லிரதமும்போல்.

இ - ள்- அறிந்துசமாதியடைந்தோர்க்கும் - (ஆராய்ந்) தறிந்துசமாதியைப்பெற்ற அவர்களுக்கும், அனுபூதியினின் றெழுந்தோர்க்கும் - அனுபூதியிலிருந்து அதுவாய் வெளிப்பட்டவர்களுக்கும், செறிந்துதோன்றும் - நிறைந்து தோற்றுவதாகியும், மூடர்க்கு - மூடர்களுக்கு, தெரியாதாமிப்பெருங்கண்ணு - தெரியாததாகியு மிருக்கின்ற இப்பரம திருட்டியானது, முறிந்து - முறிவுபட்டு, பிறவியறும் - சநநங்கெடாநின்ற, சீவன்முத்தரான - சீவன்முத்தர்களாகிய, சித்தரெலாம் - ஞானவான்களனைவரும் - விண்பயில்காற்று - அந்தரத்தில் வீசுகின்றவாயுவும், பெரிதாமண்ணில் - பெரிதாகிய பூமியில், இரதமும்போல் - (அறு) சுவையும்போல, பிரிந்திடார் - பிரியமாட்டார்கள்—எ - று.

எ - து. ஆராய்ந்தறிந்து சமாதியைப்பெற்றவர்களுக்கும். அனுபூதியிலிருந்து அதுவாய் வெளிப்பட்டவர்களுக்கும். நிறைந்து தோற்றுவதாகியும் மூடர்களுக்குத் தெரியாததாகியும் இருக்கின்ற இப்பரம திருஷ்டியானது முறிவுபட்டு சநநங்கெடாநின்ற சீவன் முத்தர்களாகிய ஞானவான்களனைவரும் அந்தரத்தில் வீசுகின்ற வாயுவும் பெரிதாகிய பூமியில் அறுசுவையும் போல பிரியமாட்டார்கள்—எ - ம்.

(இ-ம்) விசாரமுகத்தால் அறிந்த அறிவு சமாதியினால் ஆனந்தமானவருக்கு மவ்வானந்தஞ் சகசத்தில் ஆநந்தநிறைவாய் விளங்கிநிற்கும். இவ்வனுபவம் விசாருமேயன்றி மற்றவர்களுக்கு விளங்கமாட்டாது. (73)

மும்மூர்த்திமுதல்வோருக்குள்ள விச் சுகானுபவத்தில்
உத்தாலகமுனி யிருந்தநிலை.

மூவர்முதல்வா னவரென்னை முதனூ தனை முதன்முனிவர்
மேவலுற்ற திப்பெருங்கண் வேற்றுப்பதமெல் லாநசிப்பித்
தோவலில்லா விப்பதத்தி லுத்தாலகனுற் திருந்தனனு
லாவதீர்வ தெல்வளவவ் வளவுஞ்சகமா மகத்திடையே.

இ - ள். மூவர்முதல் வானவர் - மும்மூர்த்தி முதலான தேவர்களும், என்னைமுதல் - என்னைமுதலாகவும், நாதனைமுதல் - நாதனைமுதலாகவு

முள்ள, முனிவர் - இருஷிகளும், மேவலுற்றது - அடைந்தது, இம்பெருங்கண் - இப்பரமதிருஷ்டியேயாம், வேற்றுப்பதமெல்லாநசிப்பித்து - பேதமுள்ள - பதங்களனைத்தையுங் கெடுத்து, ஓவலில்லாத விப்பதத்தில் - ஒழிவில்லாத இச்சத்தாசாமானியத்தில், ஆவல்தீர்வதெல்லையும் - ஆசைதீர்வதெந்தமட்டுமோ, அவ்வளவும் - அந்தமட்டும், சகமாமகத்திடையுத்தாலகனுற்றிருந்தனன் - சகமானவீட்டில் உத்தாலகன் வசித்திருந்தான்—எ - று.

எ — து. மும்மூர்த்தி முதலான தேவர்களும், என்னைமுதலாகவும் நாரதரை முதலாகவுமுள்ள இருஷிகளும் அடைந்தது இப்பரமதிருஷ்டியேயாம். பேதமுள்ள பதங்களனைத்தையுங் கெடுத்து ஒழிவில்லாத இச்சத்தா சாமானியத்தில் ஆசைதீர்வதெந்தமட்டுமோ அந்தமட்டும் சகமானவீட்டி லுத்தாலகன் வசித்திருந்தான்—எ-ம். (73)

உத்தாலகமுனி குகையடைந்தபின்பு யோகத்திற் சாதித்துப்பெற்றதும்
அஃதற்பமென்றகற்றி விதேகமுத்தியை யடைதற்கான
சமாதி செய்யத் தொடங்கல்.

காலமநேகஞ் சென்றதற்பின் கந்தமாதனக்கிரியிற்
கோலமுழைபுகு மம்முனிவன் குரம்பைவிட்டுக் குரம்பையிலாச்
சீலமுத்தனா யிருப்பேன் றீர்வென்றென்றே சிந்தித்துச்
சாலநல்ல தளிர்த்தவிசிற் றளைத்தபதுமா சனத்திருந்தான்.

இ - ள். காலமநேகஞ்சென்றதற்பின் - அநேககாலங் கழிந்தபின்பு, கந்தமாதனக்கிரியில் - கந்தமாதன பருவதத்திலுள்ள, கோலமுழையில் - அழகிய குகையில், அம்முனிவன் - அந்த வுத்தாலகமுனியானவர், குரம்பைவிட்டு - சரீரத்தைவிட்டு, குரம்பையிலாச்சீலமுத்தனாய் - விதேகமுத்தித் தன்மையனாய், இருப்பேன் - இருக்கக்கடவேன், தீர்வென்றென்றே சிந்தித்து - இது தீர்ப்பென்று சிந்தனைசெய்து, சாலநல்ல தளிர்த்தவிசில் - மிகவும் நன்மையுள்ள பல்லவாசனத்தில், தளைத்த - கட்டிய, பதுமாசனத்திருந்தான் - பத்மாசனத்திலிருந்தான்—எ - று.

எ — து. அநேககாலங் கழிந்தபின்பு கந்தமாதன பருவதத்திலுள்ள அழகிய குகையில் அந்த உத்தாலகமுனியானவர் சரீரத்தைவிட்டு விதேகமுத்தித் தன்மையனாய் இருக்கக்கடவேன், இது தீர்ப்பென்று சிந்தனைசெய்து மிகவுநன்மையுள்ள பல்லவாசனத்தில் கட்டிய பத்மாசனத்திலிருந்தான்—எ - ம். (74)

## சமாதியின் இலக்கணங் கூறல்.

அரைநோக்காக நோக்கியிருந் தபானவாய் லடைத்ததனுற்புரை
யொன்பதுவா யடைத்துளத்தாற் பொறியும்புலனு மொன்றாக்கி,
திரையில் கடல்போற் றன்சித்தின் செறிவைப் பாவித் தாருயிரின்,
விரைவைநிறுத்தி வணங்காமன் மேனோக்கியகந்தரத்தினனாய்.

இ - ள். அரைநோக்காக - பாதி திருஷ்டியாக, நோக்கியிருந்து - பார்த்திருந்து, அபானவாய லடைத்ததனால் - மூலவாசலை யடைந்ததினால், புரையொன்பதுவாயடைத்து - உட்டுளையாகிய நவத்துவாரமு மடைத்து, உளத்தால் - மனதினால், பொறியும் - இந்திரியங்களையும், புலனும் - விடயங்களையும், ஒன்றாக்கி - பிரத்தியாகாரப்படுத்தி, திரையில் கடல்போல் - அலையில்லாத சமுத்திரத்தைப்போல, தன்சித்தின் செறிவைப்பாவித்து - தனது பூரணஞானத்தைத் தியானித்து, ஆருயிரின் - நிறைந்திருக்கின்ற பிராணவாயுவின், விரைவைநிறுத்தி - வேகத்தைத்தடுத்து, வணங்காமல் - (சரீரம்) வளையாமல், மேனோக்கிய - நெறிப்பாகிய, கந்தரத்தினனாய் - கழுத்தை யுடையவனாய் — எ - று.

எ - து. பாதி திருஷ்டியாகப் பார்த்திருந்து மூலவாசலையடைந்ததினால் உட்டுளையாகிய நவத்துவாரமு மடைத்து மனதினால் இந்திரியங்களையும் விடயங்களையும் பிரத்தியாகாரப்படுத்தி அலையில்லாத சமுத்திரத்தைப்போல தனது பூரணஞானத்தைத் தியானித்துநிறைந்திருக்கின்ற பிராணவாயுவின் வேகத்தைத்தடுத்து சரீரம்வளையாமல் நெறிப்பாகிய கழுத்தையுடையவனாய் — எ - ம். (75)

நாவினடிச்சென் றுறச்செறியுண் ணாவினடியை யுடையோனா
யோவின்முகக்காந் தியனாகி யுள்ளிற்புறனின் மேற்கீழில்
வாவும்விடயத் தினிற்பாழின் மனமுங்கண்ணு முறானாகி
வீவதான வெயிற்றினிரை யெயிற்றினிரையை மேவானாய்.

இ - ள். நாவினடிச்சென்று - நாக்கினடியிற்சென்று, உறச்செறி - மிகவு நெருங்கிய, உண்ணாவினடியையுடையோனாய் - உண்ணாக்கினடியை யுடையவனாய், ஓவில் - நீங்காத, முகக்காந்தியனாகி - முகவிளக்கத்தை யுடையவனாய், உள்ளில் - உள்ளிலும், புறனில் - புறம்பிலும், மேல் - மேலிலும், கீழில் - கீழிலும், வாவும் விடயத்தினில் - பாய்கின்ற விடயங்களிலும், பாழில் - ஆனியாகாயத்திலும், மனமுங்கண்ணும் - மனதும் கண்ணும், உறானாகி - பொருந்தாதவனாய், வீவதானவெயிற்றினிரை - கெடுவதாகிய தந்தபந்திகள், எயிற்றினிரையை - தந்தபந்திகளை, மேவானாய் - பொருந்தப்பெறாதவனாய் — எ - று.

ஏ - து. நாக்கினடியிற்சென்று மிகவு நெருங்கிய உண்ணாக் கினடியை யுடையவனாய் நீங்காத முகவிளக்கத்தை யுடையவனாய் உள்ளிலும், புறம்பிலும், மேலிலும், கீழிலும், பாயாநின்ற விடயங்களிலும், சூனியாகாயத்திலும், மனதுங் கண்ணும்பொருந்தா தவனாய்கெடுவதாகிய தந்தபந்திகள் தந்தபந்திகளைப் பொருந்தப் பெறுதவனாய்—எ - ம். (76)

## கைவல்லிய சுகமாதல்.

அங்கத்துயிரின் மிகுதிதகைந்ததனாலேய்தா யவிர்முகத்தோ
னங்கத்துருவுள் ளுணர்வுருவே யாகியெழலாற் புளகிற்போ
னங்கத்துருவுள் ளுணர்வுருவே யாகிப்பழகி யறிவொன்றா
யங்கப்பொழுதப் பழக்கத்தாலகத்துநந் தமயாநந்த மடைந்தான்.

இ-ள். அங்கத்துயிரின் - சரீரத்திலுள்ள பிராணவாயுவின், மிகுதி தகைந்து - மிகுதி யாகச்செல்லுகின்ற வேகத்தைத் தடுத்து, அதனாலேதுய் தாய் - அதனாற் சொச்சமாயும், அவிர் முகத்தோன் - பிரகாசிக்கின்ற முகத்தை யுடையவனாய், அங்கத்துருவு - சரீரத்தினுருவமானது, உள்ளுணர் வுருவேயாகி - உள்ளஞான ஸ்வரூபமாயும், எழலால் - உண்டாகுதலால், புளகிற்போன் - புளகாங்கிதமானவன், அங்கத்துருவு - சரீரஸ்வரூபம், உள்ளுணர்வுருவேயாகி - உள்ளஞான ஸ்வரூபமாகி, பழகி - பழக்கமுற்று, அறிவொன்றாய் - சிற்சாமானியமாகி, அங்கு - அவ்விடத்தில், அப்பொழுது - அப்போது, அப்பழக்கத்தால் - அச்சிற்சாமானிய அப்பியாசத்தினால், அகத்துநந்தமயாநந்தமடைந்தான் - மனதிற் பரமானந்தத்தை யடைந்தான்—எ - று.

எ - து. சரீரத்திலுள்ள பிராணவாயுவின் மிகுதியாகச்செல்லு கின்ற வேகத்தைத்தடுத்து அதனாற்சொச்சமாயும் பிரகாசிக்கின்ற முகத்தை யுடையவனாய் சரீரத்தி னுருவமானது உள்ளஞான ஸ்வ ரூபமாயும் உண்டாகுதலால் புளகாங்கிதமானவன் சரீரஸ்வரூபம் உள்ள ஞானஸ்வரூபமாகி பழக்கமுற்று சிற்சாமானியமாகி அவ்விடத்தில் அப்போது அச்சிற்சாமானிய அப்பியாசத்தினால் மனதிற் பர மாநந்தத்தை யடைந்தான்—எ - ம். (77)

## அநுபவமரபை யறிவித்தல்.



ஆனந்தத்தின் பெருக்கைநுகர்ந் ததனாற்சிற்சாமானியம்போய்த்
தானந்தமற வெலாம்பரிக்குஞ் சத்தாசாமா னியமடைந்தான்
றீனந்தவிர்சம னாயிருந்தான் சிந்தாகுலமெல் லாந்தீர்ந்தான்
மானந்தருமா நந்தவிலா மகாநந்தத்தான் முகமலர்ந்தான்.

இ - ள். ஆநந்தத்தின்பெருக்கை - பரமாநந்தவெள்ளத்தைப், நுகர்ந்ததனால் - புசித்ததனால் சிற்சாமானியம்போய் - சிற்சாமானிய நீங்கி, தானந்தமற - தானே முடிவில்லாமல், எல்லாம்பரிக்கும் - சகலத்தையுந்தரிக்கின்ற, சத்தாசாமானியமடைந்தான் - சத்தாசாமானிய (பதத்தை) யடைந்தான், தீனந்தவிர் - குறைவின்றிய, சமனாயிருந்தான் - சாந்தியுள்ளவனாயிருந்தான், சிந்தாகுலமெல்லாந்தீர்ந்தான் - சித்தத்திலுள்ள வருத்தங்களனைத்தையும் விட்டான், மானருந்தரும் - அளவைக்கொடுக்கின்ற, ஆநந்தமிலா - ஆநந்தமில்லாத, மகாநந்தத்தால் - பேரானந்தத்தினால், முகமலர்ந்தான் - முகவிகசிதமானான் — எ - று.

எ - து. பரமானந்த வெள்ளத்தைப் புசித்ததனால் சிற்சாமானிய நீங்கி தானே முடிவில்லாமல் சகலத்தையும் தரிக்கின்ற சத்தாசாமானிய பதத்தை யடைந்தான். குறைவின்றிய சாந்தியுள்ளவனாயிருந்தான். சித்தத்திலுள்ள வருத்தங்களனைத்தையும் விட்டான். அளவைக்கொடுக்கின்ற ஆநந்தமில்லாத பேரானந்தத்தினால் முகவிகசிதமானான் — எ - ம். (78)

## விதேகமுத்தனாதல்.

அனகபதமுற் றுடல்புளக மாறிநெடுநா ளிற்கரைந்து [போற்
மனமும்பிறப்பின் மயக்கமும்போய் மகாசத்துவமா யோவியம்
கனமில்ககனத் துவாமதிபோற் கதியிற்சின்னா ளினிற்சுவறி
யினனதொளியான் மரப்பசைக ளிறப்புபோலா யிறப்புற்றான்,

இ - ள். அனகபதமுற்று - மாசில்லாத பதத்தையடைந்து, உடல் புளகமாறி - சரீரபுளகாங்கிதத்தை விட்டு, நெடுநாளில் - வெகுதினத்தில், மனமுங்கரைந்து - மனதுங்கரைந்து, பிறப்பின் மயக்கமும்போய் - ஜநநப்பிரமையுநீங்கி, மகாசத்துவமாய் - மகாசத்துவமுள்ளவனாய், ஓவியம்போல் - சித்திரத்தைப் போலவும், கனமில்ககனத்து - மேகமில்லாத ஆகாயத்தில், உவாமதிபோல் - பூரணச்சந்திரனைப்போலவும், கதியில் - ஸ்வரூபபதத்தில், சின்னாளினிற்சுவறி - சிலநாளிற்சேர்ந்து, இனனதொளியால் - சூரியப் பிரகாசத்தினால், மரப்பசைகள் - மரத்தின்பசுமைகளானவை, இறப்புதபோலாய் - சோஷிக்கப்பட்டதுபோல, இறப்புற்றான் உத்தாலகமுனி - (பிரமப் பிரகாசத்தில்) லயிக்கியமானான் — எ - று.

எ - து. மாசில்லாத பதத்தையடைந்து சரீரபுளகாங்கிதத்தைவிட்டு வெகுதினத்தில் மனதுங்கரைந்து ஜநநப்பிரமையுநீங்கி மகாசத்துவமுள்ளவனும் சித்திரத்தைப்போலவும், மேகமில்லாத ஆகாசத்தில் பூரணச்சந்திரனைப்போலவும். ஸ்வரூபபதத்தில் சில நாளிற்சேர்ந்து சூரியப் பிரகாசத்தினால் மரத்தின் பசுமைகளா

னவை, கோஷிக்கப்பட்டதுபோல உத்தாலகமுனி பிரமப்பிரகாசத்தில் ஐக்கியமானான் — எ — ம்.

(இ-ள-க-ம்) சீவன்முத்தி தன்மையினின்று நீங்கித் தானே விதேகமுத்தியை யடைந்தானென்பதாம். (79)

உத்தாலகன் கதை முற்றிற்று

ஆக கதை 24-க்கு கவிதை-191.

# சுக கதை.

(அவதாரிகை.)

முன் கதையில் சமாதிநிஷ்டையுண்டான ஆநந்தத்தினின் மனோரூபமான சுக விஸ்ராந்தி யடைந்ததாகச் சொல்லி இவ்வனுபவம் ஆத்மவிசாரணையினு மெய்க்கும் அவ்விஸ்ராந்தியே சீவன்முத்தி சாதியமென்பதை அறிவிக்கு நிமித்தம் சுக கதையைச் சொல்லுகிறார்.

சற்குரு அனுபவத்தினால் விசாரிக்கவேண்டுமெனல்.

இந்தமொழுங் காலுணர்வை யுணர்வி னுணர்ந்துலகிலியங்கா நின்றே, யந்தமறும் பெரும்பதத்தே யாகுதியாக் காண்கின்றவனைத் துமானச், சந்ததஞ்சாதித்ததனைப் பெறுமளவு நூல்குரவன் றனிநெஞ்சாலே, பந்தமறு தத்துவத்தை விசாரித்தே பெறவேண்டும் பதுமக் கண்ணாய்.

இ-ள். இந்தமொழுங்கால் - இம்மார்க்கத்தினால், உணர்வை - அறிவை, உணர்வினுலுணர்ந்து - அறிவினாலறிந்து, உலகிலியங்காநின்று - சகத்திற் சஞ்சரித்து, அந்தமறும்பெரும்பதத்து - முடிவில்லாத பரிபூரணபதத்தில், ஆகுதி - விஸ்ராந்தி யடையக்கடவாய், காண்கின்றவனைத்துமான - பார்க்கப்பட்ட விடயங்களெல்லாவு நசிக்கும்படி, சந்ததஞ்சாதித்து - சதாகாலமுஞ்சாதனைசெய்து, அதனைப்பெறுமளவும் - அப்பதத்தையடைகின்ற பரியந்தம், நூல் - ஞானசாஸ்திரத்தினாலும், குரவன் - சற்குருவினாலும், தனிநெஞ்சால் - தனிமையான மனதினாலும், பந்தமறு தத்துவத்தை - பந்தமில்லாத தத்துவஞானத்தை, பதுமக்கண்ணாய் - தாமரைக்கண்ணையுடைய ஸ்ரீராமா, விசாரித்தே பெறவேண்டும் - விசாரணைசெய்தே யடையவேண்டும் — எ-று.

எ - து. இம்மார்க்கத்தினால் அறிவை அறிவினாலறிந்து சகத்திற் சஞ்சரித்து முடிவில்லாத பரிபூரணப்பதத்தில் விஸ்ராந்தியடையக்கடவாய், பார்க்கப்பட்ட விடயங்களியாவும் நசிக்கும்படி சதா காலமுஞ் சாதனைசெய்து அப்பதத்தை யடைகின்ற பரியந்தம் ஞானசாஸ்திரத்தினாலும், சற்குருவினாலும், தனிமையான மனதினாலும், பந்தமில்லாத தத்துவஞானத்தை தாமரைக்கண்ணையுடைய ஸ்ரீராமா! விசாரணைசெய்தே யடையவேண்டும்—எ - ம். (1)

மயலின்மை சாதனைநூற் பொருட்போதங் குருயமமாம் வழிகளாலே யுயர்பதவி பெறலாகு மன்றியுணர் வொன்றினாலுறுதற்காமா, லியலுபதேசம்பெற்றுக் கூரியதாய்க் களங்கமிலா திருக்குமாகில், லியலுறுசாதனமுழுது மிலதேனும் புந்தியினால் வீடுகூடும்.

இ - ள். மயலின்மை - வயிராக்கியத்தினாலும், சாதனை - திரிஸ்ய நீங்கும்படியான சாதனைத்தினாலும், நூற்பொருள் - ஞான சாத்திரார்த்தங்களினாலும், போதம் - அறிவினாலும், குரு - ஆசாரியருபதேசத்தினாலும், யமம் - இயம நியமங்களாலும், ஆம் வழிகளால் - ஆகாநின்ற இம்மார்க்கங்களினால், உயர்பதவிபெறலாகும் - மேலானஸ்வருபபதமடையப்படும், அன்றி - அல்லாமலும், உணர்வொன்றினால் - அறிவொன்றினால், உறுதற்காமால் - பொருந்துதற்காகும், இயலுபதேசம்பெற்று - சுபாவமான (சற்குரு) உபதேசத்தைப் பெற்று, கூரியதாய - அதிக நுட்பமாய், களங்கமிலாதிருக்குமாகில் - நிருமலமாயிருக்குமானால், லியலுறுசாதனம் - பெருமை பொருந்தியசாதனம், முழுதுமிலதேனும் - முற்றுமில்லாததாயிருந்தாலும், புந்தியினால் - அவ்வறிவினால், வீடுகூடும் - மோக்ஷமடையலாம்—எ - று.

எ - து. வயிராக்கியத்தினாலும், திரிஸ்யநீங்கும்படியான சாதனைத்தினாலும், ஞானசாத்திரார்த்தங்களினாலும், அறிவினாலும் ஆசாரியருபதேசத்தினாலும், இயம நியமங்களாலும், ஆகாநின்ற இம்மார்க்கங்களினால் மேலானஸ்வருபபதமடையப்படும் அல்லாமலும் அறிவொன்றில் பொருந்துதற்காகும், சுபாவமான சற்குரு உபதேசத்தைப்பெற்று அதிக நுட்பமாய் நிருமலமாயிருக்குமானால் பெருமை பொருந்திய சாதனம் முற்றுமில்லாததாயிருந்தாலும் அவ்வறிவினால் மோக்ஷமடையலாம்—எ - ம்.

(இ-உ-க-ம்) பக்குவன் சமாதி முதலியவற்றை வேண்டானாயினும் ஆசாரியருபதேச விசாரஞ்செய்யும் அறிவொன்றையாவது விரும்பவேண்டுமென்பதாம். (2)

ஞானவான்களது தாரதம்மியத்தை விளம்புதல்.

என்றனை முகநோக்கி யிகத்தொழிலோ டிருந்தேயுஞ்சமாதி யெய்தி, யொன்றனை யுணர்வற்றான் போலிடர்தீர்ந்தானொருவனொருவன்செய்கை, யின்றாய்த் தனியிடத்திற் சமாதியடைந் தானிவரின் மிக்கோனேவன், னன்றாக வருளுகென விராகவன் கேட்டலும் வசிட்ட னவில்வதானான்.

இ-ள். என்றனை - (இப்படி) யென்று சொன்ன வசிட்ட முனியை, முகநோக்கி - வதனத்தைப்பார்த்து, இகத்தொழிலோடிருந்தேயும் - இகத்திலுள்ள வியகாரத்திலிருந்தும், சமாதி யெய்தி - சமாதியடைந்து, ஒன்றனையுணர்வற்றான்போல் - ஏகமாகிய ஞானமடைந்தவனைப்போல, ஒருவனிடர்தீர்ந்தான் - ஒருவன் துன்பத்தை நீங்கினான், ஒருவன் - மற்றொருவன், செய்கையின்றாய் - தொழிலில்லாதவனாய், தனியிடத்தில் - ஏகாந்தஸ்தானத்தில், சமாதியடைந்தான் - சமாதியை யடைந்தான், இவரில் - இவ்விருவர்களில், மிக்கோனேவன் - மேலானவன் யாவன், நன்றாகவருளுகென - செவ்வையாகச் சொல்லுவாயென, இராகவன்கேட்டலும் - ஸ்ரீராமர் கேட்டமாத்திரத்தில், வசிட்ட னவில்தானான் - வசிட்டர் சொல்லத் தொடங்கினார்—எ - று.

எ - து. இப்படியென்றுசொன்ன வசிட்டமுனியை வதனத்தைப்பார்த்து இகத்திலுள்ள வியகாரத்திலிருந்தும் சமாதியடைந்து ஏகமாகிய ஞான மடைந்தவனைப்போல ஒருவன் துன்பத்தை நீங்கினான். மற்றொருவன் தொழிலில்லாதவனாய் ஏகாந்த ஸ்தானத்தில் சமாதியை யடைந்தான், இவ்விருவர்களில் மேலானவன் யாவன் செவ்வையாகச் சொல்லுவாயென ஸ்ரீராமர் கேட்டமாத்திரத்தில் வசிட்டர் சொல்லத்தொடங்கினார்—எ - ம்.

(இ - ம்.) வியகாரத்திலும் ஏகாந்தத்திலுஞ் சமாதியினால் ஞானமடைந்தவர்களின் இயல்பை மேலாவதென்பதாம். (3)

சமாதியின் இலக்கணம் அறிவித்தல்.

ஆற்றுமதத் துவமன்றன் றேக்குணத்தால் வருஞ்சகமென்ற றிந்தோர்க் குள்ளே, தோற்றுகின்ற நிகளமே தகுதன்னையே சமாதியெனச் சொல்லுமன்றே, யூற்றமறக் காண்பவற்றோ றுறவுநமக் கிலதென்றே யுரத்துத்தண்ணனன், றேற்றசமாதியிலிருப்ப னொருவனொருவன்றொழிலோ டிருப்பனன்றே.

இ - ள். முக்குணத்தால் - மூன்றுகுணத்தினால், வருஞ்சகம் - உண்டானவுலகம், ஆற்றுமதத்துவமன்று - அநாத்மாவென்று, அறிந்தோர்க்கு - உணர்ந்த சத்துக்களுக்கு, உள்ளேதோற்றுகின்ற - உள்ளத்தின்கட்டோற்றுகின்ற, சீதளமேது - குளிர்ச்சியெதுவோ, அதுதனை - அதையே, சமாதியெனச்சொல்லும் - சமாதியென்றுசொல்லப்படும், ஊற்றமற - பற்றில்லாமல், காண்பவற்றோடு - சகத்தோடு, உறவு நமக்கிலதென்று - சம்பந்த நமக்கில்லையென்று, உரத்து - திடமாக, தண்ணென்று - குளிர்ச்சியாக, எற்றசாதியில் - மேலாயிருக்கின்ற ஸ்வரூப சமாதியில், ஒருவனிருப்பவன் - ஒருவனிருப்பான், ஒருவன் றொழிலோடிருப்பன் - ஒருவன் விபகாரத்தோயிருப்பான்—எ - று.

எ - து. மூன்றுகுணத்தினால் உண்டானவுலகம அநாத்மாவென்று, உணர்ந்த சத்துக்களுக்கு உள்ளத்தின்கட்டோற்றுகின்ற குளிர்ச்சியெதுவோ அதையே சமாதியென்றுசொல்லப்படும். பற்றில்லாமல் சகத்தோடு சம்பந்த நமக்கில்லையென்று திடமாக குளிர்ச்சியாக மேலாயிருக்கின்ற ஸ்வரூப சமாதியில் ஒருவனிருப்பான். ஒருவன் விபகாரத்தோடு மிருப்பான்—எ - ம். (4)

இவ்விருவ ரிதயமுந்தண் ணென்றிருக்கில் வேற்றுமையோரிறையுமில்லை, யவ்விதய சீதளமே யநந்த தவப் பயனுமவ்வனுபூதிக்கே, கல்வியிருப் போனுள்ளங் காரியத்தா லலையுமெனிற்கவலைவாரா, செவ்வியவச்ச சமாதான முன்மத்த நடனம்போற் சிறப்புண்டாகும்.

இ - ள். இவ்விருவரிதயமும் - இந்த இரண்டுபேர்களுடையமனதும், தண்ணென்றிருக்கில் - குளிர்ச்சியாகவிருந்தால், வேற்றுமை - வேறுபாடு, ஓரிறையுமில்லை - எவ்வளவுமில்லை, அவ்விதயசீதளமே - அம்மனதின் குளிர்ச்சியே, அநந்த தவப்பயனும் - அளவில்லாத தவப் பிரயோஜனமாம், இவ்வனுபூதிக்கு - இந்தவனுபூதியில், கல்வியிருப்போன் - பற்றியிருக்கின்றவனது, உள்ளம் - மனமானது, காரியத்தாலலையுமெனில் - தொழிலிற் சஞ்சரிக்குமானாலும், கவலைவாரா - துன்பம் வாமாட்டாது, செவ்விய - செம்மையாகிய, அச்சமாதானம் - அயற்குச்சமாதானம், உன்மத்தநடனம்போல் - உன்மத்த நடையைப்போல, சிறப்புண்டாகும் - மேன்மை யுண்டாயிருக்கும்—எ - று.

எ - து. இந்த இரண்டுபேர்களுடைய மனதும் குளிர்ச்சியாகவிருந்தால் வேறுபாடு எவ்வளவுமில்லை. அம்மனதின் குளிர்ச்சியே அளவில்லாத தவப் பிரயோசனமாம். இந்தவனுபூதியில் பற்றியிருக்கின்றவனது மனமானது தொழிலிற் சஞ்சரிக்குமானாலும் துன்பம் வரமாட்டாது. செம்மையாகிய அதற்குச் சமாதானம் உன்மத்த நடையைப்போல மேன்மை யுண்டாயிருக்கும்—எ - ம்

(இ-உ-க-ம்.) மனமானது ஆனந்தத்தினாற் குளிர்தலே சமாதியாதலின் இவர்கட்கு வேற்றுமையின் றென்பதாம். 5)

### வாசனாக்ஷயத்தில் இருவருஞ் சரியெனல்.

வருத்தமிலா வுன்மத்த நடத்தினன்வா தனைமாய்ந்த மனத்தோனாகிற், றிருத்தமுற வவன்கூத்து தெளிவுற்றோன் சமாதிக்குத் தீரநேராம், பெருத்ததொழிற் சேரறிஞர் பெரியவனஞ் சேரறிஞர் பேதநாடி, லொருத்தரொருத் தரைவிஞ்சா ரிருவருமொத் தையமில் வீடுற்றாரன்றே.

இ - ள். வருத்தமிலா - துன்பமில்லாத, உன்மத்தநடத்தினன் - உன்மத்த நடையையுடையவன், வாதனைமாய்ந்த - வாதனையிறந்த, மனத்தோனாகில் - மனதுடையவனானால், திருத்தமுற - திருத்தமாக, அவன்கூத்து - அவனுடையானது, தெளிவுற்றோன் சமாதிக்கு - தெளிந்தவன் சமாதிக்கு, தீரநேராம் - தீர்ப்பாகச் சமானமாம், பெருத்ததொழில்சேரறிஞர் - மிகுந்த வியகாரமுடைய ஞானிகள், பெரியவனஞ்சேரறிஞர் - மகாரணியத்தை யடைந்த ஞானிகள், பேதநாடில் - வேற்றுமையைத் தேடுமிடத்தில், ஒருத்தரொருத்தரை - ஒருவரொருவருக்கு, விஞ்சார் - அதிகமாகார்கள், இருவருமொத்து - இரண்டுபேருஞ் சமானமாய், ஐயமில் வீடுற்றார் - சந்தேகமில்லாத மோக்ஷத்தை யடைந்தனர் — எ - று.

எ - து. துன்பமில்லாத உன்மத்தநடையை யுடையவன் வாதனையிறந்த மனதுடையவனானால் திருத்தமாக அவனுடையானது தெளிந்தவன் சமாதிக்குத் தீர்ப்பாகச் சமானமாம். மிகுந்த வியகாரமுடைய ஞானிகள் மகாரணியத்தையடைந்த ஞானிகள் வேற்றுமையைத் தேடுமிடத்தில் ஒருவரொருவருக்கு அதிகமாகார்கள். இரண்டுபேருஞ் சமானமாய் சந்தேகமில்லாத மோக்ஷத்தை யடைந்தனர் — எ - ம்.

(இ-ம்) வாசநாக்ஷயம்வந்தவன் வியகாரியானாலும் ஏகாந்தியானாலும் ஏற்றக்குறைச்சலின்றி யொருதன்மையராவரென்பதாம். (6)

### வாசனாக்ஷயம் வரவேண்டும் எனல்.

சாலவும்வா தனைபோகி லிம்மனஞ்செய் தொழில்புரிந்துந்தான் செய்யாதாந், சீலமனை கொடித்தகலி லுருகிருந்தார் செப்புமொழி தெரியாதாப்போற், றாலமனந் தொழில்விடினுஞ் செய்ததாம் வாதனையே துன்னுமாகிற், கோலவுட லசைவறினுங் கனவிலே வரைநின்றுங் குழிவீழ்வார்போல்.

இ - ள். சாலவும் வாதனைபோகில் - மிகவும் வாசனை கெடுமானால், இம்மனம் - இந்தமனமானது, செய்தொழில்புரிந்து - செய்கின்ற தொழிலைச்

செய்தும், சீலமனம் - நல்லொழுக்கமுடைய மனது, வெடிதகலில் - வெகுதூர நீங்கில், அருகிருந்தார் - பக்கத்திலிருந்தவர்கள், செப்புமொழி-சொல்லுகின்ற வசனம், தெரியாதாப்போல் - உணராததுபோல, தான்செய்யாதாம் - தான்செய்யாததாம், தூலமனர்தொழில்விடினும் - பருத்தமனது செயலைவிட்டாலும், வாதனையே துன்னுமாகில்-வாதனை நிறைந்திருக்குமானால், கோலவுடலசைவறினும் - அழகையுடைய சரீரம் அசைவற்றாலும், கனவில்-சொற்பனத்தில், வரைநின்று - மலையிலேநின்று, குழிவீழ்வார்போல்-பள்ளத்தில் விழுபவர்களைப்போல, செய்ததாம் - தொழிலைச் செய்ததாகும்—எ-று.

எ - து. மிகவும் வாசனைகெடுமானால் இந்தமனமானது செய்கின்ற தொழிலைச்செய்தும் நல்லொழுக்கமுடைய மனது வெகுதூரநீங்கில் பக்கத்திலிருந்தவர்கள் சொல்லுகின்ற வசனம் உணராததுபோல தான்செய்யாததாம். பருத்த மனது செயலைவிட்டாலும் வாதனை நிறைந்திருக்குமானால் அழகையுடைய சரீரமசைவற்றாலும் சொற்பனத்தில் மலையிலேநின்று பள்ளத்தில் விழுபவர்களைப்போல தொழிலைச் செய்ததாகும்.

(இ-ம்) வாசனைக்ஷயம் வரின் தொழில்செய்திருந்து செய்யாதவன், அஃதிருந்தால் தொழிலைவிட்டும் விடாதவனென்பதாம். (7)

### மனோசஞ்சல நீக்குதலை சமாதியாமெனல்.

தொலைவிருழிற் செய்யுமனத் தொழினீங்கி லதுதானே சுகசமாதி, யலைவறுகைவல்லியமும் பரமாநந் தமுமென்றேயறிவாய்நெஞ்சி, னுலைவுதிர மெனுமிரண்டு மத்தியானத் தியானமெனு முபயத்துக்கு, நிலையுறுகாரணங்களாமாதலிலிம்மனமுலைக்குநீர்மை தீர்ப்பாய்.

இ - ள். தொலைவிருழில் - நீங்காத வியகாரங்களை, செய்யுமனம்-செய்கின்ற மனமானது, தொழினீங்கில்-வியகாரத்தைவிட்டு நீங்குமானால், அதுதானே - அதுவே, சுகசமாதி - சுகசமாதியும், அலைவறுகைவல்லியமும் - சலனமற்ற நிருவாணமும், பரமாநந்தமும் - மேலான ஆநந்தமும், என்றேயறிவாய் - என்றேயறிந்துகொள்வாய், நெஞ்சின் - மனதினது உலைவு-சலனமும் திரம் - நிலையும், எனுமிரண்டும்-என்கின்ற விரண்டும், அத்தியானம் - தியானாபாவமும், தியானம் - தியானமும், எனுமுபயத்துக்கும் - என்கின்ற விரண்டு (திருஷ்டிச்) கும், நிலையுறு காரணங்களாம் - நிலையுள்ள காரணங்களாகும், ஆதலில் - ஆதலால், இம்மனமுலைக்கும் - இந்த மனதுண்டாகின்ற, நீர்மை தீர்ப்பாய் - குணத்தைத் [illegible]—எ - று.

எ-து. நீங்காத விபகாரங்களைச் செய்கின்ற மனமானது விப காரத்தை விட்டு நீங்குமாளுல் அதுவே சுகசமாதியும் சலனமற்றநிரு வாணமும் மேலான ஆநந்தமு மென்றே யறிந்து கொள்வாய். மன தினது சலனமும், நிலைப்பும், என்கின்ற இரண்டும் தியானுபாவமும், தியானமும், என்கின்ற இரண்டு திருஷ்டிக்கும் நிலையுள்ள காரணங்க ளாகும். ஆதலால் இந்தமனதுண்டாகின்ற குணத்தைக்கெடுப்பாய். எ - ம். (8)

இதுவுமது.

சிந்தனைவா தனையின்றித் திரமான மனத்தினையே தியானமென் ப, ரந்தவுபசாந்தமுமக் கேவலத்தின் மையுமென்று மதுவேயாகு, மிந்தவுயர் பதப்பொருட்டு வாதனைசா லவுநேர்மையெய்தவேண்டுஞ், சந்ததம்வா தனையில்லா மனந்தொழி லில்லாப்பதத்தைச் சாருமத் தால்.

இ - ள். சிந்தனைவாதனையின்றி - சிந்தனுரூபமாகிய வாசனையில்லாம லிருக்கின்ற, திரமான மனத்தினையே - திடமாகிய மனதையே, தியானமென் பர் - தியானமென்று சொல்லுவார்கள், அந்தவுபசாந்தமும் - அவ்வுபசாந்தி யும், அக்கேவலத்தன்மையும் - அக்கைவல்லியமும், என்றுமதுவேயாகும்-எப் போதும் அந்த மனமேயாகும், இந்த உயர்பதப்பொருட்டு - இம்மேலான நிருவாணபதநிமித்தம், வாதனை - வாதனையானது, சாலவும் - மிகவும், நேர்மை யெய்தவேண்டும் - அற்பமாகக்கரையவேண்டும், சந்ததம் - சதாகாலமும், வா தனையில்லாமனம் - வாதனையில்லாத மனமானது, தொழிலில்லாப்பதத்தை - செயலிறந்த நிருவாணபதத்தை, அத்தாற்சாரும் - அவ்வாசனுக்ஷயத்தினலடை யும் — எ - று.

எ - து. சிந்தனுரூபமாகிய வாசனையில்லாமலிருக்கின்ற திடமா கிய மனதையே தியானமென்று சொல்லுவார்கள். அவ்வுபசாந்தியும் அக்கைவல்லியமும் எப்போதும் அந்தமனமேயாகும். இம்மேலான நிருவாணபத நிமித்தம் வாதனையானது மிகவும் அற்பமாகக் கரைய வேண்டும். சதாகாலமும் வாதனையில்லாத மனமானது செயலிறந்த நிருவாணபதத்தை அவ்வாசனுக்ஷயத்தினலடையும் — எ-ம். (9)

தத்துவஞானத்தினுல் வாசனுக்ஷயத்தைச்செய்யின் வீட்டிலாவது காட்டிலாவது இருக்கலாமெனல்

நெருக்கமுறு வாசனையே நெஞ்சினது தொழிற்றிரமா நீங்காத் துன்பம், பெருக்கவிடு மாதலினல் வாதனையை மிகநேர்மை பிறக்க ச்செய்வாய், வருக்கமுறு பலபொருளி னுனெனும் பாவனை

மனத்தான் மாற்றியெங்ங னிருக்குதியங் ஙனமிருப்பாய் வரையிலே மனையிலே யெங்கேயேனும்.

**இ - ள். நெருக்கமுறு வாசனையே - நெருங்கிய வாசனையானது, நெஞ்சினது - மனதினுடைய, தொழில் - விபகாரமான, நிரமாநீங்காத்துன்பம் - நிடமாக நீங்காததுன்பத்தை, பெருக்கவிடும் - பருக்கச்செய்யும், ஆதலினால் - ஆகையினால், வாதனையை - வாசனையை, மிகநேர்மைபிறக்கச்செய்வாய் - மிகவுந் தேயும்படி செய்வாய், வருக்கமுறுபலபொருளில் - கூட்டமாகிய அநேக வஸ்துக்களில், நானெனும்பாவனை - யானென்கின்ற பாவனையை மனத்தான் மாற்றி - மனதினாற் கெடுத்து, எங்ஙனிருக்குதி - எவ்விடத் திருக்கவேண்டுமோ, அங்ஙனம் - அவ்விடத்தில், வரையில் - மலைகளிலாவது, மனையில் - வீட்டிலாவது, எங்கேயேனும் - மற்றெவ்விடத்திலேயாகிலும், இருப்பாய் - நீ வசிப்பாய்—எ - று.**

எ - து. நெருங்கிய வாசனையானது மனதினுடைய விபகாரமான நிடமாக நீங்காததுன்பத்தை பருக்கச்செய்யும் ஆகையினால் வாசனையை மிகவுந் தேயும்படி செய்வாய் கூட்டமாகிய அநேகவஸ்துக்களில் யானென்கின்ற பாவனையை மனதினாற் கெடுத்து எவ்விடத் திருக்கவேண்டுமோ அவ்விடத்தில் மலைகளிலாவது வீட்டிலாவது மற்றெவ்விடத்திலே யாகிலும் நீ வசிப்பாய்—எ - ம். (10)

ஆசையை நீக்கினவர்கள் இருக்கும் வீடும்
ஞானநிறைந்தவர்கள் இருக்கும் நாடும் காடேயெனல்.

இல்லுறைவோர் சமாதான விதயத்தோ ரகங்காரமா மேதந்தீர்ந் தோர், புல்லுமனை யேகாந்த வனமாகுங்கடைவீதி புக்கிக்காண்போர், செல்லவா வுலாவியும்பற் றுமையினாற் கடைவழிச்செல்லாதார்போல்வார், நல்லறிவு நிறைந்தோர்க்கு மப்படியே காடொக்கு நாடுதானே.

**இ - ள் இல்லுறைவோர் - இல்லறத்திருப்பவர்களும், சமாதானவிதயத்தோர் - சமாதானமனதை யுடையவர்களும், அகங்காரமாம் - அகங்காரமாகிய, ஏதந்தீர்ந்தோர் - குற்றமற்றவர்களுமாகிய இவர்கள், புல்லுமனை - பொருந்தாநின்ற வீடானது, ஏகாந்த வனமாகும் - ஏகாந்தவனமாகிய (கானகமே) யாம், கடைவீதிபுக்கிக்காண்போர் - கடைவீதியிற் போயறிகின்றவர்கள், செல்லவரவும் - போக்குவரத்தாக, உலாவியும் - சஞ்சரித்தும், பற்றுமையினால் - பற்றுதலினால், (வழிநடப்பவர்க்கு) கடைவழி - கடைவீதியில், செல்லாதார் போல்வார் - போகாதவர்களுக்கொப்பாவார்கள். நல்லறிவுநிறைந்தோர்க்கு - சுகபோதம் பூரணமானவர்களுக்கும், அப்படியே - அந்தப்பிரகாரமே, நாடுதானே - நகரமும், காடொக்கும் - வனத்தை யொத்திருக்கும்—எ - று.**

எ - து. இல்லறத்திருப்பவர்களும், சமாதானமனதை யுடையவர்களும், அகங்காரமாகிய குற்றமற்றவர்களுமாகிய இவர்கள் பொருந்தா நின்ற வீடானது ஏகாந்தவனமாகிய கானகமேயாம். கடைவீதியிற்போய் யறிகின்றவர்கள் போக்குவரத்தாக சஞ்சரித்தும் பற்றுதலினால் வழிநடப்பவர்க்கு கடைவீதியில் போகாதவர்களுக் கொப்பாவார்கள். சுகபோதப் பூரணமானவர்களுக்கும் அந்தப் பிரகாரமே நகரமும் வனத்தை யொத்திருக்கும்—எ - ம்.

(இ-ள-க-ம்.) ஏகரூபமான மனோசங்கற்பம் இறந்தலேசுகாகாரமான வேகாந்தஸ்தானமெய்பதாம். (11)

அகத்திலுள்ளது புறத்திலும் உள்ளதெனல்.

துயில்விழிப்பு சொலல்செலவு தொடர்ந்தாலு மகமுகமாந்தொடர்பா லென்றும், பயின்மனையூர் நாடெல்லாம் பழுவம்போற் காண்பவரே பரமசீலர், செயிரிலா வகமுகத்தாலெல்லாமா காசமாய்த்திருஞ்சித்த, முயிரனைய சீதளம்வந்தண்ணிறையிற் சீதளமாமுலக மெல்லாம்.

இ - ள். துயில் - நித்திரையும், விழிப்பு - விழித்தலும், சொலல்-படித்தலும், செலவு - போகுதலுமாகிய இவைகள், தொடர்ந்தாலும்-தொடர்ந்து வந்தாலும், அகமுகமாந் தொடர்பால் - அந்தர்முகமாகிய தொடர்ச்சியினால், என்றும் - எப்போதும், பயில் - வசிக்கின்ற, மனை - வீடும், ஊர் - நகரமும், நாடு - தேசமுமாகிய, எல்லாம் - அனைத்தும், பழுவம்போல - காட்டைப் போல, காண்பவரே - பார்ப்பவர்களே, பரமசீலர் - மேலான அறிவையுடையவர்கள், செயிரிலா - குற்றமற்ற, அகமுகத்தால் - அந்தர்முகத்தினால், எல்லா மாகாசமாய்த்திரும் - சகலமும் (ஞானா) காயமாய்விடும், உயிரனையாய் - பிராணனுக்குச் சமானமானவனே, சித்தம் - மனதில், சீதளம் - குளிர்ச்சியானது, வந்து நண்ணிறையில் - வந்து நிறையுமானால், உலகமெல்லாம் - சகங்களனைத்தும், சீதளமாம் - குளிர்ச்சியாம்.

எ - து. நித்திரையும், விழித்தலும், படித்தலும், போகுதலுமாகிய இவைகள் தொடர்ந்து வந்தாலும் அந்தர்முகமாகிய தொடர்ச்சியினால் எப்போதும் வசிக்கின்ற வீடும், நகரமும், தேசமுமாகிய அனைத்தும் காட்டைப்போலப் பார்ப்பவர்களே மேலான வறிவையுடையவர்கள். குற்றமற்ற அந்தர்முகத்தினால் சகலமும் ஞானாகாயமாய் விடும். பிராணனுக்குச் சமானமானவனே மனதில் குளிர்ச்சியானது வந்து நிறையுமானால் சகங்களனைத்தும் குளிர்ச்சியாம்—எ - ம். (12)

இதையமய லாவெரியி லுலகெலாங் காட்டெரிபோ லெரிந்து தோன்று, முதையமுறு முயிர்க்கெல்லா முள்ளிருப்பதே புறத்துமு ண்டாய் நிற்குஞ், சுதைபயிலூர் புவிகால்விண் டொகுவரைநீணதிதி க்கு சூழ்ந்தவெல்லாம், புதைதலுறு முட்கரண தத்துவத்தின்பங்குக ளாய்ப் புறத்தினிற்ப.

இ - ள். இதயம் - மனமானது, மயலாவெரியில் - மயக்கத்தினால் வே குமானால், உலகெலாம்-ஜகங்களனைத்தும், காட்டெரிபோல்-காட்டாக்கினி யைப்போல, எரிந்து தோன்றும - வெந்து தோற்றும், உதைய முறுமுயிர்க் கெல்லாம் - உண்டாகின்ற ஆத்மாக்களனைத்திற்கும், உள்ளிருப்பதே-அகத் திலிருப்பதே புறத்துமுண்டாய் நிற்கும் - புறம்பிலும் முண்டாயிருக்கும், சு தைபயிலூர் - அமிர்தமிருக்கின்ற சுவர்க்கலோகமும், புவி - பூமியும், கால்- வாயுவும், விண் - ஆகாயமும், தொகுவரை - தொகுப்பாகிய மலைகளும், நீ ணதி - நீண்ட ஆறுகளும், திக்கு - திசைகளும், சூழ்ந்தவெல்லாம் - சூழ்ந்தி ருக்கின்ற சகலமும், புதைதலுறும் - அழுந்தமாகிய, உட்கரணதத்துவத்தின் அந்தக்கரண தத்துவத்தினுடைய, பங்குகளாய் - பிரிவுகளாக, புறத்தினி ற்ப - புறம்பினிற்பனவாம்—எ-று.

எ - று. மனமானது மயக்கத்தினால் வேகுமானால் சகங்களனைத் தும் காட்டாக்கினியைப்போல வெந்து தோற்றும். உண்டாகின்ற ஆத்மாக்க ளனைத்திற்கும் அகத்திலிருப்பதே புறம்பிலுமுண்டாயிரு க்கும். அமிர்தமிருக்கின்ற சுவர்க்கலோகமும், பூமியும்,வாயுவும்,ஆகா யமும், தொகுப்பாகிய மலைகளும் நீண்டவாறுகளும்,திசைகளும்,சூழ் ந்திருக்கின்ற சகலமும் அழுந்தமாகிய அந்தக்கரண தத்துவத்தினு டைய பிரிவுகளாக புறம்பினிற்பனவாம்—எ - ம். (13)

(இ-உ-க-ம்.) மனதெப்படியோ அப்படியேயாவும் விளங்குமென்பதாம்.

## சமாதி யடைந்தவன் இலக்கணம் அறிவித்தல்.

உள்ளுணர்வி லின்புறுவோன் பொறிகளாற் கருமங்களுய்ப் போனுயுந், தள்ளுசுக துக்கவசஞ் சாராதோ னனவரதஞ் சமாதியு ற்றோ, னுள்ளுகின்ற தனைப்போலெவ் வுயிருமெனப் புறப்பொருள்க டோடே யென்ன,வெள்ளுபயத் தாலன்றி யியல்பாலே கண்டானே யெல்லாங் கண்டோன்.

இ - ள். உள்ளுணர்வில் - ஆத்மஞானத்தில், இன்புறுவோன் - சுகத் தை அடைகின்றவனும், பொறிகளால் - இந்திரியங்களால், கருமங்கள் - கிரியைகளை, உய்ப்போனும் - செலுத்துபவனும், தள்ளு - நீக்காநின்ற,

சுகதுக்கவசம் - சுகதுக்கவசத்தில், சாராதோன் - அடையாதவனுமிருக்கின்றவன், அநவரதம் - சதாகாலமும், சமாதியுற்றோன் - சமாதியைப் பொருந்தினவன், எவ்வுயிரும் - சகலவுயிர்களும், உள்ளுகின்றதனைப்போலெண - நினைக்கின்ற தனதுயிரைப்போல வென்று, புறப்பொருள்கள் - பிறர்திரவியங்களை, ஓடேயென்ன - ஓடுபோல, ஏள்ளுபயத்தாலன்றி - இகழுகின்ற உலகவச்சத்தினால் அல்லாமல், இயல்பால் - சுபாவத்தினால், கண்டானே - பார்த்தானே, எல்லாங்கண்டோன் - சகலத்தையும் பார்த்தவன்—எ - று.

எ - து. ஆத்மஞானத்தில் சுகத்தையடைகின்றவனையும் இந்திரியங்களால் கிரியைகளைச் செலுத்துபவனையும் நீக்காநின்ற சுகதுக்கவசத்தில் அடையாதவனும் இருக்கின்றவன் சதாகாலமும் சமாதியைப் பொருந்தினவன் சகலவுயிர்களும் நினைக்கின்ற தனதுயிரைப் போலவென்று பிறர் திரவியங்களை ஓடுபோல இகழுகின்ற உலகவச்சத்தினால் அல்லாமல் சுபாவத்தினால் பார்த்தவனே சகலத்தையும் பார்த்தவன்—எ - ம். (14)

## ஞானவான் இலக்கணம் அறிவித்தல்.

இன்றிறவுவந்தாலுங் கற்பாந்தத்தெய்துகினு மிலங்குஞானி, கன்றியசேற் றுறுபொன்போற் களங்கமுறா னெல்லாமாய்க் கண்ணாயறி, பொன்றலடி முடிவின்றி யொன்றாயின் பத்தனாய்ப் பொலிதேசாகித், துன்றியகாட் சிகளில்லாக் குறியுடைத்தா மெனச்சுருதி சொல்லுமன்றே.

இ - ள். இறவு - மரணமானது, இன்றுவந்தாலும் - இப்போதுவந்தாலும், கற்பாந்தத்தெய்துகினும் - கற்பமுடிவில்வந்தாலும், இலங்குஞானி - பிரகாசிக்கின்ற ஞானவான்கள், கன்றியசேற்றுறுபொன்போல் - பதனழிவான அனற்றிலழுந்திய தங்கத்தைபோல, களங்கமுறான் - களங்கத்தை யடையான், எல்லாமாய் - சகலமுமாயும், கண்ணாய் - (ஞான) திருஷ்டியாயும், அறி - விஸ்ராந்தியடைந்து, பொன்றல் - கெடுதலும், அடிமுடிவின்றி - ஆதியந்தமில்லாமல், ஒன்றாய் - ஏகமாகியும், இன்பத்தனாய் - ஆநந்தமாத்திரமாகியும், பொலிதேசாகி - விளங்காநின்ற பிரகாசமாகியும், துன்றியகாட்சிகள் - நெருங்கிய சகங்கள், இல்லா - இல்லாததாகியுமிருக்கின்ற, குறியுடைத்தாமென - அடையாளத்தை யுடையதாமென்றும், சுருதி சொல்லும் - வேதங்கள் சொல்லும்—எ - று.

எ - து. மரணமானது இப்போது வந்தாலும் கற்பமுடிவில்வந்தாலும் பிரகாசிக்கின்ற ஞானவான்கள் பதனழிவானவனற்றிலழுந்திய தங்கத்தைப்போல களங்கத்தை யடையான், சகலமுமாயும் ஞானதிருஷ்டியாயும் விஸ்ராந்தியடைந்து கெடுதலும் ஆதியந்தமில்லா

மல் ஏகமாகியும் ஆநந்தமாத்திரமாகியும், விளங்காநின்ற இப்பிரகாச மாகியும், நெருங்கிய சகங்கள் இல்லாததாகியு மிருக்கின்ற அடையா ளத்தை யுடையதாமென்று வேதங்கள் சொலலுமா—ப - ம.

இ-உ-௯-ம்) உள்ளும் புறம்புஞ் சிதாகாசமாய் விளங்குவன்றவ கன்றொழிலைசெய்துஞ் செய்யாவிடினும் பேதமேயென்றறி யென்பதாம். (

# ஞானம்பெற்றவரில் இல்லறஞானிக் கிழிவும் துறவு ஞானிக்கு உயர்வுமின்றென் றறிவித்து இதற்குத் திருஷ்டாந்தம் அறிவிக்கத் தொடங்கல்.

எல்லாமென் றுரைத்ததெலா மறிவிக்கற் பொருட்டே யாமிவ்வுரை யச்சொன்ன சொல்லாலென் வீணன்றே யாதலினா லோமென்று ணி கவித்தை, நலலாயிங் கிதற்குமுத லுளதோர் சரிதையா நவிலக்கேட் பாய், புல்லாரென் வேடர்குலச் சுரகுவப்பே ரோன்சரிதை யற்புதந் தன்றே.

இ - ள். எல்லாமென் றுரைத்ததெலாம் - எல்லாமென்றது முதலாகச் சொல்லிய சகலமும, அறிவிதசற்பொருட்டேயாம - (ஞானம் அறிவிக்கு நிமித்தமேயாகும், இசையச்சொன்ன - பொருந்தவுரைத்த, சொ... சொற்களினாலென்ன (பிரயோசனம்), வீணன்றே - வீணல்லவா, ஆகையால், இதனை - இந் (நாமங்களினை) நதையும், ஓமென்று துணி - (பிரமவாசகமான) பிரணவமென்றே தெளிவாய், நலலாய் - நன்மையையு டைய ஸ்ரீராமா, இங்கிதற்கு - இவ்விடத்திந்த அனுபவத்துக்கு, முதல் - முற்காலத்தில், உளதோர் சரிதை - உண்டாகிய ஓர்கதையை, நவிலக்கேட் பாய் - யான் சொல்லக்கேட்பாய், புல்லாரென - மலைச்சாரலில் வசிக்கும் புன்மையர்களென்கின்ற, வேடர்குலம் - கிராதர்குலத்தில், சுரகுவப்பே ரோன் - சுரகு என்னுநாமமுடையவன், சரிதை - சரித்திரமானது, புதுமை த்து - அதிசயமுள்ளது—எ - று.

எ - து. எல்லாமென்றது முதலாகச்சொல்லிய சகலமும் ஞான மறிவிக்கு நிமித்தமேயாம். பொருந்தவுரைத்த சொற்களினாலென்ன பிரயோசனம் வீணல்லவா! ஆகையால் இந்தநாமங்களினைதையும் பிரமவாசகமான பிரணவமென்றே தெளிவாய் நன்மையையுடைய ஸ்ரீராமா! இவ்விடத்திந்த வனுபவத்துக்கு முற்காலத்தில் உண்டா கிய ஓர்கதையை யான்சொல்லக்கேட்பாய். மலைச்சாரலில் வசிக்கும் புன்மையர்களென்கின்ற கிராதர்குலத்தில் சுரகுவென்னும் நாமமு டையவன் சரித்திரமானது அதிசயமுள்ளது.

## சுரகு வேந்தர்க்கு விசாரமுதித்தல்.

இமகிரியின் கோடான கைலைவரை யினிலேமசடர்க ளென்னு,
மமர்வரிவில் வேடருள ரவர்க்கரசன் சுரகுவெனு மசையாவீரன், சம
நிலையாற் கோமுறையா லருண்முனிவா லுலகநெறி சமைக்குநாளி,
னமதுவலி யாலுலகை நலிகுதுமே லவர்சோக நமக்கேயன்றோ.

**இ - ள். இமயகிரியின் கோடான - இமயமலையின் முடியாகிய, கைலைவரையினில் - கைலாசபருவதத்தில், ஏமசடர்களென்னும் - ஏமசடர்களென்கின்ற, அமர் - யுத்தஞ்செய்கின்ற, வரிவில்வேடருள் - நீண்ட விற்களைத் தரித்த வேடர்களுமுண்டு, அவர்க்கரசன் - அவர்க்குராசாவானவன், சுரகுவெனு மசையாவீரன் - சுரகுவென்கின்ற நாமமுடைய சலனமற்ற சுத்தவீரன், சமநிலையால் - நடுநிலையினாலும், கோமுறையால் - அரசநீதியினாலும், அருள் - (சிஷ்ட) பரிபாலனத்தினாலும், முனிவால் - (துஷ்ட) நிக்கிரகத்தினாலும், உலகநெறி - சகமார்க்கத்தை, சமைக்குநாளில் - செய்கின்றகாலத்தில், நமதுவலியால் - நமது வல்லமையினால், உலகைநலிகுதுமேல் - சகத்தை வருத்துவோமானால், அவர்சோகம் நமக்கன்றோ - அவர்கடுன்ப நமக்கல்லவா—எ - று.**

எ - து. இமயமலையின் முடியாகிய கைலாசபருவதத்தில் ஏமசடர்க ளென்கின்ற யுத்தஞ்செய்கின்ற நீண்டவிற்களைத் தரித்தவேடர்களுண்டு அவர்க்குராசாவானவன் சுரகுவென்கின்ற நாமமுடைய சலனமற்ற சுத்தவீரன். நடு நிலையினாலும் அரசநீதியினாலும் சிஷ்டபரிபாலனத்தினாலும் துஷ்டநிக்கிரகத்தினாலும் சகமார்க்கத்தைச் செய்கின்ற காலத்தில் நமது வல்லமையினால் சகத்தை வருத்துவோமானால் அவர்கடுன்பம் நமக்கல்லவா—எ - ம். (17)

## சற்குரு தரிசனமாய்த் துதித்தல்.

அல்லாது தண்டமுறை யியற்றேமே லுயிர்காப்பற் றவத்தி
ன்மாயும், பொல்லாதிவ் வாசெஞ்சேற யூசலா டுளத்தினைப் புந்தி
நைந்தான், மல்லாரும் புயத்தவன்பான் மாண்டவிய முனிவாலும்
வணங்கிப்போற்றி, நல்லாயுன் வாயினான் மிகவாழ்ந்தே னல்லோரி
னாட்டப்பட்டேன்.

**இ - ள். அல்லாது - (அப்படி) யல்லாமல், தண்டமுறை - (தருமசாஸ்திரப்பிரகாரமான தண்டத்தின் முறைமையை, இயற்றேமேல் - செய்யாமற்போவோமேயானால், உயிர் - பிராணிகள், காப்பற்று - காப்பவனில்லாமல்,**

அவத்திஎன்மாயும் - வீணாகக்கெடும், இவ்வரசு - இந்தவரசாங்கம், பொல்லா தென்று - கொடியதென்று, ஊசலாளைத்தினனாய் - ஊஞ்சலாடுகின்ற மனதையுடையவனாய், புந்திலைந்தான் - மனதுவருத்தமடைந்தான், மல்லாரும் புயத்தவன்பால் - பலமிகுந்த புசத்தையுடைய சரகுவினிடத்தில், மாண்டவியமுனிவரலும் - மாண்டவியமுனியானவர் வரவும், வணங்கிப்போற்றி-(சரகுவானவர்) வணங்கித் தோத்திரஞ்செய்து, நல்லாய் - நன்மையையுடைய முனியே, உன்வரவினால் - உமது வரவினால், நான்மிகவாழ்ந்தேன் - யான் மிகவுஞ் சுகத்தையடைந்தேன், நல்லோரிராட்டப்பட்டேன்-சத்துருக்களினத்தில் நிலைக்கப்பெற்றேன்—எ - று.

எ - து. அப்படியல்லாமல் தருமசாஸ்திர பிரகாரமான தண்டத்தின் முறைமையை செய்யாமற் போவமேயானால் பிராணிகள் காப்பவனில்லாமல் வீணாகக்கெடும், இந்த அரசாங்கம் கொடிய தென்று ஊஞ்சலாடுகின்ற மனதை யுடையவனாய் மனது வருத்தமடைந்தான் பலமிகுந்த புசத்தையுடைய சரகுவினிடத்தில் மாண்டவிய முனியானவர் வரவும் சரகுவானவர் வணங்கித் தோத்திரஞ்செய்து நன்மையை யுடைய முனியே! உமது வரவினால் யான் மிகவுஞ் சுகத்தையடைந்தேன். சத்துருக்க ளினத்தில் நிலைக்கப் பெற்றேன்—எ - ம். ()

## தனாசையம் நீங்கும்படி விஞாபித்தல்.

தருமமுழு தையுமுணர்ந்த பகவநீ நெடுங்காலந் தளர்வுதீர்ந்தா,
யருவினையே னையப்பா டறுத்தியா லையம்போ லரந்தையுண்டோ,
விருநிலத்தென் கோற்கீழோ ரென்கருணை முனிவுகளாலின்ப துன்ப,
மருவுகின்ற கவலையைக்கண் டரியேற்றின் முன்கரிபோன் மறுகுகின்றேன்.

இ - ள். தருமமுழுதையு முணர்ந்த - தருமங்களனைத்தையும் அறிந்திருக்கின்ற, பகவ - பகவானே, நீநெடுங்காலம் - நீர்வெகுகாலமாய், தளர்வுதீர்ந்தாய் - தளர்ச்சி தீர்ந்திருக்கின்றீர், அருவினையேன் - அரிய கருமமுடையேனது, ஐயப்பாடறுத்தி - சந்தேகத்தைத் தீர்ப்பாய், ஐயம்போல் - சந்தேகத்தைப்போல, அரந்தையுண்டோ-துன்பமுண்டோ, இருநிலத்து-பெரிதான பூமியில், என்கோற்கீழோர் - எனது செங்கோலின் கீழுள்ளவர்கள், என் கருணைமுனிவுகளால் - எனதனுக்கிரகத்தினாலும் நிக்கிரகத்தினாலும், இன்பதுன்பம் - சுகதுக்கங்களை, மருவுகின்ற கவலையைக்கண்டு-பொருந்தாநின்ற துன்பங்களைப்பார்த்து, அரியேற்றின் முன்-ஆண்சிங்கத்தின்முன்பு, கரிபோல்-யானையைப்போல, மறுகுகின்றேன்-சுழலுகின்றனன்—எ - று.

எ - து. தருமங்க ளனைத்தையு மறிந்திருக்கின்ற பகவானே! நீர் வெகுகாலமாய் தளர்ச்சி தீர்ந்திருக்கின்றீர். அரிய கருமமுடை

யேனது சந்தேகத்தைத்தீர்ப்பாய். சந்தேகத்தைப்போலத் துன்ப முண்டோ! பெரிதான பூமியில் எனதுசெங்கோலின் கீழுள்ளவர்கள் எனதனுக்கிரகத்தினலும் நிக்கிரகத்தினலும் சகதுக்கங்களைப் பொருந்தாநின்ற துன்பங்களைப்பார்த்து ஆண்சிங்கத்தின் முன்பு யானையைப்போலச் சுழலுகின்றனன்—எ - ம். (19)

அருணன்வெயில் போலெங்கு நிறைசமமென் மதியிலேயணுகுமாறு, கருணையினு லுணர்த்தியெனுங் காவலற்கு மாண்டவியன் கழறுகிற்பான், பொருவறுதன் விசாரத்தா லிமைப்போதின் மன வழுக்குப் போகாநிற்கும், வருசாற்காலந்தோன்று மாத்திரத்து மூடு பனி மாய்வதேபோல்.

இ - ள். அருணன் வெயில்போல் - சூரியனது பிரகாசத்தைப்போல, எங்கு நிறைசமம் - எவ்விடத்தும் நிறைந்திருக்கின்ற சமமானது, என்மதியில் - எனதறிவில், அணுகுமாறு - பொருந்தும்படி, கருணையினல் - கிருபையினல், உணர்த்தியெனுங்காவலற்கு - அறிவிப்பாயென்ற அரசனுக்கு, மாண்டவியன் - மாண்டவியமுனியானவர், கழறகிற்பான் - சொல்லுவார், பொருவறு-ஒப்பற்ற, தன்விசாரத்தால் - ஆத்மவிசாரணையினல், இமைப் போதில் - க்ஷணநேரத்தில், வருசாற்காலம்-வாராநின்ற சரற்காலமானது, தோன்றுமாத்திரத்து - உண்டான மாத்திரத்தில், மூடுபனி மாய்வதே போல் - மூடுபனி கெடுவதுபோல, மனவழுக்குப்போகாநிற்கும் - மனதின் களங்கமானதுபோகும்—எ - று.

எ - று. சூரியனது பிரகாசத்தைப்போல எவ்விடத்து நிறைந்திருக்கின்ற சமமானது எனதறிவில் பொருந்தும்படி கிருபையினல் அறிவிப்பாயென்ற அரசனுக்கு மாண்டவியமுனியானவர் சொல்லுவார்: ஒப்பற்ற ஆத்மவிசாரணையினல் க்ஷணநேரத்தில் வாராநின்ற சரற்காலமானது உண்டானமாத்திரத்தில் மூடுபனி கெடுவதுபோல மனதின் களங்கமானதுபோகும்—எ - ம்.

(இ-கி-க-ம்.) சுரகு வேந்தனுக்கு இராசநீதிப்படி செய்யு மனுக்கிரக நிக்கிரகத்தினல் உயிர்கள் வருந்துவதை முன்னிட்டு ஆத்மவிசாரமுண்டான தென்பதாம். (20)

## ஞானமுபதேசித்தல்.



யாரினுச் சகமெங்ஙன் பிறப்பிறப்பெங் ஙனவமன்றே யிதயத்துள்ளே, யானுமலிப்படியே பாராயின் மகத்துவமே யடைதிசாலத், தானை சுபாவனு யிருந்துளாநின் விசாரத்தாற் றனேநெஞ்ச, நீநாடும்படி தோன்றித் தன்னுருநீட் டிளைப்பாறித் துன்ப நீங்கும்.

இ - ள். யாஞர் - நாஞர், இச்சகமெங்ஙன் - இவ்வுலகம் எப்படி வந்தது, பிறப்பு - சநநமும், இறப்பு - மரணமும், எங்ஙனமென்று - எப்படிவந்ததென்று, இதயத்துள் - உள்ளத்தின்கண், ஆறாமலிப்படி - நீங்காமலித்தப் பிரகாரம், ஆராயின் - விசாரித்துப்பார்க்கில், மகத்துவமே யடைதி - மகத்தானபதத்தை யடையக்கடவாய், சாலத்தாஞன சுபாவனாய் - மிகவுந்தாஞகிய சுபாவத்தையுடையவஞய், இருந்தனை - இராநின்ற, நின்விசாரத்தால் - உனதாத்மாவிசாரணையினல், தானேனெஞ்சம் - தனக்குத்தானே மனமானது, நீ நாடும்படி தோன்றி - நீ தேடுகின்ற பிரகாரமுண்டாகி, தன்னுருவிட்டினைப்பாறி - தனது வடிவத்தைவிட்டு விஸ்ராந்தியடைந்து, துன்ப நீங்கும் - துன்பத்தைநீங்கும் — எ - று.

எ - து. நாஞர்? இவ்வுலகமெப்படி வந்தது? சநநமும் மரணமும் எப்படி வந்ததென்று உள்ளத்தின்கண் நீங்காமல் இந்தப் பிரகாரம் விசாரித்துப் பார்க்கில் மகத்தான பதத்தை யடையக்கடவாய். மிகவுந்தாஞகிய சுபாவத்தை யுடையவஞயிராநின்ற உனதாத்மவிசாரணையினல் தனக்குத்தானே மனமானது நீதேடுகின்ற பிரகாரமுண்டாகி தனது வடிவத்தைவிட்டு விஸ்ராந்தி யடைந்து துன்பத்தைநீங்கும் — எ — ம். (௨௧)

## பாவத்தை நீக்குதற்குச் சாந்தி வேண்டுமெனல்.

வெம்புதல்போய்த் தண்ணென்ற வுன்மனதுக் கிவ்வுலகின் வியாபாரங்கள், செம்புகர்வே ழத்தினுக்கான் குளப்படிபோலேபோற் றேன்றுமா தீனநெஞ்சுக், கம்புவியிற் றெழிலிற்சிறிதே யாகினுநீக் கிடவரிதா மாவின்பாதப், பைம்புனலுங் கிழக்கொதுக்குக் கெல்லை கரை காணுத பரவையன்றே.

இ - ள். வெம்புதல்போய் - வாடுதனீங்கி, தண்ணென்ற வுன்மனதுக்கு - குளிர்ந்த வுன்னுடைய மனதுக்கு, இவ்வுலகின் வியாபாரங்கள் - இந்த உலகத்திலுள்ள காரியங்கள், செம்புகர் வேழத்தினுக்கு - சிவந்தபுள்ளிகளை யுடையயானைக்கு, ஆன்குளப்படிபோல் - பசுவினது குளப்படியைப்போல, தோன்றும் - தோற்றும், தீனநெஞ்சுக்கு - இழிவுள்ளமனதுக்கு, அம்புவியில் - அழகிய பூமியிலுள்ள, தொழில் - கிரிகைகள், சிறிதேயாகினும் - அற்பமேயானலும், நீக்கிடவரிதாம் - கடத்தற்கரியதாகும், ஆவின்பாதம் - கோவின் குளப்படியிலுள்ள, பைம்புனலும் - அழகிய சலமும், கிழக்கொதுக்கு - வார்த்திகமுள்ள மசகத்துக்கு, எல்லைகரைகாணுத - அளவுங்கரையுங் காணக்கூடாத, பரவையன்றே - சமுத்திரமல்லவா — எ - று.

எ - து. வாடுதனீங்கி குளிர்ந்த உன்னுடைய மனதுக்கு இந்த வுலகத்திலுள்ள காரியங்கள் சிவந்த புள்ளிகளை யுடையயானைக்

கூப் பசுவினதுகுளப்படியைப்போலத்தோற்றும். இழிவுள்ள மன துக்கு அழகிய பூமியிலுள்ள கிரிகைகள் அற்பமேயாகுலும் கடத் தற்கரியதாகும், கோவின் குளப்படியிலுள்ள அழகிய சலமும் வார்த் தீகமுள்ள மசகத்துக்கு அளவுங் கரையுங் காணக்கூடாத சமுத்திர மல்லவா—எ — ம். (22)

## ஆத்மதரிசனம் உண்டாகுமார்க்கம் அறிவித்தல்.

எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப் பாஞ்சுடரா யெறிக் குஞ்சோதி, யத்தனையத் தனைதோன்று மெந்நாண்மட்டனைத்தும் விடா யன்னாண்மட்டுந், தத்துவமாம் பொருளெய்தாச் சகலமும் போனாற்சேடந் தானஞ்சித்தந், தொத்தறவேற்றுமையெல்லாம் போகாதேற் சமமான சோதிதோன்றா.

இ - ள். அகிலத்தை - சகத்தை, எத்தனையெத்தனை - எவ்வளவெவ் வளவு, நீத்தாய் - நீக்கினையோ, பாஞ்சுடராயெறிக்குஞ்சோதி - பரமப் பிர காசமா யொளிவீசாநின்ற (பரமாத்மா) வானது, அத்தனையத்தனைதோன் றும் - அவ்வளவவ்வளவுண்டாகும், எந்நாண்மட்டனைத்தும் விடாய்-எந்த நாள் மட்டுஞ் சகலமும் விடவில்லையோ, அந்நாண்மட்டும் - அக்காலமள வும், தத்துவமாம் பொருளெய்தா - உண்மையாகிய வஸ்துவந்தடையாது, சகலமும்போனால் - சகலகிரிஸ்யங்களும் விடுபட்டால், சேடந்தானும் - மிஞ்சின (இருக்குமே) தானாகும், சித்தந்தொத்தற - மனத்தொந்தமில் லாமல், வேற்றுமையெல்லாம் - பேதங்களனைத்தும், போகாதேல்-நீங்கா விடின், சமமானசோதி தோன்றா - பூரணமாகிய (பரமாத்மஸ்வரூப) பிர காசந்தோற்றமாட்டாது—எ - து.

எ - று. சகத்தை எவ்வளவெவ்வளவு நீக்கினையோ பரமப் பிரமகாசமா யொளிவீசாநின்ற பரமாத்மாவானது அவ்வளவவ்வளவு ண்டாகும். எந்நாள் மட்டுஞ் சகலமும் விடவில்லையோ அக்காலம ளவும் உண்மையாகிய வஸ்து வந்தடையாது. சகலகிரிஸ்யங்களும் விடுபட்டால் மிஞ்சினவிருக்குமே தானாகும். மனத்தொந்தமில்லாமல் பேதங்களனைத்தும் நீங்காவிடின் பூரணமாகிய பரமாத்மஸ்வரூபப் பிரகாசந் தோற்றமாட்டாது—எ - ம்.

## சகல கர்மங்களையும் நீங்கினவிடத்து ஞான முதிக்குமெனல்.

பேதமறு பொருளொருமை தோன்றுதேற் றன்னைத்தான் பெறுவதெங்கே, யாதலினாற் றனைப்பெறுதற் பொருட்டாக வினைத் திணையு மகற்றல்வேண்டும், மேதமற வினைத்தையும்விட்டாயென்னிற்

சேடித்த திறவாவீடா, மேதகைய பதமதுவாஞ் சாருவெனும்பெயர்
கீர்த்தி வேடர்வேந்தே.

இ - ள். பேதமறுபொருள் - சாமானியமாயிருக்கின்ற கனகமுதலிய வஸ்துக்கள், ஒருமைதோன்றுதேல் - ஒற்றுமைதோற்றுதாலால், தன்னை - ஆத்மஸ்வருபத்தை, பெறுவதெங்கே அடைவதெப்படி, ஆதலினால் - ஆகையினால், தனைப்பெறுதற் பொருட்டாக - ஆத்மாவையடையு நிமித்தமாக, அனைத்தினையு மகற்றல்வேண்டும் - சகல விடயங்களையு நீக்கவேண்டும், ஏதமற - துன்பநீங்க, அனைத்தையும் விட்டாயென்னில் - யாவையும்விட்டாயானால், சேடித்ததிறவாவீடாம் - மிஞ்சினதே நாசமில்லாத மோக்ஷமாம், மேதகைய பதமதுவாம் - மேன்மையான பரமபதமதுவாகும், சாருவெனும் பெயர் - சாருவென்னு நாமத்தையும், கீர்த்தி - கீர்த்தியையுமுடைய, வேடர் வேந்தே - வேடராசாவே—எ - று.

எ - து. சாமானியமா யிருக்கின்ற கனகமுதலிய வஸ்துக்கள் ஒற்றுமை தோற்றுதாலால் ஆத்மஸ்வருபத்தை அடைவதெப்படி? ஆகையினால் ஆத்மாவை யடையுநிமித்தமாக சகலவிடயங்களையு நீக்கவேண்டும். துன்ப நீங்கயாவையும் விட்டாயானால் மிஞ்சினதே நாசமில்லாத மோக்ஷமாம். மேன்மையான பரமபத மதுவாகும் சாரு வென்னு நாமத்தையும் கீர்த்தியையுமுடைய வேடராசாவே.

## வாசனா நிவர்த்தியே ஞானமாமெனல்.



சமலகாரண காரியபரம்பரைத் தன்மையாஞ் சகமேவி
மிகவளர்ந்தவத் தாவின்மலவாதனை மனத்தினை மிகநீக்கி
திகழுமங்கமா மதையுமேல்விடுதியேற் றீதறு நலனுண்டாம்
புகழ்நாதிப வென்றுதன்னிடமுறப் போயினன் றவப்பாலன்.

இ - ள். சகல காரணகாரியம் - சகலமான காரண காரியங்களுடைய, பரம்பரைத்தன்மையாம் - பாரம்பரியமான குணத்தையுடையதாகிய, சகமேவி - உலகத்திற் பொருந்திய, வத்துவின் - விடயங்களின், மலவாதனை - அஞ்ஞான வாசனையினால், மிகவளர்ந்த - மிகவுமோங்கிய, மனத்தினை - மனதை, மிகநீக்கி - மிகவுங்கெடுத்து, திகழுமங்கமாமதையும் - பிரகாசிக்கின்ற சரீர வாசனையையும், மேல்விடுதியேல் - மேல்விடுவையாயின், தீதறு நலனுண்டாம் - குற்றமற்ற நன்மையான (வஸ்து) உண்டாகும், புகழ் நாதிபவென்று - கீர்த்தியையுடைய அரசனேயென்று (சொல்லி), தன்னிடமுற - தனதிடத்திற்பொருந்த, தவப்பாலன் - தவசிரேஷ்டனை மாண்டவியமுனியானவர். போயினன் - போனார்—எ - று.

ஏ — து, சகலமான காரணகாரியங்களுடைய பாரம்பரியமான குணத்தை யுடையதாகிய உலகத்திற் பொருந்திய விடயங்களின் அஞ்ஞானவாசனையினுன் மிகவு மோங்கிய மனதை மிகவுங்கெடுத்து பிரகாசிக்கின்ற சரீரவாசனையையும் மேல்விடுவையாயின் குற்றமற்ற நன்மையான வஸ்துவுண்டாகும், கீர்த்தியையுடைய அரசனேயென் றுசொல்லி தனதிடத்திற் பொருந்த தவசிரேஷ்டனுன மாண்டவிய முனியானவர் போனுர்.

(இ-ந-க-ம்.) இராசகாரியங்களைச் செய்தும் அதனுல்வருஞ் சுகதுக்கங்க டாக்காததற்கு நித்தியாநந்த சீதளமான ஆத்மானுபவத்தை யடையும் விசாரத்தை யனுக்கிரகித்தாரென்பதாம். (25)

## அரசனுத்மதரிசனம் செய்யும்பொருட்டு அநாத்மாவான தேகத்தை நியுகிசெய்தல்.

முனியகன்றபின்னெயினர்கோன் றனியிடமுந்தினன்மதியாலே
யனிசநானென்பதாரெனநாடினனடிமுதன்முடியீறுந்
தனியுடம்பைநானென்பதுபுதுமையாஞ்சடவுடல்காண்கேனுன்
றுனிசெயிவ்வுடல்சேதனந்தசைமுதற்றன்னுமாதலினன்றே.

இ - ள். முனியகன்றபின் - மாண்டவியமுனியானவர் நீங்கினபின்பு, எயினர்கோன் - வேடர்க்கரசனுனவன், தனியிடமுந்தி - ஏகாந்தஸ்தான மடைந்து, நன்மதியால் - நல்லறிவினுல், அனிசம் - எப்பொழுதும், நானென்பதாரென - யானென்பதாரென்று, நாடினன் - விசாரித்தான், அடிமுதன் முடியீறும் - பாதாதி சிரசு பரியந்தமாகிய, தனியுடம்பை - தனிமையான சரீரத்தை, நானென்பது - யானென்று சொல்லுவது, புதுமையாம் - அதிசயமாகும், நான்சடவுடல்காண்கேன் - யான்சடமாகிய சரீரத்தை விசாரிப்பேன், துனிசெயிவ்வுடல் - துன்பத்தைச் செய்கின்ற விச்சரீரமானது, தசைமுதற் றன்னும்-மாமிசம் என்பு முதலானவைகள் நிறைந்திருக்கும், அசேதனம்- சடமாம், ஆதலினன்று - ஆதலினுலல்ல—எ - று.

எ — து. மாண்டவிய முனியானவர் நீங்கினபின்பு வேடர்க்கரசனுனவன் ஏகாந்தஸ்தானமடைந்து நல்லறிவினுல் எப்பொழுதும் யானென்பதா ரென்று விசாரித்தான், பதாதி சிரசுபரியந்த மாகிய தனிமையான சரீரத்தை யானென்று சொல்லுவது அதிசயமாகும், யான் சடமாகிய சரீரத்தை விசாரிப்பேன் துன்பத்தை நீசெய்கின்ற இச்சரீரமானது மாமிச மென்பு முதலானவைகள் நிறைந்திருக்கும் சடமாம், ஆதலினுனல்ல— எ - ம். ()

## அநாத்மாவான இந்திரியங்களையும் சீவனையும் நியதிசெய்தல்.

கரணமீரைந்துமன்னியஞ்சடமெனுங்கணக்கினானன்றித்
திரளெனக்கிலவுடன்முதலானலன்சேடமேதெனநோக்கில்
விரவுசீவனேசேடமாமின்னதும்வேறென்றாற்றெரிகின்ற
உரவிதானவேறென்றினாற்றெரியுமீதுயர்ந்ததத்துவமாகா.

இ - ள். கரணமீரைந்தும் - பத்திந்திரியங்களும், அன்னியம் - (எனக்) கன்னியமாதலாலும், சடமெனுங்கணக்கினால்-சடமென்கின்ற படியினாலும், நானன்று - யானல்ல, உடன்முதல் - சரீரமுதலிய, இத்திரளெனக்கில-இக்கூட்டமெனக்கில்லன ஆதலால், நானலன் - யானல்ல, சேடமேதென நோக்கில் - மிஞ்சினது எதுவென்று பார்க்கில், விரவுசீவனே சேடமாம் - கலந்திருக்கின்ற சீவனே மிஞ்சினதாம், இன்னதும் - இச்சீவனும், வேறென்றாற்றெரிகின்றது - பிரத்யேகாத்மாவால் அறியப்பட்டது, உரவிதானவேறென்றினால் - திரமாகிய பிரத்யேகாத்ம (சைதன்யத்)தினால், தெரியுமீது - தெரிகின்ற இச்(சீவனும்), உயர்ந்த தத்துவமாகா - மேலான ஆத்மதத்துவமாகமாட்டாது—எ - று.

எ — து. பத்திந்திரியங்களும் எனக்கன்னியமாதலாலும் சடமென்கிறபடியினாலும் யானல்ல, சரீரமுதலிய இக்கூட்டமெனக்கில்லனவாதலால் யானல்ல, மிஞ்சினதெதுவென்று பார்க்கில் கலந்திருக்கின்ற சீவனே மிஞ்சினதாம், இச்சீவனும் பிரத்யேகாத்மாவால் அறியப்பட்டது, திரமாகிய பிரத்யேகாத்மசைதன்யத்தினால் தெரிகின்ற இச்சீவனும் மேலான ஆத்மதத்துவமாகமாட்டாது—எ-ம். ()

## ஆத்மதரிசனம் செய்தல்.

தெரிவதாகியவிதனையுமகற்றுவன்றெரிபொருளானனோ
பெரிதுசேடமாய்விகற்பமற்றமலமாம்பேரறிவியானாகு
மரியயன்சிவனிந்திரனந்தகனாதியாமிடந்தோறுந் [தம்.
சொரிகொண்முத்தினுண்ணூலெனநிற்குமாற்றோன்றுமிவ்வுயர்போ

இ - ள். தெரிவதாகியவிதனையும் - காணப்படுவதாகிய இச்சீவனையும், அகற்றுவன் - நீக்குவன், தெரிபொருளானனோ - தெரிகின்ற பொருளானவனே, பெரிதுசேடமாய் - மிகவு மிஞ்சினதாய், விகற்பமற்று - விகற்பமில்லாமல், அமலமாய் - நின்மலமாகிய, பேரறிவியானாகும் - பூரணஞானமே யெனது ஸ்வரூபமாம், அரி - திருமாலும், அயன் - பிரமாவும், சிவன்-உருத்திரனும், இந்திரன் - தேவேந்திரனும், அந்தகன் - நமனும், ஆதியாமிடந்தோறும் - இவர்கண்முதலிய இடங்கடோறும், சொரிகொண் முத்தினுள் - உருட்சியையுடைய முத்துக்களுக்குள், நூலென - சூத்திரத்தைப்போல, தோன்றுமிவ்வுயர் போதநிற்கும் - தோற்றுகின்ற இந்தமேலான ஞானமானதிருக்கும்—எ - று.

வது எ-து. காணப்படுவதாகிய இச்சீவனையும் நீக்குவன் தெரிகின்ற பொருளுணர்வனே! மிகவு மிஞ்சினதாய் விகற்பமில்லாமல் நின்மலமாகிய பூரணஞானமே யெனது ஸ்வரூபமாம். திருமாலும், பிரமாவும், உருத்திரனும், தேவேந்திரனும், நமனும், இவர்கண் முதலிய இடங்கடோறும் உருட்சியையுடைய முத்துகளுக்குள் சூத்திரத்தை ப்போலத் தோற்றுநின்ற இந்த மேலான ஞானமானதிருக்கும்-எ-ம்.

(இ-கூ-க-ம்.) தேகமுதலிய சடவஸ்துக்களை நியதிகளைந்து மிஞ்சின சித்து ரூபத்தைத் தரிசித்தா னென்பதாம். (28)

## ஆத்ம வியாபகத்தைத் தரிசித்தல்.

பகவனுகுமிவ்வாத்துமதத்துவம்பரமமாஞ்சிற்சத்தி
சகநிகழ்ச்சியாநோயின்றிவெருவுறுந்தனிவடிவுடைத்தாகி
ககுபமுற்றையும்விழுங்கியெப் பொருளினுங்கலந்துநுண்ணியதாகி
மிகும்பாவபாவங்களற்றயனுறைவீடளவுளதாகி.

இ - ள். பகவனுகும் - பகவானாகிய, இவ்வாத்துமதத்துவம் - இந்த ஆத்மதத்துவமென்னும், பரமமாம் - மேலான, சிற்சத்தி - ஞானசத்தியானது, சகநிகழ்ச்சியாநோயின்றி - உலகநடையென்னும் வியாதியில்லாமல், வெருவுறும் - பயப்படுகின்ற, தனிவடிவுடைத்தாகி - ஒப்பற்ற வுருவத்தையுடையதாகியும், ககுபமுற்றையும் விழுங்கி - திசைகளெல்லாம் வியாபித்தும், எப்பொருளினுங் கலந்தும் - எந்தவஸ்துக்களிலும் பூரணமாயும், நுண்ணியதாகி - சூட்சுமமாகியும், மிகும் பாவபாவங்களற்று - மிகுந்த பாவாபாவங்களுமில்லால், அயனுறை - பிரமதேவன் வாசஞ்செய்கின்ற, வீடளவுளதாகி-சத்தியலோக பரியந்த முண்டானதாகியும்—எ - ழு.

எ - து. பகவானாகிய இந்த ஆத்மதத்துவ மென்னும் மேலான ஞானசத்தியானது உலகநடை யென்னும் வியாதியில்லாமல் பயப்படுகின்ற ஒப்பற்ற உருவத்தை யுடையதாகியும், திசைகளெல்லாம் வியாபித்தும் எந்த வஸ்துக்களிலும் பூரணமாயும், சூட்சுமமாகியும், மிகுந்த பாவாபவங்களு மில்லாமல் பிரமதேவன் வாசஞ்செய்கின்ற சத்தியலோக பரியந்தம் உண்டானதாகியும்—எ - ம். (29)

## ஆத்மசத்தியே சகலமாகவும் விளங்குகின்றதென்று அறிதல்.

சத்தியாவுக்குமுறைவிடமாயிதுதனித்தனிச்சத்தாகி
பத்தியாகியிச்சகத்தினிற்காண்பனயாவையும்பலவாகச்

சித்நனைசந்துளவிசாலமாமல்லதுசிறிதும்வேறிலதாகுந்
தொந்தபற்றின்றிக்காண்பதற்றெழுபவந்தொடர்மயக்கமுமற்றே,

இ - ள். சத்தியாவுக்கும் - சத்திகளனைத்தினுக்கும், இது - இச்சிற்சத்தியானது, உறைவிடமாம் - வசிக்கப்பட்ட ஸ்தானமாம், தனித்தனிச்சத்தாகி - வேறுவேறுள்ளதாகி, பத்தியாய் - பந்தி பந்தியாகி, இச்சகத்தினில் - இவ்வுலகத்தில், காண்பனயாவையும் - காணப்பட்ட சகலமும், பலவாக-நாநாவிதமாக, சித்நசைந்துள - ஞானமசைகின்ற, விசாலமாமல்லது - விஸ்தாரமேயல்லாமல், சிறிதும் வேறிலதாகும் - அற்பமும் வேறில்லையாம், தொந்தபற்றின்றி - தொந்தமான வாசனையில்லாமல், காண்பதற்று - விடயங்களை விட்டு, எழுபவந்தொடர் - எழுபிறப்பிலுந் தொடராநின்ற, மயக்கமுமற்று - மயக்கமு நீங்கி—எ - று.

எ - து. சத்திகளனைத்தினுக்கும் இச் சிற்சத்தியானது வசிக்கப்பட்ட ஸ்தானமாம். வேறுவே றுள்ளதாகி பந்தி பந்தியாகி இவ்வுலகத்தில் காணப்பட்ட சகலமும் நாநாவிதமாக ஞானமசைகின்ற விஸ்தாரமே யல்லாமல் அற்பமும் வேறில்லையாம். தொந்தமான வாசனையில்லாமல், விடயங்களை விட்டு எழுபிறப்பிலுந் தொடராநின்ற மயக்கமுநீங்கி—எ - ம். (30)

## ஆத்மஸ்வரூபமாதல்.

---

சுழுத்தியிற்றிறமுற்றவன்றொழிலெனத்துகளறுசமனாகி
யழுத்தமாகியவாத்மதத்துவத்தமர்ந்தனனெனத்தீர்ந்து
விழுத்தகும்பதமெய்தினன்விவேகத்தின்மெய்மைநிச்சயத்தாலே
வழுத்தருந்தவக்கவுசிகன்விப்பிரமாபிணையடைந்தென்ன.

இ - ள். சுழுத்தியிற்றிறமுற்றவன் - சுழுத்தியவத்தையில் நிலைபெற்றவனது, தொழிலென - செயலைப்போல, துகளறுசமனாகி - குற்றமற்ற சமத்தையுடையவனாய், அழுத்தமாகிய - திடமாகிய, ஆத்மதத்துவத்து - ஆத்மதத்துவத்தில், அமர்ந்தனனென - வசித்தேனென்பவும், தீர்ந்து - (சகலமும்) விடுபட்டு, விவேகத்தின் - விவேகத்தினது, மெய்மை நிச்சயத்தால் - உண்மை நிச்சயத்தினால், வழுத்தருந்தவக்கவுசிகன் - துதிக்கத்தக்க அரிய தபசையுடைய விசுவாமித்திர முனியானவர், விப்பிரமாபிணையடைந்தென்ன - பிராமண முறைமையைப் பெற்றதுபோல, விழுத்தகும்பதம்-மேன்மையுள்ள பிரமபதத்தை, எய்தினன் - (சுகருவானவன்) அடைந்தான்—எ - று.

எ - து. சுழுத்தியவத்தையில் நிலைபெற்றவனது செயலைப் போல குற்றமற்ற சமத்தையுடையவனாய் திடமாகிய ஆத்மதத்து

வத்தில், வசித்தனென்று சகலமும் விடுபட்டு விவேகத்தினது உண்மை நிச்சயத்தினால் துதிக்கத்தக்க அரியதபசையுடைய விசுவாமித்திர முனியானவர் பிராமண முறைமையைப் பெற்றதுபோல மேன்மையுள்ள பிரமபதத்தைச் சுரகுவானவனடைந்தான். (31)

## சகலமும் ஆத்மஸ்வரூபமென்றறிந்து அரசாக்ஷி செய்தல்.

---

வரகுணங்களா மனைத்துமிற் றுயில்பவன் மனத்தொழினிகராகி,
சுரகுவென்பவ னசைவறுசிகையினாற் றுலங்குறுசுடரொத்தான்,
விரவுநல்லருளருளின்மை விருப்பொடு வெறுப்பு மச்சாரந்தொந்தம்,
பரவுநன்மதி மூடமென்றனையவும் பயில்வறநிகழ்வுற்றான்.

இ - ள். வரகுணங்களா மனைத்துமில் - மேன்மையான குணங்களொன்று மில்லாத, துயில்பவன் - சுழுத்தியடைந்தவனது, மனத்தொழினிகராகி - மனோவிருத்திக்குச் சமானமாய், சுரகுவென்பவன் - சுரகுவென்னு நாமத்தையுடைய அரசன், அசைவறு சிகையினால் - அலைவற்ற கொழுந்தினால், துலங்குறு சுடரொத்தான் - பிரகாசிக்கின்ற (சித்திர) தீபத்துக்கொப்பானான், விரவுநல்லருள் - மிகுந்த நல்லவனுக்கிரகமும், அருளின்மை - நிக்கிரகமும், விருப்பொடு - விருப்புடன், வெறுப்பு - வெறுப்பும், மச்சரம் - மச்சரமும், தொந்தம் - தொந்தமும், பரவு நன்மதிமூடம் - துதிக்கின்ற நல்லறிவு மறியாமையும், என்றனையவும் - என்கின்றயாவையும், பயில்வற - பழகாமல், நிகழ்வுற்றான் - பிரகாசித்தான்—எ - று.

எ - து. மேன்மையான குணங்களொன்று மில்லாத சுழுத்தி யடைந்தவனது மனோ விருத்திக்குச் சமானமாய் சுரகுவென்னு நாமத்தையுடைய அரசன் அலைவற்ற கொழுந்தினால் பிரகாசிக்கின்ற சித்திரதீபத்துக் கொப்பானான். மிகுந்த நல்ல அனுக்கிரகமும் நிக்கிரகமும், விருப்புடன் வெறுப்பும், மச்சரமும், தொந்தமும், துதிக்கின்ற நல்லறிவு மறியாமையும் என்கின்ற யாவையும் பழகாமல் பிரகாசித்தான்—எ - ம்.

(இ-ச-க-ம்.) விசாரமுகத்தால் ஆத்மநிஷ்டனாய்ச் சர்வம் பிரமமென்னும் அனுபவத்தினால் சுகதுக்கந்தாக்காமல் சுகவடிவாயிருந்தது அரசாக்ஷி செய்தாரென்பதாம். (32)

## இல்லறத்திருந்து ஞானம்பெற்ற சுரகுவேந்தற்கும் துறவறத்திலிருந்து ஞானம்பெற்ற பார்த்திப முனிக்கும் எவ்வளவு முயர்வு தாழ்வின்றி விளங்கிய அநுபவ சம்பாஷணையைச் சொல்லத்தொடங்கல்.



வேறு.

ஒன்றுபுணர்ந்தசுரகுப்பெயருத்தமற்கும்
பன்றுதனெனும்பெயர் பார்த்திபமாமுனிக்கு
நன்றானவன்பால்வருநன்மைநயந்துகேட்பாயு
குன்றார்புயத்தாயெனமாதவன்கூறலுற்றான்.

இ - ள். ஒன்று புணர்ந்த - அத்துவித போதமுற்ற, சுரகுப்பெயருத்தமற்கும் - சுரகுவென்னு நாமத்தையுடைய உத்தமனுக்கும், பன்றுதனெனும்பெயர் - பன்றுதனென்னு நாமத்தையுடைய, பார்த்திபமாமுனிக்கும் - இராசரிஷிக்கும், நன்றான அன்பால் - நல்ல அன்பினால், வருநன்மை - வாரா நின்ற நன்மையை, நயந்துகேட்பாய் - இன்பமாகக் கேட்பாய், குன்றார் புயத்தாயென - மலைபோலுண்டாகிய புயத்தையுடைய ஸ்ரீராமாவென்று, மாதவன் கூறலுற்றான் - வசிட்டமுனி சொல்லத் தொடங்கினார் — எ - று.

எ - து. அத்துவித போதமுற்ற சுரகுவென்னு நாமத்தையுடைய உத்தமனுக்கும் பன்றுதனென்னு நாமத்தையுடைய இராசரிஷிக்கும் நல்ல அன்பினால் வாராநின்ற நன்மையை இன்பமாகக்கேட்பாய். மலைபோலுண்டாகிய புயத்தையுடைய ஸ்ரீராமா வென்று வசிட்டமுனி சொல்லத்தொடங்கினார் — எ — ம். (33)

## பார்த்திபற்கு விரத்தியுண்டான ஏதுவை யுரைத்தல்.



பாரக்கர்குலப்பரிகப்பெயர்பாரின்வேந்தாம்
வீரக்கழலோன்சுரகுப்பெயர் வேந்தனண்ப
னீரைக்கனமாரிமறுத்தலிலியாருந்துஞ்சக்
கோரக்கனண்மண்டுதல்கண்டுகுலைந்துநொந்தான்.

இ - ள். பாரக்கர்குலம் - பாரகீகர் குலத்தில், பரிகப்பெயர் - பரிக னென்னு நாமத்தையுடைய, பாரின்வேந்தாம் - பூமிக்கரசனாகிய, வீரக் கழலோன் - வீரகண்டாமணியையுடையவன், சுரகுப்பெயர் - சுரகுவென்னு நாமத்தையுடைய, வேந்தனண்பன் - அரசனுக் கிஷ்டமானவன், ஈரைக் கனமாரி மறுத்தலில் - பத்துவருடம் மேகவருஷ மில்லாமையால், இயாருந்துஞ்ச - இயாவரும் மரணமடைய, கோரக்கனன் மண்டுதல்கண்டு - கொடிய உதராக்கினி மிகுதலைப்பார்த்து, குலைந்து நொந்தான் - நடுக்க முற்று வாடினன் — எ - று.

எ - து. ராகீகர் குலத்தில் பரிகனென்னு நாமத்தையுடைய பூமிக்கர்சனுகிய வீரகண்டாமணியை யுடையவன், சுரகுவென்னு நாமத்தையுடைய அரசனுக் கிஷ்டமானவன். பத்துவருடம் மேக வருஷ மில்லாமையால் இயாவரும் மரணமடைய கொடிய உதராக் கினி மிருதலேப்பார்த்து நடுக்கமுற்று வாடினுன்—எ - ம். (34)

## பார்த்திபற்கு ஞானமுண்டாதல்.

இன்னுதனநாடுவிட்டேகிவனத்திலெய்தி
யன்னுதாம்போய்த்தவஞ்செய்தவிழ்பன்னமுணுய்ப்
பன்னுதநாமம்படைத்துத்தவப்பான்மையாலே
நன்னுதலும்பெற்றனனற்றவமொப்பதுண்டோ.

**இ - ள். இன்னுதனநாடுவிட்டேகி - துன்பமாகின்ற தனது நாடுவிட்டுப்போய், வனத்திலெய்தி - ஆரணியத்திற்சென்று, அன்னுதாம்போய்-அன்னம் (புசிப்பதில்) ஆசைவிட்டு, தவஞ்செய்து, - தவத்தைச் செய்து, அவிழ் பன்னமுணுய் - உதிர்ந்த சருகு புசிப்பாக, பன்னுத நாமம்படைத்து-பன்னுத னென்கின்ற நாமத்தைப் பெற்று, தவப்பான்மையால் - தவத்தினது குணத் திருல், நன்னுதலும் பெற்றனன் - நலமான (ஆத்மஞானத்தைப்) பெற்றுன், நற்றவமொப்பதுண்டோ - (அவனது) நல்ல தவததுக்குச் சமானமானதுண டோ—எ - று**

எ - து. துன்பமாகின்ற தனது நாடுவிட்டுப்போய் ஆரணியத் திற்சென்று அன்னம புசிப்பதிலாசைவிட்டு தவததைச்செய்து உதிர் ந்த சருகு புசிப்பாக பன்னுதனென்கின்ற நாமத்தைப்பெற்று தவத் தினது குணத்திருல் நலமான ஆத்மஞானத்தைப் பெற்றுன். அவ னது நல்ல தவத்துக்குச் சமானமான துண்டோ—எ - ம். (35)

## அரசனுமுனியும் அநுபவத்தை யுசாவத்தொடங்கல்.



ஒருமூவுலகென்னுமடதொருமித்திருந்தான்
பொருண்மேவுகின்றசுரகுப்பெயர்பூபன்றன்பால்
வருவானெதிர்தோன்றலுமற்றவனன்போடெய்தி
யிருவோருமன்புற்றிருநதின்னனபேசலுற்றூர்.

**இ - ள். ஒரு மூவுலகென்னு மடத்து - ஒப்பற்ற மூன்றுலகமென்கின்ற மடத்தில், ஒருமித்திருந்தான் - ஒன்றுபட்டிருந்த (பனுதமுனியான)வர், பொருண்மேவுகின்ற-வாய்மையைப் பொருந்தி யிருக்கின்ற, சுரகுப்பெயர்- சுரகுவென்னு நாமதததையுடைய, பூபன்றன்பால்-அரசனிடத்தில், வருவான்-**

வருபவனாய், எதிர்தோன்றலும்-எதிரேதோற்றவும், மற்றவன்-அச்சுரகுவான வன், அன் போடெய்தி - அன்போடடைந்து, இருவோரும் - இரண்டுபேர்களும், அன்புறநிருந்து - அன்பைப்பொருந்தியிருந்து, இன்னபேசலுற்றார் - இத்தன்மையவாகிய அனுபவங்களைப் பேசத்தொடங்கினார்கள்—எ - று.

எ - து. ஒப்பற்ற மூன்றுலக மென்கின்ற மடத்தில் ஒன்றுபட்டிருந்த பன்னுதமுனியானவர் வாய்மையைப் பொருந்தி யிருக்கின்ற சுரகுவென்னு நாமத்தையுடைய அரசனிடத்தில் வருபவனாய் எதிரேதோற்றவும் அச்சுரகுவானவன் அன்போடடைந்து இரண்டுபேர்களும் அன்பைப் பொருந்தியிருந்து இத்தன்மையவாகிய அனுபவங்களைப் பேசத்தொடங்கினார்கள்—எ - ம். (36)

## முனிவர் அனுபவம்பெற்றது அறிவித்தல்.

நினையிப்பொழுதெய்தலினீங்கருமின்பமுற்று
வினையற்றதென்றசுரகுப்பெயர்வேந்தைநோக்கி
யுனையுற்றுமாண்டவ்வியனோதியஞானமொப்ப
தனையுய்க்குமெய்ம்மைப்பதஞ்சார்ந்தனன்யானுமென்னு.

இ - ள். நினை -உம்மை, இப்பொழுது-இத்தினத்தில, எய்தலின்-(யான்) அடைதலினால், நீங்கருமின்பமுற்று - நீங்கற்கரிய சுகம்பெற்று, வினையற்றதென்ற - வினை நீங்கினதென்று சொல்லிய, சுரகுப்பெயர் வேந்தை - சுரகுவென்னு நாமத்தையுடைய இராஜாவை, நோக்கி - (பன்னுதமுனியானவர்) பார்த்து, உனையுற்று - உன்னிடத்தில் வந்து, மாண்டவ்வியன் - மாண்டவ்விய முனியானவர், ஓதியஞானமொப்ப - போதித்த ஞானத்துக்குச் சமானமாக, தனையுய்க்கும் - தன்னை வாழ்விக்கும், மெய்ம்மைப் பதம்-உண்மையான (ஞான) பதத்தை, யானும் - நானும், சார்ந்தனனென்னு - அடைந்தேனென்றுசொல்ல—எ - று.

எ - து. உமமை இததினத்தில் யானடைதலினால் நீங்கற்கரிய சுகம்பெற்று வினை நீங்கினதென்று சொல்லிய சுரகுவென்னு நாமத்தையுடைய இராஜாவை பன்னுதமுனியானவர் பார்த்து உன்னிடத்தில் வநது மாண்டவ்விய முனியானவர் போதித்த ஞானத்துக்குச் சமானமாக தன்னை வாழ்விக்கும் உண்மையான ஞானபதத்தை நானும் அடைந்தேனென்று சொல்ல—எ - ம். (37)

## அரசனை முனிவினவுதல்.

வேறு.

மிகத்தெளிந்துகெம்பீரமாய்ச்சமமதாம்விழியா
லிகத்துறுநதொழின்மன்னவவியறவுகொல்லோ

பகுத்தகாலத்தையறிவுறுநினதுபாவனைதான்
தொகுத்தவாதியும்வியாதியுந்தொடர்கிலேகொல்லோ.

இ-ள். மிகத்தெளிந்து - மிகவுந் தெளிவுற்று, கெம்பீரமாய் - கெம்பீரமாக, சமமதாம் விழியால் - திருஷ்டியினுல், இகத்துறுந்தொழில்-இவ்வுலகத்திலுள்ள அரசகாரியங்களை, மன்னவ - அரசனே, இயற்றுதி கொல்லோ - செய்கின்றாயோ, பகுத்தகாலத்தை - பிரிவுற்ற காலத்தை, அறிவுறும் - அறியாநின்ற, நினதுதேகந்தான் - உனது சரீரமானது, தொகுத்தவாதியும்-கூட்டமாகிய மனோவியாதியும், வியாதியும்-வியாதியும், தொடர்கிலேகொல்லோ- தொடாவில்லையோ—எ - று.

எ - து. மிகவுந்தெளிவுற்று கெம்பீரமாக சமதிருஷ்டியினுல் இவ்வுலகத்திலுள்ள அரசகாரியங்களை அரசனே செய்கின்றாயோ? பிரிவுற்ற காலத்தை அறியா நின்ற உனது சரீரமானது கூட்டமாகிய மனோவியாதியும் தொடாவில்லையோ—எ - ம். (38)

இதுவுமது.

அடையும்போதினிதாகியபோகத்திலழுந்தா
திடைநிலாய்கொலோசங்கற்பமற்றிளைப்பாறித்
தடையில்சாந்தமாய்முத்தியாய்ச்சலனமொன்றில்லா
நடைபயின்றுயர்சமாதியைநண்ணிளைகொல்லோ.

இ-ள். அடையும்போது - அடைகின்ற காலத்தில், இனிதாகிய-இன்பமாகிய, போகத்திலழுந்ாது - செல்வத்திலழுந்தாமல், இடைநிலாய் கொலோ - நடுவாக நிற்கின்றாயோ, சங்கற்பமற்று-சங்கற்பம்விட்டு, இளைப்பாறி-விஸ்ராந்தியடைந்து, தடையில் சாந்தமாய் - உபசாந்தமாகியும், முத்தியாய்-கைவல்யமாகியும், சலனமொன்றில்லா - சஞ்சலமொன்றுமில்லாத, நடைபயின்று - நடையைப்பழகி, உயர் - மேலானதாகியும் இருக்கின்ற, சமாதி நண்ணிலைகொல்லோ - சமாதியைப் பொருந்தினையோ—எ-று.

எ - து. அடைகின்ற காலத்தில் இன்பமாகிய செல்வத்திலழுந்தாமல் நடுவாக நிற்கின்றாயோ? சங்கற்பம்விட்டு விஸ்ராந்தி யடைந்து தடையில்லாத உபசாந்தமாகியும் கைவல்யமாகியும் சஞ்சலமொன்றுமில்லாத நடையைப்பழகி மேலானதாகியு மிருக்கின்ற சமாதியைப் பொருந்தினையோ—எ - ம்.

(இ-எ-க-ம்.) பார்த்திபமுனி தனதிஷ்டரான சாருஜகச சமாதியினின்றும், அரசாக்ஷி செய்கின்ற அனுபவத்தை நான்குவிதமாகப் பிரித்துக் கேட்டனரென்பதாம். (39)

## ஆநந்தாதீதமே துரியாதீதமெனல்.



அந்தவனு நந்தமா நந்தமென்னு மறிவினதீ தந்தன்னை யடைந்
துளோனைத், தொந்தமிலர் யோகியெனச் சொல்லலாகுந் துரியாதீ
தந்தனையுந் துன்னினேனும், பந்தமுறு பவம்போய்த் தாமதத்தால்வ
ந்த பலவபிமா னங்கள்போய்ப் பரமவின்ப, நந்தலிற்றன் மயமாஞ்
சற் பாவந்தன்னி னன்னீரி லுப்புப்போ லன்றாயொன்றும்.

**இ-ள். அந்தவனுநந்தம்-அந்தவாநந்தாதீதமாகிய, ஆநந்தமென்னும்-மகாநந்த மென்கின்ற, அறிவினதீதந்தன்னை - ஞானதீதத்தை, அடைந்துளோனை - பெற்றிருப்பவனை, தொந்தமிலா - இரண்டில்லாத, யோகியெனச் சொல்லலாம் - யோகியென்று சொல்லலாகும், துரியாதீதந்தனையும்-துரியாதீதத்தையும், துன்னினேனும் - அடைந்தவனாகும், பந்தமுறுபவம்போய்-கட்டுப்படுகின்ற சநநமானது நீங்கி, தாமதத்தால்வந்த - தாமசகுணத்தால் வந்த, பலவபிமானங்கள்போய் - நாநாவிதமான அபிமானங்களுநீங்கி, பரமவின்பம் – பரமசுகமானது, நந்தலிற்றன் மயமாம் - கெடுதலில்லாத தனது ஸ்வரூபமாகிய, சற்பாவந்தன்னில் - சத்தினிடத்தில், நன்னீரிலுப்புப்போல்-நல்லசலத்தில் உப்பைக்கலந்ததுபோல, நன்றாயொன்றும் - நன்றாகவொன்றுபடும்—எ-று.**

எ-து. அந்த ஆநந்தாதீதமாகிய மகாநந்த மென்கின்ற ஞானதீதத்தைப் பெற்றிருப்பவனை இரண்டில்லாத யோகியென்று சொல்லலாகும். துரியாதீதத்தையும் அடைந்தவனாகும். கட்டுப்படுகின்ற சநநமானதுநீங்கி, தாமசகுணத்தினால் அந்த நாநாவிதமான அபிமானங்கணீங்கி பரமசுகமானது கெடுதலில்லாத தனது ஸ்வரூபமாகிய சத்தினிடத்தில் நல்லசத்தில் உப்பைக் கலந்ததுபோல நன்றாகவொன்றுபடும்—எ-ம். (16)

## வேதங்கள் மத்தியகதத்திலேயே பிரமெனச் சொல்லுமெனல்.



சடமசட மெனுநோக்க மிரண்டினூடே தனியாகி நின்றபரத
த்துவத்தை, யிடவியபோ தாரண்ய முதலாம்வேத மிரமனை பலகா
லுமியம்புமன்றே, படருமுகாண் பனகாட்சி மேவும்போதிற் பரம்
பொருளின் பற்றுகிப்பயின்றவின்பச், சிடவனுபூதியின் வடிவாமாத
லாலே நிகழ்பிரம சாமெனச் செப்புந்தானே.

**இ-ள். சடமசட மெனும் - சடாசடமென்கின்ற, நோக்கமிரண்டினூடு - இரண்டு பார்வையின் மத்தியில், தனியாகிநின்ற - தனிமையாயிருந்த**

பாதத்துவத்தை - பாதத்துவமான ஸ்வரூபத்தை, இடையியபோதாரணிய முத லாம்-மார்க்கமாகிய பிரகதாரண்ய உபநிடதமுதலாகிய, வேதம் - சுருதியானது, இராமனே-ஸ்ரீராமா, பலகாலுமியம்பும் - எப்போதுஞ் சொல்லும், படருறுகாண்பன-படர்ந்திருக்கின்ற விடயங்களும், காட்சி - ஞானமும், மேவும்போதில் - பொருந்துங் காலத்தில், பரம்பொருளின்பற்றுகி - பாமார்த்தத்தில் பற்றுதலாய், பயின்றவின்பம் - சொல்லிய பரசுகமானது, இடவனுபூதியின்வடிவாம் - இடமாகிய அனுபூதியினது ஸ்வரூபமாகும், ஆதலால்-ஆதலினால், திகழ்பிரமசாரமென - (அதுவே) பிரகாசிக்கின்ற பிரமாசமென்று, செப்பும் - சொல்லும்—எ - று.

எ - து. சடாசட மென்கின்ற இரண்டு பார்வையின் மத்தியில் தனிமையாயிருந்த பாதத்துவமான ஸ்வரூபத்தை மார்க்கமாகிய பிரகதாரண்ய உபநிடத முதலாகிய சுருதியானது ஸ்ரீராமா! எப்போதுஞ்சொல்லும் படர்ந்திருக்கின்ற விடயங்களும் ஞானமும் பொருந்துங்காலத்தில் பரமார்த்தத்திற் பற்றுதலாய்ச் சொல்லிய பரசுகமானது இடமாகிய அனுபூதியினது ஸ்வரூபமாகும். ஆதலினால், அதுவே பிரகாசிக்கின்ற பிரமாசமென்று சொல்லும்—எ - ம். (17)

## நடுநிலையே நனவில் சுழுத்தியா மெனல்.

---

தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும்போதிற் சேர்ந்தசுகவறிவு மிகச் சிறந்ததாகுந் தெரிபொருளால் வளைப்புண்டாற் பந்தமாகுந் தெரிபொருளை விட்டகன்றாற் றிடங்கொள்வீடாந், தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும்போதிற் சேர்ந்தவனுபூதி யிடர்தீர்ந்தாகுந், தெளிவுறவாங் கதுபற்றி நிற்பாய் நீநின் றிரநிலையாஞ் சுழுத்திதனைச் சேருவாயே.

இ - ள். தெரிபொருளும் - விடயங்களும், தரிசனமும் - காக்ஷியும், சேரும்போதில்-சேருகின்ற காலத்தில், சேர்ந்தசுகவறிவு-சேர்ந்த ஆநந்தபோதமானது, மிகச்சிறந்ததாகும் - மிகவுஞ்சிறப்பானதாம், தெரிபொருளால் - விடயங்களால், வளைப்புண்டால் - கட்டுப்பட்டால், பந்தமாகும்-பந்தனமாம், தெரிபொருளை விட்டகன்றால் - விடயத்தைவிட்டு நீங்கினால், இடங்கொள் வீடாம் - இடம்பொருந்திய மோக்ஷமாம், தெரிபொருளும்-விடயமும், தரிசனமும் - காக்ஷியும், சேரும்போதில் - சேருகின்ற காலத்தில், சேர்ந்தவனுபூதி-சேர்ந்த அனுபூதியானது, இடர்தீர்ந்ததாகும் - துன்பநீங்கினதாம், தெளிவுறவாங்கு அதுபற்றிநிற்பாய்-தெளிவாக அவ்விடத்தில் நீயதைப்பிடித்திருப்பாய், நின்றிரநிலையாஞ் சுழுத்திதனை - உனது நிரநிலையாகிய (நனவில்) சுழுத்தியை, சேருவாய் - அடைவாய்—எ - று.

எ - து. விடயங்களும் காக்ஷியும் சேருகின்ற காலத்தில் சேர்ந்த ஆநந்தபோதமானது மிகவுஞ்சிறப்பானதாம். விடயங்களால் கட்டுப் பட்டால் பந்தனமாம் விடயத்தைவிட்டு நீங்கினால் திடம்பொருந்திய மோக்ஷமாம். விடயமும் காக்ஷியும் சேருகின்ற காலத்தில் சேர்ந்த அநுபூதியானது துன்ப நீங்கினதாம். தெளிவாக அவ்விடத்தினிய தைப் பிடித்திருப்பாய் உனது திரநிலையாகிய நனவிற் சுழுத்தியை அடைவாய்—எ - ம். (18)

## நனவில்சுழுத்தியே துரியவியாபகமாய் விளங்குமெனல்.

அதுதுரிய நிலையடையு மடைந்தபோதி லான்மாத்தான் றூல மல வணுவுமல்ல, திதமுறுமுன் னிலையல்லப் படர்க்கை யல்லச்சித்த சித்துண் டில்லையெனுந் திறங்களல்ல, வுதிதமுறு நானல்லப் பிறனு மல்ல வொருவனல வநேகனல வுலகமன்றே, யிதுவெனக்காண் பனவாகிச் சித்தமாதி யிருமூன்றிந் திரியத்துக் கிடமாய் நிற்கும்.

இ - ள். அதுதுரியநிலையடையும் - அச்சுழுத்தியே துரியஸ்தானத்தை யடையும், அடைந்தபோதில் - அடைந்தகாலத்தில், ஆன்மாத்தான் - ஆத்மா வானது, தூலமல - மகத்துமன்று, அணுவுமல்ல - சூக்ஷமமுமன்று, திதமுறு முன்னிலையல்ல - திரமாகிய பிரத்யக்ஷமுமன்று, படர்க்கையல்ல - அப்பிரத் யக்ஷமுமன்று, சித்து - சேதனமும், அசித்து - அசேதனமும், உண்டு - சத்தும், இல்லை - அசத்தும், எனுந்திறங்களல்ல - என்கின்ற குணங்களுமல்ல, உதித முறுநானல்ல - தோற்றுகின்ற நானுமன்று, பிறனுமல்ல - இதரனுமன்று, ஒரு வனல - ஏகனுமன்று, அநேகனல - அநேகனுமன்று, உலகமன்று - சகமன்று, இதுவெனக்காண்பனவாகி - இதுவென்றெதிரே காணப்பட்டவைகளாய், சித் தமாதியிருமூன்றிந்திரியத்துக்கு - மனமுதலிய ஆறிந்திரியங்களுக்கும், இட மாய்நிற்கும் - ஸ்தானமாயிருக்கும்—எ - று

எ - து. அச்சுழுத்தியே துரிய ஸ்தானத்தை யடையும், அடை ந்த காலத்தில் ஆத்மாவானது மகத்துமன்று, சூக்ஷமுமன்று, திர மாகிய பிரத்யக்ஷமுமன்று, அப்பிரத்யக்ஷமுமன்று, சேதனமும், அசேதனமும், சத்தும், அசத்தும் என்கின்ற குணங்களுமல்ல, தோ ற்றுகின்ற நானுமன்று, இதரனுமன்று, ஏகனுமன்று, அநேகனுமன்று, சகமன்று, இதுவென் றெதிரே காணப்பட்டவைகளாய் மன முதலிய ஆறிந்திரியங்களுக்கும் ஸ்தானமாயிருக்கும்—எ - ம்,

(இ-எ-க-ம்) அனுபவத்தின் இலக்கணத்தையும் அதையடையுங் கிரமத்தையு மறிவித்ததாம். (19)

## மனதின் சங்கோச விகாச பலனை யுரைத்தல்.

ஆங்கதுவே யதீதபத மாதலாலே யதுகிஞ்சி லன்றெங்குமது வேயாகும், பாங்குறுவீ டென்றும்ப ருலகிலில்லைப் பாதலத்திற் பூதலத்திற் பார்க்கிலில்லை வீங்கியவா சைகளெல்லாமிறந்த காலை விரிந்தமனமிறப்பதுவே வீடென்றோது, மோங்கியவீ டெனக்குளதென் றுள்ளேயெண்ண முண்டாகின் மீண்டுமன முற்பவிக்கும்.

இ - ள். அதுவேயதீதபதமாதலால் - அதுவேயதீத பதமாதலினால், அது கிஞ்சிலன்று - அது அற்பமன்று, எங்குமதுவேயாகும் - எவ்விடத்தும் அதுவேயாகும், பாங்குறுவீடென்று - உரிமையாகிய மோக்ஷமென்று சொல்லப்பட்டது, உம்பருலகிலில்லை - தேவலோகத்திலுமில்லை, பாதலத்தில் - பாதாளத்திலும், பூதலத்தில் - பூமியிலும், பார்க்கிலில்லை - பார்க்குமிடத்தில்லை, வீங்கிய வாசைகளெல்லாம் - பருத்தவிச்சைகளனைத்தும், இறந்தகாலை - மரித்தகாலத்தில், விரிந்தமனமிறப்பதுவே - பரந்தமன நசிப்பதே, வீடென்றோதும் - மோக்ஷமென்று சொல்லப்படும், ஓங்கியவீடு - உயர்வாகிய மோக்ஷமானது, எனக்குளதென்று - எனக்குள்ளதென்று, உள்ளேயெண்ணமுண்டாகின் - உள்ளே நினைப்புதயமாயின், மீண்டுமனமுற்பவிக்கும் - திரும்பவுமனதுண்டாகும் — எ - று.

எ - து. அதுவே அதீதபதமாதலினால் அதுவற்பமன்று எவ்விடத்தும் அதுவேயாகும், உரிமையாகிய மோக்ஷமென்று சொல்லப்பட்டது தேவலோகத்திலுமில்லை, பாதாளத்திலும் பூமியிலும் பார்க்குமிடத்தில்லை, பருத்தவிச்சைகளனைத்தும் மரித்தகாலத்தில் பரந்த மன நசிப்பதே மோக்ஷமென்று சொல்லப்படும். உயர்வாகிய மோக்ஷமானது எனக்குள்ளதென்று உள்ளே நினைப்புதயமாயின் திரும்பவு மனதுண்டாகும் — எ - ம். (20)

## மனதைக் கெடுப்பதற்குச் சாந்திவேண்டு மெனல்.

நினைப்புமிகி லிவனுக்குப் பிறப்பிறப்பு நீங்காது வன்பந்த நிலையதாகு, மனைத்தினுக்கு மதீதமா யுருவமெல்லா மாகியகன் றூத்துமதத் துவமேநிற்கில், வினைத்தொடராம் பந்தமெது முத்தியேது வேறாச் சிந்தையைக்கெடுப்பாய் மேலதாகத், தனைத்தெளிந்து நிறைந்தமல நெஞ்சாய்நல்ல சாந்தியையுற்றோர்விரும்பார் சற்றுமொன்றும்.

இ - ள். நினைப்புமிகில் (மனதின்) மனமிகுந்தால், இவனுக்கு (இச்சித்தனையுள்ள)வனுக்கு, பிறப்பிறப்புநீங்காது - சனனமரணம் போகாது, வன்பந்தநிலையதாகும் - வலியபந்தநிலையாயிருக்கும், அனைத்தினுக்கு மதீதமாய் - சக

லத்துக்கும் அதீதமாகி, உருவமெலாமாகி - வடிவங்களியாவுமாகி, அகன்ற - வியாபகமாகி, ஆத்துமதத்துவமே நிற்கில் - ஆத்மதத்துவமாக நிற்குமானால், வினைத்தொடராம் - தீவினைத்தொடர்பாகிய, பந்தமெது-பந்தமென்பதேது, முத்தியேது - (நல்வினைத்தொடர்பாகிய) மோக்ஷமென்பதேது, வேரறச்சிந்தையைக்கெடுப்பாய் - மூலத்தோடு மனனத்தைக் கெடுப்பாய், மேலதாகத்தனைத்தெளிந்து - மேன்மையாகத் தன்னைத்தெரிந்து, நிறைந்து - பூரணமாய், அமலநெஞ்சாய் - நின்மலமனதாய், நல்லசாந்தியையுற்றோர் - நன்மையான உபசாந்தத்தைப் பொருந்தினவர்கள், ஒன்றும் - ஒன்றையும், சற்றும்விரும்பார் - அற்பமுமிச்சியார்கள்—எ - ற.

எ - து. மனதின் மனனமிருந்தால் இச்சிந்தனையுள்ளவனுக்கு சனனமரணம் போகாது. வலிய பந்தநிலையாயிருக்கும் சகலத்துக்கும் அதீதமாகி வடிவங்களியாவுமாகி வியாபகமாகி ஆத்மதத்துவமாக நிற்குமானால் தீவினைத்தொடர்பாகிய பந்தமென்பதேது? நல்வினைத்தொடர்பாகிய மோக்ஷமென்பதேது? மூலத்தோடு மனனத்தைக் கெடுப்பாய். மேன்மையாகத் தன்னைத்தெரிந்து பூரணமாய் நின்மல மனதாய் நன்மையான உபசாந்தத்தைப் பொருந்தினவர்கள் ஒன்றையும் அற்பமுமிச்சியார்கள்—எ - ம். (21)

## சாந்தியுண்டாவதற்கு நிராசைவேண்டுமெனல்.

வெந்தோடு மாபத்தாங் கருவேற்காட்டை வெட்டுமழுப்பரமசுக
மேவுந்தானந், சந்தோடஞ், சாந்தியெனு மரம்பூங்கொத்துச் சாற்று
றுயிர் நிராசையுறிற் றளர்வுறிரு, மந்தோபார் குணப்படியா முனையா
மேருவாசைகுரு விக்கடாமவனியொன்றும், வந்தோர்முன் றுரும்பாகு
நிராசைபூண்ட மாருதவலங்கார வடிவுளோர்க்கே.

இ - ள். வெந்தோடும் - எரிந்துபோகாநின்ற, ஆபத்தாங்கருவேற் காட்டை - ஆபத்தென்னுங் கருவேலவனத்தை, வெட்டுமழு - வெட்டுகின்ற கோடாலியாகவும், பரமசுகம்-பிரமசுகத்தை, மேவுந்தானம்-பொருந்தாநின்றவிடமாகவும், சந்தோடஞ்சாந்தியெனுமரம் - சந்தோடஞ் சாந்தியென்கின்ற தருவுக்கு, பூங்கொத்து - புட்பக்கொத்தாகவுமிருக்கின்ற, சாற்றுறுயிர்நிராசையுறில் - சொல்லப்படுகின்ற இந்நிராசையாகின், தளர்வுறிரும் - தளர்ச்சிநீங்கும், நிராசைபூண்ட - நிராசையை (ஆபரண)மாகத்தரித்த, மாருத அலங்காரவடிவுளோர்க்கு - நீங்காதவலங்கார ஸ்வரூபத்தை யுடையவர்களுக்கு, அந்தோ - அதிசயம், பார்குணப்படியாம்-பூமியானது (பசுவின்) குளப்படியாகும், பெருமுனையாம் - மகாமேருவக்கிரமாகும், ஆசைகுருவிக்கடாம் - திக்குகள் பற

வைக்கூண்டாகும், அவனிமூன்றும் - மூன்றுலகமும், வந்தோர்புன்றரும்பாகும்-வந்தோரற்பமான திரணமாம்—எ - று.

எ - து. எரிந்துபோகாநின்ற ஆபத்தென்னும் கருவேல வனத்தைவெட்டுகின்ற கோடாலியாகவும். பிரமசுகத்தைப் பொருந்தாநின்ற விடமாகவும், சந்தோடஞ் சாந்தியென்கின்ற தருவுக்குப் புட்பக்கொத்தாகவும் இருக்கின்ற சொல்லப்படுகிற இந்நிராசைவரின் தளர்ச்சி நீங்கும். நிராசையை யாபரணமாகத்தரித்த நீங்காத அலங்காரஸ்வரூபத்தை யுடையவர்களுக்கு அதிசயம் பூமியானது பசுவின்குளப்படியாகும். மகாமேரு அங்குரமாகும். திக்குகள் பறவைக் கூண்டாகும். மூன்றுலகமும் வந்தோரற்பமான திரணமாம்—எ – ம்.

**(இ-௲-க-ம்) நிராசையால் சாந்தியுண்டாய் அதனால் ஆத்மதரிசனமாய் அதின்மனங்கரையின் யாவும் அற்பமாமென்பதாம்.** (22)

## ஞானவான்கள் பரஞானத்திலிருக்கும் உறுதியைக்கூறல்.

காயத்தில் வேருகத் தன்னைக்கண்டோன் காயமீ ரினுமறியான் கன்னற்கட்டி, தீயிற்கா யினுமரிந்த போதுமின்பந் தீராதவாறுபோற் றெளிந்தஞானி, மாயத்தின் மோகத்தாற் பேதமாகான் மணந்தபர புருடன்மேன் மனஞ்சேர்மங்கை, நேயத்தான்மனைத்தொழில்கள் செய்யுமாப்போ னிகழ்தொழிற்செய் யினும்பரத்தினிலைமைநீங்கான்.

**இ - ள். காயத்தில்வேருக - சரீரத்துக்கு விலட்சணமாக, தன்னைக்கண்டோன் - ஆத்மஸ்வரூபத்தை தரிசித்தவன், காயமீரினுமறியான் - சரீரத்தை யரிந்தபோதும் அறியமாட்டான், கன்னற்கட்டி - கரும்பின்கட்டியானது, தீயிற்காயினும் - அக்கினியிற் காய்ந்தகாலத்திலும், அரிந்தபோதும் - அரிந்த காலத்திலும், இன்பந்தீராதவாறுபோல் - இரசங்கெடாத விதத்தைப்போல, தெளிந்தஞானி - தெளிவுற்ற ஞானவான், மாயத்தின் மோகத்தால் - பொய்யாகிய மயக்கத்தினால், பேதமாகான்-வேற்றுமையாகான், மணந்தபரபுருடன்மேல் - கூடிய பரபுருடனிடத்தில், மனஞ்சேர்மங்கை-மனதையுடைய பெண்ணானவள், நேயத்தால், மனஞ்சேர் மங்கை-மனதையுடைய பெண்ணானவள் பாயத்தால் - அன்பினால், மனைத்தொழில்கள் - கிரகக்கிருத்தியங்களை, செய்யுமாப்போல் - பண்ணுவதுபோல, நிகழ்தொழில்செய்யினும்-விளங்காநின்ற செயலைச்செய்தாலும், பரத்தினிலைமைநீங்கான்-பிரமத்தினது நிலைமையைப் பிரியான்—எ - று.**

எ - து. சரீரத்துக்கு விலட்சணமாக ஆத்மஸ்வரூபத்தைத் தரிசித்தவன் சரீரத்தை யறிந்தபோதும் அறியமாட்டான். கரும்பின் கட்டியானது அக்கினியிற்காய்ந்த காலத்திலும் அரிந்தகாலத்

திலும் இரசங்கெடாத விதத்தைப்போல தெளிவுற்ற ஞானவான் பொய்யாகிய மயக்கத்தினால் வேற்றுமையாகான். கூடிய பரபுருடனிடத்தில் மனதையுடைய பெண்ணானவள் அன்பினால் கிரகக்கிருத்தியுங்களைப் பண்ணுவதுபோல விளங்காநின்ற செயலைச் செய்தாலும் பிரமத்தினது நிலைமையைப் பிரியான்—எ - ம். (23)

## பற்றறுதியே விதேகமுத்தித் தன்மையா மெனல்.

பண்டத்திற் பற்றின்மை யாலேசித்தம் பயில்சாந்தி முத்திதரும்பகர்ந்தமுத்தி, பிண்டத்தோ டிருந்தாலு மிராவிட்டாலும் பேறாகும் பற்றறுத்த பெரியோர்க்கென்பார், மண்டுற்றநேய மறவாழ்வோரின்பம் வருஞ்சீவன் முத்தராம் வளர்நேயத்தாற்,றொண்டுற்று வாழுமவர் பந்தமுற்றோர் சொன்னமூன்றுமவனே தூயமுத்தன்.

இ - ள் பண்டத்தில் - விடயங்களில், பற்றின்மையால் - இச்சையில்லாததினால், சித்தம் - மனதில், பயில்சாந்தி - பொருந்திய சாந்தியே, முத்திதரும் - மோக்ஷத்தைக் கொடுக்கும், பகர்ந்தமுத்தி-சொல்லிய மோக்ஷமானது, பிண்டத்தோடிருந்தாலும் - சரீரத்துடன் (கூடி) யிருந்தாலும், இராவிட்டாலும் - (சரீரத்தோடு) இல்லாமற்போனாலும், பற்றறுத்த - ஆசையைக் கெடுத்த, பெரியோர்க்கு - மகான்களுக்கு, பேறாகுமென்பர் - பிரயோசனப்படுமென்று சொல்லுவார்கள், மண்டுற்றநேயமற-விஸ்தாரமான விடயவிச்சை நீங்கி, வாழ்வோர் - சுகிப்பவர்கள், இன்பம்வரும் - ஆநந்தமுண்டான, சீவன்முத்தராம் - சீவன்முத்தர்களாம், வளர்நேயத்தால் - வளராநின்ற (விடய) இச்சைகளினால், தொண்டுற்றுவாழுமவர்-அடிமைபட்டு சுகிப்பவர்கள், பந்தமுற்றோர்-பந்தமடைந்தவர்களாம், சொன்னமூன்றுமவனே-சொல்லிய (இருவர்க்குமேலான) மூன்றுவதானவனே, தூயமுத்தன் - விதேகமுத்தனும்—எ - று.

ப - ரை. விடயங்களில் இச்சையில்லாததினால் மனதில் பொருந்திய சாந்தியே மோக்ஷத்தைக் கொடுக்கும். சொல்லிய மோக்ஷமானது சரீரத்துடன் கூடியிருந்தாலும் சரீரத்தோடில்லாமற்போனாலும் ஆசையைக்கெடுத்த மகான்களுக்கு பிரயோசனப்படுமென்று சொல்லுவார்கள். விஸ்தாரமான விடயவிச்சை நீங்கச்சுகிப்பவர்கள் ஆநந்தமுண்டான சீவன் முத்தர்களாம். வளராநின்ற விடயவிச்சைகளினால் அடிமைப்பட்டு சுகிப்பவர்கள் பந்தமடைந்தவர்களாம். சொல்லிய இருவர்க்குமேலான மூன்றுவதானவனே விதேகமுத்தனும்—எ - ம்.

(இ-உ-க-ம்) ஞானிகளுடையும் விதேகமுத்திபரியந்தங் கிரமமாகச் சொன்னதென்பதாம். (24)

## சீவன் முத்தரது சகசநடையைத் தெரிவித்தல்.



வருதொழிலின் விருப்புறான் வத்தமான வழிநிற்பன் சென்றவற்றை மனத்தினெண்ணான், கருமமுழு வதுமியற்றுந் தொடர்பந்தத்திற் கலந்தவர்பான் மனம்பற்றான் கவலைகூரான், மருவியவோர் பத்தர்பாற் பத்தனாகும் வஞ்சகர்பால் வஞ்சகனும் வாலர்தம்பாற், பருவமுறாவாலனும் விருத்தரானோர் பால்விருத்த னாந்தீரர் பாலுமாங்கே.

இ - ள். வருதொழிலின் - வரும் (காலத்திலுள்ள) செய்கைகளில், விருப்புறான்-இச்சியான், வத்தமானவழிநிற்பன் - நிகழ்காலத்தில் (வருகின்றதொழிலின்) மார்க்கத்திலிருப்பான், சென்றவற்றை-செல் (காலத்திலுள்ள) தொழில்களை, மனத்தினெண்ணான்-மனதினினையான், கருமமுழுவதுமியற்றும்-தொழில்களனைத்தையுஞ்செய்வான், தொடர்பந்தத்தில்-தொடராநின்றபந்தத்தில், கலந்தவர்பால்-கலந்தவர்களிடத்தில், மனம்பற்றான் - மனதுவையான், கவலைகூரான்-துன்பத்தின்மிகான், மருவியவோர்பத்தர்பால்-அடைந்த ஒப்பற்ற பத்திமான்களிடத்தில், பத்தனாகும்-பத்திமானவன், வஞ்சகர்பால்-வஞ்சகரிடத்தில், வஞ்சகனும்-வஞ்சகனாவன், வாலர்தம்பால்-குழந்தைகளிடத்தில், பருவமுறாவாலனும்-பருவமில்லாத குழந்தையானவன், விருத்தரானோர்பால்-விருத்தரானவர்களிடத்தில், விருத்தனும் - விருத்தனானவன், தீரர்பாலும் - தீரர்களிடத்திலும், ஆங்கே-அப்படியே தீரனாகவிருப்பான்—எ - று.

எ - து. வருங்காலத்திலுள்ள செய்கைகளில் இச்சியான், நிகழ்காலத்தில் வருகின்ற தொழிலின் மார்க்கத்திலிருப்பான், செல்காலத்திலுள்[illegible] தொழில்களை மனதினினையான், தொழில்களனைத்தையுஞ் செய்வான், தொடராநின்ற பந்தத்தில் கலந்தவர்களிடத்திலும் மனதுவையான். துன்பத்தின் மிகான், அடைந்த ஒப்பற்ற பத்திமான்களிடத்தில் பத்திமானவன், வஞ்சகரிடத்தில் வஞ்சகனாவன், குழந்தைகளிடத்தில் பருவமில்லாத குழந்தையாவன், விருத்தரானவர்களிடத்தில் விருத்தனாவன், தீரர்களிடத்திலும் அப்படியே தீரனாகவிருப்பான்—எ—ம். (25)

விடலைபால் விடலையாந் துயருற்றோர்பால் வெந்துயர முறாநிலைமைவிடாதபுந்தி, திடமுளதா மானந்த நிறைந்து தோன்றுஞ் செவ்வியனும் புண்ணியதஞ் சிறப்பேசெய்யு, மடமையிலா வறிஞனுந்தெளிந்

தோனுஞ் மதுரமுள னுந்தீனமனமில்லோனுஞ், சுடர்குளிரின் மதிக ருகி லெரிகீழ்நோக்கிற் றுளங்கிவிய வான்சீவன் முத்தன்றூயோன்.

இ - ள். விடலைபால்விடலையாம்-எவ்வனமுள்ளவரிடத்தில் எவ்வனமுள்ளவனுகவும், துயருற்ரோர்பால்-துன்பம்பொருந்தினவர்களிடத்தில், வெந்துயரமுறும்-வெப்பம்பொருந்திய துன்பமடைந்தவனுகவும், நிலைமைவிடாதபுந்தி - மெய்யைவிடாத அறிவையுடைய, திடமுனதாமாநந்தம்-உண்மையுள்ள ஆநந்தமானது, நிறைந்துதோன்றும்-பூரணமாகத் தோற்றுகின்ற, செவ்வியனும் - செம்மையுள்ளவனுகவும், புண்ணியதஞ் சிறப்பேசெய்யும் - புண்ணியமான தனது சிறப்பைச் செய்பவனுகவும், மடமையிலா-அஞ்ஞானமில்லாத, அறிஞனும்-ஞானமுடையவனுகவும், தெளிந்தோனும்-தெளிந்தவனுகவும், மதுரமுளனும்-இரசமுடையவனுகவும், தீனமனமில்லோனும்-இளைத்தமனமில்லாதவனுகவும், தூயோன்-பரிசுத்தனுகவுமிருக்கின்ற, சீவன்முத்தன்-சீவன் முத்தனானவன், சுடர்குளிரில்-சூரியன் குளிர்ந்தாலும், மதிகருகில் - சந்திரன் கறுத்தாலும், எரிகீழ்நோக்கில் - அக்கினியதோமுகமாக நோக்கினுலும், துளங்கி வியவான்-அச்சமுற்றதிசயப்பட்டான்—எ-று.

எ - ரு. எவ்வனமுள்ளவரிடத்தில் எவ்வன முள்ளவனுகவும், துன்பம்பொருந்தினவர்களிடத்தில் வெப்பம் பொருந்திய துன்பமடைந்தவனுகவும், மெய்யைவிடாத அறிவையுடைய உண்மையுள்ள ஆநந்தமானது பூரணமாகத் தோற்றுகின்ற செம்மையுள்ளவனுகவும், புண்ணியமான தனது சிறப்பைச் செய்பவனுகவும், அஞ்ஞானமில்லாத ஞானமுடையவனுகவும், தெளிந்தவனுகவும், இரசமுடையவனுகவும், இளைத்தமனமில்லாதவனுகவும், பரிசுத்தனுகவுமிருக்கின்ற சீவன்முத்தனானவன் சூரியன் குளிர்ந்தாலும், சந்திரன் கறுத்தாலும், அக்கினி அதோமுகமாக நோக்கினுலும் அச்சமுற்றதிசயப்பட்டான்-எ-ம்.

(இ-௨.-௯-ம்.) யாதும்செய்யப்படு பெயர்பதியேவ அதுவதுப்படி யப்படியாய்த் தானிருந்து ப்ரநிசயாக்கவாய் விளங்குமென்டதாம். (26)

## பிரமநிச்சயத்தைச் சொல்லி அதன் சங்கற்பமான மனேசாஞ்சலியத்தை நீக்கும்பொருட்டு அச் சலனமே சகத்தாமெனத் தெரிவித்தல்.



இதுவெனத்தோன் றியவெல்லாஞ் சிற்சொரூப ப்ரவண்ணம் பலசக்தி யிலங்குமென்றே, புலமைகளின் வியப்புறுஞ் சீவன்முத்தர் புனைவைகளால் வேறுபனமயே போலத்தோன்று, முஞகுமியோவை மயின்னனின் மயிலின்றேகை முன்படி கசைத்தலும்மே முக்கின்கட்

டங், கதுமெனமெய் போற்றேன்றல் போலவுந்தான் கனத்தசக மனத்தசைவாற் கடிதுதோன்றும்.

இ - ள். இதுவெனத்தோன்றியவெல்லாம்-ஈதென்று காணப்பட்ட சகலமும், சிற்சொரூபம்-ஞானஸ்வரூபமாம், இவ்வண்ணம் - இந்தப்பிரகாரம், பலசத்தியிலங்குமென்று - சகலசத்திகளும் பிரகாசிக்குமென்று, புதுமைகளின் - அற்புதங்களில், சீவன்முத்தர் - சீவன்முத்தர்கள், வியப்புறுர் - அதிசயமடையார்கள், புனலசைவால்-சலத்தினசைவினல், வேற்றுமையேபோல-வேறனதுபோல, தோன்றும்-தோற்றுகின்ற, முதுசுழிபோலவும்-பழமையான சுழியைப்போலவும், விண்ணில்-ஆகாயத்தில், மயிலின்றேகை-மயிலினிறகை முன்புகடித்தசைத்தலும்-முன்பு சீக்கிரமாக அசைத்தமாத்திரல், முத்தின்கூட்டம்-முத்தின் திரளானது, கதுமென-சீக்கிரமாக, மெய்போற்றேன்றல்போலவுந்தான்-சத்தியம்போலத் தோற்றுதல்போலவும், கனத்தசகம்-பாரமாயிருக்கின்ற உலகமானது, மனத்தசைவால் - மனோசஞ்சலத்தால், கடிதுதோன்றும் - சீக்கிரமாகத்தோற்றும்—எ - று.

எ - து. ஈதென்று காணப்பட்ட சகலமும் ஞானஸ்வரூபமாம். இந்தப்பிரகாரம் சகல சத்திகளும் பிரகாசிக்குமென்று அற்புதங்களில் சீவன்முத்தர்கள் அதிசயமடையார்கள். சலத்தினசைவினல் வேறனதுபோலத் தோற்றுகின்ற பழமையான சுழியைப்போலவும், ஆகாயத்தில் மயிலினிறகை முன்பு சீக்கிரமாக வசைத்தமாத்திரத்தில் முத்தின்திரளானது சீக்கிரமாக சத்தியம்போலத் தோற்றுதல்போலவும், பாரமாயிருக்கின்ற உலகமானது மனோசஞ்சலத்தால் சீக்கிரமாகத் தோற்றும்—எ - ம்.

(இ-ம்.) மனோசாஞ்சலியத்தை நீக்குதற்கு உபாயஞ் சொல்லத் தொடங்னதாம். (27)

சஞ்சலநீங்கி நிச்சலமான பிரமத்தையடைய மனதிசைவும் அசையாமையுஞ் செவ்வையு மியாதெனில் அதற்கு முந்தின வினவுக் குத்தரங் கூறல்.



வேறு.

என்னவோதலு மியாதினுலசைந்திடு மியாதினு லசையாது,சொன்னநெஞ்சகந் திருத்தலாநெறியெது சொல்லெனு மிராமற்குப்,பன்னுமாதவனுரை செய்வானெள்ளிலே யெண்ணெயும் பனிதன்னின் மன்னுவெண்மையும் போன்மனத்தசைவுதான் மருவியே மிகத்தோன்றும்.

இ - ள். என்னவோதலும்-(இப்படி) யென்று சொல்லவும், யாதிஞலசைந்திடும்-எதிஞலசையும், யாதிஞலசையாது-எதிஞலசையமாட்டாது, சொன்னநெஞ்சகம் - சொல்லப்பட்ட மனதை, திருத்தலாநெறியெது-திருத்தஞ்செய்கின்ற மார்க்கமெது, சொல்லெனுமிராமற்கு - சொல்லென்றுகேட்ட ஸ்ரீராமனுக்கு, பன்னுமாதவனுமாசெய்வான்-சொல்லப்பட்ட மாதவஞன வசிட்டமுனி சொல்லுவார், எள்ளிலேயெண்ணெயும் - எள்ளுக்குள்ளெண்ணெய்போலவும், பனிதன்னில் - பனியினிடத்தில், மன்னுவெண்மையும்போல்-நிறைந்த வெண்மையைப்போலவும், மனதசைவுதான்-மனத்தினசைவானது, மருவியேமிகத்தோன்றும் - கலந்துமிகவுந் தோற்றும்—எ - று.

எ - து. இப்படியென்று சொல்லவும் எதிஞலசையும், எதிஞலசைய மாட்டாது, சொல்லப்பட்ட மனதைத் திருத்தஞ்செய்கின்ற மார்க்கமெது? சொல்லென்றுகேட்ட ஸ்ரீராமனுக்குச் சொல்லப்பட்டமாதவஞன வசிட்டமுனி சொல்லுவார். எள்ளுக்கு எண்ணெய் போலவும், பனியினிடத்தில் நிறைந்த வெண்மையைப் போலவும், மனத்தினசைவானது கலந்து மிகவுந்தோற்றும்—எ - ம்.

(இ-ம்) சங்கற்பமே மனத்தினசைவா மென்பதாம். (28)

## இரண்டாம் விஞவுக்கு உத்தரங்கூறல்.



சித்தநாசத்தினெறி யிரண்டுயோகமுந் தெளிந்தஞானமுமாகு, மொத்தயோகந்தான் மனத்துறு தொழிலினை யொருவழிப்படமாற்றல், சுத்தஞானந்தா னலம்பெறக்காண்பதாந் தொடர்மனமேதென்னின், மெத்துமாகம பூடணருரைத்தது விசையுயிரசை வாகும்.

இ - ள். சித்தநாசத்தின்-மனோநாசத்தினது, நெறியிரண்டு-மார்க்கமிரண்டு, யோகமும்-யோகமும், தெளிந்தஞானமுமாகும் - தெளிந்திருக்கின்ற ஞானமுமாம், ஒத்தயோகந்தான்-பொருந்தின யோகமானது, மனத்துறுதொழிலினை-மனதிற்பொருந்திய செயல்களை, ஒருவழிப்படமாற்றல்-ஒருவழியில் செல்லத்திருப்புதல், சுத்தஞானந்தான்-பரிசுத்தமானஞானமானது, நலம்பெறக்காண்பதாம் - யாவுஞ்சுகமாகப் பார்ப்பதாம், தொடர்மனமேதென்னில்-தொடர்கின்ற மனமெதுவென்றால், மெத்துமாகமபூடணர் - மேன்மையான ஆகமத்தை யாபரணமாகத்தரித்தவர்கள், விசையுயிரசைவாகும் - வேகத்தையுடைய பிராணவாயுவினசைவாகுமென்று, உரைத்தது-(முன்)சொல்லியது.

எ - து. மனோநாசத்தினது மார்க்கமிரண்டு; யோகமும் தெளிந்திருக்கின்ற ஞானமுமாம். பொருந்தின யோகமானது மனதிற்பொ

ருந்திய செயல்களை ஒருவழியிற் செல்லத்திருப்புதல், பரிசுத்தஞான மானது யாவுஞ் சுகமாகப் பார்ப்பதாம். தொடர்கின்ற மனமெனுவென்றால் மேன்மையான ஆகமத்தை யாபரணமாகத் தரித்தவர்கள் வேகத்தையுடைய பிராணவாயுவி னசைவாகுமென்று முன்சொல்லியது எ-ம்.

(இ-ம்.) மனச்சலனத்தைக் கொடுப்பதற்கு அதன்விருத்தியை யொருவழிப்படுத்துகின்ற யோகமும், அறிவிலாக்காணுடைவருள்ள ஞானமுமாம் அம்மனம் பிராணசலனமென்பதாம். (29)

## பிராணபந்தன உபாயமியா தெனல்.



உரைசெய்யாருயிர் தடைப்படிலுள்ளமு மொழியுநெஞ்சசைவற்றாற், புரைசெய்சென்மம்போ மாதித்தன்போய் விழிற்புவித்தொழில் போமாபோல், வரைசெய்மார்பனே யென்றலுமுடலெனு மனையின்விண் ணிடைநாளும், விரைவிலோய்வற வழல்பிராணநிலை விலக்குமா றெதுவென்றான்.

இ - ள். உரைசெய்யாருயிர் - சொல்லப்பட்ட பொருந்திய பிராணனானது, தடைப்படில் - தடைபட்டால், உள்ளமும்மொழியும் - மனதுங்கெடும், நெஞ்சசைவற்றால் - மனதுசஞ்சலங்கெட்டால், ஆதித்தன்போய்விழில் - சூரியனத்தமனமானால், புவித்தொழில்போமாபோல் - சகத்தின்றொழினீங்குதல்போல, புரைசெய்சென்மம்போம் - குற்றஞ்செய்கின்ற சனனநீங்கும், வரைசெய்மார்பனே - மலைபோன்ற மார்பையுடைய ஸ்ரீராமா, என்றலும் - என்று (வசிட்டமுனி) சொல்லவும், உடலெனுமனையின் - சரீரமென்கின்ற வீட்டில், விண்ணிடைநாளும் - இதயாம்பரத்திலெப்போதும், விரைவிலோய்வற - வேகமாகவோய்வில்லாமல், உழல்பிராணநிலை - சுழலுகின்ற பிராணன்முதலிய வாய்வுக்கள (அசைவை), விலக்குமாறெதுவென்றான் - மாற்றுகின்ற விதமெதுவென்று ஸ்ரீராமன் கேட்டான் — எ - று.

எ - து. சொல்லப்பட்ட பொருந்திய பிராணனானது தடைப்பட்டால் மனதுங்கெடும், மனதுசஞ்சலங்கெட்டால் சூரியனத்தமனமானால் சகத்தின்றொழினீங்குதல்போல குற்றஞ்செய்கின்ற சனன நீங்கும்; மலைபோன்ற மார்பையுடைய ஸ்ரீராமா! என்று வசிட்டமுனி சொல்லவும், சரீரமென்கின்ற வீட்டில் இதயாம்பரத்திலெப்போதும் வேகமாக வோய்வில்லாமல் சுழலுகின்ற பிராணன் முதலிய வாய்வுக்களசைவை மாற்றுகின்ற விதமெதுவென்று ஸ்ரீராமன் கேட்டான். எ-ம். (30)

## பிராணுயாமவுபாயம் பத்துவிதமாக வறிவிக்கத் தொடங்கல்.

முனிவனேதுவா னூலொடுமறிஞரை முன்னியே விராகத்தை, நனிமுயன்றாகற் றிதனிஞற்குடும்பமா நடைவிலங்கது விட்டுத், தனிநிராசைதா னிறைந்திடில் விரும்பிய தற்பொருட்டியானத்தா, லனிசநீள்பக லொருமையே விளங்கிட வடுத்தசாதனை நன்றால்.

இ - ள். முனிவனேதுவான்-வசிட்டமுனிசொல்லுவார், நூலொடுமறிஞரைமுன்னி- ஆத்மஞான) சாஸ்திரங்களுடன் ஞானிகளைச் சிந்தித் (தடைந்து), விராகத்தை-வைராக்கியத்தை, நனிமுயன்று-மிகவுமுயற்சிசெய்து,கற்றிதனிஞல்-அற்பியாசித்த இவைகளிஞல், குடும்பமாம் - சம்சாரமாகிய,நடைவிலங்கது விட்டு-நடைவிலங்கைநீங்கி, தனிநிராசை தான்-ஒப்பற்ற நிராசையானது, நிறைந்திடில்-நிறையுமாகுல், விரும்பியதற் பொருட்டியானத்தால்-அன்புற்ற பிரமநிஷ்டையிஞல், அனிசநீள்பகல் - சதாகாலமும், ஒருமையே விளங்கிட - ஒன்றாகவே விளங்கும்படி, அடுத்தசாதனை நன்றால் - (அதற்கு) அடுத்த சாதனைத்திறுல்—எ - ம்.

எ - து. வசிட்டமுனி சொல்லுவார், ஆத்மஞான சாஸ்திரங்களுடன் ஞானிகளைச் சிந்தித்தடைந்து வைராக்கியத்தை மிகவு முயற்சிசெய்து அற்பியாசித்த இவைகளிஞல் சம்சாரமாகிய நடை விலங்கை நீங்கி ஒப்பற்ற நிராசையானது நிறையுமாகுல் அன்புற்ற பிரமநிஷ்டையிஞல் சதாகாலமும் ஒன்றாகவே விளங்கும்படி அதற்கடுத்த சாதனைத்திறுல்—எ - ம். (31)

## முதலாவதும் இரண்டாவதும் உரைத்தல்.

ஏகதத்துவக்கபரிசயத்திஞ லிவ்வுயிர்தடைபெய்யுந்
தேகபூரகாதியிலுயிரினைப்புரக் திடமுயற்கத்தா
லூகமாகவேகாந்தமுற்றுள்ளுணர் யோகபாவனைதன்ஞன்
மேகமேனியாய்பிராணனிலைசெயுநான் மிலங்கிடுமென்றே.

இ - ள. ஏகதத்துவம் - ஒன்றாகிய தத்துவத்தின், கபரிசயத்திஞல்-பொற்பியாசத்திஞல், இவ்வுயிர் தடைபெய்யும் - இப்பிராணனுனது தடைபடும், தேகபூரகாதியில்-உடலிலுண்டாகும் பூரகமுதலான, உயிரினைப்புரக்கு-பிராணுயாமஞ்செய்து, திடமுயற்கத்தால் - திடமுயற்சியாகத்திஞல், ஊகமாக - உற்சாகமாக, ஏகாந்தமுற்று-தனித்த விடத்திருந்து, உள்ளுணர் - அகத்திலறியாநின்ற, யோகபாவனை தன்ஞல் - ஞானபாவனையிஞல்,

மேகமேனியாய் - மேகநிறத்தையுடைய ஸ்ரீராமா, பிராணனிலசைவுதான் - பிராணசலனமானது, விலக்கிடப்படும் - மாற்றப்படும்—எ - று.

எ — து. ஒன்றாகிய தத்துவத்தின் திடாற்பியாசத்தினால் இப்பிராணனானது தடைபடும். உடலிலுண்டாகும் பூரகமுதலான பிராணாயாமஞ்செய்து திரமுள்ள அப்பியாசத்தினால் உற்சாகமாகத் தனித்தவிடத்திருந்து அகத்திலறியாநின்ற ஞானபாவனையினால் மேகநிறத்தையுடைய ஸ்ரீராமா! பிராணசலனமானது மாற்றப்படும்—எ - ம்.

(இ-க-ம்.) ஒன்றான ஆத்மஞான அற்பியாசத்தினாலும் யோகாற்பியாசத்தினாலும் பிராணனடங்குமென்பதாம். (32)

## மூன்றாவதும் நான்காவதும் உரைத்தல்.

பிரணவத்தினுச் சாரணமுடிவினிற் பிறந்தசொல் லுறுமுண்மை
விரவுநாட்டத்தாற் றுயில்பவனுணர்வுதான் வெளிப்படி லுயிர்நிற்கும்
பரவுதாலுமூ லஞ்செறியிதழினைப் படருநாவாற்றள்ளி
யுரவினாலுயர் புரையிலேபிராணனை யோட்டினா லுயிர்நிற்கும்.

இ - ள். பிரணவத்தின் - ஓங்காரத்தினது, உச்சாரணமுடிவினில் - உச்சரிப்பினந்தத்தில், பிறந்த - உண்டான, சொல்லுறுமுண்மை - நாத தத்துவத்தினுண்மையை, விரவுநாட்டத்தால் - மிகுந்த அநுசந்தானத்தினால், துயில்பவன் சுழுத்தியடைபவனது, உணர்வுதான் - விருத்திஞானமானது, வெளிப்படில் விடுபட்டால், உயிர்நிற்கும் - பிராணனானது தடைப்படும், பரவு - பரவாநின்ற, தாலுமூலஞ்செறி - நாக்கினடியினெருங்கிய, இதழினை - இதழை, படருநாவாற்றள்ளி - படர்ந்த நாவினால் நீக்கி, உரவினால் - திடமுள்ள (முயற்சி) யினால், உயர்புரையில் - ஊர்த்தாரந்தரத்தில், பிராணனையோட்டினால் - உயிரைச் செலுத்தினால், உயிர்நிற்கும் - பிராணன் அடைப்படும்—எ - று.

எ - து. ஓங்காரத்தினது உச்சரிப்பினந்தத்தில் உண்டான நாத தத்துவத்தினுண்மையைமிகுந்த அநுசந்தானத்தினால் சுழுத்தியடைபவனது விருத்திஞானமானது விடுபட்டால் பிராணனானது தடைப்படும்' பரவாநின்ற நாக்கினடியினெருங்கிய இதழைப்படர்ந்த நாவினீக்கி திடமுள்ள முயற்சியினால் ஊர்த்தாரந்தாத்தில் உயிரைச்செலுத்தினால் பிராணன் தடைபடும்—எ — ம்.

(இ - ம்.) பிரணவாகாந்தத்தில் சுகித்த ஞானத்தைத் தரிசிக்கும் யோகத்தினாலும் லம்பிகாயோகத்தில் கேசரிமுத்திரையினாலும் பிராணனடங்குமென்பதாம். (33)

## ஐந்தும் மாற்றும் ஏழும் எட்டு உரைத்தல்.

---

நாடுமங்குலி பன்னிரண்டெல்லையி னாசியினுனிதன்னி
னீடுவானத்தி லறிவுகணிறைந்திடி னிலைபெறவுயிர்நிற்குந்
தேடுசாதனை யாலுயர்புரைவழி சிங்குவைமேல்விரலீரா
றாடுபோயுயிரெல்லையி னின்றுணர் வொளிக்குமே லுயிர்நிற்கும்.

இ - ள். நாடும் - பார்க்கின்ற, நாசியினுனிதன்னில் - நாசிகாந்தத்தில், அங்குலி பன்னிரண்டெல்லையில் - பன்னிரண்டங்குலமளவில், நீடுவானத்தில் - நீண்ட ஆகாயத்தில், அறிவுகணிறைந்திடில் - விருத்திஞானங்களிறக்குமாணல், நிலைபெறவுயிர் நிற்கும் - நிலையாகப்பிராணன் றடைப்படும், தேடுசாதனையால் - தேடாநின்ற சாதனத்தினால், உயிர்புரைவழி - ஊர்த்தரந்தரமார்க்கத்தில், சிங்குவைமேல் - நாக்கின்மேல், விரலீராறுடுபோய் - பன்னிரண்டங்குலப் பிரமாணஞ்சென்று, உயிர் - பிராணனானது, எல்லையினின்று - அந்தவளவினின்று, உணர்வொளிக்கு மேலுயிர் நிற்கும் - விருத்திஞானம் விடுமாணல் பிராணன் றடைப்படும்—எ - று.

எ - து. பார்க்கின்ற நாசிகாந்தத்தில் பன்னிரண்டங்குல மளவில் நீண்ட ஆகாயத்தில் விருத்திஞானங்க ளிறக்குமாணல் நிலையாகப்பிராணன் றடைப்படும். தேடாநின்ற சாதனத்தினால் ஊர்த்த ரந்தரமார்க்கத்தில் நாக்கின்மேல் பன்னிரண்டங்குலப் பிரமாணஞ் சென்று பிராணனானது அந்த வளவினின்று விருத்திஞானம் விடுமாணற் பிராணன் றடைப்படும்— எ - ம்.

(இ-ம்.) நாசியினின்ற ஆதசாந்தத்தினில் பதினாலும் தனந்தத்தினிற்குஞ் சாம்பவி முத்திரையினாலும் விசுத்த சக்கரத்தினில் பதினாலும் அநாகதசக்கரத்தினில் பதினாலும் பிராணனடங்கு மென்பதாம். (34)

## ஒன்பதும் பத்தும் உரைத்தல்.

---

புருவகாப்பமேணை கண்மணிப்பார்வைதான் பொருவில்சாந்தியின்மாய்ந்தது, தெருளுநெங்கேதன வறிவங்குதெரிவுற்ற றிரிவுறுதுயிர் நிற்கும், கருதுகின்றனிக் கெடிகொள்கேசகங் கற்பகற்பிதபேதத்,தருள்செயும்பல தேசிகர்சொற்களா லசைவறவுயிர் நிற்கும.

இ - ள். பருவநாப்பண்-புருவமத்தியில், கண்மணிப்பார்வைதான் - கண்மணிப் பார்வையானது, பொருவில்சாந்தியின்-ஒப்பற்ற சாந்தத்தினால், மாய்ந்து-கெட்டு, தெருளுங்கேதனவறிவு - அறிகின்ற சவிகற்ப ஞானமானது, அங்குதெறிவறில் - அவ்விடத்தில் இறக்குமானால், இருவுரு துயிர்நிற்கும்-ஓடாமற் பிராணன் றடைப்படும், கருதுகின்ற-நினைக்காநின்ற, இந்நெறிகளால்-இந்த மார்க்கங்களினாலும், அநேக சங்கற்பம் - நாநாவித சங்கற்பத்தினாலும், கற்பிதபேதத்து - கற்பிதமான வேற்றுமையினாலும், அருள்செயுந்தேசிகர்-அநுக்கிரகஞ்செய்கின்ற ஆசிரியர், பல சொற்களால் - அநந்த வசனங்களினாலும், அசைவறவுயிர்நிற்கும் - சலனமில்லாமல் பிராணன்றடைப்படும்—எ - று.

எ - து. புருவமத்தியில் கண்மணிப் பார்வையானது ஒப்பற்ற சாந்தத்தினால் கெட்டு அறிகின்ற சவிகற்ப ஞானமானது அவ்விடத்திலிறக்குமானால் ஓடாமற் பிராணன் றடைப்படும். நினைக்காநின்ற இந்த மார்க்கங்களினாலும், நாநாவித சங்கற்பத்தினாலும், கற்பிதமானவேற்றுமையினாலும், அநுக்கிரகஞ் செய்கின்ற ஆசிரியர் அநந்த வசனங்களினாலும், சலனமில்லாமற் பிராணன்றடைப்படும்—எ - து.

(இ - ம். புருவமத்தியான வியோமசக்கரத்தினிற்கின்ற வயிரவிமுத்திரையினாலும் இறுமாறாமல் வைக்கின்ற குறிகளிலடங்கி நிற்குதலினாலும் பிராணனடங்கு மென்பதாம். (35)

## இரண்டாம் வினாவுக்குத்தரஞ் சொல்லி மூன்றாம் வினாவுக் குத்தரங் கூறுதல்.

---

இந்தயோகங்களறிவெலாமிளைப்பற வியற்றுசாதனையாலே
வந்துமேற்பிறவாதவர்க்குபாயமாய் வந்திடும்பழக்கத்தா
லுந்துமாருயிரசைவுதான் கெடுமெனிலுள்ளமுஞ்சமித்தாறுந்
சிந்தைதான்சமித்தாறுமேற்செல்கதி சேடமாய்விடுந்தானே.

இ - ள். இந்தயோகங்களறிவெலாம் - இந்தயோக யுத்திகளனைத்தும், இளைப்பற-வருத்தமில்லாமல், இயற்றுசாதனையால்-செய்கின்ற சாதனத்தினால், வந்து-(இப்பவத்தில்) வந்து, மேற்பிறவாதவர்க்கு-இனிச்சனியாதவர்க்கு, உபாயமாய்-தந்திரமாக, வந்திடும்-வரும், பழக்கத்தால் - அப்பியாசத்தினால், உந்துமாருயிர் - மேலான பிராணனது, அசைவுதான் கெடுமெனில்-சலங்கெடுமானால், உள்ளமுஞ்சமித்தாறும் - மனதும் விஸ்ராந்தியடையும், சிந்தைதான்சமித்தாறுமேல் - மனது விஸ்ராந்தியடையுமானால், செல்கதிசேடமாய்விடும் - அடையதக்க பக்தி மிச்சமாகும்—எ - று.

எ — து. இந்த யோகயுந்திகளனைத்தும் வருத்தமில்லாமல் செய்கின்ற சாதனத்தினால் இப்பவத்தில் வந்து இனிச் சனியாத

வர்களுக்குத் தந்திரமாக வரும் அப்பியாசத்தினால் மேலான பிராணனது சலனங்கெடுமாதலால் மனதும் விஸ்ராந்தியடையும்; மனது விஸ்ராந்தியடையுமாதலால் அடையத்தக்கபரகதி மிச்சமாகும்-எ-ம்.

(இ-ம்.) இவ்வனுசந்தானத்தினால் பிராணபந்தனமாம் அதனால் மனோ சஞ்சலநீங்கும் அதனால் மனத்திருத்தமுற்று ஆத்மானுபவமே மிஞ்சுமென்பதாம், (உதாரம்) (விவேகமார்த்தண்டத்தில்) ' கபாலரந்திரத்தினுக்கு விபரீதமாகப் பிரவேசிக்க, புருவமத்தியை திருஷ்டியடைந்தால், அதுவே கேசரிமுத்திரையென்று சொல்லப்படும், ஊர்த்துவகமனத்துக்கு பிரதிபந்தகமாய், அதோபாகத்திலிருக்கின்ற சருமத்தை அறுக்கிறது, சேதனம், திரும்ப, சஸ்திரத்தால் சுத்தப்பட்டதாவை, கைகளினால்திடமாகப்பிடித்துக்கொண்டு, சவ்வியமாப சவ்வியபாய் சுழற்றுவது, சாலனம், கைகளினால் கிரமமாக மெள்ளமெள்ள இழுப்பது, தோகனம், இம்மூன்றுமுயற்சியினால், லம்பிகாயோகம், அப்பியாச மென்பதினால் ஜிதேந்திரியனாய், விவிததேசத்திலிருக்கின்றவனாய், மிதமாயுஞ் சுத்தமாயும் புசிக்கின்றவனாய் குருவினால் உபதேசிக்கப்பட்ட மார்க்கத்தினால், தௌத, வஸ்தி, பிரவஸ்தி, முதல்களாயும், மேலும்கீழுஞ் சோதியாநின்ற, சாலகங்களினாலும் சோரணங்களிலும், விசுத்தமான தேகமுடையவனாய், ஆசனபிராணயாமங்களினாற் சோதிக்கப்பட்ட நாடிகளையுடையவனா யிருக்கின்றவனுக்கு பிராணசஞ்சாரவேதுவான மகாமுத்திரையின் அப்பியாசஞ்சொல்லப்பட்டது, முத்திரைகளை மகாமுத்திரைமுதலிய பத்துவிதமாக, அடிப்பிகையில சொல்லப்பட்டன, அவையாவன-மகாமுத்திரை, மகாபந்தம், மகாவேதம், கேசரி, உட்டியாணம், மூலபந்தம், சாலந்தாபந்தம், வபரீதகரணி, வச்சிரோலி, சத்திசாலனம் எ-ம். (36)

## யோகத்தினுண்மையைச்சொல்லி ஞானத்தினுண்மையைப் பிரிவாகச் சொல்லத் தொடங்கல்.

---

விகற்பவாக்கெலா மெய்ப்பதநோக்கியே மீளுமப்பதந்தானே,
விகற்பமற்றிடுஞ் சேடிக்குமெனமுனி விளம்பலுமிறைவீர, னிக
ழ்த்தியோகத்தை யுறுமனப்பொறிகளி னெறிசெலாச்சமர்த்தனனே,
நிகழ்த்தினையினி யுண்மைஞானத்தையு நிகழ்த்தெனமுனி சொல்
வான்.

இ-ள். விகற்பவாக்கெலாம் - விகற்பமான வாக்கியங்களனைத்தும், மெய்ப்பதம் - தற்பதத்தை நோக்கியே மீளும் - பார்த்தடையாமல் திரும்புகின்றதோ, அப்பதந்தானே - அத்தற்பதமே, விகற்பமற்றிடல் - பேதபாடிறக்கில், சேடிக்குமென - மிஞ்சுமென்று, முனிவிளம்பலும் - வசிட்

டர் சொல்லவும், விறல்வீரன் - வெற்றியையுடைய ராமமன், யோகத்தை - யோகமார்க்கத்தை, நிகழ்த்தி - சொல்லி, உறுமனம் - பொருந்தாநின்ற மனமானது, பொறிகளினெறிசெலா - இந்திரியவழிகளில்செல்லாத, சமந்தன்னைநிகழ்த்தினுய் - சமத்துவத்தைச் சொன்னாய், இனியுண்மைஞானத்தையும் - இனிமேல் தத்துவஞானத்தையும், நிகழ்த்தென - சொல்லுமென்றுகேட்க, முனிசொல்வான் - அதற்கு முனிசொல்லுவார்—எ - று.

(எ — று.) விகற்பமான வாக்கியகளனைத்து தற்பதத்தைப் பார்த்தடையாமல் திரும்புகின்றதே அந்தத் தற்பதமே வேறு பாடிறக்கில் மிஞ்சுமென்று வசிட்டர்சொல்லவும், வெற்றியையுடைய ஸ்ரீராமன் யோகமார்க்கத்தைச் சொல்லிப் பொருந்தாநின்ற மணமான இந்திரியவழிகளிற் செல்லாத சமத்துவத்தைச் சொன்ளுய்! இனிமேல்தத்துவஞானத்தையும் சொல்லுமென்றுகேட்க, அதற்குமுனி சொல்லுவார் —என்பதாம். (37)

முதலும் இரண்டும் உரைத்தல்.



ஆதியந்தமி றேற்றமேதன்வடி வாகியபரமிங்குச்
சோதியாய்கின்ற தென்னுமிவ்வுறுதியே துகளறுமெய்ஞ்ஞானம்
பேதியாநின்ற கடபடவடிவாம் பெரும்பொருட்பலசத்தி
நிதிறம்பரம் வேறிலதென்றுணர் திண்மையேநற்காட்சி.

இ - ள். ஆதியந்தமில் - ஆதிமத்தியாந்தரகிதமான, தோற்றமே - தெரிவே, தன்வடிவாகியபரம் - தனது ஸ்வரூபமாயிருக்கின்ற பிரமமானது, இங்கு - இவ்விடத்தில், சோதியாய்நின்றதென்னும் - சயம்பிரகாசமாயிருக்குதென்கின்ற, இவ்வுறுதியே - இந்தநிச்சயமே, துகளறுமெய்ஞ்ஞானம் - குற்றமற்ற உண்மைஞானமாம், பேதியாநின்ற - பேதித்திருக்கின்ற, கடபடவடிவாம் - கடபடரூபமாகிய, செம்பொருட்பலசத்தி - மிகுந்த பதார்த்தங்களின் சகல சத்தியும், நிதிறம்பரம் - குற்றமற்ற ஆத்மாவேயல்லாமல், வேறிலதென்று - வேறில்லையென்று, உணர்திண்மையே நற்காட்சி - அறிகின்றதிடமே ஆத்மதரிசனமாம்—எ - று.

எ - து. ஆதிமத்தியாந்தரகிதமான தெரிவே தனதுஸ்வரூபமாயிருக்கின்ற பிரமமானது இவ்விடத்தில் சுயம்பிரகாசமாயிருக்குதென்கின்ற இந்த நிச்சயமே குற்றமற்ற வுண்மைஞானமாம். பேதித்திருக்கின்ற கடபடரூபமாகிய மிகுந்த பதார்த்தங்களின் சகலசத்தியும் குற்றமற்ற ஆத்மாவேயல்லாமல் வேறில்லையென்று அறிகின்ற திடமேயாத்மதரிசனம்—எ - ம்.

(இ-டு-க-ம்.) சகோதயமான சமதாத்மஸ்வரூபமே யிங்ஙனம் பிரகாசிக்குமென்னு நிச்சயமுந் திசிஸ்யங்கள் யாவுந் திருக்குவடிவமே யென்னு நிச்சயமும் ஞானமென்பதாம் (38)

## மூன்றும் நான்கும் உரைத்தல்.

செகங்கண்மூன்றினு முண்மையாம்பொருளறி திறமெதுவெனச்செப்பில், செகங்களியாவையுந் தற்பொருள்வடிவெனத் திரமுறு நிறைவாருஞ், செகங்களியாவையுஞ் சொரூபமேயிதிற்றிகழ பாவபாவனையெங்கே, செகங்களிற்செறி பெத்தமுத்திகளெனத் தியக்குவேற்றுமையெங்கே.

இ - ள். செகங்கண் மூன்றினும் - மூன்றுலகங்களிலும், உண்மையாம் பொருள்-மெய்யான வஸ்துவை, அறிதிறமெதுவெண-அறிகின்ற காரணமெதுவென்று, செப்பில்-சொல்லுமிடத்தில், செகங்களியாவையும் - உலகங்களனைத்தையும், தற்பொருள்வடிவெண-பிரமஸ்வரூபமென்று, திரமுறும்-ஸ்திரம்பொருந்துவதே, நிறைவாகும்-பூரணமாம், செகங்களியாவையும்-உலகங்களனைத்தும், சொரூபமே - ஆத்மஸ்வரூபமேயாம், இதில்-இவ்வாத்மஸ்வரூபமாகிய சகத்தில், திகழ்-விளங்குகின்ற, பாவபாவனையெங்கே-பாவாபாவங்களெவ்விடம், செகங்களிற்செறி-உலகங்களி நெருங்கிய, பெத்தமுத்திகளென-பந்தம்வீடென்று, தியங்குவேற்றுமையெங்கே-மயங்குகின்ற பேதமெவ்விடம்—எ-று.

எ - து. மூன்றுலகங்களிலும் பொய்யான வஸ்துவை அறிகின்ற காரணமெதுவென்று சொல்லுமிடத்தில் உலகங்களனைத்தையும் பிரமஸ்வரூபமென்று ஸ்திரம்பொருந்துவதே பூரணமாம். உலகங்களனைத்தும் ஆத்மஸ்வரூபமேயாம். இவ்வாத்மஸ்வரூபமாகிய சகத்தில் விளங்குகின்ற பாவாபாவங்களெவ்விடம்? உலகங்களி னெருங்கிய பந்தம் வீடென்று மயங்குகின்ற பேதமெவ்விடம்—எ — ம்.

(இ - ம்.) மூவுலகும் ஆத்மாவென்கிற பரமார்த்த திருஷ்டியும் ஆத்மாவையன்றிப் பாவாச பாவங்களின் றென்கிற நிச்சயமும் ஞானமா மென்பதாம். (39)

## ஐந்தும் ஆறும் உரைத்தல்.

பிறிதுகாண்பன வில்லெனுஞ்சில்லை மெய்ப்பிரமமே யனைத்துமாகிச்
செறியுமாவினை யாவுமொன்றுமே யிற்பா விசும்பாகு

நெறிகொள்பந்தம்வீ டெங்குளவிதுவென நிகழ்பெரு வடிவாகிக்
குறியறும்பெரும் பிரமமேநின்றது குறைந்திறந் ததுநெஞ்சே.

இ - ள். பிறிதுகாண்பனவில்லை-வேறாகத் திரிஸ்யமென்பனவுமில்லை, நெஞ்சில்லை-மனமென்பது மில்லை, மெய்ப்பிரமமே-உண்மையாகிய பிரமமே அவையாகிச்செறியும்-முன்சொன்னவைகளாக நிறையும், இவையாவும்-இச்சகலமும், ஒன்றாகிய - ஏகமாகிய,சிற்பரவிசும்பாகும் - ஞானகாசமாகும், நெறிகொள்பந்தம் - (வாசனா) மார்க்கங் கொண்டபந்தமும், வீடு-மோக்ஷமும், எங்குள-எவ்விடத்திலிருக்கின்றன, இதுவென-இதுவென்று, நிகழ்பெறுவடிவாகி-பிரகாசிக்கின்ற ஆத்மஸ்வரூபமாய், குறியறும்-அடையாளமின்றிய,பெரும் பிரமமே- மகத்தாகிய பிரமஸ்வரூபமே, நின்றது-நிறைந்திருக்கின்றது,நெஞ்சமனமானது, குறைந்திறந்தது-சீரணமாய் நசித்தது—எ - று.

எ - து. வேறாகத் திரிஸ்யமென்பனவுமில்லை, மனமென்பதுமில்லை, உண்மையாகிய பிரமமே! முன்சொன்னவைகளாக நிறையும், இச்சகலமும் ஏகமாகிய ஞானகாசமாகும். வாசனாமார்க்கங்கொண்ட பந்தமும் மோக்ஷமும் எவ்விடத்திலிருக்கின்றன? இதுவென்று பிரகாசிக்கின்ற ஆத்மஸ்வரூபமாய் அடையாளமின்றிய மகத்தாகிய பிரமஸ்வரூபமாய் நிறைந்திருக்கின்றது, மனமானது சீரணமாய் நசித்தது—எ - ம்.

(ஜூ-ம்.) மனது முதலிய யாவுஞ் சிதாகாசமென்னு நிச்சயமும் பிரமானுபவத்தின் மனமில்லையென்னு நிச்சயமு ஞானமா மென்பதாம். (10)

## வழும் வட்டும் உரைத்தல்.

ஒருமையாகவே புணர்வினுணர்தியா லுருவைநன் குறநோக்கிற்
றருவுங்கற்களும் படங்களுமுதலிய சற்றும்வேற்றுமையில்லை
மருவுசங்கற்ப மெங்குள சிவனும் வையகப்பொருளியாவு
மருகலின்றிய சாந்தரூபம்பெறு மடிமுடி வுறநோக்கில்.

இ - ள். ஒருமையாக-ஒற்றுமையாக, உணர்வினுணர்தி - அறிவினாலறியக்கடவாய், உருவை நன்குறநோக்கி-(ஆத்ம) ஸ்வரூபத்தை நன்றாகப்பார்க்குமிடத்தில், தருவும்-விருட்சமும், கற்களும்-மலைகளும், படங்களுமுதலிய வஸ்திரங்களுமுதலிய, வஸ்துக்களுக்கு, சற்றும் வேற்றுமையில்லை - எவ்வளவும் பேதமில்லை, மருவுசங்கற்ப மெங்குள-பொருந்திய சங்கற்பமெங்கே யிருக்கின்றது, சிவனும்-சிதாபாசனும், வையகப் பொருளியாவும் - பூமியிலுள்ள வஸ்துக்களனைத்தும், அடிமுடிவுறநோக்கில்-ஆதியந்தமாகப் பார்க்குமிடத்தில், அருகலின்றிய சாந்தரூபம்பெறும்-குறைவில்லாத உபசாந்த ரூபமடையும்

எ - து. ஒற்றுமையாக அறிவினாலறியக்கடவாய். ஆத்மஸ்வரூபத்தை நன்றாகப் பார்க்குமிடத்தில் விருட்சமும், மலைகளும், வஸ்திரங்களுமுதலிய வஸ்துக்களுக்கு எவ்வளவும் பேதமில்லை. பொருந்திய சங்கற்பமெங்கே யிருக்கின்றது! சிதாபாசனும் பூமியிலுள்ள வஸ்துக்களனைத்தும் ஆதியந்தமாகப் பார்க்குமிடத்தில் குறைவில்லாத உபசாந்தரூபமடையும்—எ - ம்.

(இ - ம்.) யாவையும் ஆத்மஸ்வரூபமாகப் பார்க்கி லொன்றும் வேற்றுமையின் றென்பதும் சீவனுஞ் சகத்து ஆநந்தமாயிடின் தன் சங்கற்ப மில்லையென்பதும் ஞானமென்பதாம். (41)

## அத்தொய்த ஞானனுஷ்டானத்தின் உண்மையைச் சொல்லி அதை யடையும்பொருட்டு அனுபவஞ் சொல்லுதல்.

அந்தரூபமெப் போதுநீயாகுவை யண்ணலே யிரண்டொன்று
வந்துபேதத்தாற் சுராமரணங்களென் றுன்னுறுமயக்கத்தாற்
றொந்தவுள்ளத்தாற்றான்றனிப்பிரமமே தோற்றுகின்றனதன்னாற்
சிந்துகின்றநீ டிரையினாற்பன்மையாற் றெரிதருஞ் சலம்போல.

இ - ள். அந்தரூபம் - அவ்வுபசாந்தஸ்வரூபம், எப்போது நீ யாகுவை - எக்காலமு நீயேயாவாய், அண்ணலே-ராமா, இரண்டொன்று-இரண்டென்றுமொன்றென்றும், வந்துபேதத்தால்-சொல்லாநின்ற வேற்றுமையினாலும், சுராமரணங்களென்று, சராமரணங்களென்று, உன்னுறு மயக்கத்தால்-நினைக்கின்ற மயக்கத்தினாலும், தொந்தவுள்ளத்தால்-தொந்தித்திருக்கின்ற மனதினால், தான்றனிப்பிரமமே-தானாகிய ஒப்பற்ற பிரமஸ்வரூபமே, நீடிரையினால் நீண்ட அலையினால், தன்னாற்சிந்துகின்ற-தன்னாற்சிதறுகின்ற, பன்மையாம்-பலவான (திரை நுரை குமுளி முதலானதாய்) தெரிதருஞ்சலம்போல-தெரிகின்ற நீரைப்போல, தோற்றுகின்றன - (நாமரூபங்களாய்த்) தோற்றுகின்றன—எ - று.

எ - து. அவ்வுபசாந்தஸ்வரூபம் எக்காலமு நீயேயாவாய், ஸ்ரீராமா! இரண்டென்று மொன்றென்னுஞ் சொல்லாநின்ற வேற்றுமையினாலும், சராமரணங்களென்று நினைக்கின்ற மயக்கத்தினாலும், தொந்தித்திருக்கின்ற மனதினால் தானாகிய ஒப்பற்ற பிரமஸ்வரூபமே நீண்டவலையினால் தன்னாற் சிதறுகின்ற பலவான திரை, நுரை, குமுளி முதலானதாய் தெரிகின்ற நீரைப்போல நாமரூபங்களாய்த் தோற்றுகின்றன—எ - ம். (42)

## அனுபவியின் றிடத்தைச் சொல்லுதல்.

சுத்தமானதற் பரத்தினைத்தழுவியே தொடர்ந்தவுண்மதியாலே, யொத்துநிற்பவர் தம்மையெப்போகம்வந் துறுபிணி செயவற்று, மெத்துயோகத்தை முதலியபகையெலாம் விசாரமே மிகுந்தோர்தம், புத்தியைச்சிறி தசைத்திடாவசந்தனாற் பொருப்பசை வதுமுண்டோ.

இ - ள். சுத்தமானதற்பரத்தினை - பரிசுத்தமாகிய பிரமத்தை, தழுவியேதொடர்ந்த-தழுவித்தொடர்ந்த, உண்மதியால்-அந்தர்முகவுணர்வினால், ஒத்துநிற்பவர்தம்மை - பொருந்தியிருப்பவர்களை, எப்போகம் - எந்தப்போகமானது, வந்துறு-வந்து பொருந்தாநின்ற, பிணிசெயவற்றும்-பந்தனஞ்செய்யத்தக்கது, மெத்துயோகத்தை முதலிய-மிருதுவான போகங்கண் முதலாகிய, பகையெலாம்-சத்துருக்களனைத்தும், விசாரமே மிகுந்தோர் தம் - விசாரணை மிகுந்தவர்களுடைய, புத்தியைச்சிறிதசைத்திட-மனதை யெவ்வளவும் அசைக்கமாட்டாது, வசந்தனால்-தென்றலினால், பொருப்பசைவது முண்டோ-மலையசைவது முண்டோ—எ - று.

எ - து. பரிசுத்தமாகிய பிரமத்தைத் தழுவித்தொடர்ந்த அந்தர் முகவுணர்வினால் பொருந்தியிருப்பவர்களை எந்தப்போகமானது வந்து பொருந்தாநின்ற பந்தனஞ் செய்யத்தக்கது? மிருதுவானபோகங்கண் முதலாகிய சத்துருக்களனைத்தும் விசாரணை மிகுந்தவர்களுடைய மனதை எவ்வளவுமசைக்கமாட்டாது. தென்றலினால் மலையசைவதுமுண்டோ—எ - ம். (43)

## அனுபவநிச்சயங்கூறல்.

உரைத்தபன்மைக ணினைவிலேயுளதா முண்மையாயிலதுள்ளே, நிரைத்தபல்வகை வாவியிற்பிறிவிலா நிகழ்தரு நீர்போலக், கரைத்தலன்றயிவ் வறுதிசேர்மதியுளோர கலங்கமில்வீடுற்றோர், புரைத்தலன்றியே நலனுறக்கண்டநற் பொருளுநமிது தானே.

இ - ள். நிரைத்த பல்வகைவாவியில்-(அலையினாற்) சந்தித்த நானாவிதமானதடாகத்தில், பிறிவிலா-(அலைமுதலான) வேறுமையில்லாமல், நிகழ்தருநீர்போல-(ஒன்றாக) பிரகாசிக்கின்ற சலத்தைப்போல, உரைத்த பன்மைகள்-சொல்லப்பட்ட பலவிதமான நாமரூபங்கள், நினைவிலுள்ளதாம் - சங்கற்பத்திலுள்ளவாகும், உள்ளே-அகத்தில், உண்மையாயிலது - மெய்யாகவில்லாததாம், கரைத்தலன்றி-கரைக்கக் கூடாதிருக்கின்ற, இவ்வறுதிசேர்-இத்தகைய

***யஞ்சேர்ந்த, மதியுளோர் - அறிவையுடையவர்கள், கனாகமில்வீடுற்றோர்-குற்றமற்ற மோக்ஷத்தை யடைந்தவர்கள், புரைத்தலன்றி-குற்றமற்றதாய், கலனுறக்கண்ட-சுகம்வரத்தரிசித்த, நற்பொருளும்-அபரோக்ஷவஸ்துவும், இந்நிதான்-இவ்விடத்திந் நிச்சயந்தான்—எ - று.***

எ - து. அலையினால் சத்தித்த நானாவிதமான தடாகத்தில் அலைமுதலான வேற்றுமையில்லாமல் ஒன்றாக பிரகாசிக்கின்ற சலத்தைப்போலச் சொல்லப்பட்ட பலவிதமான நாமரூபங்கள் சங்கற்பத்திலுள்ளனவாகும். அகத்தில் மெய்யாக இல்லாததாம்: கரைக்கக்கூடாதிருக்கின்ற இந்த நிச்சயஞ்சேர்ந்த அறிவையுடையவர்கள் குற்றமற்ற மோக்ஷத்தை யடைந்தவர்கள். குற்றமற்றதாய் சுகம்வரத் தரிசித்த அபரோக்ஷவஸ்துவும் இவ்விடத் திந்நிச்சயந்தான்—எ - ம்.

(இ-ங-க-ம்.) ஸ்வானுபூதி விலாசத்தை பிரசன்னமாயத் தரிசிக்கும்பொருட்டு அனுக்கிரகித்ததாம். (44)

## இச்சுவானுபவப் பெறுதற்கிஃதன்றி இன்னுமொரு மார்க்கம் சொல்லத் தொடங்கியதற்குத் திருஷ்டாந்தம் அறிவித்தல்.

ஈதுவேறொன்று முத்திசென்றுறு நெறியியம்புதும் கேள்வீரா,
வீதகவ்விய னென்றொருபெருந்தவன் விந்தவெற்பிடைவாழ்வோன்,
காதலாலுயர் கன்மகாண்டத்திலே காலமட் டறநின்று, கேதமாதி
யே வியாதிவன்பவந்தரு கிரியையான் மெலிந்தான்.

***இ - ள். ஈதுவேறொன்று-இதுமற்றொரு, முத்திசென்றுறு நெறி-மோக்ஷத்தை யடைகின்ற மார்க்கம், இயம்புதும்-சொல்லுவோம், வீராகேள்-வீரத்தையுடைய ஸ்ரீராமா கேட்பாய், வீதகவ்வியனென்ற - வீதகவ்வியனென்னு நாமத்தையுடைய, ஒருபெருந்தவன்-ஒரு மகாதவத்தன், விந்த வெற்பிடைவாழ்வோன்-விந்தமலையில் வாழ்பவன், காதலாலுயர்-ஆசையினாலுயர்ந்த, கன்மகாண்டத்தில-கன்மகாண்டத்தில, காலமட்டறநின்று-வெகுகாலமிருந்து, கேதம்-துன்பமாகிய, ஆதி-அந்தக்கரண வியாதியையும், வியாதி-(தேக) வியாதியையும், வன்பவம்-கொடிய சம்சாரத்தையும், தருகிரியையால்-கொடுக்கின்ற கிரியையினால், மிகமெலிந்தான்-மிகவும் வருந்தினன்—எ - று.***

எ - து. இது மற்றொரு மோக்ஷத்தையடைகின்ற மார்க்கம் சொல்லுவோம், வீரத்தையுடைய ஸ்ரீராமா கேட்பாய். வீதகவ்விய னென்னு நாமத்தையுடைய ஒரு மகாதவத்தன் விந்தமலையில் வாழ்பவன், ஆசையினாலுயர்ந்த கன்மகாண்டத்தில் வெகுகாலமிருந்து தன்

பமாகிய அந்தக்கரண வியாதியையும், தேகவியாதியையும், கொடிய சம்சாரத்தையும் கொடுக்கின்ற கிரியையினால் மிகவும் வருந்தினான் எ - ம்.

(இ - ம்.) கிரியையிற் சுகமின்றி வருந்தினனென்பதாம். (45)

## ஞானசமாதிக்காதனங்கூறல்.

நிருவிகற்பமாஞ் சமாதியின்பொருட்டுமுன் னிகழ்கிரிகைகளெல்லா, மொருவிவிட்டனன் பன்னசாலையினிடை யுற்றனன்கலைத்தோன்மேன், மருவுபெத்தபங் கேருகாசனத்தனன் வருகுதிமிசைவைத்த, விருகரள் விரலினனிவ்வகை யிருந்தன னொருப்பட்டு.

இ - ள். நிருவிகற்பமாஞ் சமாதியின்பொருட்டு - நிருவிகற்ப சமாதியினின் நிமித்தம், முன்னிகழ்-முன்னடந்திய, கிரியைகளெல்லாம்-கிரியைகளனைத்தையும், ஒருவிவிட்டனன்-நீக்கிவிட்டான், பன்னசாலையினிடை - பன்னசாலையினுள், உற்றனன்-பொருந்தினன், கலைத்தோன் மேன்மருவு - மான்றோலின்மேன் மருவுகின்ற, பெத்தபங்கேருகாசனத்தனன்-கட்டிய பதுமாசனத்தையுடையவனாய,வருகுதிமிசைவைத்த-வாராநின்ற குதிகான்மேல்வைத்த இருகரத்திரள விரலினன்-இரண்டுகைகளிற் றிரண்ட விரலையுடையவன்,இவ்வகை-இந்தப்பிரகாரம், ஒருப்பட்டு-ஒருமைப்பட்டு, இருந்தனன்-(சமாதியி) லிருந்தான் — எ - ம்.

எ - து. நிருவிகற்ப சமாதியினிமித்தம் முன்னடத்திய கிரியைகளனைத்தையும் நீக்கிவிட்டான, பன்னசாலையினுள் பொருந்தினன், மான்றோலின் மேன் மருவுகின்ற கட்டிய பதுமாசனத்தையுடையவனாய் வாராநின்ற குதிகான்மேல் வைத்த இரண்டு கைகளிற் றிரண்ட விரலையுடையவன், இந்தப்பிரகாரம் ஒருமைப்பட்டு சமாதியிலிருந்தான் — எ - ம். (46)

## மனதை நிறுத்தி விசாரித்தல்.

பாக்குநிக்குறு மனத்தினைப்பலமையப் பையப்பாத்து மீட்டனனன்றே, நிரந்தரித்தனன் புறத்துறுபரிசங்க ளிற்றனனென மூங்காலே, துறந்தசித்தத்தின் றிரநிலையிரும்பினன் முகடுறு மனத்தாலே, புரந்தரற்றவ வீதகவ்வியமுனி புலப்படநினைவுற்றான்.

இ - ள். பார்த்திக்குறமனத்தினை - விரிந்து திசைகளிற் செல்லுகின்ற மனதை, பையப் பையப்பார்த்து - மெள்ளமெள்ளப்பார்த்து, மீட்டனன் - திருப்பி, உள்ளே நிரந்தரித்தனன் - அகத்தில் நிரந்தரமாகச் செய்தான், புறத் துளபரிசங்கள் - புறம்பிலுள்ள விடயசம்பந்தங்களை, ஒழுங்கு நீற்றனன் - கிரம மாக நீக்கி, தாந்தசித்தத்தின் - செலுத்திய மனதின், திரநிலைவிரும்பினன் - திடநிலையைவிரும்பி, துகளறுமனத்தால் - குற்றமற்ற மனதினால், புரந்தகற்ற வம் - நிலைத்த நல்லதவத்தையுடைய, வீதகவ்வியமுனி - வீதகவ்விய முனியான வர், புலப்பட நினைவுற்றான் - தெரிய விசாரணை செய்தான் — எ - று.

எ - து. விரிந்து திசைகளில் செல்லுகின்ற மனதைமெள்ள மெ ள்ளப் பார்த்துத் திருப்பி அகத்தில் நிரந்தரமாகச் செய்தான். புறம் பிலுள்ள விடயசம்பந்தங்களைக் கிரமமாக நீக்கிச் செலுத்திய மனதின் திடநிலையை விரும்பிக் குற்றமற்றமனதினால் நிலைத்த நல்லதவத்தையு டைய வீதகவ்விய முனியானவர் தெரியவிசாரணை செய்தான் - எ - ம்.

### மனம் நின்றவிடத்து நித்த தனதாத்மஞானத்தினால் நின்ற மனது பிராணசலத்தினாற் சலிக்கின்ற தெனக் காண்டல்.

---

வியப்புடைத்து நிதமீளுவித்திருக்கவும் விசையுயிரசைவுற்று, இய க்குநெஞ்சகந் திரநிலையன்றியே சிறுசருகெனவோடும், பயக்குமின் பயில் கடனின்றுபடமுறும் படநின்றுகடமெய்து, மயக்கமேவுபல் பொருள்களிற் போய்விழு மரங்களிற் குரங்கேபோல்.

இ - ள். இவ்வியப்புடைத்து - சதுர்ப்பக்கதையுடையது, மீளுவித்திருக் கவும் - திருப்பிவைத்திருக்கவும், விசையுயிரசைவுற்று - வேகமாயுள்ள பிராண னசைவைப்பொருந்தி, இயக்குநெஞ்சகம் - அசையுமனமானது, திரநிலையன்றி - இடமான நிலையில்லாமல், சிறுசருகெனவே - (காற்றிலகப்பட்ட) சிறு சருகைப் போல, ஓடும் - அலையும், பயக்குமின்பயில் - உண்டாகுஞ் சுகமில்லாத, கடநின் றுபடமுறும் - கடத்தினின்றும் படத்தைப்பொருந்தும், படநின்று - படத்திலி ருந்து, கடமெய்தும் - கடத்தை யடையும், மயக்கமேவு - மயக்கம் பொருந்திய, பல்பொருள்களில் - பலவிடயங்களில், மரங்களிற் குரங்கேபோல் - விருக்ஷங்களி ல் தாவு மற்கடம்போல, போய்விழும் - தாவும் — எ - று.

எ - து. சதுர்ப்பக்கதையுடையது, திருப்பிவைத்திருக்கவும் வே கமாயுள்ள பிராணனசைவைப்பொருந்தி அசையுமனமானது இடமா னநிலையில்லாமல் காற்றிலகப்பட்ட சிறுசருகைப்போல அலையும் உண்டாகுஞ் சுகமில்லாத கடத்தினின்றும் படத்தைப் பொருந்தும்

படத்திலிருந்து கடத்தையடையும், மயக்கம் பொருந்திய பலவிடய ங்களில் விருட்சங்களிற்றாவும் மற்கடம்போலத்தாவும்.

## தனதறிவினால் இந்திரியங்களை நீக்குதல்.



விழிமுதற்பொறி யாய்மனத் துவாரமாய் மேதையிந் திரியமென் றே, யொழிவிலாவபி மானஞ்செயைம்பொறி யுணர்ந்ததுகாண்புறு நானே, கழியுமிந்திரியங் காளவமாகவே கலங்குகேனந்தோநீ, ரழிவில் சின்மயப் பகவனாய்ப் பகவனாய்ச்சகலசான் றாகிநின்றனனானே.

**இ - ள். விழிமுதற்பொறியாய் - கண்முதலிய இந்திரியங்களாகியும், மனத்துவாரமாய்-மனதுக்கு வாசலாகியும், மேதையிந்திரியமென்று-ஞானேந்திரியமென்று, ஒழிவிலா அபிமானஞ்செய்-நீங்காத அபிமானத்தைச் செய்கின்ற, ஐம்பொறி-பஞ்சேந்திரியங்களை, உணர்ந்து-அறிந்து, காண்புறுநானே-பார்க்கின்றவனே நானும், கழியுமிந்திரியங்கள்-இறவாநின்ற இந்திரியங்களே, அவமாக-வீணாக, அந்தோநீர்-அய்யோ நீங்கள், கலங்குகேன்-கலங்குவதேன், அழிவில் சின்மயப்பகவனாய்-கெடாத சிற்ஸ்வரூபமாயிருக்கின்ற பகவனாய், யான்-நானே, சகலசான்றாகிநின்றனன்-சகலத்துக்குஞ் சாட்சியாகி யிருக்கின்றேன்—எ - று.**

எ - து. கண்முதலிய இந்திரியங்களாகியும், மனதுக்குவாசலாகியும், ஞானேந்திரியமென்று நீங்காத வபிமானத்தைச் செய்கின்ற பஞ்சேந்திரியங்களை அறிந்து பார்க்கின்றவனே நானும். இறவாநின்ற இந்திரியங்களே! வீணாக அய்யோ நீங்கள் கலங்குவதேன். கெடாத சிற்ஸ்வரூபமாயிருக்கின்ற பகவனாய் நானே சகலத்துக்குஞ் சாட்சியாகி யிருக்கின்றேன்—எ - ம். (49)

அன்னதன்மையுற் றறிவினான்மிக்கயா னறிந்தகண் முதலெந்தும், பின்னமாகியே வானுயர்குன்றினைப் பிரிந்தபாதலம் போலாம், மன்னகங்களும் வழிச்செலுமவர்களும் பறையரு மறையோறு, மென்னவச்சமுற் றுயர்ந்தசின்மாத்திர மிந்தியத்தருங்கைய்தா.

**இ - ள். அன்னதன்மையுற்று-அத்தன்மையான குணத்தைப்பொருந்தி, அறிவினான்மிக்க-அறிவினன் மிகுந்த, யானறிந்த-நான்பார்க்கப்பட்ட, கண்முதலெந்தும்-சக்ஷு முதலிய பஞ்சேந்திரியங்களும், பின்னமாகி-வேற்றுமையாகி வானுலகத்தினை-சுவர்க்கலோகத்தை, பிரிந்த பாதலம்போலாம்-நீங்கின பாத**

னத்துக் கொப்பாரும், பன்னகங்களும்-சற்பங்களும், வழிச்செலு மவர்களும்-மார்க்கத்திற் போகின்றவர்களும், பறையரும் - சண்டாளரும், மறையோரு மென்ன-அந்தர்களும்போல, அச்சமுற்று - பயமடைந்து, உயர்ந்த சின்மாத் திரம்-மேலாகிய ஞானமானது, இந்தியத்தருகெய்தா-பொறிகளின் சமீபத் திலும் வரமாட்டாது—எ - று.

எ - து. அத்தன்மையான குணத்தைப்பொருந்தி அறிவினுன் மிருந்த நான் பார்க்கப்பட்ட சக்ஷு முதலிய பஞ்சேந்திரியங்களும் வேற்றுமையாகி, சுவர்க்கலோகத்தை நீங்கின பாதாளத்துக்கொப் பாரும், சற்பங்களும், மார்க்கத்திற் போகின்றவர்களும், சண்டாள ரும், அந்தணர்களும் போல பயமடைந்து மேலாகிய ஞானமானது பொறிகளின் சமீபத்திலும் வரமாட்டாது—எ —ம்.

(இ-உ-க-ம்) சின்மாத்திரமாய் விளங்குகின்ற யான்மனே வசமாய்ச்ச ஞ்சரிக்கின்ற இந்திரியங்களிற் சேரேனென் றதனை வேறுபடுத்தின தென் பதாம். (50)

## மனதை நீக்குதல்.



சாறுவாகனுய் சாரணனுகிநாற் றடந்திசை பலியேர்க்கப்
பாறுநெஞ்சமே வீணிலேயருந்துதல் பயனில படிமீதே
யாறியேவிளை யாடுநீயுனையறி வென்னும்வா தனைபொய்யாம்
வேறுபாடுதான் மிருந்துளமனத்தொடு மெய்புணர் வொன்றுகா.

இ - ள். சாறுவாகனுய்-பரலோக பராமுகனுகியும், சாரணனுகி - வைவு காரனுகியும், நாற்றடந்திசை - விசாலம்பொருந்திய நான்குதிக்கிலும், பலி யேர்க்க - பிச்சைவாங்க, பாறுநெஞ்சமே-ஓடாகின்ற மனதே, வீணிலேயரு ந்துதல்-வீணுகப் பிரயாசைப்படுதலில், பயனில்-பிரயோசனமில்லை, படிமீது - பூமியின்கண், நீ-நீயே, ஆறியே விளையாடு - விஸ்ராந்தியடைந்து விளையாடு வாய், உனையறிவென்னும் வாதனை - உன்னை ஞானமென் றென்னுகின்ற வாசனை, பொய்யாம் - அசத்தியாம், வேறுபாடுதான்-வேற்றுமையானது, மிரு ந்துள மனத்தொடு-மிருந்திருக்கின்ற மனத்துடன், மெய்புணர்வு - உண்மை ஞானமானது, ஒன்றுகா - ஒருமைப்படாது—எ - று.

எ - து. பரலோக பராமுகனுகியும், வையுகாரனுகியும், விசாலம் பொருந்திய நான்குதிக்கிலும் பிச்சைவாங்க ஓடாகின்ற மனதே! வீணுக பிரயாசைப்படுதலில் பிரயோசனமில்லை. பூமியின்கண் நீயே விஸ்ராந்தியடைந்து விளையாடுவாய் உன்னை ஞானமென்றென்னு

கின்றவாசனை அசத்தியமாம். வேற்றுமையானது மிகுந்திருக்கின்றம
னத்துடன் உண்மைஞானமானது ஒருமைப்படாது—எ-ம். (51)

சுகமிருக்குன னானெனலங்கரத் தன்மதி யிதுதீதா
மகமதிப்பினா லிவனவனாகுநா னென்னுமிவ் வாரம்ப
மிகவகற்றுவா யுன்படிவெதுவெனில் விசாரமின் மையதாகு
மிகவிசாரத்தா லழிந்திடும்பரிதியா லிருள்கழி வதுபோல.

இ - ள். நானெனஹங்காரத்தன்மதி-(விடயங்களை) நானென்னும் மகங்காரமாகிய துற்புத்தியே, சுகமிருக்குனன் - சுகமாயிருக்கின்றேனென்கின்ற, இதுதீதாம் - இதுகுற்றமாம், அகமதிப்பினால்-அகங்காரமதத்தினால், இவனவனாகுநான் - இவனுமவனுநானாகும், என்னும்-என்கின்ற, இவ்வாரம்பம்-இவ்வாரம்பத்தை, மிகவகற்றுவாய் மிகவும் நீக்குவாய் - உன்வடிவெதுவெனில்- உனதுருவமெதுவென்றால், விசாரமின்மையதாகும்-விசாரணையில்லாததாம், பரிதியால் - சூரியனால், இருள்கழிவதுபோல - அந்தகாரங் கெடுவதுபோல, இகவிசாரத்தா லழிந்திடும - இப்பொழுது செய்கின்ற விசாரணையினாலழிவாய்—எ - று.

எ - து. விடயங்களை நானென்னு மகங்காரமாகிய துற்புத்தியே சுகமாயிருக்கின்றே னென்கின்ற இது குற்றமாம். அகங்கார மதத்தினால் இவனுமவனு நானாகும், என்கின்ற இவ்வாரம்பத்தை மிகவு நீக்குவாய். உனதுருவ மெதுவென்றால் விசாரணையில்லாததாம். சூரியனால் அந்தகாரங் கெடுவதுபோல இப்பொழுது செய்கின்ற விசாரணையினாலழிவாய்—எ - ம். (52)

இதுவுமது.

முன்னந்தோற்றமற் றிப்பொழுதனக்கெனை யுருவன் றிம்முறை
யாலே, பின்னுந்தோன்றலை யென்னுடை நெஞ்சமேபெரிதுநீ பெறு
நன்மை, யின்னறீர் தெய்வ சகாயத்தாலிடரிலா வின்பமுற்றியானெ
ன்னுந் துன்னுசாந்தனாய்த் துரியமாமென் சொரூபத்திலே சுகிக்கி
ன்றேன்.

இ - ள். முன்னந்தோற்றமற்று-முன்னந்தோற்றாமல், இப்பொழுதனைக்கெனவுருவின்றி-இப்போதுனக் கென்றோருருவுமில்லாத, இம்முறையால்-இவ்வொழுங்கினால், பின்னுந்தோன்றலை-பினபுந் தோற்றமாட்டாய், என்னுடைநெஞ்சமே - என்னுடைய மனமே, நீபெறு நன்மை - நீயடைகின்ற நன்மையானது, பெரிது - பெரியதாம், இன்னறீர்-துன்ப நீங்கிய, தெய்வசகாயத்தால் - தெய்வசகாயத்தினால், இடரிலா இன்பமுற்று-துன்பமில்லாத ஆநந்தத்தைப் பொருந்தி, இயான் - நான், என்றும் - எப்போதும், துன்னுசாந்த

ளய்-நிறைந்த சாந்தத்தையுடையவனுய், துரியமாம்-துரியமாகிய, என்சொரூபத்தில்-எனது ஆத்மஸ்வரூபத்தில், சுகிக்கின்றேன் - ஆனந்திக்கின்றேன்.

எ — து. முன்னந்தோற்றமல் இப்போதுனக்கென்று ஒருருவுமில்லாத இவ்வொழுங்கினால் பின்னுந் தோற்றமாட்டாய். என்னுடைய மனமே நீ யடைகின்ற நன்மையானது பெரியதாம். துன்பநீங்கிய தெய்வசகாயத்தினுல் துன்பமில்லாத ஆநந்தத்தைப் பொருந்தி நான் எப்போதும் நிறைந்த சாந்தத்தையுடையவனுய் துரியமாகிய எனதாத்மஸ்ரூபத்தில் ஆநந்திக்கின்றேன்— எ — ம்.

(இ-கூ-க-ம்.) பேதமாகியும் அபேதமாகிய வாத்மாவுக்குச் சம்பந்தமின்றாகியும், விசாரிக்கி லில்லாததாகியு மிருக்கின்ற மனதைச் சுசுரூபியாயிருக்கின்ற ஆத்மானுபவத்தினு லீக்கின தென்பதாம். (53)

## விசாரமுகத்தால் தந்துவங்களை நீக்கி சாம்பவிமுத்திரையை முன்னிட்டு நிருவிகற்ப சமாதியிலிருத்தல்.

எனவொருப்பட்டு வாதனைதீர்முனி யிந்திய மலைவின்றி
மனனைவன்பினு னிறுத்தினன்விறகினை மாய்த்ததீச் சிகையுள்ளே
நனியடங்கல்போ லிவனுயி ரொழுங்கிலே நன்கொடுங்கினமூக்கி
னுனிநுண்பார்வையாற் சிறிதலர்கமலமே னோக்கங்க ணிகரான.

இ - ள். எனவொருப்பட்டு-இப்படியென்றொருமையாகி, வாதனை தீர் முனி-வாதனையிறந்த வீதகவ்விய முனியானவர், இந்தியமலை வின்றி-பொறிகளலைவில்லாமல், மனனை யன்பினுனிறுத்தினன்-மனதை யாத்தினுனிறுத்தினுன், விறகினைமாய்த்த தீச்சிகை-விறகையெரித்த வக்கினிச் சுவாலையானது உள்ளேநனியடங்கல்போல் - தனக்குள்ளே மிகவுமடங்குதல்போல, இவனுயிர்-இவர் பிராணனுனது, ஒழுங்கில்-கிரமத்தில், நன்கொடுங்கின - நன்றாக (உள்ளே) யடங்கின, மூக்கினுனி-நாசிகாக்கத்தில், நுண்பார்வையால்-சூட்சமதிருஷ்டியினுல், நோக்கங்கள்-கண்களானவை, சிறிதலர்கமலம் - கொஞ்சம் அலர்ந்திருக்கின்ற தாமரைப்பூவுக்கு, நிகரான-சமானமாயின—எ-று.

எ — து. இப்படியென் றொருமையாகி வாதனையிறந்த வீதகவ்விய முனியானவர் பொறிகளலைவில்லாமல் மனதை யாத்தினுனிறுத்தினுன். விறகையெரித்த அக்கினிச்சுவாலையானது தனக்குள்ளே மிகவுமடங்குதல்போல இவர் பிராணனுனது கிரமத்தில் நன்றாகவுள்ளே

யடங்கின. நாசிகாந்தத்தில் சூட்சுமதிருஷ்டியினால் கண்களானவை கொஞ்சமலர்ந்திருக்கின்ற தாமரைப் பூவுக்குச் சமானமாயின—எ-ம்.

சிரங்கழுத்துட லூனங்கள் சமமுறச் சிலையிலே வகுத்தென்ன நிரந்தசித்திர மென்னமுன்னூறியாண் டிருந்தன னிமிடம்போற் பரந்தகாருநாள் வெள்ளத்தினெக்கரிற் படிந்ததிங்கிவன்மேனி,புரங்கொண்மாமுனி யுணர்ந்தனன் மண்ணினு ளுடலசைந்திலமென்றே.

இ-ள். சிரம்-சிரசும், கழுத்து-கண்டமும், உடல்-சரீரமும், தானங்கள்-அவயவங்களும், சமமுற-சமமாக, சிலையிலே வகுத்தென்ன-கல்லிற் செய்ததுபோலவும், நிரந்தசித்திரமென்ன-நெருங்கின வோவியத்தைப்போலவும், முன்னூறியாண்டு-முன்னூறு வருடம், நிமிடம்போல் - நிமிடமாக, இருந்தனன்-(சமாதி) யிருந்தான், பரந்தகாருநாள்-மிகுந்த மழைகாலத்தின், வெள்ளத்தினெக்கரில் - வெள்ளத்தினாலுண்டாகிய மணற்குன்றில், இவன்மேனி-இவனது சரீரம், படிந்தது - புதைந்தது, உரங்கொண்மாமுனி - திடத்தையுடைய வீதகவ்விய மகாமுனியானவர், மண்ணினுள்-பூமியினுள், உடலசைந்திலதென்று - சரீரமசையவில்லையென்று, உணர்ந்தனன் - (சமாதியைவிட்டு) அறிந்தனன்—எ-று.

எ-று. சிரசும், கண்டமும், சரீரமும், அவயவங்களும், சமமாகக் கல்லிற்செய்ததுபோலவும், நெருங்கின ஓவியத்தைப்போலவும், முன்னூறுவருடம் நிமிடமாகச் சமாதியிருந்தான் மிகுந்த மழைகாலத்தின் வெள்ளத்தினாலுண்டாகிய மணற்குன்றில் இவனது சரீரம்புதைத்தது, திடத்தையுடைய வீதகவ்விய மகாமுனியானவர் பூமியினுள் சரீரமசையவில்லையென்று சமாதியைவிட்டறிந்தனன்—எ-ம்.

(இ-உ-க-ம்.) தேகமுதலிய யாவுந் தோன்றாத சிற்சமாதியி லிருந்தனனென்பதாம்.

## சமாதியினின்றும் நீங்கின அறிவும் மனோரூபமாயுண்டான சநநபரம்பரையைச் சொற்பனம்போல அறிதல்.



தரைமறைத்தலா லறிவிலே தோன்றியே சரீரத்தி னுயிர்முற்றும்
புரைகளியாவையு மடைதலாலசைந்தில போதமுற்பவித்துள் ளே
விரையுந்தன்மன வடிவமாயிதயத்தில் விரிதறிந் ததுயாவு
நிரைகள்சொற்பனம் போலவனவ்வழி னொந்தசுற விவைகண்டான்.

இ - ள். தரைமறைத்தலால்-பூமிமறைத்தபடியால், அறிவிற்றேன்றிய, அறிவிலுண்டாகிய, சரீரத்திலுயிர்முற்றும்-தேகத்திலுள்ள பிராணன்களனைத்தும், புரைகளியாவையும் - இரந்தரங்களெல்லாம், அடைதலால்-அடையப்பட்டபடியினுல், அசைந்தில் - அசையவில்லை, உள்ளே போதமுற்பவித்து-அகத்திலறிவுண்டாகி, விரையுந்தன் மனவடிவமாய்-வாசனையான தன்மனோரூபமாய், இதயத்தில் விரிந்து இருதயத்திற் பரவியாவும்-சகலத்தையும், அறிந்தது-தெரிந்தது, நிரைகள் சொற்பனம்போல்-ஒழுங்காகிய சொப்பனத்தைப்போல, அவன்-அந்த வீதகவ்வியமுனி அவ்வயின் - அவ்விடத்தில், நெஞ்சுற இவைகண்டான்-மனதிற்பொருந்த இவைகளை பார்த்தான்—எ - று.

எ - து. பூமி மறைந்தபடியால் அறிவிலுண்டாகிய தேகத்திலுள்ள பிராணன்களனைத்தும் இரந்தரங்களெல்லாம் அடையப்பட்டபடியினுல் அசையவில்லை, அகத்தில் அறிவுண்டாகி வாசனையான தன் மனோரூபமாய் இருதயத்திற் பரவிசகலத்தையும் தெரிந்தது. ஒழுங்காகிய சொப்பனத்தைப்போல் அந்த வீதகவ்வியமுனி அவ்விடத்தில் மனதிற்பொருந்த இவைகளைப் பார்த்தான்—எ - ம். (56)

ஈசன்வெற்பயன் முனிவனுய் நூறியாண் டிருந்தது நூறுண்டு
காசிலின்பவித் தாதரனாதுங் கடவுளர் தொழவிண்ணில்
வாசவன்னென வைந்துகமிருந்தது மதிச்சடை யிறைவற்கு
நேசமாங்கண மாயொருகற்பகா லின்றது மவன்கண்டான்.

இ - ள். ஈசன்வெற்பயல் - கைலாசபருவத்தின் சாரலில், முனிவனுய்-தவசியாக, நூறியாண்டிருந்ததும்-நூறுவருடமிருந்தது, காசிலின்பவித்தாதரன்-குற்றமற்ற சுகமுள்ள வித்தியாதரனாகி, நூறுண்டு-நூறுவருஷம், ஆனதும் ஆகியதும், கடவுளர்தொழ-தேவர்கள் வணங்கும்படி, விண்ணில்-தெய்வலோகத்தில், வாசவனென - தேவேந்திரனாக, ஐந்துகமிருந்ததும்-ஐந்து யுகமிருந்ததுவும், மதிச்சடையிறைவற்கு-சந்திரனைச் சடையிற்றரித்த பரமேஸ்வரனுக்கு, நேசமாங்கணமாய்-அன்பாகிய கணேசனுய், ஒருகற்பகாலின்றது மவன் கண்டான்-ஒரு கற்பகாலமிருந்ததும் அவ்வீதகவ்வியமுனி பார்த்தான்-எ-று.

எ - து. கைலாசபருவதத்தின் சாரலில் தவசியாக நூறுவருஷமிருந்தும், குற்றமற்ற சுகமுள்ள வித்தியாதரனாக நூறுவருஷம் ஆகியதும், தேவர்கள் வணங்கும்படி தெய்வலோகத்தில் தேவேந்திரனாக ஐந்து யுகமிருந்ததுவும் சந்திரனைச் சடையிற்றரித்த பரமேஸ்வரனுக்கு அன்பாகிய கணேசனுய் ஒரு கற்பகாலமிருந்ததும் அவ்வீதகவ்வியமுனி பார்த்தான்—எ - ம். (57)

விரவுதோற்றா வாலிவையனைத்தையும் வீதகவ் வியனோக்கிப், பானுக்காட்செய்த பலத்தினாலிறந்தன வறிந்துதான் வலியுண்டாய்ப், புரணமாகமுற்பவங்களிற்பொன்றிமுன் போதயன்னுடன் முற்றும், காவாக்கண்டு வீதகவ்வியப்பேர் காயமாய் வாக்கண்டான்.

இ - ள். விரவு-(மூன்று காலமுங்)கலந்தறிகின்ற, தோற்றாவால்-(ஞானதிருஷ்டியினால், இவையனைத்தையும்-இப்பொழுது சொல்லப்பட்ட சகலத்தையும், வீதகவ்வியனோக்கி - வீதகவ்விய முனிபார்த்து, பானுக்காட்செய்த-பரமேஸ்வரனுக் கடிமையாகப்பணிசெய்த, பலத்தினால்-பிரயோசனத்தினால் இறந்தனவறிந்து-இறந்த காலங்களைத்தெரிந்து, தான்வலியுண்டாய்-தனக்கு வல்லமையுண்டாகி, புரணமாக-பூரணமாக, முற்பவங்களில்-முற்சாநங்களில், முன்பொன்றிப்போய் - முற்கசித்துப்போன, தன்னுடன்முற்றும்-தனது சரீரமுழுமையும், காவறக்கண்டு - மறப்பில்லாமற்பார்த்து, வீதகவ்வியப்பேர்-வீதகவ்வியனென்னு நாமத்தையுடைய, காயமாய்வரக்கண்டான் - சரீரமாக வரப்பார்த்தான்—எ - று.

எ - து. மூன்றுகாலமுங் கலந்தறிகின்ற ஞானதிருஷ்டியினால் இப்பொழுது சொல்லப்பட்ட சகலத்தையும் வீதகவ்விய முனிபார்த்து பரமேஸ்வனுக் கடிமையாகப் பணிசெய்த பிரயோசன பூரணமாக முற்சநநங்களில் முந்நசித்துப்போன தனது சரீரமுழுதையும் மறப்பில்லாமற் பார்த்து வீதகவ்வியனென்னு நாமத்தையுடைய சரீரமாக வரப்பார்த்தான்—எ - ம்.

(இ-க-க-ம்.) பிரமத்தினின்றும் நழுவின முதலெடுத்த பவங்களையறிந்ததிலிப்போது, வீதகவ்வியனெனத் தெரிந்த தென்பதாம். (58)

## மறைப்பட்ட தேகத்தை வெளிப்படுத்துமுபாயஞ் சிந்தித்துச் சூரியனிடத்திற் செல்லுதல்.

மறையுமிவ்வுட லெடுத்துமென் றெண்ணிநன் வான்கதிரவன்பாற்போய், முறைசெய்பிங்கலன் றனைக்கொணர்ந் தெடுப்பது முடியுமென்றெருருப்பட்டா, னறையுங்காற்றுரு வாய்ப்புரியட்டக வங்கமாய்க் கதிரோன்பாற்,பொறைகொண்மாமுனி சேர்தனுமிதயத்திற் புகுந்துதினன்கண்டு.

இ - ள். மறையுமிவ்வுடல் - பூமியின் மறைந்திருக்கின்ற முந்த சரீரத்தை, எடுத்துமென்றெண்ணி - எடுப்போமென்று நினைந்து, நன்வான்

கதிரவன்பாற்போய்-நல்லபெருமையையுடையசூரியனிடத்திற்சென்றுமுறை செய்-முறைமையைச் செய்கின்ற, பிங்கலன்றனைக்கொணர்ந்து- பிங்கலனையழைத்துவந்து, எடுப்பது-எடுப்பதற்கு, முடியுமென்று - நிறைவேறுமென்று, ஒருப்பட்டான்-ஒரு சித்தமானவனாய், அறையுங்காற்றுறவாய்-மோதாநின்ற வாயுவுருபமாய், புரியட்டகவங்கமாய்-புரியட்டக சரீரத்தோடும், கதிரோன் பால்-சூரியனிடத்தில், பொறைகொண்மாமுனி - சாந்தியையுடைய வீதகவ்விய மகாமுனியானவர், சேர்தலும்-(வந்து சேர்ந்தமாத்திரத்தில், இனன்-சூரியன், இதயத்தில்-(தன) திருதயத்தினால், புகுந்தவாறுகண்டு - வந்த தன்மையைப் பார்த்து—எ - று.

எ - து. பூமியின் மறைந்திருக்கின்ற விந்தச் சரீரத்தை எடுப்போமென்று நினைத்து நல்ல பெருமையையுடைய சூரியனிடத்திற் சென்று முறைமையைச் செய்கின்ற பிங்கலனை யழைத்துவந்து எடுப்பதற்கு நிறைவேறுமென்று ஒருசித்தமானவனாய் மோதாநின்ற வாயுவுருபமாய் புரியட்டக சரீரத்தோடும் சூரியனிடத்தில் சாந்தியையுடைய வீதகவ்விய மகாமுனியானவர் வந்து சேர்ந்த மாத்திரத்திரத்தில் சூரியன் தனதிருதயத்தினால் வந்த தன்மையைப் பார்த்து.

## பிங்கலன் வருதல்.

முன்னநின்றபிங் கலன்றனைக்கதிரவன் முழுதுணர்ந் துடனேவ
வன்னவீதகவ் வியப்பெயருள்ளமு மாதித்த னுண்ணின்று
தன்னதாக்கையில் விந்தவெற்பருகுபோய்ச் சார்தரக் கதிரோனாற்
சொன்னபிங்கலன் வந்துகைகதத்தினாற் றொன்னில முறக்கீறி.

இ - ள். கதிரவன்-சூரியனானவன், முழுதுணர்ந்து-முனியினபிப்பிராயம் முழுதுந்தெரிந்து, அன்ன-அத்தன்மையான, வீதகவ்வியப்பெயர்-வீதகவ்வியனென்னு நாமத்தையுடையவனது, உள்ளமும்-சூட்சுமசரீரமும், ஆதித்தனுண்ணின்றும் - தனதிடத்தினின்றும், விந்தவெற்பருகு-விந்தமலைச் சார்பிலிருக்கின்ற, தன்னதாக்கையில்-அம்முனியின் சரீரத்தில், போய்ச்சார்தர-போய்ச்சேரும்படி, கதிரோனால்-சூரியனால், முன்னநின்ற பிங்கலன்றனை-பக்கத்திலிருந்த பிங்கலனை, உடனேவ-வீதகவ்வியமுனியோடனுப்ப, சொன்ன பிங்கலன்-முன்சொல்லிய பிங்கலனானவன், வந்து-முனியோடும்வந்து, கைகதத்தினால் - காதித்தன்ன யுகிரினால், தொன்னிலமுறக்கீறி - பழமையாகிய பூமியைப் பொருந்தக்கிழித்து—எ - று.

எ — து. சூரியனானவன் முனியினபிப்பிராய முழுதுந்தெரிந்து அத்தன்மையான வீதகவ்வியனென்னு நாமத்தையுடையவனது சூட்சுமசரீரமும் தனதிடத்தினின்றும் விந்தமலைச்சார்பிலிருக்கின்ற அம்முனியின் சரீரத்தில்போய்ச் சேரும்படி சூரியனால் பக்கத்திலிருந்த பிங்கலனை வீதகவ்விய முனியோடனுப்ப, முன்சொல்லிய பிங்கலனானவன் முனியோடும் வந்து காத்திலுள்ள உகிரினால் பழமையாகிய பூமியைப் பொருந்தக் கிழித்தது—எ - ம். (60)

## மண்ணின் மறைந்த தேகத்தை வெளிப்படுத்தல்.



மானிலத்தினை யகழ்ந்துபிங்கலன்றா வருங்களே பரந்தன்னின்
மோனமாம்புரி யட்டகம்புகுந்தது மொழிந்தபிங் கலன்போனு
னானமாதவன் மூழ்கினன்செபித்தன னரிச்சித்தான் கதிரோனை
ஞானநெஞ்சினு னிறையுடன்முன்புபோ லனந்திகழ்ந்ததுமீண்டும்.

இ - ள். மானிலத்தினை-பெரியபூமியை, அகழ்ந்து-தோண்டி, பிங்கலன்றா-பிங்கலன்-கொடுக்க, வருங்களே பரந்தன்னின் - வாராநின்ற சரீரத்தின், மோனமாம் - மௌனமுனியினதாகிய, புரியட்டகம்-சூக்கும சரீரமானது, புகுந்தது-(தூலசரீரத்திற்) பிரவேசித்தது, மொழிந்த - முன்சொல்லப்பட்ட, பிங்கலன் போனான்-பிங்கலனானவன் எகினன், ஆனமாதவன்-(இப்படி)யான வீதகவ்விய முனியானவன், மூழ்கினன்-ஸ்நானஞ்செய்து, செபித்தனன்-செபம்பண்ணி, கதிரோனை-சூரியனை, அருச்சித்தான்-ஆராதனை செய்தான், ஞானநெஞ்சினால்-அறிவுடைய மனதினால், நிறையுடல் - நிறைந்த சரீரமானது, முன்புபோல் - முன்னையைப்போல, மீண்டும்-திரும்பவும், நலந்திகழ்ந்தது - நன்மை பிரகாசித்தது—எ - று.

எ - து. பெரிய பூமியைத் தோண்டி பிங்கலன் கொடுக்க, வாராநின்ற சரீரத்தின் மௌனமுனியினதாகிய சூக்குமசரீரமானது தூல சரீரத்தில் பிரவேசித்தது. முன்சொல்லப்பட்ட பிங்கலனானவனேகினன். இப்படியான வீதகவ்விய முனியானவன் ஸ்நானஞ்செய்து செபம்பண்ணி சூரியனை ஆராதனைசெய்தான் அறிவுடைய மனதினால் நிறைந்த சரீரமானது முன்னையைப்போலத் திரும்பவும் நன்மை பிரகாசித்தது—எ — ம்.

(இ-க-க-ம்.) முன்புரியட்டக சரீரத்தோடும் வெளிப்பட்டுப் பின்றூலதேகத்தை யெடுப்பித்து அதிற் புகுந்தன னென்பதாம். (61)

முனி சகசசமாரதியை யனுஷ்டிக்கச் சிந்தித்தல்.



வேறு.

சமமயித்திரி சாந்திசீ ரறிவருண் முதிதை
யமர்குணங்களா யனைத்தினு நெஞ்சுபற் றின்றிக்
கமர்கொள்விந்தநீர் நதடக்கரை நாள்பல கழித்து
நிமலநெஞ்சினாற் பராபர முணர்முனி நினைப்பான்.

இ - ள். சமம்-சமமும், மயித்திரி-மயித்திரியும், சாந்தி-சாந்தமும், சீர்-செல்வமும், அறிவு-ப்ரஞ்ஞையும், அருள்-கிருபையும், முதிதை-சந்தோடமு (மாகிய விவைகள்), அமர்குணங்களாய்-அமர்ந்திருக்கின்ற குணங்களையுடையவனாய், அனைத்தினும் - சகலத்திலும், நெஞ்சுபற்றின்றி - மனது பற்றில்லாமல், விந்தம்-விந்தமலைச் (சார்பிலுள்ள), கமர்கொள்-பூமியைப்பிளந்துசெல்கின்ற, தடம்-விசாலம்பொருந்திய, நீர்க்கரை-நதிக்கரையில், நாள்பலகழித்து வெகுகாலங்கழித்து, நிமலநெஞ்சினால் - நின்மலமனதினால், பராபரமுணர்முனி-பராபரத்தையுணர்ந்த முனியானவர், நினைப்பான்-சிந்திப்பான்—எ-று.

எ - து. சமமும், மயித்திரியும், சாந்தமும், செல்வமும், ப்ரஞ்ஞையும், கிருபையும், சந்தோடமுமாகியவிவைகள் அமர்ந்திருக்கின்ற குணங்களையுடையவனாய் சகலத்திலும் மனது பற்றில்லாமல் விந்தமலைச்சார்பிலுள்ள பூமியைப்பிளந்து செல்கின்ற விசாலம் பொருந்திய நதிக்கரையில் வெகுகாலங்கழித்து நின்மலமனதினால் பராபரத்தையுணர்ந்த முனியானவர் சிந்திப்பான்—எ - ம். (62)

யாவிலுங்கூடியுங் கூடாமல் சொச்சமாய்
விளங்குவேனெனல்.

பொறிகளின்றிரள் முன்னமே நிறுத்தினம் புரிந்து
நெறிகொள்சேடத்தைக் கூட்டியே மலையென நிற்போ
மறியத்தோன்றியு மறைந்தபோ லாகுது மறைந்து
செறியத்தோன்றின னொத்துநிற் குதுமொய்ம்மை சேர்ந்து.

இ - ள். பொறிகளின்றிரள்-இந்திரியக் கூட்டங்களை, முன்னமேநிறுத்தினம்-முன்பே நிறுததல் செய்தோம், புரிந்து-விரும்பி, நெறிகொள்சேடத்தை-செவ்வையாக மிஞ்சின சின்மாத்திரத்தை, கூட்டி-சேர்த்து, மலையெனநிற்போம்-மலையைப்போல ஸ்திரமாக இருப்போம், மறியத்தோன்றியும்-திரும்ப வுதயமாகியும், மறைந்தபோலாகுதும்-மறைந்தது போலாவோம், மறைந்தும்-மறைபட்டும், செறியத்தோன்றினன்-நெருங்க உதயமானவனும், மொய்ம்மைச்சேர்ந்து-சொச்சமடைந்து, ஒத்துநிற்குதும்-சமமாயிருப்போம்—எ - று.

எ - து. இந்திரியக்கூட்டங்களை முன்பே நிறுத்தல் செய்தோம், விரும்பிச் செவ்வையாக மின்சின் சின்மாத்திரத்தைச் சேர்த்து மலையைப்போல் ஸ்திரமாக இருப்போம், திரும்பவுதயமாகியும் மறைந்ததுபோலாவோம், மறைபட்டும் நெருங்க உதயமானவனாய் சொச்சமடைந்து சமமாயிருப்போம்—எ - ம். (63)

## இத்தேகத்தினின்றும் துரியவடிவாய் பிரகாசிக்கும் தன்மையைச் சிந்தித்தல்.

உணர்வுவிஞ்சியு முறங்கின னொக்குதுஞ் சுழுத்தி
தணிவறப்பெற்று முணர்ந்தவ னொக்குதுஞ் சமனாய்க்
கணமும்வேறறத் துரியமே பற்றியிக் காயத்
தனவிநின்றுமோ ரசைவறு சோதிரா மாவோம்.

**இ - ள். உணர்வுவிஞ்சியும்-விருத்திஞான மிருந்தும், உறங்கினனொக்குதும்-சுழுத்தியடைந்தவனுக் கொப்பாவோம், தணிவற - தணிவில்லாமல், சுழுத்திபெற்றும்-சுழுத்தியை யடைந்தும், உணர்ந்தவனொக்குதும்-விழித்தவனுக் கொப்பாவோம், சமனாய்-பொதுவாய், கணமும் வேற்ற-அற்பமுவேறில்லாமல், துரியமேபற்றி-துரியஸ்வரூபத்தைப் பிடித்து, இக்காயத்து-இச்சரீரத்தில், அனவிநின்றும்-சார்ந்திருந்து, ஓரசைவறு-ஒருசலனமு மில்லாத, சோதிராமாவோம்-சுயம் பிரகாசமாக நாமாவோம்—எ - று.**

எ - து. விருத்திஞான மிருந்தும் சுழுத்தி யடைந்தவனுக்கொப்பாவோம், தணிவில்லாமல் சுழுத்தியை யடைந்தும் விழித்தவனுக்கொப்பாவோம், பொதுவாய் அற்பமும் வேறில்லாமல் துரியஸ்வரூபத்தைப்பிடித்து இச்சரீரத்தில் சார்ந்திருந்து ஒருசலனமுமில்லாத சுயம்பிரகாசமாக நாமாவோம்—எ - ம்.

(ப-ம்.) **அறிவு ஆனந்தமயமா யிருக்குமென்பார், உணர்வு விஞ்சியு முறங்கின னொக்குதுமென்றும், ஆநந்தமறிவாய் விளங்குமென்பார், சுழுத்தியுணர்ந்தவ னொக்குது மென்றுங் கூறினார்.** (64)

## சுகசமாதிபெற்றுச் சீவன்முத்தனா யிருத்தல்.



**என்றுநாடிநற் றியானத்தி லாறுநா ளிருந்து
சென்றுணர்ந்தனன் கண்டுயில் சேர்பதி கனைப்போ
லொன்றுசித்தனாய் விதகவ் வியப்பெய ருயர்ந்தோன்
றன்றுசீவன்முத நியிலடைந் தசேகநாட் சுகித்தான்.**

இ - ள். என்றநாடி-(இபபடி)'யென்று சிந்தித்து, நற்றியானத்தில்-நல்லசமாதியில், ஆறுநாளிருந்து-ஆறுதினமிருந்து, கண்டுயில்சேர்-நித்திரைசெய்கின்ற, பதிகனைப்போல்-வழிச்செல்பவனைப்போல், சென்றுணர்ந்தனன்-சென்றறிந்தான், ஒன்றுசித்தனும்-பொருந்திய சித்தியுள்ளவனும், வீதகவ்வியப்பெயர் - விதகவ்விய னென்னு நாமமுள்ள, உயர்ந்தோன் - மேலானவன், துன்று - நிறைந்திருக்கின்ற, சீவன்முத்தியில் - சீவன்முத்திபதத்தை, அடைந்து - பெற்று, அநேகநாள் - வெகுகாலம், சுகித்தான்-சுகித்திருந்தான்-எ-று.

எ - து. இப்படியென்று சிந்தித்து நல்லசமாதியில் ஆறுதினமிருந்து நித்திரைசெய்கின்ற வழிச்செல்பவனைப்போலச் சென்றறிந்தான். பொருந்திய சித்தியுள்ளவனும் வீதகவ்வியனென்னு நாமமுள்ள மேலானவன், நிறைந்திருக்கின்ற சீவன் முத்திபதத்தைப்பெற்று வெகுகாலம் சுகித்திருந்தான்—எ - ம்.

(இ-ஈ-ச-ம்.) சமாதியிலுஞ் சஞ்சரித்தலிலும் ஒரு தன்மையவான சவானுபவத்தோடு விளங்கின னென்பதாம். (65)

## சீவன்முத்தியில் விதேகமுத்தியை விரும்பல்.



தீதுநன்மையின் விடுபற் றுஞ்சிதைந தேக
வீதகவ்வியன் விருப்பொடு வெறுப்புநெஞ் சிலனாய்ப்
போதன்மீட்டலும் பிறவியுங் கருமமும் போக்கி
யோதுதேகநீர் கேவல வீடுற வுணர்ந்தான்.

இ - ள். தீது நன்மையின்-தீமை நன்மைகளின், வீடுபற்றும்-விடுதலும் பற்றுதலும், சிதைந்தேக-கெட்டுப்போக, வீதகவ்வியன்-வீத கவ்வியமுனியானவர், விருப்பொடு வெறுப்பு-இராகத்துவேடங்கள், நெஞ்சிலனாய் - மனதில்லாதவனாய், போதன்மீட்டலும்-போதலும் வருதலுமாகிய, பிறவியும் கருமமும் சநநகன்மத்தையும், போக்கி-கெடுத்து, ஓது தேகநீர் கேவலம்-சொல்லாநின்ற விதேக கைவல்லியமான, வீடுறவுணர்ந்தான்-மோக்ஷமடையச்சிந்தித்தான்.

எ - து. தீமை நன்மைகளின் விடுதலும் பற்றுதலும் கெட்டுப்போக வீதகவ்வியமுனியானவர் இராகத்துவேடங்கள் மனதிலில்லாதவனாய் போதலும் வருதலுமாகிய சநந கன்மத்தையும் கெடுத்து சொல்லாநின்ற விதேக கைவல்யமான மோக்ஷமடையச் சிந்தித்தான்—எ — ம். (66)

## தத்துவங்களனைத்தையும் தனதாத்மஸ்வரூபத்திற் கரைக்கச் சிந்தித்து இராகத்வேஷங்களைக் கரைத்தல்.

சித்தனாமுனி யொருபகற் கிரிமுழை சேர்ந்து
மெத்தபங்கயா சனத்தினன் றான்றன்னிற் பேசு
மெத்துமாசையே நிராசையே மேவுதி முனிவே
யொத்துளாறுதி விநோதித்தே னெடும்பக லும்மால்.

இ - ள். சித்தனாமுனி-சித்தனாகிய வீதகவ்விய முனியானவர், ஒருபகல் ஒருதினத்தில், கிரிமுழைசேர்ந்து-மலைக்குகையையடைந்து, மெத்த பங்கயாசனத்தினன்-கட்டிய பதுமாசனத்தை யுடையவனாய், தான்றன்னிற் பேசும்-தன்னிடத்திற்றானே பேசுவார், மெத்துமாசையே - மிருதுவான ஆசையே, நிராசையையமேவுதி - நிராசையைப் பொருந்தக்கடவாய், முனிவே-கோபமே ஒத்துளாறுதி-சமமாகவுள்ளே சாந்தியடையக் கடவாய், உம்மால்-உங்களோடும், நெடும்பகல்-வெகுகாலம், விநோதித்தேன்-விநோதத்தை யடைந்தேன்.

எ - று. சித்தனாகிய வீதகவ்வியமுனியானவர் ஒருதினத்தில் மலைக்குகையை யடைந்து கட்டிய பதுமாசனத்தை யுடையவனாய்த் தன்னிடத்திற்றானே பேசுவார். மிருதுவான ஆசையே நிராசையைப் பொருந்தக்கடவாய், கோபமே! சமமாக வுள்ளே சாந்தியடையக்கடவாய், உங்களோடும் வெகுகாலம் விநோதத்தை யடைந்தேன்—எ - ம். (67)

## போகசுகதுக்கங்களைக் கரைத்தல்.



வேறு.

போகங்காளுமைத்தொழுதே னெடுநாளும்மாற் புவியில்விளையாடியவா போதும்போதுஞ், சோகநீ ரிவ்வீடு மறக்கச்செய்தசுகங்காளுங் களைத்தொழுதேன் றுயர்காளும்மா, லாகந்தான் வேகலினாலன்றோவன்பா லாத்துமதத் துவமுணர்ந்தே னாதலாலே, யோகஞ்சேர் முத்தியெனக் குதவினீர்நீ ருபகரித்த வுமைத்தொழுத லுரிமையன்றோ.

இ - ள். போகங்காள்-போகங்களே, உமைத்தொழுதேன்-உம்மை வணங்கினேன், உம்மால்-உங்களால், நெடுநாள்-வெகுகாலம், புவியில்-சகத்தில், விளையாடியவா - விளையாடின விதம், போதும் போதும் - போதும் போதும், சோகந்நீர் - துக்கமில்லாத, இவ்வீடு - இந்த மோக்ஷத்தை, மறக்கச்செய்த - மறந்து போகச்செய்த, சுகங்காள் - (விஷய) சுகங்களே,

உங்களைத் தொழுதேன்-உங்களைவணங்கினேன், துயர்காள் - துன்பங்களே, உம்மால்-உங்களால், ஆகந்தான்-சரீரமானது, வேகலினாலன்றோ - வெகுதலினாலல்லவா, அன்பால்-அன்பினால், ஆத்தும தத்துவ முணர்ந்தேன்-ஆத்தும தத்துவத்தை யறிந்தேன், ஆதலால்-ஆதலினால், யோகஞ்சேர்முத்தி - ஐக்கியங்கூடிய மோக்ஷத்தை, நீர்-நீங்கள், எனக்குதவினீர்-எனக்குக் கொடுத்தீர்கள், உபகரித்த-உபகாரஞ்செய்த, உமைத்தொழுதல் - உங்களை வணங்குதல், உரிமையன்றோ-உரியதல்லவா—எ - று.

எ - து. போகங்களே! உம்மை வணங்கினேன்; உங்களால் வெகுகாலம் சகத்தில் விளையாடினவிதம் போதும்போதும். துக்கமில்லாத இந்தமோக்ஷத்தை மறந்துபோகச்செய்த விடய சுகங்களே! உங்களை வணங்கினேன்; துன்பங்களே! உங்களால் சரீரமானது வேகுதலினாலல்லவா அன்பினால் ஆத்துமதத்துவத்தை யறிந்தேன். ஆதலினால் ஐக்கியங்கூடிய மோக்ஷத்தை நீங்கள் எனக்குக் கொடுத்தீர்கள், உபகாரஞ்செய்த உங்களை வணங்குதல் உரியதல்லவா—எ-ம். (68)

## தேகமிச்சை நீதியான இவைகளைக் கரைத்தல்.

---

நெடுநாளை நண்பனு முடலேயுன்னை நீக்குகின்றேன் மெய்ஞ்ஞான நிரம்பக்கற்று,கெடுங்கேடுன் னுலுனக்குத் தேடிக்கொண்டாய் கிளராசை யெனுந்தாயே கேளாயென்சொற், றடுமாறி நனிவாடித்தளரவேண்டாஞ் சாந்தனு யானகன்றேன் றருமமேநீ, யடுங்கோர நரகந்தீர் துறக்கத்தேமுன் னுக்கினையால் வாழியுனைத் தொளுவேனன்பால்.

இ - ள். நெடுநாளைநண்பனும்-வெகுகாலம் இஷ்டனுன, உடலே - சரீரமே, உன்னை நீக்குகின்றேன் - உன்னைத்தள்ளுகின்றேன், மெய்ஞ்ஞானம்-உண்மை ஞானமானது, நிரம்பக்கற்று-பூரணமாக அப்பியாசஞ்செய்து, கெடுங்கேடு-கெடுகின்ற கேட்டை, உன்னுலுனக்கு-உன்னாலே யுனக்கு, தேடிக்கொண்டாய் - சம்பாதித்துக்கொண்டாய், கிளர்-ஒளிசெய்கின்ற, ஆசையெனுந்தாயே - இச்சையென்னு மாதாவே, யென்சொல்-யெனது வசனத்தை, கேளாய்-கேட்பாய், தடுமாறி-தடுமாறி, நனிவாடி-மிகவும் வாட்டமுற்று,தளரவேண்டாம்-தளர்வை யடையவேண்டாம், சாந்தனுய்-உபசாந்தனுகிய, யானகன்றேன்-நானுன்னை நீங்கினேன், தருமமே-சுகிர்தமே, நீயடுங்கோர நரகந்தீர் துறக்கத்து-நீகொல்லும் கோரமுள்ள நரகம்விட்டு மோக்ஷத்தில், முன்னுக்கினையா லுனைத்தொழுவேனன்பால்- முன்னுகச்செய்தால் உன்னை யன்பினுல் வணங்குவேன், வாழி-வாழக்கடவாய்—எ - று.

எ - து. வெகுகாலமிஷ்டனுனசரீரமே! உன்னைத்தள்ளுகின்றேன்; உண்மைஞானமானது பூரணமாக அற்பியாசஞ்செய்து கெடுகின்ற கேட்டை உன்னாலேயுனக்குச் சம்பாதித்துக்கொண்டாய். ஒளிசெய்கின்ற இச்சையெனுமாதாவே எனது வசனத்தைக் கேட்பாய்! தடுமாறிமிகவும் வாட்டமுற்று தளர்வையடையவேண்டாம், உபசாந்தனாகிய நானுன்னை நீங்கினேன். சுகிர்தமே! நீ கொல்லுங் கோரமுள்ள நரகம் விட்டுமோக்ஷத்தில் முன்னாகச்செய்ததால் உன்னையன்பினால் வணங்குவேன் வாழக்கடவாய்—எ-ம். (69)

## பிராணன்களையும் மனதையும் கரைத்தல்.

உடன்பிறந்த நண்பரா முயிர்காளும்மை யொழுங்கிலே யொழிக்கின்றே னுயர்ந்துவாழ்திர், நடந்தகல்கே னென்னவிவ்வாறுள்ளே நாடுமன மேடனைக ணன்றாயாறி, யிடம்பெறநின் றோங்காரமெல்லவோதி யிகப்பொருள்கள் புறத்துள்ள விதயத்துள்ள, தடம்பரிய நுண்ணியமூவுலகிலுள்ள சங்கற்பத் தமைந்தவெலாந் தள்ளினனே.

இ - ள். உடன்பிறந்தாண்பராம்-சகோதரமான இஷ்டராகிய, உயிர்காள்-சீவர்களே, உம்மை-உங்களை, ஒழுங்கிலே யொழிக்கின்றேன், வழியாகத் தவிர்க்கின்றேன், உயர்ந்துவாழ்திர்-சுகமாய் வாழக்கடவீர்கள், நான் - யான், நடந்தகல்கே னென்ன-நடந்து போவேனென்று, இவ்வாறு-இந்தப்பிரகாரம், உள்-அகத்தில், நாடுமனம்-சிந்திக்கின்ற மனதும், ஏடனைகள்-ஈடணைத்தையங்களும், நன்றாயாறி-நன்றாகவிட்டு, இடம்பெறநின்று-(ஞானபூமி) யிடமாகநின்று, ஓங்காரமெல்லவோதி - பிரணவத்தை மிருதுவாக உச்சரித்து, இகப்பொருள்கள்-இவ்விடத்திலுள்ள வஸ்துக்களும், புறத்துள-புறம்பிலுள்ள வஸ்துக்களும், இதயத்துளள-இருதயத்திலுள்ள வஸ்துக்களும், தடம்பெரிய-பருத்த ஸ்தூலமும், நுண்ணிய-சூட்சமமாகிய, மூவுலகிலுள்ள - மூன்றுலகத்திலுமுள்ளதாகிய, சங்கற்பத்தமைந்த - சங்கற்பத்தினாலுண்டான, எலாந்தள்ளினன்-சகலத்தையு நீக்கினேன்—எ - று.

எ - து. சகோதரயான விஷ்டராகிய சீவர்களே! உங்களை வழியாகத் தவிர்க்கின்றேன்; சுகமாய் வாழக்கடவீர்கள். யானடந்துபோவேனென்று இந்தப்பிரகாரம் அகத்தில் சிந்திக்கின்ற மனதும் ஈடணைத்தையங்களும் நன்றாகவிட்டு ஞானபூமி யிடமாகநின்று பிரணவத்தை மிருதுவாக வுச்சரித்து இவ்விடத்திலுள்ள வஸ்துக்

களும், புறம்பிலுள்ள வஸ்துக்களும், இருதயத்திலுள்ள வஸ்துக்களும், பருத்த ஸ்தூலமும், சூட்சுமமாகிய மூன்றுலகத்திலுள்ளதாகிய சங்கற்பத்தினால் வந்த சகலத்தையு நீக்கினான்—எ - ம்.

• (இ-கி-க-ம்.) ஆசையை நிராசையாகவும் முனிவைச்சாந்தமாகவும் போகங்களை மாபோகமாகவும் விடயசுகங்களைப் பிரமசுகமாகவுந் துன்பங்களை யின்பமாகவுந் தேகத்தை தேகிவடிவமாகவும் ஆசையைத் தற்பிரியமாகவும் பிராணனைப் பிராணியாகவும் மனதை ஆத்ம விளக்கமாகவுங் கலாத்தவைகளையும் பிராணஸ்வரூபத் தாக்கத்தொடங்கினனென்பதாம். 69)

## சுத்தவாசனையை ஆத்மாவினிடந் தடங்கும்போதுண்டான அநுபவ மரபைத் தெரிவிக்கு நிமித்தம் அதன் கிரமத்தைச் சொல்லத் தொடங்கல்.

ஓங்கார முடிவாகத் தீர்க்கமான வோசையெனு நாலுடனே பொறிகளுற்ற, தேங்காத புலனெல்லா மணத்தைக்காற்றுத் தீர்வதுபோற் றீர்த்தனன்சே ணிடையிற்கங்கு, ளீங்காது போலிருண்மாத் திரமுன்றோன்றி நிகழ்தலுந்தள் ளினன்சோதிநேர் முன்றோன்றப், பாங்காகக் கணமதனைப் பார்த்துத்தீர்த்தான் பயிலிருடே சிரண்டுமறப் பாறிப்போன.

இ - ள். ஓங்காரமுடிவாக-பிரணவாந்தமாக, தீர்க்கமான-நீண்டதாகிய, ஓசையெனும்-சத்தமென்கின்ற, நாலுடன்-நாலோடும், பொறிகளுற்ற-இந்திரியங்கள் பொருந்தின, தேங்காதபுலனெல்லாம்-நிறையாத விடயங்களனைத்தையும், மணத்தை-கந்தத்தை, காற்றுத்தீர்வதுபோல்-வாயுநீக்குவதுபோல, தீர்த்தனன்-நீக்கினான், சேணிடை-ஆகாயத்தினிடத்தில், கங்குளீங்காது போல்-இருளீங்காததுபோல, இருண்மாத்திரமுன்றோன்றி-இருண்மாத்திரமுன்னேயுண்டாகி, நிகழ்தலும்-விளங்கவும், தள்ளினன் - நீக்கினான், சோதிநேர்முன்றோன்ற-பிரகாசமுன்னேயுண்டாக, பாங்காக-அழகாக, கணம்-க்ஷணநேரத்தில், அதனைப்பார்த்து-அந்த பிரகாசத்தைப்பார்த்து, தீர்த்தான்-நீக்கினான், பயிலிருள்-சொல்லப்பட்ட அந்தகாரமும், தேசு-பிரகாசமுமாகிய, இரண்டுமற-இரண்டுமில்லாமல், பாறிப்போன-ஓடிப்போயின—எ - று.

எ - து. பிரணவாந்தமாக நீண்டதாகிய சத்தமென்கின்ற நாலோடும் இந்திரியங்கள் பொருந்தின. நிறையாத விடயங்களனைத்தையும் கந்தத்தை வாயு நீக்குவதுபோல நீக்கினான். ஆகாயத்தினிடத்தில் இருளீங்காததுபோல இருண்மாத்திர முன்னேயுண்டாகி

விளங்கவும் நீக்கினான். பிரகாச முன்னேயுண்டாக அழகாக க்ஷணமே ரத்தில் அந்தப் பிரகாசத்தைப் பார்த்து நீக்கினான். சொல்லப்பட்ட அந்தகாரமும் பிரகாசமுமாகிய இரண்டு மில்லாமல் ஓடிப்போயின.

அவத்தையிது தனைமனத்தாற் பற்றிமேலோ னங்குறித்த மனந் திரண மென்னமுற்றுந், தவிர்த்தனனோ ரிமைப்பிலதற் பின்னப்போ தே சனித்தசிசு வறிவொத்துச் சாலநொய்தாய், நிவக்குமொளிபெறு மறிவைப் பெற்றுப்பாதி நிமிடம்பா தியிலெண்ண நீக்கிநின்றான், றுவக்குறுகாற் றசைவுவிடல் போலச்சிற்றின் றொடர்காட்சி மாற்றி னான் றுகலிலாதோன்.

இ - ள். இது-இந்த, அவத்தையை - அவத்தையை, மனத்தாற்பற்றி-மனதினால் பிடித்துக்கொண்டு, மேலோன்-உயர்வான வீதகல்விய முனியானவன், அங்குறித்தமனம்-அவ்விடத்தி லுண்டாகிய மனதை, திரணமென்ன-துரும்பைப்போல, முற்றும்-முழுதும், ஓரிமைப்பில்-ஒரிமைநேரத்தில், தவிர்த்தனன்-ஒளித்தான், அதற்பின்-அதன் பின்பு, அப்போது சனித்த-அப்பொழுது பிறந்த, சிசுவறிவொத்து-குழந்தையறிவுக் கொப்பாகி, சாலநொய்தாய்-மிகவுஞ் சொச்சமாய், நிவக்குமொளி-உயர்ந்தொளிரும் பிரகாசத்தை, பெறுமறிவைப்பெற்று-பெறுகின்ற ஞானத்தைப்பெற்று, பாதிநிமிடம்-அரைநிமிடத்தில், பாதியில்-காணிமிடத்தில், எண்ண நீக்கிநின்றான்-நினைவைத் தள்ளியிருந்தான், துவக்குறுகாற்று-தொந்தத்தையுடைய வாயுவானது, அசைவுவிடல்போல-சலனத்தை நீக்குவதுபோல, சிற்றின் - ஞானத்தின், துகளிலாதோன்-குற்றமற்றவன், தொடர்காட்சி மாற்றினான்-தொடராநின்ற விடயத்தைநீக்கினான்—எ - று.

எ - து. இந்த அவத்தையை மனதினாற் பிடித்துக்கொண்டு உயர்வான வீதகல்விய முனியானவன் அவ்விடத்தி லுண்டாகிய மனதைத் துரும்பைப்போல முழுதும் ஓரிமைநேரத்தில் ஒளித்தான். அதன்பின்பு அப்பொழுது பிறந்த குழந்தையறிவுக் கொப்பாகி மிகவுஞ் சொச்சமாய் உயர்ந்தொளிரும் பிரகாசத்தைப் பெறுகின்ற ஞானத்தைப்பெற்று அரைநிமிடத்தில் காணிமிடத்தில் நினைவைத் தள்ளியிருந்தான். தொந்தத்தையுடைய வாயுவானது சலனத்தை நீக்குவதுபோல ஞானத்தின் குற்றமற்றவன் தொடராநின்ற விடயத்தை நீக்கினான்—எ - ம். (72)

இதுவுமது.

வெருசிற்சா மானியத்தை யடைந்தான்சத்தா மாத்திரமே வடிவானான் சுழுத்திமேவி, யிருமொற்குன் றெனநின்றான் சுழுத்தியூற்றமெய்தியபின் றுரியவடி வெளிநினுற்று, னருகுற்ற நிராநந்த மாயமாயா

வாநந்த மாயசத்தா கியுஞ்சத்தாகி, யொருவுற்ற வசனங்கட் கெட்டா தான வொருபொருடா னாய்நின்றா னொப்பிலாதான்.

இ - ள். வருசிற்சாமானியத்தை யடைந்தான்-வாராநின்ற சிற்சாமானியத்தைப் பெற்றான், சத்தாமாத்திரமே-சத்தா மாத்திரமே, வடிவானான்-ஸ்வரூபமானான், சுழுத்திமேவி-நனவிற் சுழுத்தி யை யடைந்து, இருபொற்குன்றென-மகாமேருவைப்போல, நின்றான்-நின்றனன், சுழுத்திபூற்றமெய்தியபின்-நனவிற்சுழுத்தியின் உறுதியை யடைந்த பின்பு, துரியவடி வெளிதினுற்றான்-துரியஸ்வரூபத்தை யெளிதிலடைந்தான், அருகுற்ற-சமீபமாயிருந்தது,நிராநந்தமாய-நிராநந்தமான, மாயாவாநந்தமாய் நித்தியாநந்தத்தை யுடையவனாய், அசத்தாகி-அசத்தாகியும், சத்தாகியும்-சத்தாகியும், ஒருவற்ற வசனங்கட்கு-நீக்கமுற்ற வாக்கியங்களுக்கு, எட்டாதான-எட்டாததாகிய, ஒருபொருள்-ஒப்பற்ற வஸ்துவே, ஒப்பிலாதான்-சமானமற்ற வீதகவ்விய முனியானவர், தானாய்நின்றான்-தானாகி இருந்தான்—எ - று.

எ - து. வாராநின்ற சிற்சாமானியத்தைப்பெற்றான், சத்தாமாத்திரமே ஸ்வரூபமானான், நனவிற்சுழுத்தியடைந்து மகாமேருவைப்போல நின்றனன், நனவிற் சுழுத்தியினுறுதியை யடைந்த பின்பு துரியஸ்வரூபத்தை யெளிதிலடைந்தான், சமீபமாயிருந்தது நிராநந்தமான நித்தியாநந்தத்தையுடையவனாய் அசத்தாகியும், சத்தாகியும், நீக்கமுற்ற வாக்கியங்களுக்கு எட்டாததாகிய ஒப்பற்ற வஸ்துவே சமானமற்ற வீதகவ்விய முனியானவர் தானாக விருந்தான்—எ — ம்.

இ-கூ-க-ம். இந்திரிய முதலியவனைத்தின் விருத்தியே யந்தமாக வெளிப்பட அதனை யதைக்கண்ட சித்திறைத்தன்னை உச்சித்து பிரகாசமாய் வெளிப்பட அதனை அதன்மயமாயிருந்து அதன்விருத்தியைத் தன்னை அஃது சிற்சாமானியமாய் வெளிப்பட அதுவும் அதற்காதாரமான சத்தாசாமானியமாக அச்சத்துந் தன்விசேஷமான துரியமாய் வெளிப்பட அத்துரியமுந் தனதாநந்தமாய் வெளிப்பட்டு அதுவு மதீதமாய் வெளிப்பட்டு அதுவாக விளங்கின வென்பதாம். (73)

## துரியாதீதமாய் நின்று விளங்குந் தன்மையை யுரைத்தல்.

---

சூனியமென் பார்க்கதுவாய்ப் பிரமமென்று சொல்லுவார்க்கதுவாய்விந் ஞானமென்று, தானியம்பு வோர்க்கதுவாய்ப் புருடனாகிச் சாங்கியர்க்கு மியோகியர்க்கீ சன்றானாகி,வினையில்லை வாகமர்க்குச் சிவனாய்க்கால மென்பாருக் கதுவாய்மற் றிபர்கட்கெல்லா, மானமுறு மத்தியமாய்ச் சமமாய்க்காணு மனத்தினர்க்கெல் லாமான பொருடானான்,

இ - ள். சூனியமென்பார்க்கு-சூனியமென்பவர்களுக்கு, அதுவாய்-அச்சூனியமாகியும், பிரமமென்று சொல்லுவார்க்கு - பிரம மென்பவர்களுக்கு, அதுவாம்-அப்பிரமமாகியும், விஞ்ஞானமென்று தாணியம்புவோர்க்கு - விஞ்ஞான மென்பவர்களுக்கு, அதுவாய்-அவ்விஞ்ஞானமாகியும், சாங்கியற்குப் புருடனாகி-சாங்கியற்குப் புருடனாகியும், யோகியர்க் கீசன்றானாகி-யோகிகளுக்கு ஈசனாகியும், ஈனமில்-குறைவில்லாத, சைவாகமர்க்குச் சிவனாய்-சைவாகமத்தாருக்கு சிவனாகியும், காலமென்பாருக்கு - காலமென்பவர்களுக்கு, அதுவாய்-அக்காலமாகியும், மத்தியர்கட்கெல்லாம்-மாத்தியர்கட்கெல்லாம், மானமுறுமத்தியமாய்-பிரமாணமுள்ள மத்தியமாகியும், சமமாய்க்காணும்-சமமாய்ப்பார்க்கின்ற மனதினர்க்கு - மனதையுடையவர்களுக்கு, எல்லாமான - யாவுமாயிருக்கின்ற, பொருடானானன் - வஸ்துவே தானானன்—எ - று.

எ - து. சூனிய மென்பவர்களுக்கு அச்சூனியமாகியும், பிரம மென்பவர்களுக்கு அப்பிரமமாகியும், விஞ்ஞான மென்பவர்களுக்கு அவ்விஞ்ஞானமாகியும், சாங்கியற்குப் புருடனாகியும், யோகிகளுக்கீசனாகியும், குறைவில்லாத சைவாகமத்தாருக்கு சிவனாகியும், காலமென்பவர்களுக்கு அக்காலமாகியும், மாத்தியர்கட்கெல்லாம் பிரமாணமுள்ள மத்தியமாகியும், சமமாய்ப் பார்க்கின்ற மனதையுடையவர்களுக்கு யாவுமாயிருக்கின்ற வஸ்துவே தானானன்—எ - ம். (74)

நூலினத்தின் சித்தாந்த மேதெல்லோர்க்கு நோக்கியதே தோர்ந்ததே தெல்லாமேது, ஞானமெலா முறைவதே தசைவொன்றில்லாநல்லதே தொலிக்குமொளி தருவதேதது, பானுறு தன்னனுபூதியொன்றாய்க்காணப் பட்டதே தொன்றும் பலவாமேது, சானுகளங்கம்படைத்தும் படையாதேது சகலமுமாயலாததேது ததானானன்.

இ - ள். நூலினத்தின் - சாஸ்திரங்கள் எல்லாவற்றின், சித்தாந்தமேது-சித்தாந்தமியாது, எல்லோர்க்கு நோக்கியதேது-எல்லாராலும் பார்க்கப்பட்டதியாது, ஓர்ந்ததேது-அறிந்ததியாது, எல்லாமேது-சகலமுமானதியாது, ஞானமெலா முறைவதேது-பூமிகளெல்லாத்திலும் வசிப்பதியாது, அசைவொன்றில்லா நல்லதேது-ஓரசைவுமில்லாத நன்மையுள்ளதியாது, ஒலிக்குமொளி தருவதேது-பிரகாசங்களுக்கு பிரகாசங்கொடுக்கின்றதியாது, பானுறுதன்னனுபூதி - உரிமையுள்ள தனதனுபூதியால், ஒன்றாய்க்காணப்பட்டதேது-ஏகமாய்க் காணப்பட்டதியாது, ஒன்றாயும் பலவாமேது-ஏகமாகியும் அநேகமாகியுமிருக்கின்றதியாது, சானுகளங்கம்-மிகுந்த களங்கத்தை, படைத்தும் படையாதேது-பெற்றும் பெறாமலிருக்கின்றதியாது, சகலமு மாயலாததேது-எல்லாமாயல்லாததானதெதுவோ, அதுதானானன்-அந்த வஸ்துவே தானானன்.

எ - து. சாஸ்திரங்க ளெல்லாவற்றின் சித்தாந்தமியாது? எல்லாராலும் பார்க்கப்பட்டதியாது? அறிந்ததியாது? சகலமுமாதியாளது? பூமிகளனைத்திலும் வசிப்பதியாது? ஈரசைவுமில்லாத நன்மையுள்ளதியாது? பிரகாசங்களுக்குப் பிரகாசங்கொடுக்கின்ற தியாது? உரிமையுள்ள தனதனுபூதியால் ஏகமாய்க்காணப்பட்ட தியாது? ஏகமாகியும் அநேகமாகியுமிருக்கின்றதியாது? மிகுந்த களங்கத்தைப்பெற்றும் பெருமையிருக்கின்றதியாது? எல்லாமாயல்லாததான தெதுவோ? அந்தவஸ்துவே தானான்—எ - ம். (75)

அடர்பிறப்போ டிறப்பின்றி யாதியன்றி யாதியாயொன்றாகி யநேகமாகித், தொடர்சகள நிட்களமாய் விண்ணின்றாய்த் தூய்தான நிலையீச னாகியொல்லைத், திடமுறநின் றிருபதினா யிரமாண்டெல்லைச் செருக்குறவேண்டியபடியே சகத்துலாவிப், படர்மனமீண்டெழாதவகை சமித்தொன்றான் பகர்வீதகவ்வியனும் பரமயோகி.

இ - ள். அடர்-நெருங்கிய, பிறப்போடிறப்பின்றி - சனனமரணமில்லாததாகியும், ஆதியன்றி-அநாதியாகியும், ஆதியாய்-ஆதியாகியும், ஒன்றாகி - ஏகமாகியும், அநேகமாகி-பலவாகியும், தொடர் - தொடர்கின்ற, சகளநிட்களமாய்-சகல நிட்கள மாகியும், விண்ணின்றாய்தாய்-ஆகாயத்திலுஞ் சொச்சமாகியும், தூய்தான-பரிசுத்தமாகிய, நிலையீசனாகி-நிலையையுடைய ஈசனாகியும், திடமுறநின்ற-திடமாயிருந்து, இருபதினாயிர மாண்டெல்லை-இருபதினாயிர வருடமளவும், செருக்குற-மகாமகிழ்ச்சியடைய, வேண்டியபடியே-விரும்பின பிரகாரமே, சகத்துலாவி-உலகத்திற்சஞ்சரித்து, படர்மனம்-படருகின்றமனது, மீண்டெழாதவகை சமித்து-திரும்ப உண்டாகாத வண்ணம்கெடுத்து, பகர்வீதகவ்வியனும்-சொல்லிய வீதகவ்வியனென்னும், பரயோகி-பரஞானியானவர், ஒல்லை-சீக்கிரமாக, ஒன்றானான்-அத்துவிதமானான்—எ - று.

எ - து. நெருங்கிய சனனமரணமில்லாததாகியும், அநாதியாகியும், ஆதியாகியும், ஏகமாகியும், பலவாகியும், தொடராகின்ற சகலநிட்களமாகியும், ஆகாயத்திலுஞ் சொச்சமாகியும், பரிசுத்தமாகிய நிலைமையுடைய ஈசனாகியும், திடமாயிருந்து இருபதினாயிரம் வருடமளவும் மகா மகிழ்ச்சியடைய விரும்பின பிரகாரமே உலகத்திற் சஞ்சரித்து படருகின்ற மனதுதிரும்ப உண்டாகாத வண்ணங் கெடுத்து சொல்லிய வீதகவ்வியனென்னும் பரமஞானியானவர் சீக்கிரமாக அத்துவிதமானான்—எ - ம்.

(இ-க-க-ம்.) அதீதமேயாது யாதெப்படியோ அப்படியப்படி யெல்லாமாய் விளங்குகின்ற சாக்ஷாத்காரமான விதேகமுத்தித் தன்மையை யடைந்தன ரென்பதாம். (76)

வீதசவ்வியன் கதை முற்றிற்று.

ஆக கதை உ௦எ-க்கு கவிதை-1230.

# உபசாந்திப்பிரகரணம்.

(அவதாரிகை.)

முற்கதையிற் சித்த விச்ராந்தியின் பொருட்டு பற்றறுதி முதலிய அப்பியாசங்களைச் சொல்லி அச்சித்தசாந்தியே செகத்சாந்த மென்பதை யுறுதிப்படுத்து நிமித்தம் இவ்வொன்பது கதைகளின் சாரங்களையெடுத்து உபசாந்திப் பிரகரணமாக நிருபிக்கிறார்.

## சீவன்முத்தனுக்கு ஆகாயகமனமுதலிய சித்திகளே யின்றெனில்.

வேறு.

என்னவுரைத்த முனிதன்னை யிராமனோக்கி யுரைசெய்வா
னுன்னுசீவன் முத்தியினோ ருடல்கட்கெல்லா மாகாயத்
தன்னிடைத்தன் முதலான சத்திகாணே னென்னென்ன
வன்னவினவுக் குத்தரங்க ளறியவுரைத்தா னருள்வசிட்டன்.

இ - ள். என்னவுரைத்தமுனிதன்னை-(இப்படி) என்று சொல்லிய வசிஷ்டமுனியை, இராமனோக்கி-இராகவன்பார்த்து, உரைசெய்வான்-சொல்லுவார், உன்னுசீவன் முத்தியினோர்-நினைக்கப்படுகின்ற சீவன்முத்தியையுடையவர்களது, உடல்கட்கெல்லாம் - சரீரங்களுக்கெல்லாம், ஆகாயத்தன்னிடைத்தன் முதலான-ஆகாயகமனஞ் செய்தன் முதலிய, சத்திகாணேம்-சத்திகளைப்பார்க்கிலம், என்னென்ன - என்னவென்று கேட்க, அன்னவினவுக்கு-அக்கேள்விக்கு, உத்தரங்கள்-உத்தரங்களை, அருள்வசிட்டன் - கிருபையுள்ளவசிட்டர், அறியவுரைத்தான் - தெரியச்சொன்னார்—எ - று.

எ - டு. இப்படியென்று சொல்லிய வசிஷ்டமுனியை இராகவன்பார்த்துச் சொல்லுவார். நினைக்கப்படுகின்ற சீவன்முத்தியையுடையவர்களது சரீரங்களுக்கெல்லாம் ஆகாயகமனஞ்செய்தன் முதலிய சத்திகளைப்பார்க்கிலம்; என்னவென்று கேட்க! அக்கேள்விக்கு உத்தரங்களை கிருபையுள்ள வசிஷ்டர் தெரியச்சொன்னார்—எ-ம். (1)

## அணிமாமுதலிய சித்திகளும் மாயாவிசித்திர மென்பதை அறிவிக்கு நிமித்தம் அவைகளைச் சீவன் முத்தன் வேண்டா னெனல்.

பெரியவுணர்வில் பெத்தர்களும் பேணுமருந்தான்மந்திரத்தாற்
கிரியைதன்னாற் காலத்தாற் கிளர்ந்தயூகத் தாலியற்றின்
விரியும்விண்போக் காதிகளை மேவாநிற்பர் மெய்யுணர்வோர்க்
குரியவல்ல விவையவர்க ளுண்மைநோக்கே விடாதுறுவார்.

இ - ள். பெரியவுணர்வில்-பூரணஞானமில்லாத, பெத்தர்களும்-பந்தத் தையுடையவர்களும், பேணுமருந்தால்-விரும்புகின்ற அவிடதங்களினாலும், மந்திரத்தால்-மந்திரங்களினாலும், கிரியைதன்னால்-தொழில்களினாலும், காலத்தால் - காலங்களினாலும், கிளர்ந்த யூகத்தால் - சொல்லிய யூகங்களினாலும், இவற்றின்-முயற்சித்தால், விரியும் விண்போக்காதிகளை-பரவியவாகாச கமனாதிகளை, மேவாநிற்பர்-பொருந்தியிருப்பார்கள், மெய்யுணர்வோர்க்கு - உண் மைஞான முடையவர்களுக்கு, இவையுரியவல்ல-இச்சித்திகளுரித்தாயினவல் ல, அவர்கள்-அந்த ஞானவான்கள், உண்மைநோக்கு-தத்துவமான (ஆத்தும) திருஷ்டியை, விடாதுறுவார்-இடைவிடாமற் பொருந்துவார்கள்—எ - று.

எ — று. பூரணஞானமில்லாத பந்தத்தை யுடையவர்களும், விரும்புகின்ற அவிடதங்களினாலும், மந்திரங்களினாலும், தொழில்களினாலும், காலங்களினாலும், சொல்லிய யூகங்களினாலும், முயற்சித்தால் பரவியவாகாச கமனாதிகளைப் பொருந்தி யிருப்பார்கள். உண்மைஞான முடையவர்களுக்கு இச்சித்திகள் உரித்தாயினவல்ல, அந்தஞானவான்கள் தத்துவமான ஆத்மதிருஷ்டியை இடைவிடாமற் பொருந்துவார்கள்—எ - ம். (2)

## வேண்டினால் வருமோவெனின் முன்சொல்லிய கிரமங்களால் வருமெனல்.

அறிந்தோரறிவாலறிவினிடத்தமைவதல்லா லாசையின்பின், பிறிந்
தோடார்கள் சகப்பொருளின் பேதமெல்லா மாயைகளே, மறிந்தே
மாயை கெடவென்றோர் மறிந்துமகனின் முற்றுவரோ, செறிந்தே
யறிஞர் களும்விரும்பிற் சித்தியுறுமுன்பக ரொழுங்கால்.

இ - ள். அறிந்தோர்-ஞானிகள், அறிவாலறிவினிடத்து-ஞானத்தினன் ஞானத்தினிடத்தில், அமைவதல்லால் அமைவதே யன்றி, ஆசையின்பின்-(ஆகாயகமனாதி) இச்சையின்பின், பிறிந்தோடார்கள் - பிரிந்துசெல்லார்கள், சகப்பொருளின்-உலகத்திலுள்ள வஸ்துக்களின், பேதமெல்லாம் - வேற்று மைகளைத்தும், மாயைகளே-மாயா மயக்கங்களாம், மாயை- அம்மாயையா னது, மறிந்துகெடவென்றோர்-மடங்கிக்கெடும்படி செய்தவர்கள், மறித்து

மதனின் மூழ்குவரோ-திரும்பவும் அம்மாயையிலழுந்து வார்களோ, செறிந்து நெருங்கி, அறிஞர்களும் விரும்பில் - ஞானவான்களும் இச்சிப்பார்களாயின் முன்பகலோ முங்கால்-முன்சொல்லப்பட்ட கிரமத்தினல், சித்தியுமாம்-சித்தி யுண்டாம்—எ - று.

எ - து. ஞானிகள் ஞானத்தினுன் ஞானத்தினிடத்தில் அமைவ தேயன்றி ஆகாயகமனாதி யிச்சையின்பின் பிரிந்துசெல்லார்கள். உல கத்திலுள்ள வஸ்துக்களின் வேற்றுமைகளனைத்தும் மாயாமயக்கங்க ளாம். அம்மாயையாவது மடங்கிக் கெடும்படி செயித்தவர்கள் திரும் பவும் அம்மாயையிலழுந்துவார்களோ? நெருங்கி ஞானவான்களு மிச் சிப்பார்களாயின் முன்சொல்லப்பட்ட கிரமத்தினுல் சித்தியுண் டாம்—எ - ம். (3)

ஆயின் வேண்டலாமே யெனின் மூத்தயின்மையால் விரும்பார்க ளெனல்.

கேட்டமருந்து மந்திரங்கள் கிரியைகால மூகமெலா
நாட்டுஞ்சித்தி கனைநல்கு நல்லமுத்தி தாமாட்டா
தேட்டமுளதே லொருத்தற்கொன் றதுதானியற்றிற் சித்திக்கும்
பூட்டுமாசை வந்தனுகால் பூரணபோத முடையோர்க்கே.

இ - ள். கேட்டமருந்து-கேள்விப்பட்ட அவிடதங்களும், மந்திரங்கள்-மந்திரங்களும், கிரியை-தொழில்களும், காலம் - காலங்களும், ஊகமெலாம்-யுத்திகளுமாகிய, இவைகளனைத்தும் நாட்டுஞ்சித்திகளை நல்கும்-நாட்டாநின்ற சித்திகளைக்கொடுக்கும், நல்ல முத்திதாமாட்டா -நன்மையுள்ள மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டாது, ஒருத்தற்கு-ஒருவருக்கு, ஒன்றுதேட்டமுளதேல்-சித்தியொன்றில் தட்டமுண்டானுல், அதுதானியற்றில்-அதை முயற்சித்தால், சித்திக்கும்-கிடைக்கும், பூட்டுமாசை-பந்தப்படுத்துகின்ற கமனாதியிச்சையானது, பூரணபோத முடையோர்க்கு-பூரணஞானத்தை யுடையவர்களுக்கும், வந்த அனுகா-வந்து பொருந்தாது—எ - று.

எ - து. கேள்விப்பட்ட அவிடதங்களும், மந்திரங்களும், தொழில்களும், காலங்களும், யுத்திகளுமாகிய இவைகளனைத்தும் நாட்டாநின்ற சித்திகளைக் கொடுக்கும். நன்மையுள்ள மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டாது, ஒருவருக்குச் சித்தியொன்றில் தேட்டமுண்டானுல் அதை முயற்சித்தால் கிடைக்கும். பந்தப்படுகின்ற கமனாதியிச்சையான து பூரணஞானத்தை யுடையவர்களுக்கு வந்து பொருந்தாது-எ-ம்.

(இ-க-ம்) நிராசையுள்ள ஞானிக்கு ஆசையுள்ள சித்திகள் உண்டாவெ ன்பதாம். (4)

## முத்திக்குச் சித்தியிழிவாமென்பதைக்காட்டி மேற் சிரஞ்சீவிகளின் யோகமுமப்படியே யாமென் பதை யறிவிக்கத் தொடங்கல்.



காதலெல்லா மிறந்தொழிந்தாற் கலங்காஞானோ தயமுண்டா
மாதாஞ்செய் சித்திகளி னமிழ்வோர்க்கப் பேறடையாதென்
றோதுமுனியை யோகிகடா மூழிகால முயிர்வாழ்தற்
கேதுமூல மெனக்கேட்டா னிராமன்மீட்டு முனிசொல்வான்.

இ - ள். காதலெல்லாம் - ஆசைகளனைத்தும், இறந்தொழிந்தால் - மரித்துநீங்கினுல், கலங்கா - கலக்கமில்லாத, ஞானோதய முண்டாம் - (ஆத்ம) ஞானமுதிக்கும், ஆதாஞ்செய் - ஆசையை விளைக்கின்ற, சித்திகளில் - (கமனுதி) சித்திகளிடத்தில், அமிழ்வோர்க்கு - முழுகுகின்றவர்களுக்கு, அப்பேறடையாதென்று - அவ்வான்மலாப முண்டாகாதென்று ஓதுமினியை - சொல்லிய வசிட்டமுனியை, யோகிகடா மூழிகாலமுயிர் வாழ்தற்கு - யோகியர் கற்பகாலஞ் சீவித்திருப்பதற்கு, ஏதுமூலமென - யாது காரணமென்று, இராமன் கேட்டான் - இராகவன்கேட்க, மீட்டு முனிசொல்வான் - திரும்பவும் வசிட்டர்சொல்லுவார்—எ - று.

எ - து. ஆசைகளனைத்தும் மரித்து நீங்கினுல் கலக்கமில்லாத ஆத்மஞானமுதிக்கும். ஆசையை விளைக்கின்ற கமனுதிசித்திகளிடத்தில் முழுகுகின்றவர்களுக்கு அவ்வான்மலாபமுண்டாகாதென்று சொல்லிய வசிட்டமுனியை யோகியர் கற்பகாலஞ் சீவித்திருப்பதற்கு யாதுகாரணமென்று இராகவன்கேட்க திரும்பவும் வசிஷ்டர் சொல்லுவார்—எ - ம். (7)

## சிரஞ்சீவிக்குப் பிராணபந்தனமே காரணமாமெனல்.



பிராணனசையி லசைந்திடுவர் பிராணனடங்கிற் கற்போல்வர்
பிராணன்றன்னைத் தரித்தலினுற் பெருநாளையார் யோகிகடாம்
பிராணன்றன்னி னெஞ்சத்திற் பிறக்குமசைவுட் புறனடங்கிற்
பிராணனுசை மூப்பிரண்டும் பெருந்துராத்தி லேகிடுமால்

இ - ள். பிராணனசையில் - பிராண வாயுவசைந்தால், அசைந்திடுவர் - அசைவார்கள், பிராணனடங்கில் - பிராண வாயுவடங்கினுல், கற்போல்வர் - மலைக்கொப்பாவார்கள், பிராணன்றன்னைத் தரித்தலினுல் - பிராணனைத் தரித்தலினுல், யோகிடாம் - யோகிகள், பெருநாளையார் - வெகுகாலமிறவார்கள், பிராணன்றன்னில் - பிராணனிடத்திலும், நெஞ்சத்தில் - மனதினிடத்திலும், பிறக்குமசைவு - உண்டாகின்ற வசைவானது, உட்புறனடங்கில் - உள்ளிலும் புறம்பிலு மடங்குமானுல், பிரா

ணுசு மூப்பிரண்டும் - மரணமும் வார்த்திகமுமாகிய இவ்விரண்டும், பெருந்தூரத்தில் - வெகுதூரத்தில், ஏகிடும் - போய்விடும்—எ-று.

எ - து. பிராணவாயுவசைந்தால் அசைவார்கள். பிராணவாயுஅடங்கினால் மலைக்கொப்பாவார்கள். பிராணனைத் தரித்ததினால் யோகிகள் வெகுகாலமிறவார்கள். பிராணனிடத்திலும் மனதினிடத்திலும் உண்டாகின்ற அசைவானது உள்ளிலும் புறம்பிலுமடங்குமானால், மரணமும் வார்த்திகமுமாகிய இவ்விரண்டும் வெகுதூரத்தில் போய்விடும் —எ - ம்.

## இத்தேகவாஞ்சையை நீக்கினவர்களே தத்துவத்தை அறிந்தவர்களாமெனல்.

---

உள்ளும்புறம்பு மசைவின்றி யுயிருமனனு மொடுங்குமெனிற்
றள்ளுறும லொருக்காலுந் தாதுவெல்லாஞ் சடத்துறையுந்
தெள்ளியறிவதறிந்தாசை தீர்ந்துபுந்தி தெளிந்திதயங்
கொள்ளும்பந்த மெல்லாமறுத்தோ ரன்றோவுண்மைக் குறித்தறிந்தோர்

இ - ள். உள்ளும்புறம்பும் - உள்ளிலும் வெளியிலும், அசைவின்றி சலனமில்லாமல், உயிருமனனும் - பிராணனுமனதும், ஒடுங்குமெனில் - அடங்குமாயின், ஒருக்காலும் - ஒருகாலத்திலும், தள்ளுறுமல் - தள்ளப்படாமல், தாதுவெல்லாம் - தாதுக்களனைத்தும், சடத்துறையும் - தேகத்தில் வாசஞ்செய்யும், தெள்ளியறிவதறிந்து - தெளிவாக அறியவேண்டிய (ஆத்மஞானத்தை) யறிந்து, ஆசைதீர்ந்து - இச்சைநீங்கி, புந்திதெளிந்து - புத்திதெளிவாகி, இதயங்கொள்ளும் - மனதிற்கொள்ளுகின்ற, பந்தமெல்லாமறுத்தோரன்றோ - பந்தங்களனைத்தையுங் கெடுத்தவர்களல்லவா, உண்மை - தத்துவத்தை, குறித்தறிந்தோர் - மதித்துணர்ந்தவர்கள்—எ-று.

எ - து. உள்ளிலும் வெளியிலும் சலனமில்லாமல் பிராணனும் மனதும் அடங்குமாயின், ஒருகாலத்திலும் தள்ளப்படாமல் தாதுக்களனைத்தும் தேகத்தில் வாசஞ்செய்யும், தெளிவாக வறியவேண்டிய வாத்மஞானத்தையறிந்து இச்சைநீங்கி புத்தி தெளிவாகி மனதிற்கொள்ளுகின்ற பந்தங்களனைத்தையுங் கெடுத்தவர்களல்லவா தத்துவத்தை மதித்துணர்ந்தவர்கள் —எ - ம்.

(இ-க-௯-ம்.) சிரஞ்சீவியாதற்கான பக்ஷமும் பிராணபந்தனம் ஞானிக்குக் கூடாதென்பதாம்.

பாவியுள்ளம்-பாவிக்கின்ற மனமானது, எழாதபடிபண்ணி-எழும்பாத பிரகாரஞ்செய்து, அதை நாசம்பயில்வாய்-அம்மனத்தைக் கெடுப்பாய்—எ - று.

எ - து. சீவன்முத்தியில் உருவநாசமானது மனதுக்குண்டாகும் வருத்தமற்ற விதேகமுத்தியில் சொல்லிய அருவநாசமுண்டாம், பொருந்தாநின்ற மனதுண்டானால் துன்பமாகும் மரிக்குமாயின் ஆநந்தம் பெருகும். பாவிக்கின்ற மனமானது எழும்பாத பிரகாரஞ்செய்து அம்மனத்தைக் கெடுப்பாய்—எ - ம்.

(இ-உ-க-ம்.) மனமானது பெத்தர்களிடத் துருவமாகவும், முத்தர்களிடத் தருவமாகவும், விதேகமுத்தர்களிடத்தில் அவ்விரண்டுவித மின்றாகவும் விளங்கு மென்பதாம். (9)

உருவநசியாமற் பெத்தரிடத்திருக்கின்ற மனமே

மாயைக்குக் காரணமாமெனல்,



பகுதிவழியின் குணபார மெனதென்றபிமா னம்பண்ணற்
றகுதியுண்மை யறியாது தளர்நெஞ்சாஞ் சீவனுமதுவே
தொகுதியான சுகாசுகத்தைத் தொடர்ந்துநிற்குஞ் சுகமுந்தின்
மிகுதியசையா திம்மனமே மிகுமாயைக்கு விளைமுளையே.

இ - ள். பகுதிவழியின்-பிரகிருதிமார்க்கத்தின், குணபாரம்-குணத்தின் சுமையை, எனதென்றபிமானம் பண்ணல்-என்னதென் றபிமானஞ்செய்தல், தகுதியுண்மை யறியாது-தகுதியான தத்துவத்தைத் தெரிந்துகொள்ளாமல், தளர்நெஞ்சாம-வருந்துகின்ற மனமாகும், அதுவே-அம்மனமே, சீவனும்-சீவனுமாகும், தொகுதியான-கூட்டமாகிய, சுகாசுகத்தை-சுகதுக்கங்களை, தொடர்ந்து நிற்கும்-தொடர்ந்திருப்பதாயும், சுகமுந்தில் - சுகமுதலானதுகளில் மிகுதியசையாது-மிகவு நிலையாயிருக்கின்ற, இம்மனமே-இந்தமனதே, மிகுமாயைக்கு விளைமுளையே-மிகுந்தமாயை யுண்டாவதற் கங்குரமாம்—எ - று.

எ - து. பிரகிருதி மார்க்கத்தின் குணத்தின் சுமையை என்னதென்றபிமானஞ்செய்தல் தகுதியான தத்துவத்தைத் தெரிந்துகொள்ளாமல் வருந்துகின்ற மனமாகும். அம்மனமே சீவனுமாகும். கூட்டமாகிய சுகதுக்கங்களைத் தொடர்ந்திருப்பதாயும், சுகமுதலானதுகளில் மிகவுநிலையாயிருக்கின்ற இந்தமனதே மிகுந்த மாயையுண்டாவதற் கங்குரமாம்—எ - ம். (10)

## சமதிருஷ்டியில் சலனமறுதலே மனத்தினுருவ நாசமாமெனல்.

---

மனத்தினுண்மை யுரைத்தனமேன் மனத்தினாசஞ் சொல்லக்கே
ட்பாய், கனத்தகிரியை யுயிர்ப்பசையா வகைபோற்சமமாங் காட்சி
தனில், லினத்தவின்ப துன்பங்க ளிறையுமசையா திருப்பவர்க்கே,
யனத்தமான வுள்ளந்தா னழிந்ததென்ப ரறிந்தோரே.

**இ - ள். மனத்தினுண்மை-மனதின் சத்தையை, உரைத்தனம்-சொன்னோம், மேன்மனத்தினாசஞ்சொலக்கேட்பாய்-மனோநாசஞ்சொல்ல இனிக் கேட்கக்கடவாய், கனத்தகிரியை-மகாமேருவை, உயிர்ப்பசையாவகைபோல்-மூச்சசைக்கமாட்டாத தன்மையைப்போல, சமமாங்காட்சிதனில் - சமத்துவமான தரிசனத்தில், இனத்த வின்பதுன்பங்கள் - இனமாகிய சுகதுக்கங்களினால், இறையுமசையாது-எவ்வளவும் அசைவுபடாமல், இருப்பவர்க்கு-இருக்கும் (ஞானி) களுக்கு, அனத்தமான வுள்ளந்தான்-பயனின்றிய மனமானது, அறிந்தோர்-அறிஞர்கள், அழிந்ததென்பர்-நசித்ததென்று சொல்லுவார்கள்.**

எ — து. மனதின் சத்தைச் சொன்னோம்; மனோநாசஞ் சொல்ல இனிக் கேட்கக்கடவாய். மகாமேருவை மூச்சசைக்கமாட்டாத தன்மையைப்போல சமத்துவமான தரிசனத்தில் இனமாகிய சுகதுக்கங்களினால் எவ்வளவுமசைவுபடாமலிருக்கும் ஞானிகளுக்குப் பயனின்றிய மனமானது அறிஞர்கள் நசித்ததென்று சொல்லுவார்கள்-எ-ம்.

மாவுச்சவமா பத்துக மந்தங்காற்பண் ணியமதங்கள்
மேவுற்றனவே தியாதெவரை யவர்க்கேயுள்ளம் வீய்ந்தனதாந்
தாவுற்றெழுந்த பேதைமையே மனமாமதுவே தவிர்ந்தொழியி
லோவற்றுன்ன நாசமெனு முறுபேருண்மை யுதித்திடுமால்.

**இ - ள். மாவுச்சவமாபத்து-மகாசம்பத்துமாபத்தும், மைமந்தம்-புத்தியுமந்தமும், காற்பண்ணியமதங்கள் - தாரித்திரமுமதங்களும், மேவுற்றன - பொருந்தினவாய், எவரைப்பேதியாது - யாவரை வேறுபடுத்தாதோ, அவர்க்கே-அவர்களுக்கே, உள்ளம் வீய்ந்தனதாம்-மனமிறந்ததாம், தாவுற்றெழுந்த தாவிக்கொண்டெழுந்த, பேதைமையே மனமாம்-அறியாமையே மனமாகும், அதுவே-அவ்வறியாமையே, தவிர்தொழியில்-நீங்கில், ஓவற்று-வருத்தமில்லாமல், உன்னநாசமெனும்-மனோநாசமென்கின்ற, உறுபேருண்மை-பொருந்தாநின்ற மூதறிவு, உதித்திடும்-உண்டாகும்—எ - று.**

எ - து. மகா சம்பத்துமாபத்தும், புத்தியுமந்தமும், தாரித்திரமுமதங்களும் பொருந்தினவாய் யாவரை வேறு படுத்தாதோ அவர்களுக்கே மனமிறந்ததாம். தாவிக்கொண்டெழுந்த அறியாமையே

மனமாகும். அவ்வறியாமையே நீங்கில் வருத்தமில்லாமல் மனோநாச மென்கின்ற பொருந்தாநின்ற மூதறிவு உண்டாகும்—எ - ம்.

(இ-ரூ-க-ம்.) மனதினுருவ நாசத்தைச் சொல்லியதாம். (12)

## உருவநாசமாய்ச் சீவன்முத்தரிடத் தருவமாயிருக்கின்ற மனதினிலக்கணங்கூறல்.

ஆயகுணமா மயித்திரியா திகள்சேர்நல்வா தனையடைந்து
தீயமறுசென் மமுமிலதாஞ் சீவன்முத்தர்க் கந்தமன
மோயமனதுக் கிதுவாகு முருவநாச மிதுதனிலே
மேயகுணங்கள் வசந்தத்தில் விரிபூங்கொத்தா மெனவிளங்கும.

இ - ள். ஆயகுணமாம்-உண்டான குணமாகிய, மயித்திரியாதிகள்சேர்-மயித்திரி முதலிய நான்குஞ்சேர்ந்திருக்கும், நல்வாதனையடைந்து-சத்தவாதனையைப்பெற்று, தீயமறு சென்மமும்-தீமையான மறுசநநங்களும், இலதாம்-இல்லாததாகுமோ, அந்தமனம்-அந்தமனது, சீவன் முத்தர்க்கு-சீவன்முத்தர்களுக் (குண்டாயிருக்கும்), ஓயமனதுக்கு-ஓய்ந்தமனதுக்கு, உருவநாசம்-உருவநாசமானது, இதுவாகும்-இதுவேயாகும், இதுதனில்-இந்தன்மையான மனதில், மேயகுணங்கள் - பொருந்திய (மயித்திரியாதிய நான்கு) குணங்களும், வசந்தத்தில் - வசந்தகாலத்தில், விரிபூங்கொத்தாமென விரிந்த புட்பக்கொத்துகளைப்போல, விளங்கும்-பிரகாசிக்கும்—எ - று.

எ - து. உண்டான குணமாகிய மயித்திரிமுதலிய நான்குஞ்சேர்ந்திருக்கும். சுத்தவாதனையைப்பெற்று தீமையான மறுசநநங்களும் இல்லாததாகுமோ? அந்த மனது சீவன்முத்தர்களுக் குண்டாயிருக்கும். ஓய்ந்த மனதுக்கு உருவநாசமானது இதுவேயாகும் இத்தன்மையான மனதில் பொருந்திய மயித்திரியாதிய நான்கு குணங்களும் வசந்தகாலத்தில் விரிந்த புட்பக்கொத்துகளைப்போல பிரகாசிக்கும்—எ - ம். (13)

## அருவநாசமாய் விதேகமுத்தரிடத்து விளங்கிய இயல்பைக்கூறல்.

வேறு.

தத்துற்ற வுள்ளத்தி னருவநாசஞ் சரீரமிலா முத்தியனிடகளமாய்ச்சாரு, மெத்துற்ற நற்குணங்க டரித்துமுண்மை வியந்துளதாய் மேனியிலா விமலவீடாய்ச், சுத்தத்தா யுடறீர்ந்த முத்தர்க்கெய்துந் தொடர்பாய்சத் துவநாசஞ் சொரூபமாகிச், சித்தத்தினருமகா சப் பேர்பெற்ற திகழ்பதத்தி லொன்றுமிலைச் செப்புதற்கே.

இ - ள். தத்துற்றவுள்ளத்தின் - தாவாநின்ற மனதினது, அருவநாசம்-அருவநாசமானது, சரீரமிலாமுத்தியன்-விதேகமுத்தனிடத்தில், நிட்களமாய்ச்சாரும்-களங்கமறப் பொருந்தும், மெத்துற்ற நற்குணங்கள் தரித்தும்-மிருதுவாயுள்ள மயித்திரியாதிய நற்குணங்களைப்பெற்றும், உண்மை-மெய்யான (சாத்துவிதமானது), வீய்ந்துளதாய்-இறந்ததாய், மேனியிலா விமலவீடாய்-விதேக கைவல்யமாய், சுத்தத்தாய்-பரிசுத்தமாய், உடறீர்ந்த முத்தர்க்கெய்தும்-விதேக முத்தர்க்கடையும், தொடர்பாய்-தொடர்ச்சியாக, சத்துவநாசம்-சாத்துவிதநாசமே, சொரூபமாகி-வடிவமாய், சித்தத்தின்-மனதில், அருவநாசப்பேர்பெற்ற-அருவநாச மென்னும் நாமம்பெற்றிருக்கின்ற, திகழ்பதத்தில்-பிரகாசிக்கின்ற பதத்தில், செப்புதற்கொன்றுமில்லை-சொல்லுதற்கு வேறொன்றுமில்லை—எ - று.

எ - து. தாவாநின்ற மனதினது அருவநாசமானது விதேகமுத்தனிடத்தில் களங்கமறப்பொருந்தும். மிருதுவாயுள்ள மயித்திரியாதிய சற்குணங்களைப்பெற்றும் மெய்யான சாத்துவிதமானது இறந்ததாய், விதேககைவல்யமாய், பரிசுத்தமாம், விதேகமுத்தர்க்கடையும் தொடர்ச்சியாக சாத்துவிதநாசமே வடிவமாய்மனதில் அருவநாசமென்னு நாமம் பெற்றிருக்கின்ற பிரகாசிக்கின்ற பதத்தில் சொல்லுதற்கு வேறொன்றுமில்லை—எ - ம். (14)

குணங்குணமி லாமைசீர் சீரிலாமை குலவுதய மத்தமன மகிழ்வகுவை, யிணங்கொளிவல் லிருளிரவு பகன்முச்சந்தி யியலுண்மை யில்லாமை யிடையொன்றில்லை, புணர்ந்ததாற் பதமதுதான் மாயக்கூத்தும் புந்தியும்வென் றகன்றவர்க்குப் புகலேயாகு, மணங்கவருங் காற்றுமுத லனைத்திற்கு மருவிடமாய் நிற்கின்ற வானம்போல.

இ - ள். குணங்குணமிலாமை-குணநிகுணங்களும், சீர்சீரிலாமை - செல்வாசெல்வமும், குலவுதய மத்தமனம்-பிரகாசிக்கின்ற உதயாஸ்தமனமும், மகிழ்வகுவை-சந்தோடமும் குவையையும், இணங்கொளி வல்லிருள்-இணங்குகின்ற பிரகாசமும் வலிய அந்தகாரமும், இரவுபகல்-இராத்திரியும் பகலும், முச்சந்தி-மூன்றுசந்தியும், இயலுண்மையில்லாமை - பொருந்திய வுள்ளதுமில்லாததும், இடையொன்றில்லை - (இவைகட்கு) மத்திகமொன்று மில்லாமையை, புணர்ந்தன-பொருந்தியிருக்கின்ற, நற்பதம்-பரமபதமாம், அதுதான்-அதுவே, மாயக்கூத்தும்-சம்சாராடம்பரத்தையும், புந்தியும்-புத்தியையும், வென்றகன்றவர்க்கு-சயஞ்செய்தவர்களுக்கு, மணங்கவரும்-சந்தத்தைக் கிரகிக்கின்ற, காற்றுமுதலனைத்திலுக்கும் - வாதமுதலிய சகலத்துக்கும், மருவிடமாய் நிற்கின்ற - பொருந்துதற்கு ஸ்தானமாயிருக்கின்ற, வானம்போல - ஆகாயம்போல, புகலேயாகும்-தஞ்சமேயாம்—எ - று.

எ - து. குணுகுணங்களும், செல்வாசெல்வமும், பிரகாசிக்கின்ற வுதயாஸ்தமனமும், சந்தோடமு மசூயையும், இணங்குகின்ற பிரகாசமும், வசியவந்தகாரமும், இராத்திரியும்பகலும், மூன்றுசந்தியும், பொருந்திய உள்ளதுமில்லாததும். இவைகட்கு மத்திகளொன்றுமில்லாமையைப் பொருந்தியிருக்கின்ற பரம்பதமாம் அதுவே சம்சாராடம்பரத்தையும் புத்தியையும் சயஞ்செய்தவர்களுக்கு கந்தத்தை கிரகிக்கின்ற வாதமுதலிய சகலத்துக்கும் பொருந்துதற்கு ஸ்தானமாயிருக்கின்ற ஆகாயம்போல தஞ்சமேயாம்—எ - ம்.

(இ-உ-க-ம்.) மனதின் அவநாசத்தைச் சொல்லியதாம். (15)

## மனமிறந்தசுகத்தைச்சொல்ல அஃதிறக்கும் பொருட்டு அதன்காரியமான மாயையின் மூலத்தை நான்குவிதமாகப் பிரித்துவினவுதல்.



துன்பமெலா மிறந்தறிவே வடிவாயேகச் சுழுத்தியாய்த் தாமதராசதந்தோன்றும, லின்பமிருந தழகாமப் பதத்மீத விண்ணுவியாக்கையாய்ப் பெரியோரா யிலங்குமேலோர், வனபடாநெஞ் சறவுறைவ ரென்றலோடும வளர்கொடிமுக் கிரிகைநிகர் மாயைக்கேது, முன்பயில்வித் ததற்கென்வித்து மொழிந்ததற்கே தெதுவித்து மொழிவாய்நாலும.

இ - ள். துன்பமெலாமிறந்து-துன்பங்களனைத்து நீங்கி, அறிவே வடிவாய்-ஞானமே ஸ்வரூபமாய், ஏகசுழுத்தியாய்-ஒன்றுகி சுழுத்தியாய், தாமதராசதந்தோன்றுமல - தாமதராசகுணந்தோற்றுது, இனபமிருந்து - ஆநந்தமிருக்கிருகின்ற, அழகாமப்பதத்து - அழகான அந்தப்பிரமபதத்தில், விண்ணுவியாக்கையாய - ஆகாசசரீரமாய், பெரியோராய - மகத்துக்களாய், இலங்குமேலோா - பிரகாசிக்கின்ற பெரியோர்கள், வன்படர்நெஞ்சற - வல்லமையாகப் பரவாநின்ற மனதுகெட, உறைவரென்றலோடும்-வசிப்பரெனறு வசிட்டமுனி சொல்லவும், வளர்கொடி முக்கிரிகைநிகர் - வளராநின்ற கொடிமுக்கிரிகையை யொதத, மாயைக்கு-சம்சாரமுண்டாகுதலுக்கு, முன்பயில் வித்தெது-முன்னே சொல்லப்பட்ட விதையாது, அதற்கென்வித்து-அதற்கு விதை, மொழிந்ததற்கே தெதுவித்து - சொல்லப்பட்ட அதற்கெதுவிதை, நாலும்-இந்த நான்கு விதையும, மொழிவாய் - சொல்லுவா யென்றிராமன் கேட்டான்—எ-று.

எ - து. துன்பங்களனைத்து நீங்கி ஞானமே ஸ்வரூபமாய் ஒன்றுகிய சுழுத்தியாய் தாமதராசகுணந் தோற்றுது ஆநந்தமிருந்திருக்கின்ற அழகான அநதப்பிரமபதத்தில் ஆகாசசரீரமாய் மகத்துக்களாய் பிரகாசிக்கின்ற பெரியோர்கள் வல்லமையாகப் பரவாநின்ற

மனதுகெட வசிப்பரென்று வசிட்டமுனி சொல்லவும், வளராநின்ற கொடிபூந்திரிகையையொத்த சம்சாரமுண்டாகுதலுக்கு முன்னே சொல்லப்பட்ட விதையாது? அதற்கெதுவிதை? சொல்லப்பட்ட அதற்கெதுவிதை? இந்தநான்கு விதையும் சொல்லுவாயென்றிராமன்கேட்டான்—எ - ம். (16)

## முதல்வித் திரண்டாம்வித்தின் இலக்கணங்கூறல்.



என்றிரா கவன்கேட்ப வசிட்டன்சொல்வா னெழுந்துளவா ரம்பசுபா சுபங்களென்னுந், துன்றுமுளை தந்தருளு மேனிவித்தாஞ் சொன்னபெரு மாயையெனுஞ் சூழ்கொடிக்கு, நின்றவுட லெனும்வித்துக் கெதுவித்தெ னின் னீண்டபாவாபாவநிறைந்தநாளுங், கன்று துயரெனுமணிக்கு வைப்பாஞ்செப்பாங் காதலின்பின் னோடுகின்ற கவலைநெஞ்சே.

இ - ள். என்றிராகவன்கேட்ப-(இப்படி) யென்று ஸ்ரீராமன்கேட்க, வசிட்டன் சொல்வான் - வசிட்டமுனி சொல்லுவார், சொன்ன பெருமாயையெனும்-சொல்லப்பட்ட சம்சாரமென்கின்ற, சூழ்கொடிக்கு-சூழ்ந்த கொடிக்கு, எழுந்துளவாரம்பம்-உள்ளெழாநின்ற துவக்கமாகிய, சுபா சுபங்களென்னும்-சுபம் சுபமென்கின்ற, துன்றுமுளை தந்தருளும்-நெருங்கிய அங்குரத்தைக்கொடுக்கின்ற, மேனிவித்தாம் - சரீரமேவிதையாகும், நின்றவுடலெனும் வித்துக்கு-நின்றதான சரீரமென்னும் விதைக்கு, எதுவித்தென்னில் - யாது விதையென்றால், நீண்டபாவாபாவம்-நெடிய சநநமரணங்கள், நாளும்-எப்போதும், நிறைந்து-மிகுந்து, கன்று துயரெனுமணிக்கு - கைவிக்கின்ற துன்பமென்னுமிரத்தினத்துக்கு, வைப்பாஞ்செப்பாம் - வைக்கவிடமாகிய சம்புடமென்னும், காதலின் பின்னோடுகின்ற - இச்சையின் பின்செல்லுகின்ற, கவலைநெஞ்சே-துன்பமாகிய மனமேயாம்—எ-ம்.

எ — து. இப்படியென்று ஸ்ரீராமன் கேட்க, வசிட்டமுனி சொல்லுவார், சொல்லப்பட்ட சம்சாரமென்கின்ற சூழ்ந்தகொடிக்கு உள்ளெழாநின்ற துவக்கமாகிய சுபம்சுபமென்கின்ற நெருங்கிய வங்குரத்தைக் கொடுக்கின்ற சரீரமே விதையாகும். நின்றதான சரீரமென்னும் விதைக்கு யாது விதையென்றால் நெடியசநநமரணங்கள் எப்போதும் மிகுந்து கைவிக்கின்ற துன்பமென்னு மிரத்தினத்துக்குவைக்கவிடமாகிய சம்புடமென்னும் இச்சையின்பின் செல்லுகின்ற துன்பமாகிய மனமேயாம்—எ - ம்.

(இ-உ-க-ம்.) மாயைக்கு வித்து தேகமெனவும் அதற்குவித்து மனமெனவுங் கூறியதாம். மாயையில் தனுவாதிக ளுண்டாயின வென்றுசிரியர் யாவ

ருக்கூற, இந்நூலாசிரியர் தனுவின் மாயையுண்டாயிற்றென்று கூறலாமோ வெனில் அஃதுண்மையாகலிற் கூறலாம் அஃதெங்ஙனமெனின் தேகத்தினுண்மை யறியாமையென்று மாயையினுண்மை யறிவென்றும் வேதார்த்தப்படி நிச்சயித்து, ஆத்மாவை மறந்த அறியாமையினின்றும் அறிதலுண்டானபடியால் அவ்வறிதலுக் கவ்வறியாமை காரணமாயிற் றெனக்கொள்க. இன்னும் விரிக்கின் விரியுமாகலின் அனுபவத்திற் சுருக்கிக்காட்டிற்று. இஃதிற் சந்தேகம்வரில் ஆசிரியர் வாக்கினாற் சமாதியினின்று தெளிக. (17)

## மூன்றாம்வித்தின் இலக்கணங்கூறல்.

இல்லதுள தெனுமிந்தத் திரணெஞ்சாலே யெல்லையறப் பிறக்குமா விதனைத்தானே, புல்லுகின்ற கனவிலனு பவிக்குமன்றே புவித்தொழிலாங் கொடிகளே பொருந்திச்சுற்று, மல்லன்மன மெனுமரத்துக் கிரண்டுவித்தா மாவியசை யொன்றாம்வாதனையழுத்தஞ், சொல்லு மிரண்டாவதா மென்றுகொள்வாய் சூரியன்றொல் குலம் விளங்கத் தோன்றுந்தோன்றால்.

இ - ள். இல்லதுளதெனும்-இல்லதுள்ளதென்கின்ற, இந்தத்திரள்-இச்சரீரக்கூட்டங்கள், நெஞ்சால்-மனதினால், எல்லையறப்பிறக்கும்-அளவில்லாமலுண்டாகும், இதனைத்தானே-இச்சரீரவிடயங்களையே, புல்லுகின்ற-கனவில் புணருகின்ற சொற்பனத்தில், அனுபவிக்கும் - (மனம்) அனுபவிக்கும், புவித்தொழிலாங் கொடிகளே - சகதொழில்களென்னுங்கொடிகளே, பொருந்திச்சுற்றும்-சேர்ந்துச் சுற்றிக்கொண்டிருக்கின்ற, அல்லன்மனமெனும்-துன்பத்தையுடைய மனமென்கின்ற, மரத்துக்கு-விருட்சத்துக்கு, இரண்டுவித்தாம்-இரண்டுவிதையாம், ஆவியசைவு - பிராணனசைவு, ஒன்றாம்-ஒருவிதையாகும், அழுத்தம்-அழுத்தமாயிருக்கின்ற, வாதனை-வாசனையானது, சொல்லுமிரண்டாவதாமென்று - சொல்லப்பட்ட இரண்டாம் விதையாகுமென்று, சூரியன் தொல்குலம் விளங்க-சூரியனது பழமையான வமிசம் விளங்கும்படியாக, தோன்றுந் தோன்றால் - உண்டாகிய அரசனே, கொள்வாய் - கொள்ளக்கடவாய்—எ-று.

எ - து. இல்லதுள்ளதென்கின்ற இச்சரீரக்கூட்டங்கள் மனதினால் அளவில்லாமலுண்டாகும். இச்சரீரவிடயங்களை புணருகின்ற சொற்பனத்தில் மன மனுபவிக்கும். சகத்தொழில்களென்னுங் கொடிகளே சேர்ந்துச சுற்றிக்கொண்டிருக்கின்ற துன்பத்தையுடைய மனமென்கின்ற விருட்சத்துக்கு இரண்டுவிதையாம் பிராணனசைவு ஒருவிதையாகும். அழுத்தமாயிருக்கின்ற வாசனையானது சொல்லப்பட்ட இரண்டாம் விதையாகுமென்று சூரியனது பழமையான வமி

சம் விளங்கும்படியாக உண்டாகிய அரசனே! கொள்ளக்கட வாய்—எ - ம்.

**இ-ம். பிராணனசைவுந் திரிஸ்யவாசனையுமே மனதிற்கு வித்தாமென்பதாம்.** (18)

## பிராணனசைவான முதல்வித்தினிலக்கணங்கூறல்.



உண்டாகியெவ்விடத்து முற்றபோத முயிரசைவா லுணர்வுறுமப் போதந்தன்னை, மண்டாமற் றடுக்கைபெரு நன்மையாகும் வளர்போதங் காண்பவற்றை மருவுமாலாற், றண்டாதகாண்பவையே மனத்துக்கென்றுந் தவிராத துயராமத் தனிப்போதந்தான், மிண்டாத சுழுத்தியிற்போ தம்போனிற்கில் வீடதுவே றதுவிமல பவம்வேறில்லை.

இ - ள். உண்டாகி - உதயமாய், எவ்விடத்து முற்றபோதம் - எவ்விடத்திலும் பொருந்திய ஞானமானது,உயிரசைவா லுணர்வுறும்-பிராணசலனத்தினால் (திரிஸ்ய ஞானத்தை) யடையும், அப்போதந்தன்னை - அந்த ஞானத்தை, மண்டாமல் - (பெருந்தாகத்தின்) மிகாமல், தடுக்கை - தடுத்தல், பெருநன்மையாகும் - மிகுந்த சிரேயசாம், வளர்போதம் - வளராநின்ற அறிவானது, காண்பவற்றை - திரிஸ்யத்தை, மாலான்மருவும் - இச்சையினாற்பொருந்தும், தண்டாத - தடையில்லாத, காண்பவையே - திரிஸ்யங்களே, மனத்துக்கு - மனதுக்கு, என்றுந் தவிராததுயராம் எப்போது மொழியாத துன்பமாம், அத்தனிப்போதந்தான் - அந்தத் தனிமையாகிய அறிவானது, மிண்டாத - திரும்பாத, சுழுத்தியிற் போதம்போல் - சுழுத்தியறிவைப்போல, நிற்கில் - இருக்குமாயின், அது - அதுவே, வீடு - திருவாணமும், அது - அதுவே, பேறு - ஆத்ம லாபமும் விமலபதம் - (அதுவே) நிருமலமான பதமுமாம், வேற்றில்லை-வெறொன்றுமில்லை—எ - று.

எ - து. உதயமாய் எவ்விடத்திலும் பொருந்திய ஞானமானது பிராணசலநத்தினாற் றிரிஸ்ய ஞானத்தையடையும், அந்த ஞானத்தைப் பெருந்தாகத்தின் மிகாமல் தடுத்தல் மிகுந்த சிரேயசாம். வளராநின்ற அறிவானது திரிஸ்யத்தை இச்சையினாற் பொருந்தும். தடையில்லாத திரிஸ்யங்களே மனதுக்கு எப்போது மொழியாத துன்பமாம். அந்தத் தனிமையாகிய அறிவானது திரும்பாத சுழுத்தியறிவைப்போல இருக்குமாயின் அதுவே திருவாணமும், அதுவே ஆத்மலாபமும், அதுவே நிருமலமான பதமுமாம். வேறொன்றுமில்லை எ - ம்.

ஆதலா லுயிராசைவால் வாதனைப்பா லழுத்தத்தாலறிவைவிரி வாக்காயென்னி, லோதுபிறப் பறுமறிவின் விரிவேயுள்ள முள்ளத்தா லிவ்வநந்த வுயிர்கள்வாழ்வாஞ், சேதனயோ கிகளெல்லாம் பிராணாயாமந்தியானமருந் தூகத்தின் றிறங்களாலே பேதமன மொடுங்குவது பொருட்டாயன்றோ பிராணவா யுவைநிறுத்திப் பிடிக்கின்றோ.

இ - ள். ஆதலால்-ஆதலினால், உயிராசைவால்-பிராணசலத்தினாலும், வாதனைப்பால் - வாசனையிடத்தில், அழுத்தத்தால் - பிரியத்தினாலும், அறிவை - (விடய) ஞானத்தை, விரிவாக்காயென்னில் - பரவச்செய்யாமற்போனால், ஓது பிறப்பறும் - சொல்லாநின்ற சநநம் விடுபடும், அறிவின்விரியே - அறிவினது (பேத) விருத்தியே, உள்ளம் - மனமாகும், இன்னத்தால் - அம் மனதினால், இவ்வநந்தவுயிர்கள் வாழ்வாம் - இச்சகலவுயிர்களும்வாழும் சேதனயோகிகளெல்லாம் - அறிவையுடைய யோகிகளனைவரும், பிராணாயாமம்-பிராணபந்தத்தினாலும், தியானம்-தியானத்தினாலும், மருந்து - அவுடதத்தினாலும், ஊகத்தின் றிறங்களால்-யுத்தியின் திறங்களினாலும், பேதமன மொடுங்குவது பொருட்டாயன்றோ - வேற்றுமையுள்ள மனமடங்கு நிமித்தமல்லவா, பிராணவாயுவை நிறுத்திப்பிடிக்கின்றார் - பிராணாயாமஞ் செய்கின்றார்கள்—எ - று.

எ - து. ஆதலினால் பிராணசலத்தினாலும் வாசனையிடத்தில் பிரியத்தினாலும் விடயஞானத்தை பரவச்செய்யாமற்போனால் சொல்லாநின்ற சநநம் விடுபடும். அறிவினது பேதவிருத்தியே மனமாகும். அம்மனதினால் இச்சகலவுயிர்களும் வாழும் அறிவையுடைய யோகிகளனைவரும் பிராணபந்தனத்தினாலும், தியானத்தினாலும், அவுடதத்தினாலும் யுத்தியின் திறங்களினாலும், வேற்றுமையுள்ள மனமடங்கு நிமித்தமல்லவா? பிராணாயாமஞ் செய்கின்றார்கள் — எ - ம். (உ௦)

உள்ளத்தை யொடுங்குவிக்குஞ் சமத்துவத்துக் குயர்ந்தகாரணமாகுஞ் சுகமுண்டாக்கு, நன்னூற்ற வறிவையெழு வொட்டாதாக்கு நல்லுயிரின் றடையென்று நல்லோர்சொல்வர், தெளியபல் பொருளறவை விளக்கிவித்துச் சேர்ந்தவாதனையாலே செனிப்பதாகி, விள்ளக்கண் டனுபவிப்ப தாநெஞ்சுக்கு மேவிரண்டா மூற்பத்திவிளம்பக் கேட்பாய்.

இ - ள். நல்லுயிரின் றடை-நன்மைபொருந்திய பிராணபந்தனமானது, உள்ளத்தை-மனதை, ஒடுங்கிவிக்கும் - அடங்கச்செய்யும், சமத்துவத்துக்கு, சமதிருஷ்டிக்கு, உயர்ந்த காரணமாகும் - மேன்மையான காரணமாகும், சுகமுண்டாகும் - இன்பத்தை விளைக்கும், நன்னூற்ற - விடயசம்பந்தமான, அறிவையெழவொட்டாதாக்குமென்று - அறிவை யெழாமற்

செய்யுமென்று, நல்லோர் சொல்வர்-சத்துக்கள் சொல்லுவார்கள், தெள்ளிய-தெளிவாகிய, பல்பொருளறிவை-பலவஸ்துக்களை (அறிகின்ற) அறிவை, விளக்கிவித்து-விளக்கஞ்செய்து, சேர்ந்தவாதனையால்-சேர்ந்திருக்கின்ற வாசனையினால், செனிப்பதாகி-உண்டாவதாய், விள்ளக்கண் டனுபவிப்பதாம் - வெளிப்படையாகக் கண்டனுபவிப்பதாகிய, நெஞ்சுக்கு-மனதுக்கு, மேலிரண்டாமுற்பத்தி - இனியிரண்டாம் விதையினுற்பத்தியை, விளம்பக்கேட்பாய்-சொல்லக்கேட்பாய்—எ - று.

எ - து. நன்மைபொருந்திய பிராணபந்தமானது மனதை அடங்கச்செய்யும். சமதிருஷ்டிக்கு மேன்மையான காரணமாகும். இன்பத்தை விளைவிக்கும் விடயசம்பந்தமான அறிவையெழாமற் செய்யுமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். தெளிவாகிய பல வஸ்துக்களை யறிகின்றவறிவை விளக்கஞ்செய்து சேர்ந்திருக்கின்ற வாசனையினால் உண்டாவதாய் வெளிப்படையாகக்கண்டனுபவிப்பதாகிய மனதுக்கு இனியிரண்டாம் விதையினுற்பத்தியைச் சொல்லக் கேட்பாய்—எ - ம்.

தெள்ளிய மெஞ்ஞானங்களால் விளக்கிவித்து மென்கின்ற கீர்வாணபாடமுண்டு. (இ-ரு-க-ம்.) பிராணனியக்கத்தாற் பூரணபோதமசைந்தது விடயமாக வெதிரிட்டதனாற் சுகதுக்கமனுபவிக்கு மனமுண்டாதலின் அஃதடங்கும் பொருட்டு பிராணாயாமஞ் செய்யவேண்டு மென்பதாம். (21)

## வாசனையான இரண்டாம் வித்தின் இலங்கணங்கூறல்.

திடமான பாவனையான் முன்பினெண்ணந் தீர்ந்துபதார்த்தங்களைச்சேர் வுறக்கைக்கொள்கை, மடமான வாதனையாங் கடுவேகத்தால் வல்லையிற்று னேயொன்றை மதித்தநாடி, யுடனேயவ் வுருவாய் வேற்றெண்ணமெல்லா மொழித்திடுமிவ் வாதனையின் வசத்திலோடித், தொடர்பான புருடனுமாங் கதன்மெய்யாகித் தோன்றுபொருளொன்றென்றே துவண்டுமாலாம்.

இ - ள். திடமான பாவனையால்-திரமாகிய பாவனையினால், முன்பினெண்ணந்தீர்ந்து-பூர்வாபர விசாரணையைவிட்டு, பதார்த்தங்களை-விடயங்களை, சேர்வுறக்கைக் கொள்கை-சேர்க்கைவசமாக்குதல், மடமானவாதனையாம்-அறியாமையாகிய வாசனையாகும், கடுவேகத்தால்-தீவிரவேகத்தினால், வல்லையில்-சீக்கிரத்தில், ஒன்றைமதித்தநாடி-ஒன்றைக் குறித்துப்பார்த்து, உடனேயவ்வுருவாய்-உடனே யந்தவடிவமாய், வேற்றெண்ணமெல்லாம்-வேறான நினைவுகளியாவையும், ஒழித்திடும்-ஒழிக்கின்ற, இவ்வாதனையின் வசத்திலோடி-இந்தவாசனையின்வசத்திற்சென்று, தொடர்பானபுருடனும்-தொடர்பாகிய ஆத்மாவும், ஆங்கதன்மெய்யாகி-அவ்விடத்திலதுவே சத்தியமாய், தோன்றுபொருள்

தோன்றுகின்ற வஸ்துக்களை, நன்றென்று-நல்லதென்று, துவண்டுமாலாம்-சலித்து மயங்கும்—எ - று.

எ - து. திரமாகிய பாவனையினால் பூர்வாபர விசாரணையைவிட்டு விடயங்களை சேர்க்கை வசமாகுதல், அறியாமையாகிய வாசனையாகும். தீவிரவேகத்தினால் சீக்கிரத்தில் ஒன்றைக் குறித்துப்பார்த்து உடனேயந்தவடிவமாய் வேறுனநினைவுக ளியாவையும் ஒழிக்கின்ற இந்த வாசனாவசத்திற்சென்று தொடர்பாகிய ஆத்மாவும் அவ்விடத்திலதுவே சத்தியமாய் தோற்றுகின்ற வஸ்துக்களை நல்லதென்று சலித்து மயங்கும்—எ - ம். (22)

வாதனையின் வேகத்தின் விவசத்தாற்றன் வடிவினைவிட்டனைத்தினையு மயக்கமாகத், தீதமைபுந் தியிற்காணு மதவசத்தாற் றியங்குதல்போ லிம்மனத்தைத் தெரியக்கூறி, லேதமுறு காட்சியேதது தானல்லா தியானெனும்பா வனையேது பொருளல்லாத, தோதுபொருளெனுங்கருத்தே ததுவேசித்த முறுபிறவி சரைமரண முண்டாமித்தால்.

இ - ள். வாதனையின் வேகத்தின்-வாசனையினது வேகத்தின், விவசத்தால்-பரவசத்தினால், தன்வடிவினை விட்டு-தனது ஸ்வரூபத்தை விட்டு, அனைத்தினையும்-சகலத்தையும், மயக்கமாக-மயக்கத்தோடும், தீதமைபுந்தியில்-குற்றம் பொருந்துகின்ற புத்தியில், மதவசத்தால் - மதவசத்தினால், இயங்குதல் போல்-மயங்குதலைப்போல, காணும்-பார்க்கும், இம்மனத்தை-இந்தமனதை, தெரியக்கூறில்-தெரியும்படியாகச் சொல்லில், ஏதமுறுகாட்சியேது - குற்றம் பொருந்திய காட்சியாது, தானல்லாத-நானல்லாததை, இயானெனும் பாவனையேது-நானென்கின்ற பாவனையானது, பொருளல்லாதது-வஸ்துவல்லாததை, ஓதுபொருளெனுங் கருத்தேது-சொல்லுகின்ற வஸ்துவென்னுங் கருத்தியாது, அதுவே சித்தம்-அதுவே மனமாகும், இத்தாலுறுபிறவி சரை மரணமுண்டாம்-இம்மனதினாற் பொருந்திய சநநமரண மூப்புண்டாம்-எ - று.

எ - து. வாசனையினது வேகத்தின் பரவசத்தினால் தனது ஸ்வரூபத்தைவிட்டு சகலத்தையும் மயக்கத்தோடும் குற்றம்பொருந்துகின்ற புத்தியில் மதவசத்தினால் மயங்குதலைப்போலப் பார்க்கும். இந்த மனதை தெரியும்படியாகச் சொல்லில் குற்றம்பொருந்திய காட்சியாது ? நானல்லாததை நானென்கின்ற பாவனையானது வஸ்துவல்லாததைச் சொல்லுகின்ற வஸ்துவென்னுங் கருத்தியாது ? அதுவே மனமாகும். இம்மனதினாற் பொருந்திய சநநமரணமூப்புண்டாம்-எ-ம். ()

மெத்துறுவன் பரிசயத்தாற் பதார்த்தந்தன்னின் மேவுமொரு பாவனையான் மிகச்சலிக்குஞ், சித்தமுளதாற்பிறப்பாதிகளு முண்டாந் தீர்வதுகொள் வதுவடிவாந் திரளிலொன்று, மித்தனையும் பாவியாதனைத்துநீங்கி யெப்போது நின்றதப்போதெழாது சித்த, மொத்துள்வா தனையொழிவா னினைவுதீரி லுயர்ந்தவுப சாந்திதரு முளமாய் வுண்டாம்.

**இ - ள். மெத்துருவன் பரிசயத்தால்-மிருதுவான திடப்பழக்கத்தினால் பதார்த்தந்தன்னில்-பதார்த்தத்தில், மேவுமொருபாவனையால் - பொருந்தாநின்ற ஓர்பாவனையினால், மிகச்சலிக்கும்-மிகவுஞ் சஞ்சலத்தையடையும், சித்தமுளதால்-மனதுண்டாயின், பிறப்பாதிகளு முண்டாம்-சநந மரணமுதலியவைகளு முண்டாகும், தீர்வது கொள்வது வடிவாம் - விடுதலும் பற்றுதலும் ரூபமாகிய, திரளிலொன்றும்-கூட்டங்களிற் பொருந்துகின்ற, இத்தனையும் பாவியாது-இவ்வளவையும் பாவனைசெய்யாமல், அதனைத்துநீங்கி - சகலமும் விட்டு, எப்போதுநின்றது-எப்போதிருந்ததோ, அப்போது-அப்பொழுதே, சித்தமெழாது-மனமுண்டாகாது, ஒத்துள - பொருந்தியிருக்கின்ற, வாதனையொழிவால்-வாசனாக்ஷயத்தினால், நினைவுதீரில்-கருத்தொழிந்தால், உயர்ந்த-மேன்மையான, உபசாந்திதரும்-உபசாந்தம் வரும், உளமாய் வுண்டாம்-மனோநாசமுண்டாகும்—எ - று.**

எ - து. மிருதுவான திடப்பழக்கத்தினால் பதார்த்தத்தில் பொருந்தாநின்ற ஓர்பாவனையினால் மிகவுஞ் சஞ்சலத்தையடையும். மனதுண்டாயின் சநநமரண முதலியவைகளுமுண்டாகும். விடுதலும்பற்றுதலும் ரூபமாகிய கூட்டங்களிற் பொருந்துகின்ற இவ்வளவையும் பாவனைசெய்யாமல் சகலமும்விட்டு எப்போ திருந்ததோ அப்பொழுதே மனமுண்டாகாது. பொருந்தியிருக்கின்ற வாசனாக்ஷயத்தினால் கருத்தொழிந்தால் மேன்மையான உபசாந்தம் வரும் மனோநாசமுண்டாகும்—எ - ம்.

**(இ-க-க-ம்.) பிரயாநந்த பிரதிபலனே சமானவிடயாநந்தத்தைச் சுகமென்றனுபவித்த புருடன்றன்னை மறந்து ஆசைவடிவமா யவ்விடய முண்டாயிருக்கிற் சுகமும் அஃதில்லாவிடிற் றுக்கமுமாய்க் கருதுங்கருத்தே மனமாதலின் அம்மனதிற்கு வாசனைவித்தாயிற்று அப்பேதவாசனை நீங்கின் மனமிறப்பில் விடயாநந்த நீங்கிப் பிரமாநந்தம் வெளிப்படு மென்பதாம். (24)**

## விடயவாசனையே மனதுக்கு உருவமாமென்னல்.

சகப்பொருளி லோரிடத்தோர் நினைவுமின்றேற் றனியிதயகு கையின் றன்னிலுள்ள, நிகழ்ச்சியுறத் தோன்றுவதைப் படியேவன்

ளா னெஞ்சுக்கம் மட்டுருவ மெனநினைப்பே, னுகப்புறமின்பத்தா லும் பொருண்மெய்யானு முள்ளுறுபல்பொருணினைவே யுளத்தின் மேனி, மிகப்படர்காண் பவைதொழிற்கா காதென்றெண்ணும் விண் ணினுநோய் யவர்க்கெங்ஙன் விளையுமுள்ளம்."

இ - ள். சகப்பொருளில்-உலகவஸ்துக்களில், ஓரிடத்தோர் நினைவுமின் றேல்-ஓரிடத்திலொரு நினைவுமில்லையாயின், தனி-ஒப்பற்ற, இதய சூனியவி ண்டன்னில்-மனமென்னுஞ் சூனியாகாயத்தில், உள்ளம்-மனமானது, நிகழ் ச்சியுற-நிகழ்வாக, தோன்றுவதெப்படி-உண்டாவதெவ்வண்ணம், வள்ளால்- உதாரமுள்ள ஸ்ரீராமா, நெஞ்சுக்கு-மனதுக்கு, அம்மட்டுருவமென-அவ்வள வுதான் வடிவமென்று, நினைப்பேன்-கருதுவேன், உகப்புறு மின்பத்தாலும்- மேலான சுகத்தினாலும், பொருண்மெய்யாலும்-பொருளை யுண்மையென்ப தினாலும், உள்ளுறு-அகத்திற்பொருந்திய, பல்பொருணினைவே-பலவஸ்துக் களினினைப்பே, உளத்தின்மேனி-மனதின துருவமாம், மிகப்படர்காண்பவை மிகவும் படர்கின்ற கிரியஸம், தொழிற் காகாதென்றெண்ணும்-கிரியைக் காகமாட்டாதென்று நினைக்கின்ற, விண்ணினு நொய்யவர்க்கு-ஆகாயத்தினு ஞ்சொச்ச மானவர்களுக்கு, எங்ஙனுள்ளம் விளையும்-எப்படி மனதுண்டாகும்.

எ - து. உலகவஸ்துக்களில் ஓரிடத்திலொரு நினைவுமில்லையா யின் ஒப்பற்ற மனமென்னுஞ் சூனியாகாயத்தில் மனமானது நிகழ் வாக உண்டாவதெவ்வண்ணம், உதாரமுள்ள ஸ்ரீராமா! மனதுக்கு அவ்வளவுதான் வடிவமென்று கருதுவேன். மேலான சுகத்தினாலும் பொருளை யுண்மையென்பதினாலும் அகத்திற் பொருந்திய பலவஸ்து க்களினினைப்பே மனதின் துருவமாம், மிகவும்படர்கின்ற கிரிஸ்யம் கிரியைக்காகமாட்டாதென்று நினைக்கின்ற ஆகாயத்திலுஞ் சொச்ச மானவர்களுக்கு எப்படி மனதுண்டாகும். (25)

## விடயவாசனை நீங்கிப் பிரமவாசனையுண்டாயின் மனதிற்கு உருவநாச முண்டாமெனல்.



அபாவமே பற்றலபா வம்பாவித்த லாய்ந்துண்மைப்பொருள் காண்டன் மனவாய்வென்பர், அபாவமா மனைத்தையுமுள்ளகற்றிச் சீதச் சுதைபோலு மின்விதய நடக்குமென்னிற், றவாததொழிலுற் றுனு மந்தச்சித்தந் தன்வடிவி லாதெனச் சாற்றும்கண்டாய், குவாண் மறுசன் மந்தருவா தனைத்துன்னுமோதார் குவாலவட்டம் போற்றிரிவர் குறைவின்முத்தர்.

இ - ள். அபாவமே பற்றல்-(சகத்) தில்லாததாகப் பற்றுதலும், அபாவம் பாவித்தல் - (அதை) இல்லாததாகப் பாவித்தலும், ஆய்ந்து - விசாரணைசெய்து, உண்மைப்பொருள் காண்டல்-உண்மையாகிய வஸ்துவைக்காணுதலும், மனமாய்வென்பர் - மனோநாசமென்று சொல்லுவார்கள், சுபாவமாம்-சுபாவமாகும்படி, அனைத்தையு முள்ளகற்றி-சகலத்தையு முள்ளேதள்ளி, சீதச்சுதைபோலும்-குளிர்ச்சியான அமிர்தத்தைப்போலும், இவ்விதய நடக்குமென்னில்-இந்தமனது சஞ்சரிக்குமானால், தவாததொழிலுற்றாலும்-குறையாத செயலைப் பொருந்தினாலும், அந்த சித்தம்- அம்மனமானது, தன் வடிவில்லாததெனை-தன்னுருவ மில்லாததென்று, சாற்றுங்கண்டாய்-(சத்துக்களாற்)சொல்லப்படும், குவான் மறுசன்மம் - கூட்டமாகிய மறுபிறப்பை, தருவாதனை துன்றோர்-கொடாநின்ற வாசனையை நெருங்காதவர்கள், குலாலவட்டம் போல்-குயவன் சுழற்றிவிட்ட சக்கரத்தைப்போல, குறைவின்முத்தர்-குறைவில்லாத சீவன் முத்தர்கள், திரிவர்-(பிராரத்தமுள்ள பரியந்தஞ்) சஞ்சரிப்பார்கள்—எ - று.

எ - து. சகத்தில்லாததாகப் பற்றுதலும், அதை யில்லாததாகப் பாவித்தலும், விசாரணை செய்து உண்மையாகிய வஸ்துவைக் காணுதலும், மனோநாசமென்று சொல்லுவார்கள். சுபாவமாகும்படி சகலத்தையும் உள்ளே தள்ளி குளிர்ச்சியான அமிர்தத்தைப்போலும் இந்தமனது சஞ்சரிக்குமானால் குறையாத செயலைப்பொருந்தினாலும் அம்மனமானது தன்னுருவமில்லாததென்று சத்துக்களாற் சொல்லபடும். கூட்டமாகிய மறுபிறப்பைக் கொடாநின்ற வாசனையை நெருங்காதவர்கள் குயவன் சுழற்றிவிட்ட சக்கரத்தைப்போலக் குறைவில்லாத சீவன் முத்தர்கள் பிராரத்தமுள்ளபரியந்தஞ் சஞ்சரிப்பார்கள் எ - ம். (26)

## மனதின்னுருவநசித்த சீவன்முத்தர்களின் சிறப்பைக்கூறல்.

வறுத்தவித்தை யொப்பாகி யின்பமன்றி மறுசகம மற்றவாதனை சேர்ந்துள்ளோர், வெறுத்துவிட்ட சீவன் முத்தராகு முண்மையுரு வடைந்தமன முடையோரான்றோர், விறுத்துணர் ஞானக்கரையும் மறுமன்னோர் நெஞ்சநிலா தயான்றோர் விமலமாகப், பொறுத்தவுடலிங்கி லாகாசரூபம் பொருந்தினோரன்றோவென்று புகல்வரன்றே.

இ - ள். வறுத்தவிதை யொப்பாகிய-வறுத்த வித்துக்குச் சமானமாய், இன்பமன்றி-கையல்லாம லிருக்கின்ற, மறுசகமற்ற-மறுபிறப்பில்லாதயாத

னை-சுத்தவாதனையை, சேர்ந்துள்ளோர்-அடைந்திருப்பவர்கள், ஒருத்தவிடர்தீர்-அலைத்த துன்பந்தீர்ந்த, சீவன் முத்தராகும் - சீவன்முத்தர்களாம், உண்மையுருவடைந்த - தத்துவஸ்வரூபத்தைப்பெற்ற, மனமுடையோ ரன்னோர்-மனதையுடையவர்கள் அவர்களே, நிறுத்துணர்-சமமாகவறிகின்ற, ஞானக்கரையுற்றவரு மன்னோர்-ஞானதீரத்தை யடைந்தவர்களும் அவர்களே, நெஞ்சமிலாதவரன்னோர்-மனமில்லாதவர்களு மவர்களே, நிமலமாக-நின்மலமாக, பொருத்தவுடனீங்கில் - சுமந்திருக்கின்ற சரீரம்விடில், ஆகாசரூபம்-(சிதாகாச) ஸ்வரூபத்தை, பொருந்தின ரன்றென்று புகல்வர்-அடைந்தவர்களாச்சீவன் முத்தர்களே யென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள்—எ - று.

எ - து. வறுத்தவித்துக்குச் சமானமாய் சுகமல்லாம லிருக்கின்ற மறுபிறப்பில்லாத சுத்தவாதனையை அடைந்திருப்பவர்கள், அலைத்ததுன்பந்தீர்ந்த சீவன்முத்தர்களாம். தத்துவஸ்ரூபத்தைப் பெற்ற மனதையுடையவர்களே சமமாகவறிகின்ற ஞானதீரத்தை யடைந்தவர்களு மவர்களே, மனமில்லாதவர்களு மவர்களே நின்மலமாகச் சுமந்திருக்கின்ற சரீரம்விடில் சிதாகாச ஸ்வரூபத்தை அடைந்தவர்களாச்சீவன் முத்தர்களே யென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

(இ-கூ-க-ம.) அசுத்த வாசனைநீங்கின் சுத்த வாசனையுள்ள மனமே ஆத்மசுகம் பெற்றதாம். (27)

## நான்காம்வித்தின் இலக்கணங்கூறல்.

உயிரினசை யொன்றுவா தனையொன்றாக வுபயமா மனத்தின் விதை யிவற்றினொன்று, பயில்வுறுமாய்த் தாவிரண்டு முடனேமாயும் பகருறுவா தனைவசத்தாற் பிராணனோட்டம், முயிரசைவால் வாதனையு முண்டாமத்தா லுள்ளமெனும் விதைக்குவிதை மூனையாமுங்காம், பயில்வுறுவா தனையுயிரி னசைவிரண்டும் பலவிதக்காண் பலைவிதத் தாய்ப் படருமன்றே.

இ - ள். உயிரினசையொன்று-பிராண சலனமொன்றாகவும், வாதனையொன்றாக-வாசனையொன்றாகவும், மனத்தின்விதை - மனதின்வித்தானது, உபயமாம்-இரண்டாகும், இவற்றினொன்று-இவ்விரண்டிலொன்று, பயில்வுறமாய்த்தால்-பொருந்தும்படி நசித்தால், இரண்டுமுடனேமாயும்-இரண்டுமுடனே நசிக்கும், பகருமவாதனை வசத்தால்-சொல்லாநின்ற வாசனையின் வசத்தினால், பிராணனோட்டம்-பிராணனசைவும், உயிரசைவால் - பிராணனசைவினால், வாதனையுமுண்டாம்-வாசனையு முண்டாகும், அத்தால்-அதனால், உள்ளமெனும் விதைக்கு-மனமென்கின்ற வித்துக்கு, விதைமூனையாமுங்காம்-சீசாங்குர ஞாயமுண்டாகும், பயில்வுறுவாதனை-சொல்லாநின்ற வாசனையும், உயிரினசைவு-பிராணனசைவுமாகிய, இரண்டும்-இவ்விரண்டும், பலவிதத்தொண்டைவை-நானாவிதமான கிரியைகள், விதாய்ப்படரும்-மூலமாக விரியும்—எ - று.

எ - து. பிராணசலன மொன்றாகவும் வாசனையொன்றாகவும்மன தின் வித்தானது இரண்டாகும். இவ்விரண்டிலொன்று பொருந்தும்படி நசித்தால் இரண்டுமுடனே நசிக்கும் சொல்லாநின்ற வாசனையின் வசத்தினால் பிராணனசைவும், பிராணனசைவினால் வாசனையுமுண்டாகும், அதனால் மனமென்கின்ற வித்துக்குப் பீசாங்குர ஞானமுண்டாகும். சொல்லாநின்ற வாசனையும், பிராணனசைவுமாகிய இவ்விரண்டும் நாநாவிதமான திரிஸ்யங்கள் மூலமாகவிரியும்—எ - ம்.

(இ-ம்.) விடயானுபவத்தால் வாசனையும் அதை யனுபவிக்கும்பொருட்டு சலனமு முண்டாதலால் அவ்விரண்டிற்கும் வித்து திரியஸ மென்பதாம்.

திரிஸ்யத்தினால் வாசனையுண்டாய் அவ்வாசனையான் மனதுண்டாயம்மனதிற் றேகமுண்டாய் அத்
தேகத்தினாற் செனித்து மரிக்கின்ற சம்சா
ரமலைய யுண்டான உற்பத்திக்கிரமமான
கற்பனை விதையாகிய நான்கையுஞ்
சொல்லி இஃதை யொடுக்கிச் சுக
போத மாக்குதற் பொருட் டிதார்த்த
மான நான்குவிந்தையுஞ் சொல்லத்தொ
டங்கித் திரிஸ்யத்துக்கு வித்து
சித்தென் றறிவித்தல்.

ஆதலினற் காண்பவற்றை விடுதலாலே யாருயிரி னசைவுவாதனையிரண்டும், பாதவம்வே ரற்றாற்போல் வேரற்றேகும் படரதுவே காண்பவற்றின் பயில்வித்தாகும், சேதனத்தோன் றுதெனிற்காண் பனவுமில்லைச் செறிதயில மில்லாமற் றிலமுண்டாமோ, பேதமுறவுட் புறங்காண் பவையொன்றில்லைப் புறப்போர்சக் கற்பிக்கும் பிறக்கும் போதம்.

இ - ள். ஆதலினால்-ஆகையினால், காண்பவற்றை-திரிஸ்யத்தை, விடுதலால்-நீக்குதலினால், ஆருயிரினசைவு-பொருந்தாநின்ற பிராணனசைவும், வாதனை-வாசனையுமாகிய, இரண்டும் - இவ்விரண்டும், பாதவம் வேரற்றாற்போல்-விருட்சம் வேரற்றதுபோல, வேரற்றேகும்-அடியோடுகெடும், படரதுவே-படராநின்ற சித்தமொன்றுமே, காண்பவற்றின்-திரிஸ்யத்துக்கு, பயில்வித்தாகும் - சொல்லப்பட்ட விதையாகும், சேதனத் தோன்றுதெனில்-அறிவு தோற்றுதென்றால், காண்பனவுமில்லை-திரிஸ்யமுமில்லை, செறிதயில

மில்லாமல்-நிறைந்த எண்ணெயில்லாமல், திலமுண்டாமோ-என்ளுண்டாயிருக்குமோ, பேதமுற-வேற்றுமையாக, உட்புறம் - உள்ளிலும் புறம்பிலும், காண்பன வொன்றில்லை-திரிஸ்யமென்ப தொன்றுமில்லை, பிறக்கும்போதம்-உதிக்கின்ற ஞானமானது, ஓர்பிறப்பு சங்கற்பிக்கும் - ஒருவிதமான சிருஷ்டியைச் செய்யும்—எ-று.

எ — து. ஆசையினலும் திரிஸ்யத்தை நீக்குதலினலும் பொருந்தாநின்ற பிராணனசைவும் வாசனையுமாகிய இவ்விரண்டும் விருட்சம் வேரற்றதுபோல அடியோடுங்கெடும். படரா நின்ற விருத்திஞானமே திரிஸ்யத்துக்குச் சொல்லப்பட்ட விதையாகும். அறிவு தோற்றுதென்றால் திரிஸ்யமுமில்லை, நிறைந்த வெண்ணெயில்லாமல் எள்ளுண்டாயிருக்குமோ! வேற்றுமையாக உள்ளிலும் புறம்பிலும் திரிஸ்யமென்பதொன்றுமில்லை, உதிக்கின்ற ஞானமானது ஒருவிதமான சிருஷ்டியைச் செய்யும்—எ - ம். (29)

## சித்தேசகத்தாய் விளங்குகின்றதென்றறியிற் சகத்தாகிய மாயாரூபம் நசிக்குமெனல்.

சங்கற்பத் தறிபொருளை யறிவுபின்பாற் றுனேநோக் கிடுங்கனவிற் றனதுசாவு, மங்குத்தே சாந்தரமும் தன்வசத்தா லடைவதுபோலறிபொருளை யறிவுகாணும், பங்கிட்டுமுன்னறிந்த தறியாதேனும் பகரறிவுக் கெதுபதிபாய்ந்ததத்தை, தங்கத்தும் வருந்தத்தால் விசாரமுள்ளோர் துடைப்பதுவே வெம்மாயை துடைத்ததாகும்.

இ - ள். சங்கற்பத்து-சங்கற்பத்தினுல், அறிபொருளை - திரிஸ்யத்தை, அறிவு-ஞானமானது, தன்பாற்றுனே நோக்கிடும்-தன்னிடத்திற்றனேபார்த்திடும், கனவில்-சொற்பனத்தில், தன துசாவும்-தனதிறத்தலும், அங்கு-அச்சொற்பனத்தில், தேசாந்தரமும்-சகலதேசங்களும், தன்வசத்தால்-தன்சமர்த்தால், அடைவதுபோல்-பொருந்துவதுபோல, அறிபொருளை - திரிஸ்யத்தை, அறிவுகாணும்-விருத்தி ஞானமறியும், பங்கிட்டு-பகுத்து, முன்னறிந்தது-முன்னறிந்ததாலும், அறியாதேனும்-அறியாததாலும், பகரறிவுக்கு-சொல்லப்பட்ட அறிவுக்கு, எதுபதிபாய்ந்தது-யாது பிரதிபலித்ததோ, அத்தை-அதை, தங்க-பரிசுத்தம் பொருந்திய, தம் வருத்தத்தால் - தமது பிரயாசத்தினுல், விசாரமுள்ளோர் - விசாரணையுள்ளவர்கள், துடைப்பதுவே வெம்மாயை-துடைத்ததாகும்-கெடுப்பதுவே கொடிய சம்சாரத்தைக் கெடுத்ததாகும்—எ-று.

எ - து. சங்கற்பத்தினுல் திரிஸ்யத்தை ஞானமானது தன்னிடத்திற்றனே பார்த்திடும், சொற்பனத்தில் தனதிறத்தலும், அச்சொற்

பனத்தில் சகலதேசங்களும் தன்சமத்காரத்தால் பொருந்துவதுபோல திரிஸ்யத்தை விருத்திஞானமறியும். பகுத்து முன்னறிந்ததானாலும் அறியாததாலும் .சொல்லப்பட்ட அறிவுக்குயாது பிரதிபலித்ததோ! அதைபரிசுத்தம்பொருந்திய தமது பிரயாசத்தினால் விசாரணையுள்ளவர்கள் கெடுப்பதுவே கொடிய சம்சாரத்தைக் கெடுத்ததாகும்—எ - ம். (30)

## திரிஸ்யமகன்றசித்தில் பிரமசுகமுதிக்குமெனல்

அதுதுடையா மாத்திரமே மாமோகத்தை யடைந்ததா மதுதுடைத்த மாத்திரந்தான், முதுகதியென் றுரைப்பரகின்றதன்றோ முடிவில்பிறப் பாந்தைதான் முளரிக்கண்ணா, சதுவுறுசாட்டியமில்லா வறிவிலாமைக் கடும்பவமில் லாதசுகங் காட்டுமன்றே, சதுரா யசடா யாகந்தத்தைத் தவிர்ந்தொன்று மறிவதறச்சலனந்தீர்வாய்.

இ - ள். அது - அந்தப் பிரதிபலனான திரிஸ்யத்தை, துடையாமாத்திரமே-கெடுக்காதிருப்பதுவே, மாமோகத்தை யடைந்ததாம்-மகாசம்சாரத்தைச்சேர்ந்ததாகும், அது துடைத்தமாத்திரந்தான்-அதைக்கெடுத்ததே, முதுகதியென் றுரைப்பர்-முதிர்ந்த பரகதியென்று சத்துக்கள்சொல்லுவார்கள், அறிவின்ற தன்றோ-திரிஸ்யமல்லவா, முடிவில் பிறப்பாந்தை-அளவற்ற சகதுன்பம், முளரிக்கண்ணா - தாமரைக் கண்ணையுடைய ஸ்ரீராமா, சதுவுறுசாட்டியமில்லா-கலக்கமுற்ற திரிஸ்யமின்மையும், அறிவிலாமை - (விடய) அறிவின்மையும், கடும்பவமில்லாத, சுகங்காட்டும்- நிருவாண) சுகத்தைக்கொடுக்கும், சதுராய்-சதுரையுடையவனாய், அசடாய்-சடமில்லாதவனாய், ஆகந்தத்தைத்தவிர்ந்து-விடயாகந்தத்தை விட்டு, ஒன்றுமறிவதற-ஒன்றையு மறியாமல், சலனந்தீர்வாய்-சஞ்சலத்தை விடுவாய்—எ-று.

எ - து. அந்த பிரதிபலனான திரிஸ்யத்தைக் கொடுக்காதிருப்பதுவே மகாசம்சாரத்தைச்சேர்ந்ததாகும்; அதைக்கெடுத்ததே முதிர்ந்த பரகதியென்று சத்துக்கள்சொல்லுவார்கள். திரிஸ்யமல்லவா அளவற்றசகதுன்பம். தாமரைக்கண்ணையுடைய ஸ்ரீராமா! கலக்கமுற்ற திரிஸ்யமின்மையும் விடயவறிவின்மையும் கொடிய சகமில்லாத நிருவாணசுகத்தைக்கொடுக்கும். சதுரையுடையவனாய் சடமில்லாதனாய் விடயாகந்தத்தைவிட்டு ஒன்றையுமறியாமல் சஞ்சலத்தை விடுவாய்.

(இ-க-ச-ம்.) திரிஸ்யத்தின் காரணமான சித்தைத் பரிசித்தத் திருஷ்டியினால் அத்திரிஸ்யத்தைக் கரைசிற் சுகமுண்டா மென்பதாம். (31)

## சுயஞ்சித்தி விலக்கணங்கூறல்.

---

அறிபொருளை யறியாத வறிவேமெய்யா மவனீயச் சத்தியமாமென்
றறைதலோடுஞ், செறிசடமற் றறிவின்மையெங்ஙனுண்டாஞ்சிற்றின்
மைசடமாவ தெங்ஙன்றீரு, நெறியினுரையென்றவிராமனுக்குமீட்டு
நிறைதவன்சொல் வானெங்கு நிகழ்பற்றின்றி, வெறிதோரிடத் தாறு
தலொன் றறிதலில்லாவியன்சீவன் சடமில்லா வறிவிலாமை.

இ - ள். அறிபொருளை-திரிஸ்யத்தை, அறியாத - பாராமலிருக்கின்ற, அறிவேமெய்யாம்-ஞானஸ்வரூபமாகிய, அவனீ-அப் பரமாத்மாவே நீயாம், சத்தியமென்ற-(ச) தன்மையா மென்று, அறைதலோடும் - வசிட்டமுனி சொல்லவும், செறிசடமற்று-நெருங்கிய திரிஸ்யமில்லாமலிருக்கின்ற (இடத்தில்), அறிவின்மை யெங்ஙனுண்டாம்-அறிவில்லாத தெப்படிவரும், சிற்றின்மை-ஞானமில்லாத (இடத்தில்), சடமாவ தெங்ஙன்றீரும்- திரிஸ்யமெப்படி நீக்கும், நெறியினுரையென்ற-செம்மையாகச் சொல்லவேண்டுமென்று கேட்ட, இராமனுக்கு-ராமருக்கு, மீட்டும்-திரும்பவும், நிறைதவன் சொல்வான்-மிகுந்த தவமுடைய வசிட்டமுனி சொல்லுவார், எங்கு நிகழ்பற்றின்றி-எவ்விடத்திலு நிகழுகின்ற பற்றில்லாமல், வெறிதோரிடத்து - அறிவின்மையான ஒருவிடயத்தில், ஆறுதல்-ஆறுதலும், ஒன்றறிதல்-பொருளையறிதலும், இல்லா-இல்லாத, வியன்சீவன்-பெருமை பொருந்திய ஆத்மாவே, சடமில்லா-திரிஸ்யமில்லாததும், அறிவில்லாமை-அறிவில்லாததுமாம்—எ - று.

எ - து. திரிஸ்யத்தை பாராமலிருக்கின்ற ஞானஸ்வரூபமாகிய அப்பரமாத்மாவே நீயாம். சதுதன்மையாமென்று வசிட்டமுனி சொல்லவும், நெருங்கிய திரிஸ்யமில்லாமலிருக்கின்ற இடத்தில் அறிவில்லாத தெப்படிவரும்? ஞானமில்லாத விடத்தில் திரிஸ்யமெப்படி நீங்கும்? செம்மையாகச் சொல்லவேண்டுமென்று கேட்ட ஸ்ரீராமருக்குத் திரும்பவும் மிகுந்த தவமுடைய வசிட்டமுனி சொல்லுவார். எவ்விடத்திலுநிகழுகின்ற பற்றில்லாமல் அறிவின்மையான ஒருவிடயத்தில் ஆறுதலும், பொருளையறிதலும் இல்லாத பெருமைபொருந்திய ஆத்மாவே திரிஸ்யமில்லாததும் அறிவில்லாததுமாம்—எ - ம்.

(இ-ம்.) ஸ்வரூபஞானத்தில் விருத்திஞானமுண்டாகி, அஃதேவிடயாகாரமாய்த் தடித்தவின அவ்விடயத்தையும் அதை விளக்கும் விடயஞானத்தையு மறியாத ஆத்மஞானத்தை விளக்கினதாம். (32)

## முற்கூறியசித்திற் சுகமுதிக்குமெனல்.

அறிபொருளைப் பற்றாத வறிவுபெற்றா லாயிரங்கா ரியஞ்செயி னுஞ் சடமிலாத, தறிவின்மை யதுவாகு மறிபதத்தை யற்பமு முள் ளாகாச மணுகாதென்னு, மறிஞனவன் சடமாமறிவிலாமை யவன் சீவன் முத்தனவ னாகுந்தன்பா, லறிதருவாசனையொழிவாலொன்று முன்னா தருங்குழவி யூமனறி வொத்துநிற்கும்.

இ-ள். அறிபொருளைப் பற்றாத-திரிஸ்யத்தையடையாத, அறிவுபெற் றால்-ஞானத்தைப்பெற்றால், ஆயிரங்காரியஞ்செயினும்-அளவற்ற தொழில் களைச் செய்தாலும், சடமிலாத-திரிஸ்யமில்லாததும், அறிவின்மை-விருத்தி ஞானமில்லாததும், அதுவாகும்-அவ்வாத்மாவாகும், அறிபவத்தை-திரிஸ்ய த்தை, அற்பமும்-எவ்வளவேனும், உள்ளாகாசம்-இதயாகாசம், அணுகாதெ ன்னில்-கிட்டாதாயின், அவன்-அவனே, அறிஞன்-ஞானவானும், அசடமாம-சடமாகாதவனும், அறிவிலாமை-விடய வறிவில்லாதவனும், அவன் சீவன்மு த்தன்-அவனே சீவன் முத்தனும், அவனுகுந்தன்பால்-அவனிடத்தில், அறித ருவாசனை யொழிவால்-அறிகின்ற வாசனை நாசத்தினால், ஒன்று முன்னாது-ஒன்றையு நினையாமல், அருங்குழவி யூமம் அறிவொத்துநிற்கும்-அரிய குழந் தையறிவுக்கு மூமனறிவுக்கு மொப்பாயிருக்கும்—எ-று.

எ-று. திரிஸ்யத்தை யடையாத ஞானத்தைப்பெற்றால் அள வற்ற தொழில்களைச் செய்தாலும் திரிஸ்யமில்லாததும் விருத்திஞா னமில்லாததும் அவ்வாத்மாவாகும். திரிஸ்யத்தை எவ்வளவேனும் இதயாகாசம் கிட்டாதாயின் அவனே ஞானவானும், சடமாகாதவனு ம்; விடயவறிவில்லாதவனும், அவனே சீவன்முத்தனும், அவனிடத் தில் அறிகின்ற வாசனைநாசத்தினால் ஒன்றையு நினையாமல் அரியகுழ ந்தை யறிவுக்கு மூமனறிவுக்கு மொப்பாயிருக்கும்—எ—ம்.

இதுவுமது - வே.மு.

அன்றிசடபா வனைநீங்கிய கண்டவறிவின் மையைப்பெறலா
மொன்றுமெதனு ளுனைவறி வொன்றிற்பற்றா தொருவகையாய்
நின்றபலவா தனைநீங்கி நிருவிகற்ப சமாதியினாற்
றுன்னுமின்னணிற் கருதிறம்போற் றொடாநந்தந் துன்னுறுமால்.

இ-ள். அன்று-அப்பொழுது, சடபாவனைநீங்கி-திரிஸ்ய பாவனையை விட்டு, அகண்ட-பூரணமாயிருக்கின்ற, அறிவின்மையை-விருத்தி ஞானமில்

வாத (ஆத்ம) ஞானத்தை, பெறலாம்-அடையலாகும், துன்று பதனுல்-பொருந்துகின்றவதனுல், மீள-திரும்பவும், அறிவு-ஞானமானது, ஒன்றிற்பற்று து-ஒன்றிலும் பற்றுமல், ஒருவகையாய் நின்ற-ஒரு பிரகாரமாயிருந்த, பல வாதனைநீக்கி-சகல வாதனைகளும் விட்டு, நிருவிகற்ப சமாதியினுல்-நிருவிகற்ப சமாதியினுல், தூய விண்ணிற் கருநிறம்போல்-நிறைந்த ஆகாயத்தினீலநிறம்போல, தொடரானந்தத் துன்னும்-தொடரும் பூரணுநந்தனிறையும்.

எ — து. அப்பொழுது திரிஸ்யபாவனையைவிட்டு பூரணமாயிருக்கின்ற விருத்திஞான மில்லாத ஆத்ம ஞானத்தை அடையலாகும்; பொருந்துகின்றவதனுல் திரும்பவும் ஞானமானது ஒன்றிலும் பற்றுமல் ஒரு பிரகாரமாயிருந்த சகலவாதனைகளும்விட்டு நிருவிகற்ப சமாதியினுல் நிறைந்த ஆகாயத்தி னீலநிறம்போலத் தொடரும் பூரணுநந்த னிறையும்—எ - ம். (34)

நன்மையான வதிற்பற்றி நாடாவறிவா மியோகிக்குத்
தன்மயந்தா னுதலினுற் றனியாநந்த மதனுடன்போந்
துன்னுநிலைபோக் கொலிபரிசந் தொடர்ந்துமவற்றிற் பற்றுதோன்
வன்மைச்சடனன் றிலனென்றறியான் மகாசுகத்தன்.

இ - ள். நன்மையான-நன்மையாகிய, அதிற்பற்றி-அச்சமாதியைப் பிடித்து, நாடா-திரிஸ்யத்தை நாடாத, அறிவாம்யோகிக்கு-ஞானஸ்வரூபமாகிய ஞானிக்கு, தன்மயந்தானுதலினுல-தன் ஸ்வரூபாந்தானுணபடியினுல், தனியாநந்தம்-தனித்தவாநந்தம், அதனுடன்போம் - அந்த ஆன்மாவிலயிக்கும், துன்னுநிலை-நெருங்கிநிற்பதும், போக்கு-நடப்பதும், ஒலி-சத்திப்பதும், பரிசம்-பரிசிப்பதும, தொடர்ந்தும் - இவைகடொடர்புற்றும், அவற்றிற் பற்றுதோன்-அவைகளிற் பற்றுதலில்லாதவன், வன்மைச்சடனன்று-வலிமையுள்ள திரிஸ்ய மல்லாதவனும், ஆநந்தமிலன்-ஆநந்தமில்லாதவனும, ஒன்றறியான் ஒன்றையு மறியாதவனும், மகாசுகத்தன்-பேராநந்தனுமாம்—எ - று.

எ - து. நன்மையாகிய அச்சமாதியைப்பிடித்து திரிஸ்யத்தை நாடாத ஞானஸ்வரூபமாகிய ஞானிக்கு தன் ஸ்வரூபந்தானுணபடியினுல், தனித்தவாநந்தம் அந்தவான்மாவிலயிக்கும். நெருங்கி நிற்பதும், நடப்பதும், சத்திப்பதும், பரிசிப்பதும், இவைகடொடர்புற்றும் அவைகளிற் பற்றுதலில்லாதவன் வலிமையுள்ள திரிஸ்ய மல்லாதவனும், ஆநந்தமில்லாதவனும், ஒன்றையு மறியாதவனும், பேராநந்தனுமாம்—எ - ம்.

(இ-க-க-ம்.) இச்சித்தே ஆநந்தமயமாய் விளங்கு மென்பதாம். (35)

## இச்சித்துக் குவித்து சத்தாகுமெனல்.



இந்தநோக்கந் தனைப்பற்றி யீனத்தொழிலோ டிசைந்தாலும்
வெந்ததுயரின் கரையேறி விஞ்சுகுணத்தின் கடலாவா
யந்தவுயர்சன் மாத்திரமிவ் வறிவின்வித்தா மவ்வறிவு
முந்துசன்மாத் திரநின்று முளைக்குந்தேசி லொளிபோல.

இ-ள். இந்தநோக்கந்தனைப்பற்றி - இந்தத்திருஷ்டியைப் பிடித்து, ஈன த்தொழிலோடு - இழிவான தொழில்களுடன், இசைந்தாலும் - பொருந்தி னாலும், வெந்ததுயரின் கரையேறி - வெந்துநின்ற துக்கசாகரத்தினின்றுங்க ரையிலேறி, விஞ்சுகுணத்தின் - ஞானச்சிறப்பினது, கடலாவாய் சமுத்திர மாவாய், அந்த வுயர்சன்மாத்திரம் - அந்த மேன்மை பொருந்திய சத்தாமாத் திரம், இவ்வறிவின்வித்தாம் - இந்த ஞானத்தின் விதையாகும், அவ்வறிவு - அந்தஞானம், முந்து சன்மாத்திர நின்று - முதன்மையான சத்திலிருந்து, தேசிலொளிபோல - பிரகாசத்தி லொளியைப்போல, முளைக்கும் உண்டா கும்—எ - று.

எ - து இந்தத்திருஷ்டியைப் பிடித்து இழிவான தொழில்களு டன் பெருந்தினாலும் வெந்துநின்ற துக்கசாகரத்தினின்றுங் கரையி லேறி ஞானச்சிறப்பினது சமுத்திரமாவாய். அந்தமேன் பொருந்திய சத்தாமாத்திரம் இந்தஞானத்தின் விதையாகும். அந்தஞானம் முத ன்மையான சத்திலிருந்து பிரகாசத்தி லொளியைப்போல உண்டா கும்—எ - து.

## அச்சத்துக் கிரண்டிலக்கணங் கூறல்



இடமார்சத்துக் கிருவடிவா மேகநாநா விதவடிவாந்
தடமாமேக வொருவடிவா முஞ் சாற்றுமிவற்றைப் பிரித்திடக்கேள்
கடமே படமே யுள்ளதெனக் கருதவக்காலும் பலவாகப்
படருந்சத்தாமா ரூபத்தின் பிரிவாற்பலவா மதுவொன்றே.

இ - ள். இடமார்சத்துக்கு - வியாபகமாக நிறைந்த சத்துக்கு, இருவடி வாம் - இரண்டுஸ்வரூபமாகும், ஏகம் - ஒன்று, நாநாவித வடிவாம் - பலவித ரூபமாகும், தடமாமேகம் - பெருமை நிறைந்த வொன்று, ஒருவடிவாம் - ஒன் றேயஸ்வரூபமாகும், சாற்றுமிவற்றை - சொல்லப்பட்டஇவைகளை, பிரித்தி டக்கேள் - பிரித்துச்சொல்லக் கேட்பாய், கடமே படமே - கடமென்பதும் படமென்பதும், உள்ளதென - உள்ளதென்று, கருதவக்காலும் - நினைக்குமப

றிப்பார்க்கின்ற, பாவனைகள் பாவனைகளானவை, படருஞ்சத்தாம்ரூபத்தின் - படர்ந்திருக்கின்ற சத்தினதுஸ்வரூபத்தின், பிரிவற்பலவாம் - பிரிவிலுலநே கவிதமாம், அதுவொன்றே - அஃதொருவடிவம்—எ - று.

எ - து. வியாபகமாக நிறைந்த சத்துக்கு இரண்டு ஸ்வரூபமாகும், ஒன்றுபலவிதரூபமாகும், பெருமைநிறைந்தவொன்றுஒன்றாகிய ஸ்வரூபமாகும், சொல்லப்பட்டவிவைகளைப் பிரித்துச்சொல்லக்கேட்பாய்! கடமென்பதும் படமென்பது உள்ளதென்று நீங்காமற் பற்றிப்பார்க்கின்றபாவனைகளாவை படர்ந்திருக்கின்ற சத்தினதுஸ்ரூபத்தின் பிரிவிலுலநேகவிதமாம் அஃதொவடிவம்.

## மூன்றுசத்தையுநீக்கி யேகரூபமான சத்தைக்கூறுதல்.

சற்றும்விசேட மறவிட்டு சன்மாத்திரமாய்ப் பற்றின்றி
யொற்றைவடிவா மகாவடிவா மதுவேசத்தைக் குறும்பதமா
மற்றுங்கால சத்தைகலா சத்தைவத்து சத்தையென
வுற்றசத்தை மூன்றுமொழித் தொன்றுஞ்சன்மாத் திரத்துறுவாய்

இ - ள். சற்றும் - எவ்வளவேனும், விசேடமறவிட்டு விசேட மிலாமனீக்கி, சன்மாத்திரமாய் - சத்தாமாத்திரமாகியும், பற்றின்றி - பிடிப்பில்லாமல், ஒற்றைவடிவாம் - ஏகரூபமாகியும், மகாவடிவாமதுவே - மகத்ஸ்வரூபமாகியு மிருக்கின்றவதுவே, சத்துக்குறும்பதமாம் - சத்தைக்குப்பொருந்துகின்ற பதமாகும், மற்றும் - இன்னும், காலசத்தை - காலசத்தையென்றும், கலாசத்தை-கலாசத்தையென்றும், வத்துசத்தையென - வஸ்துசத்தையென்றும், உற்றசத்தைமூன்றுமொழித்து - பொருந்திய மூன்றுசத்தையும்நீக்கி, ஒன்றும் - ஏகமான, சன்மாத்திரத்துறுவாய்-சத்தாமாத்திரத்திற் பொருந்துவாய்—எ - று.

எ - து. எவ்வளவேனும் விசேடமில்லாம னீக்கி சத்தாமாத்திரமாகியும், பிடிப்பில்லாமல் ஏகரூபமாகியும், மகத்ஸ்வரூபமாகியு மிருக்கின்றவதுவே சத்தைக்குப் பொருந்துகின்ற பதமாகும். இன்னும் காலசத்தையென்றும், கலாசத்தையென்றும், வஸ்துசத்தை யென்றும், பொருந்தி மூன்றுசத்தையும் நீக்கி ஏகமான சத்தாமாத்திரத்திற் பொருந்துவாய்—எ - ம். (38)

காலசத்தை தன்சத்தை வேறாய்க்கருது தொழில்விடினோர்
சிலன்ஞாகியசத்து ரூபியெனினும் பொருள்சேரா
கோலவிதப் பதநல்குங் கொள்கையலபா வரையுண்டா
மூலங்கண்ட தநேகத்தாய் கதுநன்றாகு முறையொங்கே

இ - ள். காலசத்தைதன்சத்தை - காலசத்தை கலாசத்தைவத்து சத்தை யென்கின்றமூன்று சத்தையும், கருது - நினைக்கின்ற, வேறாய்-

வெவ்வேறாயிருக்கின்ற, தொழில்விடின்-செயலைவிடுமானால், ஓர்சிலம் - ஒரு தன்மையில், நன்றாகிய-உத்தமமான, சத்துருபியெனினும்-சத்தாஸ்வரூபத்தையுடையதானாலும், பொருள்சேரா-வாய்மையையுடைய சத்தாகாவாம், பலபாவனை-அநேக கருமங்களானவை, உண்டாம் - உள்ளதான (இச்சத்தைகளில்) அநேகத்துக்கும்-பலவுக்கும், மூலங்கண்டது-காரணமாதலை நோக்கி, சோலவிவிதப்பத நல்குங் கொள்கை-அழகாக வெவ்வேறான பதத்தைக்கொடுக்குந் தன்மையாதலால், அது-அக்காலசத்தை முதலானவை, எங்ஙன்-எப்படி நன்றாகுமுறை-பரிசுத்தமான சத்தையா முறைமை—எ - று.

எ - து. காலசத்தைக்கலாசத்தை வத்துசத்தை யென்கின்ற மூன்றுசத்தையும் நினைக்கின்ற வெவ்வேறாயிருக்கிற செயலைவிடுமானால் ஒருதன்மையில் உத்தமமான சத்தாஸ்வரூபத்தை யுடையதானாலும் வாய்மையையுடைய சத்தாகாவாம். அநேக கருமங்களானவை உள்ளதான இச்சத்தைகளில் பலவுக்கும் காரணமாதலைநோக்கி அழகாக வெவ்வேறான பதத்தைக்கொடுக்குந் தன்மையாதலால் அக்காலசத்தை முதலானவை எப்படிப் பரிசுத்தமான சத்தையாமுறைமை-எ-ம்.

பலபாவனை யென்பது விபாககலனை யெனவுங் கொள்க.

(இ-ச-க-ம்.) ஏகரூபமான சுயஞ்சத்தை நிருபித்ததாம். (39)

## சுயஞ்சத்துக்கதன் முடிவான துரியமே வித்தாமெனல்.

சத்தாசாமா னியமொன் றுந் தனிப்பாவித் துப் பரிபூர்ணச்
சுத்தாநந்த னாய்த்திசைக ளெல்லாந் துன்னி நின்றிடுவாய்
சத்தாசாமா னியமட்டின் கோடியேதுங் கதுதானே
சுத்தாகா ரிதன்வித்தா மதினின்றித் துதான் றோன்றிடுமே.

இ - ள். சத்தா சாமானிய மொன்றும் - சத்தாசாமானியமான வொன்றையும், தனிப்பாவித்து-தனிமையாக பாவனைசெய்து, பரிபூரணம் - பரிபூரணமாயிருக்கின்ற, சுத்தாநந்தனாய்-சுயாநந்தத்தை யுடையவனாய், திசைகளெல்லாம்-திக்குகளனைத்திலும், துன்னி நின்றிடுவாய்-நிறைந்து நிற்பாய், சத்தாசாமானியமட்டின்-சத்தாசாமானிய மாத்திரத்தின், கோடியேது-முடிவானதேதுவோ, அக்கதுதானே சுத்தாகாரிதன் வித்தாம்-அவ்விடத்ததுவேபரிசுத்தாகாரமான இச்சத்துக்கு விதையாம், அதினின்றித்துதான் றோன்றிடும்-அச்சத்தா சாமானிய முடிவினின்றிச் சித்துமுதலிய சகமனைத்து முண்டாம்.

எ - து. சத்தாசாமானியமான வொன்றையும் தனிமையாகப் பாவனைசெய்து பரிபூர்ணமாயிருக்கின்ற சுயாநந்தத்தை யுடையவனாய் திக்குகளனைத்திலும் நிறைந்துநிற்பாய். சத்தாசாமானியமாத்திரத்

திரத்தின் முடிவானதெதுவோ! அவ்விடத்ததுவே பரிசுத்தாகாரமான இச்சத்துக்கு விதையாம். அச்சத்தா சாமானியமுடிவினின்றிச் சித்துமுதலிய சகமனைத்துமுண்டாம்—எ - ம். (40)

## அத்துரியத்துக்கு வித்து ஞானந்தவைசித்தியமான அத்துவிதமெனல்.

மொழிசத்தாசா மானியத்தின் முடிவிலென்ன மெல்லாம்போ
யொழிவதேதங் கதுதானல் லுணர்வின்பதமா முதலதுவா
மழிவிலதற்கு வித்தில்லை யாங்கேயிருந்து விகாரமறத்
தழியவுணர்வு நிலைபெறுமப் பதஞ்சார்ந்தவர்மீண்டிடர்சாரார்.

இ - ள். மொழிசத்தாசாமானியத்தின்-சொல்லப்பட்ட சத்தாசாமானியத்தினுடைய, முடிவில்-அந்தத்தில், எண்ணமெல்லாம்போய் - சங்கற்பிக்கு நினைவுகளனைத்து நீங்கி, ஒழிவதேது-ஒழிகின்ற தெதுவோ, அங்கதுதான்-அவ்விடத்ததுவே, நல்லுணர்வின் பதமாம்-சுகபோதத்தினிடமாம், முதலதுவாம்-முதன்மையாகிய வித்ததுவாகும், அழிவிலதற்கு-குற்றமற்ற அந்தஞானந்த பதத்துக்கு, வித்தில்லை-விதையில்லையாம், ஆங்கேயிருந்து - அச்சுகபோதத்திலயித்து, விகாரமற-வேற்றுமையில்லாமல், தழியவுணர்வு-தழுவாநின்ற ஞானமானது, நிலைபெறும்-நிலைபெற்றிருக்கும், அப்பதஞ் சார்ந்தவர்-அந்தப் பதத்தையடைந்தவர்கள், மீண்டு-திரும்பவும், இடர்சாரார் - துன்பமடையார்கள்—எ-று.

எ - து. சொல்லப்பட்ட சத்தாசாமானியத்தினுடைய அந்தத்தில் சங்கற்பிக்கு நினைவுகளனைத்து நீங்கி ஒழிகின்ற தெதுவோ அவ்விடத்ததுவே சுகபோதத்தினிடமாம். முதன்மையாகிய வித்ததுவாகும்; குற்றமற்ற அந்தஞானந்த பதத்துக்கு விதையில்லையாம் அச்சுகபோதத்திலயித்து வேற்றுமையில்லாமல் தழுவாநின்ற ஞானமானது நிலைபெற்றிருக்கவும்; அந்தப் பதத்தையடைந்தவர்கள் திரும்பவும் துன்பமடையார்கள்—எ - ம். (41)

(இ-உ-ஈ-ம்.) சத்தின் வித்தான துரியத்தையும் அதற்குவித்தான அத்துவிதத்தையு மறிவித்ததாம், சத்தாசாமானியக் கோடியென்றதனாலும், நல்லுணர்வின் பதமென்றதனாலும், இனிச் சாதனைக் கிரமங் கூறப்பட்டது சத்தாசாமானியக்கோடி முதலா யுரைப்பதனாலும், அவ்விரண்டையும் விதையெனக் கூறப்பட்டன, சீர்வாணத்திற் சத்துபரியத்தம் வித்தெனக் கூறவருமென்க.

## இதார்த்தமான நான்குவித்தையுஞ் சொல்லி யதுவே யாவுமாய் விளங்குகின்றதெனல்.

அதுவேயேயது வனைத்திற்கு மேதுவதனுக் கேதுவில்லை
யதுவேசார மனைத்திற்குஞ் சாரமதனிற் சாரமில்லை
யதுவாம்பெரிய தற்பணத்தி லனைத்துப்பொருளின்பார்வைகளா
யதுவிதென்பதெலாந்தோன்று மருகின்மரங்கள் வாவியிற்போல்.

இ - ள். அனைத்திற்கும்-சகலத்துக்கும், அதுவேயேது - அதுவே காரணம், எதுவதனுக்கேதுவில்லை-காரணமானவதற்குக் காரணமில்லை, அனைத்திற்கும்-சகலத்திற்கும், அதுவேசாரம் - அதுவேசாரமாயிருக்கும், சாரமதனிற் சாரமில்லை-சாரமாகிய அதற்குவேறே சாரமில்லை, அதுவாம் பெரியதற்பணத்தில்-அதுவாகிய பெரிய கண்ணுடியில், அனைத்துப்பொருளின்-சகலபதார்த்தங்களின், பார்வைகளாய்-பார்வைகளாயிருக்கின்ற, அதுவிதென்பதெலாம்-அதுவிதுவென்கின்ற சகலமும், அருகின் மரங்கள்-கரைகளிலிருக்கின்ற விருட்சங்கள், வாவியிற்போல்-தடாகத்திற்றோற்றுவதுபோல, தோன்றும்-பிரதிபலிக்கும்—எ - று.

எ - து. சகலத்துக்கும் அதுவேகாரணம், காரணமாவதற்குக் காரணமில்லை; சகலத்திற்கும் அதுவேசாரமாயிருக்கும், சாரமாகியவதற்கு வேறேசாரமில்லை. அதுவாகிய பெரியகண்ணுடியில் சகலபதார்த்தங்களின் பார்வைகளாயிருக்கின்ற அதுவிதுவென்கிற சகலமும் கரைகளிலிருக்கின்ற விருட்சங்கள் தடாகத்திற்றோற்றுவதுபோல பிரதிபலிக்கும்—எ - ம். (42)

## இவ்வனுபவத்திலுள் மனது சாந்தமாமெனல்.



அதுவேயமலஞ் சலையற்ற தஃதாற்றுமதத் துவமதுவே
சதுராவதுவக் துறிலுள்ளஞ் சாற்றுமுபசாந் தியையடையுந்
திதமாயறிந்தவ் வடிவாவாய் சென்மமற்ற பதம்பெருதி
முதல்வாவென்ன விராமனுமம் முனிவையநோக்கி மொழிகின்றான்.

இ - ள். அதுவேயமலம்-அதுவே நின்மலமும், அஃது சலையற்றது-அது வேமூப்பற்றதும், அதுவே யாத்துமதத்துவம்-அதுவேயாத்மதத்துவமுமாம், சதுரா-சதுரையுடைய ராமா, அதுவக்துறில் - அப்பதம் வந்துபொருந்துமாயின், உள்ளஞ்சாற்றுமுபசாந்தியையடையும்-மனது சொல்லப்பட்ட உபசா

ந்தத்தைபெறும், திதமாயறிந்து-திரமாயுணர்ந்து, அவ்வடிவாவாய்-அந்த ஆத்மஸ்வரூபமாவாய், சென்மமற்றபதம்-சநநமில்லாத நிருவாணபதத்தை, முதல்வா-தலைவனே, பெறுதியென-அடையக்கடவா யென்றுசொல்ல, இராமனும் ஸ்ரீராமனும், அம்முனியைநோக்கி-அந்தவசிட்ட முனியைப் பார்த்து, மொழிகின்றான்-சொல்லுகின்றார்—எ - று.

எ - து. அதுவேநின்மலமும், அதுவே மூப்பற்றதும், அதுவே ஆத்மதத்துவமுமாம். சதுரையுடைய ஸ்ரீராமா! அப்பதம்வந்துபொருந்துமாயின் மனதுசொல்லப்பட்ட உபசாந்தத்தைப் பெறும். திரமாயுணர்ந்து அந்தவாத்மஸ்வரூபமாய்; சநநமில்லாத நிருவாணபதத்தைத் தலைவனே அடையக்கடவாயென்று சொல்ல ஸ்ரீராமனும் அந்த வசிட்டமுனியைப்பார்த்துச் சொல்லுகின்றார்—எ - ம்.

(இ-உ-க-ம்.) இச்சுவானுபவத்தினன் மனமுதலிய சகங்களியாவுஞ்சாந்தமா மென்பதாம். (43)

## சுவாத்மானுபவமான பிரமஸ்வரூபத்தை நிச்சயித்ததை நடையும் வருத்தாவருத்தமு நிரூபிக்கத்தொடங்கல்.

அன்னவிதைக ளின்னதென வனைத்துமுரைத்தா யனந்தமெனச், சொன்னபதமெம் முயற்சியினற் றுன்னலாகும் விரைவிலென, மன்னுமுனிசொல் வான்றுன்ப விதையாமிவற்றின் வகைமேன்மே, லென்னென்றுரைத்தே னவற்றவற்றின் முயல்வால்விரைவிற் பதமெய்தும்.

இ - ள். அன்னவிதைகள்-அத்தன்மையுள்ள வித்துக்கள், இன்னதென-இப்படிப்பட்டதென்று, அனைத்து முரைத்தாய்-யாவையுஞ்சொன்னாய், அனந்தமென-முடிவில்லாததென்று, சொன்னபதம்-சொல்லிய (ஞானானந்த)பதத்தை, எம்முயற்சியினல்-எந்தமுயற்சியினல், விரைவில்-சீக்கிரத்தில், துன்னலாகுமென-அடையலாகு மென்று கேட்க, மன்னுமுனிசொல்வான்-நிலைபெற்ற வசிட்டமுனி சொல்லுவார், துன்பவிதையா மிவற்றின்வகை-துன்பத்துக்குவித்தாகிய விவைகளின், மேன்மே லென்னென்றுரைத்தேன்-மேலுமேலு மென்னவென்ன சொன்னேனே, அவற்றவற்றின் முயல்வால்-அதினதின் முயற்சியினல், விரைவிற்பத மெய்தும்-சீக்கிரத்திலத்தப்பத மடையப்படும்—எ - று.

எ - து. அத்தன்மையுள்ள வித்துக்கள் இப்படிப்பட்டதென்றுயாவையுஞ்சொன்னாய், முடிவில்லாததென்று சொல்லிய ஞானானந்தபதத்தை எந்தமுயற்சியினல் சீக்கிரத்தில் அடையலாகுமென்று கேட்க, நிலைபெற்ற வசிட்டமுனி சொல்லுவார். துன்பத்துக்கு

வித்தாகிய இவைகளின் விதங்களை மேலுமேலு மென்னவென்ன சொன்னேனோ! அதினதின் முயற்சியினால் சீக்கிரத்தில் அந்தப்பத மடையப்படும்—எ - ம். (44)

## க்ஷணஞ்சத்தினதீதமாயினுடனே அத்துவிதாநு பவஞ் சித்திக்குமெனல்.

சத்தாசாமா னியக்கோடி பதத்தேசார்வுற் றொருக்காலே, கொத்தாகியவா தனைப்புருட வருத்தத்தாற்கோ ளறவிட்டு, சொத்தாகிய தத் துவமுணர்ந்து தொலையாவடிவா நிலையமிழ்ந்த, வுற்றாய் கணப் போ தென்னினுமக் கணத்தேயுறுமப் பதமடைவாய்.

இ - ள். சத்தசாமானியக்கோடி-சத்தசாமானியத்தின் முடிவாகிய, பதத்தே சார்வுற்று-(அதீத) பதத்தையடைந்து, ஒருக்கால்-ஒருகாலத்தில், கொத்தாகிய வாதனை-திரளாகிய வாசனைகளை, புருடவருத்தந்தால்-புருடவெத்தனத்தினால், கோளறவிட்டு-இடையூறில்லாமற் கெடுத்து, சொத்தாகிய-தனக்குரிமையான, தத்துவமுணர்ந்து-தத்துவஞானத்தையறிந்து, தொலையாவடிவாம்-நாசமில்லாத ஸ்வரூபமாகிய, நிலையமிழ்ந்த-நிலையிலமுழ்ந்த, கணப்போதென்னினும் - க்ஷணப்போதாயினும், உற்றாய்-பொருந்தினாய், அக்கணத்து-அந்தக்ஷணத்தில், உறுமப்பதமடைவாய் - பொருந்தாநின்ற அவ்வத்துவிதபதத்தை யடைவாய்—எ-று.

எ - து. சத்தாசாமானியத்தின் முடிவாகிய அதீதபதத்தையடைந்து ஒருகாலத்தில் திரளாகிய வாசனைகளை புருடவெத்தனத்தினால் இடையூறில்லாமல் கெடுத்துத் தனக்குரிமையான தத்துவஞானத்தையறிந்து நாசமில்லாத ஸ்வரூபமாகிய நிலையிலமுழ்ந்த க்ஷணப்போதாயினும் பொருந்தினாய், அந்த க்ஷணத்தில் பொருந்தாநின்ற அவ்வத்துவித பதத்தையடைவாய்—எ - ம். (45)

## சத்தாயிற் கொஞ்சம் வருத்தத்தினாலுஞ் சித்தாயி லதிக வருத்தத்தினாலும் அத்துவிதத் தை யடையலாமெனல்.

நிகழ்சத்தாசா மானியத்தி னுருவாநிலைய நேர்தியெனிற் பகருமதனிற் சற்றதிக வருத்தத்தாலப் பதம்பெறுதி திகழுஞ்சித்தத் துவத்தினுரு தியானஞ்செய்யி லதற்கதிக மிகவும்வருத்த முறுதலினாலந்தப்பதத்தை மேவுதியால்.

இ - ள். நிகழ் சத்தசாமானியத்தின்-விளங்காநின்ற சத்தசாமானியத்தினது, உருவாநிலையம்-ஸ்வரூபமாகிய நிலையை, நேர்தியெனில் - அடைவாயானால், பகருமதனில்-சொல்லாநின்றவதில், சற்றதிக வருத்தத்தால் - கொஞ்சமதிக பிரயாசத்தினால், அப்பதம் பெறுதி-அந்தப் பதத்தையடைவாய், திகழுஞ்சித்தத்துவத்திலுறு-விளங்காநின்ற சிற்சாமானியத்திற் பொருந்துகின்ற, தியானஞ்செய்திலதற்கதிகம்-தியானஞ்செய்தா லச்சத்தா சாமானிய முயற்சிக்கதிகமாக, மிகவும் வருத்தமுறுதலினால்-மிகவும் பிரயாஸைப் படுதலினால், அந்தப்பதத்தை மேவுதி-அந்தஸ்வரூப மடைவாய்—எ- று.

எ - து. விளங்காநின்ற சத்தாசாமானியத்தினது ஸ்வரூபமாகிய நிலையை யடைவாயானால் சொல்லாநின்ற அதில், கொஞ்சமதிக பிரயாசத்தினால் அந்தப்பதத்தை யடைவாய். விளங்காநின்ற சிற்சாமானியத்திற் பொருந்துகின்ற தியானஞ்செய்தால் அச்சத்தாசாமானிய முயற்சிக்கதிகமாக மிகவும் பிராசைப்படுதலினால் அந்த ஸ்வரூபமடைவாய்—எ - ம்.

(இ-க-க-ம்.) பிரமசதை யடையு மார்க்கத்தின் சுளுவையும் பளுவையும் அறிவித்ததாம். (46)

முன்சித்துபரியந்தம் அற்பியாசஞ் சொல்லிப் பின்
திரிஸ்யவனுசந்தானத்தால் அவ்வனுபவ
முதியாததையும் வாசநாசத்தான்
மனமுதலிய யாவும் நசிப்ப
தையுங் கூறுதல்.

---

முந்துவெறிதே யறிபொருளிற் றியானந்தோன்று முகில்வண்ணா
விந்தவறிவின் சம்பவத்தா லென்று மெங்கு மெய்தாதாற்
றொந்தமான வாதனையை வருந்தித் துடைத்தா யெனிலதனால்
வெந்தவாதி வியாதியெலாம் விரைவிற்றுகளா யகன்றிடுமே.

இ - ள். முந்து-முந்தி, வெறிதே யறிபொருளின்றியானம்-கேவலமாகிய திரிஸ்ய சிந்தனையால், முகில்வண்ணா-மேக வண்ணத்தையுடைய ஸ்ரீராமா, தோன்று-அப்பதமுதியாது, இந்தவறிவின்-இவ்விடய ஞானத்தின், சம்பவத்தால்-உதயத்தினால், என்றும்-எப்போதும், எங்கும்-எவ்விடத்தும், எய்தாது (அனுபவ) முண்டாகாது, தொந்தமான வாதனையை - துவிதமாகிய வாசனையை, வருந்தித் துடைத்தாயெனில்-பிரயாசைப்பட்டுக் கெடுத்தாயானால், அதனால்வெந்த-அதனால் வெப்பமுற்ற, ஆதிவியாதியெலாம்-ஆதிவியாதியான சகலமும், விரைவில்-சீக்கிரத்தில், துகளாயகன்றிடும்-பொடியாக நீங்கும்-எ-று.

எ - து. முந்தி கேவலமாகிய திரிஸ்ய சிந்தனையினால் மேகவண்ணத்தையுடைய ஸ்ரீராமா! அப்பதமுதியாது. இவ்விடய ஞானத்தின்

உதயத்தினால் எப்போதும் எவ்விடத்தும் அநுபவமுண்டாகாது. துவிதமாகிய வாசனையை பிரயாசைப்பட்டுக் கொடுத்தயானால் அந்த னால் வெப்பமுற்ற ஆதிவியாதியான சகலமும் சீக்கிரத்தில் பொடியாக நீங்கும்—எ - ம். (47)

## வாசனையும் மனமும் பீசாங்குர ஞாயமாமெனல்.



முன்னஞ்சென்னவருத்தங்கண் முழுதுஞ்செயினும்வேரோடே
சொன்னமலையைப்பிடிங்கிடினுந் தொடர்வாதனையைவிடலரிதா
முன்னுடனமெம்மட்டொழியா துறுவாதனையம்மட்டழியா
தன்னபடிவாதனையெம்மட் டழியாதுளமம் மட்டொழியா.

இ - ள். முன்னஞ்சொன்ன - முன்சொல்லப்பட்ட, வருத்தங்கள்-பிரயாசைகள், முழுதுஞ்செயினும் - முற்றுஞ்செய்தாலும், சொன்னமலையை - மகம்மேருவை, வேரோடுபிடிக்கிடினும்-மூலத்தோடுபிடுங்கினாலும், தொடர் வாதனையை விடலரிதாம் - தொடரும்வாசனையை விடுதற்கரியதாம், உன்னு மனம் - நினைக்கின்றமனது, எம்மட்டொழியாது - எந்தமட்டுங்கெடாதோ, உறுவாதனை - பொருந்தின வாசனையானது, அம்மட்டழியாது - அந்தமட்டுங் கெடாது, அன்னபடி - அந்தப்பிரகாரமே, வாதனை - வாசனையானது எம்மட்டழியாது - எந்தமட்டுங்கெடவில்லையோ, உளம் - மனம், அம்மட் டொழியா - அந்தமட்டுங் கெடாது—எ - று.

எ - து. முன்சொல்லப்பட்ட பிரயாசைகள் முற்றுஞ்செய்தாலும், மகம்மேருவை மூலத்தோடு பிடுங்கினாலும் தொடரும் வாசனையை விடுதற்கரியதாம். நினைக்கின்ற மனது எந்தமட்டுங் கெடாதோ! பொருந்தின வாசனையானது அந்தமட்டுங் கெடாது. அந்தபிரகாரமே வாசனையானது எந்தமட்டுங்கெடவில்லையோ! மனம் அந்தமட்டுங்கெடாது—எ - ம். (48)

## ஞானமுதிக்குமளவும் மனதும்வாசனையும் நசியாது இவை நசிக்குமளவு ஞானமுதியாதெனல்.



உண்மைஞானமெம்மட்டும் வாராதம்மட் டுளமழியா
இன்மையுளமெம் மட்டழியா திகழ்தத்துவமம் மட்டெய்தா
தன்மையுறுவா தனையெம்மட் டழியாதம்மட் டுணர்வணுகா
வுண்மையுணர்வெம் மட்டணுகா வருவாதனையம் மட்டழியா.

இ - ள். உண்மைஞானம்-தத்துவஞானமானது, எம்மட்டும்வராது-எந்தமட்டும் வரவில்லையோ, அம்மட்டுளமழியா - அந்தமட்டு மனங்கெடாது, திண்மையுளம்-வலிமை (பொருந்திய) மனது, எம்மட்டழியாது-எந்தமட்டுங் கெடவில்லையோ, திகழ்தத்துவம்-பிரகாசியாநின்ற தத்துவ ஞானம், அம்மட்டெய்தா-அந்தமட்டு மடையமாட்டாது, தண்மையுறு வாதனை - இழிவாகிய வாசனையானது, எம்மட்டழியாது-எந்தமட்டுங் கெடவில்லையோ, அம்மட்டுணர்வணுகா-அந்தமட்டு ஞானங்கிட்ட மாட்டாது, வண்மையுணர்வு-மெய்ஞ்ஞானம், எம்மட்டணுகா-எந்தமட்டுங் கிட்டாதோ, அம்மட்டு-அந்தமட்டும், வருவாதனை-வருகின்ற வாசனையானது, அழியா-கெடமாட்டாது—எ-று.

எ — து. தத்துவஞானமானது எந்தமட்டும் வரவில்லையோ! அந்தமட்டு மனங்கெடாது. வலிமைபொருந்திய மனது எந்தமட்டுங் கெடவில்லையோ! பிரகாசியாநின்ற தத்துவஞானம் அந்தமட்டு மடையமாட்டாது. இழிவாகிய வாசனையானது எந்தமட்டுங்கெடவில்லையோ அந்தமட்டு ஞானங்கிட்டமாட்டாது. மெய்ஞ்ஞானம் எந்தமட்டுங்கிட்டாதோ! அந்தமட்டும் வருகின்ற வாசனையானது கெடமாட்டாது—எ — ம். (49)

## திரிவ்யவிச்சைநீங்கில் வாசனக்ஷயமு மனோநாசமும் தத்துவஞானமுமுண்டாமெனல்.

செறிவாஞான மனமாய்வு திரள்வாதனைமாய் விம்மூன்றும்,பிரிதாங்கார ணங்கடமைப் பெறுசாதித்தற் கரிதாகும், நெறியாமதனால் விவேகிகளா னிலைகூர்புருட வருத்தத்தாற், பொறியார்போக மயல் தூரப் போக்கிலிவைதாம் பொருந்துவதாம்.

இ - ள். செறிவாஞானம்-நிறைவாகிய (தத்துவ) ஞானோதயமும், மனமாய்வும்-மனோநாசமும், திரள்வாதனைமாய்வும்-மிகுந்தவாசனக்ஷயமுமாகிய இம்மூன்றும் - இந்தமூன்றும், பிறிதாங்காரணங்கடமை-வேறுகாரணங்களை, பெறு-பெற்று, சாதித்தற்கரிதாகும்-சாதிப்பதற் கரியதாம், நெறியாமதனால்-செவ்விதான அந்தமார்க்கத்தினால், விவேகிகளால்-விவேகிகளினால்,நிலைகூர்-திடமாகிய, புருடவருத்தத்தால்-புருடப்பிரயத்தனத்தினால், பொறியால்-ஐம்பொறிகளாலுண்டாகிய, போகமயல் - போகமயக்கங்களை, தூரப்போக்கில்-தூரத்தள்ளினால், இவைதாம்-இந்தமூன்றும், பொருந்துவதாம்-வந்தடையும்.

எ — து. நிறைவாகிய தத்துவஞானோதயமும், மனோநாசமும், மிகுந்த வாசனக்ஷயமுமாகிய இந்த மூன்றும் வேறு காரணங்களைப் பெற்று சாதிப்பதற்கரிதாம். செவ்விதான அந்த

மார்க்கத்தினால், விவேகிகளினால் திடமாகிய புருடப்பிரயத்தனத்தினால் ஐம்பொறிகளா லுண்டாகிய போகமயக்கங்களைத் தூரத்தள்ளினால் இந்த மூன்றும் வந்தடையும்—எ - ம். (50)

## இம்மூன்றுங் காரணகாரியமாகாமல் சமமாயனுஷ்டிக்கில் சிதாநந்தத்தை யடையலாமெனில்.



இனையமூன்றுஞ் சமமாக வியற்றாவெம்மட் டம்மட்டு
மனையபதமெய் தாவருட மாயிரங்கள் தசென்றாலும்
வினையில்காலஞ் சமமாக மிகுநாளியற்றின் மிகப்பலிக்கு
மினைவிலொன்றொன் றாவியற்றி னிலைகூடாகிட் பலமாகும்.

இ - ள். இனையமூன்றும் - இத்தன்மையவான மனோநாசம் வாசனாட்சயம் தத்துவஞானமென்னு மூன்றும், சமமாக-சமத்துவமாக, எம்மட்டும்-எந்தமட்டும், இயற்றா-முயற்சிசெய்ய வில்லையோ, அம்மட்டும்-அந்தமட்டும், அனையபதம்-அப்படிப்பட்ட ஸ்வரூபபதமானது, வருடமாயிரங்கள் சென்றாலும்-அநேகவருடமாயினும், எய்தா-அடையமாட்டாது, வினையில்காலம்-வினையில்லாத (எப்) போதும், சமமாக - (மூன்றுஞ்) சமத்துவமாக, மிகுநாளியற்றின்-வெகுகாலம் பழகில், மிகப்பலிக்கும்-மிகவும் பிரயோசனமாகும், மினைவில்-மனதில், ஒன்றொன்றாவியற்றில்- ஒன்றொன்றாக முயற்சிசெய்தால்,நிலைகூடாகிட்பலமாகும்-நிலைபொருந்தாமல் பிரயோசனமாகும்—எ - று.

எ - று. இத்தன்மையான மனோநாசம், வாசனாட்சயம், தத்துவஞானமென்னு மூன்றும் சமத்துவமாக எந்தமட்டும் முயற்சி செய்யவில்லையோ! அந்தமட்டும் அப்படிப்பட்ட ஸ்வரூபபதமானது அநேகவருடமாயினும் அடையமாட்டாது. வினையில்லா எப்போதும்மூன்றுஞ் சமத்துவமாக வெகுகாலம் பழகில் மிகவும் பிரயோசனமாகும். மனதில் ஒன்றொன்றாக முயற்சிசெய்தால் நிலைபொருந்தாமல் அப்பிரயோசனமாகும்—எ - ம்.

(இ-உ-க-ம்.) ஞானாப்பியாசத்தி னுண்மையை யறிவித்ததாம். (51)

## பிராணபந்தத்தினாலும் வாசனைவிடுதியினாலும் மனோபந்தநீங்குமெனல்.

ஒக்கவியற்றி னிம்மூன்று மொத்தின்கட்டெல் லாமொழிக்குஞ்
சிக்கலாது தாமரைநூல் வளையஞ்சினைதயிற் சிலைதயாதோ
தொக்கபிறவித்தினங்கொடாறுங் தொடர்ந்துவந்த வாதனைதான்
மிக்ககால யோகத்தின் பழக்கத்தல்லால் விடாதெங்கும்.

இ - ள். ஒக்கவியற்றில்-சமமாகச்செய்தால், இம்மூன்றும் - இந்தமூன்றும், உளத்தின்கட்டெல்லாம்-மனதிலுள்ள பந்தங்களனைத்தையும், ஒழிக்கும்-கெடுக்கும், சிக்கலாது-சிக்கல்லாமலிருக்கின்ற, தாமரைநூல்-தாமரைநூலானது, வளையஞ்சிதையில் - தாமரைத்தண்டு கெடுமாயின், சிதையாதோ-கெடாதோ, தொக்கபிறவித்திரள்கடோறும்-பொருந்திய சநநங்கடோறும், தொடர்ந்து வந்தவாதனை-தொடர்பாகி வந்தவாசனையானது, மிக்ககாலயோகத்தின் பழக்கத்தல்லா லெங்கும்விடாது - வெகுகாலத்தியானத்தின் பழக்கத்தாலன்றி எவ்விடத்து நீங்காது—எ - று.

எ - து. சமமாகச் செய்தால் இந்த மூன்றும் மனதிலுள்ள பந்தங்களனைத்தையும் கெடுக்கும். சிக்கல்லாம லிருக்கின்ற தாமரைநூலானது தாமரைத்தண்டு கெடுமாயின் கெடாதோ! பொருந்திய சநநங்கடோறும் தொடர்பாகிவந்த வாசனையானது வெகுகாலத் தியானத்தின் பழக்கத்தாலன்றி எவ்விடத்துநீங்காது—எ - ம். (53)

பிறவாதனையை விடலொக்கும் பிராணவாயுத் தளையென்று
திறமாயறிஞ ரியம்புவராற் றிடமாயதுவுஞ் செயவேண்டு
முறுவாதனையே விடினுள்ள முள்ளமல்லா மையையுடைய
நிறையாருயிரைத் தடுக்கினுமா நினக்கேதிச்சைய துசெய்வாய்.

இ - ள். பிறவாதனையை-பிறம்பிலுள்ள வாசனையை, விடலொக்கும்-விடுதலுக்குச் சமானமாம், பிராணவாயுத் தளையென்று-பிராணபந்தனமென்று, திறமாயறிஞரியம்புவர்-திறமான ஞானவான்கள் சொல்லுவார்கள், திடமாய்-திடமாக, அதுவுஞ் செயவேண்டும் - அந்த எத்தனமுஞ் செய்யத்தக்கதாம், உறுவாதனையை விடில்-பொருந்தாநின்ற வாசனையைவிட்டால், உள்ளம்-மனமும், உள்ளமல்லாமையை யடையும்-மனமில்லாமையை யடையும், நிறையாருயிரைத் தடுக்கினும் - பிராணபந்தனஞ் செய்தாலும், ஆம் - மனோநாசமாம், நினக்கேதிச்சை-உனக்கெதுவிச்சையோ, அதுசெய்வாய்-அதைச் செய்வாய்.

எ - து. புறம்பிலுள்ள வாசனையை விடுதலுக்குச் சமானமாம். பிராணபந்தனமென்று திறமான ஞானவான்கள் சொல்லுவார்கள். திடமாக அந்தவெத்தனமுஞ் செய்யத்தக்கதாம், பொருந்தாநின்ற வாசனையைவிட்டால் மனமும், மனமுமில்லாமையை யடையும், பிராணபந்தனஞ் செய்தாலும் மனோநாசமாம், உனக்கெது இச்சையோ அதைச்செய்வாய்—எ - ம். (54)

## பிராணபந்தனத்துக்கும் வாசனைக்ஷயத்துக்குஞ் சாதனமுறைத்தல்.

பிராணாயாம வன்பழக்கம் பேறுறுங்குருச்சொல் லுபாயங்கள்
நிர்வாசனம்போ சனமியோகம் விளம்புமிவற்று லுயிரொடுங்கு

பிராமாசங்கம் விவகார மின்மைபவபா வனேயின்மை
யொராகாரந்தீ ரிடநோக்க லுரைத்தவிவற்றால் வாதனேபோம்.

இ - ள். பிராணயாமம்-பிராணபந்தத்தின், வன்பழக்கம் - வலிய பழக்கமும், பேணும்-விரும்பாநின்ற, குருச்சொல் - ஆசாரிய ருபதேசிக்கப்பட்ட, உபாயங்கள்-யுத்திகளும் விராவாசனம்-சொல்லாநின்ற வாசனமும், போசனம்-புசிப்பும், யோகம்-தியானமுமாகிய, விளம்புமிவற்றால்-சொல்லாநின்ற விவைகளினல், உயிரொடுங்கும்-பிராணனடங்கும், இராமா - ராமா, சங்கம்-பற்றுள்ள, விவகாரமின்மை-விவகார மில்லாமையும், பவபாவனே யின்மை-சம்சார பாவனேயில்லாமையும், ஓராகாரந்தீரிடநோக்கல்-ஒருருவமின்றியருவமாய்ப் பார்ப்பதும், உரைத்தவிவற்றால்-சொல்லிய விவைகளினல், வாதனே போம்-வாசனக்ஷயமாகும்—எ - று.

எ - து. பிராணபந்தத்தின் வலியபழக்கமும் விரும்பாநின்ற ஆசாரியருபதேசிக்கப்பட்ட யுத்திகளும் சொல்லாநின்ற வாசனமும், புசிப்பும், தியானமுமாகிய சொல்லாநின்ற இவைகளினல் பிராணனடங்கும், ஸ்ரீராமா! பற்றுள்ள விவகாரமில்லாமையும் சம்சார பாவனேயில்லாமையும் ஒருருவமின்றி யருவமாய்ப்பார்ப்பதும் சொல்லிய இவைகளினல் வாசனக்ஷயமுமாகும்—எ — ம். (54)

## மனத்தினசைவே பிராணனுதலால் அதைத்தடுக்கின் மனது நிற்குமெனல்.

பகைவாதனேமாய்ந் திடிற்சித்தந் தோன்றாப்பவன மொடுங்கிவிடிற், றொகைதீர்துகளந் தரத்துண்டோ சொன்னபிராணசைவேது நகையாருள்ளத் தசைவதுவே யதனுற்பிராண விசைத்தடைதான், நகைசேர்மதிமான் களுக்கியல்பாய்த் தப்பாதியற்றத் தக்கதுவே.

இ - ள். பகை-சத்துருவான, வாதனேமாய்ந்திடில் - வாசனைட்சயம் வந்தால், சித்தந்தோன்றா - மனமுண்டாகாது, பவனமொடுங்கிவிடில் - காற்றி (அசை) வடங்கினல், தொகைதீர்துகள்-அளவற்ற புழுதிகள், அந்தரத்துண்டோ-ஆகாயத்திலுண்டாமோ, சொன்னபிராணன் - (முன்) சொல்லப்பட்ட பிராணவாயுவின், அசைவேது-சலனமெதுவோ, அதுவே-அதுதானே, நகையாருள்ளத்தசைவு-துன்பநிறைந்த மனதினசைவாகும், அதனுற்பிராணவிசை அதனுற் பிராணவேகத்தை, தடைதான் - தடுப்பது, நகைசேர்மதிமான்களுக்கியல்பாய்த் தப்பாதியற்றத் தக்கது-நற்குணமுள்ள அறிஞர்க்கியற்கையாகத் தவறுமற் செய்யத் தக்கது—எ - று.

எ - து. சத்துருவான வாசனாட்சயம் வந்தால் மனமுண்டாகா து, காற்றினசைவடங்கினால் அளவற்ற புழுதிகள் ஆகாயத்திலுண்டா மோ? முன்சொல்லப்பட்ட பிராணவாயுவின் சலனமெதுவே அதுதா னே துன்பநிறைந்த மனதினசைவாகும் அதனாற் பிராணவேகத் தைத் தடுப்பது நற்குணமுள்ள அறிஞர்க்கியற்கையாகத் தவறாமற் செய்யத்தக்கது—எ - ம். (55)

## மனதையடக்குதற்கு இன்னுநான்குயுத்தி சொல்லுதல்,

வேறு.

ஊகநன்மையா லல்லது வெலப்படா துள்ளம்
வேகமத்தமா வங்குசத்த லால்வெலப் படுமோ
வேகபோதத்தை யறிதனல் லவருட னெய்தல்
சோகவாதனை விடலுயிர் தோன்றுறா தொடுக்கல்.

இ - ள். ஊகநன்மையா லல்லது-யுத்தியினன்மையினா லல்லாமல், உள் ளம்-மனமானது, வெலப்படாது-வெல்லப்படாது, வேகமத்தமா-கோபங்கொ ண்ட மதயானையானது, அங்குசத்தலால் - அங்குசத்தினாலன்றி, வெலப்படு மோ-செயிக்கப்படுமோ, ஏகபோதத்தையறிதல்-ஒன்றாகிய ஞானத்தையறித லும், நல்லவருடனெய்தல்-நன்மையுள்ள சத்துக்களுடன் சேருதலும், சோக வாதனைவிடல - துக்கவாசனையை விடுதலும், உயிர்தோன்றுறா தொடுக்கல்- பிராணசலனமில்லாம லடக்குதலும்—எ - று.

எ - து. யுத்தியினன்மையினா லல்லாமல் மனமானது வெல்லப படாது. கோபங்கொண்ட மதயானையானது அங்குசத்தினாலன்றி செயிக்கப்படுமோ? ஒன்றாகிய ஞானத்தை யறிதலும், நன்மையுள்ள சத்துக்களுடன் சேருதலும, துக்கவாசனையை விடுதலும, பிராணச லனமில்லாம லடக்குதலும்—எ - ம். (56)

## இந்நான்கு யுத்தியையன்றி மனதை யடக்கக் கூடாதெனல்.

உரைசெய்நால் வகையு நெஞ்சை யொடுக்குமூ கங்களாகும்
புரையிலா விவற்றுக்குள்ள மொடுங்குதல் பயன்மழைக்குத்
தரையுறு தூளிபோலந் சாற்றுமூ கங்களன்றி
விரைவினெஞ் சடர்ப்பார்தீபம விட்டிரு ளிருளாற்றீர்ப்பார்.

இ - ள் உரைசெய் - சொல்லப்பட்ட, நல்வகையும் - நான்குவகையும், நெஞ்சையொடுக்கும் - மனதையடக்குகின்ற, ஊகங்களாகும்-யுத்திகளாகும், புரையிலா விவற்றுக்கு-குற்றமற்ற இந்தயுத்திகளுக்கு, உள்ளமொடுக்குதல்-

மனமடங்குதல், புயன்மழைக்கு - மேகவருடத்திற்கு, தரையுறு தூளிபோலாம் பூமியிலடங்கிய புழுதிக்கொப்பாகும், சாற்றுமூகங்களன்றி - சொல்லப்பட்ட யுத்திகளையல்லாமல், விரைவினெஞ்சடர்ப்பார்-வேகமாக மனதையடமாய்க் கெடுப்பவர்கள், தீபம்விட்டிருளிருளாற் றீர்ப்பார் - விளக்கை விடுத்திருளை யிருளினாற் கெடுப்பவர்களுக் கிணையாம்—எ-று.

எ - து. சொல்லப்பட்ட நான்குவகையும் மனதையடக்குகின்ற யுத்திகளாகும். குற்றமற்ற இந்தயுத்திகளுக்கு மனமடங்குதல் மேகவருடத்திற்குப் பூமிலடங்கிய புழுதிக்கொப்பாகும். சொல்லப்பட்ட யுத்திகளையல்லாமல் வேகமாக மனதையடமாய்க் கெடுப்பவர்கள் விளக்கைவிடுத் திருளையிருளினாற் கெடுப்பவர்களுக்கிணையாம்—எ - ம்.

## இவ்யுத்திகளையன்றி மனதையடக்கின் வருந்துமெனல்.

வலியினால் விரைந்தூகங்க ளன்றியே மனத்தைவெல்வா
ரொலிமதக் களிற்றைக்கஞ்ச வளையநூ லொன்றாற்சேர்ப்பார்
மெலியுமம் மூர்க்கருளம் வெருவிநொந் தறநொய்தாகி
நலியுமென் றொன்றுநம்பா நகருற்ற வெருளுமான்போல்.

இ - ள். வலியினால் விரைந்து-பலத்தினால் வேகமாய், ஊகங்களன்றி முன்சொன்ன யுத்திகளையல்லாமல், மனத்தை வெல்வார்-மனதைச் செயிப்பவர்கள், ஒலிமதக்களிற்றை-கெர்ச்சிக்கின்ற மதயானையை, கஞ்சவளைய நூலொன்றால்-தாமரைத்தண்டினுள் ளிருக்கின்ற ஒருநூலினால், சேர்ப்பார்-கட்டுவார்களாவர், மெலியும்-இளைக்கின்ற, அம்மூர்க்கருள்ளம் - அந்தமூடர்களுடையமனது, வெருவிநொந்து-பயந்தேதுக் துன்பத்தையடைந்து, அறநொய்தாகி-மிகவுஞ் சிறுமையாய், நலியுமென்று-வருத்து மென்று, நகருற்று-பட்டணத்தில்வந்து, வெருளுமான்போல்-பயந்த மானைப்போல, ஒன்றுநம்பா-ஒன்றையு நம்பமாட்டாது—எ-று.

எ — து. பலத்தினால் வேகமாய் முன்சொன்ன யுத்திகளையல்லாமல் மனதைச் செயிப்பவர்கள் கெர்ச்சிக்கின்ற மதயானையைத் தாமரைத் தண்டினுள்ளிருக்கின்ற ஒருநூலினால் கட்டுவார்களாவர். இளைக்கின்ற அந்த மூடர்களுடைய மனது பயந்தேதுந் துன்பத்தையடைந்து மிகவுஞ் சிறுமையாய் வருத்துமென்று பட்டணத்தில்வந்து பயந்தமானைப்போல ஒன்றையு நம்பமாட்டாது—எ - ம்.

(இ-எ-க-ம்.) இந்நான்கு யுத்தியிலொன்றினாலாவது மனதையடைக்கின் அடங்கு மிஃதில்லாவிடின் அடங்காதென்பதாம். (58)

## சற்கருமத்தையு நீக்கி ஞானதிருஷ்டியால் இச்சாத்தியாகஞ் செய்யவேண்டு மெனல்

தவமகந் தீர்த்தஞ்சேவை யருச்சனை தானமாதி
யவமயக் கத்தனீணாள் விலங்குபோ லவத்தர்வாழ்வர்
பவமுறு மிவற்றைவிட்டு பரிசுத்த பரமபோதங்
கவரறப் பற்றியெல்லாக் காதலு நீக்கிநிற்பாய்.

இ-ள். தவம்-தவசும், மகம்-யாகமும், தீர்த்தம்-தீர்த்தங்களும், சேவை தேவதரிசனங்களும், அருச்சனை-ஆராதனைகளும், தானமாதி-தானங்களுமுதலிய, அவமயக்கத்தால்-பயனில்லாத மயக்கத்தினால், நீணாள் - வெகுகாலம், விலங்குபோல்-மிருகங்களைப்போல, அவத்தர்வாழ்வர்-வீணர்கள் வாழ்வார்கள் பவமுறும்-சநநத்தைக் கொடுக்கின்ற, இவற்றைவிட்டு - இவைகளை விடுத்து, பரிசுத்த பரமபோதம் - பரிசுத்தமான பிரமஞானத்தை, கவரறப்பற்றி-இரண்டில்லாமற் பிடித்து, எல்லாக்காதலும்-சகலவிச்சைகளையும், நீக்கிநிற்பாய்-கெடுத்திருப்பாய்—எ-று.

எ-து. தவசும், யாகமும், தீர்த்தங்களும், தேவதரிசனங்களும், ஆராதனைகளும், தானங்களுமுதலிய பயனில்லாத மயக்கத்தினால் வெகுகாலம் மிருகங்களைப்போல வீணர்கள் வாழ்வார்கள். சநநத்தைக் கொடுக்கின்ற இவைகளை விடுத்து பரிசுத்தமான பிரமஞானத்தைஇரண்டில்லாமற்பிடித்து சகலவிச்சைகளையும் கெடுத்திருப்பாய் எ-ம். (59)

## திருக்குதிருஷ்டியில் மனதைநீக்கிச் சிந்தையடைய வேண்டுமெனல்

நோக்கும்பொருளற் றறநன்றாய் முதலாய்நுனிக்குங் கருத்தற்று
தாக்குமறிவின் பதமான வொன்றைநாடிச் சான்றோனே
வீக்கும்விசார மறவிதயத் துறைவாய்தொழிலை மேவுகினு
மாக்கஞ்செய்வா னலாதபத மடைதிசமமாஞ் சீர்விளங்க.

இ-ள். நோக்கும்-பார்க்கின்ற, பொருளற்று-விடயமற்று, அறநன்றாய்-மிகவுநன்றாகி, முதலாய்-முதன்மையாக, நுனிக்குங் கருத்தற்று - சங்கற்பிக்கு நினைவின்றி, தாக்குமறிவின்பதமான-தாங்காநின்ற ஞானபதமாகிய, ஒன்றைநாடி-ஒன்றைப்பார்த்து, சான்றோனே-அறிஞனான ராமா, வீக்கும் விசாரமற-பர்தத்தையுடைய வெண்ணமில்லாமல், இதயத்துறைவாய் - இதயத்திற்பொருந்துவாய், தொழிலைமேவுகினும்-தொழிலைப் பொருந்தினாலும், ஆக்கம்-இலாபங் கருதி, செய்வானலாதபதம்-அகர்த்தாவாகிய பிரமபதத்தை, சமமாஞ் சீர்விளங்க-சமமாகிய செல்வம் பிரகாசிக்க, அடைதி-அடையக்கடவாய்-எ-று.

எ - து. பார்க்கின்ற விடயமற்று மிகவுநன்றாகி முதன்மையாக சங்கற்பிக்கு நினைவின்றி தாக்காநின்ற ஞானபதமாகிய ஒன்றைப்பார்த்து அறிஞனை ஸ்ரீராமா! பந்தத்தையுடைய வெண்ணமில்லாமல் இதயத்திற் பொருந்துவாய், தொழிலைப்பொருந்தினாலும் இலாபங் கருதி அகர்த்தாவாகிய பிரமபதத்தைச் சமமாகிய செல்வம் பிரகாசிக்க அடைவாய்—எ - ம்.

(இ-உ-க-ம்.) இச்சையை நீக்கி ஆத்ம ஞானத்தால் மனோரூபமாகிய திரிலயத்தைக் கெடுக்கவேண்டு மென்பதாம் (60)

## மனதை விசாரத்தினாலும் அடக்கலாமெனல்.

தனதுமனத்தை யொருக்காலே விசாரத்தாலே சமிப்பித்த
வனகன்பிறவிப் பயன்பெற்றோ னற்பமெனினு மிதயத்தே
வினவுவிசார மெழிலதுதான் விடாதுபழகு மியோகத்தாற்
கனமதாகிப் பல்விதமாங் கப்பாயிரமாய்ப் பலவாகும்.

இ - ள். தனதுமனத்தை தன்னுடையமனதை, ஒருக்கால் - ஏககாலத்தில், விசாரத்தால் - விசாரணையினால், சமிப்பித்த - கெடுப்பித்த, அனகன் - களங்கமில்லாதவன், பிறவிப்பயன்பெற்றோன் - சநநத்தின்பலனையடைந்தவன், அற்பமெனினும் - அற்பமானாலும், இதயத்து - மனதில், வினவுவிசாரம் - வினவாநின்ற விசாரணையின், எழிலதுதான்விடாது - வலியை விடாமல், பழகுமியோகத்தால் - பழகாநின்ற தியானத்தினால், கனமதாகி - பருமனாய், பலவிதமாம் - நாநாவிதமாகிய, கப்பாயிரமாய் - ஆயிரம்பணைகளோடும், பலவாகும்-அநேகமாகும்—எ-று.

எ — து. தன்னுடைய மனதை ஏககாலத்தில் விசாரணையினால் கெடுப்பித்த களங்கமில்லாதவன் சநநத்தின் பலனையடைந்தவன். அற்பமானாலும் மனதில் வினவாநின்ற விசாரணையின் வலியைவிடாமல் பழகாநின்ற தியானத்தினால் பருமனாய் நாநாவிதமாகிய ஆயிரம் பணைகளோடும் அநேகமாகும்—எ - ம். (61)

## விசாரம் முக்கியமாய் வேண்டுமெனல்.

தக்கவிசார மெனும்பூத்த கருப்பூவட்டத் தொருதாளாய்த்
துக்கவிசாரக் குறைக்காற் றசைத்தற்கரிதாய்த் துவட்சியிலா
மிக்கநிலையா நிலைபோக்கு விழித்தலுறங்க லுளோர்மனத்திற்
புக்கவிசார மில்லாரேற் பொன்றினோரா மெனப்புகல்வர்.

இ - ள். தக்கவிசாரமெனும்-தகுந்த விசாரணையென்கின்ற, பூத்தகரு-புட்பித்த விருட்சமானது, பூவட்டத்து-பூபீடத்தில், ஒருதாளாய்-ஒருவேருள்ளதாய், துக்கவிசாரச் சூறைக்காற்று-சிந்தையென்னுஞ் சுழற்காற்றானது, அசைத்தற்கரிதாய்-அசைப்பதற்கரியதாய், துவட்சியிலா-துவளவில்லாத, மிக்கதிலையாம்-மிகவுந்திரமுள்ளதாம், நிலைபோக்கு-நிற்பதும்போவதும், விழித்தலுறங்கல்-விழிப்பது முறங்குவதும், உளோர் - (இவைகளை) யுள்ளவர்கள், மனத்திற்புக்க-மனத்திற்பொருந்திய, விசாரமில்லாரேல் - விசாரணையில்லாதவர்களாயின், பொன்றினோரெமன-நசித்தவர்களாவரென்று, புகல்வர்-சத்துக்கள் சொல்லுவார்கள்—எ-று.

எ - து. தகுந்த விசாரணையென்கின்ற புட்பித்த விருட்சமானது பூபீடத்தில் ஒருவேருள்ளதாய்ச் சிந்தையென்னுஞ் சுழற்காற்றானது அசைப்பதற்கரியதாய்த் துவளவில்லாத மிகவுந் திரமுள்ளதாம். நிற்பதும் போவதும் விழிப்பதும் முறங்குவதும் இவைகளையுள்ளவர்களாயின் நசித்தவர்களாவரென்று சத்துக்கள்சொல்லுவார்கள்.

## சாதுசங்கத்தோடும் விசாரஞ்செய்ய வேண்டுமெனல்.



கெடாதசிற்கண் ணானீதான் கிளர்மேலவர்க ளுடனேதான்
விடாதிவ்வுலகே தியாமாரென் றுறைக்கமெல்ல விசாரிப்பாய்
தடாதுட்பொருடேர் வித்தைக்கு விசாரந்தானே தனிஞானங்
கடாவியறியத் தக்கத்திற் காணும்பாலின் மதுரம்போல்.

இ - ள். கெடாத சிற்கண்ணால்-நசியாத ஞானதிருஷ்டியினால், நீதான்-நீயேயாவது, கிளர்மேலவர்களுடனேதான்-விளங்காநின்ற மகான்களுடனேயாவது, விடாது-இடைவிடாமல், இவ்வுலகேது-இச்சகமியாது, யாமாரென்று-நாமாரென்று, உறைக்க-திடமாக, மெல்ல விசாரிப்பாய்-மிருதுவாக விசாரணைசெய்வாய், தடாத-தடைப்படாமல், உட்பொருடேர்-உண்மைப்பொருளைத் தேடாநின்ற, வித்தைக்கு-அத்தியாத்தும வித்தைக்கு, விசாரந்தானே-விசாரணையே, தனிஞானம்-தனிமையாகிய ஞானமாம், கடாவியறியத்தக்கது-வினாவியறியத்தக்கவஸ்து, பாலின்மதுரம்போல் - பாலினிரசத்தைப்போல, அதிற்காணும்-அந்த விசாரணையிற் காணப்படும்—எ-று.

எ - து. நசியாத ஞானதிருஷ்டியினால் நீயேயாவது விளங்காநின்ற மகான்களுடனேயாவது இடைவிடாமல் இச்சகமியாது? நாமாரென்று திடமாக மிருதுவாக விசாரணைசெய்வாய். தடைப்படாமல் உண்மைப் பொருளைத் தேடாநின்ற அத்தியாத்தும வித்தைக்கு

விசாரணையே தனிமையாகிய ஞானமாம். விளைவியறியத்தக்க வஸ்து பாலினீர்சத்தைப்போல அந்தவிசாரணையில் காணப்படும்—எ - ம்.

(இ-கூ-க-ம்.) ஆத்மாநாத்ம விசாரத்தால் அநாத்மாவாகிய மனது நீங்கி ஆத்மஞான முதிக்கு மென்பதாம். (63)

## அநுபவியின் இலக்கணம் கூறல்.

நன்றாஞானச் சமநோக்கா ணாடும்பொருட்குச் சமந்தானே
யொன்றாத்தரித்தோன் றீனமுறா னுள்ளமஞ்சான் விவசமுறா
னன்றாஞ்சுற்ற மபத்தியநஞ் சடுத்ததேனு மனமருந்தி
யின்றாயிமைப்பி விறுநொந்த திறந்ததனங்கண் டதுபோலாம்.

இ - ள். நன்றாஞானச்சமநோக்கான்-சுகபோதசமத்துவ திருஷ்டியையுடையவன், நாடும் பொருட்கு-தேடாநின்ற வஸ்துவுக்கு, சமந்தான்-சமத்துவத்தை, ஒன்றாத்தரித்தோன்-முக்கியமாகத் தரித்தவன், தீனமுறான் - ஈனமடையான், உள்ளமஞ்சான்- மனதிற்பயப்படான், விவசமுறான்-(ஒன்றுக்கும்) வசமாகான், அன்றாஞ்சுத்தம்-உச்சிட்டமானாலும், அபத்தியம் - அபத்தியமானாலும், நஞ்சடுத்ததேனும்-விடஞ்சேர்ந்ததானாலும், நொந்தது-நொந்ததானாலும், இறந்தது-கெட்டுப்போனதானாலும், அனம்- அன்னமானது, கண்டது போல்-கற்கண்டைப்போல, அருந்தில-(அவன்) புசித்தால், இன்றாய்-(மந்தம்) இல்லாததாய், இமைப்பிலிறும்-கணத்திற் சீரணமடையும்—எ - று.

எ - து. சுகபோத சமத்துவ திருஷ்டியை யுடையவன் தேடாநின்ற வஸ்துவுக்குச் சமத்துவத்தை முக்கியமாகத் தரித்தவன். ஈனமடையான், மனதிற்பயப்படான், ஒன்றுக்கும் வசமாகான், உச்சிட்டமானாலும், அபத்தியமானாலும், விடஞ்சேர்ந்ததானாலும், நொந்ததானாலும், கெட்டுப்போனதானாலும், அன்னமானது கற்கண்டைப் போல அவன் புசித்தால் மந்தமில்லாததாய் கணத்திற் சீரணமடையும்— எ - ம். (64)

## தேகாபிமானம் நீங்கினதைக் கூறல்.



காளகாள மொப்பனபாற் கருப்பஞ்சாறே தனதுகரில்
விரவுபுந்தி பற்றுமன் மெய்ம்மைபுணர்ந்தோர் சமமாவார்
சிரமங்கரிந்தோர் சிந்தக்தோர் செறுவமொன்றா குறமவன்று
நாவஞானத் தொருநோக்கா ரொக்கக்காண்பருட்குளிர்ந்து

இ - ள். கானகானம் - விடமானாலும் பிரதிவிடமானாலும், ஒப்பனைபாற் கருப்பஞ்சாறு-சிறந்த பாலானாலுங் கரும்பினிரசமானாலும், ஓதனம்-சாதமானாலும், நுகரில்விரவு புத்திபற்றாமல்-பொசிக்கில் விரவாநின்ற மனமானது பற்றாமல், மெய்ம்மையுணர்ந்தோர்-உண்மையை யுணர்ந்தவர்கள்,சமமாவார் - சமத்துவத்தை யடைவார்கள், சிரமங்களிந்தோர்-சிரசை யறிந்தவர்களையுஞ்சிரந்தந்தோர்-சிரசைக் காத்தவர்களையும், செறுநரென்றார்-பகைவரென்று,உறவென்றார்-நட்பென்றார்கள், உரவுஞானத் தொருநோக்கால்-திடஞானமுள்ள ஒப்பற்ற பார்வையினால், உட்குளிர்ந்து-அகமகிழ்ந்து, ஒக்கக்காண்பர்-சமமாய்ப் பார்ப்பார்கள்—எ-று.

எ — து. விடமானாலும், பிரதிவிடமானாலும், சிறந்த பாலானாலும், கரும்பினிரசமானாலும், சாதமானாலும் பொசிக்கில் விரவாநின்ற மனமானது பற்றாமல் உண்மையை யுணர்ந்தவர்கள் சமத்துவத்தை யடைவார்கள். சிரசையறிந்தவர்களையும் சிரசைக் காத்தவர்களையும் பகைவரென்று நட்பென்றார்கள் திடஞானமுள்ள ஒப்பற்ற பார்வையினால் அகமகிழ்ந்து சகமாய்ப் பார்ப்பார்கள்—எ - ம். (65)

மூடவிந்தி யங்கடமை மோகவிடய நிலைதன்னி
லோடவொட்டா தூனரெவ்வ மொழிந்தபுந்தி யாற்றடுப்பர்
கேடிலுண்மை யறிந்திளைப்பற் றுணர்வாந்தன்னைக் கிட்டாரை
நீடிந்தியங்கள் கெடவருந்து நிலச்சிற்றளிரை மானினம்போல்.

இ - ள். மூடவிந்தியங்கடமை-சடமான பொறிகளை, மோக விடய நிலை தன்னில்-மோகத்தையுடைய திரிஸ்யத்தில், ஓடவொட்டாது-செல்லாமற்படிக்கு, ஊனர்-சத்துக்கள், எவ்வமொழிந்த-மனத்துன்பமில்லாத, புந்தியாற்றடுப்பர்-அறிவினாற்றடுப்பார்கள், கேடிலுண்மையறிந்து-நாசமில்லாத தத்துவத்தையறிந்து, இளைப்பற்று-மெலிவில்லாமல், உணர்வாந்தன்னை-ஞானஸ்வரூபமாகிய தன்னை, கிட்டாரை-அறியாதமூடர்களை, நீடிந்தியங்கள் - நீண்ட பொறிகள், நிலச்சிற்றளிரை-நிலத்திலுள்ள சிறியதுளிரை, மானினம்போல்-மான் கூட்டத்தைப்போல, கெடவருந்தும்-நசிப்பிக்கும்படி தின்னும்-எ-று.

எ - து. சடமான பொறிகளைமோகத்தையுடைய திரிஸ்யத்தில் செல்லாமற்படிக்கு சத்துக்கள் மனத்துன்பமில்லாத அறிவினாற்றடுப்பார்கள். நாசமில்லாத தத்துவத்தையறிந்து மெலிவில்லாமல் ஞானஸ்வரூபமாகிய தன்னை அறியாத மூடர்களைநீண்டபொறிகள் நிலத்திலுள்ளசிறியதுளிரை மான்கூட்டத்தைப்போல நசிப்பிக்கும்படி தின்னும்— எ - ம்.

(இ-கூ-க-ம்.) அனுப விதேக விர்த்திரியங்களையடக்குந் திறமுரைத்தல். (66)

## சம்சாரநீக்க மறிவிக்குநிமித்தம் சங்கத்தியாகங்கூறல்.

சங்கமடையாப் பொருளுண்டாஞ் சங்கமடையா வாபத்தாஞ்
சங்கமடையா வாசைவருஞ் சங்கமடையாப் பிறப்புண்டாஞ்
சங்கமறுத்தல்வீடென்பர் சங்கமறுத்தல்பிறப்பறுத்தல் [ய்
சங்கமறுத்துப் பொருள்களினீ தனிசசீவனின்முத் தியைப்பெறுவா

இ - ள். சங்கமடையா-சங்கங்காரணமாக, பொருளுண்டாம்-விடயவஸ்துக்களுண்டாகும், சங்கமடையா-சங்கங்காரணமாக, ஆபத்தாம்-ஆபத்துண்டாகும், சங்கமடையா-சங்கங்காரணமாக, ஆசைவரும் - இச்சையுண்டாகும், சங்கமடையா-சங்கங்காரணமாக, பிறப்புண்டாம்-சம்சாரமுண்டாகும், சங்கமறுத்தல்-சங்கத்தைக் கெடுத்தலே, வீடென்பர்-மோக்ஷமென்று சொல்லுவார்கள், சங்கமறுத்தல்-சங்கத்தைக் கெடுத்தலே, பிறப்பறுத்தல்-சநநத்தைக்கெடுத்தல், பொருள்களின்-விடயங்களின், சங்கமறுத்து-சங்கத்தைக்கெடுத்து, தனிச்சீவன் முத்தியை-தனிமையான சீவன்முத்தியை, நீபெறுவாய் - ஸ்ரீராமா நீபெறக்கடவாய்—எ-று.

எ - று. சங்கங் காரணமாக விடயவஸ்துக்களுண்டாகும்; சங்கங் காரணமாக ஆபத்துண்டாகும், சங்கங்காரணமாக இச்சையுண்டாகும், சங்கங் காரணமாக சம்சாரமுண்டாகும், சங்கத்தைக்கெடுத்தலே மோக்ஷமென்று சொல்லுவார்கள். சங்கத்தைக் கெடுத்தலே சநநத்தைக் கெடுத்தல். விடயங்களின் சங்கத்தைக்கெடுத்து தனிமையான சீவன்முத்தியை ஸ்ரீராமா நீ பெறக்கடவாய்—எ - ம். (67)

## விடயசங்கத்தை நீக்குதற்பொருட்டு அதனிலக்கண முரைத்தல்.

என்றமுனியை யனைத்தைய மென்னும்பணிக்குச் சாற்காலத்
துன்றுகடுங்காற் றெருப்பாயிச் சங்கமேது சொல்லென்ற
வென்றியிராமற்கவனுரைப்பான் மிகுபல்பொருள்பாவாபாவத்
தொன்றுமகிழ்வு பொருமைகளை யுறுதன்மனை வாதனையே.

இ - ள். என்றமுனியை-(இப்படி) யென்றுசொல்லிய வசிட்டமுனியை, அனைத்தைய மென்னும் பணிக்கு-சகலசந்தேக மென்கின்ற பணிக்கு, சாற்காலம்-சாற்காலத்தின், துன்றுகடுங்காற்றெருப்பாய்-நெருங்கிய கடுங்காற்றுக்கினையானவரே, இச்சங்கமேது - இந்தச்சங்கமென்பதியாது, சொல்லென்ற-சொல்லுமென்றுகேட்ட, வென்றியிராமற்கு-வெற்றியையுடைய ராமருக்கு, அவனுரைப்பான்-அந்தமுனிசொல்லுவார், மிகுபல்பொருள்-மிகுந்த பலவஸ்துக்களின், பாவாபாவத்து-பாவத்திலு மபாவத்திலும், ஒன்றும்-பொருந்தாநின்ற, மகிழ்வுபொருமைகளையுறுதல்-விருப்புவெறுப்பை யடைதலாகிய, மனவாதனை-அகத்தவாதனையாம்—எ-று.

எ - து, இப்படியென்று சொல்லிய வசிட்ட முனியைச்சகலசந்தேகமென்கின்ற பனிக்குச் சரற்காலத்தில் நெருங்கிய கடுங்காற்றுக் கிணையானவரே! இச்சங்கமென்பதியாது சொல்லுமென்று கேட்ட வெற்றியையுடைய ஸ்ரீராமருக்கு அந்தம் அபாவத்திலும் பொருந்தாநின்ற விருப்புவெறுப்பை யடைதலாகிய அசுத்தவாதனையாம்,

## மலினவாசனையே விடயசங்கமெனல்.



சாற்றுமலின வானையே சங்கமாஞ்சீ வனின்முத்தி
தோற்றுமுடற்கு மறுபிறவி யின்றியின்ப துன்பங்கண்
மாற்றிவிசுத்த வாதனைதான் மருவுஞ்சீவன் முத்தரலா
வூற்றமடநெஞ் சினர்பிறவி யுறுவாதனையின் பெயர்சங்கம்.

இ - ள். சாற்றுமலினவாதனையே-சொல்லுமசுத்தவாதனையே, சங்கமாம்-சங்கமென்பதாம், சீவனின் முத்திதோற்றும் - சீவன்முத்தியுண்டாகின்ற, உடற்குமறுபிறவியின்றி-சரீரிக்கு மறுசநநமில்லாமல், இன்பதுன்பங்கண்மாற்றி-சுகதுக்கங்களைக்கெடுத்த, விசுத்தவாதனை தான்மருவும்-சுத்தவாசனையானது பொருந்தும், சீவன்முத்தரலால்-சீவன்முத்தரல்லாத, வூற்றமடநெஞ்சினர்-திரமானவஞ்ஞான மனமுடையவர்கள், பிறவியுறுவாதனையின் பெயர் சங்கம்- அசுத்தவாசனையினது நாமமே சங்கமாம்—எ-ற.

எ — து. சொல்லும் அசுத்தவாதனையே சங்கமென்பதாம். சீவன்முத்தியுண்டாகின்ற சரீரிக்கு மறுசநநமில்லாமல் சுகதுக்கங்களைக் கெடுத்த சுத்தவாசனையானது பொருந்தும். சீவன்முத்தரல்லாத திரமான அஞ்ஞானமனமுடையவர்கள் அசுத்தவாசனையினது நாமமே சங்கமாம்—எ — ம். (69)

## அசசங்கநீங்கு முபாயமுரைத்தல்.



பிரியகுறையை யிடராதி பீடியாம னிற்றியெனில்
விரியுமாசை பயங்கோப மிலனுய்ச்சங்கம் விட்டவனீ
கரியதுயரா வினையாது கலந்தசுகத்தான் மகிழாது
புரியுமாசை வசம்போகா திருக்கிற்சங்கம் போக்கினைநீ

இ - ள். பிரியம் - சந்தோடமும், அகுறை - பொருமையும், இடர் - துன்பமும், ஆதி - முதலாகிய விவைகள், பீடியாமல் - வருத்தாமல், நிற்றியெனில் - நிற்பாயாயின், விரியுமாசை - விரிகின்ற விச்சையும், பயம்-

அச்சமும், கோபமிலனும்-குரோதமு மில்லாதவனும், நீசங்கம் விட்டவன் - நீயே சங்கத்தை விட்டவனும், கரியதுயாலிலேயாது - விடமாகிய துக்கத்தினுன் மெலியாமல், கலந்த சுகத்தான் மகிழாது - கூடின இன்பத்தாற்களிக்காமல், பரியும் - பந்தப்படுத்துகின்ற, ஆசை வசம்போகாது - இச்சைவசத்திற் செல்லாமல், இருக்கில் - இருப்பாயாயின், நீசங்கம் போக்கினை - நீயே சங்கத்தைப் போக்கினவன்—எ - று.

எ - து. சந்தோடமும், பொறுமையும், துன்பமும் முதலாகிய இவைகள் வருத்தாமல் நிற்பாயாயின் விரிந்திருக்கின்ற இச்சையும் அச்சமும், குரோதமுமில்லாதவனாய் நீயேசங்கத்தை விட்டவனும் விடமாகியும் துக்கத்தினுன் மெலியாமல் கூடினவின்பத்தாற் களிக்காமல்பந்தப்படுத்துகின்ற இச்சைவசத்திற்செல்லாமல் இருப்பாயாயின் நீயேசங்கத்தைப்போக்கினவன்—எ - ம். (70)

சம்பத்தாபத் திரண்டினுநீ சமமாய்வந்த தனுசரிக்கி
னம்பற்சங்க மகன்றவனீ நாளுந்திரள்வத் துவிற்சமமாய்
விம்பத்திதயச் சத்துவனுய் மேவும்பகுதித் திறமியற்றி
யிம்பர்ச்சங்கமறுத்தின்ப மிசைவாயிராம வெனச்சொன்னுன்.

இ - ள். சம்பத்தாபத்திரண்டினும் - சுகதுக்கங்களாகிய விரண்டிலும், நீசமமாய் - நீ சமத்துவனுகி, வந்ததனுசரிக்கின் - வந்ததை யனுசரித்தால், நீநம்பற்சங்கம் - நீயாசையின் பெருக்கமாகிய சங்கத்தை, அகன்றவன் - விட்டவன், நாளும் - எப்பொழுதும், திரள்வத்துவில் - திரண்ட வஸ்துக்களில், சமமாய் - சமத்துவமாக, விம்பத்திதயம் - பிரிதிவிம்பமான விருதயத்தில், சத்துவனுய் - சாத்துவித குணத்தையுடையவனுய், மேவும் பகுதித்திறமியற்றி - வாராநின்ற காரியங்களைச்செய்து, இம்பர்ச் சங்கமறுத்து - இவ்விடத்திலுள்ள திரிஸ்ய சங்கத்தியாகஞ்செய்து, இராமா - இரகுநாதா, இன்பமிசைவாயென - பிரமாநந்தத்தை யடைவாயென்று, சொன்னுன் - வசிட்டமுனி சொன்னார்—எ - று.

எ - து. சுகதுக்கங்களாகிய இரண்டினும் நீ சமத்துவனுகி வந்ததை யனுசரித்தால் நீ ஆசையின் பெருக்கமாகிய சங்கத்தைவிட்டவன், எப்பொழுதும் திரண்டவஸ்துக்களில் சமத்துவமாகப் பிரிதிவிம்பமானவிருதயத்தில் சாத்துவிதகுணத்தையுடையவனுய் வாராநின்ற காரியங்களைச்செய்து இவ்விடத்திலுள்ள திரிஸ்ய சங்கத்தியாகஞ்செய்து இரகுநாதா! பிரமாநந்தத்தை யடைவாயென்று வசிட்டமுனி சொன்னார்—எ - ம்.

(இ-இ-க-ம்.) திரிஸ்யமுதல் சம்சார பரியந்தமான விடயசங்கத்தைநீக்கி சமதிருஷ்டியாற் பிரமாநந்தத்தை யடையவேண்டு மென்பதாம். (71)

உபசாந்திப் பிரகரணம் - முற்றிற்று.

ஆக கதை 28-க்கு கவிதை—1301.

# புசுண்டன் கதை.

(அவதாரிகை.)

முற்பிரகரணத்தில் சம்சாரமுதல் சத்தாசாமானிய முடிவின் மேலான துரியாதீத பரியந்தந் தெரிசிப்பித்தும் இதிற் கற்பனையாகத் தோற்றின மனோசகத்தி னுபசாந்தத்தைச் சொல்லி இத்துரியாதீதமே சாக்ஷாத்காரமாக விளங்குவதை யபரோக்ஷமா யறிவிக்கு நிமித்தம் பதினைந்து கதைகளினிறைந்த நிருவாணப் பிரகரணஞ் சொல்லத்தொடங்கிக் காலாதீதமான ஞானத்தையும், அஃது காரணமாகச் செய்யும் யோகத்தின் விசித்திரத்தையுந் தெரிவிக்கப் புசுண்டன் கதையை நிரூபிக்கின்றார்.

யாதினால் திருக்குதிருஷ்டியுண்டாய்த் திரிவ்ய
நீங்குமெனின்.

---

மீட்டுமுரைப்பான் றிசைகால மறலான்மறைதலறவிளங்கி
யோட்டமிறந்த லடிமுடிவற் றொன்றாயறிவு மாத்திரமா
நாட்டுபிரம முளவேறொன் றில்லையென்றுள் ளோநாடிக்
காட்டுநானென் பதுவிட்டு காயமில்லாப் பெரியோனாய்.

இ-ள். மீட்டுமுரைப்பான்-திரும்பவும் வசிட்டமுனி சொல்லுவார், திசைகாலமறலால் - திக்குகளுங் காலங்களுமில்லாததால், மறைதலற விளங்கி-மறைப்பில்லாமற் பிரகாசித்து, ஓட்டமிறத்தல் - சலனமுமழிவும், அடிமுடிவற்று - ஆதியந்தமின்றி, ஒன்றாய - ஏகமாகியும், அறிவு மாத்திரமாய்-சின்மாத்திரமாகியு மிருக்கின்ற, நாட்டு பிரமமுள - நிலையான பிரமமேயுள்ளது, வேறொன்றில்லை யென்று - மற்றொரு வஸ்துவு மில்லையென்று, உள்ளோடி-அகத்திற்சிந்தித்து, காட்டும் - காணுகின்ற (விடயங்களை), நானென்பது விட்டு - நானென்னும் (அகம்பாவத்தை) நீக்கி, காயமில்லா-தேகம் (பிரி)வில்லாத, பெரியோனாய் - சீவன் முத்தனாய்—எ-று.

எ-து. திரும்பவும் வசிட்டமுனி சொல்லுவார். திக்குகளுங் காலங்களுமில்லாததால் மறைப்பில்லாமற் பிரகாசித்து சலனமுமழிவும் ஆதியந்தமின்றி ஏகமாகியும் சின்மாத்திரமாகியுமிருக்கின்ற நிலையான பிரமமேயுள்ளது, மற்றொருவஸ்துவுமில்லையென்று அகத்திற் சிந்தித்துக் காணுகின்ற விடயங்களைநானென்னும் அகம்பாவத்தை நீக்கித் தேகப்பிரிவில்லாத சீவன்முத்தனாய்—எ-ம். (1)

ஏகவுருவா யுபசாந்த மோனமெய்தி நின்னுணர்விற்
சோகமற்ற சுகியாவாய் தொடரஞ்ஞான நினைவெம்மட
டாகும்பிரம பாவனைமே வாதம்மட்டும் புவிவலையிற்
போகமயவெம்மட்டம்மட் டுளமாதியின்கற்பனைபொருந்து.

இ - ள். ஏகவுருவாய்-அத்துவித ஸ்வரூபமாய், உபசாந்த மோனமெய்தி- உபசாந்தமாகிய மௌனத்தையடைந்து, நின்னுணர்வில் - உனது ஆத்மஞானத்தில், சோகமற்ற - துன்பமிறந்த, சுகியாவாய் - ஆநந்தத்தை யடையக்கடவாய், தொடரஞ்ஞான நினைவு - தொடராநின்ற அஞ்ஞானநினைப்பு, எம்மட்டுமாகும் - எதுவளவுமாகி யிருக்கின்றதோ, அம்மட்டும் - அதுபரியந்தம், பிரமபாவனைமேவாது - பிரமபாவனையைப் பொருந்தாது, புவிவலையில்-சகத்சாலத்தில், போகமயவெம்மட்டு - போகப்பிரமை யெந்தமட்டு மிருக்கின்றதோ, அம்மட்டும் - அவ்வளவும், உளமாதியின் - மனமுதலியவற்றின், கற்பனைபொருந்தும் - கற்பனைகள் சேரும்—எ - று.

எ - து. அத்துவித ஸ்வரூபமாய் உபசாந்தமாகிய மௌனத்தை யடைந்து உனதாத்மஞானத்தில் துன்பமிறந்த ஆநந்தத்தை யடையக்கடவாய், தொடராநின்ற அஞ்ஞான நினைப்பு எதுவளவுமாகியிருக்கின்றதோ அதுபரியந்தம் பிரமபாவனையைப் பொருந்தாது, சகச்சாலத்தில் போகப்பிரமை யெந்தமட்டு மிருக்கின்றதோ அவ்வளவும் மனமுதலியவற்றின் கற்பனைகள்சேரும்—எ - ம். (2)

சித்தமாயை மனஞ்சீவ னொன்றுமில்லைத் திகழ்பிரம, மொத்த வொன்றாய்ப் பெருங்கடல்போ லுகண்டுவளரு முத்தமனே, பொத்தவுடலைநானென லெம்மட்டுக்காணுமிப்பொருளில், வத்துவெனும் பாவனையெம்மட் டம்மட்டுளமா தியின்மயக்கம்.

இ - ள். சித்தமாயை மனஞ்சீவன்-சித்தமுமாயையுமனஞ் சீவனுமாகிய இவைகள், ஒன்றுமில்லை - ஒன்றாயினுமில்லை, திகழ்பிரமம் - பிரகாசிக்கின்ற பிரமமானது, ஒத்தவொன்றாய் - சமத்துவமான வேகமாய், பெருங்கடல் போல்-மகோததியைப்போல, உத்தமனே - உத்தமனான ஸ்ரீராமா, உகண்டு வளரும் - பொங்கி வளர்ந்து கொண்டிருக்கும், எம்மட்டும் - எதுபரியந்தம், பொத்தவுடலை-சவத்துவாரமுள்ள சரீரத்தை, நானெனல் - நானென்பது, எம்மட்டும் - எதுவரையும், காணும் - காண்கின்ற, இப்பொருளில் - இந்தத்திரியஸ்யங்களில், வத்துவெனும் பாவனை - பொருளென்கின்ற பாவனையிருக்கின்றதோ, அம்மட்டும் - அதுவரையும், உளமாதியின் மயக்கம் - சித்தமுதலானவைகளின் மயக்கமுள்ளதாம்—எ - று.

எ - து. சித்தமுமாயையு மனமுஞ் சீவனுமாகிய இவைகள் ஒன்றாயினுமில்லை, பிரகாசிக்கின்ற பிரமமானது சமத்துவமான வேக

மாய் மகோததியைப்போல உத்தமனான ஸ்ரீராமா! பொங்கிவளர்ந்து கொண்டிருக்கும். எதுபரியந்தம் நவத்துவாரமுள்ள சரீரத்தை நானென்பது எதுவரையும் காண்கின்ற இந்தத் திரிஸ்யங்களில் பொருளென்கின்ற பாவனையிருக்கின்றதோ அதுவரையும் சித்தமுதலானவைகளின் மயக்கமுள்ளதாம்—எ - ம். (3)

எனதிதென்னு மாலெம்மட் டம்மட்டுளமா தியின்மயக்க
மனகவுள்ளே முகமாகி யதனான்மும்மை யுலகென்னுங்
கனமிறாரும்பை யறிவனலி லோமஞ்செய்யிற் கார்வண்ணா
மன்னேமுதலா மயக்கங்க ளவனுக்கொன்றும் வாராதே.

இ - ள். ஈதெனதென்னும் - இதுவெனதென்கின்ற, மாலெம்மட்டு - ஆசையெவ்வளவோ, அம்மட்டு - அந்தமட்டும், உளமாதியின் மயக்கம் - சித்தமுதலான மயக்கமாம், அனகவுள்ளே முகமாகியதனால் - மாசற்ற அகமுகமாகியவதனால், மும்மையுலகென்னும் - மூன்றுலக மென்கின்ற, கனமிறாரும்பை - பருவில்லாத திரணத்தை, அறிவனலில் - ஞானாக்கினியில், ஓமஞ்செய்யில் - ஆகுதிசெய்தால், கார்வண்ணா - மேகவண்ணனே, மன்னேமுதலா மயக்கங்கள் - சித்தமுதலான பிரமைகள், அவனுக்கொன்றும் வாராது - அவனிடத்தெப்போதும் வரமாட்டாது—எ - று.

எ - து. இதுவெனதென்கின்ற ஆசையெவ்வளவோ அந்தமட்டும் சித்தமுதலான மயக்கமாம். மாசற்ற அகமுகமாகியவதனால் மூன்றுலகமென்கின்ற பருவில்லாத திரணத்தை ஞானாக்கினியில் ஆகுதி செய்தால் மேகவண்ணனே! சித்தமுதலான பிரமைகள் அவனிடத்தெப்போதும் வரமாட்டாது—எ - ம்.

(இ-ச-க-ம்.) ஒன்றினாலு மறைவுபடாமல் சுயமாய் பிரகாசிக்கின்ற ஞானமே பிரமமென்னுஞ் சுபாவதிருஷ்டியினால் சுகிக்கிற் பிரமம் பிரத்யக்ஷமாயஞ்ஞான முதலிய கற்பனைகள் யாவுங் கெடுமென்பதாம். (4)

## அவ்வனுபவிக் கடையாளம் யாதெனின்.

படர்சித்துருவாய்ப் பிரிவிலனாய்ப் பாராபாரம் பற்றிலனாய்த்
திடமுற்றனது கனவடிவை நினைசங்கற்பஞ் சேராதே
கடனுயிர்கொல் லுறுபகைவன் கருத்தில்வந்த பிலோகட்பிற்
றொடர்பானவனே யெனக்காணு மனனைகண்டோன் றூயதாக.

இ - ள். படர்சித்துருவாய் - வளராநின்ற ஞானஸ்வரூபமாய், பிறிவிலனாய் - அகண்டனாய், பாரம் - அந்தவரம்பும், அபாரம் - இந்த வரம்பும்,

பற்றிலனாய் - பற்றாதவனாய், திடமுற்று - திடத்தைப்பொருந்தி, உனது கன வடிவைவினை-உனது வியாபகஸ்வரூபத்தைச சிந்தி, சங்கற்பஞ்சேராது - சங்கற்பத்தையடையாது, கடனுவுயிர் கொல்லுறு - கடனுகவுயிரைக் கொலைசெய்கின்ற, பகைவன்-சத்துருவை, கருத்தில் வஞ்சமிலாநட்பில் - மனதில் வஞ்சமில்லாத சினேகத்தில், தொடர்பானவனேயென-உறவானவனேயென்று, காணுமவனே - பார்ப்பவனே, தூய்தாக - பரிசுத்தமாக, கண்டோன்-(ஆத்மாவைத் தரிசித்தவன்—எ - று.

எ - து. வளராநின்ற ஞானஸ்வரூபமாய், அகண்டனாய், அந்தவரம்பும் இந்தவரம்பும் பற்றாதவனாய்த் திடத்தைப்பொருந்தி, உனது வியாபக ஸ்வரூபத்தைச் சிந்தி சங்கற்பத்தையடையாது கடனுகவுயிரைக் கொலைசெய்கின்ற சத்துருவை மனதில் வஞ்சமில்லாதசினேகத்தில் உறவானவனே யென்று பார்ப்பவனே பரிசுத்தமாக ஆத்மாவைத் தரிசித்தவன்—எ - ம்.

(இ-ம்.) பகையை யுறவாகக்காண்பதே குறியென்பதாம். (5)

## ஆயினுறவு கூடுமோவெனில்.

வேரினோடு கரையின்மரம் வீழ்க்குநதியைப் போனண்புஞ்
சீரிலாத மச்சரமுஞ் சிதைத்தோர்மகிழ்வு பொருமைகளாற்
சாருமேத மறுத்தவராந் தனித்தத்துவ நூ லுடன்பாவித்
தோருவார்கா தலைக்கடிக லுதித்தகதிர்கங் குலையொழித்தல்.

இ - ள். கரையின்மரம்-கரையிலிருக்கின்ற விருட்சத்தை வேரினேடு-வேரோடும், வீழ்க்கு நதியைப்போல் - தள்ளுகின்ற ஆற்றைப்போல, நண்பும் (விடய) இச்சையும், சீரிலாதமச்சரமும் - நன்மையில்லாத மாச்சரியத்தையும் சிதைத்தோர் - கெடுத்தவர்கள், மகிழ்வு - மகிழ்ச்சியினாலும், பொருமைகளால் - அழுக்காறுகளினாலும், சாருமேதம் - பொருந்தாநின்ற குற்றத்தை, அறுத்தவராம் - கெடுத்தவராகும், தனித்தத்துவநூலுடன் பாவித்து - ஒப்பற்ற தத்துவஞான சாஸ்திரங்களையுன்னே பாவனைசெய்து, ஓருவார்-ஆராய்ந்தறிபவர்கள், காதலைக்கடில் - ஆசையைக் கெடுத்தல், உதித்தகதிர் - உதயமான சூரியன், கங்குலை யொழித்தல் - இருளைக்கெடுத்தலுங் கொப்பாம்—எ - று.

எ - து. கரையிலிருக்கின்ற விருட்சத்தை வேரோடும் தள்ளுகின்ற ஆற்றைப்போல விடயவிச்சையும், நன்மையில்லாத மாச்சரியத்தையும் கெடுத்தவர்கள் மகிழ்ச்சியினாலும் அழுக்காறுகளினாலும்பொருந்தாநின்ற குற்றத்தைக்கெடுத்தவராகும். ஒப்பற்ற தத்துவஞான சாஸ்திரங்களை யுன்னே பாவனைசெய்து ஆராய்ந்தறிபவர்கள் ஆசை

யைக்கெடுத்தல் உதயமான சூரியன் இருளைக் கெடுத்தலுக்கொப் பாம்—எ - ம்.

(இ-ம்.) பகையையு முறவையும் கெடுக்கில் இச்சாத்யாகம் வருமென் பதாம். (6)

## இச்சாசஞ்சலநீங்குவ தெங்ஙனமெனில்.

---

பற்றத்தகுவாக் கியப்பொருளைப் பயிறன்னெஞ்சாற் பாவித் தோர்க், குற்றுப்புகல்சொற் றிரளுள்ளே யொடுங்கும் வெந்த நில நீர்போற், கற்றுப்பரமப் பொருளைநோக்கார் கண்ணுமறிவைக் கண் டறியார், வற்றத்திரணம் போலவாளாத் திரிவர் மனச்செய்கையிலே வரும்.

இ - ள். பற்றத்தகு-பிடிக்கத்தகுந்த, வாக்கியப்பொருளை-(ஆப்த்த)வா க்கியார்த்தத்தை, பயிறன்னெஞ்சால்-சொல்லப்பட்டதன் மனதினால், பாவி த்தோர்க்கு-பாவனை செய்தவர்களுக்கு, உற்றுப்புகல்-பொருந்திச்சொல்லுகி ன்ற சொற்றிரள்-வாக்கிய சமுகங்கள், வெந்தநில நீர்போல் - வெந்தபூமியின் சலத்தைப்போல, உள்ளொடுங்கும்-மனதிலடங்கும், கற்று - அற்பியாசித்து, பரமப்பொருள் - பிரமவஸ்துவை, நோக்கார் - தரிசியாதவர்கள், கண்ணுமறி வை-கண்ணுகிய ஞானத்தை, கண்டறியார் - தரிசியாதவர்கள், எவருமனச் செய்கையில்-யாவரு மனோவிருத்தியில், வற்றத்திரணம்போலவாளாதிரிவர்-உலர்ந்த துரும்புபோல வீணாகச்சுழலு வார்கள்—எ-று.

எ - து. பிடிக்கத்தகுந்த ஆப்த வாக்கியார்த்தத்தைச் சொல்லப் பட்ட தன்மனதினால் பாவனை செய்தவர்களுக்குப் பொருந்திச் சொ ல்லுகின்ற வாக்கியசமுகங்கள் வெந்தபூமியின் சலத்தைப்போலமன திலடங்கும். அற்பியாசித்து பிரமவஸ்துவைத் தரிசியாதவர்கள், கண் ணுகிய ஞானத்தைத் தரிசியாதவர்கள் யாவரு மனோவிருத்தியில் உல ர்ந்த துரும்புபோல வீணாகச்சுழலுவார்கள்—எ - ம்.

இ - ம். மகாவாக்கியார்த்தங்களைக் குருமுகமாய் விசாரிக்கின் ஞான முதித்து மனோசஞ்சல நீங்கு மென்பதாம். (7)

## யாவருமேன் விசாரணை செய்யவில்லையெனில்



இனையயாரு மிந்தவறி விறவாதிருக்க வீதறிய
வினையமின்றி மிகச்சோர்ந்தார் வீணர்செருக்கு மிகுமுரப்பு
முனையில்வின்ன மேனைசையைப்போன் மூடர்கேட்ப திறப்பதற்கே
யுனையர்வீணாட் கழிப்பதலா — ரவறிவை யறியாரே
அந்தவா

இ - ள். இனையயாரும் - இப்படிப்பட்ட சகலரும், இந்தவறிவு - இந்த ஞானம், இறவாதிருக்க - கெடாமலிருக்க, ஈதறியவினைய மின்றி-இதையறியக் கருத்தில்லாமல் மிகச்சோர்ந்தார்-மிகவும் வாடினார்கள், வீணர்செருக்கும் வீணர்களுடைய மனதையும், மிகுமுரப்பும் - மிகுந்த வதட்டுதலும், மூனையில் - யுத்தகளத்தில், வின்னாணைசையைப்போல்-விறகயிற்றின் ஒருளியைப்போல, மூடர் - மூடர்களிடத்தில், இறப்பதற்குக் கேட்பது - கெடுதற்குக் கேட்கின்றது, அனையர் வீணாட்கழிப்பதலால் - அம்மூடர்கள் வீணாக (வாழும்) காலத்தைக் கழிப்பதேயன்றி, அழியா வறிவையறியார் - கெடாதஞானத்தை யுணரார்கள்—எ - று.

எ - து. இப்படிப்பட்ட சகலரும் இந்தஞானம் கெடாமலிருக்க இதையறியக் கருத்தில்லாமல் மிகவும் வாடினார்கள். வீணர்களுடைய மமதையும், மிகுந்த அதட்டுதலும் யுத்தகளத்தில் விற்கயிற்றின் ஒருளியைப்போல மூடர்களிடத்தில் கெடுதற்குக் கேட்கின்றது. அம்மூடர்கள் வீணாக வாழுங்காலத்தைக் கழிப்பதேயன்றி கெடாத ஞானத்தை யுணரார்கள்—எ - ம்.

(இ - ம்.) அறிவு பிரத்யக்ஷமாயிருந்தும் அறியாமையால் விசாரிக்கவில்லை என்பதாம். (8)

## ஆசிரிய ரறியாமையை நீக்கலாமோவெனின்

ஆயமூடர்க் களித்தபொரு ளளற்றில்வீழ்ந்த பொருளொக்குந்
தீயவவரோ டுரைத்தவுரை சேணைநோக்கி நாய்குரைத்தல்
மேயமடமா பத்தினிட மெய்ம்மையுணராக் கெவ்வாபத்
தேயவணுகா திம்மாயை யெழுவதறிவி லோர்க்கருளால்.

இ - ள். ஆயமூடர்க்கு - அப்படியான மூடர்களுக்கு, அளித்தபொருள் - கொடுத்த வாக்கியார்த்தம், அளற்றில்வீழ்ந்த - சேற்றில் விழுந்த, பொருளொக்கும் - வஸ்துவுக்குச் சமானமாகும், தீயவவரோடு-தீமையை யுடையவர்களுக்கு, உரைத்தவுரை - சொல்லியவாக்கியம், சேணைநோக்கி - ஆகாயத்தைப் பார்த்து, நாய்குரைத்தல் - ஞாளிகுலைத்தலாம், மேயமடம் - பொருந்திய அஞ்ஞானம், ஆபத்தினிடம் - ஆபத்திற்காதாரமாம், மெய்ம்மையுணரார்க்கு - உண்மையை யறியாதவர்களுக்கு, எவ்வாபத்து - எந்தவாபத்து, ஏயவணுகாது - பொருந்தவாமாட்டாது, இம்மாயை - இந்த மாயையானது, அறிவிலோர்க்கு - அறிவில்லாதவர்களுக்கு, அருளால் - கிருபையினால், எழுவது - உண்டாகுவதாம்—எ - று.

எ - து. அப்படியான மூடர்களுக் கொடுத்த வாக்கியார்த்தம் சேற்றில்விழுந்த வஸ்துவுக்குச் சமானமாகும். தீமையையுடையவர்களுக்குச் சொல்லியவாக்கியம் ஆகாயத்தைப்பார்த்து ஞாளிகுலைத்த

லாம் பொருந்தியவஞ்ஞானம் ஆபத்திற்காதாரமாம். உண்மையறியாதவர்களுக்கு எந்தவாபத்தும் பொருந்தவமாட்டாது. இந்தமாயையானது அறிவில்லாதவர்களுக்குக் கிருபையினால் உண்டாகுவதாம்—எ - ம்.

(இ-ம்.) விவேகமின்மையால் போதித்தும், பயன்படாதென்பதாம். ()

## விவேகாவிவேகாதி யிலக்கணம் யாதெனில்.

மெல்லிதாகிக் குளப்படியாய் விவேகபுந்திக் காமுலக
மல்லலாகிக் கரைகாணு வாழுமாகு மறிவில்லோர்க் [ச்
கெல்லையிலதா யறிபொருளா லெண்ணம்படாதாய்ச் சாந்தமுமாய்
சொல்லு மெல்லாமாய்நினைவு தோன்றுச்சற்சிற் சுகமுண்டாம்.

இ - ள். உலகம் - சகமானது, விவேகபுந்திக்கு - ஞானிகளறிவுக்கு, மெல்லிதாகி - அற்பமானதாய், குளப்படியாம் - (பசுவின் குளப்படியாகவாம்) அறிவில்லோர்க்கு-அஞ்ஞானிகளுக்கு, அல்லலாகி - துன்பமாய், கரைகாணு வாழுமாகும் - கரைகாணுதவாழமாம், எல்லையிலதாய் - அளவில்லாததாயும், அறிபொருளால் - விடயங்களினால், எண்ணப்படாதாய் - எண்ணுதற்கரிதாயும், சாந்தமுமாய் - உபசாந்தமாயும், சொல்லுமெல்லாமாய்-சொல்லப்பட்ட சகலமுமாயும், நினைவுதோன்று - நினைவு தோற்றுததாயு மிருக்கின்ற சற்சிற்சுக முண்டாம் - சச்சிதாநந்த ஸ்வரூபமே யுண்டாயிருக்கும்—எ - று.

எ - து. சகமானது ஞானிகளறிவுக்கு அற்பமானதாய்ப் பசுவின் குளப்படியாகவாம் அஞ்ஞானிகளுக்குத் துன்பமாய்க் கரைகாணுத ஆழமாம். அளவில்லாததாயும், விடயங்களினால் எண்ணுதற்கரிதாயும், உபசாந்தமாயும், சொல்லப்பட்ட சகலமுமாயு, நினைவுதோற்றுததாயுமிருக்கின்ற சச்சிதாநந்த ஸ்வரூபமே யுண்டாயிருக்கும்-எ-ம்.

(இ-ம்.) இச்சகம் விவேகிக்க கண்டமாயும், விவேகிகளுக் கற்பமாயுஞ் சச்சிதாநந்தமாயும் விளங்கு மென்பதாம்- (10)

## இச்சித்துண்டாகுங் கிரமமியாதெனில்.

சான்றவதினின் றோறிவு தானேவிகார வுருவாகித்
தோன்றிநுண்மை மத்தியமே தூலமென்றுங் கற்பிக்க
மூன்றுவகையாய்ச் சாத்விதராசத்தாமதமுக் குணமாகு
மூன்றுவகையாம் பகுதிபல வுயிர்க்கும்பிறவி தருமிதுவே.

இ - ள். சான்றவதினின்று - சாட்சியான அச்சச்சிதா நந்தத்திலிருந்து ஓரறிவு - ஓர்போதமானது. தானே விகாரவுருவாகி - தானேவிகார வடிவமாய், தோன்றி - உண்டாகி, நுண்மை - சூட்சுமமென்றும், மத்தியம் - நடுவென்றும், தூலமென்று - தூலமென்றும், மூன்று வகையாய்க் கற்பிக்க-மூன்று விதமாயுண்டாக்க, சாத்விதம் - சத்துவமென்றும், ராசதம் - இராசதமென்றும், தாமசம் - தாமசமென்றும், முக்குணமாகும் - மூன்றுகுணமாகும், பலவுயிர்க்கும் - அநேக ஜீவர்களுக்கும், ஊன்ற - சார்ந்த, மூன்றுவகையாம்பகுதி - இம்மூன்று விதமான அவித்தையான, இதுவே - இதுதானே, பிறவிதரும் - சநநத்தைக் கொடுக்கும்—எ - று.

எ - து. சாட்சியான வச்சச்சிதாநந்தத்திலிருந்து ஓர்போதமானது தானே விகாரவடிவமாய் உண்டாகி சூட்சுமமென்றும், நடுவென்றும், தூலமென்றும், மூன்றுவிதமாயுண்டாக்க சத்துவமென்றும், இராசதமென்றும், தாமசமென்றும் மூன்று குணமாகும் அநேகசீவர்களுக்கும் சார்ந்த இம்மூன்றுவிதமான அவித்தையான இதுதானே சநநத்தைக்கொடுக்கும்—எ - ம். (11)

இதனின்முடிவே பரமபத மியன்முக்குணமு மும்மூன்று
விதமதாயொன் பதுகூறும் விரிந்தவிஞ்சைக் குணவடிவே
சிதறுமிதிற்சத் துவக்கூறு திரண்டவிருடி முனிசித்த
ரதிகநாகர் விஞ்சையர்க ளண்டர்முதலா நல்லுயிர்கள்.

இ - ள். இதனின்முடிவே - இந்த அவித்தையினுடைமே, பரமபதம்-பிரமபதமாகும், விரிந்தவிஞ்சை - மிகுந்த அவித்தையினது, குணவடிவே - குணரூபமேயாம், இயன்முக்குணமும் - இயல்பாகிய மூன்றுகுணமும், மும்மூன்று விதமாய் - (ஒவ்வொன்று) மும்மூன்று விதமாக, ஒன்பது கூறும் - ஒன்பதுபங்காகும், சிதறுமிதில் - சிதறுகின்ற வித்தவித்தையில், சத்துவக்கூறு - சாத்துவிதத்தினபங்கு, திரண்டவிருடி - கூட்டமாயிருக்கின்ற விருடிகளும், முனிசித்தர் - முனிகளுஞ் சித்தர்களும், அதிக நாகர் - மிகுந்த நாகர்களும், விஞ்சையர்கள் - வித்தியாதரர்களும், அண்டர் முதலா நல்லுயிர்கள் - தேவர்கள் முதலிய நன்மையான ஜீவர்களாம்—எ - று.

எ - து. இந்த அவித்தையினுடைமே பிரமபதமாகும். மிகுந்த அவித்தையினது குணரூபமேயாம். இயல்பாகிய மூன்றுகுணமும் ஒவ்வொன்று மும்மூன்றுவிதமாக ஒன்பதுபங்காகும். சிதறுகின்ற இந்தவவித்தையில் சாத்துவிதத்தின் பங்கு கூட்டமாயிருக்கின்ற விருடிகளும், முனிகளுஞ் சித்தர்களும், மிகுந்த நாகர்களும், வித்தியாதரர்களும், தேவர்முதலிய நன்மையான சீவர்களாம்—எ - ம். (12)

ஓதுமிச்சாத் திகக்கூற்றி னுறுதாமதம்விஞ் சையர்நாகர்
பேதமுறுரா சதமாகும் பிறந்தமுனிவர் சித்தரெலாந்
தீதிலாத சத்துவமாந் தேவர்சிவனை முதலோரா
மீதவிஞ்சைப் பயில்கூற்றி னிடையேவிஞ்சைத் திறமடைந்த.

இ - ள். ஓதும்-முன் சொல்லப்பட்ட, இச்சாந்திகக்கூற்றின்-இந்தச்சாத்தீகத்தின்பங்கில், உறுதாமதம்-பொருந்துகின்ற தாமதத்தின் பங்கு, விஞ்சையர் நாகர் - வித்தியாதரரு நாகர்களுமாம், பேதமுறு-பேதம்பொருந்திய, ராசதம் - இராசதத்தின் பங்கு, பிறந்தமுனிவர் சித்தரெலாம் - உண்டான முனிவர்களுஞ் சித்தர்களனைவருமாம், தீதிலாசத்துவம்-குற்றமற்ற சாத்துவிதத்தின்பங்கு, தேவர் சிவனைமுதலோராம் - தேவரான சிவன் முதலானவர்களும், ஈதவிஞ்சை - இது வவித்தையின், பயில்கூற்றினிடை - சொல்லப்பட்ட பங்கினிடத்தில், விஞ்சைத்திறமடைந்த - வித்தையின்றன்மை யடைந்தனவாம்—எ - று.

எ - து. முன்சொல்லப்பட்ட இந்தச் சாத்தீகத்தின் பங்கில், பொருந்துகின்ற தாமதத்தின் பங்கு வித்தியாதரரு நாகர்களுமாம் பேதம்பொருந்திய இராசதத்தின் பங்கு உண்டான முனிவர்களுஞ் சித்தர்களனைவருமாம். குற்றமற்ற சாத்துவிதத்தின் பங்கு தேவரான சிவன் முதலானவர்களும், இதுவவித்தையின் சொல்லப்பட்ட பங்கினிடத்தில் வித்தையின் றன்மை யடைந்தனவாம்—எ - ம். (13)

ஆசில்சுத்த சத்துவமா மவிஞ்சைக்கூறு விஞ்சையெனப்
பேசுமதுவாமிராசதமும் பிரிதாமதமு மும்மூன்றாய்
வீசுசிருட்டி யுடைத்தென்பர் மிகுதாமதஞ்சேர் புந்தியர்க்கு
நீசமரந்தா பாமாதி நிறையஞ்ஞான வுடல்பெறுமே.

இ - ள். ஆசில் சுத்தசத்துவமாம் - குற்றமற்ற சுத்த சாத்துவித குணமான, அவிஞ்சைக்கூறு - அவித்தையின் பங்கு, விஞ்சையெனப் பேசுவதுமாம் - வித்தை யென்று சொல்லப்பட்டதுவாம், இராசதமும் - இராசதகுணமும், பிரிதாமதமும் - பிரிந்த தாமதகுணமும், மும்மூன்றாய் - மூன்று மூன்றாக, வீசுசிருட்டி - வீசாநின்ற சிருஷ்டியை, உடைத்தென்பர் - உடையதென்று சொல்லுவார்கள், மிகுதாமதஞ்சேர்-மிகுந்த தாமதத்தையுடைய, புந்தியர்க்கு - புத்தியை யுடையவர்களுக்கு, நீசமரந்தாபாமாதி - இழிவான விருக்ஷமுதலிய, நிறையஞ்ஞான உடல்பெறும் - நிறைந்த வஞ்ஞான சரீரத்தைப் பெறும்—எ - று.

எ - து. குற்றமற்ற சுத்தசாத்துவிதகுணமான அவித்தையின்பங்கு வித்தையென்று சொல்லப்பட்டதுவாம். இராசதகுணமும், பிரிந்த தாமதகுணமும் மூன்றுமூன்றாக வீசாநின்ற சிருஷ்டியையுடைய தென்று சொல்லுவார்கள். மிகுந்த தாமதத்தை

யுடைய புத்தியையுடையவர்களுக்கு இழிவான விருக்ஷமுதலிய நிறைந்த வஞ்ஞான சரீரத்தைப்பெறும்—எ – ம்.

(இ-சா-க-ம்.) சைதன்யத்தி லோர் ஸ்புரணமுண்டாக வப்போ தறிவறியாமை கட்டியதின் மூன்றாகுண முண்டா யதின்வித்தையின் சுத்த சத்துவத்தின் சிவன் முதலிய ஈஸ்வரர்களும் அவித்தையின் சத்துவத்திலிருடிமுதலிய சீவர்களு மதனிராசசத்தின் முனிவர் முதலியோரு மதன்றமத்தினாகர் முதலியோரு மிராசசதாமசமாறித் தத்துவங்களுந் தாமதத்திற் றுமதந் தாபரவுடல்களுமா யுண்டா மென்பதாம். (14)

## அறிவுதருவா யஞ்ஞானமிருந்த தெங்ஙனமெனி னதற்குத்தரங்கூறல்.

எனவோதலுந்தா பரமாதி யாக்கைமேவி யஞ்ஞானங்
கனமாயிருப்ப தெங்ஙனெனக் கரியோன்கேட்ப முனிசொல்வான்
மனனமின்மை தானற்று மனனமற்றுண் டில்லெயென
வினவுதடத்த மெனுமுருவை மேவிநிற்கு மிவ்வறிவே.

இ - ள். எனவோதலும்-(இப்படி) யென்று வசிட்டமுனி சொல்லவும், தாபராதி - விருக்ஷமுதலாகிய, ஆக்கைமேவி - சரீரத்தைப் பொருந்தி, அஞ்ஞானங் கனமாயிருப்பது - (அறிவு) அஞ்ஞான மிருந்திருப்பது, எங்ஙனென - எப்படியென்று, கரியோன் கேட்ப - மேக நிறத்தையுடைய ஸ்ரீராமர் கேட்க, முனிசொல்வார் - வசிட்டமுனி சொல்லுவார், மனன மின்மைதானற்று - மனன மில்லாதது இறந்து, மனனமற்று - மனனமுமிறந்து, உண்டில்லையென - சத்தசத்தென்ன, வினவு - சொல்லாநின்ற, தடத்த மெனுமுருவை - மத்தியகத மென்கின்ற (மூர்க்க) வடிவத்தை, இவ்வறிவு - இந்தவறிவு, மேவிநிற்கும் - பொருந்தியிருக்கும்—எ-து.

எ - து. இப்படியென்று வசிட்டமுனிசொல்லவும், விருக்ஷமுதலாகிய சரீரத்தைப்பொருந்தி அறிவு அஞ்ஞான மிருந்திருப்பது எப்படியென்று மேகநிறத்தையுடைய ஸ்ரீராமர்கேட்க, வசிட்டமுனி சொல்லுவார். மனனமில்லாதது மிறந்து மனனமுமிறந்து சத்தசத்தென்னச் சொல்லாநின்ற மத்தியகதமென்கின்ற மூர்க்கவடிவத்தை இந்தவறிவு பொருந்தியிருக்கும்—எ - ம். (15)

சொன்னவறிவு தாவரத்திற் றுயில்செய்புரியட் டகமுளதா
யின்னலின்றி யுமைகுரு டென்னலாகிச் சடம்போலாய்
முன்னுசத்தா மாத்திரத்தி னிற்குமென்ற முனிவரனைப்
பின்னுமிராம னன்பினொடும் பேணியிதுதான் வினவிடுவான்.

இ - ள். சொன்னவறிவு - முன்சொல்லிய ஞானமானது, தாவரத்தில் - விருக்ஷத்தில், துயில்செய் - நித்திரைசெய்கின்ற, புரியட்டகமுளதாக - புரியட்டக சரீரமுள்ளதாக, இன்னலின்றி - துன்பமில்லாமல், ஊமை குருடென்னலாகி - ஊமையன் குருடனென்று சொல்லுவதாய், சடம்போலாய் - சடத்தைப்போலாகி, முன்னுசத்தாமாத்திரத்தில் - நினைக்கின்ற சத்தாமாத்திரத்தினால், நிற்குமென்ற முனிவரனை - இருக்குமென்று சொல்லிய வசிஷ்டமுனியை, பின்னுமிராமன் - திரும்பவும் இராமரானவர், அன்பினொடும் பேணி - அன்புடன் விரும்பி, இதுதான் வினவிடுவான் - இதைக்கேட்பார் — எ - று.

எ - து. முன்சொல்லிய ஞானமானது விருக்ஷத்தில் நித்திரை செய்கின்ற புரியட்டக சரீரமுள்ளதாகத் துன்பமில்லாமல் ஊமையன் குருடனென்று சொல்லுவதாய்ச் சடத்தைப்போலாகி. நினைக்கின்ற சத்தாமாத்திரத்தினால் இருக்குமென்று சொல்லிய வசிஷ்டமுனியைத் திரும்பவு மிராமரானவர் அன்புடன் விரும்பி இதைக்கேட்பார் — எ - ம்.

(இ-உ-க-ம்.) அறிவு தன்னை யறியாமையால் அஞ்ஞானமயமா யதற்கடுத்த விருக்ஷவடிவம் பெறுமச் சத்திலிருந்த தென்பதாம். (16)

## சத்திலறிவடங்கித்தாபரமாயிருத்தலின் அதுவே சீவன் முத்தனாமெனில் அதற்குத்தரங்கூறல்.



சத்தையொருமை யாய்ப்போதந் தாபரங்க டனினிற்கி
லித்தைமுத்தி யெனநினைதே னென்னமுனிவ னிதற்கிசைப்பான்
புத்தியாலே யிதுநாடிப் பொய்யில் பொருளி காட்சியினா
லொத்தசத்தா சாமானியத்தை யுணர்தலுறுத லுயர்முத்தி.

இ - ள். சத்தை யொருமையாய் - சத்தையொற்றுமையாக, போதம் - ஞானமானது, தாபரங்கடனினிற்கில் - தாபரங்களினின்றால், இத்தை முத்தியென - இதை மோக்ஷமென்று, நினைதேனென்ன - நினைக்கின்றேனென்று இராமன்சொல்ல, முனிவன் - வசிட்டமுனிவரானவர், இதற்கிசைப்பான் - இதற்குச் சொல்லுவார், புத்தியால் - அறிவினால், இது நாடி - இந்தச் சகத்தை விசாரணைசெய்து, பொய்யில் பொருளின் - நித்திய வஸ்துவினது, காட்சியினால் - தரிசனத்தினால், ஒத்தசத்தா சாமானியத்தை - பொருந்தின சத்தாசாமானிய பதத்தை, உணர்தலுறுதல் - அறிதலையடைதல், உயர்முத்தி - மேலான மோக்ஷமாம் — எ - று.

எ - து. சத்தையொற்றுமையாக ஞானமானது தாபரங்களினின்றால் இதை மோக்ஷமென்று நினைக்கின்றேனென்று இராமன்

கொடுக்கும் - வளராநின்ற அநேக சாதங்களைத்தரும், செயிர்செய் - குற்றஞ்செய்கின்ற, மனமுன்னிறந்து - சிந்தனையான முள்ளேயிறந்து, செறிவாதனைகள் - மிகுந்தவாசனைகள், துயில்சுழுத்தி - நித்திரையான சுழுத்தியவத்தையில், குயிலுஞ் சடமாந்திறத்தால் - சொல்லாநின்ற சடமா அடங்குங்காரணத்தினால், கொடிய பிறவிதுயரளிக்கும் - கொடிய சநநதுன்பத்தைக்கொடுக்கும்—எ - று.

எ — து. வித்துக்குள்ளடங்கிய அங்குரத்தைப்போலச் சொல்லப்பட்ட வாசனைகளானவை அகத்தினித்திரையைப் பொருந்தும் மந்தமாம். அதுவே சுழுத்தி யவத்தையுமாம். வளராநின்ற அநேக சநநங்களைத் தரும் குற்றஞ்செய்கின்ற சிந்தையான துள்ளேயிறந்துமிகுந்த வாசனைகள் நித்திரையான சுழுத்தியவத்தையில் சொல்லாநின்ற சடமாயடங்குங் காரணத்தினால் கொடிய சநநதுன்பத்தைக் கொடுக்கும்—எ — ம். (16)

தாவரங்க ளிவையெல்லாஞ் சடமாந்திறமாஞ் சுழுத்தியினை
மேவலுற்று மேன்மேலும் பிறத்தற்குரித்தாம் விதைகளிலே
பூவுமண்ணி னுட்கடமும் பொருந்துமதுபோ லங்கவற்றி
லோவதில்லா வாதனைக ளுறுதாவரங்க ளிடைநிற்கும்.

இ - ள். தாவரங்களிவையெல்லாம் - விருக்ஷங்கண் முதலிய விவைகளியாவும், சடமாந்திறமாம் - சடத்தன்மையுள்ளதாம், சுழுத்தியினை - சுழுத்தியை, மேவலுற்றும் - அடைந்தும், மேன்மேலும் - மேலுமேலும், பிறத்தற்குரித்தாம் - சனித்தற் குரியதாகும், விதைகளிலே பூவும் - வித்துகளிற் புட்பமும், மண்ணினுட் கடமும் - மண்ணுக்குள்கடமும், பொருந்துமதுபோல் - பொருந்துவதைப்போல, அங்கவற்றில் - அவ்விடத்தவைகளில், ஓவதில்லாவாதனைகள் - ஒழிவில்லாத வாசனைகள், உறுதாவரங்களிடை நிற்கும் - பொருந்திய விருக்ஷங்களிடத்தி லிருக்கும்—எ - று.

எ - து. விருக்ஷங்கள் முதலிய இவைகளியாவும் சடத்தன்மையுள்ளதாம் சுழுத்தியையடைந்தும் மேலுமேலும் செனித்தற்குரியதாகும். வித்துகளிற் புட்பமும், மண்ணுக்குட் கடமும் பொருந்துவதைப்போல அவ்விடத்தவைகளில் ஒழிவில்லாத வாசனைகள் பொருந்திய விருக்ஷங்களிடத்திலிருக்கும் எ - ம். (17)

அகல்வாதனையின் வித்தான வந்தசுழுத்தி வீடளியாப்
புகல்வித்தல்லா வாதனையே துரியம்பொன்று வீடளிக்கு
மிகல்வாதனைதி கடனேய்நஞ் சிறைஞ்சார்கோப நோயமிவை
மிகவேண்டாஞ்சற் றுனுறு மிக்கவருத்தஞ் செய்திடுமே.

இ - ள். அகல்வாதனையின் வித்தான - விசாலம் பொருந்திய வாசனையின் விதையாகிய, அந்தச்சுழுத்தி - அச்சுழுத்தியானது, வீடளியா -

மோக்ஷத்தைக் கொடாது, புகல்வித்தல்லா - சொல்லாநின்ற விதையல்லாத, வாதனேயேதுரியம் - சுத்த வாசனேயே துரியமாகும்,பொன்றுவீடளிக்கும்- கெடாத மோக்ஷத்தைக் கொடுக்கும், இகல்வாதனே - பகையான அசுத்தவா சனேயும், தீ - தீயும், கடன் - கடனும், நோய் - வியாதியும், நஞ்சு - விடமும், இறைஞ்சார் - சத்துருவும், கோபம் - கோபமும், நேயம் - அன்புமாகிய, இவை மிகவேண்டாம் - இவைகணிரம்பவும் வேண்டியதில்லை, சற்றுனு லும் - கொஞ்சமானுலும், மிக்க வருத்தஞ்செய்திடும் - மிகுந்த வருத்தத்தைக்கொடுக்கும்—எ - று.

எ - து. விலாசம்பொருந்திய வாசனேயின் விதையாகிய அச்சுழுத்தியானது மோக்ஷத்தைக் கொடாது. சொல்லாநின்ற விதை சுத்த வாசனேயே துரியமாகும்; கெடாத மோக்ஷத்தைக்கொடுக்கும் பகையானவசுத்த வாசனேயும், தீயும்கடனும், வியாதியும், விடமும், சத்துருவும், கோபமும், அன்புமாகிய இவைகணிரம்பவும் வேண்டியதில்லை. கொஞ்சமானுலும் மிகுந்த வருத்தத்தைக்கொடுக்கும்—எ - ம்.

(இ-க-க-ம்.) அறிவானது முன்புள்ள விடயவாசனே யோடுஞ்சுழுத்தியிலடங்கிநின்று வெளிப்படிற் பவமாதலா லச்சுழுத்தியி லடங்கியிருக்கும் அசுத்தவாசனேயை நீக்கித் துரியமாக விளக்கிடின் முத்தியேயாமன்றி இல்லையாகா வென்பதாம். (21)

## சுயஞ்சித்தாய் விளங்கிய அறிவைத் தரிசிக்க வேண்டுமெனல்,

தடைவாதனேயின் விதைசுட்டுச் சத்தாசாமா னியரூப
முடையோராஞேர்க் குடலிருந்து மொழிந்தும்பின்னேத் துயராணுகா
வடைசிற்சத்தி வாதனேவித் துருவாந்துயிலே யதற்கியல்பாங்
கடையிலறிவைக் காணுமைய விஞ்சையென்பா கலேவல்லோர்.

இ - ள். தடைவாதனேயின் - அசுத்தவாசனேயின், விதைசுட்டு - வித்தாகிய அஞ்ஞானத்தையெரித்து, சத்தாசாமானியரூபம் - சத்தாசாமானிய வடிவத்தை, உடையோராஞேர்க்கு-உடைத்தானவர்களுக்கு, உடலிருந்தும்- சரீரமிருந்தும், ஒழிந்தும் - நீங்கியும், பின்னே துயராணுகா - பின்பு துன்ப நெருங்காது, அடைசிற்சத்தி - அடையாநின்ற சிற்சத்தியானது, வாதனே - வாசனுரூபமும், வித்துருவாம் - (அதன்) வித்தாகிய (அஞ்ஞான) வுருவமுமாம், துயிலே - நித்திரையே, அதற்கியல்பாம் - அச்சிற்சத்திக்கியல்பாகும், கடையில் - முடிவில்லாத, அறிவைக் காணுமை - ஞானத்தைத் தரிசியாததே கலேவல்லோர் - கலேஞானத்தில் வல்லமையையுடைய சத்துக்கள், அவிஞ்சை யென்பர் - அவித்தையென்று சொல்லுவார்கள்—எ - று.

எ - து. அசுத்தவாசனையின் வித்தாகிய அஞ்ஞானத்தைஒழித்து சத்தாசாமானிய வடிவத்தை உடைத்தானவர்களுக்குச் சரீரமிருக்கும், நீங்கியும் பின்பு துன்ப நெருங்காது. அடையாநின்ற சிற்சத்தியானது வாசனாரூபமும், அதன்வித்தாகிய அஞ்ஞானவுருவமுமாம். நித்திரையே அச்சிற்சத்திக்கியல்பாகும். முடிவில்லாத ஞானத்தைத் தரிசியாததே கலை ஞானத்தில் வல்லமையையுடைய சத்துக்கள் அவித்தையென்று சொல்லுவார்கள்—எ - ம். (22)

## அவித்தையைக் கெடுக்குமுபாய முரைத்தல்.

அவிஞ்சைதன்னின் முதல்கூற்று லயற்கூற்றிரண்டு மோருணர்வாற்
றவிர்ந்துபோமட்டுஞ்சுட்டுச் சலனமின்றியொன்றுவாய்
நிவந்தபிரம மிதுவல்ல வென்னுமறுதி நீடவிஞ்சை
யுவந்தபிரம மிதுவென்னு மறுதியவிஞ்சை யொழிந்ததுவே.

இ - ள். அவிஞ்சைதன்னின் - அவித்தையினது, முதற்கூற்றல் - முதலிலுள்ள சத்துவப்பங்கினால், அயற்கூற்றிரண்டும் - அடுத்த விராசச தாமசமென்னுமிரண்டுபங்கையும், ஓருணர்வால் - ஒப்பற்ற ஞானத்தினால், தவிர்ந்துபோமட்டுஞ் சுட்டு - ஒழிந்துபோயளவு மெரித்து, சலனமின்றி யொன்றுவாய் - சஞ்சலமில்லாமல் ஏகமாவாய், நிவந்தபிரமம் - உயர்வுள்ள பிரமமானது, இதுவல்லவென்னு மறுதி - இச்சகமல்ல வென்கின்ற நிச்சயமே, நீடவிஞ்சை - நீண்ட அவித்தையாம், உவந்த பிரமமிது வென்னு மறுதி - மகிழ்ந்தபிரமமே யிச்சகத்தென்னு நிச்சயமே, அவிஞ்சையொழிந்ததுவே - அவித்தையொழிந்த வீடாம்—எ - று.

எ - து. அவித்தையினது முதலிலுள்ள சத்துவப்பங்கினால் அடுத்த விராசச தாமசமென்னு மிரண்டுபங்கையும் ஒப்பற்ற ஞானத்தினால் ஒழிந்துபோமளவு மெரிந்து சஞ்சலமில்லாமல் ஏகமாவாய். உயர்வுள்ள பிரமமானது இச்சகமல்லவென்கின்ற நிச்சயமே நீண்ட அவித்தையாம் மகிழ்ந்த பிரமமே யிச்சகத்தென்னு நிச்சயமே அவித்தை யொழிந்த வீடாம்—எ - ம்.

(இ-உ-க-ம.) வாசனையைக் கெடுத்துச் சர்வம் பிரமமயமென்னும் அனுபவத்தினால் அஞ்ஞானங் கெடுமென்பதாம். (23)

## விருக்ஷத்தின் சுழுத்தியனுபவத்தை நீக்கிச் சிவன் முதலியோர் ஸ்வானுபவத்தைத் தரிசிப்பித்து அதன்மயமாக்கத் தொடங்கல்.

நக்கண்முதலாந் தேவர்க்கு நாரதாதி யிருடிகட்கு
மிக்கநிமல விதயத்தின் மேவுமறுதி யணக்கூறுகக்

தக்ககுமாரா வெனுமுனியைச் சங்காராதி யென்றவிவர்
துக்கமேவா நிச்சயமென் சொல்வாயென்ன முனிசொல்வான்.

இ - ள். நக்கன் முதலாந்தேவர்க்கும் - சிவன் முதலாகிய தேவர்களுக்கும், நாரதாதியிருடிகட்கும் - நாரதர்முதலிய இருடிகளுக்கும், மிக்க நிமலவிதயத்தில் - மேலாகிய நின்மலமனதில், மேவுமறுதி - பொருந்தாநின்ற நிச்சயமானது, தக்ககுமாரா - தகுந்த (பெருமையையுடைய) குழந்தாய், உனக்குறுக - உனக்குப் பொருந்தக்கடவது, எனுமுனியை - என்றருளிய வசிட்டமுனியை, சங்காராதியென்றவிவர் - சங்காரர் முதலாகச் சொல்லப்பட்ட இவர்கள், துக்கமேவா - துன்பத்தைப் பொருந்தாத, நிச்சயமென் - நிலையென்ன, சொல்வாயென்ன - சொல்லுவாயென்று (ராமர்) கேட்க, முனிசொல்வான் - வசிட்டமுனி சொல்லுவார்—எ-று.

எ - து. சிவன்முதலாகிய தேவர்களுக்கும், நாரதர்முதலிய விருடிகளுக்கும் மேலாகிய நின்மலமனதிற் பொருந்தாநின்ற நிச்சயமானது தகுந்த பெருமையையுடைய குழந்தாய்! உனக்குப் பொருந்தக்கடவது; என்றருளிய வசிட்டமுனியை சங்காரர் முதலாகச்சொல்லப்பட்ட இவர்கள் துன்பத்தைப் பொருந்தாத நிலையென்ன சொல்லுவாயென்று ஸ்ரீராமர்கேட்க வசிட்டமுனி சொல்லுவார்—எ - ம். (24)

## அவர்கணிச்சயஞ் சர்வம்பிரமமயமா யிருத்தல்.



கிஞ்சிலாகி விரிந்துசகத் திரளாய்க்கிளைத்த விவையெல்லாம்
விஞ்சபிரம மேயறிவு பிரமமேதி னிப்பிரமம்
பஞ்சபூதம் பிரமநாம் பிரமநது பகைபிரமந்
தஞ்சநட்புக் கிளைபிரமஞ் சங்காராதி நிச்சயமே.

இ - ள். கிஞ்சிலாகி - அற்பமாகியும், விரிந்து - விஸ்தாரமாகியும், சகத்திரளாய் - உலகத்தின் கூட்டமாகி, கிளைத்தவிவையெல்லாம் - உண்டான இச்சகலமும், விஞ்சபிரமம் - களங்கமற்ற பிரமமாம், அறிவு பிரமமே - ஞானமும் பிரமமே, மேதினிபிரமம் - உலகமும் பிரமமாம், பஞ்சபூதம்பிரமம் - ஐந்துபூதமும் பிரமமாம், நாம்பிரமம் - யாமும் பிரமமாம், நமது பகைபிரமம் - நமது சத்துருபிரமமாம், தஞ்ச நட்புக்கிளைபிரமம் - பெருமை பொருந்திய சினேகிதருஞ் சுற்றத்தாரும் பிரமமா (மென்பது), சங்காராதி நிச்சயம் - சங்கரர் முதலானவர்கள் சித்தாந்தம்—எ - று.

எ — து. அற்பமாகியும், விஸ்தாரமாகியும், உலகத்தின் கூட்டமாகிய உண்டான விச்சகலமும் களங்கமற்ற பிரமமாம். ஞானமும் பிரமமே; உலகமும் பிரமமாம், ஐந்துபூதமும் பிரமமாம், யாமும் பிரம

மாம். நமதுசத்துருபிரமமாம். பெருமைபொருந்திய சினேகிதருஞ் சுற்றத்தாரும் பிரமமாமென்பது சங்கரர் முதலானவர்கள் சித்தாந்தம்—எ - ம். (25)

## மற்றுள்ள அறிஞர்களுக்குஞ் சகத்து பிரமாநந்த மாய் விளங்குமெனல்.

---

அறிஞர்க்குலகா நந்தமய மறியாதவருக் கிடர்மயமாஞ்
செறிந்தவிருளா மந்தகர்க்குச் செங்கணுள்ளோர்க் கொளியாகும்
பிறிவில்பிரம மெனத்துமென நாடிற்பிரம மவனேயா
நறியவமுதுண் டவனமுத மயத்தைநண்ணு திரானன்றே.

இ - ள் உலகு-சகமானது, அந்தகர்க்கு-குருடர்க்கு, செறிந்த விருளாம்-மிகுந்த இருளாகவும், செங்கணுள்ளோர்க்கு-செம்மையாகிய கண்ணுள்ளவர்களுக்கு, ஒளியாகும்-பிரகாசமாகவும் (இருப்பதுபோல) அறிஞர்க்கு-ஞானிகளுக்கு, ஆநந்தமயம்-ஆநந்த ஸ்வரூபமாகவும், அறியாதவருக்கு - அஞ்ஞானிகளுக்கு, இடர்மயமாம்-துன்பரூபமாகவு மிருக்கும், அனைத்தும்-சகலமும், பிறிவில் பிரமமெனநாடில்-பிறிவிலலாத பிரமமென்று சிந்திக்கில், அவனேபிரமமாம்-அவனே பிரமஸ்வரூபமாவன், நறியவமுதுண்டவன் - நல்ல அமுதத்தை புசித்தவனை, அமுதமயத்தை அமுதஸ்வரூபத்தை, நண்ணுதிரான்-அடையாதிரான்—எ - று.

எ - து சகமானது குருடர்க்கு மிகுந்த விருளாகவும், செம்மையாகிய கண்ணுள்ளவர்களுக்கு பிரகாசமாகவு மிருப்பதுபோல ஞானிகளுக்கு ஆநந்தஸ்வரூபமாகவும், அஞ்ஞானிகளுக்குத் துன்பரூபமாகவு மிருக்கும் சகலமும பிறிவில்லாத பிரமமென்று சிந்திக்கில் அவனே பிரமஸ்வரூபமாவன். நல்ல அமுதத்தைப் புசித்தவன் அமுதஸ்வரூபத்தை அடையாதிரான்—எ - ம். (26)

## யாவருக்குஞ் சுயஞ்சித்தே பிரமமென்ப தனுபவ மாமெனல்.

---

எறிபேரொளிமாத் திரமமல மெவர்க்குமுணர்வெங் கணுமுளது
பிறியாவுபசாந் தச்சித்துப் பிரமமென்பதனு பவமா
நெறிபோமறியா வொருவனெனுஞ் சன்றிநோக்கி லெத்தோற்றஞ்
செறிவாமஃதெங் கணுமுளதாஞ் சித்தாம்பிரம மாகின்றேம்.

இ - ள். எறிபேரொளிமாத்திரம் - வீசாநின்ற சுயம்பிரகாச மட்டுமே, அமலம் - நின்மலமாம், எவர்க்கும் - யாவருக்கும், உணர்வு - அறிவானது, எங்கணுமுளது - எவ்விடத்திலு முண்டாயிருக்கின்றது, பிறியா வுபசாந்

உற்றபொருட்கு - அடைந்த வஸ்துவுக்கு, உண்மையைமேவி - உண்மையைப்பொருந்தி—எ-று.

எ - து. இந்த நினைவே ஒரு விடயத்திலடைகின்ற பயனின் திருஷ்டாந்தமாம். அக்காரியமானது சித்தியினிமித்தமாம். ஆகையினால் ஒன்றானவஸ்துவில் திரம்பொருந்திய சமாதியினால் சந்நியாசியின் ஜீவனானது உருத்திரனாகி உத்திரரூபத்தினால் பொருந்துகின்ற சங்கற்பத்தினாலடைந்த வஸ்துவுக்கு உண்மையைப் பொருந்தி-எ-ம்.

## சங்கற்பத்தை அதற்காதாரமான சிவஞானமாகக் கரைத்தலி அந்நூற்றுவருஞ் சீவன்முத்தராயவரவரிடத்தில் வசித்தார்களெனல்

தெளிசந்யாசி சங்கற்பத் தவராஞ்சீவ டன்முதலோர்
களிகொடத்தம் வேற்றுலகைக் கண்டாரீச னுருவத்தால்
விளிவில்சங்கற் பத்துண்மை மேவினார்தஞ் சங்கற்பத்
தெளிதுசேரு நகரடைந்தா ரீசன்விஞ்ஞா னத்தாலே.

இ - ள். தெளிசந்யாசி-தெளிந்த சந்நியாசியின், சங்கற்பத்தவராம்-சங்கற்பத்திலுண்டானவர்களாகிய, சீவடன் முதலோர்-ஜீவடனாதியானவர்கள், களிகொடத்தம் - களிப்புடையதங்கடங்களின், வேற்றுலகை-வேறான சகங்களை, ஈசனுருவத்தால் - உருத்திரரூபத்தினால், கண்டார் - பார்த்தார்கள், விளிவில்சங்கற்பத்து - சத்திய சங்கற்பத்தினால், உண்மைமேவினார் - தத்துவத்தையடைந்தார்கள், ஈசன்விஞ்ஞானத்தால் - உருத்திரனது ஞானத்தினால், தன்சங்கற்பத்து - தனது சங்கற்பத்தினால், எளிதுசேரும் - எளிதாகச் சேராநின்ற, நகரடைந்தார் - பட்டணத்திற் சேர்ந்தார்கள்—எ-று.

எ - து. தெளிந்த சந்நியாசியின் சங்கற்பத்திலுண்டானவர்களாகிய ஜீவடனாதியானவர்கள் களிப்புடைய தங்கடங்களின்வேறான சகங்களை உத்திரரூபத்தினால் பார்த்தார்கள். சத்தியசங்கற்பத்தினால் தத்துவத்தையடைந்தார்கள். உருத்திரனது ஞானத்தினால் தனது சங்கற்பத்தினால் எளிதாகச் சேராநின்ற பட்டணத்திற் சேர்ந்தார்கள்—எ-ம்.

(இ-எ-க-ம்.) சைதன்யவியாபகமாயிருந்து சங்கற்பிக்கில் அசத்தியமென்றும் அஃதையறிந் தற்சங்கற்பமாயிருந்து சங்கற்பிக்கில் அஃதசத்தியமாமென்றுங் கூறியதாம். (30)

சதவுருத்திரர் கதை முற்றிற்று.

ஆக கதை ௩௪-க்கு கவிதை—௧௬௪௫.

# வேதாளகதை.



## அவதாரிகை.

தன்னிடத்தில் சொற்பன கற்பிதமாகத் தோற்றின சகந பாரம்பரைகள் எதார்த்த திருஷ்டியினாற் பிரமசாக்ஷாத்காரமாக விளங்கினதை யறிவித்து இவ்வநுபவ நன்றாய் விளங்கும்பொருட்டு இச்சுழுத்தி மவுனமுள்ள வேதாள கதையை நிரூபிக்கிறார்

## மவுனாதீதமாக்கும்பொருட்டுச் சுழுத்திமவுனமாய்ச் சுகிப்பாயென்று ஆசீர்வதிக்க அவை யாதெனவினாவுதல்.



சுழுத்திமவுனத்தினனாகித்தொடருமனத்தி னெழுச்சியற
வழுத்துமலக்கற்பனைநீக்கி யகண்டபதத்தி லிருவெனலும்
வழுத்துகரண மவுனஞ்சொன் மவுனங்காட்ட மவுனமெனச்
செழுத்தமூன்றுந் தெளிந்திடமேற் சுழுத்திமவுனஞ் செப்பென்ன

இ - ள். சுழுத்திமவுனத்தினனாகி - சுழுத்திமவுனத்தை யுடையவனாய், தொடருமனத்தின் - தொடாநின்ற மனதினது, எழுச்சியற - உதயமறும்படி, அழுத்தும் - அமிழ்த்தாநின்ற, மலக்கற்பனைநீக்கி - களங்கமான சங்கற்பத்தைக்கெடுத்து, அகண்டபதத்தில் - அகண்டாகாரமான பிரமபதத்தில் இருவெனலும் - இருப்பாயென்று வசிட்டமுனிசொல்லவும், வழுத்து - சொல்லப்பட்ட, சொன்மவுனம் - வாக்குமவுனமும், கரணமவுனம் - கரணமவுனமும், காட்டமவுனமென - காட்டமவுனமுமென்று, செழுத்தமூன்றும் - மாட்சிமைப்பட்ட மூன்றையும், சுழுத்திமௌனம் - சுழுத்திமௌனத்தையும், தெளிந்திட - தெளியும்பொருட்டு, மேற்செப்பென்ன - இனிச்சொல்வாயென்று ஸ்ரீராமன் கேட்க—எ-று.

எ - து. சுழுத்தி மவுனத்தையுடையவனாய்த் தொடாநின்ற மனதினது உதயமறும்படி அமிழ்த்தாநின்ற களங்கமான சற்கற்பத்தைக் கெடுத்து அகண்டாகாரமான பிரமபதத்தி லிருப்பாயென்று வசிட்டமுனி சொல்லவும்: சொல்லப்பட்ட வாக்கு மவுனமும், கரண மவுனமும், காட்ட மவுனமுமென்று மாட்சிமைப்பட்ட மூன்றையும், சுழுத்தி மௌனத்தையும் தெளியும்பொருட்டு இனிச்சொல்வாயென்று ஸ்ரீராமன் கேட்க—எ-ம்.

## முனிவரிரண்டிற்காட்டத் தவமுனிவனிலக்கணங்கூறல்.

ஓவின்முனிவ ரிருவகையா மொருவன்காட்டத் தவனுகுஞ்
சீவன்முத்தன் மற்றவனுஞ் செய்யுங்கிரியை தனிலழுத்த
மேவுநினைவுற் றிந்தியத்தை மிக்கவலியால் வென்றவனைக்
காவன்மன்னர் புகழ்வீரா காட்டத்தவனு முனியென்பார்.

இ - ள். ஓவில - வருத்தமில்லாத, முனிவரிருவகையாம்-தவசிகளிரண்டு விதமாவர், ஒருவன் காட்டத்தவனுகும் - ஒருவன்காட்ட தபசியாவன், மற்றவன் - பின்னொருவன், சீவன்முத்தனும் - சீவன்முத்தனுவன், செய்யுங்கிரியைதனில் - செய்கின்ற பிராணுயாமத்தொழில்களில், அழுத்தமேவு நினைவுற்று - திடமானசிந்தையைப்பொருந்தி, இந்தியத்தை - இந்திரியங்களை மிக்கவலியால் - மிகுந்தவலியையுடைய (அடையோகத்தி)னல், வென்றவனை - செயித்தவனை, காவல் - காத்தலையுடைய, மன்னர் புகழவீரா - அரசர்கடுதிக்கப்பட்ட வீரத்தையுடைய ஸ்ரீராமர், காட்டத்தவனுமுனியென்பர்- காட்டத்தவமுனிவனென்று (சத்துக்கள்) சொல்லுவார்கள்—எ-று.

எ - து. வருத்தமில்லாத தவசிகளிரண்டுவிதமாவர்: ஒருவன் காட்டத் தபசியாவன், பின்னொருவன் சீவன்முத்தனுவன், செய்கின்ற பிராணுயாமத்தொழில்களில் திடமான சிந்தையைப்பொருந்தி இந்திரியங்களை மிகுந்த வலியையுடைய அடையோகத்தினல் செயித்தவனைக் காத்தலையுடைய அரசர்கடுதிக்கப்பட்ட வீரத்தையுடைய ஸ்ரீராமா! காட்டத் தவமுனிவனென்று சத்துக்கள் சொல்லுவார்கள்—எ—ம். (2)

## சீவன்முத்தமுனிவ னிலக்கணங்கூறல்.

சகநேருள்ள படியுணர்ந்து தன்பாற்றன்னை நினைத்துலகை
நிகராகியமுள் ளமைவுற்றே னிமலமுத்த னுமிந்த
மிகுநீள்சாந்த முனிவரன்பால் மிக்கமனத்தின் மெய்வுருவந்
தகுநீடுருவாம் பாவனையே சாற்றுமௌனச் சொற்பொருளே.

இ — ள். சகநேருள்ளபடி - உலகத்தின்றன்மையை எதார்த்தமாக, உணர்ந்து - அறிந்து, தன்பால் - தன்னிடத்தில், தன்னை நினைத்து-ஆத்மாவைச் சிந்தித்து, உலகை - உலகத்தாருக்கு, நிகராகியும் - கிரிகையிலொப்பாயிருந்தாலும், உளமமைவுற்றோன் - அகத்திலமைவுபெற்றவன் நிமலமுத்தனும் - நின்மலமான சீவன் முத்தனுகும், இந்த - இப்படிப்பட்ட, மிகுநீள் - மிகவுமுயர்வான, சாந்தமுனிவரன்பால் - சாந்தமுனிவனிடத்தில்

யிருக்கின்ற, தகுநீடுருவாம் பாவனேயே - தகுந்தவுயர்வுள்ள வடிவாகிய பாவனேயே, சாற்றும் - சொல்லப்பட்ட, மௌனச்சொற்பொருள் - மௌனவாக்கியத்துக் கருத்தம்—எ-று.

எ - து. உலகத்தின் றன்மையை எதார்த்தமாக அறிந்துத் தன்னிடத்தில் ஆத்மாவைச் சிந்தித்து உலகத்தாருக்குக் கிரிகையிலொப்பாயிருந்தாலும் அகத்திலமைவு பிறந்தவன் நின்மலமான சீவன் முத்தனுகும் இப்படிப்பட்ட மிகவுமுயர்வான சாந்தமுனிவனிடத்தில் மேலானமனத்தினது உண்மைவடிவமாயிருக்கின்ற தகுந்த உயர்வுள்ள வடிவமாகிய பாவனேயே சொல்லப்பட்ட மௌனவாக்கியத்துக் கருத்தம்—எ-ம்.

## மவுனநான்கிற்காட்டத் தவமுனிவர்க்கியல்பான மூன்றுமவுனத்தி னிலக்கணங்கூறல்.

வாக்குமவுனஞ் சொற்றடையாம் வலிந்திந்திரிய மடங்குவித்த
றாக்குகாரண மவுனமதாந் தனதுசேட்டை யெலாம்விடுதல்
வீக்குங்காட்ட மவுனமதாம் விளங்குசித்த வியாபார
நீக்கமில்லா மூவகையாய் நிகழ்த்துமவுன மிவையாகும்.

இ - ள். வாக்குமௌனம் - வாக்குமௌனமானது, சொற்றடையாம் - வசனத்தையடைக்குதலாம், வலிந்து - வலிமையாக, இந்திரியமடக்குவித்தல்-இந்திரியத்தையடக்குதலே, தாக்கு - தாக்காநின்ற, காரணமவுனமதாம் - காரணமவுனமாகும், தனதுசேட்டையெலாம்விடுதல் - தனது தொழிலனைத்தையுநீக்கலே, வீக்குங்காட்டமௌனமதாம் - மிகுந்த காட்டமவுனமாகும் விளங்குஞ்சித்தவியாபாரம் - பிரகாசிக்கு மனேவியபகாரம், நீக்கமில்லா மூவகையாய் - நீக்கமின்றி மூன்றுவிதமாக, நிகழ்த்துமௌனமிவையாகும் - சொல்லப்பட்ட மௌனங்களிவைகளேயாகும்—எ-று.

எ - து. வாக்குமௌனமானது வசனத்தை யடக்குதலாம். வலிமையாக இந்திரியத்தையடக்குதலே தாக்காநின்ற காரணமவுனமாகும். தனது தொழிலனைத்தையு நீக்கலே மிகுந்த காட்டமவுனமாகும். பிரகாசிக்குமனேவிபகாரம் நீக்கமின்றி மூன்றுவிதமாகச்சொல்லப்பட்ட மௌனங்க ளிவைகளேயாகும்—எ-ம். (ச)

## சீவன்முத்தமுனிவர்க்கியல்பான ஓர் சுழுத்தி மவுனத்தினிலக்கணங்கூறல்.

வன்பிலியற்று மிம்மூன்று மவுனங்காட்டத் தவர்க்கியல்பா
முன்பினின்றிப் பிறிவின்றி மொய்த்ததுயாற் றிருக்கின்ற

வின்பவனுபூ தியர்க்கெனினு மிலதார்க்கெனினுமிதுதானே
துன்பமொன்று மணுகாத சுழுத்திமவுன மெனச்சொல்வர்.

இ - ள். வன்பிலியற்றும் - உறுதியாகச் செய்யப்படுகின்ற, இம்மூன்று மௌனம் - இந்த மூன்றுமௌனங்களும், காட்டத்தவர்க்கியல்பாம் - காட்டத்தவமுனிவருக்குச் சுபாவமாகும், முன்பினின்றி - ஆதியந்தமில்லாமல், பிறிவின்றி - வேற்றுமையில்லாமல், மொய்த்ததுயரற்று - மிகுந்த துன்பங்க ணீங்கி, இருக்கின்ற வின்பம் - இராநின்ற ஆனந்தமானது, அனுபூதியாக் கெனினும் - ஆநந்தானுபூதியையுடையவர்களுக்காயினும், இலாதார்க்கெனி னும் - இந்த அனுபூதியில்லாதவர்களுக்காயினும், இதுதானே - இந்தப் பிர மாநந்தமே, துன்பமொன்றுமணுகாத - ஒரு துன்பமுநெருங்காத, சுழுத்தி மௌனமெனச்சொல்வர் - சுழுத்திமவுனமென்று சத்துக்கள் சொல்லுவார் கள்—எ-று.

எ — து. உறுதியாகச் செய்யப்படுகின்ற இந்த மூன்று மௌ னங்களும் காட்டத் தவமுனிவருக்குச் சுபாவமாகும் ஆதியந்தமில்லா மல் வேற்றுமையில்லாமல் மிகுந்த துன்பங்கணீங்கி இராநின்ற ஆன ந்தமானது ஆநந்தானுபூதியை யுடையவர்களுக்காயினும் இந்த அ னுபூதி யில்லாதவர்களுக்காயினும் இந்தப்பிரமாநந்தமே ஒரு துன் பமு நெருங்காத சுழுத்திமவுனமென்று சத்துக்கள் சொல்லுவார் கள்—எ-ம்.

பன்மைமோகத் திவ்வுலகைப் பற்றியுள்ள படியுணர்ந்து
தன்மைநிலையா யையமறற் றனேசுழுத்தி மௌனமதாஞ்
சின்மையனேக வறிவுருவாஞ் சிவமேயிவையா வையுமென்னுந்
தொன்மைமுடி வினிலேதானே சுழுத்திமௌன மெனச்சொல்வர்.

இ - ள். பன்மைமோகத்து - பலவிதமான மயக்கத்தையுடைய, இவ்வு லகைப்பற்றி - இச்சகத்தைப்பிடித்து, உள்ளபடியுணர்ந்து - அதற்குள்ள குணங்களையறிந்து, தன்மைநிலையாய் - குணமுள்ள நிச்சயத்தையுடையவ னாய், ஐயமறற்றனே - சந்தேக நீங்குவதே, சுழுத்திமௌனமதாம் - சுழுத் திமவுனமாகும், சின்மையன் - ஞானமயனை, ஏகவறிவுருவாஞ்சிவமே - பூர ணஞானவடிவமாகிய சிவஸ்வரூபமே, இவையாவையுமென்னும் - இச்சக மெல்லாமென்கிற, தொன்மை முடிவினிலேதானே - முன்முடிவான சித்தாந் தமே, சுழுத்திமௌனமெனச்சொல்வர் - சுழுத்திமௌனமென்று (சத்துக் கள்) சொல்லுவார்கள்—எ-று.

எ - து. பலவிதமான மயக்கத்தையுடைய இச்சகத்தைப் பிடி த்து அதற்குள்ள குணங்களை யறிந்து குணமுள்ள நிச்சயத்தையுடை யவனாய்ச் சந்தேக நீங்கு வதே சுழுத்திமவுனமாகும். ஞானமய மான பூரணஞானவடிவமாகிய சிவஸ்வரூபமே இச்சகமெல்லாமென்

கிற முன்வடிவமான சித்தாந்தமே சுழுத்தி மௌனமென்று சத்துக்கள் சொல்லுவார்கள்—எ-ம்.

(இ-சு-க-ம்.) மவுனநான்கி னிலக்கணமும் அஃதையுடைய முனிவரிருவரிலக்கணமும் விபாமாயறிவித்ததாம். (6)

## சுழுத்திமவுனஞ் சாங்கியம் யோகமென விரண்டுவிதமாமெனல்.

நின்றவிண் ணுண் டல்லவுமா நிகழுமனைத்து முளதிலதா
மென்றுசபமுஞ் சாந்தமுமா யிருத்தல்சுழுத்தி மவுனமதா
மொன்றுசுழுத்தி மவுனந்தா னுபயவிதமா மியோகியர்க்குத்
துன்றுகின்ற சாங்கியமுந் தூயதான யோகமுமே.

இ - ள். உண்டு - சத்தாகவும், அல்லவுமாம் - அசத்தமாகவும், உளதிலதாம் - சத்தசத்தாகவும், நிகழுமனைத்தும் - விளங்காநின்ற யாவும், நின்றவிண்ணென்று - நித்தியமாயிருக்கின்ற சிதாகாசமென் றெண்ணி, சமமும் - சமத்துவமும், சாந்தமாய் - சாந்தமுமாகி, இருத்தல் - இருக்கின்றது, சுழுத்திமவுனமதாம் - சுழுத்திமவுனமென்று சொல்லப்படும், ஒன்று சுழுத்திமவுனந்தான் - பொருந்தின சுழுத்திமவுனமானது, யோகியர்க்கு-யோகிகளுக்கு, துன்றுகின்றசாங்கியமும - நெருங்குஞ் சாங்கியமென்றும், தூயதானயோகமும் - பரிசுத்தமாகிய யோகமென்றும் உபயவிதமாம் - இருவகைத்து—எ-று.

எ - து. சத்தமாகவும் அசத்தமாகவும் சத்தசத்தாகவும் விளங்காநின்ற யாவும் நித்தியமாயிருக்கின்ற சிதாகாசமென்றெண்ணிச் சமத்துவமும் சாந்தமுமாகி இருக்கின்றது சுழுத்திமவுனமென்று சொல்லப்படும். பொருந்தின் சுழுத்திமவுனமானது யோகிகளுக்கு நெருங்குஞ் சாங்கியமென்றும், பரிசுத்தமாகிய யோகமென்றும் இருவகைத்து—எ-ம். (7)

## சாங்கியயோகம் யோகமாகிய விரண்டினிலக்கணங்கூறல்.

தெளிவாஞான வுணர்வாலே தினமுமேக சமாதியினு
ளளவாஞ்சங்கை யாலறிந்த வவர்சாங்கியயோ கியராகு
முளதாம்பிராணன் முதல்வாயு வுபசாந்தியினா கத்தாலே
யெளிதாமுடிவி லுயர்பதத்தை யியைந்தோ ரியோகயோகியரே.

இ - ள். தெளிவாம் - தெளிவாகிய, ஞானவுணர்வால் - கல்வியறிவினாலும், தினமும் - நாடோறும், ஏகசமாதியினுல் - பூரணநிஷ்டையினாலும், அளவாஞ்சங்கையால் - பிரமாணமான விசாரணையினாலும், அறிந்தவவர்தான் - பிரமமென்றுணர்ந்தவர்களே, சாங்கியயோகியராகும் - சாங்கியயோ

யியர்களாகும், ஊகத்தாலுளதாம் யுத்திகளினாலுண்டான, பிராணன் முதல் வாயு - பிராணாதிபவனங்கள், உபசாந்தியில் - அடங்கினவிடத்தில், எளிதாம் - எளிதாக, முடிவிலுயர்பதத்தை யடைந்தோர் - அந்தமில்லாத மேலான பதத்தையடைந்தவர்கள், இயோகயோகியர் யோகயோகியர்கள்-எ-று.

எ - து. தெளிவாகிய கல்வியறிவினாலும், நாடோறும் பூரண நிஷ்டையினாலும், பிரமாணமான விசாரணையினாலும், பிரமமென்றுணர்ந்த அவர்களே சாங்கியயோகியர்களாகும். யுத்திகளினாலுண்டான பிராணாதிபவனங்கள் அடங்கினவிடத்தி லெளிதோ அந்தமில்லாத மேலானபதத்தை யடைந்தவர்கள் யோகயோகியர்கள்—எ-ம்.

## இவ்விருவரிலக்கணமுஞ் சொல்லியவர்களபிப்பிராயமுமறிவித்தல்

பண்ணப்படாத வுபசாந்த பதமேயெவர்க்கும் பற்றாகு
மெண்ணத்தகுசாங்கியரெய்து மிடமே, யடமாகியோகியர்க்குங்
கண்ணத்தகுவா தனைவலைசூழ் கடியபிராணன் மனமிரண்டு
நண்ணப்படுசெய் தொழுறீர நசிக்கிலதுவே பரமபதம்.

இ - ள். பண்ணப்படாத - நித்தியமாகிய, உபசாந்தபதமே - உபசாந்தமானவிடமே, எவர்க்கும்பற்றாகும் - யாவருக்கும் பிடிப்பாகும், எண்ணத்தகு-நினைக்கத்தகுந்த, சாங்கியரெய்துமிடமே- சாங்கியரடைகின்ற பதமே, யோகியர்க்குமிடமாம் - யோகிகளுக்கும் ஸ்தானமாகும், கண்ணத்தகு - கருதத்தகுந்த, வாதனைவலைசூழ் - வாசனைவலையினாற் கட்டுப்பட்ட, கடியபிராணன் - வேகமுள்ள பிராணனும், மனம் - மனமுமாகிய, இரண்டும்-இவ்விரண்டும், நண்ணப்படு - சாரப்பட்ட, செய்தொழில் - இயற்றுங்கிரியைகள், தீர நசிக்கில் - முழுதுங்கெடுமாயின், அதுவேபரமபதம் - அதுவே பிரமபதமாகும்—எ-று.

எ - து. நித்தியமாகிய வுபசாந்தமானவிடமே யாவருக்கும் பிடிப்பாகும். நினைக்கத்தகுந்த சாங்கியரடைகின்ற பதமேயோகிகளுக்கும் ஸ்தானமாகும். கருதத்தகுந்த வாசனைவலையினாற் கட்டுப்பட்ட வேகமுள்ள பிராணனும் மனமுமாகிய இவ்விரண்டுஞ் சாரப்பட்ட இயற்றுங்கிரியைகள் முழுதுங்கெடுமாயின் அதுவே பிரமபதமாகும்—எ-ம்.

(இ-௧-௧-ம்.) கழுத்திமவுனத்தினியல்பை நன்றாய்ப் பகுத்துச்சொல்லியதாம். (௧)

## சுழுத்திமவுனிகள் அபிப்பிராயத்தை யடையுஞ்சாதன மூன்றுண்டெனல்.

வினவிநோக்கா மையிற்சித்த மெய்ப்போற்றோன்றும் பொய்யேயாங், கனவிற்றனது மரணந்தான் காணுநின்றுமுளதாமோ, வனகவேகப் பொருட்பழக்கத் தழுத்தம்பிராண னுள்ளடக்கன், மனனை யடக்க லிவைமுத்தி வசனப்பொருளாஞ் சுருக்கத்தில்.

இ-ள். வினவிநோக்காமையின் - விசாரித்துப் பாராமையினால், சித்தம்-மனமானது, மெய்போற்றோன்றும் - உள்ளதுபோலத்தோற்றும், (விசாரிக்கில்) பொய்யேயாம் - மித்தையேயாகும், கனவில் - சொற்பனத்தில், தனதுமரணம் - தனது மரணத்தை, தான்காணுநின்றும் - தான் கண்டிருந்தும், உளதாமோ - மெய்யாமோ அனகவேகப்பொருள் - களங்கமற்றவத்துவிதவஸ்துவில், பழக்கத்தழுத்தம் - அற்பியாசத்திடமும், பிராணனுள்ளடக்கல் - பிராணபந்தனமும், மனனையடக்கல் - மனோபந்தனமுமாகிய இவை-இவைகளே, சுருக்கத்தில் - சுருக்கமாக, முத்திவசனப்பொருளாம் - மோக்ஷசத்தார்த்தமாம்—எ-று.

எ-து. விசாரித்துப் பாராமையினால் மனமானது உள்ளது போலத்தோற்றும், விசாரிக்கில் மித்தையேயாகும். சொற்பனத்தில் தனது மரணத்தைத்தான் கண்டிருந்தும் மெய்யாமோ! களங்கமற்ற வத்துவித வஸ்துவில் அற்பியாசத்திடமும் பிராணபந்தனமும் மனோபந்தனமுமாகிய இவைகளே சுருக்கமாக மோக்ஷசத்தார்த்தமாம்—எ-ம். (10)

## சாதனமூன்றினொருமையுரைத்தல்.

உரமாமொருமைப் பொருட்பழக்க முயிரினொடுக்க முளத்தொடுக்க. தரமாமொன்று பலிக்குமெனிற் றம்மிற்றமூன்றும் பலமாம், பரமாமுயிர்நெஞ் சிலதாகிற் பயிலாதெவர்க்கும் வாவனைக, டிரமாமிவையொன் றுமலரு மணமுந்நிலமுந் தயிலமும்போல்.

இ-ள். உரமாம் - திடமாகிய, ஒருமைப்பொருட்பழக்கம் - ஒருவஸ்துவினற்பியாசமும், உயிரினொடுக்கம் - பிராணனொடுக்குதலும், உளத்தொடுக்கம் - மனமடக்குதலுமாகிய மூன்றில், தரமாமொன்றுபலிக்குமெனில் - பக்குவமாயொன்று கிடைக்குமாயின், தம்மிற்றம் - ஒன்றுக்கொன்று சம்பந்தமான, மூன்றும்பலமாம் - மூன்றும் பிரயோசனமாகும், பரமாமுயிர் - மேலானபிராணனும், நெஞ்சு - மனதும், இலதாகில் - இல்லையாயின், எவர்க்கும் பாவனைபயிலாது - யாவருக்கு நினைவுகள் சேராது, மலருமணமும் -

புட்பமும் வாதனையும், திலமுந்தயிலமும் போல் - என்னுமெண்ணெயும் போல, திரமாயிவையொன்றும், நிலையாக இவ்விரண்டுமொன்றாகும்—எ-று.

எ - து. திடமாகிய ஒரு வஸ்துவினற்பியாசமும், பிராணனொடுங்குதலும், மனமடங்குதலுமாகிய மூன்றில் பக்குவமாயொன்று கிடைக்குமாயின் ஒன்றுக்கொன்று சம்பந்தமான மூன்றும் பிரயோசனமாகும். மேலானபிராணனும் மனதும் இல்லையாயின் யாவருக்கு நினைவுகள் சேராது, புட்பமும் வாசனையும் எள்ளுமெண்ணெயும் போல நிலையாக இவ்விரண்டுமொன்றாகும்—எ-ம்.

## இம்மூன்றிலொன்று லுறுதியாகச் சாதிக்க வேண்டுமெனல்.

ஆதாராதே யம்போலா மதிலொன்றிறக்கி லயலதும்போ
மோதாநின்ற விவைமாயி லுயர்ந்தவீடு முதவிடுமான்
மீதாகியதன் பரிசயத்தால் வெளியாய்நினைவு போமளவு
மேதாகிலுமோர் தத்துவத்தி லிறுகவேண்டும் பாவனையே.

இ - ள். ஆதாராதேயம்போலாம் = (பிராணனுமனது) ஆதாரமு மாதேயமும்போலவாம், அதிலொன்றிறக்கில் - அவற்றிலொன்று கெடுமாயின், அயலதும்போம் - அடுத்த மற்றொன்றுங்கெடும், ஓதாநின்ற - சொல்லாநின்ற, இவைமாயில் - இவ்விரண்டுங்கெட்டால், உயர்ந்தவீடு முதவிடும் - மேலாகிய மோக்ஷத்தையுங்கொடுக்கும், மீதாகியதன்பரிசயத்தால் - மேலாகிய தனதற்பியாசத்தினால், வெளியாய் - பிரத்தியக்ஷமாக, நினைவுபோமளவும், எண்ணமானது கெடுமட்டும், ஏதாகிலுமோர் தத்துவத்தில் - ஏதாகிலுமோருண்மையில், பாவனை - நினைவானது, இறுகவேண்டும்-அழுந்தவேண்டும்-எ-று.

எ - து. பிராணனுமனமு மாதாரமு மாதேயமும்போலவாம். அவற்றிலொன்று கெடுமாயின் அடுத்த மற்றொன்று கெடும். சொல்லாநின்ற இவ்விரண்டுங்கெட்டால் மேலாகிய மோக்ஷத்தையுங் கொடுக்கும், மேலாகிய தனதற்பியாசத்தினால் பிரத்தியக்ஷமாக எண்ணமானது கெடுமட்டும் ஏதாகிலுமோருண்மையில் நினைவானது அழுந்தவேண்டும்—எ—ம். (11)

## இச்சாதனத்தால் பவமயக்கநீங்கி நனவிற் சுழுத்திவருமென்றுரைத்து இதற்கோர் திருஷ்டாந்தமுரைக்கத் தொடங்கல்.

நெடுநாட்பழகுஞ் சுபாவத்தானெஞ்சிலொருமை யொன்றுண்டா, முடனேமிகுமித் திரளெல்லா மொருங்கிப்போகும் பிறப்

பிறப்பி, னிடமார்கனவு போய்விழித்த விகல்வேதாளமிசைத்த வினுத், தடமார்புயனே கேட்டியெனத் தவமார்வசிட்டன் சாற்றிடுவான்.

இ-ள். நெடுநாட்பழகும் - வெகுகாலமா யற்பியாசிக்கின்ற, சுபாவத்தால் - தன்மையினுல், நெஞ்சின் - மனதினிடத்தில், ஒருமையொன் றுண்டாம் - ஏகத்துவமான தொன்றுண்டாகும், உடன் - அக்கணத்தில், மிருமித்திரமெல்லாம் - மிருந்த இக்கூட்டங்களனைத்தும், ஒருங்கிப்போகும் - கெட்டுப்போகும், பிறப்பிறப்பின் - சநநமரணத்தின், இடமார் கனவுபோய் - நீர்க்கசொற்பனநீங்கி, விழித்த - (துரியத்தில்) விழித்துக்கொண்ட, இகல் வேதாளம் - வலியுள்ள வேதாளமானது, இசைத்தவினு - கேட்ட கேள்வியை, தடமார்புயனே - விசாலம்பொருந்திய தோள்களையுடைய ஸ்ரீராமா, கேட்டியென - கேட்பாயென்று, தவமார் - தவமிருந்த, வசிட்டன் சாற்றிடுவான் - வசிட்டமுனி சொல்லுவார்—எ-று.

எ-து. வெகுகாலமா யற்பியாசிக்கின்ற தன்மையினுல் மனதினிடத்தில் ஏகத்துவமான தொன்றுண்டாகும். அக்கணத்தில் மிருந்த இக்கூட்டங்களனைத்துங் கெட்டுப்போகும். சநநமரணத்தின் நீர்க்க சொற்பனநீங்கித் துரியத்தில் விழித்துக்கொண்ட வலியுள்ள வேதாளமானது கேட்ட கேள்வியை விசாலம்பொருந்திய தோள்களையுடைய ஸ்ரீராம! கேட்பாயென்று தவமிருந்த வசிட்டமுனி சொல்லுவார்—எ-ம். (13)

## வேதாளவியல்புகூறல்.

விந்தவனத்தோர் வேதாளம் வேறோர்நாட்டில் வெம்பசியால்
வந்துபுகுந்தோர்நல்லோன்பால் வரம்பில்பலியேற்றுண்மகிழு
முந்திபசித்தீ முடிகினு முன்வந்தோர்க்கு நியமின்றி
நிந்தையின்றிக் கொலைபுரியா நெடியோர் நெறியை நீங்குவரோ.

இ-ள். விந்தவனத்து - விந்தாடவியிலிருக்கின்ற, ஓர் வேதாளம் - ஒரு வேதாளமானது, வேறோர்நாட்டில் - மற்றொருதேயத்தில், வெம்பசியால் - கொடிதாகியபசியினுல், வந்துபுகுந்து - வந்துசேர்ந்து, ஓர்நல்லோன்பால் - ஒப்பற்ற சத்துவினிடத்தில், வரம்பில்பலியேற்று - அளவற்ற வுணவைப் பெற்று, உண்மகிழும் - மனங்களிக்கும், முந்துபசித்தீ - முதன்மையாகின்ற உதராக்கினியானது, முடிகினும் - மிகுந்தாலும், முன்வந்தோர்க்கும் - எதிர்வந்தவர்களுக்கும், நியமின்றி - (வருந்தும்) காரணமில்லாமலும், நிந்தையின்றி - இகழ்வில்லாமலும், கொலைபுரியா - கொலைசெய்யாது, நெடியோர் பெரியோர்கள், நெறியை - சன்மார்க்கத்தை, நீங்குவரோ - பிரிவார்களோ—எ-று.

எ—து. விந்தாடவியிலிருக்கின்ற ஒரு வேதாளமானது மற்றொரு தேயத்தில் கொடிதாகிய பசியினால் வந்து சேர்ந்து ஒப்பற்ற சத்துவினிடத்தில் அளவற்ற உணவைப்பெற்று மனங்களிக்கும். முதன்மையாகின்ற உதராக்கினியானது மிகுந்தாலும் எதிர் வந்தவர்களுக்கும் வருந்தும் காரணமுமில்லாமலும் இகழ்வில்லாமலும் கொலை செய்யாது. பெரியோர்கள் சன்மார்க்கத்தைப் பிரிவார்களோ—எ—ம்.

## வேதாளம் வினாக்கூறத் தொடங்கல்.

காணின்றந்த வேதாளங் கடுந்தீப்பசியா னீதியினு
லானவூகத் தாற்சனத்தை யசனமாக்க நகரெய்தி
தானநிருப னிரவுதிரி சமயத்தவனைத் தான்கண்டு
வானிலிடிபோல் வேதாள மன்னற்குரைத்த படிகேளாய்.

இ-ள். காணின்று - காட்டிலிருந்து, அந்தவேதாளம் - அவ்வேதாளமானது, கடுந்தீப்பசியால் - கொடிய உதராக்கினிக்கு, நீதியினுலான - நியாயத்தினுன் (நன்குதீதென்றறிகின்ற தான், ஊகத்தால் - புத்தியினுல், சனத்தை - மனிதரை, அசனமாக்க - புசிப்பாகச்செய்ய, நகரெய்தி - ஒரு பட்டணத்தில்வந்து, தானநிருபன் - அவ்விடத்திற்குரிய அரசன், இரவு திரிசமயத்து - இராத்திரியிற் சஞ்சரிக்கின்றகாலத்தில், அவனைத்தான் கண்டு - அவ்வரசனைக்கண்டு, வானிலிடிபோல் - ஆகாயத்தி னிடியைப்போல, வேதாளம் - வேதாளமானது, மன்னற்குரைத்தபடி - அரசனுக்குச் சொல்லிய விதத்தை, கேளாய் - ஸ்ரீராமா யான்சொல்லக் கேட்பாய்—எ-று.

எ—து. காட்டிலிருந் தவ்வேதாளமானது கொடியவுதராக்கினிக்கு நியாயத்தினு நன்குதீதென் றறிகின்றதான புத்தியினுல் மனிதரைப் புசிப்பாகச்செய்ய ஒரு பட்டணத்தில் வந்து அவ்விடத்திற்குரிய அரசன் இராத்திரியிற் சஞ்சரிக்கின்ற காலத்தில் அவ்வரசனைக்கண்டு ஆகாயத்தினிடியைப்போல 'வேதாளமானது' அரசனுக்குச் சொல்லிய விதத்தை ஸ்ரீராமா! யான் சொல்லக்கேட்பாய்—எ—ம்.

## வேதாளஞ்சொல்ல அரசனுரைத்தல்.

மன்னுவெங்கைப் பட்டனையால் வானேறனைய வென்னுலே,
யுன்னுருயிரிற் றனையினியேன் னுணவாகுதியென் றுரைத்தனு

னச், சொன்னான் மன்னன் வேதாளஞ் சொன்னமன்னற் கெதிர் சொல்லும்.

இ - ள். மன்னா - அரசனே, என்கைபட்டனை - என் கைவசமானாய், வானேறனையவென்னால் - மேலான ஆண்சிங்கத்துக் கொப்பாகிய வென்னால், உன்னுயிரிற்றனை - உனது நிறைந்தவுயிரை யிழந்தாய். இனி யென்னுணவாகுதியென்று - மேலெனக்குப் புசிப்பாகக் கடவாயென்று, உரைத்தலும் - வேதாளஞ்சொல்லவும், நெறியின்றி - ஞாயமில்லாமல், எனை நெருங்கில் - என்னிடத்தி னெருங்குவையாயின், நின்றலை - உன்றலை, தவிடுபொடியாமென்ன - (உனது) சிரசு பொடியாகப் போகுமென்று, மன்னன் - மன்னனானவன், சொன்னான் - சொல்லினன், வேதாளம் - வேதாளமானது, சொன்னமன்னற்கு - (இப்படியென்று) சொல்லிய அரசனுக்கு, எதிர்சொல்லும் - பதிலுத்தரவு சொல்லும் — எ - று.

எ - து. அரசனே ! என்கைவசமானாய்; மேலான ஆண்சிங்கத்துக்கொப்பாகிய வென்னால் உனது நிறைந்த உயிரையிழந்தாய். மேலெனக்குப் புசிப்பாகக்கடவாயென்று வேதாளஞ்சொல்லவும். ஞாயமில்லாம லென்னிடத்தி னெருங்குவையாயின் உன்னுலுனது சிரசு பொடியாகப்போகுமென்று அரசனானவன் சொல்லினன். வேதாளமானது இப்படியென்று சொல்லிய அரசனுக்குப் பதிலுத்தரவு சொல்லும் — எ — ம். (19)

## வினாவுக்கு விடையாசித்தல்.

நீதியின்றி யுனையடரே னெறியையுரைக்கேனிருபாநீ
தீதில்இரவா ளருக்கெல்லாஞ் சிறுமைதீர்க்குந் திறத்தனையா
லாதலாலென்குறை தீர்ப்பாயையப்பாடாங்குறைகேட்டு
நாதனேநின் சொற்கொடையா னன்றுநிறைப்பாயெனவுரைக்கும்.

இ - ள். நீதியின்றி - நியாயமில்லாமல், உனையடரேன் - நின்னைக்கொல்லேன், நெறியையுரைக்கேன் - நீதியைச்சொல்லுவேன், நிருபாநீ - அரசனே நீர், தீதில்இரவாளருக்கெல்லாம் - குற்றமற்ற யாசகாளனைவருக்கும், சிறுமைதீர்க்குந் திறத்தனையாதலால் - குறைவை நீக்குகின்ற குணத்தை யுடையவனாதலினால், என்குறைதீர்ப்பாய் - எனது குறையை நீக்குவாய், ஐயப்பாடாம் - சந்தேகமான, குறைகேட்டு - குறையைக்கேட்டு, நாதனே - அரசனே, நின் சொற்கொடையால் - உனதுத்தரமாகிய வீகையினால், நன்றுநிறைப்பாயென - நன்மையாகப் பூரணஞ்செய்வாயென்று, உரைக்கும் - (வேதாளஞ்) சொல்லும் — எ - று.

எ - து. நியாயமில்லாமல் நின்னைக்கொல்லேன், நீதியைச்சொல்லுவேன். அரசனே ! நீர் குற்றமற்ற யாசகாளனைவருக்கும் குறைவை நீக்குகின்ற குணத்தையுடையவனாதலினால் எனதுகுறையைநீக்

குவாய் சந்தேகமான குறைவைக்கேட்டு அரசனே ! உனதுத்தர மாகிய வீகையினால் நன்மையாகப் பூரணஞ்செய்வாயென்று வேதாளஞ்சொல்லும்—எ - ம்.

(இ·ச-க-ம்.) வேதாள மனுபவ வேத்தியத்தைக்குறித்து பிரமஸ்வரூபத்தைப்பகுத்து வினவத்தொடங்கினதாம். (17)

## வேதாளம் வினவின வினவாறின் மூன்றுவினவுதல்.

எந்தவெய்யோன் கிரணங்கட் கிந்தப்பிரமாண் டங்களெலாஞ்
சிந்துஞ்சிறிய வணுத்திரளாய்த் திகழுமெந்த மாருதத்தி
லந்தமில்லாக் ககனமெனு மணுக்கள்விளங்கு மளவின்றி
வந்தகனுமேற் கனவுற்று மாறாத்தெளிவா மொளிவடிவென்.

இ - ள். எந்தவெய்யோன் கிரணங்கட்கு-எந்த சூரியனதுகதிர்களுக்கு, இந்த பிரமாண்டங்களெலாம் - இப்பிரமாண்டங்களியாவும், சிந்தும் - சிந்துகின்ற, சிறியவணுத்திரளாய் - அற்பமான அணுக்கூட்டங்களாக, திகழும்-விளங்கும், எந்தமாருதத்தில் - எந்தக்காற்றினால், அந்த மில்லா - முடிவற்ற, ககனமெனும் - ஆகாசமென்கிற, அணுக்கள் விளங்கும் - அணுக்களாய் பிரகாசிக்கும், அளவின்றிவந்தகனுமேல் - மிகவுமுண்டாகிய சொற்பனத்தின் மேல், கனவுற்றும் - சொற்பன முண்டானாலும், மாறாத்தெளிவா மொளிவடிவென் - திரிவின்றிய தெளிவான பிரகாசஸ்வரூபமியாது—எ - று.

எ - து. எந்த சூரியனது கதிர்களுக்கு இப்பிரமாண்டங்களியாவுஞ் சிந்துகின்ற அற்பமான அணுக்கூட்டங்களாக விளங்கும். எந்தக் காற்றினால் முடிவற்ற ஆகாசமென்கின்ற அணுக்கள் பிரகாசிக்கும், மிகவுமுண்டாகிய சொற்பனத்தின்மேல் சொற்பன முண்டானாலும் திரிவின்றிய தெளிவான பிரகாசஸ்வரூபமியாது.

## இரண்டுவினவுதல்.

அரம்பைதண்டு ளுட்போயு மந்தத்தண்டேயாவதுபோல்
வரம்பிலுள்ளுள் ளேயெனினுமற்றொன்றாகாவணுவேது
நிரம்புமண்ட விண்ணுயிர்க ணிகழுங்கதிர்போற் கிரியனைத்தும்
பிரம்புபராமா ணுக்களெனப் பயின்றுநீங்கா வணுவேது·

இ - ள் அரம்பை - வாழையினது, தண்டுள் - தண்டினுள், உட்போயும்-உள்ளே போகியும், அந்தத்தண்டேயாவதுபோல் - அந்தவண்டேயிரு

ளேயானாலும், மற்றொன்றாகாவணுவேது - வெறொன்றாகாதவணுவேது, நிரம்புமண்டம் - நிறைந்தபிரமாண்டமும், விண் - ஆகாயமும், உயிர்கள் சீவகோடிகளும், நிகழுங்கதிர் - பிரகாசிக்கின்ற சூரியனும், பொற்கிரியனை த்தும் - மகாமேருவுமாகியசகலமும், பரம்பு - விரிந்த, பரமாணுக்களென - பரமாணுக்களைப்போல, பயின்றுநீங்கா - கூடிப்பிரியாத, அணுவேது - அணுவானதெது—எ-று.

எ - து. வாழையினது தண்டுனுள்ளுள்ளே போகியும் அந்தத் தண்டே யிருப்பதுபோல அளவில்லாத உள்ளுள்ளேயானாலும் வே றொன்றாகாத வணுவேது? நிறைந்த பிரமாண்டமும் ஆகாயமும் சீவ கோடிகளும் பிரகாசிக்கின்ற சூரியனும் மகாமேருவுமாகிய சகலமும் விரிந்த பரமாணுக்களைப்போலக் கூடிப்பிரியாத அணுவானதெது.

ஒன் று வி னு வு தல்.



அங்கமொன் று மறப்பரம வணுவாமெந்த மாகிரிக்குத்
தங்குதற்போற்செறிந்தொன்றாஞ் சகங்கண்மச்சை யாமென்று
துங்கவேதா ளஞ்சொன்ன சொற்குநகைத்துச் சுடர்மௌலி
யங்கணரசன் சொன்னதெலா மடவேகேட்டி யிராகவனே.

இ - ள். அங்கமொன்றுமற - அவயவங்களொன்றுமில்லாமல், பரம வணுவாம் - பரமாணுவாகிய, எந்தமாகிரிக்கு - எந்தப்பெரியமலைக்கு, தங்குதற்போல் - தங்காநின்ற கல்லைப்போல, செறிந்தொன்றாம் - நெருங்கி யொன்றாயிருக்கின்ற, சகங்கண்மச்சையாமென்று - உலகங்கண்மச்சையா யிருக்குமென்று, துங்கவேதாளம் - உயர்வானவேதாளமானது, சொன்ன சொற்கு - கேட்ட வசனங்களுக்கு, நகைத்து - நகைசெய்து, சுடர்மௌலி - பிரகாசிக்கின்ற கிரீடத்தையுடைய, அங்கணரசன் - அழகியகண்களையுடைய இராசன், சொன்னதெலாம் - சொல்லியயாவையும், இராகவனே - ஸ்ரீராமா அடவேகேட்டி - நீ கிரமமாகக்கேட்பாய்—எ-று.

எ - து. அவயவங்க ளொன்றுமில்லாமல் பரமாணுவாகிய எந் தப் பெரியமலைக்குத் தங்காநின்ற கல்லைப்போல நெருங்கியொன்றா யிருக்கின்ற உலகங்கண் மச்சையாயிருக்குமென்று உயர்வான வே தாளமானது கேட்ட வசனங்களுக்கு நகைசெய்து பிரகாசிக்கின்ற கிரீடத்தையுடைய அழகிய கண்களையுடைய விராசன் சொல்லிய யாவையும் ஸ்ரீராமா! நீ கிரமமாகக்கேட்பாய்—எ-ம்.

(இ-கூ-க-ம்) வேதாளம் வினவாமைக்கும் அரசனுத்தாஞ் சொல்லத் தொடங்கினதாய்.

## எந்தச் சூரியகிரணத்துக் கிந்தச் சகங்க அணுவாகு மென்று கேட்ட முதல்வினாவுக் குத்தரங்கூறல்.



உதித்தவிந்தச் சிற்பானு வுலகமிவையெல் லாம்விளங்கு
மதித்தவிமல விஞ்ஞான வடிவாம்பரம வாதித்தன்
கதித்தவொளியா மிவ்வெய்யோன் கதிர்க்கிவ்வுலகெல்லாமணுவாந்
துதித்தவிந்த மார்த்தாண்டன் சுடராற்றோன்றி விளக்கிடுமால்.

இ-ள். உதித்தவிந்தச்சிற்பானுவை-உதயமான இந்தஞான சூரியனுள், உலகமிவையெல்லாம்-சகமுதலிய இச்சகலமும், விளங்கும்-பிரகாசிக்கின்ற, மதித்த - நிச்சயித்திருக்கப்பட்ட, விமலவிஞ்ஞானவடிவாம் - நின்மலஸ்வரூபனை, பரமவாதித்தன் - பிரமசூரியனது, கதித்தவொளியாம் - மிகுந்த பிரகாசமாகிய, இவ்வெய்யோன்கதிர்க்கு - இந்தச் சூரியன்கிரணத்துக்கு, இவ்வுலகெல்லாமணுவாம்- இச்சகங்களியாவுமணுக்களாகும், துதித்த - தோத்திரஞ்செய்யப்பட்ட, இந்தமார்த்தாண்டன் - இந்தச்சூரியனது, சுடரால் - பிரகாசத்தினால், தோன்றிவிளக்கிடும்- சகத் துண்டாகிப் பிரகாசிக்கும்-எ-ம்.

எ-து. உதயமான இந்த ஞானசூரியனுள் சகமுதலிய விச்சகலமும் பிரகாசிக்கின்ற நிச்சயித்திருக்கப்பட்ட நின்மலரூபமான பிரமசூரியனது மிகுந்த பிரகாசமாகிய இந்தச்சூரியன் கிரணத்துக்கு இச்சகங்களியாவும் அணுக்களாகும், தோத்திரஞ்செய்யப்பட்ட இந்தச்சூரியனது பிரகாசத்தினாற் சகத்துண்டாகிபிரகாசிக்கும்-எ-ம்.

(இ-ம்.) பிரமசூரியனது ஞானப்பிரகாசமான கிரணங்களுக்குச் சகல சகங்களு மணுக்களாய் விளங்குமென்பதாம். (21)

## எந்தக்காற்றிற் காலமாகாயமுதலிய சத்தைகளெனா மென்றுகேட்ட விரண்டாம் வினாவுக்குத் தரங்கூறல்.



காலமுண்மை விசும்புண்மை கண்ணுயசையு மறிவுண்மை
சாலவிமல வறிவுண்மை தன்னைமுதலா முண்மையெலாஞ்
சீலப்பரமப் பெருங்காற்றிற் சிறுதூளாகிற் றிகழுந்திடுமாற்
கோலமலரின் மணம்போற்றாங் கொண்டசொரூப சுபாவத்தால்.

இ-ள்- காலமுண்மை - காலசத்தையும், விசும்புண்மை வியோமசத்தையும், கண்ணுயசையும் - கண்ணுயிருக்கின்ற சலனத்தையும், அறிவுண்மை - ஞானசத்தையும், சாலவிமலம் - மிகவுநின்மலமான, அறிவுண்மைதன்னை - சேதனசத்தையும், முதலாமுண்மையெலாம் - முதலியசத்தைகளனைத்தும், சீலப் பரமப்பெருங்காற்றின் - நல்லறிவான பிரமமென்னுஞ்

சண்டமாருதத்தினால், சிறுதூளாகி - பொடிபொடியாகி, கோலமலரின் மணம்போல் - அழகியபுட்பத்தினது வாசனையைப்போல, தாங்கொண்ட- தாங்கொண்டிருக்கின்ற. சொரூபசுபாவத்தால் - ஸ்வரூப சுபாவத்தினால், திகழ்ந்திடும் - பிரகாசிக்கும்—என்-று.

எ-து. காலசத்தையும், விமோசத்தையும், கண்ணாயிருக்கின்ற சலனசத்தையும், ஞானசத்தையும், மிகவுநின்மலமான சேதனசத்தையு முதலிய சத்தைகளனைத்தும் நல்லறிவான பிரமமென்னுஞ் சண்டமாருதத்தினாற் பொடிபொடியாகி அழகிய புட்பத்தினது வாசனையைப்போலத் தாங்கொண்டிருக்கின்ற ஸ்வரூப சுபாவத்தினாற் பிரகாசிக்கும்—எ - ம்.

(இ-ம்.) நித்தியதத்துவமென்னுங் காலதத்துவமுதலிய சத்தையாவும் பிரமவனிலத்திற் றூளாய் நீங்குமென்பதாம். (22)

## கனவின்மேற் கனவுவரினு மதன்வயமாக மயங்காமற் றெளிந்தபடி யிருக்கின்ற தெதுவென்ற மூன்றாம் வினாவுக்கும் அரம்பையைப்போல அகத்திற் செல்லச்செல்ல வேறாயிராததெதுவென்ற நான்காம் வினாவுக்கு முத்தரங்கூறல்.

உலகநாமப் பெருங்கனவி லொறின்மேலொன் றாக்கனவு
பலபற்றியுந்தன் வடிவைவிடாப் பயில்சாந்தத்தால் விரிபிரம
மிலகுங்கதலி யுள்ளுள்ளே யானபோது மப்பிரமம்
வலமிலாத வுள்ளுள்ளே யானபோது மப்பிரமம்.

இ - ள். உலகநாமம் - சகமென்னும் பெயரையுடைய, பெருங்கனவில்- தீர்க்கசொற்பனத்தில், ஒன்றின்மேல் - ஒருசொற்பனத்தின்மேல், ஒன்றாக் கனவு - ஒருசொற்பனமாக, பலபற்றியும் - அநேகம் பிடித்தும், தன்வடிவை விடா - தனதுவடிவத்தைப்பிரியாமல், பயில்சாந்தத்தால் - பொருந்திய சாந்தியினால், விரிபிரமமிலகும் - வியாபகமானபிரமமொளிரும், கதலியுள்ளுள்ளும் - வாழைமரத்துக்குள்ளேயுள்ளேயும், இலையேயாகுமியல்பென்ன - மடலேயிருக்கின்ற தன்மையைப்போல, அலமிலாத - அளவற்ற, உள்ளுள்ளே- சகமுள்ளுக்குள்ளே, ஆனபோதும் - ஆகியபோதும், அப்பிரமம் - அந்தப் பிரமமேவிளங்கும்—எ-று.

எ - து. சகமென்னும் பெயரையுடைய தீர்க்கசொற்பனத்தின்மே லொருசொற்பனமாக அநேகம் பிடித்தும் தனது வடிவத்தைப்பிரியாமல் பொருந்திய சாந்தியினால் வியாபகமான பிரமமொளிரும். வாழைமரத்துக் குள்ளேயுள்ளேயும் மடலேயிருக்கின்ற

தன்மையைப்போல அளவற்ற சகமுள்ளுக்குள்ளே ஆகியபோதும் அந்தப் பிரமமேவிளங்கும்—எ-ம்.

(இ-ம்.) சகத்தென்கின்ற தீர்க்கசொற்பனத்திற் சங்கற்பமாகிய சொற்பன நானாவிதமாகத் தோற்றியு மிவைகளின் மறைவுபடாமற்றன்னைத்தெளிவுற்றிருப்பது பிரமமென்றுங் கதலியைப்பிரிக்க அதன்றண்டேயிருப்பது போலப் பிரமத்தை வேறுவேறு செய்தவிடத்துந் தானகவே விளங்குமென்றுஞ் சொல்லியதாம். (23)

## எந்தவணுவிற் பிரமாண்டமுதலிய சீவர்களனைத்தும் பரமாணுக்களாம் என்று ஐந்தாம் வினவுக்குத்தரங்கூறல்.

சூக்கமாயெட் டாமையினூற் சொன்னபரமே பரமாணு
நீக்குமெல்லை யிலாமையினு னெடியமேரு முதலனைத்தின்
றூக்குமூல மிதுவாகுந் தடமேருவையா திகளிதற்கு
நோக்கும்பரமா ணுவைப்போல நடங்கிவிளங்கு நோக்கிடினே.

இ-ள். சூக்கமாய் - சூட்சமமாம், எட்டாமையினூல் - அறிதற்கருமையினுல், சொன்னபரமே - முன்சொல்லப்பட்ட பிரமமே, பரமாணு - பரமாணுவாம், நீக்கும் - நீக்குகின்ற, எல்லையிலாமையினுல் - முடிவில்லாததினுல், நெடியமேருமுதலனைத்தின் - நீண்டமகாமேரு வாதியான சகலத்துக்கும், இதுதாக்குமூலமாகும் - இதுவே தாக்கப்பட்ட காரணமாகும். மேருவையாதிகள் - விசாலமான மகம்மேரு முதலியவைகளை, இதற்கு - இந்தப்பரமாணுவுக்கு; நோக்கும்பரமாணுவைப்போல - பார்க்கும் பரமகணுவைப் போல, நோக்கிடின் - பார்க்குமிடத்தில், நடங்கிவிளங்கும் - துவட்சியாகப் பிரகாசிக்கும்—எ-று.

எ-து. சூட்சுமமாய் அறிதற்கருமையினுல் முன்சொல்லப்பட்ட பிரமமே பரமாணுவாம் நீக்குகின்ற முடிவில்லாததினுல் நீண்ட மகாமேருவாதியான சகலத்துக்கு மிதுவே தாக்கப்பட்ட காரணமாகும். விசாலமான மகம்மேரு முதலியவைகளை இந்தப் பரமாணுவுக்குப் பார்க்கும் பரமாணுவைப்போலப் பார்க்குமிடத்திற் றுவட்சியாகப் பிரகாசிக்கும்—எ-ம்.

(இ-ம்.) அணுவாகணுவாய் மகத்துக்கு மகத்தாய் விளங்குகின்ற பிரமவியாபகத்திற் சகலபிரமாண்டங்களும் பரமாணுக்களாக விளங்குமென்பதாம். (24)

## அவயவரகிதமான வெந்தவணுக்குச் சகமெச்சையாமென்ற ஆறும்வினவுக் குத்தரங்கூறல்.

எட்டாமையினுற் பரவணுவா மிவனே நிறைவாற் பெரியகிரி
தட்டாவயவ வங்களெலாந் தரித்துமவையில் லாப்புருடன்

முட்டாவிஞ்ஞா னத்துருவாய் முழுதும்பொ ருட்கு மிடமாகு
மெட்டாவிதற்கு விஞ்ஞான சாரமச்சை யிவையனைத்தும்.

(இ-ள்.) எட்டாமையினல்'- அடையப்படாமையினல், பரவணுவாமிவ னே - பரமாணுவாகியஇப்பிரமமே, நிறைவால் - பூரணத்தால், பெரியகிரி- யோசலமாகும், தட்டாவவயவஙகளெலாம் - குறைவில்லாத அவயவங்களியா வையும் தரித்தும்-அணிந்தும், அவையிலலாப்புருடன் - அவைகளைத்தரியாத ஆத்மாவானவன், முட்டாவிஞ்ஞானத்துருவாய - குறைவில்லாத மெய்ஞ்ஞா னஸ்வரூபமாய், முழுதும்பொருட்குமிடமாகி - சகலவஸ்துக்களுக்கு மாதார மாயிருப்பன், எட்டாவிதற்கு - (அறிதற்) கரியஇந்தவாதமாவுக்கு, இவைய னைத்தும் - இந்தச்சகலசகங்களும், விஞ்ஞான சாரமச்சை - விஞ்ஞானவிரச மாகிய மச்சையாகும்—எ-று.

எ-து. அடையப்படாமையினற் பரமாணுவாகிய இப்பிரம மே பூரணத்தினல் பேரசலமாகும். குறைவில்லாத அவயவங்களியா வையு மணிந்தும் அவைகளைத் தரியாத ஆத்மாவானவன் குறைவில் லாத மெய்ஞ்ஞானஸ்வரூபமாய்ச் சகலவஸ்துக்களுக்கு மாதாரமாயி ருப்பன். அறிதற்கரிய இந்தவாத்மாவுக்கு இந்தச்சகலசகங்களும் வி ஞ்ஞானவிரசமாகிய மச்சையாகும்—என்பதாம்.

(இ-ம்.) அநேகசகமான பிரமஞானத்துக்குச் சாரமான மச்சையாகச்சக த்து விளங்குமென்பதாம். (25)

இயல்விஞ்ஞான மாத்திரத்தி னிடையேயுலக மிருக்குமென
வுயர்மன்னவனே தலுங்கேளா வுளத்தேதன்னை வுணர்வுற்று
மயலில்விசாரத தாற்சாந்த மனவேதாளந் தனியிடம்போய்த்
துயர்கொள்பசியை மறந்தசையாத தூயநியானத் திருந்ததுவே.

(இ-ள்.) இயல்விஞ்ஞானமாத்திரத்தின் - பொருந்தியவிஞ்ஞானமாத்தி ரத்தினது, இடையேயுலகமிருக்குமென - மத்தியிற்சகமானஇருக்குமென்று, உயர்மன்னவனேதலும் - மேலானஅரசன்சொல்லவும், கேளா - கேட்டு, உ ளத்து - மனத்தில், தன்னையுணர்வுற்று - தனதுஸ்வரூபத்தை யறிந்து, மய லில்விசாரத்தால் - மயக்கமற்றவிசாரணையினல், சாந்தமன வேதாளம் - உப சாந்தமனத்தையுடைய வேதாளமானது, தனியிடம்போய்-ஏகாந்தஸ்தானத் துக்குச்சென்று, துயர்கொள் - துக்கமுள்ள, பசியைமறந்து - உதராக்கினி யைமறந்து, அசையாத - சலனமில்லாத, தூயநியானத்திருந்தது - பரிசுத்தமா ன சமாதியிலிருந்தது—எ-று,

எ - து. பொருந்திய விஞ்ஞானமாத்திரத்தினது மத்தியிற் சக மான இருக்குமென்று மேலானஅரசன் சொல்லவுங்கேட்டு மனத்தி

ற் றனது ஸ்வரூபத்தையறிந்து மயக்கமற்ற விசாரணையினால் உபசாந்த மனத்தையுடைய வேதாளமானது ஏகாந்தஸ்தானத்துக்குச் சென்று துக்கமுள்ள உதராக்கினியை மறந்து சலனமில்லாத பரிசுத்தமான சமாதியிலிருந்தது—என்பதாம்.

(இ-ம்.) சர்வம்பிரமமயமாய் விளங்குமென்ற வுத்தரங்கேட்ட வேதாளஞ்சாந்தியுடனாநந்தாமிர்தம்புசித்துச் சமாதியையடைந்ததென்பதாம்.

வேதாளகதை முற்றிற்று.

ஆக கதை ௩௫-க்கு கவிதை-௩௫௭௧.

# பகீரதன்கதை.



அவதாரிகை.

முதற்கதையில் சுழுத்திமவுனத்தாற் சர்வம் பிரமமயமாய் விளங்குமென்பதை வினாவிடையினு லறிவித்து இவ்வனுபவமடைதற் கரிதாயினுஞ் சங்கற்பியாகமுள்ள தனது முயற்சியினு லெளிதாயடையலாமென்பதை அறிவிக்குநிமித்தம் பகீரதன் கதையை நிரூபிக்கிறார்.

## மனந்தெளிந்து நிற்குஞ் சகசானுபவம் மருளிச்செய்தல்.

அசைவிலா வுட்போகத்தா லனைத்தினு முளத்தைவாங்கி
யிசைவசெய் திச்சையின்றி யிளைப்பறப் புந்திமாறி
விசையிலா நெஞ்சானெஞ்சை விண்ணென விமலமாக்கி
யசைவறு மவுனியேகன் சாந்தமே வடிவமாகி.

(இ-ள்.) அசைவிலா - சலனமற்ற, உட்போகத்தால் - அந்தராத்மாவினால், அனைத்தினும் - சகலவிடங்களினின்றும், உளத்தைவாங்கி - மனதைத்திருப்பி, இசைவசெய்து - இசையத்தக்கவைகளைச்செய்து, இச்சையின்றி-ஆசையில்லாமல், இளைப்பற - மெலிவில்லாமல், புந்திமாறி-மனதுவிஸ்ராந்தியடைந்து, விசையிலாநெஞ்சால் -சாந்தமனதினால், நெஞ்சை - (அகந்த) மனதை, விண்ணென - ஆகாயத்தைப்போல, விமலமாக்கி - நின்மலமாகச்செய்து, அ

சைவறுமவுனி - சலனமற்றமவுனியாகியும், ஏகன் - ஒருவனாகியும், சாந்தமே வடிவதாகி-உபசாந்தமேஸ்வரூபமாகியும்-எ-று.

எ - து. சலனமற்ற அந்தராத்மாவினும் சகலவிடயங்களினின்றும் மனதைத்திருப்பி இசையத்தக்கவைகளைச் செய்து ஆசையில்லாமல் மெலிவில்லாமல் மனது விஸ்தாந்தியடைந்து சாந்தமனதினு தசுத்தமனதை ஆகாயத்தைப்போல நின்மலமாகச்செய்து சலனமற்ற மவுனியாகியு மொருவனாகிய முபசாந்தமே ஸ்வரூபமாகியும்—எம்பதாம் (1)

## பகீரதனைப்போல சுகத்தைப்பெறுவாயெனல்.

சமனுமா யிதயவிண்போற் சாலவுந் தெளிந்துநிற்பாய்
நிமலமாம் புந்திதிண்மை நிறைவுற்று மூடமின்றி
யமரவந் தனபின்செல்லு மரசனும் பகீரதன்போற்
குமரனே யரியதேனுங் குறைவறப் பெறலாமென்றான்.

(இ-ள். சாமனுமாய் - சமத்துவனாகியும், இதயம் - மனமானது, விண்போல் - ஆகாயத்தைப்போல, சாலவுந்தெளிந்துநிற்பாய் - ஸ்ரீராமா நீமிகவுந் தெளிந்திருக்கக்கடவாய், நிமலமாம்புந்திதிண்மைநிறைவுற்று - நின்மலமான புத்திதிடநிறைந்து, மூடமின்றியமரவந்தன-அறியாமையின்றி யமைவாகவந்தவைகளை, பின்செல்லுமரசனும் பகீரதன்போல் - அனுசரிக்கின்ற வேந்தனாகிய பகீரதனைப்போல, குமரனே - குழந்தாய், அரியதேனும் அடைதற் கரியதாயினும், குறைவறப்பெறலாமென்றான் - குறைவின்றியடையலாமென்று வசிட்டமுனிசொன்னார்—எ-று.

எ - து. சமத்துவனாகியும்மனமானது வாகாயத்தைப்போல ஸ்ரீராமா! நீ மிகவுந்தெளிந்திருக்கக்கடவாய் நின்மலமான புத்திதிடநிறைந்து அறியாமையின்றி யமைவாக வந்தவைகளை அனுசரிக்கின்ற வேந்தனாகிய பகீரதனைப்போல குழந்தாய் அடைதற்கரிய தாயினுங் குறைவின்றியடைலாமென்று வசிட்டமுனிசொன்னார்.

(இ-உ-க-ம்.) சகலவிஷ்டையை யனுக்கிரகித்ததாம். (2)

## பகீரதன் யாதினுலாத்மானுபவம் பெற்றது ஆங்கையைக்கொண்டுவந்தது என்றவினுவின் முதல்இனுவுக்கு உத்தரங் கூறத்தொடங்கல்.

என்றலு மவனைநோக்கி யெம்மன வல்லபத்தா
என்றுகங் கையைக்கொணர்ந்தான் பகீரத னையாவென்று

நற்றுணர் வள்ளல்கேட்ப நான்மறை வசிட்டன்சொல்வா
னொன்றுணர் பகிரதப்பே ரொருவனுண் டுலகில்வேந்தன்.

இ-ள். என்றலும் - (இப்படி) யென்று வசிட்டமுனிசொல்லவும், அவனைநோக்கி - அவரைப்பார்த்து, ஐயா - என்தாசிரியரே, பகீரதன் - பகீரதவாசனானவன், எம்மனவல்லபத்தால் - எந்தமன வல்லமையினால், நன்றுணர் - பரமசுகத்தையறிந்தான், அன்றுகங்கையை - அப்போது தேவநதியை, கொணர்ந்தானென்று - கொண்டுவந்தானென்று, வள்ளல்கேட்ப - ஸ்ரீராமன்கேட்க, நான்மறை - நான்குவேதங்களையு (முணர்ந்த,) வசிட்டன் சொல்வான் - வசிட்டமுனி சொல்லுவார், ஒன்றுணர் - ஏகத்துவத்தையறிந்த, பகீரதப்பேர் - பகீரதனென்னுநாமத்தையுடைய வேந்தன் - அரசனானவன், உலகின் - பூமியின்கண், ஒருவனுண்டு - ஒருவனிருந்தான். — எ-று.

எ - து. இப்படியென்றுவசிட்டமுனிசொல்லவும் அவரைப்பார்த்து எனதாசிரியரே! பகீரதவாசனானவன் எந்தமனவல்லமையினாற் பரமசுகத்தையறிந்தான்? அப்போதுதேவநதியைக்கொண்டு வந்தானென்று ஸ்ரீராமன்கேட்க, நான்குவேதங்களையுமுணர்ந்த வசிட்டமுனி சொல்லுவார். ஏகத்துவத்தை யறிந்த பகீரதனென்னு நாமத்தையுடைய அரசனானவன் பூமியின்கண் ஒருவனிருந்தான்—என்பதாம்.

நிமலமாம்புந்தி திண்மை நிறைவுற்று மூடமின்றி யமரவர்தவமின்செல்லு மாசனும் பகீரதன்போலென்றதற்கு, எம்மனவல்லபத்தா லன்றுகங்கையைக் கொணர்ந்தானென்பது வினாவழுவும், அதற்கு ஞானமடைந்த வருத்தஞ்சொல்லுதல் விடைவழுவுமாம். அங்ஙனமன்று, ஞானமன வல்லபத்தாற் கங்கையைக் கொணர்ந்தானெனில். அது மலைகல்வி யெலி பிடித்தானென்னுங்கதைக்கொப்பாகும். அஃதன்றியுந் தவத்தாற்கொண்டுவந்தானென்றுத்தாமிருத்தலின் பரஸ்பரம் விரோதமாமிங்ஙன மகாரிஷிகள் வாக்கிராதாகலாலெம்மன வல்லபத்தா னென்பதி னன்றுணர்ந்தா னென்னும் வினா ஒளித்திருந்ததை யின்னூலாசிரியர் வெளிப்படுத்தினா ரெனக்கொள். (3)

## பகீரதன் மகிமையைக்கூறல்.

மாநில முழுதுங்காப்போன் மணியிலும் வண்மைமிக்கோன்
சானவி படியொழுங்காற் சாம்பராய்ப் பாதலத்திற்
போனதன் கிளையையெல்லாம் பூமக னுலகிலேற்றி
நீநர கொழியவைத்தோன் றிங்கள்வெண் கவிகைமன்னன்.

இ-ள். மாநிலமுழுதும்- பெரியதானபூமியனைத்தையும், காப்போன் - காப்பவன், மணியிலும் - சிந்தாமணியிலும், வண்மைமிக்கோன் - ஈகையின்மிகு

ந்தவன், சானவிபடியெழுங்கால் - கங்காசோபனகிராமத்தினால், பாதலத்தில் - பாதாளத்தில், சாம்பராய்ப்போன - பஸ்பமாகிய, தன்கிளையெல்லாம் - தனது பாட்டன்மார்களனைவரையும், தீநாகொழிய - கொடியநகரநீங்கும்படி, பூமகளுலகிலேற்றி - சத்தியலோகத்தைச்சேர்த்து, வைத்தோன் - (சுகிக்க) வைத்தவன், திங்கள்வெண்கவிகைமன்னன் - சந்திரன்போன்ற வெண்மையாகிய பூச்சக்கரக்குடையையுடையவரசன்—எ-று.

எ — து. பெரியதான பூமியனைத்துங் காப்பவன், சிந்தாமணியினு மீகையில் மிகுந்தவன். கங்காசோபானக் கிரமத்தினைய் பாதாளத்திற் பஸ்பமாகிய தனது பாட்டான் மார்களனைவரையுங் கொடியநகரநீங்கும்படி சத்தியலோகத்தைச் சேர்த்துச் சுகிக்கவைத்தவன், சந்திரன்போன்ற வெண்மையாகிய பூச்சக்கரக்குடையையுடைய அரசன்—என்பதாம். (4)

## விடயதோட திருஷ்டியினால் விசாரமுதித்தல்.

அன்னவன் காளையான பருவத்தி லவனிதன்னி
னின்னல்கூர் நடையாமித்தை நோக்கலுந தனதெண்ணத்தி
லுன்னிய வற்பமான விசாரத்தா லுதித்ததந்தோ
மன்னிளம பக்குவத்தின் மனனத்தின் மாசிறோற்றம.

இ-ள் அன்னவன் - அப்படிப்பட்ட பகீரதன், காளையானபருவத்தில் - எவ்வனகாலத்தில், அவனிதனில் - உலகத்தில், இன்னல்கூர் - துன்பமிகுந்த, நடையாமித்தை - ஆசாரமாகியவித்தை, நோக்கலும - பார்த்தவளவில், தனதெண்ணத்திலுன்னிய - தன்னுடையநினைவினினைத்த, அற்பமானவிசாரத்தால் - சூட்சுமவிசாரணையினது, மாசிறோற்றம் - களங்கமறறதோற்றமானது, மனனத்தில், மனதில், மன்னிளம்பக்குவத்தின் - நிலைபெற்றவிளம்பருவததில், உதித்ததந்தோ - உண்டானததிசயம்-எ-று.

எ - து. அப்படிப்பட்ட பகீரத னெவ்வன்ன காலத்தில் உலகத்தினதுதுன்பமிகுந்த வாசாரமாகிய வித்தைப்பார்த்தவளவில் தன்னுடைய நினைவினினைத்த சூட்சும விசாரணையினது களங்கமற்ற தோற்றமானது மனதில் நிலைபெற்ற விளம்பருவத்தி லுண்டான ததிசயம் என்பதாம். (5)

## தனித்திருந்து சகத்தன்மையை விசாரித்தல்.

விதியினாற் கானன்மேட்டிற் கொடியென விசாரந்தோன்ற
வுதவுமே காநதமெய்தி யொன்றோடான் றெவ்வாசகட்டத்

ததிசய வுலகின்றன்மை யிதனைப்பார்த் தமந்திற்றேர்வான்
புதிதிலை யொன்று மென்றும் போனதே புகுதுமீட்டும்.

இ-ள். விதியினால் - ஊழினால், கர்னன்மேட்டில் - அளரப்பூமியினது. கொடியென - (புட்பக்) கொடியைப்போல, விசாரந்தோன்ற - விசாரணையுதயமாக, உதவுமேகாந்தமெய்தி - கொடுக்கின்றவேகாந்த ஸ்தானத்தை யடைந்து, ஒன்றோடொன்றொவ்வா - ஒன்றோடொன்று பொருந்தாத, கூட்டத்ததிசய வுலகின்றன்மை - சமூகமானவியப்புள்ள சகத்தின் சுபாவமான, இதனைப் பார்த்தகத்திற்றேர்வான் - இவைகளைப்பார்த்து மனதில் விசாரிப்பான், ஒன்றும் புதிதிலை - ஒன்றாவது நூதனமானதில்லை, என்றும் - எப்பொழுதும், போனதே - போயினதே, மீட்டும்புகுதும் - திரும்பவும்வரும்—எ-று.

எ-து. ஊழினால் அளரப்பூமியினது புட்பக்கொடியைப்போல விசாரணையுதயமாகக் கொடுக்கின்ற வேகாந்தஸ்தானத்தை யடைந்து, ஒன்றோடொன்று பொருந்தாத சமூகமானவியப்புள்ள சமத்தின் சுபாவமான இவைகளைப் பார்த்துமனதில் விசாரிப்பான். ஒன்றாவது நூதனமானதில்லை. எப்பொழுதும் போயினதே திரும்பவும் வரும்—என்பதாம். (6)

## புவனபோகங்களைக் கான்றனம்போலக் கருதுதல்.

போகிய பகலேமீளப் போகிய விரவேமீள
வேகிய கொடையேமீள வேகிய விரப்பேமீள
வாகிய வுணவேமீள வாகிய தொழிலேமீள
மோகியர் மீளமீள முயலுவா ரொன்றினாேர்.

இ-ள். போகியபகலேமீள - போனபகலே திரும்பவும் வருகின்றது, போகியவிரவேமீள - போனவிராத்திரியே திரும்பவும்வருகின்றது, ஏகிய கொடையேமீள - போனவீகையே திரும்பவும்வருகின்றது, ஏகியவிரப்பேமீள-போனயாசகமே திரும்பவும்வருகின்றது, ஆகியவுணவேமீள-ஆனபுசிப்பே திரும்பவும்வருகின்றது, ஆகியதொழிலேமீள - ஆனகருமமே திரும்பவும் வருகின்றது, மோகியர் - மோகத்தையுடையவர்கள், ஒன்றினார் - ஒன்றிலும்வெட்கப்படாமல், மீளமீள - திரும்பத்திரும்ப, முயலுவார்-(அதின்) முயற்சிசெய்வார்கள்—எ-று.

எ-ம். போனபகலே திரும்பவும் வருகின்றது, போனவிராத்திரியேதிரும்பவும் வருகின்றது. போனவீகையேதிரும்பவும் வருகின்றது, போனயாசகமே திரும்பவும் வருகின்றது, ஆனபுசிப்பே திரும்பவும் வருகின்றது, ஆனகருமமே திரும்பவும் வருகின்றது. மோக

த்தையுடையவர்கள் ஒன்றிலும் வெட்கப்படாமற் றிரும்பத்திரும்ப அதின் முயற்சிசெய்வார்கள்—என்பதாம். (7)

## ஆத்மாநந்தங்கொடாத கன்மத்தை வெறுத்துப் பூரணாநந்தந்தைக்கொடுக்குங் கன்மத்தை விரும்புதல்.

சுவையற வுணங்குமந்தக் கருமமே சூழாநிற்பர்
நவையற வெதனைச்சேர்ந்தா லணனுறா தில்லையென்ன
வெவையும்வந் தணுகுமத்தை யியற்றலே யியல்பாஞ்செய்கை
கவையுறு மற்றவெல்லாக் கருமமும் விடூசியாகும்.

இ-ள். சுவையறவுணங்கும் - இரசமில்லாமல்வாடுகின்ற, அந்தக்கருமமே - அதெதொழிலேயே, சூழாநிற்பர் - சூழ்ந்திருப்பார்கள், நவையற-குற்றமறும்படி, எதனைச்சேர்ந்தால - எதையடைந்தால், அணனுறா தில்லையென்ன - அடையப்படாததில்லையென்று சொல்லும்படி, எவையும்வந்தணுகும் - யாவையும்வந்துபொருந்தும், அத்தையியற்றலே - அதைச்செய்தலே, இயல்பாஞ்செய்கை - சுபாவமாகியதொழிலாம், கவையுறும் - இரண்டுபடுகின்ற, மற்றவெல்லாக்கருமமும - மற்றசகலகருமங்களும், விடூசியாகும் - விடூசிகாரோகமாம்—எ-று.

எ-து. இரசமில்லாமல் வாடுகின்றவத்தொழிலேயே சூழ்ந்திருப்பார்கள். குற்றமறும்படி எதையடைந்தால் அடையப்படாத தில்லையென்று சொல்லும்படியாவையும் வந்துபொருந்தும். அதைச்செய்தலே சுபாவமாகிய தொழிலாம், இரண்டுபடுகின்ற மற்றச்சகல கருமங்களும் விடூசிகாரோகமாம்—என்பதாம்

(இ-சு-க-ம்.) இதசன்மபுண்ணிய பரிபாகத்தினாற் சாதனசதுஷ்டயமுண்டாயிற்றென்பதாம். (அ)

## சற்குருவைத்தரிசித்துப் பவதுன்பத்தை நீக்குதற்பொருட்டுக் கூறுதல்,

பலபடச் செய்தசெய்வார் பாமர ரறிஞர்செய்யா
ருலகிய விதுவென்றுள்ளம் வெருவின னொருகாற்சென்று
நலனுறு திரிதலப்பேர் நற்குரு சரணந்தாழ்ந்து
சலனுறு பிறவிக்கஞ்சித் தனித்திலை கழறலுற்றான்.

இ-ள். பாமரர் - அஞ்ஞானிகள், பலபடச்செய்தசெய்வார் - அநேகமாகச்செய்ததையேசெய்வார்கள், அறிஞர்செய்யார் - ஞானிகள்செய்யமாட்டார்கள், உலகியலிதுவென்று - [illegible], உள்ளம் வெருவினன் - மனதிலச்சமுற்ற பகீரதனென்பவன், ஒருகாற்சென்று - ஒருகாட்போ

ய், நலனுறு திரிதுலப்பேர் - நன்மைபொருந்தியதிரிதுலனென்னு நாமத்தையுடைய, நற்குருசரணந்தாழ்ந்து - சற்குருவினது பாதத்தைவணங்கி, சலனுறுபிறவிக்கஞ்சி - துன்பமிகுந்த பவத்துக்குப்பயந்து, தனித்து - ஏகாந்தமாய் இவைகழறலுற்றான் - இவைகளைச்சொல்லத்தொடங்கினான்—எ-று-

எ-து. அஞ்ஞானிகளநேகமாகச் செய்ததையே செய்வார்கள், ஞானிகள் செய்யமாட்டார்கள், சகத்தின்றன்மையிதுவென்று மனதிலச்சமுற்ற பகீரதனனவன் ஒருநாட்போய் நன்மைபொருந்தியதிரிதுலனென்னு நாமத்தையுடைய சற்குருவினது பாதத்தை வணங்கித் துன்பமிகுந்தபாவத்துக்குப்பயந்து ஏகாந்தமா யிவைகளைச்சொல்லத்தொடங்கினான்—என்பதாம். (9)

## பவத்துன்பநீக்க மியாதென்ற வினவுக்குத் திரிதுலமுனி அஃது நீங்குபொருட் டாத்மஞானமுபதேசித்தல்.

---

பகீரத னுரைப்பானையா பயில்சரை மரணமோக
மகிலமா மச்சஞ்செய்யு மருந்துயர்க் கவதியேது
திகழ்வுற வருள்வாயென்றத் திருதுல னுரைப்பான்மன்ன
நிகழ்வுறு நேயன்றன்னை நிறைவடி வாகநோக்கில்

இ-ள். பகீரதனுரைப்பான் - பகீரதன்சொல்லுவான், ஐயா-முனீஸ்வரா, பயில் - சொல்லப்பட்ட, சரை - மூப்பும், மரணம் - மரிப்பும், மோகம் -மயக்கமுமுதலிய, அகிலமாமஞ்செய்யும் -சமஸ்தமானபயத்தைச் செய்யாநின்ற, அருந்துயர்க்கு - அரியதுன்பத்துக்கு, அவதியேது - முடிவியாது, திகழ்வுற-விளங்கும்படியாக, அருள்வாயென்ன-அனுக்கிரகிப்பாயென்று பகீரதன் கேட்க, திரிதுலனுரைப்பான் - திரிதுலமுனிசொல்லுவார், மன்ன - அரசனே, நிகழ்வுறு - பிரகாசம்பொருந்திய, நேயன்றன்னை - ஞானத்மாவை, நிறைவடிவாகநோக்கில் - பூரணகாரமாகப்பார்க்கில்-எ-று.

எ-து. பகீரதன்சொல்லுவான். முனீஸ்வரா! சொல்லப்பட்ட மூப்பம், மரிப்பும் மயக்கமு முதலிய சமஸ்தானபயத்தைச் செய்யாநின்ற அவரியதுன்பத்துக்குமுடிவியாது? விளங்கும்படியாக அனுக்கிரகிப்பாயென்று பகீரதன் கேட்கத் திரிதுலமுனி சொல்லுவார். அரசனே! பிரகாசம்பொருந்திய ஞானத்மாவைப் பூரணகாரமாகப் பார்க்கில்—என்பதாம். (10)

அன்றுபோந் துன்பமெல்லா மகப்பந்த மனைத்துமாவு
மொன்றலா வையம்போகு முறுகரு மங்கண்மாயு
நன்றதா நேயந்தானு ஞானமே வடிவமாகி
நின்றதற் சுரூபமாகு நிகழ்த்திட விதனைக்கேளாய்.

இ - ள். துன்பமெல்லாம் - துக்கங்களனைத்தும், அன்றுபோம் - அப்பொழுதுநீங்கும், அகப்பந்தமனைத்துமாயும் - இதயத்திலுள்ள பந்தங்களெல்லாங்கெடும், ஒன்றலா - பலவாகிய, ஐயம்போகும் - சந்தேகநீங்கும், உறு கருமங்கண்மாயும் - மிருந்தகருமங்கள்கெடும், நன்றதா - செம்மையாக, நேயந்தானும், அறியத்தக்கதானது, ஞானமேவடிவமாகி - சின்மாத்திரமேஸ்வரூபமாகி, நின்றதற்சுரூபமாகும் - இருந்தபரமாத்ம ஸ்வரூபமாம், நிகழ்த்திட - சொல்ல, இதனைக்கேளாய் - இதைக்கேட்பாய்—எ-று.

எ - து. துக்கங்களனைத்தும் அப்பொழுதுநீங்கும், இதயத்திலுள்ள பந்தங்களெல்லாங்கெடும், பலவாகிய சந்தேகநீங்கும், மிருந்த கருமங்கள்கெடும், செம்மையாக வறியத்தக்கதானது சின்மாத்திரமே ஸ்வரூபமாகியிருந்தபரமாத்ம ஸ்வரூபமாம், சொல்லவிதைக் கேட்பாய்—எ-ம். (11)

எங்கணு முளதுநித்த மெழுதலைத் தமித்தலில்லை
யங்கண்மெய் யறிவுசாந்த மமலமச் சுதங்குணங்க
டங்குத லில்லையீதொன் றுளதெனச் சாற்றலோடும்
பங்கமின் முனியைநோக்கிப் பகீரத னுரைக்கலுற்றான்.

இ - ள். எங்கணுமுளது - எவ்விடத்திலுமுள்ளதான, நித்தம்-நித்தியமானது, எழுதலந்தமித்தலில்லை - உதித்தொடுங்குதலில்லாதது, அங்கண்மெய்யறிவு - அழகியவுண்மைஞானமும், சாந்தம் - உபசாந்தமும், அமலம்-நின்மலமும், அச்சுதம் - கெடாததும், குணங்கடங்குதலில்லை - திரிகுணங்களுந்தங்காததுமாகிய, ஈதொன்றுளதென - இப்படிப்பட்டதொன்றுண்டாயிருக்கிறதென்று, சாற்றலோடும் - சொன்னவுடன், பங்கமில் - வேறுபாடில்லாத, முனியைநோக்கி - திரிதலமுனியைப்பார்த்து, பகீரதனுரைக்கலுற்றான் - பகீரதன் சொல்லத்தொடங்கினான்—எ-று.

எ - து. எவ்விடத்திலு முள்ளதான நித்தியமானதுதித்தொடுங்குதலில்லாதது அழகியவுண்மைஞானமும் உபசாந்தமும் நின்மலமும் கெடாததும் திரிகுணங்களுந்தங்காததுமாகிய இப்படிப்பட்டதொன்றுண்டாயிருக்கிறதென்று சொன்னவுடன் வேறுபாடில்லாத திரிதலமுனியைப் பார்த்துப் பகீரதன் சொல்லத்தொடங்கினான்—எ-ம்.

(இ-ச-க-ம்.) ஆத்மஞானந்த சாக்ஷாத்காரம் வருமாயின் பவத்துன்பநீங்குமென்பதாம். (12)

## தேகமுதலிய விருத்திகணீங்கிச் சித்தாயிருப்பதெங்ஙனமெனில்

ஒழிந்துள வுடலமாதி யொன்றையுங் காணேனாகி
யிழிந்துள தொழில்களெல்லாந் திரமின்றி யேகநின்றான்

மொழிந்துள வறிவேயாகி முட்டற விருப்பதெங்ஙன்
பொழிந்துள கருணையையா புகலெனப் புகலலுற்றான்.

இ-ள். ஒழிந்தன - தனக்குவேறாகின்ற, உடலமாதி - சரீரமுதலான, ஒன்றையுங்காணேனாகி - ஒருவிடயத்தையும் பாராதவனாய், இழிந்தனதொழில்களெல்லாம் - ஈனமானவிபகாரங்களியாவும், திரயின்றியேக - திரமில்லாமற்போக, விண்ணோர்மொழிந்துள - தேவராற்சொல்லப்பட்ட, அறிவேயாகி - ஞானஸ்வரூபமாகி, முட்டறவிருப்பதெங்ஙன் - தடையில்லாமலிருப்பதெப்படி, பொழிந்துள - வருடிகின்ற, கருணையையா - கிருபையுள்ள ஆசிரியரே, புகலென - சொல்லுமென்று பகீரதன்கேட்க, புகலுற்றான் - முனி சொல்லத்தொடங்கினார்—எ-று.

எ—து. தனக்கு வேறாகின்ற சரீரமுதலான ஒருவிடயத்தையும் பாராதவனாய் ஈனமான விபகாரங்களியாவும் திரமில்லாமற்போகத் தேவராற் சொல்லப்பட்ட ஞானஸ்வரூபமாகித் தடையில்லாமலிருப்பதெப்படி வருடிக்கின்ற கிருபையுள்ள ஆசிரியரே! சொல்லுமென்று பகீரதன்கேட்க முனி சொல்லத்தொடங்கினார்—எ-ம்.

## சமாதியினால் ஞானமுதயமாகில் சநநமரண நீங்குமெனல்

---

திரிதல னுரைப்பான்மன்னா சித்தந்தா னிதயவிண்ணில்
விரியஞா னத்தாலேய நிட்டையை மேவும்பின்னர்
பெரியதா மனைத்துமேனிப் பெருந்தகை யாயசிவன்
பரிபவ மாயசன்மம் பயில்வுறா துலகின்மீட்டே.

இ-ள். திரிதலனுரைப்பான் - திரிதலமுனியானவர் சொல்லுவார் மன்னா - அரசனே, சித்தந்தான் - மனமானது, இதயவிண்ணில் - இதயாம்பரத்தில், விரியுஞானத்தால் - வியாபகமானவறிவினால், நேயநிட்டையை மேவும் - ஸ்வரூபநிட்டையைப் பொருந்தும், பின்னர்பெரியதாமனைத்து மேனி - பின்புபெரிதான சகலவடிவங்களுமான, பெருந்தகையாய் சிவன் - மிகவுமேம்பாடான சிவனானது, பரிபவமானசன்மம் - இகழ்ச்சியாகிய சநநத்தை, உலகின்மீட்டு - சகத்திற்றிரும்பவும், பயில்வுறாது - அடையாது—எ-று.

எ-து. திரிதலமுனியானவர்சொல்லுவார், அரசனே! மனமான திதயாம்பரத்தில் வியாபகமான அறிவினால் ஸ்வரூப நிட்டையைப் பொருந்தும். பின்பு பெரிதான சகல வடிவங்களுமானமிகவு மேம்பாடான சிவனானது இகழ்ச்சியாகிய சநநத்தைச் சகத்திற்றிரும்பவும் அடையாது—எ-ம்.

## சமாதிகூடுதற்குச் சங்கத்தியாகம் வேண்டுமெனல்.

இல்லவ ளில்லமாதிப் பற்றற விட்டாநிட்டம்
புல்லிடிற் சமசிற்பாவம் பொருந்துத றனக்குப்பேத
மல்லவா யவற்றவற்றின் றேற்றங்க ளாதலென்று
மல்லதே காந்தஞ்சேர்தன் மானிடத் திரளைநீத்தல்.

இ-ள். இல்லவள் - மனையாள், இல்லமாதியாண-மனைமுதலிய இவற்றில், பற்றறல் - பற்றுநீக்குதலும், இட்டாநிட்டம் - சுகதுக்கங்கள், புல்லிடில் - சார்ந்தால், சமசிற்பாவம் - சமமானஞானபாவனை, பொருந்துதல் - அடைதலும், தனக்குப்பேதமல்லவாய் - தனக்குப்பேத மல்லாதனவாய், என்றும் - எப்போதும், அவற்றவற்றின் றேற்றங்களாதல் - அவையவைகளின் றேற்றங்களாகுதலும், மல்லவேகாந்தஞ்சேர்தல் - வளம்பமுள்ள ஏகாந்தத்தையடைதலும், மானிடத்திரளைநீத்தல் - மானிடக்கூட்டங்களைநீக்குதலும்—எ-று.

எ—து மனையாள் மனைமுதலிய இவற்றில் பற்றுநீக்குதலும் சுகதுக்கங்கள் சார்ந்தால் சமமான ஞானபாவனையடைதலும் தனக்குப் பேதமல்லாதனவாய் எப்போதும் அவையவைகளின் றேற்றங்களாகுதலும் வளப்பமுள்ள ஏகாந்தத்தையடைதலும் மானிடக்கூட்டங்களை நீக்குதலும்—எ-ம். (15)

## ஞானசமாதிக்கிந்த சங்கத்யாகமே மார்க்கமெனல்.

ஆற்றும தத்துவத்தி லலகிலா ஞானநிட்டை
யூற்றமா முண்மைஞானத் துறபொருட் காட்சியிந்தத்
தோற்றமாங் குறிகள்சேர்தன் ஞானமாய்ச் செல்வர்சொல்வர்
வேற்றுள வழிகண்முற்றும் விதவனஞ் ஞானந்தானே.

இ-ள். ஆற்றுமதத்துவத்தில் - ஆத்துமதத்துவத்தில், அலகிலாஞான நிட்டை - நீங்காதஞானநிட்டையும், ஊற்றமாம் - அசைவின்றி நிற்கின்ற, உண்மைஞானத்து - தத்துவஞானத்தில், உறபொருட்காட்சி - உண்டான வபரோட்சானுபவமும், இந்தத்தோற்றமாம் - இப்படிப்பட்ட தோற்றமாகிய, குறிகள்சேர்தல் - அடையாளங்களை யடைவதே, ஞானமாய் - உணர்வாக, செல்வர் - (மோக்ஷ) செல்வத்தையுடைய சத்துக்கள், சொல்வர் - சொல்லுவார்கள், வேற்றுள - (இதற்கு) வேறாயிருக்கின்ற, வழிகண்முற்றும் - மார்க்கங்களியாவும், விதவனஞ்ஞானந்தான் - வேதனைபுள்ளவழியாமையாம்—எ-று.

எ-து. ஆத்மதத்துவத்தில் நீக்காதஞானநிட்டையும் அசைவின்றி நிற்கின்ற தத்துவஞானத்தில் உண்டான அபரோட்சானு

பவமும் இப்படிப்பட்ட தோற்றமாகிய அடையாளங்களை யடைவதே உணர்வாக மோக்ஷசெல்வத்தையுடைய சத்துக்கள் சொல்லுவார்கள், இதற்கு வேறாயிருக்கின்ற மார்க்கங்களியாவும் வேதனையுள்ளவறியாமையாம்—எ—ம். (16)

## தேகோகநீங்கிற் சித்து பிரத்யக்ஷமாமெனல்.

ஏதம தாகநானென் றெண்ணுத லிறந்தபோது
காதலு முனிவுந்நீர்க்குங் களைகணாய்ப் பிறவிநோய்க்கு
மேதகு மருந்தாஞானம் வெளிப்படு மென்றுசொன்ன
சேதன முனிவனு ன திரிதலற் கரசன்செப்பும்.

இ - ள். ஏதமதா - குற்றத்தையுடையதான, ஆகம் - சரீரத்தை, நானென்றெண்ணுதல் - யானென் றுநினைத்தல், இறந்தபோது-நசித்தபோ(தது வே) காதலுமுனிவுந்தீர்க்கும் - இராகத்துவேடத்தை நீக்காநின்ற, களைகணாய - ஆதாரமாக, பிறவிநோய்க்கு - சநநவியாதிக்கு, மேதகுமருந்தாம் - மேன்மை பொருந்திய அவிடதமாகும், ஞானம்வெளிப்படுமென்று - சைதன்னியம் பிரத்தியக்ஷமாகுமென்று, சொன்ன - அநுக்கிரகித்த, சேதனமுனிவனை - ஞானமுனிவனாகிய, திரிதலமுனிக்கு, அரசன்செப்பும் - பகீரதவரசன் சொல்லுவான்—எ-று.

எ - து. குற்றத்தையுடையதான சரீரத்தை யானென்று நினைத்தல் நசித்தபோததுவே இராகத்துவேடத்தை நீக்காநின்ற ஆதாரமாக சநநவியாதிக்கு மேன்மைபொருந்திய அவிடதமாகும். சைதன்னியம் பிரத்தியக்ஷமாகுமென்று அநுக்கிரகித்த ஞானமுனிவனாகிய திரிதலமுனிக்குப் பகீரதவரசன் சொல்லுவான்—எ-ம்.

(இ-கி-க-ம்) இச்சாதனங்களாற் பவமுந் தொழிலும் பற்றற நீங்கி மிச்சமாகிய ஞானம் வெளிப்படு மென்பதாம். (17)

## எங்ஙனந் தேகோக நீங்குமென்ற அதற்குச் சாதனங் கூறல்.

மலைமிசை மரம்போனீளுள் வண்புற விந்தமெய்யி
னிலைபெற நானென்றெண்ண னீக்குவ தெங்ஙனென்னத்
தலைமைசேர் குரவன்சொல்வான் றன்மன வருக்கத்தாலே
தொலைவற போகத்தெண்ணந் துவக்கறத் துடைத்துநீக்கி.

இ - ள். மலைமிசைமரம்போல் - கிரியின்மேலிருக்கின்ற விருட்சத்தைப்போல, நீளுள்வன்புற - நெடுநாளாக வலிமைபொருந்த, இந்த மெய்

யில் - இச்சரீரத்தில், நிலைபெறநானென்றெண்ணம் - திரமாகநானென்றெண்ணுகின்ற நினைப்பை, நீக்குவது - தள்ளுவது, எங்ஙனென்ன - எப்படியென்று பகீரதன்கேட்க, தலைமைசேர்குரவன் - சிரேஷ்டமான ஆசாரியர், சொல்லுவான் - சொல்லுவார், தன்மனவருத்தத்தால் - தனது மனோவருத்தத்தினால், தொலைவறுபோகத்து - நீங்காதபோகத்தில், எண்ணந் துவக்கற - நினைவுதொடராமல், துடைத்துநீக்கி - கெடுத்து—எ-று.

எ - து. கிரியின்மே லிருக்கின்ற விருட்சத்தைப்போல நெடுநாளாக வலிமைபொருந்த இச்சரீரத்திற் றிரமாக நானென்றெண்ணுகின்ற நினைப்பைத் தள்ளுவது எப்படியென்று பகீரதன் கேட்கச் சிரேஷ்டமான ஆசாரியார் சொல்லுவார். தனது மனோவருத்தத்தினால் நீங்காதபோகத்தில் நினைவுதொடராமற் கெடுத்து—எ-ம்.

## அத்துவிதஞான மடைதலைக்கூறல்.

விரிவுறு முண்மைமேவில் வினையகங் காரமாளும்
புரிவற விவற்றையெல்லாம் புந்தியாற் றிரநீக்கித்
துரிசலை வின்றிநின்றா யென்னிற் றெனென்னுந்தோற்றந்
தெரிகிலா ததுவே நீயாந் தெளிந்தநற் பரமமாமே.

இ - ள். விரிவுறும் - வியாபித்திருக்கின்ற உண்மைமேவில் - சற்பாவத்தைப்பொருந்தினால், வினையகங்காரமாளும் - வினையான அகங்காரங் கெடும், புரிவற - ஆசைகெட, இவற்றையெல்லாம் - இவைகளனைத்தையும், புந்தியாற்றிரநீக்கி - அறிவினாற்றீரும்படி கெடுத்து, துரிசலையின்று - துன்பமானசலனமில்லாமல், நின்றாயென்னி - இருப்பாயானால், நானென்னுந் தோற்றம் - யானென்கின்ற தோற்றமானது, தெரிகிலாது - தெரியாமல், அதுவேநீயாம் - பிரமமேகூடஸ்தமான அத்துவிதஸ்வரூபமாம், தெளிந்தநற்பரமமாமே - வேதங்களாற்றுணிந்தபிரமமும் அதுவேயாம்—எ-று.

எ - து. வியாபித்திருக்கின்ற சற்பாவத்தைப் பொருந்தினால் வினையான அகங்காரங்கெடும். ஆசைகெட இவைகளனைத்தையும் அறிவினாற் றீரும்படிகெடுத்துத் துன்பமான சலனமில்லாமலிருப்பாயானால் யானென்கின்ற தோற்றமானது தெரியாமல் பிரமமே கூடஸ்தமான அத்துவிதஸ்வரூபமாம், வேதங்களாற்றுணிந்த பிரமமு மதுவேயாம்—எ-ம்.

இ-உ-க-ம்.) விடயசுகம்விட்டுப் பிரமஞ்சரிசம்பாவனையினி னீ யத்துவிதப் பிரமமாவாயென்பதாம். 19)

## விடயசுகம் விடுதற்குச் சாதனங் கூறல்.

அனைத்துள விசேடநீக்கி யச்சமற் றேடணைக்குட்
டினைத்துணை பற்றற்றின்மை சிக்கெனச் சேர்ந்துசெல்வம்
வினைப்பகைக் கீய்ந்துநானென் பதுவிட்டு மேனிச்செய்கை
தனைத்துறந் தவர்பாலையந் தனையிரந் தெனையும்விட்டு.

இ - ள் அனைத்துள - வெகுவாயிருக்கின்ற, விசேடநீக்கி - (வன்னாச்சிரமபேதமான) விசேடத்தைவிட்டு, அச்சமற்று - பயமில்லாமல், ஏடணைக்குள் - ஈடணாத்திரியத்தில், தினைத்துணைபற்றற்று - தினையளவும் பற்றில்லாமல், இன்மைசிக்கெனச்சேர்ந்து - தரித்திரத்தையுறுதியாகவடைந்து, செல்வம் - செல்வங்களை, வினைப்பகைகீய்ந்து - போர்செய்கின்ற சத்துருக்களுக்குக்கொடுத்து, நானென்பதுவிட்டு - அகம்பாவத்தைநீக்கி, மேனிச்செய்கைதனைத்துறந்து - சரீரத்தினதுதொழிலைவிட்டு, அவர்பால் - அச்சத்துருக்களிடத்தில், ஐயந்தனையிரந்து - பிச்சையைவாங்கி, எனையும்விட்டு - என்னையும்விட்டு—எ - று.

எ - து. வெகுவாயிருக்கின்ற வன்னாச்சிரமபேதமான விசேடத்தைவிட்டுப் பயமில்லாமல் ஈடணாத்திரியத்தில் தினையளவும் பற்றில்லாமல் தரித்திரத்தை யுறுதியாகவடைந்து செல்வங்களைப்போர் செய்கின்ற சத்துருக்களுக்குக்கொடுத்து அகம்பாவத்தை நீக்கிச் சரீரத்தினது தொழிலைவிட்டு அச்சத்துருக்களிடத்தில் பிச்சையை வாங்கி என்னையும்விட்டு—எ - ம். (20)

## இங்ஙனநிற்கில் நீயே பிரமமாவாயென் றருள்செய்தல்.

நிற்பர மாயிவ்வாறு நிற்கின்மே லுக்குமேலாந்
தற்பரநீயேயாதி யென்றவன் சாற்றக்கேட்டு
வெற்படர் தோளானெஞ்சிற் செய்வதாந் தன்மைமேவிப்
பற்பல தன்செய்கைக்கே பகீரத னிற்பதானான்.

இ - ள். நிற்பரமாய் - பாரமில்லாமல், இவ்வாறுநிற்கின் - இப்படிநின்றால், மேலுக்குமேலாந்தற்பரம் - உயர்வுக்குயர்வாகியபிரமம், நீயேயாதியென்று - நீயாகக்கடவாயென்று, அவன்சாற்றக்கேட்டு - அத்திரிமுனியானவர் சொல்லக்கேட்டு, வெற்படர்தோளான் மலையுடன்பொருந்துகின்ற புயத்தையுடைய பகீரதன், நெஞ்சில் - மனதில், செய்வதாந்தன்மைமேவி - செய்வதானகுணத்தைவிரும்பி, பற்பலதன்செய்கைக்கு - நானாவிதமான தனதாசததொழிலில், பகீரதனிற்பதானான் பகீரதவாசனிருப்பதானான்.

எ - து. பாரமில்லாம லிப்படிநின்றால் உயர்வுக்குயர்வாகிய பிரமம் நீயாகக்கடவாயென்று அத்திரிமுனியானவர் சொல்லக்

கேட்டு மலையுடன் பொருந்துகின்ற புயத்தையுடைய பகீரதன் மன செய்வதான குணத்தைவிரும்பி நாநாவிதமான தனதாசத்தொழி யில் பகீரதவாசனிருப்பதானான்—எ-ம்.

(இ-உ-க-ம்.) சர்வசங்கற்பப் பரித்தியாகத்திலூற் பவத்தான்பகீரதன் ஆத்மசுகமுண்டா மென்பதாம். (21)

## செல்வமனைத்துந் துறத்தல்.

சிறிதுநாட் கழிந்தபின்னர் சிறந்ததோர் வேழ்விசெய்து
நெறிவளர் செல்வமுற்று நீசமுமுயர்வுநாடி
வறியரா மறையோர்தெய்வங் கிளைமுதல் வந்தோர்க்கீந்து
பிறிவறு துகிலொன்றன்றிப் பிறிதிலன் மூன்றுநாளில்.

இ - ள். சிறிதுநாட் கழிந்தபின்னர் - சிலகாலம்போனபின்பு, சிறந்ததோர்வேழ்விசெய்து - சிறப்பானவோர் (அக்கினிஷ்டோம) யாகஞ்செய்து, நெறிவளர்செல்வமுற்றும் - நீதியாகவளர்ந்தசம்பத்தெல்லாம், நீசமுமுயர்வுநாடி - பாத்திராபாத்திரம் விசாரித்து, வறியாமறையோர் - தரித்திராணபிராமணர்கள், தெய்வம் - தெய்வங்கள், கிளை - உறவினர்கள், முதல்வந்தோர்க்கு - முதலாகவந்தவர்களுக்கு, ஈந்து - கொடுத்து, பிறிவறுதுகிலொன்றன்றி - தரித்திருக்கும்வஸ்திர மொன்றேயல்லாமல், மூன்றுநாளில் - மூன்றுதினத்தில், பிறிதிலன் - வேறில்லாதவனானான்—எ-று.

எ - து. சிலகாலம் போனபின்பு சிறப்பான வோரக்கினிஷ்டோமயாகஞ் செய்து நீதியாகவளர்ந்த சம்பத்தெல்லாம் பாத்திராபாத்திரம் விசாரித்துத் தரித்திரான பிராமணர்கள் தெய்வங்கள் உறவினர்கள் முதலாக வந்தவர்களுக்குக் கொடுத் தரித்திருக்கும் வஸ்திரமொன்றே யல்லாமல் மூன்றுதினத்தில் வேறில்லாதவனானான்—எ-ம். (22

## துறவியாய்த் தனியே சஞ்சரித்தல்.

யாவரு மிரங்கயாது மினிமையாந் தனதுநாட்டை
மேவரு பகைவர்க்கீந்து வேறு துகிலொன்றேனான்
மேவரு முனியாய்ஞான முனிக்குணஞ் சாந்ததன்ன
தோவறு நாடுநீங்கி யொருவனு யுலாவலுற்றான்.

இ - ள். யாவருமிரங்க - சகலருமகங்கனிவிட்டழ, யாதுமினிமையாம் - சகலமுமினிமையாகவிருந்த, தனதுநாட்டை - தனது தேயத்தை, மேவரும் - அடைதற்கரிய, பகைவர்கீந்து - சத்துருகளுக்கொடுத்து, வேறு

துகிலொன்றுனேன் - தரித்திருக்கின்றவோர் வஸ்திரத்தையுடையவனை பகீரதன், தாவருமுனியாய் - நினைத்தற்கரிய முனிவனாய், ஞானமுனிக்குணஞ்சார்ந்து - ஞானமுனிவர்கள் குணத்தையடைந்து, தன்னது - தன்னுடைய, ஓவறுநாடுநீங்கி - விடுதற்கரியதேயத்தை விட்டு, ஒருவனாய் - தனியனாக, உலாவலுற்றான் - சஞ்சரிக்கத் தொடங்கினான்—எ-று.

எ - து. சகலரும் கண்ணீர்விட்டழச் சகலமுமினிமையாக விருந்த தனது தேயத்தை யடைதற்கரிய சத்துருக்களுக்குக்கொடுத்து தரித்திருக்கின்ற வோர்வஸ்திரத்தை யுடையவனை பகீரதன் நினைத்தற்கரிய முனிவனாய் ஞானமுனிவர்கள் குணத்தையடைந்து தன்னுடைய விடுதற்கரிய தேயத்தைவிட்டு தனியனாக சஞ்சரிக்கத் தொடங்கினான்—எ-ம். (23)

## அகம்பாவநீங்கி ஆத்மஞானமுதயமாய விஸ்ராந்தியடைதல்.

முகத்தினாற் பெயராற்கண்டோ ரறிகிலா மூதூர்தோறு
நகத்துயர் வனக்கடோறு நண்ணினன் றீரனாகி
யகத்திலே டிணைகளெல்லா மவிழ்த்தனன் சிறிதுநாளி
லிகத்துயர் சாந்தியாற்றன் னிடத்திளைப் பாறினானே.

இ - ள். முகத்தினால் - வதனத்தினாலும், பெயரால் - நாமத்தினாலும், கண்டோரறிகிலா - பார்த்தவர்களறியாத, மூதூர்தோறும் - பழையவூருகடோறும், நகத்து - மலைகடோறும், உயர்வனக்கடோறும் - உயர்ந்தகாடுகடோறும், தீரனாகி - தீரனாய், நண்ணினன் - அடைந்தான், அகத்தில் - மனதிலுள்ள, ஏடணைகளெல்லாம் - இச்சைகளனைத்தையும், சிறிதுநாளில் - சிலதினத்தில், அவிழ்த்தனன் - வெளிப்படுத்தினான், இகத்து - இப்பொழுதே, உயர்சாந்தியால் - மேலானசாந்தத்தினால், தன்னிடத்தில் - ஆத்மாவினிடத்தில், இளைப்பாறினான் - விஸ்ராந்தியடைந்தான்—எ-று.

எ-து. வதனத்தினாலும், நாமத்தினாலும். பார்த்தவர்களறியாத பழையவூருகடோறும், மலைகடோறும், உயர்ந்த காடுகடோறும்தீர தீரனயடைந்தான் மனதிலுள்ள இச்சைகளனைத்தையும் சில தினத்தில், வெளிபடுத்தினான். இப்பொழுதே மேலான சாந்தத்தினால் ஆத்மாவினிடத்தில் விஸ்ராந்தியடைந்தான்—எ-ம்.

(இ-கூ-க-ம்.) சர்வசங்கற்பப் பரித்தியாகஞ்செய்த ஆத்ம நிட்டையினாலபரோக்ஷஞானம் பெற்றானென்பதாம். (24

## ஞானத்தாற் றேகாபிமான நீங்கிநிற்றல்.

படிமுழு துழல்வானோர்காற் பகைவர்க்குத் தான்முன்னீய்ந்த
கடிநகர் புக்கானெல்லாக் காரணமும் வென்றோன்சென்று
மடியிலா வமைச்சர்மற்றோர் மனையெலா மையமேற்றான்
முடியுடை யிவனைநோக்கி யிரங்கினார் முன்புகண்டோர்.

இ-ள். படிமுழுதுழல்வான் - பூமியெல்லாஞ்சரித்து, ஓர்கால் - ஒருதினம், பகைவர்க்கு - சத்துருவுக்கு, தான்முன்னீந்த - தான்முன்புகொடுத்த, கடிநகர்புக்கான் - விளக்கமான பட்டணத்திற்புகுந்து, எல்லாக்காரணமும் - சகலகாரணங்களையும், வென்றோன் - சயித்தபகீரதன், மடியிலா வமைச்சர் - அசத்தியமில்லா மந்திரிகள், மற்றோர் - ஏனையோர்கள், மனையெலாஞ்சென்று - வீடுகடோறும்போய், ஐயமேற்றோன் - பிச்சைவாங்கினான், முடியுடையிவனைநோக்கி - கிரீடத்தையுடைய இந்தப்பகீரதவரசனைப் பார்த்து, முன்புகண்டோர் - எதிரேபார்த்தவர்கள், இரங்கினார் - கண்ணீர்விட்டழுதார்கள்.

எ—று. பூமியெல்லாஞ் சஞ்சரித்து ஒரு தினம் சத்துருவுக்குத் தான் முன்புகொடுத்த விளக்கமான பட்டணத்திற்புகுந்து சகல காரணங்களையும் சயித்த பகீரதன் அசத்தியமில்லாத மந்திரிகள் ஏனையோர்கள் வீடுகடோறும் போய்ப்பிச்சை வாங்கினான், கிரீடத்தையுடைய இந்தப் பகீரதவரசனைப் பார்த்து எதிரே பார்த்தவர்கள் கண்ணீர்விட்டழுதார்கள்—எ-ம். (25)

## ஆத்மபோதத்தால் ஆத்மபோக நீங்கிநிற்றல்.



அதிகபூசனைகள்பண்ணி யரசுசெய் தருளுகென்றே
பதிபெறு பகைவன்றானும் பகரவும் பலியேயன்றி
யெதிரொரு திரணமேனு மிச்சையற் றிருந்துசின்னாட்
புதிதிதென் றெவரும்வெம்பப் போயினன் புறத்துந்தானே.

இ-ள். அதிகபூசனைகள்பண்ணி - மிகுந்த ஆராதனைகளைச்செய்து, அரசுசெய்து - அரசாட்சிசெய்து, அருளுகென்று - இரட்சிப்பாயென்று, பதிபெறு - (இவன்) பட்டணத்தைப் பெற்றிருக்கின்ற, பகைவன்றானும் - சத்துருவும், பகரவும் - சொல்லவும், பலியேயன்றி - பிச்சையேயல்லாமல், எதிரொருதிரணமேனும் - வேறொருதுரும்பையாவது, இச்சையற்றிருந்து - விரும்பாமலிருந்து, சின்னாள் - சிறிதுநாள், புதிதிதென்று - அதிசயமென்று, எவரும்வெம்ப - யாவரும்வாட்டத்தையடைய, தானே - சயமாகவே, புறத்தும் - புறநாட்டிலும், போயினன் - சென்றனன்—எ-று.

எ-து. மிகுந்த ஆராதனைகளைச் செய்து அரசாட்சிசெய்து இரட்சிப்பாயென்று இவன் பட்டணத்தைப் பெற்றிருக்கின்ற சத்துருவும் சொல்லவும் பிச்சையே யல்லாமல் வேறொரு துரும்பையாவது விரும்பாமலிருந்து சிறிதுநாள் ஏதகிசயமென்று யாவரும் வாட்டத்தையடைய சுயமாகவே புறநாட்டிலும் சென்றனன்—எ-ம். )

(இ-உ-க-ம்.) சமாதியனுபவங் கைகூடின தென்பதாம். 126

## சமாதிஞான நீங்கிச் சகசஞான முதிக்கும்பொருட்டு ஆசிரிய ரெதிரிட்டிருவரும் பிரமாநந்த லீலையாகச் சஞ்சரித்தல்.

சாந்தியே வடிவாய்ப்புந்தி தளர்வின்றி யின்பமெய்தி
காந்திசேர் தன்சொரூபக் கண்ணிலே விநோதமேவிப்
போந்திசை யதனில்வந்த குருவினைப் புகழ்ந்துசேர்ந்து
தாந்திரி வுற்றாரன்னோர் சைலந்தில் வனத்திநாட்டில்.

இ-ள். சாந்தியேவடிவாய் சாந்தமேஸ்வரூபமாகி, புந்திதளர்வின்றி-மனதுதளர்ச்சியில்லாமல், இன்பமெய்தி - ஆநந்தமடைந்து, காந்திசேர்-ப்ரகாசம்பொருந்திய, தன்சொரூபக்கண்ணில்-தனதாத்மதிருஷ்டியில், விநோதமேவி - விளையாட்டையடைந்து, போந்திசையதனில் - செல்லப்பட்ட திக்கில், வந்தகுருவினை - வாப்பட்ட திரிதுலராகிய சற்குருவை, புகழ்ந்து சேர்ந்து-தோத்திரஞ்செய்துகூடி, சைலத்தில் - மலைகளிலும், வனத்தில்-கானகங்களிலும், நாட்டில் - நாடுகளிலும், அன்னோர்திரிவுற்றார் - அவர்கள் சஞ்சரித்தார்கள்—எ-று.

எ-து. சாந்தமே ஸ்வரூபமாகி மனது தளர்ச்சியில்லாமல் ஆனந்தமடைந்து பிரகாசம்பொருந்திய தனதாத்ம திருஷ்டியில் விளையாட்டையடைந்து செல்லப்பட்ட திக்கில் வாப்பட்ட திரிதுலராகிய சற்குருவைத் தோத்திரஞ்செய்துகூடி மலைகளிலும், கானகங்களிலும், நாடுகளிலும் அவர்கள்சஞ்சரித்தார்கள்—எ-ம் (27)

## சகசஞான முதயமாதல்.

குருவுமா ணக்கன்றானுங் குறைவறு சமத்தைமேவி
யிருவரு நிலைமையொப்போர் விநோதத்தா லாக்கைதாங்கிக்
கருவுட லிருந்தென்போமென் சாவித்த படியுலாவி
யொருமையி லுள்ளவாற்றா லுறைகென வுறைக்கவுன்னி.

இ-ள். குருவும் - ஆசாரியரும், மாணாக்கன்றானும் - சீடனும், குறைவறு - பூரணமான, சமத்வதமேவி - சமத்துவத்தையடைந்து, இருவரும் - இரண்டுபேரும், நிலைமையொப்போர் - குணத்திற் சமமானவர்களாய், விநோதத்தால் - விளையாட்டினால், ஆக்கைதாங்கி - சரீரத்தைச் சுமந்து, கருவுடலிருந்தென் - கருப்பத்திலுண்டாகிய சரீரமிருந்தென்ன, போயென் - போயென்ன, காமித்தபடியுலாவி - இச்சித்தபடி சஞ்சரித்து, ஒருமையில் - ஒற்றுமையாக உள்ளவாக்கால் உள்ளபடி, உறைதென - இருக்கக்கடவதென்று, உறைக்கவுன்னி - நன்றாயாலோசித்து—எ-று,

எ-து. ஆசாரியரும் சீடனும் பூரணமான சமத்துவத்தை யடைந்து இரண்டுபேரும் குணத்திற் சமமானவர்களாய் விளையாட்டினால் சரீரத்தைச் சுமந்து கருப்பத்திலுண்டாகிய சரீரமிருந்தென்னபோயென்ன இச்சித்தபடி சஞ்சரித்து ஒற்றுமையாக உள்ளபடி இருக்கக்கடவதென்று நன்றாயாலோசித்து—எ-ம் (28)

## தமது சிதாநந்த போகத்தாற் றேஹபோகமுந் திரணமாக நீங்குதல்.

துன்புறா வாநந்தத்தா சுகத்தினு மத்திமத்து
மின்புறார் தனங்கண்மாத ரிசைநிதி யிருநாற்செல்வ
முன்புற விரும்பிச்சித்தர் தந்தவை மோகமின்றி
மென்புலொத் தொழிந்தார்வேறோர் மேதகு நாட்டிற்சென்றார்.

இ-ள். துன்புறா - துக்கமடையாத, ஆநந்தத்து - சுகத்திலும், அசுகத்தும் - துக்கத்திலும், மத்திமத்தும் - நடுவிலும், இன்புறார் - சுகமடையாதவர்களாய், தனங்கள் - திரவியங்களும், மாதர் - ஸ்திரீகளும், இசைநிதி - இசைந்த செல்வங்களும், இருநாற்செல்வம் - அணிமாமுதலிய அஷ்டவயிஸ்வரியங்களும், முன்புறவிரும்பி - முன்பாகவிருப்பமுற்று, சித்தர்தந்தவை - சித்தர்கள் கொடுத்தவைகளை, மோகமின்றி - ஆசையில்லாமல், மென்புலொத்து - மிருதுவான திரணத்துக்கொப்பாகி, ஒழிந்தார் - விட்டுநீங்கி, வேறோர் - மற்றொரு, மேதகுநாட்டில் - மேன்மையான தேயத்தில், சென்றார் - போயினார்கள்—எ-று.

எ-து துக்கமடையாத சுகத்திலும், துக்கத்திலும், நடுவிலும். சுகமடையாதவர்களாய்த் திரவியக்களும், ஸ்திரீகளும். இசைந்த செல்வங்களும். அணிமாமுதலிய அஷ்டவயிஸ்வரியங்களும் முன்பாகவிருப்பமுற்று சித்தர்கள் கொடுத்தவைகளை ஆசையில்லாமல் மிருதுவான திரணத்துக்கொப்பாகி விட்டுநீங்கி மற்றொரு மேன்மையான திரணத்துக்கொப்பாகி விட்டுநீங்கி மற்றொரு மேன்மையான தேயத்தில் போயினார்கள்—எ-ம்.

(இ-௩-௧-ம்) சகசயோகி கைகூடுதல்தாம். (29)

ஸ்வரூப சாக்ஷாத்காரமாய் விளங்குதற் றெரிவிக்கும் பொருட்டு அரசாங்கு செய்யும்படி பிராரத்த கன்மங் கூட்டிவித்தல்.

மைந்தனில் லாதவந்த மாநகர் மன்னாவி
நந்தலு மமைச்சரெல்லா நலங்கொண்மன் னவனென்று
சிந்தனை செய்யுங்காலைச் சிறுபலி முனிவனான
சுந்தர மன்னைநோக்கிச் சுடர்முடி வேந்தனுக்க.

இ - ள். மைந்தனில்லாத - புத்திரனில்லாத, அந்தமாநகர்மன்னன் - அந்தப் பெரிய பட்டணத்தரசன், ஆவிநந்தலும் - மரித்தமாத்திரத்தில், அமைச்சரெல்லாம் - மந்திரிகளனைவரும், நலங்கொள் - நன்மையையுடைய, மன்னவனென்று - அரசனெவனென்று, சிந்தனை செய்யுங்காலை - யோசிக்குங்காலத்தில், சிறுபலி - அற்பமானபிச்சையையுடைய, முனிவனான - முனிவனாகிய, சுந்தரமன்னனை நோக்கி - அழகையுடைய பகீரத அரசனைப்பார்த்து, சுடர்முடி - பிரகாசிக்கின்ற கிரீடத்தையுடைய, வேந்தனுக்க - அரசனாகச்செய்ய.

எ - து. புத்திரனில்லாத அந்தப் பெரிய பட்டணத்தரசன் மரித்தமாத்திரத்தில் மந்திரிகளனைவரும் நன்மையையுடைய அரசனெவனென்று யோசிக்குங்காலத்தில் அற்பமானபிச்சையையுடைய முனிவனாகிய அழகையுடைய பகீரதவரசனைப்பார்த்து பிரகாசிக்கின்ற கிரீடத்தையுடைய அரசனாகச்செய்ய—எ-ம். (3௦)

முன்னாட்டோர் விருப்பப்படி யதற்குமரசனாதல்.

பகீரத னரசனாகிப் பலபெருஞ் சேனைசூழ
மகிதலம் புரத்தல்கேட்டு வந்தனர் பண்டைநாட்டோர்
விகிதமாய் நீமுன்வைத்த வெம்முடை வேந்தன்வீந்தா
னகிலருங் களைகண்காணே மரசனீ யாதல்வேண்டும்.

இ - ள். பகீரதன் - பகீரதனானவன், அரசனாகி - இராசாவாகி, பலபெருஞ்சேனைசூழ - அநேகம் பெரிதானபடைகள் சூழும்படியாக, மகிதலம்புரத்தல் - பூமிபாலனஞ்செய்வதை, பண்டைநாட்டோர் - பழையபட்டணத்தோராகிய (மந்திரிமுதலியவர்கள்), கேட்டுவந்தனர் கேட்டுவந்து, விகிதமாய் - இதமாக, நீமுன்வைத்த - நீர்முனபுவைத்த, எம்முடைவேந்தன் - எங்களுடையவரசன், வீந்தான் - இறந்தான், அகிலரும் - நாங்களனைவரும், களைகண்காணேம் - ஆதரவுகாணமிலேம், நீயரசனாதல்வேண்டும் - நீரேயிராசாவாகவேண்டும்—எ - று.

எ - து. பகீரதனானவன் இராசாவாகி அநேகம் பெரிதானபடைகள் சூழும்படியாகப் பூமிபாலனஞ் செய்வதை பழையபட்டணத்

தோராகிய மந்திரிமுதலியவர்கள் கேட்டுவந்து கிரமமாக நீர் முன்புவைத்த எங்களுடைய அரசனிறந்தான், நாங்களனைவரும் ஆதரவு காண்கிலேம், நீரே இராசாவாக வேண்டும்—எ-ம். (31)

## உபசாந்தனுயிருந் தரசுசெய்தல்.

விருப்பறத் தானேவந்த வெறுக்கையை வெறுக்கைநன்றன்
றொருப்படல் வேண்டுமென்றே யுள்ளன்பால் வேண்டக்கண்டு
திருப்பொலி மார்பன்சென்று திண்புவி சேரவாண்டா
னிருப்புழி மௌனஞ்சாந்தி சமமெய்தி யிராகமின்றி.

இ - ள். விருப்பறத்தானேவந்த - ஆசியாமல் வலியவந்த, வெறுக்கையை - செல்வத்தை, வெறுக்கைநன்றன்று - வெறுக்குதனல்லதன்று, ஒருப்படல்வேண்டுமென்று - சம்மதிக்கவேண்டுமென்று நினைத்து, உள்ளன்பால் - மனக்களிப்பினால், வேண்டக்கண்டு - பிரார்த்திக்கப்பார்த்து, திருப்பொலி மார்பன்சென்று - அழகுவிளங்காநின்ற மார்பையுடைய பகீரதவரசன்போய், திண்புவிசேரவாண்டான் - திடமான பூமிமுழுவதையுமாண்டு, இருப்புழி - இருக்கும்போது, மௌனம் மகாமௌனத்தையும், சாந்தி - உபசாந்தத்தையும், சமமெய்தி - சமத்துவத்தையுமடைந்து, இராகமின்றி - ஆசையில்லாமல்.

எ - து. ஆசியாமல் வலியவந்த செல்வத்தை வெறுக்குதனல்லதன்று, சம்மதிக்கவேண்டுமென்றுநினைத்து மனக்களிப்பினால் பிரார்த்திக்கப்பார்த்து அழகுவிளங்காநின்ற மார்பையுடைய பகீரதவரசன் போய்த் திடமான பூமிமுழுவதையுமாண்டு யிருக்கும்போது மகாமௌனத்தையும் உபசாந்தத்தையும் சமத்துவத்தையு மடைந்து ஆசையில்லாமல்—எ-ம்.

(இ-ங-க-ம்) துறந்த மனவல்லபத்தாற் பிரம சாக்ஷாத்கார சுகமாய் விளங்கினு ரென்பதாம். (32)

## இரண்டாம்விஞவுக் குத்தரங்கூறல்.

மச்சர மின்றிவந்த தொழிலொன்றின் வழியினின்று
மெச்சியவியப்பிலாதோன் மிருந்தபல் லாண்டுநேற்று
துச்சமி றவத்தாற்கங்கை கொணர்ந்துதொல் பிதாக்களுய்ய
விச்சக மிசையேகீர்த்தி யிறநிறுத் தினனே.

இ - ள். மச்சரமின்றி-மாச்சரியமில்லாமல், வந்ததொழில் - வந்தவிபகாரங்களின், ஒன்றின்வழியினின்று-ஒருமார்க்கத்திலிருந்து, மெச்சிய- துதிக்கப்

பட்ட, வியப்பிலாதோன் - அதிசயமில்லாதவனும், தொல்பிதாக்களுய்ய - பாட்டன்மார்கள் கரையேறு, மிகுந்த பல்லாண்டுநோற்று - மிகுந்த அநேகவருடந்தவஞ்செய்து, துக்கமிறவத்தால் - நிந்தனையற்ற தபசினால், கங்கைகொணர்ந்து - தேவநதியைக்கொண்டுவந்து, இச்சகமிசை - இந்தப் பூமியின்மேல், கீர்த்தியீற்ற - புகழழியாமல், நிறுத்தினன் - ஸ்தாபித்தான்.

எ - து. மாச்சரியமில்லாமல் வந்தவிபகாரங்களின் ஒருமார்க்கத்திலிருந்து அதிக்கப்பட்ட அதிசயமில்லாதவனும் பாட்டன்மார்கள் கரையேற மிகுந்த அநேகவருடந் தவஞ்செய்து நிந்தனையற்ற தபசினால் தேவநதியைக்கொண்டுவந்து இந்தப்பூமியின்மேல் புகழழியாமல் ஸ்தாபித்தான்—எ - ம்.

(இ-ம்.) பிதாமகன்முதலிய சீவர்களுய்யும்பொருட்டுத் தபோமகா வல்லமையாற் கங்கையைக் கொண்டுவந்தா னென்பதாம். (33)

பகீரதன்கதை முற்றிற்று.

ஆக கதை ௩௬-க்கு கவிதை ௩௯0௪.

---

# சிகித்துவசன் கதை.

## அவதாரிகை.

மூற்கதையின் முன்புறப்பற்றையு மதனுலகப் பற்றையுநீக்கிப்
பின்றனது முயற்சியினாற் பிரமசாக்ஷாத்கார மடைந்ததைத்
தெரிவித்திவ்வனுபவம் பிரதிபந்த சேடத்தினாற் றுண
டைவதற் கரியதானாலு மநேக உபாயங்களாற்
போதிக்கு மாசாரியர் வல்லமையினாலுண்
டாமென்பதை யறிவிக்கு நிமித்தஞ்
சிகித்துவசன் கதையை நிரூபிக்
கிறார்.

**மனதைக்கரைத்துச் சிகித்துவசனைப்போல**
**உணர்விற் சுகிப்பாயெனல்.**

வகிர்த்துதிமிர் மனமென்னு மாப்பறவை தனைமுன்ன மாட்டியோட்டிச் சிகித்துவசன் றனைப்போலச் சாந்தனு யுன்னிடத்தே செறிவா யென்னை, சுகித்துணர்வி னின்றுளவச்சிகித்துவச னானையாசொல்வாயெல்லாஞ், சுகித்துணர்வு மேன்மேலு நிறைவதற்கென்றவன் கேட்பத் தவனுஞ் சொல்வான்.

இ - ள். வகிர்த்துநிமிர்மனமென்னும் - பகுத்தெழுவதானமனமென்கின்ற, மாப்பறவைதனை - பெரியபட்சியை, முன்னமாற்றியோட்டி - முன்னீக்கிதுரத்தி, சிகித்துவசன்றனைப்போல - சிகித்துவராசனைப்போல, சாந்தனாய் - உபசாந்தமுடையவனாய், உன்னிடத்து-உனதாத்மஸ்வரூபத்தில், செறிவையென்ன - மூழ்குவாயென்று (வசிட்டமுனி) சொல்ல, சுகித்துணர்வினின்றுள - ஆநந்தானுபவபோதமாயிருந்துள்ள, அச்சிகித்துவசனார் - அந்தச்சிகித்துவசனானவன்யார், ஐயர் - ஆசாரியரே, எல்லாஞ்சகித்துணர்வு - அனைத்தையுந்தாங்குகின்ற ஞானமானதுமே மேன்மேலும் - மேலுமேலும், நிறைந்தற்கு-பூரணமாவதற்கு, சொல்வாயென்று - அநுக்கிரகிப்பாயென்று, அவன் கேட்ப-அவ்விராமன்கேட்க, தவனுஞ்சொல்லான் - தவத்தையுடைய வசிட்டமுனியுஞ் சொல்லத்தொடங்கினார்—எ-று.

எ - து. பகுத்தெழுவதான மனமென்கின்ற பெரியபட்சியைமுன்னீக்கித் துரத்திச் சிகித்து அரசனைப்போல உபசாந்தமுடையவனாய் உனதாத்மஸ்வரூபத்தில் மூழ்குவாயென்று வசிட்டமுனிசொல்ல, ஆநந்தானுபவபோதமாயிருந்துள்ள அந்தச் சிகித்துவசனானவன் யார்? ஆசாரியரே! அனைத்தையுந் தாங்குகின்ற ஞானமானதுமேலுமேலும் பூரணமாவதற்கு அநுக்கிரகிப்பாயென்று அவ்விராமன் கேட்கத் தவத்தையுடைய வசிட்டமுனியுஞ் சொல்லத்தொடங்கினார்—எ-ம். (1)

சிகித்துவச விலக்கணங்கூறல்.

---

துவாபரமா முகத்துமுத லுண்டானோ னெழுமனுக் கருஞ்சமெல்லைத், திவாகரனேர் மாளவதே சத்திறைவன் சிகித்துவசன்செங்கோல்வேந்த னவாமுதறீக்குணமில்லா னுதாரமுதனற்குணங்க ளனைத்து முள்ளோன், விவாதமறு மோனத்தோன் சமதமமாங் குண நிறைந்தோன் மிகவுநல்லோன்.

இ - ள். துவாபரமாமுகத்து - துவாபரயுகத்தில், முதலுண்டானோன் - முதலிற் பிறந்தவன், எழுமனுக் கருஞ்சமெல்லை - எழுமனுக்களிறந்தகாலத்தில், திவாகரனேர் - சூரியனுக்கொப்பான, மாளவதேசத்திறைவன் - மாளவதேசத்தரசன், சிகித்துவசன் - சிகித்துவசனென்னு நாமத்தை யுடையவன், செங்கோல்வேந்தன் - நீதியையுடையவரசன், அவாமுதல் - ஆசைமுதலாகிய, தீக்குணமில்லோன் - துர்க்குணமில்லாதவன், உதாரமுதல் - கொடைமுதலிய, நற்குணங்களனைத்துமுள்ளோன் - சற்குணங்க ளியாவுமுள்ளவன், விவாதமறு - சொற்கலமற்ற, மோனத்தோன் - மௌனத்தை யுடையவன், சமதம

மாம் - சமமுந்தமமுமாகிய, குணநிறைந்தோன் - குணங்கணிறைந்தவன், மிகவுநல்லோன் - மிகவுநன்மையையுடையவன் — எ-று.

எ-து. துவாபரயுகத்தில் முதலிற் பிறந்தவன், ஏழுமனுக்களிறந்த காலத்தில் சூரியனுக்கொப்பான மாளவதேயத்துக்கரசன், சிகித்துவசனென்னு நாமத்தையுடையவன். நீதியையுடையவரசன் ஆசை முதலாகிய துற்குணமில்லாதவன், கொடைமுதலிய சற்குணங்களி யாவுமுள்ளவன், சொற்கலகமற்ற மௌனத்தையுடையவன். சமமுந்தமமுமாகிய குணங்கணிறைந்தவன். மிகவு நன்மையையுடையவன்-

## மனைவியோடுஞ் சுகித்திருத்தல்.

—( .·. )—

சூடாலை யெனுங்கன்னிற் சுராட்டிராமன் னவனளித்ததோகை போல்வாள், வீடாத நற்குணத்தாற் றனையொப்பாளவளை யவன்விவாகஞ் செய்தான். வாடாதநினைவொன்றிப் பிரிவின்றிச்செய்தொழில்கண் மாறு பாடற், றீடான பலகலைக்கும் வல்லவரா யிருவருமொத் தினிதுவாழ்ந்தார்.

இ - ள். சுராட்டிரமன்னவன் - சுராட்டிரதேயத்தரசன், அளித்த - பெற்ற, சூடாலையெனுங்கன்னி - சூடாலையெனுந்தவப்பெண், தோகைபோல்வாள் - மயிலுக்கொப்பானவள் வீடாதநற்குணத்தால் - கெடாத சற்குணத்தினால், தனையொப்பாள் - தனக்குத்தானே சமானமானவள், அவளை - அச்சூடாலையை, அவன் - அச்சிகித்துவசன், விவாகஞ்செய்தான் - கலியாணஞ்செய்தான், வாடாதநினைவொன்றி - தளர்வற்றமனமொத்து, பிரிவின்றி - பிரிவில்லாமல், செய்தொழில்கள் - செய்யப்பட்ட கிரியைகள், மாறுபாடற்று - வேறுபாடில்லாமல், ஈடானபலகலைக்கும் - பெருமையுள்ள சகலகலை ஞானங்களுக்கும், வல்லவராய் - வல்லமையுள்ளவர்களாய் இருவருமொத்து - இருவர்மனமுமொன்றாய், இனிதுவாழ்ந்தார் - இனிமையுடன்வாழ்ந்தார்கள் — எ-று.

எ -து. சுராட்டிரதேயத்தரசன் பெற்ற சூடாலையென்னுந் தவப்பெண் மயிலுக்கொப்பானவள். கெடாத சற்குணத்தினால் தனக்குத்தானே சமானமானவள், அச்சூடாலையை அச்சிகித்துவசன் கலியாணஞ்செய்தான். தளர்வற்ற மனமொத்து பிரிவில்லாமல் செய்யப்பட்ட கிரியைகள் வேறுபாடில்லாமல் பெருமையுள்ள சகல கலைஞானங்களுக்கும் வல்லமையுள்ளவர்களாய் இருவர்மனமுமொன்றாய் இனிமையுடன்வாழ்ந்தார்கள் — எ-ம். (3)

## சரைவருமென்றதற்கஞ்சுதல்.

ஈருடலுக் கோருயிர்போ லிருவருஞ்சேர்ந் திளமைநல மினிது துய்த்தார், சீருடைய வருடங்க ளிவ்வகையே யெல்லையறச் செல்லலோடு, மோருறுதி யிலாவிளமை யுடைந்தகுடநீர்போல வொழுகிப் போக, நீருறுசெந் தாமரைமேற் பனியிடிபோற் சரைவந்து நேர்ந்த தன்றே.

இ - ள். ஈருடலுக்கு - இரண்டுசரீரத்துக்கும், ஒருயிர்போல் - ஒரு பிராணனைப்போல, இருவருஞ்சேர்ந்து - இரண்டுபேருங்கூடி, இளமை நலம் - யவ்வனசுகத்தை, இனிது துய்த்தார் - இன்பமாகப் புசித்தார்கள், சீருடையவருடங்கள் - சிறப்பையுடைய வருடங்களானவை, இவ்வகையே - இப்படியே, எல்லையறச் செல்லலோடும் - அளவின்றி நீங்கினவளவில், ஒருறுதியிலாவிளமை - ஒரு நிச்சயமில்லாத யவ்வனமானது, உடைந்தகுட நீர்போல - உடைப்பட்ட கடசலத்தைப்போல, ஒழுகிப்போக - ஓடிப் போக, நீருறுசெந் தாமரைமேல் - புனலினுள்ள கோகனகத்தின்மேல், பனியிடிப்போல் - பனிக்கட்டியைப்போல, சரைவந்துநேர்ந்தது - மூப்புவந் தெதிரிடும்—எ - று.

எ - து. இரண்டு சரீரத்துக்கும் ஒரு பிராணனைப்போல இரண்டுபேருங்கூடி யவ்வனசுக்த்தை யின்பமாகப்புசித்தார்கள். சிறப்பையுடைய வருடங்களானவை இப்படியே அளவின்றி நீங்கினவளவில் ஒரு நிச்சயமுமில்லாத யவ்வனமானது உடைப்பட்ட கடசலத்தைப்போல ஓடிப்போகப் புனலினுள்ள கோகனகத்தின்மேல்பனிக் கட்டியைப்போல மூப்புவந்தெதிரிடும்—எ-ம். (4)

## விடயசுகானுபவ நீங்குமெனல்.

காதலத்து நீர்துபோ னிற்றலும்வா ணண்மெல்லக் கழன்று செல்லத், திரண்மழைநாட் சுரைக்கொடிபோற் றிரமலொன்றுமே தீர்க்கமாக, விரவுசரற் காலத்தி லாற்றுநீர் போலறுகு விரைவி லோடப், புரமுறுநற் சுகங்களொன்றுங் கில்லிநிக்க சாங்கோ போற் போயிற் றன்றே

இ - ள். காதலத்து நீர்துபோல - கண்ணாடிச்சலத்தைப்போல, நீற லும்வாணாள் - நாட்டாமையானது, மெல்லக்கழன்றுசெல்ல - மிருதுவாக கழிந்துபோக, திரண்மழைநாள் - மிகுந்த வருஷிக்குங்காலத்திலுள்ள சுரைக்கொடிபோல் - சுரைக்கொடியைப்போல, திரமலொன்றுமே - நீங்

காத வோராசையே, தீர்க்கமாக - விசாலமாக, விரவுசரற்காலத்தில்-பொருந்திய சரற்காலத்தில், ஆற்றுநீர்ப்போல் - நதியின் சலத்தைப்போல, அழகு விரைவிலோட - எழிலானது சீக்கிரத்திற்போக, புரமுறு - சரீரத்திற்பொருந்திய, நற்சுகங்களெலாம் - நல்லவின்பங்களனைத்தும், சிலைவிடுத்த-வில்லை விட்டு நீங்கின, சரங்களைப்போல் - அம்புகளைப்போல, போயிற்று - செல்லும்—எ - று.

எ - து. உள்ளங்கை சலத்தைப்போல நாடோறுமாயுளானது மிருதுவாகக் கழிந்துபோக மிகுந்து வருஷிக்கும் காலத்திலுள்ள சுரைக்கொடியைப்போல நீக்காத வோராசையே விசாலமாகப்பொருந்திய சரற்காலத்தில், நதியின் சலத்தைப்போல எழிலானது சீக்கிரத்திற்போக சரீரத்திற்பொருந்திய நல்லின்பங்களனைத்தும் வில்லை விட்டு நீங்கின அம்புகளைப்போலச்செல்லும்—எ-ம்.

(இ-நி-க-ம்.) சரைவரின் சுகானுபவங்களனைத்தும் நீங்கி மரணமுண்டாமென விதி விராசை தோற்றிற்றென்பதாம் - மேல் (எ0) கவிதையில் "சரையாலே யாக்கைகைநத்தாற் பசத்துமாலறவனமே போகலா மிளமைகாட்பான்மையன்று" மென்றதனுலும், (எக) கவியில் - "படாமுலை நீன்றிவையுடன் வருதற்காகாவென்றதனுலு" மிங்ஙனமிறந்தகாலத்தை யெதிர்காலமாகக் கூறினதெனக்கொள்க (5)

## நீக்கியசுகத்தைக்கொடுக்கின்ற ஞானநூலே சநநமரணத்தை நீக்குமென் றுலோசித்தல்.

கதலியுறு கருப்போல நிராசையைத்தந் ததுபயனற்ற காரியுந்தா, னிதமுறவாங் கவர்நினைவா ரெத்தையடைந்துள்ளமீண்டெங்கும்விழா ததுமிகநன் றவ்வகையா னதுகிடையா திம்மோகத் தழுந்துவார்க்குத், திதமுறவத் தியாத்தும தத்துவநூலே பிறவிநோய் தீர்ப்பதன்றே.

இ - ள். கதலியுறுகருப்போல் - வாழையானதடைந்த கருப்பத்தைப்போல, பயனறற் - பிரயோசனமற்ற, காரியந்தான் - தொழிலானது, நிராசையைத்தந்தது - விராகத்தையடைந்தது, இதமுற - உரிமையாக, ஆங்கவர் நினைவார் - அவ்விடத்தவர்கள் சிந்திப்பார்கள், எத்தையடைந்து - எதைப்பெற்றி, உள்ளம் - மனமானது, மீண்டெங்குமவீழாது - திரும்பயாதிலுஞ்செல்லாததோ, அதுமிகநன்று அது மிகவுநன்மையாம், இம்மோகத்தழுந்துவார்க்கு - இச்சமுசாரத்தின் முழுதுபவர்களுக்கு, அவ்வகையானது கிடையாது - அப்பகுப்பநூலையாம், திதமுற - திரமாக, அத்தியாத்தும தத்துவ

நூலே - அத்தியாத்தும ஞானசாஸ்திரமே, பிரவிநோய்தீர்ப்பது - சநந வியா திமைநீக்கும் (மவுடதமாம்)—எ - ற.

எ - து. வாழையானதடைந்த கருப்பத்தைப்போல பிரயோ சனமற்றத் தொழிலானது விராகத்தையடைந்தது, உரிமையாகவவ் விடத்தவர்கள் சிந்திப்பார்கள். எதைப்பெற்று மனமானது திரும்ப யாதிலுஞ் செல்லாததோ ! அது மிகவு நன்மையாம். இச்சமுசாரத் தில் முழுகுபவர்களுக்கு அப்பகுப்பருமையாம். கிரமாக அத்தியா த்தும ஞானசாஸ்திரமே சநநவியாதியை நீக்கும் அவுடதமாம்—எ-ம்.

## சாதுசங்கத்துடன்கூடி ஆத்மாவிசாரஞ்செய்தல்.

ஆற்றுமதத் துவஞான மொன்றுலு மலதுபிறப் பறுதென்றெ ண்ணி, யூற்றமுறுதற்பாரா யதின்மனமா யதிற்சேர்ந்த வுயிராய்நித் தஞ், சாற்றுமதி னிட்டையாா யதற்கடுத தோர்சார்வாய்ச் சான் றோர்கள்பூசைக், கேற்றசெய லாற்சிறிது மிடைவிடாப் பரிசயமா யிரண்டுபேரும்.

இ - ள். இரண்டுபேரும் - இருவர்களும், ஆற்றுமதத்துவஞானம்-ஆத் மதத்துவஞானமாகிய, ஒன்றலுமலது - ஒன்றினுலேயல்லாமல், பிறப்பறு தென்றெண்ணி - (மற்றொன்றிற்) சநநநீங்காதென்று சிந்தித்து, ஊற்றமுறு தற்பாராய் - நிலைபெற்ற ஆத்மஞானதியராயும், அதின்மனமாய் - அதின் மனதுடையவர்களாயும், அதிற்சேர்ந்தவுயிராய் - அதையடைந்த பிராணனை யுடையவராயும், நித்தம் - எப்போதும், சாற்றும் - சொல்லப்பட்ட, அத னிட்டையராய் - அதனிட்டையை யுடையவராயும், அதற்கடுத்தோர் சா ர்வாய் - அதற்கடுத்த சத்துக்கள் சார்பையுடையவர்யும், சான்றோர்கள் - அறிஞர்கள், பூசைக்கேற்றசெயலால் - ஆராதனைக்கடுத்த செய்கையினுல், சிறிது மிடைவிடா சற்றுமிடைவிடாமல், பரிசயமாய் - பழக்கமுள்ளவர்களா யும்—எ-ற.

எ - து. இருவர்களும் ஆத்துமதத்துவ ஞானமாகிய ஒன்றி னுலேயல்லாமல் மற்றொன்றிற் சநநநீங்காதென்று சிந்தித்து நிலைபெ ற்ற ஆத்மஞானதியராயும், அதின்மனதுடையவர்களாயும், அதை யடைந்த பிராணனையுடையவராயும், எப்போதுஞ் சொல்லப்பட்ட அதனிட்டையை யுடையவராயும், அதற்கடுத்த சத்துக்கள் சார் பையுடையவராயும், அறிஞர்களாராதனைக்கடுத்த செய்கையினுற் சற்றுமிடைவிடாமல் பழக்கமுள்ளவர்களாயும்—எ-ம். (7)

## சூடாலைதனித்துச் சூட்சுமவிசாரஞ் செய்தல்.

தம்மிற்று முணர்ந்துளரா யதற்கடுத்த வாசாரந் தரித்து நீஞெள், விம்முற்ற மகிட்சியராய் விளங்கினர் பின்பந்த விவேகமங்கை, யம்மைக்கா நல்லபத வொழுங்கினாற் பேரறிஞ-ரருளிச்செய்த, செம்மைச்சாத் திரப்பொருள்க டரிக்கலாமளவறிந்து திருந்தக்கேட்டு.

இ-ள். தம்மிற்று முணர்ந்துளராய்-தமக்குட்டாங்க ளறிந்தவர்களாயும், அதற்கடுத்த - அதற்கடுத்ததான, ஆசாரந்தரித்து - ஒழுக்கத்தைப்பூண்டு, நீஞெள் - நெடுங்காலம், விம்முற்றமகிட்சியரால்-மிகுந்த களிப்புள்ளவர்களாயும், விளங்கினர் - பிரகாசித்தார்கள், பின்பந்தவிவேகமங்கை - பின்னந்தவிவேகப்பெண்ணான சூடாலையானவள், அம்மைக்காம்-மறுமைக்காகிய, நல்லபதவொழுங்கினால் - நன்மையான பதக்கிரமத்தினால், பேரறிஞர் - மூதறிஞரானவர்கள், அருளிச்செய்த - அனுக்கிரகித்த, செம்மைச்சாத்திரப்பொருள்கள்-செவ்வையான சாஸ்திரார்த்தங்களை, தரிக்கலாமளவு - தரிக்கத்தகுந்த மாத்திரம், அறிந்து-தெரிந்து, திருந்தக்கேட்டு-நன்றாய்க்கேட்டு—எ-று.

எ - து. தமக்குட்டாங்க ளறிந்தவர்களாயும், அதற்கடுத்ததான ஒழுக்கத்தைப்பூண்டு நெடுங்காலம் மிகுந்த களிப்புள்ளவர்களாயும் பிரகாசித்தார்கள். பின்னந்த விவேகப்பெண்ணான சூடாலையானவள் மறுமைக்காகிய நன்மையான பதக்கிரமத்தினால் மூதறிஞரானவர்கள் அனுக்கிரகித்த செவ்வையான சாஸ்திரார்த்தங்களைத் தரிக்கத் தகுந்தமாத்திரந்தெரிந்து நன்றாய்க்கேட்டு—எ—ம்.

(இ-க-க-ம்.) இருவரும் ஆத்மவிசாரஞ்செய்வதிற் றீவிரமாகச் சூடாலை தனித் தனுபவமாய் விசாரிக்கத்தொடங்கினதாம். (8)

## ஆத்மாவும் அஃதைமறைக்கு மோகமும் அஃதை யுடையவனும் அஃதுதிக்குமிடமுமாகிய நான்கையும் விசாரிக்கத்தொடங்கி முன்னாத்மஸ்வரூபத்தை விசாரித்தல்.

எள்ளொரு வியாபாரம் வியாபார மில்லாமை யிரண்டுமின்றி, வெள்ளிதாய் விளங்கியநற் புந்தியாற் சூடாலை விசாரிக்கின்றாள், டெள்ளியேதன்னைமுத லேக்கினா னென்றெத்தைச் செப்பிகின்றோம், முள்ளாறு விம்மோக மாருடைய தெவ்வாறெங் குதித்த தென்றால்.

இ - ள் என்ஞுருவியாபாரம் - நித்தியாதகாரியமும், வியாபாரமில்லா மை - காரியமில்லாமையும், இரண்டுமின்றி - இரண்டுமில்லாமல், வெள்ளிதா ய்விளங்கிய - தாவள்யமாய்விளங்கிய, நற்புந்தியால் - நல்லறிவினுல், சூடாலை விசாரிக்கின்ருள் - சூடாலையானவள் விசாரணைசெய்கிருள், தெள்ளியே - தெளிவாக, தன்னைமுதனேக்கி - ஆத்மாவைமுன்னேபார்த்து, நானென்ற தைச்செப்புகின்ருேம் - யானென்றதைச் சொல்லுகின்ருேம், உள்ளரு - மனதினீங்காத, இம்மோகம் - இந்தமோகமியாது, ஆருடையது - இஃதியா ருக்குரியது, எவ்வாறு - எந்தப் பிரகாரம், எத்தால் - யாதினுல், எங்குதித் தது - எவ்விடத்திலுண்டானது—எ-று.

எ - து. நித்தியாதகாரியமும், காரியமில்லாமையும், இரண்டு மில்லாமல் தாவள்யமாய் விளங்கிய நல்லறிவினுல் சூடாலையானவள் விசாரணைசெய்கிருள். தெளிவாக ஆத்மாவை முன்னேபார்த்து யா னென்றதைச் சொல்லுகின்ருேம் மனதினீங்காத இந்த மோகமி யாது? இஃதியாருக்குரியது? எந்தப் பிரகாரம் யாதினுலெவ்விடத்தி லுண்டானது—எ-ம் (9)

## இந்திரியங்களைக்கண்டு தேகத்தையும் மனதைக்கண்டிந்திரியங்களையு நியதிகளைதல்.

முதலான வுடல்சடமா மூகமா நானென்று மொழியலாகா, வி தமான கருமஞா னேந்திரியங்கள் சடமாகி வெவ்வேருகு, மதனு னன்ருருந் தடியினு லோடுகளை யசைக்கு மாபோற், றிதமாகா மன த்தாலே யிவையிரைந் துஞ்சேட்டை செய்யுமன்றே.

இ - ள். முதலானவுடல் - முன்னே (தோற்றுவ) தானதேகத்தை (நா னென்னில்,) சடமாமூகமாம் - சடமாகவுமூடமாகவு (மிருப்பதனுல்), நானெ ன்றுமொழியலாகா - நானென்றுரைக்கத்தக்கதன்று, விதமான - (இவ்) வித மான (தேகத்தையறிந்தசைப்பிக்கின்ற), கருமஞானேந்திரியங்கள் - பத்திந் தியங்களையு (நானென்னில்), தடியினுலோடுகளையசைக்குமாபோல் - தண்டி னுலோட்டை (யசைக்கவஃது) அசைவதுபோல, திதமாகாமனத்தால் - சபலசி த்தத்தினுல், சடமாகிவெவ்வேருகும் - மூடமாய்த் தனித்தனியே யிருக்கி ன்ற, இவையிரைந்தும் - இப்பத்திந்திரியங்களும், சேட்டைசெய்யும் - அசைக்கி ன்றன, அதனுலென்றுகும் - அதனுலல்லவாம்—எ-று.

எ - து. முன்னே தோற்றுவதான தேகத்தை நானென்னில் சடமாகவு மூடமாகவுமிருப்பதனுல் நானென்றுரைக்கத்தக்கதன்று, இவ்விதமான தேகத்தையறிந்தசைப்பிக்கின்றபத்திந்திரியங்களையுநா

னென்னில் தண்டிஞலோட்டையசைக்க அஃதசைவதுபோல சபல சித்தத்திஞல் மூடமாய்த் தனித்தனியே யிருக்கின்ற இப்பத்திந்திய ங்களுநயு மசைக்கின்றன அதஞனல்லவாம்—எ-ம். (10)

## புத்தியைக்கண்டு மனதையும் அகங்காரத்தைக்கண்டு புத்தியையுநியதிகளைதல்.

செறிதருசங் கற்பமெனுஞ் சத்தியுள தாய்ச்சடமாஞ் சித்தந் தானு. மெறிகவணுற் கற்போல புந்தியினிச் சயத்தாலே யியக்கமெ ய்து, மறிவுறுபுந் தியுஞ்சடமா மறுதியிட லேவடிவா யகங்காரத்தா, னெறியுறுசெய்கையையுறுமாற்பள்ளத்தாலோடுநதிநீர்களைபோல்,

இ - ள். செறிதருசங்கற்பமெனுஞ்சத்தியுளதாய் - இந்திரியங்களையசைப்பிக்கு மிகுந்தசங்கற்பமென்கின்ற சத்தியையுடையதாகிய, சித்தந்தானும் - மனதை நானென்றுலதுவும், கவணுலெறிகற்போல - கவண்டிஞல் வீசச் (செல்லும்) கல்லைப்போல, புந்தியினிச்சயத்தால் - புத்திநிச்சயத்திஞல், இயக்கமெய்துஞ்சடமாம் - அசைக்கின்றசடமாகு மதஞலம்மனமு நானென்றும் அறுதியிடலேவடிவாயறிவுறுபுந்தியும் - (மனதையசைப்பிக்கின்ற) நிச்சயத் தறிவதே யுருவமாயுள்ளபுத்தியை நானென்றுலதுவும், பள்ளத்தாலோடு நதிநீர்களைபோல் - பள்ளத்திற்செல்கின்ற ஆற்றின்சலம்போல, அகங்கா ரத்தானெறியுறு செய்கையையுறும் - அகங்காரத்தொழின் மார்க்கத்திற்செல் லுகின்ற, சடமாம் - சடமாகு (அதஞைப்புத்தியுமல்லவாம)—எ-று.

எ - து. இந்திரியங்களை யசைப்பிக்கு மிகுந்த சங்கற்பமென்கின்ற சத்தியையுடையதாகிய மனதை நானென்றுலதுவும் கவண்டிஞல் வீசச் செல்லுங்கல்லைப்போல் புத்தி நிச்சயத்திஞல் அசைகின்றசடமாகு மதஞலம்மனமு நானென்றும். மனதை யசைப்பிக்கின்ற நிச்சயித்தறிவதே யுருவமாயுள்ள புத்தியை நானென்றுலதுவும் பள்ளத்திற் செல்கின்ற ஆற்றின் ஜலம்போல அகங்காரத் தொழின்மார்க் கத்திற் செல்கின்ற சடமாகு மதஞை புத்தியுமல்லவாம்—எ-ம். ()

## சீவனைக்கண் அகங்காரத்தையும் பிரத்தியேகாத்மாவை தரிசித்துத் சீவனையும் நியதிகளைதல்.

நீதகங்கா ரஞ்சடமாய்ப்பயனிலியா யவசமாய்ச் சீவஞலே, சா தமுறு யிஞசிறுவர் மயக்கத்திற் பேயதோன்றுந் தன்மைபோலா.

மோதியசீ வனுந்தொழிலிலே வாடிவாய்க் காற்றுருவாகி யிதயமுற்று, மேதகைய சுகுமார மாயுள்ளே மற்றொன்றான் மேனிவாழும்.

இ-ள். நீதகங்காரம் - (புத்தியை யசைப்பிக்கின்ற) தீயவகங்காரத்தை (நானென்றால்), பயனிலியாய்-பிரயோசனமில்லாததாய், அவசமாய் - பராதீனமாய், சிறுவர்மயக்கத்தில் - குழந்தைகளின்பிரமையில், பேய்தோன்றுந்தன்மைபோல்-பிசாசந்தோற்றும் விதத்தைப்போல, சீவனேலே சாதமுறுமிதுசடமாம் - சீவனாற்றோற்றுகின்ற விதுசடமாம் (ஆதலா லிவ்வகங்காரமு நானல்லவாம்), ஓதியசீவனும் - (அகங்காரத்தை யசைக்குமென்) றுரைத்த சீவ(னுமென்னிலதுவும்), தொழிலேவடிவாய்-கிரிகையேபடிவமாய், காற்றுருவாகி-பிராணகாரமாய், உள்ளே - அகத்தில், இதயமுற்று மேதகைய சுகுமாரமாய்-இருதயத்துற்று மிகவுமிருதுவா (யிருந்து), மற்றொன்றான் மேனிவாழும்-பிரத்யோகாத்மாவாற்சலிக்கு (மதனாலச்சீவனுநானல்லவாம்)—எ-று.

எ-து. புத்தியையசைப்பிக்கின்ற தீயவகங்காரத்தை நானென்றால் பிரயோசனமில்லாததாய்ப் பராதீனமாய்க் குழந்தைகளின் பிரமையில் பிசாசந்தோற்றும் விதத்தைப்போல சீவனாற் றோற்றுகின்ற இதுசடமாமாதலா லிவ்வகங்காரமு நானல்லவாம். அகங்காரத்தையசைக்குமென்றுரைத்த சீவனுமென்னிலதுவும் கிரிகையே படிவமாய்ப் பிராணகாரமா யகத்தில் இருதயத்துற்று மிகவு மிருதுவா யிருந்தும்பிரயோகாத்மாவாற்சலிக்குமதனாலச் சீவனுநானல்லவாம்-எ-ம்.

(ப-ம்.) சீவனைச் சலனுகாரமாயிருத்தலின் காற்றுருவென்றும், அந்தகனை பிரதிபலனுயிருத்தலி னிதயமுற்றென்றும், சுழுத்தியி லோய்ந்திருத்தலின் சுகுமாரனென்றுங் கூறினார் (இ-கை-ம்) சிறந்தத்தானெனக்கண்டு சீவன்முதலியவற்றைத் தானல்லவென்று தள்ளியதாம் நானென்றெனபதை மற்ற நான்கிடத்துங் கூட்டுக. (12)

## ஆத்மதரிசனமாய் அதனாற் சீவன் விளங்கினதறிதல்.

ஆற்றுமதத் துவவறிவென் றறிந்தேனீ தறிபொருளா லழுக்குமேவா, தேற்றுமென துருவமா யசிரணமாஞ் சித்துருவாற் சீவன்வாழுந், தோற்றுபொருள் களின்மயக்குஞ் சித்துருவாற் சீவன்வாழ் தொடர்ச்சிகூறிற், காற்றதனுன் மணம்போலும் பள்ளத்தாணீர்போலுங் கருதுங்காலே.

இ-ள். ஆற்றுமதத்துவவறிவென்ற - (சீவனைச்சலிப்பிக்கின் றவிதுவே) சுவாத்மாவாகிய வுண்மைஞானமென்ற, அறிந்தேன் - உணர்ந்தேன், ஈது-

இவ்வறிவானது, அறிபொருளாலழுக்குமேவா - விடயங்களாற் களங்கமடையாமல், தேற்றுமெனதுருவமாய் - தெளியுமெனதாத்மஸ்வரூபமாய், அசிரணமாஞ்சித்துருவால்-நித்தியமான ஞானஸ்வரூபமாயிதனால், சீவன்வாழும்-சீவன்சீவிக்கும், சித்துருவால் - இஞ்ஞானஸ்வரூபத்தினால், தோற்றுபொருள்களின்மயக்கும் - விடயவஸ்துகளிற் பிரமிக்கின்ற, சீவன்வாழ் தொடர்ச்சிகூறில் - சீவன்சீவிக்குந் தொடர்பைச்சொல்ல, கருதுங்கால் - நினைக்குமிடத்து, காற்றதனுன்மணம்போலும் - வாயுவினால்வரும்வாசனைபோலவும், பள்ளத்தாணீர்போலும்-பள்ளத்திற்றங்குஞ் சலம்போலவுமாம்—எ-று.

எ - து. சீவனைச் சுகிப்பிக்கின்ற விதுவே சுவாத்மாவாகிய வுண்மை ஞானமென்று உணர்ந்தேன், இவ்வறிவானது விடயங்களாற் களங்கமடையாமல் தெளியுமெனதாத்மஸ்வரூபமாய் நித்தியமான ஞானஸ்வரூபமாயிதனால் சீவன் சீவிக்கும். இஞ்ஞான ஸ்வரூபத்தினால் விடயவஸ்துக்களிற் பிரமிக்கின்ற சீவன் சீவிக்குந்தொடர்பைச் சொல்ல நினைக்குமிடத்து வாயுவினால்வரும் வாசனைபோலவும் பள்ளத்திற்றங்குஞ் சலம்போலவுமாம்—எ—ம்.

(இ-ம். ஆத்மா சுயம்பிரகாசரொனவு மதனாற் சீவன்விளங்குமெனவுமறிந்ததாம்.

## மோகவிலக்கணமு மஃதுடையவனையும் விசாரித்தல்.



பொய்யாகிச் சடமான வறிபொருளின் புணர்ச்சியாற் போதரூப, மையானசடமாகிப் பெருநீருட்கலன்போற்றன் வடிவைவிட்டு, மெய்யான சித்துருவ மிப்படியே யறிபொருளை மேவலாலே, யையயோபொய் யாய்ச்சடமா மறிவினாலறிவிக்க வறிந்ததன்றே.

இ - ள். பொய்யாகி-நிசமற்றதாகியும், சடமான - மூடமாகியுமிருக்கின்ற, அறிபொருளின் - விடயங்களின், புணர்ச்சியால் - சேர்க்கையினால், போதரூபம் - ஞானஸ்வரூபம் ([illegible]), மையானசடமாகி - [illegible] சடரூபமாய், பெருநீருள் [illegible] போல, [illegible] ([illegible]). [illegible] சித்துருவம - உண்மை [illegible], [illegible] யறிபொருளை மேவலால் - இந்தப்பிரகாரந் (சீவனுடைய) விடயத்தை விரும்புதலினால், ஐயோ பொய்யாய்ச்சடமாம் - அநித்தியமுமறிவற்றதுமாகி மூடமாகி, அறிவினாலறிவிக்கவறிந்தது - ஆத்மஞானத்தினாற் றெரிவிக்கத் தெரிந்தது-எ-று.

எ - து. மித்தையாகியும் முடமாகியுமிருக்கின்ற விடயங்களின் கலத்தலினால் ஞான ஸ்வரூபசத்தியானது களங்கமுள்ள சடரூபமாய் மிருந்த சலத்துக்குள் அக்கினியைப்போல் தனதுருவத்தை மறந்து சீவனுமுண்மையாகிய சிற்சத்தியானது இந்தப்பிரகாரஞ் சீவனாய் விடயத்தை விரும்புதலினால் அதிசயமித்தையாகி மூடமாகி ஆத்மஞானத்தினாற் றெரிவிக்கத்தெரிந்தது—எ—ம்.

(இ-ம்.) ஆத்மா தன்னை விடயமாகக்கண்டு மயங்கின மயக்கமே மோகமென்று அஃதுள்ளவன் சீவனென்று மறிந்ததாம். (14)

## மோகமுதிக்குங்காரணம் விசாரித்தல்.

——(.·.)——

இந்தவறி வெத்தற்கா ணப்பட்ட தென்னில்வே றேதுமில்லை,
யந்தமில்கா லத்தாலே யறியவேண் டியதறிந்தே னம்மவம்மா, முந்
துவறி வின்பரப்பை முடிவாக மனங்கரண முதலவெல்லாஞ், சிந்தனை
செய் யாமையா லுதித்தனவாஞ் சிந்தித்தாற் சேரப்பொய்யே.

இ - ள். இந்தவறிவு - இந்த ஆத்மஞானமானது, எத்தாற்காணப்பட்டதென்னில் - யாதினாற் றெரியப்பட்டதென்றால், வேறேதுமில்லை - (தன்னாலன்றி) வேறொன்றினாலுமில்லை அந்தமில்காலத்தால் - முடிவற்ற காலத்தினால், அறியவேண்டியதறிந்தேன் - அறியத்தக்க ஆத்மஞானத்தையறிந்தேன், அம்மாவம்மா - ஆச்சரியமாச்சரியம், முந்துவறிவின்பரப்பை - முதன்மையான சிதவியாபகத்தை, முடிவாக - அந்தமாக, சிந்தனைசெய்யாமையால் - சிந்தியாதத்தினால், மனங்கரண முதலவெல்லாம் - ஆறிந்திய முதலியவனைத்தும், உதித்தனவாம் - உண்டாயினவாம், சிந்தித்தால் - (அவ்வறிவைச் சிந்தித்தால்), சேரப்பொய்யே - (அம்மனமுதலிய) சகலமுமித்தையேயாம்.

எ - து. இந்த ஆத்மஞானமானது யாதினாற்றெரியப்பட்டதெனறால், தன்னாலன்றி வேறொன்றினாலுமில்லை, முடிவற்றகாலத்தினால் அறியத்தக்க ஆத்மஞானத்தை யறிந்தேன் ஆச்சரியமாச்சரியம்? முதன்மையான சித்வியாபகத்தை அந்தமாக சிந்தியாதத்தினால்ஆறிந்தியமுதலிய அனைத்தும் உண்டாயினவாம், அவ்வறிவைச்சிந்தித்தாலம்மனமுதலிய சகலமுமித்தையேயாம்—எ—ம்.

(இ-ம்.) ஆத்மாவே சீவன்முதலிய சகத்தாகவிளங்குமேயன்றி வேறில்லையென்னு அனுபவமாயறியாததே மோகமுண்டாவதற்குக்காரணமாயிற்றென்பதாம். (15)

## இவ்விசாரங்களால் ஆத்மாவே பிரமமென்னும் அத்துவிதஞான முதயமாதல்.

எல்லையில்பே ரறிவேயிங் குளதிதனைப் பேருண்மையென்றுஞ் சொல்வா, ரல்லலுறுங் களங்கமறச் சமமாகி யகங்காமில் வடிவமாகித், தொல்லையொளியொருக்காலேதுலங்குவதாய் நித்தபரிசுத்தமாகி, மல்லுயர் பிரமமெனப் பாமமெனப் பெயர்பெற்று வழங்குமன்றே.

இ - ள். எல்லையில்பேரறிவே - அளவற்றபூரணஞானமே, இங்குளது - இவ்விடத்திலுள்ளதாம், இதனை - இந்தப்பூரணஞானத்தை, பேருண்மையென்றுஞ்சொல்வார் - மகாசத்தையென்றுஞ் சொல்லுவார்கள், அல்லலுறுங்களங்கமற - துன்பமிகுந்த மாசுநீங்க, சமமாகி - சமத்துவமாய், அகங்காமில் வடிவாகி - அகம்பாவமற்ற ஸ்வரூபமாகி, தொல்லையொளி - சுயம்பிரகாசமானது, ஒருக்கால் - ஏககாலத்தில், துலங்குவதாய் - பிரகாசிப்பதாயும், நித்தம் - நித்தியமாயும், பரிசுத்தமாகியிருக்கின்ற, மல்லுயர் பிரமமென - திடமுள்ள மேலானபிரமமென்றும், பாமமெனப் பெயர்பெற்று வழங்கும் - பாமமென்று நாமத்தைத் தரித்துவழங்கும் — எ - று.

எ — று. அளவற்ற பூரணஞானமே இவ்விடத்தி லுள்ளதாம், இந்தப் பூரணஞானத்தை மகா சத்தையென்றுஞ் சொல்லுவார்கள், துன்பமிகுந்த மாசுநீங்க சமத்துவமாய் அகம்பாவமற்ற ஸ்வரூபமாகி சுயம்பிரகாசமானது ஏககாலத்தில் பிரகாசிப்பதாயும் நித்தியமாயும் சுத்தமாகியுமிருக்கின்ற திடமுள்ள மேலானபிரமமென்றும் பாமமென்றும் நாமத்தைத்தரித்து வழங்கும் — எ — ம். (16)

## சகத்திலிச்சொரூபானுசந்தானமுதிர்ச்சியாயிற்றெனல்

இவ்வாறு தினந்தோறுந் தன்சுரூபத்தேகளிக்கு மிதயநோக்காற், றவ்வாதபகுதிநிலை யாயாசைப் போய்ச்சங்கஞ்சற்றுமின்றி, யொவ்வாத தொந்தனைபோய்த் தொழிலின்றி பற்றுவீ டொன்றுமின்றி, கவ்வாத வியற்றொழில்செய் தயாபாடப் பெரும்பேற்றூற் கருத்து முற்றி.

இ - ள். இவ்வாறு - இந்தபிரகாரம், தினந்தோறும் - நாடோறும், தன் சுரூபத்து - தனதான்மஸ்வரூபத்தில், களிக்கும் - சுகிக்கின்ற, இதயநோக்கால் - மனோதிருஷ்டியினால், தவ்வாதபகுதிநிலையாம் - தவறாதசுபாவமானநிலையினின்று, ஆசைபோய்ச்சங்கஞ்சற்றுமின்றி - அவர்நீங்கி (விடய) சங்கமெல்

வளவமில்லாமல், ஒவ்வாதநெதாந்தனேம்போய் - பொருந்தாத தொந்தம் விட்டு, தொழிலின்றி - செய்கையில்லாமல், பற்றாவீடொன்றுமின்றி - விருப்பு வெறுப்பொன்று மில்லாமல், கவ்வாத வியற்றொழில்செய்து - பற்றில்லாத வியல்பானசெயல்களைச்செய்து, உயர்பரமப்பெரும்பேற்றால்-மேலான பிரம பிரயோசனத்தினால், கருத்தூற்றி-மனம்பழுத்து—எ-று.

எ — து. இந்தபிரகாரம் நாடோறும் தனதான்ம ஸ்வரூபத்தில் சுகிக்கின்ற மனோதிருஷ்டியினால் தவறாக சுபாவமான நிலையினின்று அவாநீங்கி விடயசங்க மெவ்வளவு மில்லாமல் பொருந்தாத தொந்தம் விட்டு செய்கையில்லாமல் விருப்பு வெறுப்பொன்றுமில்லாமல் பற்றில்லாத வியல்பானசெயல்களைச்செய்து மேலான பிரம பிரயோசனத்தினால் மனம்பழுத்து—எ-ம். (17)

## அத்துவிதஞானவபரோக்ஷசாக்ஷாத்கார ஸ்வரூபமாதல்.

உள்ளூறுபூரணமெய்தி யுவமைகட்கப்பாலாகி யொருவராலுந், தெள்ளியள விடவொண்ணு நிலையாந்தன்விவேகத்தின் செறிபழக்க, வெள்ளமுறத்தன்சொருபம் வெளியாய்மென் மலர்க்கொடிபோல் விளக்கமுற்று, ளெள்ளரிய வபிநவமாம் பேரெழில்கூ ரிவள்பொலிவை யினிதுநோக்கி.

இ - ள். உள்ளூறுபூரணமெய்தி - உள்ளத்திற்பொருந்திய பரிபூரணத்தையடைந்து, உவமைகட்கு - உவமானங்களுக்கு, அப்பாலாகிய - அதீதமாய், ஒருவராலும் - யாவராலும், தெள்ளியளவிடவொண்ணு - ஆராய்ந்தளவிடக்கூடாத, நிலையாம் - நிச்சயமாகிய, தன்விவேகத்தின் - தனது விவேகத்திலுண்டான, செறிபழக்கவெள்ளமுற-மிகுந்த அப்பியாசமிக, தன் சொரூபம்-தனதாத்மஸ்வரூபமானது, வெளியாய்-பிரத்யக்ஷமாய், மென்மலர்க்கொடிபோல்-மிருதுவான புட்பக்கொடியைப்போல, விளக்கமுற்றுன் - விளங்கினுன், எள்ளரிய-நிந்தித்தற்கரிய, அபிநவமாம்-புதுமையான, பேரெழில்கூர் - பேரழகுமிகுந்த, இவள்பொலிவை-இந்தச்சூடாலையின்தேஜஸை, இனிதுநோக்கி-இனிமையாக (சிகித்துவசன் பார்த்து—எ-று.

எ - து. உள்ளத்திற்பொருந்திய பரிபூரணத்தை யடைந்து உவமானங்களுக் கதீதமாய் யாவராலுமாராய்ந் தளவிடக்கூடாத நிச்சயமாகிய தனது விவேகத்திலுண்டான மிகுந்த அப்பியாசமிக தனதாத்ம ஸ்வரூபமானது பிரத்யக்ஷமாய் மிருதுவான புட்பக்கொடியைப் போல விளங்கினுள். நிந்தித்தற்கரிய புதுமையான பேரழகு மிகு

ந்தஇந்தச்சூடாலையின் றேயுசை இனிமையாகச சிகித்துவசன்பார்த்து-எ-ம்.

(இ-ரூ-கூ-ம்.) சமாதியினின்று நீங்கிச்ச காசிஷ்டைகைகூடிச் சர்வம்பிரமமயமென்கிற நிரதிசயாநந்த சாக்ஷாத்காரவடிவமாகப்பிரமதேசசாய் விளங்கிளுளென்பதாம். (18)

## சூடாலையினழகைப்பார்த்தர சனதிசயித்து வினவுதல்.

கண்டறியா வழகிதெனை மிகவியந்து சிகித்துவசன் கழறலுற்றான், பண்டையிளநலமீண்டு படைத்தனைபோலலங்காரம் பலபெற்றாய்போ, லண்டரமு துண்டனைபோ லார்க்குமுற வரியபத மடைவுற்றாய்போன், மண்டுகின்ற வாநந்த நிறைந்தனைபோற் பொலிகின்றாய் மாசிலாளே.

இ - ள். கண்டறியாவழகிதெனை - இதுநான்பார்த்தறி யாதவழகென்று, மிகவியந்து-மிகவுமதிசயித்து, சிகித்துவசன் , சிகித்துவராசன், கழறலுற்றான்-சொல்லத்தொடங்கினன், பண்டையிளநலம் - முன்னெவ்வனத்திலுள்ளவழகை, மீண்டுபடைத்தனைபோல் - திரும்பப்பெற்றவள்போலவும், அலங்காரம்பலபெற்றாய்போல் - பேரழகையநேகமாக வடைந்தவள்போலவும், அண்டரமுதுண்டனைபோல் - தேவாமுதம்புசித்தவள்போலவும், ஆர்க்கும்-யாவருக்கும், உறவரியபதம்-பொருந்துதற்கரிய பிரமபதத்தை, அடைவுற்றாய்போல்-அடைந்தவள்போலவும், மண்டுகின்றவாநந்தம் - பூரணாநந்தம், நிறைந்தனைபோல் - நிறைந்தவள்போலவும், மாசிலாளே-களங்கமற்றவளே பொலிகின்றாய் - நீவிளங்குகின்றாம்—எ-று.

எ - து. இது நான்பார்த்தறியாத அழகென்று மிகவுமதிசயித்து சிகித்துவராசன் சொல்லத்தொடங்கினன், முன்னெவ்வனத்திலுள்ள அழகை திரும்பப்பெற்றவள்போலவும் பேரழகை யநேகமாக அடைந்தவள்போலவும் தேவாமுதம் புசித்தவள்போலவும் யாவருக்கும் பொருந்துதற்கரிய பிரமபதத்தை யடைந்தவள்போலவும் பூரணாநந்தம் நிறைந்தவள்போலவும் களங்கமற்றவளே நீ விளங்குகின்றாய்—எ-ம். (19)

போகத்துக்கிரங்காது சாந்தமாயுற்றமாய்ப் பொலிவுண்டாகி, யேகத்திற்சமமாய்கெம் பீரமாயுனதுமன திருப்பதென்னே, தேகத்திற்பெருமழகுஞ் சித்தத்திற்பேரழகுஞ் சேர்ந்த தெங்ஙன, னீகற்பாலுரையென்ன காதலற்குச் சூடாலை நிகழ்த்தலுற்றாள்.

இ - ள். போகத்துக்கிசங்காது - போகத்தையிச்சியாமல், சாந்தமாய் - உபசாந்தமாகியும், ஊற்றமாய் - அசைவின்றிநிற்பதாகியும், பொலிவுண்டாகி - பிரகாசமுண்டானதாகியும், ஏகத்திற்சமமாய் - ஒன்றிற்சமமாகியும், கெம்பீரமாய் - கெம்பீரமாகியும், உனது மனநிருப்பதென்னே - உன் மனமிருக்குந்தன்மையென்ன, தேகத்திற்பெறுமழகும் - சரீரத்திற்பெற்றிருக்குமழகும், சித்தத்திற்போழகும் - மனதிலுண்டானவிருந்தவழகும், சேர்ந்ததெங்ஙன் - உண்டானதெப்படி, நீகற்பாலுரையென்ன நீகற்பிறைற்சொல்லென்றுகேட்ட, காதலற்கு - தலைவனுக்கு, சூடாலைநிகழ்த்தலுற்றாள் - சூடாலையானவள் சொல்லத்தொடங்கினாள்—எ - று.

எ - து. போகத்தை யிச்சியாமல் உபசாந்தமாகியும் அசைவின்றி நிற்பதாகியும் பிரகாசமுண்டானதாகியும்ஒன்றிற்சமமாகியும், கெம்பீரமாகியும் உன்மனமிருக்குந் தன்மையென்ன? சரீரத்திற்பெற்றிருக்குமழகும் மனதிலுண்டான இந்த வழகுமுண்டானதெப்படி? நீ கற்பினாற் சொல்லென்றுகேட்ட தலைவனுக்குக் சூடாலையானவள் சொல்லத்தொடங்கினாள்—எ-ம்.

(இ-உ-க-ம்) அரனாசசிக் கழகுண்டான காரணம் வினாவின தென்பதாம்.

## அழகுண்டானதற்குக்காரணமான ஆத்மசாக்ஷாத்கார நித்தியாநந்த அனுபவ விலாசத்தை யேழுவிதமாகப்பகுத்துச் சொல்லுதல்.

கிஞ்சினு மின்றிக்கிஞ்சில் வடிவானவிதுவிட்டுக் கிஞ்சிலன்றி,
விஞ்சுமொருவடிவுற்றேனதனாலேசிருடைத்தாய் விளங்காநின்றேன்,
கிஞ்சிலே கிஞ்சிலெனச் சுபாவநிலையாயுதங் கெடுதியின்றாய், விஞ்சு
வதே தையறிந்தே னதனாலே சிருடைத்தாய் விளங்காநின்றேன்.

இ - ள். கிஞ்சினுமின்றி - அற்பமுமில்லாமல், கிஞ்சில்வடிவான - அற்பவுருவமுமாயிருக்கின்ற, இதுவிட்டு - இச்சகத்தைநீக்கி, கிஞ்சிலன்றி - மகத்தான, விஞ்சுமொருவடிவுற்றேன் - சேடித்தவொப்பற்றஞானஸ்வருபத்தைப் பெற்றேன், அதனால் - அதினால், சிருடைத்தாய்விளங்காநின்றேன் - அழகையுடையவளாய் பிரகாசிக்கின்றேன், கிஞ்சிலேகிஞ்சிலென - அணுவுக்கணுவாகியும், சுபாவநிலையாய் - ஒருதன்மையாயும், உதயங்கெடுதியின்றாய் - உற்பத்தி நாசமில்லாததாயும், விஞ்சுவதேது - மிஞ்சினதெதுவோ, அதையறிந்தேன் - அதைத்தெரிந்துகொண்டேன், அதனால் அதினாலே, சிருடைத்தாய் - அழகையுடையவளாய், விளங்காநின்றேன் - பிரகாசிக்கின்றேன்—எ - று.

எ — று. அற்பமுமில்லாமலற்பவுருவமுமா யிருக்கின்ற இச்சகத்தைநீக்கி மகத்தானசேடித்த வொப்பற்ற ஞானஸ்வரூபத்தைப்பெற்றேன், அதினலழகையுடையவர்ளாய்பிரகாசிக்கின்றேன், அணுவுக்கணுவாகியும் ஒரு தன்மையாயும் உற்பத்தி நாசமில்லாததாயு மின்சினதெதுவோ அதைத் தெரிந்துகொண்டேன், அதினாலே அழகையுடையவளாய் புரகாசிக்கின்றேன்—எ-ம். (21)

அருந்தாமற்றரிதாம் போகங்களருந்தினபோலமைந்தின்புற்று, வருந்தாமல் விருப்புவெறுப் பிலவதனாற் சீருடைத்தாய் வாழா நின்றேன்' பெருங்கோபமபற்றிரண்டுஞ் சிறுதொழிற்பாங்கிய ரறிவாம் பெரியபெண்கண், மருங்கேசாத்திர நோக்கிற் களிக்கின்றேனதனாற் சீர் வாழ்வுபெற்றேன்.

இ - ள். அரிதாம்போகங்கள் - செய்மையாயிருக்கும்போகங்களை, அருந்தாமல் - அனுபவியாமலிருந்தும், அருந்தினபோல் - அனுபவித்ததுபோலா அமைந்தின்புற்று-பொருந்திச்சுகத்தையடைந்து, வருந்தாமல்- துன்பப்படாமல், விருப்பெவெறுப்பில் - இராகத்துவேடநீங்கின, அதனால் - அதினால், சீருடைத்தாய் - அழகையுடையவளாய், வாழாநின்றேன் - சுகிக்கின்றேன், பெருங்கோபம்பற்றிரண்டும்-பெரிதான விராகத்துவேடமாகிய இரண்டும், சிறுதொழிற் பாங்கியர் - ஈனச்செயலுள்ள தோழியராகவும், அறிவாம் பெரிய பெண்கள் - ஞானமாகிய மகாமாதர்கள், மருங்கு - பக்கமாய், சாத்திர நோக்கிற் களிக்கின்றேன் - சாஸ்திர திருஷ்டியிற் சுகிக்கின்றேன், அதனால்-அதினால், சீர் - (தேக) அழகையும், வாழ்வுபெற்றேன் - (மனமகிழ்ச்சியையு) மடைந்தேன்—எ-று.

எ - று. செய்மையாயிருக்கும் போகங்களை யனுபவியாமலிருந்தும் அனுபவித்ததுபோலப் பொருந்திச் சுகத்தை யடைந்துத் துன்பப்படாமல் இராகத்துவேட நீங்கின. அதினா லழகையுடையவளாய்ச் சுகிக்கின்றேன். பெரிதான விராகத்துவேடமாகிய இரண்டும் ஈனச்செயலுள்ள தோழியராகவும் ஞானமாகிய மகாமாதர்கள் பக்கமாய்ச் சாஸ்திர திருஷ்டியிற் சுகிக்கின்றேன். அதினால் தேக அழகையும் மனமகிழ்ச்சியையு மடைந்தேன்—எ-ம். (22)

இதுவுமது.

கிஞ்சின்மாத் திரமுருவி லாதவுலகுக்கெல்லாங் கிளர்தேவாகி, யெஞ்சவில ளென்றென்பா லின்புறுவ னதனாற்சீ ரெழில்பெற்றேனன், புஞ்சமுறு மிலைவியெல்லாம் விட்டனன் வேறேபொய்யு மெய்யு

மாகி, விஞ்சுமது முற்றுமடைந் தேனதனாற் சீருடைத்தாய் விளங் காநின்றேன்.

இ - ள். கிஞ்சின்மாத்திரம் - அற்பமும், உருவிலாத-ஸ்வரூபமில்லாத, உலகுக்கெல்லாம் - சகங்களனைத்திற்கும், ஒளிரேவாகி-சுயம் பிரகாசமான தெய்வமாய், எஞ்சலிலதென்று - பூரணமாயிருப்பவனென்று, என்பாலின் புறவன் - ஆத்மாவில் ரமிப்பேன், அதனுலென் - அதினலியான், சீரெழில் பெற்றேன்-சிறந்த அழகையடைந்தேன், புஞ்சமுறும் - திரளான, இவை யெல்லாம் விட்டனன் - இச்சகலத்தையும்விட்டேன், வேறு-விலக்ஷணமாய், பொய்யும்-அசத்தும், மெய்யுமாகி - சத்துமாகி, விஞ்சுமது - சேடித்தவதை, முற்றுமடைந்தேன் - பூரணமாகப்பெற்றேன், அதனால்-அதினால், சீருடைத் தாய்-அழகுடைத்தாகவனாய், விளங்காநின்றேன் - பிரகாசிக்கின்றேன்—எ-

எ - து. அற்பமும் ஸ்வரூபமில்லாத சகங்க ளனைத்திற்கும் சுயம் பிரகாசமான தெய்வமாய்ப் பூரணமா யிருப்பவனென்று ஆத் மாவில் ரமிப்பேன். அதினலியான் சிறந்த அழகை யடைந்தேன். திரளான இச்சகலத்தையும் விட்டேன். விலக்ஷணமாய் அசத்தும் சத்துமாகி சேடித்தவதைப் பூரணமாகப் பெற்றேன். அதினால் அழ குடைத்தானவனாய் பிரகாசிக்கின்றேன்—எ-ம். (23)

இதுவுமது.

கண்ணாற்பல் கரணத்தால் கருத்தாலிங் கெதுகாண்கே னது தானிஞ்சி, னண்ணுமலதற்பிரிதாய்க் கிஞ்சிலா தொன்றுள்ளேனன் றாய்க்காண்கேன், பண்ணுன சீரிதெனச் சூடாலை சொன்னவற்றைப் பற்றிப்பாரா, னெண்ணுமனைத்தவனைச் சிகித்துவசன் வேறொன் றை யியம்பலுற்றான்.

இ - ள். கண்ணால் - நயனங்களினாலும், பல்கரணத்தால் - பலவிந்திரி யங்களினாலும், கருத்தால்-மனதினாலும், இங்கெது காண்கேன்-இவ்விடத் தெதைப்பார்ப்பேனோ, அதுதான் - அதனிஸ்யத்தையே, கிஞ்சி னண்ணு மல்-அற்பமும்பாராமல், அதற்பிரிதாய் - அச்சகத்தில் விலக்ஷணமாய், கிஞ்சிலா தொன்று - அற்பமாகாத ஏகமான சைதன்யத்தை, உன்னே னன்றாய்க்காண் கேன்-அதனினன்கு பார்க்கப்பார்த்தேன், பண்ணுன சீரிதென - உண்டாகிய அழகிதுவென்று, சூடாலை சொன்னவற்றை - சூடாலையானவள் சொன்னவைத்தவை களை, பற்றிப்பாரான்-ஊன்றிப்பாராதவனாய், அவனை-அச்சூடாலையை, எண் ணுமனைத்து-மதியாமற்சிரித்து, சிகித்துவசன்-சிகித்துவவரசன் வேறொ ன்றை யியம்பலுற்றான்-மற்றொன்றைச் சொல்லத்தொடங்கினன்—எ-று.

எ — ௲. நயனங்களினாலும், பல யிந்திரியங்களினாலும், மனதினாலும், இவ்விடத் தெதைப்பார்ப்பேனோ, அத் திரிஸ்யத்தையே அற்பமும்பாராமல் அச்சகத் விலக்ஷணமாய்ப் அற்பமாகாத வேகமான சைதன்யத்தை அகத்தின்கண் சுகமாகப்பார்ப்பேன். உண்டாகிய அழகிதுவென்று சூடாலையானவ ளுரைத்தவைகளை ஊன்றிப் பாராதவனாய் அச்சூடாலையை மதியாமற்சிறித்து சிகித்துவவாசன் மற்றொன்றைச் சொல்லத்தொடங்கினான்—எ—ம்.

இ-௯-௧-ம்.) பிரமாநந்தமேவடிவமாய் விளங்குகின்றேனென் றுண்மையாயறிவித்தா னென்பதாம்.



தலைவனிடத்துள்ள வன்பினாற் பக்குவமில்லாதகாலத்திற்போதிக்கத்தகாத சுவானுபவ சாக்ஷாத்காரமாகிய பரஞானத்தைப் போதித்தும், அதை சிரவணத்தினாலுண்டான அபரஞானயுத்தி நான்கினால் மறுக்கத் தொடங்கிச் சமாதியிற் சேடித்த வஸ்துவானதினாலும், அஃதை யறிந்ததுமயானதினாலும், வாக்கியார்த்த திருஷ்டியினாலும், சாக்ஷாத்காரத்திற் சர்வவியபகமான வொன்றாதலினாலும், பூரணமானதினாலும், அணுவுக்கணுவான வஸ்துவைத் தரிசித்ததையும், அரசபோகத்திற் றிகழ்கின்றவர்க ளாத்மபோகத்தி லெங்ஙனந்திகழ்வான், தேகத்தைநீக்கித் தேகியானவன் பின் பெங்ஙனமத் தேகமாய் விளங்குவான் போகத்தைவெறுத்த தரித்திர னெங்ஙனஞ் செல்வத்திற் றிகழுவான்? காண்பவையைநீக்கிக் காண்பவனாயிருப்பவன் வசனத்தி லெங்ஙனம் விளங்குவானென்னு நான்கு யுத்தியினான் மறுத்தானெனல்.



வஞ்சியிடை யாயிசையா ததுசொன்னாய் சிறியார்போன் மருளாநின்றாய், விஞ்சதராதிபர் வாழ்வின் மிளிர்கின்றா யுன்னிலே மிளிராநிற்பாய், கிஞ்சிலைவிட் டுக்கிஞ்சி லாதடைந்தோர் முன்னிலையைக் கிட்டாரென்னிற், பஞ்சிலடி யாயவர்தா முன்னிலையாய் விளங்குவதெப் படியேசொல்வாய்.

இ - ள். வஞ்சியிடையாய் - வஞ்சிக்கொடிபோன்ற இடையையுடைய பெண்ணே, இசையாதது சொன்னாய் - தகாதவசனத்தைக் கூறினாய், சிறியார்போல்-அறிவில்லாதவர்களைப்போல, மருளாநின்றாய் - மயங்குகின்றாய் விஞ்சுதராதிபர்வாழ்வில் - மேலாகிய வரசரது செல்வத்தில், மிளிர்கின்றாய்-விளங்குகின்றாய், உன்னில் - ஆத்மாவில், மிளிராநிற்பாய் - எங்ஙனம் விளங்குவாய், கிஞ்சிலைவிட்டு - அற்பமான சகத்தைவிட்டு, கிஞ்சிலாது -

அற்பமல்லாத பூரணவஸ்துவை, அடைந்தோர்-அடைந்தசத்துக்கள், முன் னிலையை - பிரத்தியக்ஷமான சகத்தை, கிட்டாரென்னில் - சேரார்களாயி ன், பஞ்சிலடியாய்-பஞ்சிலு (மிருதுவான) பாதங்களையுடையவளே, அவர் தாம்-அந்தச்சத்துக்கள், முன்னிலையாய் விளங்குவது - பிரத்யக்ஷமாகப் பிர காசிப்பது, எப்படி சொல்வாய் - எங்ஙனங்கூறுவாய்—எ-று.

எ — து. வஞ்சிக் கொடிபோன்ற இடையையுடைய பெண் ணே? தகாதவசனத்தைக் கூறினாய்; அறிவில்லாத வர்களைப்போல மயங்குகின்றாய்; மேலாகிய ஆசாரத செல்வத்தில் விளங்குகின்ற நீ ஆத்மாவிலெங்ஙனம் விளங்குவாய் அற்பமான சகத்தைவிட்டு அற் பமல்லாத பூரணவஸ்துவை யடைந்த சத்துக்கள் பிரத்தியக்ஷமான சகத்தைச் சேரார்களாயின் பஞ்சிலு மிருதுவான பாதங்களையுடை யவளே? அந்தச்சத்துக்கள் பிரத்தியக்ஷமாக பிரகாசிப்ப தெங்ஙன ங்கூறுவாய்—எ-ம்.

அறுந்தனுருப் போகத்தா லகமகிழ்ந்தே னென்றதனை யகற்று கிற்பார், பொருந்துமிடி யினர்போனீர் பாக்கியரா மவரெங்கன் பொலிவார்சொல்வாய், திருந்துறக்காண் பாவைகாணேம் வேறே காண் குதுமென்று செப்புகிற்பார், இருந்துறைக்கு மிவ்வுறையை விடாமலவர் விளங்குவதெப் படியேசொல்வாய்.

இ - ள். அருந்தனுருப்போகத்தால் - அனுபவியாதபோகத்தினால், அக மகிழ்ந்தேனென்று - யானுண்மகிழ்ச்சி யானேனென்று, அதனை யகற்றகிற் பார் - அப்போகத்தை நீக்குபவர்கள், பொருந்துமிடியினர்போல்-பொருந் தியதரித்திரத்தைப்போல, பாக்கியராமவர் - அபாக்கியவான்கள், எங்கன் பொலிவார் சொல்லுவாய் - எப்படிவிளங்குவார்கள் சொல்லக்கடவாய், திருந் துற - செவ்வையாக, காண்பவைகாணேம்-சகத்தைப்பார்க்கிலேம் வேறே காண்குதும் -வேறேயாத்மாவைப்பார்ப்போம், என்றுசெப்புகிற்பார்-என்று சொல்லுபவர்கள், இருந்துறைக்கும்-இருந்துசொல்லப்பட்ட, இவ்வுரையை விடாமல் - இந்தவசனத்தைத்தவிராமல், அவர்விளங்குவதெப்படி - அவர் கள் பிரகாசிப்பதெவ்வண்ணம், சொல்வாய் - கூறுவாய்—எ-று.

எ - து. அனுபவியாத போகத்தினால் யானுண்மகிழ்ச்சியானே னென்று அப்போகத்தை நீக்குபவர்கள் பொருந்திய தரித்திரத் தைப்போல அபாக்கியவான்க ளெப்படி விளங்குவார்கள் சொல்லக் கடவாய் செவ்வையாகச் சகத்தைப் பார்க்கிலேம், வேறே ஆத்மா இந்தவசனத்தைத் தவிராமல் அவர்கள் பிரகாசிப்ப தெவ்வண்ணம் கூறுவாய்—எ-ம்.

(இ-உ-க-ம்.) குடாலை கூறியவேயுருச்சத்துக்கும் பகுத்துச்சொல்லும் விவேகமின்றி காண்கிடைக்கச் சொன்னாராயினும் அஃதின் கூன்றிக் கோ

ருத்தியும்-இரண்டுக்கோருத்தியும்-மற்றிரண்டுக்கும் இரண்டுபுத்தியுமாயமை த்தக்சொன்ன வேண்டுமென்பதாம். (16)

## சுவாநுபவத்தை இங்ஙன மிழத்தலுக்கிரங்கி இவனுக் கிவ்விதார்த்தத்தை யற்புதங்களோடு மறிவிக்கு நிமித்தம் அணிமாதி சித்தியை யடையத் தொடங்கி யாதனங்கட்டல்

ஆதலாற் பேதையா யறிவிலியா யலைபவளா யநேகஞ்சொல் லாற், போதநீ களிக்கின்று யெனவெடிக்க நகைத்தயலே போனான் மன்னன், மாதரா ளதற்கிரங்கி தன்னறிவி லிளைப்பாறி மகிழானாகிப், பேதமா யென்னுரையை மன்னனறிந் திலனென்று பேசுற்றாளே.

இ-ள். ஆதலால் ஆதலினால், பேதையாய் - பேதமை யுடையவளா யும், அறிவிலியாய் - அறிவில்லாதவளாயும், அலைபவளாய் - சஞ்சலமுள்ள வளாயும், அநேகஞ்சொல்லால்-பல வசனங்களினாலும், போத நீகளிக்கின்று யென - மிகவுஞ்சந்தோஷிக்கின்று யென்றுசொல்லி, வெடிக்க நகைத்து - வெளிப்படச்சிரித்து, மன்னன் - அரசனானவன், அயலேபோனான்-வேறோ ரிடத்திற்சென்றான், மாதரான் - சூடாலையானவள், அதற்கிரங்கி - அவ்வறி யாமைக் கிரக்கமுற்று, தன்னறிவி லிளைப்பாறி - ஆத்மஞானத்தில் விஸ்ரா ந்தியடைந்து, மகிழானாகி-சுகியாதவளாய், பேதமாய்-வேற்றுமையாக, என் னுரையை - எனதுவாக்கியத்தை, மன்ன னறிந்திலனென்று - அரச னறிய வில்லையென்று, பேசுற்றாள் - சொன்னாள்—எ-று.

எ-து. ஆதலினாற் பேதமை யுடையவளாயும், அறிவில்லாத வளாயும், சஞ்சலமுள்ளவளாயும், பல வசனங்களினாலும் மிகவுஞ் சந்தோஷிக்கின்றாயென்று சொல்லி வெளிபடச்சிரித்து அரசனான வன் வேறோரிடத்திற் சென்றான். சூடாலையானவள் அவ்வறியா மைக் கிரக்கமுற்று ஆத்மஞானத்தில் விஸ்ராந்தியடைந்து சுகியாத வளாய் வேற்றுமையாக எனதுவாக்கியத்தை அரசனறியவில்லை யெ ன்றுசொன்னாள்—எ—ம். (27)

இதுவுமது

பின்னருமன்னனுந்தானுந் தலைநாட்போற் பேதமறப் பெரு நாள் வாழ்ந்தார், துன்னுமமை வாயாசை யொன்று மிலாதிருந்துஞ் சூடாலைதானே, புண்ணியமாகாசந் தனிநடக்க வியற்றுதுமென்று றுபோகங்க, ளின்னலறவனைத்தையும்விட்டே காந்தச்சுகாசனத்தி லிருக்கையெய்தி.

இ - ள். பின்னரும் - பின்பும், மன்னனுங்கானும்- இராசனுஞ் சூடாலையும், தலைநாட்போல்-முற்காலம்போல, பேதமற-வேற்றுமையில்லாமல், பெருநாள்வாழ்ந்தார் - வெகுகாலஞ்சுகித்தார்கள், துன்னுமமைவாய் - மிகுந்தவமைதியையுடையவளாய், ஆதை - அவாவானது, ஒன்றுமில்லாதிருந்தும்-சற்றுமில்லாதிருந்தும், சூடாலை - சூடாலையானவள், தானேயுன்னி - சுயமாக நினைத்து, உயராகாசந்தனினடக்க- மேலான ஆகாயகமனஞ்செய்ய, இயற்றுதுமென்று - செய்வோமென்று, உறுபோகங்கள்- மிகுந்த போகங்களின், இன்னலற - துன்பநீங்க, அனைத்தையும்விட்டு-சகலத்தையுநீக்கி, ஏகாந்தம்-ஏகாந்தஸ்தானத்தில், சுகாசனத்தில் - சுகாசனத்தினில், இருக்கையெய்தி-இருந்து—எ-று.

எ — து. பின்பும் இராசனுஞ் சூடாலையு முற்காலம்போல வேற்றுமையில்லாமல் வெகுகாலஞ் சுகித்தார்கள். மிகுந்த அமைதியையுடையவளால் அவாவானது சற்றுமில்லா திருந்தும் சூடாலையானவள் சுயமாக நினைத்து மேலான ஆகாயகமனஞ்செய்ய செய்வோமென்று மிகுந்த போகங்களின் துன்பநீங்க சகலத்தையுநீங்கி ஏகாந்த ஸ்தானத்தில் சுகாசனத்தினில் இருந்து—எ-ம்

(இ-கூ-கூ-ம்.) நாயகனைமுன்னிட்டு பாவிச் சாபிராரத்தத்தினுன் யோகிந்தகம் வத்தனென்பதாம். (28)

## ஆகாயகமனமுதலிய சித்திகள் வருமார்க்க மியாதென வினவுதல்.

பெரியபிராணனைநேரே மேனேக்கப் பழகினுள் பெருநாளென்னை, கரியமுகில் கேட்டருளி மிகவருந்தி நெடுகாலங் கையாண்டக்கா லரியவிசும் பினிடைத்தன் முதலான சித்தியெலா மளிக்கத்தக்க, வுரியவழி யெது சொல்வா யெனக்கேட்ப வசிட்டமுனி யுரைப்பதானுன்.

இ - ள். பெரியபிராணனை-பெரிதானபிராணவாயுவை, நேரேமேனேக்க-நேரேமேனேக்கும்படியாக, பெருநாள் - வெகுநாள், பழகினுளென்ன-அப்பியாசித்தாளென்று வசிட்டமுனி சொல்ல, கரியமுகில் கேட்டருளி - கரியமேகவண்ணனுன ஸ்ரீராமன்கேட்டு, மிகவருந்தி-மிகவும் வருத்தப்பட்டு நெடுங்காலம்-வெகுகாலம், கையாண்டக்கால் - அப்பியாசஞ்செய்தால், அரியவிசும்பினிடைத்தல் - அரிதான ஆகாயகமனஞ்செய்தல், முதலானசித்தியெலாம் - முதலாகிய சித்திகளனைத்தையும், அளிக்கத்தக்க - கொடுக்கத்தகுந்த உரியவழியெது-உரித்தானமார்க்கமியாது, சொல்வாயெனக்கேட்ப - அருள்வாயென்றுகேட்க, வசிட்டமுனியுரைப்பதானுன் - வசிட்டமுனிசொல்லத்தொடங்கினுர்—எ-று.

எ - து. பெரிதான பிராணவாயுவை நேரே மேனோக்கும்படியாக வெகுநா ளற்பியாசித்தாலென்று வசிட்டமுனி சொல்ல, கரிய மேகவண்ணனை ஸ்ரீராமன்கேட்டு மிகவும் வருத்தப்பட்டு வெகு காலம் அற்பியாசஞ்செய்தல் அரிதான ஆகாய கமனஞ் செய்தல் முதலாகிய சித்திகளனைத்தையுங் கொடுக்கத்தகுந்த உரித்தானமார்க்கமியாது? அருள்வாயென்று கேட்க, வசிட்டமுனி சொல்லத் தொடங்கினார்—எ—ம். (29)

## பிராணயாமத்தாற் சித்திகளுண்டாகு மற்பியாசங்களை அறிவிக்கத்தொடங்கல்.

சீமானுஞ் சிகித்துவசன் கதைக்கிடையே வினவுதலாற் செப்புகின்றேன், கோமானே பிராணுதி பவனத்தின் பரிசயத்தின் கொள்கையாகிச், சாமாறில் லாப்பயன்செய் நெறிகேட்பாய வாதனைகள் சற்றுமின்றிப், போமாறு செய்துளத்தி லிதற்கடுத்த வாதனையே பொருந்திநின்று.

இ - ள். சீமானும் - செல்வனுகிய, சிகித்துவசன் - சிகித்துவாசன் கதைக்கிடை - கதைக்கு மத்தியில், வினவுதலால் - (யோகங்) கேட்கின்றபடியால், செப்புகின்றேன் - (அதைச்) சொல்லுகின்றேன், கோமானே - இராசாவே, பிராணுதிபவனத்தின் - பிராணன்முதலியவாயுவின், பரிசயத்தின், பழக்கத்தினது, கொள்கையாகி - குணமாகி, சாமாறிலாப்பயன்செய் - மரியாதப் பிரயோசனத்தைக்கொடுக்கின்ற, நெறிகேட்பாய் - மார்க்கத்தைக்கேட்கக்கடவாய், சற்றும்வாதனைகளின்றி - எவ்வளவும் வாசனைகளில்லாமல், போமாறுசெய்து - நீங்கும்படிசெய்து, உள்ளத்தில்-மனதினிடத்தில், இதற்கடுத்தவாதனையே-இச்சாதனத்துக்குத்தகுந்தவாசனையே, பொருந்திநின்று-அடைந்திருந்து—எ-று.

எ - து. செல்வனுகிய சிகித்துவாசன் கதைக்கு மத்தியில் யோகங் கேட்கின்றபடியால் அதைச்சொல்லுகின்றேன், இராசாவே பிராணன் முதலிய வாயுவின்பழக்கத்தினது குணமாகி, மரியாத பிரயோசனத்தைக் கொடுக்கின்ற மார்க்கத்தைக் கேட்கக்கடவாய் எவ்வளவும் வாசனைகளில்லாமல் நீங்கும்படிசெய்து மனதினிடத்தில் இச்சாதனத்துக்குத் தகுந்த வாசனையே யடைந்திருந்து-எ-ம்.

குதமுதலாந் துவாரத்தின் சிறுமையாற் றனமுதற் குறிக்குஞ் செய்கை, விதிவொழுக்காற் போசனத்தாற் சுகாதனத்தாற் சுத்தத்

தான் மிக்கநன்னூ, லுதவுபொருட் பாவனையாலதனுசா ரத்தினுலு யர்ந்தோர் சார்வா, லதனையொழிந் தனவெல்லாம் விடுத்தலாலடுத் த பிராணுயாமத்தால்.

இ - ள். குதமுதலாம் - குதமுதலாகிய, துவாரத்தின் - இரந்தரங்களி னது, சிறமையால்-சுருக்கத்தினுலும், தானமுதல் - (மகாமுத்திரையான) தானமுதலாக, குறிக்குஞ்செய்கை - குறிக்கின்றதொழில்களின், விதவொ ழுங்கால் - விதமான முறைமையினுலும, போசனத்தால் - உணவினுலும், சுகாசனத்தால்-சுகாசனத்தினுலும், சுத்தத்தால்-பரிசுத்தத்தினுலும், மிக்க நன்னூல் - மிகுந்த நன்மையுள்ள (யோக, சாஸ்திரங்களினுலும், உதவு பொ ருட்பாவனையால் - உதவாநின்ற வருத்தசிந்தனையினுலும், அதனுசாரத்தி னல் - அதனடையினுலும், உயர்ந்தோர்சார்வால் - மேலான சத்துக்களின் சார்பினுலும், அதனை யொழிந்தனவெல்லாம் - அவையொழிந்த மற்றச்சகலத் தையும், விடுதலால்-நீக்குதலாலும், அடுத்த பிராமணுயாமத்தால் - சேர்ந்த பிராணுயாமத்தினுலும்—எ-று.

எ - து. குதமுதலாகிய விரந்தரங்களினது சுருக்கத்தினுலும் மகாமுத்திரையான தானமுதலாகக் குறிக்கின்ற தொழில்களின்வித மான முறைமையினுலும். உணவினுலும், சுகாசனத்தினுலும். பரி சுத்தத்தினுலும், மிகுந்த நன்மையுள்ள யோகசாஸ்திரங்களினுலும், உதவாநின்றவருத்த சிந்தனையினுலும், அதனடையினுலும், மேலான சத்துக்களின் சார்பினுலும், அவையொழிந்த மற்றச் சகலத்தையும் நீக் குதலாலும் சேர்ந்த பிராமணுயாமத்தினுலும்—எ-ம்.

குதாதிதுவார நிரோதத்துக்குக்காரணங்கள் மூலபந்தாதிகள். அவை களின் மூலபந்தனமென்றது குதிகாலினல் யோனியைப்பிடித்துக் குதத் தைச்சுருக்கி அபானவாயுவை மேலே யாகர்ஷணஞ்செய்தல், தானமுத லென்றது தசவிதமுத்திரை, போசனமென்றது அறுதாசமாமுணல் சுகா சனமென்றது அந்தந்த யோகத்துக்குத்தகுந்த ஆசனங்கட்டல், பிராணுயாம மென்றது ரேசகபூரக கும்பகஞ்செய்தல். (31

கோவலோ பாதியும்போ கம்விடுத்த லாச்சிலர்த்துக் குறித்த நாளி, லோவிலாப் பற்றுவி டொழிந்தாநாட்கை வசமாயுயிர்கடா தேவரு பிகளாத லாற்றங்கள் குணமழிந்து சேர்ந்துளோருக், கேவ லாட் போலுகை யாள்விக்கும் விடலிக்கு மெல்லாநல்கும்.

இ - ள். கோவலோபாதியும்-குரோத லோபமுதலியவைகளையும், போ கம் - போகங்களையும், விடுத்தலால் - நீக்குதலினுலும், சிலர்க்குக் குறித்த நாளில் - சிலபேர்களுக்குக் குறித்தகாலத்தில், ஓவிலாப்பற்றுவீடு - ஒழிந்த

பற்றுதலும்- விடுதலும், ஒழிந்தநாள் - நீங்கியகாலத்தில், கைவசமாய்- கைவசமாக, உயிர்கடாம் - பிராணன்களானவை, தேவ ரூபிகளாதலால் - தேவவடிவமாகின்றபடியால், தங்கள் குணமறிந்து சேர்ந்துளோர்க்கு - அந்த வாயுக்களின் றன்மை யுணர்ந்தடைந்தவர்களுக்கு, ஏவலாட்போ லுலகையாள்விக்கும் - பரிசனங்களைப்போலச் சகத்தை யாளும்படி செய்யும், வீடளிக்கும்- மோக்ஷத்தைக்கொடுக்கும், எல்லாநல்கும் - சகல (சித்தியை) யுங்கொடுக்கும்— எ-று.

எ-து. குரோதலோப முதலியவைகளையும் போகங்களையும் நீக்குதலினாலும், சிலபேர்களுக்குக் குறித்தகாலத்தில் ஒழியாதபற்றுதலும் விடுதலும் நீங்கியகாலத்தில் கைவசமாகப் பிராணன்களானவை தேவவடிவ மாகின்றபடியால் அந்த வாயுக்களின் றன்மையுணர்ந்தடைந்தவர்களுக்குப் பரிசனங்களைப்போலச் சகத்தையாளும்படிச் செய்யும், மோக்ஷத்தைக்கொடுக்கும், சகல சித்தியையுங்கொடுக்கும்,

(இ-கு-க-ம்.) இச்சாதனைத்துக் கிரமமான வாசனைக ளனைத்தையுந் தள்ளிக் குகத்துவாரத் திருகன் முதலிய சாதனங்களினுற் பிராணன் கைவசமானு லதையறிந்த புருடனுக் கப்பிராணுதிவாயுவுக ளேவலாளைப்போலச் சக முதலியவற்றைச் சுவாதீனமாக்கு மென்பதாம் (32)

## ஆந்தரவேஷ்டனியி லக்கணமுரைத்தல்.

ஆந்திரவேட் டனிகையென்றோர் தனிநாடி நாடிகளூா றணுகிநிற்கும், வாய்ந்தவிசை வீணையுடல் வட்டம்போ னீர்ச்சுழிபோல் வட்டமேயா, மேய்ந்தவிடங்க ளெலா மெய்தலூறு மயனிடத்துமெறும்பின்பாலும், போந்துளபல் லுயிரிடத்து முடோறுந்தோன்றியே பொருந்திநிற்கும்.

இ - ள். ஆந்திரவேட்டனிகையென்று - ஆந்திரவேட்டனிகையென்னு நாமத்தையுடைய, ஓர்தனிநாடி-ஒப்பற்ற வொருநாடியானது, நாடிகளூாறு - நூறுநாடிகளினடுவே அணுகிநிற்கும் - பொருந்தியிருக்கும், வாய்ந்தவிசை- பொருந்திய விராகத்தையுடைய, வீணையுடல்-வீணையினங்கத்திலுள்ள, வட்டம்போல் - விர்த்தத்தைப்போலவும், நீர்ச்சுழிபோல் - நீர்ச்சுழியைப்போலவும், வட்டமேயாம் - விர்த்தமேயாகும், எய்ந்துள-பொருந்திய, தானங்களெல்லாம்-இடங்களனைத்தும், எய்தலூறும் - அடையும், அயனிடத்தும்-பிரமாவினிடத்து, எறும்பின்பாலும் - பிபீலிகத்தினிடத்தும், போந்துளபல் லுயிரிடத்தும் - உண்டான சகலசீவர்களிடத்துமுள்ள, உடோறும் - சரீ

ரங்கடோறும், தோன்றியே பொருந்திநிற்கும் - உண்டாகி யடைந் திருக்கும்—எ-று.

எ - து. ஆந்திரவேட்டனிகையென்னு நாமத்தை யுடையதைப் பற்ற வொருநாடியானது நாறுநாடிகளினடுவே பொருந்தியிருக் கும். பொருந்திய விராகத்தையுடைய வீணையினங்கத்திலுள்ள விர்த் தத்தைப்போலவும், நீர்ச்சுழியைப் போலவும் விர்த்தமேயாகும் பொருந்திய விடங்களனைத்தும், அடையும் பிரமாவினிடத்தும், பிபீலிகத்தினிடத்தும் உண்டான சகலசீவர்களிடத்து முள்ள சரீரங்க டோறு முண்டாகி யடைந்திருக்கும்—எ-ம். (33)

## குண்டலிசத்தியி னிலக்கணங்கூறல்.

சீதவருத் தத்தினுற் றுயில்பாம்பி னுடல்போற்சிக் கெனவளைந் தெப், போதுமசை வறுங்காற்று னிலைநிற்குங் கதலியின் மென்பூப் போலுள்ளு,மேதமகமெல்லியதாகு மதனூடே யொருசத்தி விசுத்த மாகி, யேமறு பரமமாய்ச் சத்திகட்கெல்லாம் வெற்றி யெய்தநல் கும்.

இ - ள். சீதவருத்தத்தினுல் - குளிர்ச்சியின் வருத்தத்தினுல், துயில்- நித்திரைசெய்கின்ற, பாம்பினுடல்போல் - அரவினங்கத்தைப்போல, சிக் கெனவளைந்து-கெட்டியாகவளைந்து,எப்போதும்-சதாகாலமும், அசைவறும்- அசைவற்ற, காற்றுனிலைநிற்கும் - ஆந்திரவேட்டனிகையானது) பிராண வாயுவினு னிலையாயிருக்கும், கதலியின் மென்பூப்போல் - வாழையினது மிருதுவானமலரைப்போல, உள்ளும்- அகத்திலும், மேதக - மேன்மையாக, மெல்லியதாகும்-மிருதுவானதாகும், அதனூடு - அவ்வாந்தரவேட்டனிகை யினிடத்தில், ஒருசத்தி - ஒரு (குண்டலி) சத்தியானது, விசுத்தமாகி - பரி சுத்தமாய், ஏதமறுபரமமாய் - குற்றமற்ற மேலானதாய், சத்திகட்கெல்லாம்- சத்திகளனைத்திற்கும், வெற்றியெய்தநல்கும் - சயத்தை யடையக்கொடுக் கும்—எ-று.

எ - து. குளிர்ச்சியின் வருத்தத்தினுல் நித்திரை செய்கின்ற அரவினங்கத்தைப்போலக் கெட்டியாக வளைந்து சதாகாலமு மசை வற்ற ஆந்திரவேட்டனிகையானது பிராணவாயுவினு னிலையாயிரு க்கும். வாழையினது மிருதுவான மலரைப்போல அகத்திலும் மே ன்மையாக மிருதுவானதாகும். அவ்வாந்தர வேட்டனிகையினிட த்தில் ஒருகுண்டலிசத்தியானது பரிசுத்தமாய்க் குற்றமற்றமேலா னதாய்ச் சத்திகளனைத்திற்கும் சயத்தை யடையக்கொடுக்கும்—எ-ம்.

இதுவுமது.

முனிவுறுபெண் பாம்புபோன் மூச்செறியு மெப்போது முக
மேலாகு, மனிசமசை வுக்கேது வாமிதயகோசத்தை யடைந்தநாடி
யெனையவுமிங் கிதனிடையே கட்டுண்ணுங் குண்டலினி யிதன்பே
ராகுந், துனைதலுற வசைகின்ற பரிசவறி வின்கலையாற் ,சுத்தமாகும்.

இ - ள். முனிவுறு பெண்பாம்புபோல் - கோபமிருந்தபெண் சர்ப்பத்தைப்போல, மூச்செறியும் - பெருமூச்சுவிடும். எப்போதும்-சதாகாலமும், முகமேலாகும் - வதனமேலாயிருக்கும், அனிசம் - எப்போதும், அசைவுக்கேதுவாம் - சலனத்துக்குக்காரணமாகும், இதயகோசத்தை - மனப்பெட்டியை, அடைந்த - சேர்ந்திருக்கின்ற, நாடியெனையவும் - நாடிகளியாவும், இதனிடை - இக்குண்டலிசத்தியி னிடத்தில், கட்டுண்ணும் - பந்தப்படும், இதன்பேர் - இதனதுநாமம், குண்டலினியாகும் - குண்டலினி சத்தியாம், துனைதலுற அசைகின்ற பரிசம் - நெருக்கமாகவியங்குகின்றபரிசமான, அறிவின் கலையாற் சுத்தமாகும் - ஞானத்தினது கலையினாற் பரிசுத்தமாகும் - எ - று.

எ - து. கோபமிருந்த பெண்சர்ப்பத்தைப்போலப் பெருமூச்சுவிடும், சதாகாலமும் வதனமேலாயிருக்கும், எப்போதுஞ்சலனத்துக்குக் காரணமாகும், மனப்பெட்டியைச் சேர்ந்திருக்கின்ற நாடிகளியாவும் இக்குண்டலிசத்தியினிடத்தில் பந்தப்படும். இதனது நாமம் குண்டலினிசத்தியாம், நெருக்கமாகவியங்குகின்ற பரிசமான ஞானத்தினது கலையினாற் பரிசுத்தமாகும் — எ - ம்.

(இ-ரு-க-ம்.) சதநாடியின் மத்தியின் விளங்கிய ஆந்தர வேஷ்டினியியல்பையு மதனிடமாக விளங்கிய குண்டலிசத்தியி னியல்பையுந்தெரிவித்ததாம். (35)

## இக்குண்டலிசத்தியின் பாவனையே கலைகண்முதலிய வாய்ப்புரியட்டக சரீரமாமெனல்.

சிந்தனையாற் கலையாகுஞ் சேதனத்தாற் சித்தாகுஞ் சீவனத்தாற், சந்தமுறு சீவனு மன்னத்தான் மனமாகுஞ் சங்கற்பந்தா, லந்தமில்சங் கற்பமாம் போதத்தாற் புந்தியா மகங்காரத்தால், வந்தவகங் காரமா மிவையபுரி யட்டகப்பேர்மருவுந்தானே.

இ - ள். சிந்தனையாற்கலையாகும் - (அக்குண்டலி சத்தியானது) சிந்தனையினாற் கலையாகும், சேதனத்தாற் சித்தாகும் - ஞானத்தான் ஞானமாம்,

சீவனத்தால்-சீவனத்தினுல், சுந்தரமுறுசீவனும்-அழகுபொருந்திய சீவனும், மனனத்தால் - மனனத்தினுல், மனமாகும், மனமாகும், சங்கற்பத்தால் - சங்கற்பத்தினுல், அந்தமில்சங்கற்பமாம் - அளவற்ற சங்கற்பமாகும், போதத்தால் - (நிச்சய) அறிவினுல், புத்தியாம் - புத்தியாகும், அகங்காரத்தால்- அகம்பாவத்தால், வந்த வகங்காரமாம் - வரப்பட்ட அகங்காரமாகும், இனையம் இப்படிப்பட்ட, புரியட்டகப்பேர்மருவும் - புரியட்டகமென்னு நாமத்தைப் பொருந்தும்—எ-று.

எ — து. அக்குண்டலி சத்தியானது சிந்தனையினுற் கலையாகும், ஞானத்தான் ஞானமாம், சீவனத்தினு லழகுபொருந்திய சீவனுகும் மனனத்தினுல் மனமாகும் சங்கற்பத்தினு அளவற்ற சங்கற்பமாகும், நிச்சயவறிவினுற் புத்தியாகும், அகம்பாவத்தால் வரப்பட்ட அகங்காரமாகும், இப்படிப்பட்ட புரியட்டகமென்னுநாமத்தைப்பொருந்தும்—எ-ம். (36)

## குண்டலினிசத்தியேபிராணுபானருபமாய்ச் சீவனுக்குச் சநநமரணத்தைக் கொடுக்குமெனல்.

குண்டலினி யெனுஞ்சீவ சத்திமிக நல்லதாய்க் கூடிநிற்கு, மண்டுபிரா ணுபான வடிவமாதலிற்கீழ்மேல் வந்துபோகு, மிண்டற மேற் போகினுமெல்லாமாய்ப்போ மீளினுமெல்லாமாய்மீருந், தண்டலிலாப் புமாணுகிச் சாமேவும் பிராணனு மச்சத்தித்தானே.

இ - ள். குண்டலினியெனும் - குண்டலினியென்கின்ற, சீவசத்தி- சீவசத்தியானது, மிகநல்லதாய்-மிகவுநன்மையதாக, கூடிநிற்கும் - (தேகத்தில்) புணர்ந்திருக்கும், மண்டு - நெருங்கிய, பிராணுபான வடிவமாதலில் - பிராண வபானவுருவமாதலினுல், கீழ்மேல் - கீழினுமேலினும், வந்துபோகும் - வருதலும் போதலுமாகும், மிண்டற - உறுதியில்லாமல், எல்லாமாய் - சமஸ்தமுமாய், மேற்போகினும்போம் - ஊர்த்தமுகத்திற் சென்றாலுஞ்செல்லும், எல்லாமாய் சகலமுமாய், மீளினுமீளும் - (அதோமுகத்தில்) திரும்பினுந்திரும்பும், தண்டலிலா-தடையில்லாமல், புமாணுகி-சீவனுய், சாமேவும்-மரணத்தையடைகின்ற, பிராணனும்-பிராணவாயுவும், அச்சத்திதான்- அந்தக் குண்டலிசத்தியேயாம்—எ-று.

எ - து. குண்டலினியென்கின்ற சிவசத்தியானது மிகவுநன்மையதாகத் தேகத்திற் புணர்ந்திருக்கும். நெருங்கிய பிராணவபானவுருவமாதலினுல் கீழினு மேலினும் வருதலும் போதலுமாகும். உறுதியில்லாமல் சமஸ்தமுமாய் ஊர்த்த முகத்திற் சென்றாலுஞ் செல்

லும் சகலமுமாய் அதோகமுகத்திற்றிரும்பினுலுந்திரும்பவும், தடையில்லாமல் சீவனாய் மரணத்தை யடைகின்ற பிராணவாயுவு மந்தக் குண்டலி சத்தியேயாம்—எ-ம்.

## அக்குண்டலினிசத்தி பிராணசலனமின்றி யசைவற நிற்கிற் சராமரணவியாதி யுண்டாகாவெனல்.



தன்னிடத்தே யெப்படியும் போக்குவரத் தொழித்திந்தச்சத்தி னிற்கின், மன்னுயர்க்கு நோய்வாரா துள்ளுறவே மாருதத்தைமறுத் தலாலே, யென்னலுமே யாதிவியாதிகளிரண்டுந் தோன்றுதலுமிறத் தலுனு, நின்னருளா லுரையென்ன விராகவன்கேட் டலும் வசிட்ட னிகழ்த்தலுற்றான்.

இ - ள். தன்னிடத்து - தனதிடத்தில், எப்படியும் - எவ்விதத்திலும், போக்குவரத்தொழித்து - செல்லுதன்மீள் தலைக்கெடுத்து, இந்தச்சத்திநிற்கின்-இக்குண்டலிசத்தி நின்றால், உள்ளுற - அகத்திற் சேர, மாருதத்தை மறுத்தலால் - (பிராண) வாயுவைத் தடுத்தலினால், மன்னுயிர்க்கு - நிலைபெற்ற சீவர்களுக்கு, நோய்வாரா - வியாதிவரமாட்டாது, என்னலும் - என்று சொல்லவும், ஆதிவியாதிகள் - ஆதியும் வியாதிகளுமாகிய, இரண்டுந் தோன்றுதலும் - இரண்டுமுண்டாகுதலையும், இறத்தலுனும் - நசித்தலையும், நின்னருளா லுரையென்ன உமது கிருபையினாற் சொல்லவேண்டுமென்று, இராகவன் கேட்டலும் - ஸ்ரீராமன் கேட்டவளவில், வசிட்டன் நிகழ்த்தலுற்றான் - வசிட்டமுனி சொல்லத்தொடங்கினார்.

எ - று. தனதிடத்தி லெவ்விதத்திலுஞ் செல்லுதன் மீள்தலைக் கெடுத்து இக்குண்டலிசத்தி நின்றால் அகத்திற்சேரப் பிராணவாயுவைத் தடுத்தலினால் நிலைபெற்ற சீவர்களுக்கு வியாதிவரமாட்டாது என்று சொல்லவும்; ஆதியும் வியாதிகளுமாகிய இரண்டு முண்டாகுதலையும், நசித்தலையும் உமது கிருபையினாற் சொல்லவேண்டுமென்று ஸ்ரீராமன் கேட்டவளவில் வசிட்டமுனி சொல்லத்தொடங்கினார்.

(இ-ரு-க-ம்.) குண்டலினிசத்தியின் அசைவே பவநோயும் அஃதின்மையே அந்நோய் நிவர்த்தியு மென்பதாம். (38)

## ஆதிவியாதியி னுற்பத்திலய மியாதென்ற வினவுக் குத்தாரங்கூறல்.

---

அங்கத்தின் வருத்தத்தை நோயென்பா வாதனையை யாதியெ ன்பர், பங்கற்ற ஞானலயத் தேகாபி மூலத்தே பயிலுமாதி, பொங்

குற்ற ஞானமிலா மையிற்பொறிக டமையடக்கப் போகாவாற்ருற்,
றங்குற்ற விதயத்திற் சிறுமையற மால்கோபந்தழைத்தலாலே.

இ - ள். அங்கத்தின்வருத்தத்தை - சரீரத்தினதுதுன்பத்தை, நோயென்பர் - வியாதியென்பார்கள், வாதனையை - (அந்தக்கரண) வாசனையை, ஆதியென்பர் - ஆதியென்று சொல்லுவார்கள், பங்கற்றஞானலயத்து - பேதமுள்ள அஞ்ஞானத்தினால், நாபிமூலத்து - உந்தியினது மூலத்தில், ஆதிபயிலும் - ஆதியானதுண்டாயிருக்கும், பொங்குற்ற - உயர்வுள்ள, ஞானமிலாமையில் - ஞானமில்லாமையினாலும், பொறிகடமை - இந்திரியங்களை, அடக்கப்போகாவாற்ருல் - அடக்கப்படாதபடியினாலும், தங்குற்றவிதயத்தில் - தங்காநின்றமனதில், சிறுமையற - விஸ்தாரமாய், மால் - ஆசையும், கோபம் - அகங்காரமும், தழைத்தலால - வளர்தலினாலும்—எ-று.

எ - து. சரீரத்தினது துன்பத்தை வியாதியென்பார்கள், அந்தக்கரணவாசனையை ஆதியென்றுசொல்லுவார்கள். பேதமுள்ளவஞ்ஞானத்தினால் உந்தியினது மூலத்தில் ஆதியான துண்டாயிருக்கும். உயர்வுள்ள ஞானமில்லாமையினாலும், இந்திரியங்களை யடக்கப்படாதபடியினாலும், தங்காநின்ற மனதில் விஸ்தாரமாய் ஆசையும் அகங்காரமும் வளர்தலினாலும்—எ—ம். (39)

இதுபெற்ருே மீதில்லை யென்னுமவ தானத்தா லிறுகுமோக,
மதுமெத்த வுண்டாக மறைநாளிற் செறிபனிபோ லாதிதுன்னு,
முதிரிச்சை வெளியாகி மூற்கபா வனைசால முற்றும்போதில், விதியுற்றதொழிலன்றித் தீத்தொழில்கள்செய்தலினால் வியாதியுண்டாம்.

இ - ள். இதுபெற்ரோம் - இதையடைந்தோம், ஈதில்லையென்னும் - இஃதுடைய தில்லையென்கின்ற, அவதானத்தால் - அவதானத்தினால், மோகமிறுகும் - மோகங்கெட்டிப்படும், அதுமெத்தவுண்டாக - (அம்மோகம்) மிகவுமுண்டாக, மறைநாளில் - வருடகாலத்தில், செறிபனிபோல் - மிகுந்த பனியைப்போல, ஆதிதுன்னும் - ஆதியானதுநெருங்கும், முதிரிச்சைவெளியாகி - மிகுந்தவாசனையானதுவெளிப்பட்டு, மூர்க்கபாவனை - மூடபாவனையானது, சாலமுற்றும்போதில் - மிகவுமுதிருங்காலத்தில், விதியுற்றதொழிலன்றி - நியமித்தவிபகாரத்தைய யல்லாமல், தீத்தொழில்கள் - கொடியவிபகாரங்களை, செய்தலினால் - செய்கின்றதினால், வியாதியுண்டாம் - (சரீர) வியாதியுண்டாகும்—எ-று.

எ - து. இதையடைந்தோம் இஃதுடையதில்லை யென்கின்ற அவதானத்தினால் மோகங்கெட்டிப்படும். அம்மோகமிகவுமுண்டாக வருடகாலத்தில் மிகுந்த பனியைப்போல ஆதியானது நெருங்கும்.

மிருந்த ஆசையானதுவெளிப்பட்டு மூடபாவனையானது மிகவுமுதிருங்காலத்தில் நியமித்தவிபகாரத்தை யல்லாமல் கொடிய விபகாரங்களைச் செய்கின்றதினால் சரீரவியாதியுண்டாகும்—எ-ம்.

(இ-உ-க-ம்) வாசனாரூபமான வாதியுந் தேகவருத்தமான வியாதியும் அதனிலக்கணமும் அவைகளுற்பத்தியுங் கூறினதாம். (40)

## வியாதியுண்டாகுதலின் காரணமுரைத்தல்.

பொல்லாதவுணவினாற் பொல்லாததேசத்திற் போகைதன்னாற்,
பொல்லாதகாலவிவ காரத்தாற்செய்தொழில்கள் புரிபொல்லாப்பாற்,
பொல்லாதகயவருறுகூட்டத்தாற்பொல்லாதபொருளெண்ணத்தாற்
பொல்லாதவிச்சையாற்பொல்லாதவெண்ணிக்கைபொருந்தறன்னால்.

இ - ள். பொல்லாதவுணவினால் - துற்புசிப்பினாலும், பொல்லாததேசத்திற்போகைதன்னால் - கொடியதேயங்களிற் சஞ்சரித்தலினாலும், பொல்லாதகாலவிவகாரத்தால் - துற்காலவிவகாரங்களினாலும், செய்தொழில்கள் - செய்கின்ற கிருத்தியங்களின், புரிபொல்லாப்பால் - கட்டுப்படும்பொல்லாங்குகளினாலும், பொல்லாத கயவருறுகூட்டத்தால் - துற்சனசங்கத்தினாலும், பொல்லாத பொருளெண்ணத்தால் - கொடியவஸ்துவை நினைத்தலாலும், பொல்லாதவிச்சையால் - துராசையினாலும், பொல்லாதவெண்ணிக்கைபொருந்தறன்னால் - துர்நினைப்படைதலினாலும்—எ-று.

எ - து. துற்புசிப்பினாலும், கொடிய தேயங்களிற் சஞ்சரித்தலினாலும், துற்கால விவகாரங்களினாலும், செய்கின்ற கிருத்தியங்களின் கட்டப்படும் பொல்லாங்குகளினாலும், துற்சனசங்கத்தினாலும், கொடிய வஸ்துவை நினைத்தலாலும், துராசையினாலும், துர்நினைப் படைதலினாலும்—எ-ம். (41)

இதுவுமது.

நாடிகளில் வெளிகளுக்கள் சிறுகுதலாற் பெருகுதலானற்பிராண, னோடிமிகச் சிதறலுமே யுடலுறலுஞ் சிதறுதலை யுறுமுற்றக்காற்,
கேடிதெனமுன்னுரைத்தகுற்றங்கள் காரணமாய்க்கிளர்நோயுண்டா.
நீடியகோ டையுமழையு நதிக்குறைவு நிறைவுகளை நேருமாபோல்.

இ - ள். நாடிகளில் - நாம்புகளிடத்தில், களுக்களவெளி - களுக்களின துவாரங்கள், சிறுகுதலாற்பெருகுதலால் - சிறுத்தல்பெருத்தலினாலும், நற்பிராணன் - நல்லபிராணவாயுவானது, ஓடிமிகச்சிதறும் - ஓடிமிக

வுஞ் சின்னாபின்னமாகவும், உடலானுஞ்சிதறுதலையும் - தேகமுஞ் சிதறுதலையடையும், உற்றக்கால் - (அதை) யடைந்தால், கேடிதெனா - கேடிது வென்னும்படி, முன்னுரைத்த குற்றங்கள் - முன்சொல்லப்பட்ட குற்றங்களானவை, காரணமாய் - மூலமாக, நீயடிகோடையுமழையும் - நீண்ட வேனிற் காலத்திலும் வருடகாலத்திலும், நதி - ஆற்றுநீர், குறைவுநிறைவுகளை - குறைவையு நிறைவையும், பெறுமாபோல் - பெறுகின்றதுபோல, இனர் நோயுண்டாம் - தேகத்தின் மிகுந்த வியாதியுண்டாம்—எ-று.

எ - து. நரம்புகளிடத்திற் கணுக்களினது ரந்தனங்கள் சிறுத்தல் பெருத்தலினாலும், நல்ல பிராணவாயுவானது ஓடி மிகவுஞ் சின்னாபின்னமாகவுந் தேகமுஞ் சிறுதலையடையும். அதையடைந்தால் கேடிது வென்னும்படி முன்சொல்லப்பட்ட குற்றங்களானவை மூலமாக நீண்ட வேனிற்காலத்திலும் வருடகாலத்திலும் ஆற்றுநீர் குறைவையு நிறைவையும் பெறுகின்றதுபோல தேகத்தின் மிகுந்த வியாதியுண்டாகும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) செயற்கைத்தொழிலே வியாதி யுதிப்பதற்குக் காரணமென்பதாம். (42)

## ஆதிவியாதியுண்டாகும் ஸ்தானமுரைத்தல்.

தொல்லையதாகினுமிங்குள் ளனவெனினுஞ் சுபமெனினு மசுபமேனு, பெல்லையற மிகுந்ததேதது தன்பா லப்படியே யிழுத்துக்கொள்ளும், புல்லுறவிவ் வகையாகி யாதிவியா திகளைந்து பூதத்துண்டாஞ், சொல்லியவிவ் வாதிமடா னிருவகையா யிறக்குநெறி சொல்லக்கேட்பாய்.

இ - ள். தொல்லையதாகினும் - பழைய சரீரத்திலுள்ளதானாலும், இங்குள்ளனவெனினும் - இச்சரீரத்திலுள்ளதானாலும், சுபமெனினும் - சுபமானாலும், அசுபமெனும் - அசுபமானாலும், எல்லையற - அளவின்றி, மிகுந்ததேது (மிகுந்த வர்சனை) யெதுவோ, அது தன்பால் - அது தன்னிடத்தில், அப்படியே யிழுத்துக்கொள்ளும் - அவ்வண்ணமே கிரகித்துக்கொள்ளும், புல்லுற - பொருந்தும்படியாக, இவ்வகையாகி - இவ்வண்ணமாய், ஆதிவியாதிகள் - ஆதிகளும் வியாதிகளும், ஐந்துபூதத்துண்டாம் - பஞ்சபூதத்திலுண்டாகும், சொல்லிய விவ்வாதிகடான் - சொல்லப்பட்ட இந்தவாதிகளானவை, இருவகையாய் - இரண்டுவிதமாய், இறக்குநெறி - நசிக்கின்ற கிரமத்தை, சொல்லக்கேட்டாய் - ஸ்ரீராம நீயான் சொல்லக்கேட்கக்கடவாய்—எ-று.

எ — து. பழைய சநநத்தி லுள்ளதாலும், இச்சநநத்தியிலுள்ளதாலும், சுபமாலும், அசுபமாலும், அளவின்றி மிருந்தவாசனையெதுவோ? அது தன்னிடத்தி லவ்வண்ணமே கிரகித்துக்கொள்ளும். பொருந்தும்படியாக இவ்வண்ணமாய் ஆதிகளும் வியாதிகளும் பஞ்சபூதத்திலுண்டாகும். சொல்லப்பட்ட இந்தவாதிகளானவை இரண்டுவிதமாய் நசிக்கின்ற கிரமத்தை ஸ்ரீராமா ! நீயான்சொல்லக் கேட்கக்கடவாய்—எ-ம்.

(இ-ம்.) பஞ்சதன்மாத்திரையிலாதியும், பஞ்சபூதத்தில் வியாதியுமுண்டானதையறிவித் தாதிவிரண்டுவிதமாய் நசிப்பதைச் சொல்வதாம். (43)

## ஆதியானதுசாமானியஞ்சாரமென இரண்டாம்அவற்றில் சாமானியவாதி கெடுக்கின்றமார்க்கமுரைத்தல்.

——( .·. )——

மேவியசா மானியமுஞ் சாரமுமென் றிருவகையா மாதியென்பர் தாவுறுசா மானியந்தா னுடற்பிணியாஞ்சாரந்தான் சநநமாகும், கேவலமிவ் வுடற்பிணிதான் றனக்கடுத்த பொருட்பேற்றாற் கெட்டுப்போகும், பாவனையா மாதிகளில் லாதாகிற் றோன்றுபிணி பறந்துபோமே.

இ - ள். மேவிய - பொருந்திய, சாமானியமும் - சாமானியமென்றும், சாரமுமென்று-சாரமென்று, ஆதி - ஆதியானது. இருவகையாமென்பர், இரண்டுவிதமாமென்று சொல்லுவார்கள், தாவுறு - தாவாநின்ற, சாமானியந்தான் - சாமானியமானது, உடற்பிணியாம் - சரீரத்திலுள்ளவியாதியாம், சாரந்தான்-சாரமானது, சநநமாகும்-பிறப்பாகும், கேவலமிவ்வுடல்-முழுதுமிச்சரீத்திலுள்ள, பிணிதான்-வியாதியானது, தனக்கடுத்தபொருட்பேற்றால் - தனக்குரிய வஸ்துவையடைந்தால், கெட்டுப்போகும்-நாசமடையும், பாவனையாம்-பாவனையான, ஆதிகளில்லாதாகில்-ஆதிகளில்லாவிடின், தோன்றுபிணிபறந்துபோம்-உண்டாகும் வியாதியானது நீங்கிப்போகும்—எ-று.

எ — து. பொருந்திய சாமானியமென்றும், சாரமென்றும், ஆதியானது இரண்டு விதமாமென்று சொல்லுவார்கள். தாவாநின்ற சாமானியமானது சரீரத்திலுள்ள வியாதியாம், சாரமானது பிறப்பாகும்; முழுதுமிச்சரீரத்திலுள்ள வியாதியானது தனக்குரிய வஸ்துவையடைந்தால் நாசமடையும்; பாவனையான ஆதிகளில்லாவிடினுண்டாகும் வியாதியானது நீங்கிப்போகும்—எ—ம். (44)

## சாரவாதிநசிக்கின்றமார்க்கமு மாதியிலுண்டாகாத வியாதி யிறக்குமார்க்கமுங் கூறுதல்.

சாரமெனும் பிறவிநோய் தத்துவஞான னத்தன்றிச் சற்றும் போகா, தீரவிது கயமென்னும் போதத்தா லன்றியாரச் சிதைவதுண்டோ, பாரமுறு மாதியிற்றோன் றுப்பிணிமந் திரமருந்துபலநூல் கற்ற, கூறிவின் மருத்துவரென் றிவ்வகையாற் போமிதுநாங் கூறவேண்டா.

இ - ள். சாரமெனும்பிறவிநோய் - சாரமென்கிற சநநவியாதியானது, தத்துவஞானத்தன்றி - ஆத்மஞானத்தினாலல்லாமல், சற்றும்போகா - எவ்வளவு நீங்காது, தீர-தீரும்படி, இதுகயமென்னும்-இதுபழுதையென்கிறபோதத்தாலன்றி - அறிவினாலல்லாமல், ஆராச்சிதைவதுண்டோ - சர்ப்பம்கெடுவதுண்டோ, பாரமுறும் - சுமைமிகுந்த, ஆதியிற் றோன்றுப்பிணி - ஆதியிலுண்டாகாத சரீர வியாதியானது, மந்திரம்-மந்திரத்தினாலும், மருந்து-அவுடதத்தினாலும், பலநூல்கற்ற-அநேகவயித்தியசாஸ்திரங்களையப்பியாசித்த, கூறிவின் - மிகுந்தவறிவினையுடைய, மருத்துவரென்று - வயித்தியரென்றுரைத்த, இவ்வகையாற்போம் - இத்தன்மையாற்கெடும், இதுநாங்கூறவேண்டா- இதையாஞ்சொல்லவேண்டுவதில்லை—எ-று.

எ — து. சாரமென்கின்ற சநநவியாதியானது ஆத்மஞானத்தினாலல்லாமல் எவ்வளவு நீங்காது. தீரும்படி இது பழுதையென்கிற அறிவினாலல்லாமல் சர்ப்பம் கெடுவதுண்டோ? சுமைமிகுந்த ஆதியிலுண்டாகாதசரீரவியாதியானது மந்திரத்தினாலும், அவுடதத்தினாலும், அநேக வயித்திய சாஸ்திரங்களை யப்பியாசித்த மிகுந்த அறிவினையுடைய வயித்தியரென்றுரைத்த இத்தன்மையாற்கெடும்; இதையாஞ்சொல்லவேண்டுவதில்லை—எ-ம்.

(இ-உ-௩-ம்.) அபிமதயஸ்து லபிசத்தாற் சாமானியவாதியும் ஆத்மஞானத்தாற் சாரவாதியு மணிமந்திர வஷைதங்களினால் ஆதியிலுதியாமலசஞ்சிக்கிரம விரோதங்களினாலுண்டான வியாதி நாசிக்குமென்பதாம் ()

## ஆதியிலெங்ஙனம் வியாதியுற்பத்தியமாயிற்று என்கின்ற விஞவிரண்டிற் கதனுற்பத்தியைக்கூறல்.

என்றலுமே யாதியினின் றெவ்வகையுண்டாம்பிணிமற் றவை யான்மாணுங், குன்றனையா யுரையென்ன விராமன் கேட்டலும் வசிட்டன் கூறுதிற்பா, னின்றமனங் கலங்குதலு முடல்கலங்குமுடல்கல

ங்கி னேர்வந்துற்ற, தொன்றுமறி யாமனேர் வழிவிலங்கித் தீவழியி லோடாநிற்கும்.

இ - ள். என்றலும் - இப்படியென்று சொல்லியவளவில், ஆதியினின்று - ஆதியிலிருந்து, பிணி - வியாதியானது, எவ்வாறுண்டாம் - எப்படி யுண்டாகும், மற்றெவையான்மாறும் - பின்பெதினாற் கெடும், குன்றனையாயுரையென்ன - மலைக்கொப்பானவரே நீசொல்வாயென்று, இராமன்கேட்டலும் - ஸ்ரீராமன் கேட்டமாத்திரத்தில், வசிட்டன் கூறுகிற்பான் - வசிட்டமுனி சொல்லுவார் நின்றமனம் - நிலையாயிருந்தமனது, கலங்குதலும் - கலங்கவும், உடல்கலங்கும் - சரீரங்கலங்கும், உடல்கலங்கின - சரீரங்கலங்கினால், நேர்வந்துற்ற - எதிரேவந்துபொருந்திய, ஒன்றுமறியாமல் - ஒன்றையுந்தெரியாமல், நேர்வழிவிலங்கி - நேரானமார்க்கம்விட்டு, தீவழியிலோடாநிற்கும் - தீயமார்க்கத்திற், பிராணனோடும் — எ - று.

எ - து. இப்படியென்று சொல்லியவளவில் ஆதியிலிருந்து வியாதியானதெப்படியுண்டாகும்; பின்பெதினாற்கெடும்; மலைக்கொப்பானவரே? நீ சொல்வாயென்று ஸ்ரீராமன் கேட்ட மாத்திரதில் வசிட்டமுனி சொல்லுவார். நிலையாயிருந்த மனது கலங்கவும், சரீரங்கலங்கும். சரீரங்கலங்கினால் எதிரேவந்து பொருந்திய ஒன்றையுந் தெரியாமல் நேரான மார்க்கம்விட்டுத் தீயமார்க்கத்திற் பிராணனோடும்.

பிறையம்பு படுமான்போன் முறிந்தோடுங்கலக்கத்தாற் பிராணவாயு, நிறைகின்றசமமின்றிப் பறந்தோடுநாடிகளு நிலையினில்லா, லைறைகின்ற சீரணமா யசீரணமா யதிசீர்ண மாகி யன்ன, முறைகின்ற வுடலுக்குக் கூற்றமா முடியுயி ருலைவினாலே.

இ - ள். பிறையம்பு - அர்த்தசந்திரபாணமானது, படுமான்போல் - தைக்கின்றமிருகத்தைப்போல, முறிந்தோடும் - வழிதப்பியோடும், கலக்கத்தால் - கலக்கத்தினால், பிராணவாயுநிறைகின்ற - பிராணவாயுநிறைந்திருக்கின்ற, சமமின்றிப்பறந்தோடும் - சமமில்லாமற் பரந்துசெல்லும், நாடிகளு நிலையினில்லாது - நாடிகளுநிலையினிற்கமாட்டாது, அறைகின்றசீரணமாய் - செல்லாநின்ற சீரணமாகியும், அசீரணமாய் - அசீரணமாகியும், அதிசீர்ணமாகி - மிகுந்தசீரணமாகியும், அன்னம் - அசனமானது, உறைகின்றவுடலுக்கு - தங்குகின்றசரீரத்துக்கு, நாடியுயிருலைவினால் - நாடிகள்பிராணன்களுடையசலனத்தினால், கூற்றமாம் - நமனுகும் — எ - று.

எ - து. அர்த்தசந்திர பாணமானது தைக்கின்ற மிருகத்தைப்போல வழிதப்பியோடும்; கலக்கத்தினாற் பிராணவாயு நிறைந்திருக்கின்ற சமமில்லாமற் பரந்துசெல்லும் நாடிகளு நிலையி னிற்கமாட்

டாது. சொல்லாநின்ற சீரணமாகியும், அசீரணமாகியும். மிகுந்த சீரணமாகியும் அசனமானது தங்குகின்ற சரீரத்துக்குநாடிகள் பிராணன்களுடைய சலனத்தினால் நமனாகும்—எ-ம். (47)

உடலுள்ளே விரோதத்தா லுறைகின்றவன்னம்வேற் றுருவமாகி, விடலுறு நோயாகு மவ்வகையா லாதியினால் வியாதி யுண்டாங், தொடர்வுறு வாதிநசித் திடுமாகில் வியாதிகளுந் துஞ்சிப்போகுங், கடவதா மந்திரத்தால் வியாதிகணீங் கிடுநெறியைக் கழறக்கேட்பாய்.

இ-ள். உடலுள் - சரீரத்திலுள். விரோதத்தால்-விரோதத்தினால், உறைகின்றவன்னம் - தரிக்கின்றவன்னமானது, வேற்றுருவமாகி - வேறுவடிவமாய், விடலுறுநோயாகும் - திராதவியாதியாகும், அவ்வகையால் - அத்தன்மையால், ஆதியினால் வியாதியுண்டாம்-ஆதியினால் வியாதிபிறக்கும், தொடர்வுறு - தொடர்பில்லாமல், ஆதிநசித்திடுமாகில் - ஆதியானது கெடுமானால், வியாதிகளுந் துஞ்சிப்போகும் - நோய்களுநாசமடையும், கடவதாமந்திரத்தால் - உச்சரிப்பதானமந்திரத்தினால், வியாதிகணீங்கிடுநெறியை - நோய்கணீங்காநின்ற மார்க்கத்தை, கழறக்கேட்பாய் - சொல்லக்கேட்பாய்-எ-று.

எ-து. சரீரத்தினுள் விரோதத்தினாற் தரிக்கின்ற வன்னமானது வேறுவடிவமாய்த் திராதவியாதிக்கும், அத்தன்மையாலாதியினால் வியாதிபிறக்கும், தொடர்பில்லாமல் ஆதியானது கெடுமானால் நோய்களு நாசமடையும், உச்சரிப்பதான மந்திரத்தினால் நோய்களை நீங்காநின்ற மார்க்கத்தைச் சொல்லக்கேட்பாய்—எ-ம்.

(இ-ங-௧-ம்.) ஆதியில் வியாதி மனக்கலக்கத்தினா லுண்டான கிரமமறிவித்ததாம். (48)

## வியாதியிறுசங்கூறல்.

எப்படியே கடுக்காய்கள் விரேசனத்தைப் பண்ணுகின்றதியல்பினாலே, இப்படியே பாவனையால் யாலவவா திகள்காரியங்களாக்கு, மெய்ப்படியுண் ணியமாகிச் சுத்தமாங்கிரியை யான் மேலோர்சார்வாற, றப்பின்மனந் தெளிவெய்தும் புடம்வைத்த லானன்றூர் தமனியம்போல்.

இ-ள். எப்படி - எவ்விதத்தில், கடுக்காய்கள் - கடுக்காய்களானவை, இயம்பினால் - சுபாவத்தினால், விரோசனதனதைப்பண்ணுகின்றது-மலவிமோ

சனத்தைச் செய்கின்றதோ, அப்படியே - அவ்வண்ணமே, யாலவவாதிகள்- ஆலவமுதலியமந்திராக்ஷரங்களின், பாவனையால்-பாவனையினால், காரியங்களாக்கும் - (ஆரோக்கிய) காரியங்களைச்செய்யும், மெய்ப்படி புண்ணியமாகி- மெய்யாகிய புண்ணியமாய், சுத்தமாங்கிரியையால் - பரிசுத்தமாகிய தொழிலினாலும், மேலோர்சார்வால் - சத்துக்களின் சார்பினாலும், புடம்வைத்தலால் - (பொன்னைப்) புடம்வைத்தலினால், நன்றாகதமனியம்போல் - நல்ல தங்கமானதுபோல, தப்பின் மனந்தெளிவெய்தும் - தவறில்லாமல் மனதுபரிசுத்தமடையும்—எ-று.

எ - து. எவ்விதத்திற் கடுக்காய்களானவை சுபாவத்தினால் மலவிமோசனத்தைச் செய்கின்றதோ? அவ்வண்ணமே யாலவமுதலிய மந்திராக்ஷரங்களின் பாவனையினால் ஆரோக்கிய காரியங்களைச் செய்யும். மெய்யாகிய புண்ணியமாய்ப் பரிசுத்தமாகிய தொழிலினாலும். சத்துக்களின சார்பினாலும், பொன்னைப் புடம்வைத்தலினால் நல்ல தங்கமானதுபோல தவறில்லாமல் மனது பரிசுத்தமடையும்.

சுத்தமுற மனந்தெளியி னுடலிலே யாநந்தந் தோன்றுநிற்கு,
மெத்துமதி யுதித்தக்கா லுலகமெலாநன்றாக விளங்கிடாதோ, சத்து
வமா மனந்தெளியிற் பிராணவா யுவுமொழுங்கிற் சரித்துலாவு, முய்
த்துளவன் னமுநெறியிற் சீரணிக்குமதனாலே யொன்றுந்தோன்றா.

இ - ள். சுத்தமுற மனந்தெளியில் - பரிசுத்தமாகமனது தெளிந்தால், உடலில் - சரீரத்தில், ஆநந்தந்தோன்றுநிற்கும் - ஆநந்தந்தோறும், மெத்து- மெதுவான, மதியுதித்தக்கால் - மிருதுவான பூரணச்சந்திரனுதயமானால், உலகமெலாம் - சகங்களனைத்தும், நன்றாக விளங்கிடாதோ - நன்மையாக பிரகாசிக்கமாட்டாதோ, சத்துவமாமனந்தெளியில் - சாத்துவீகத்தை யுடையமனது தெளிந்தால், பிராணவாயுவும் - பிராணவாயுவுக்களும், ஒழுங்கிற் சரித்துலாவும்-கிரமமாகச் சஞ்சரிக்கும், உய்த்துளவன்னமும்-புசித்தபோனகமும், நெறியிற்சீரணிக்கும் - கிரமமாகச்சீரணத்தையடையும், அதனால்- அதனாலே, நோயொன்றுந்தோன்றா-வியாதியொன்றுமுண்டாகாது—எ-று.

எ — து. பரிசுத்தமாக மனது தெளிந்தாச் சரீரத்தில் ஆனந்தந் தோறும்; மெதுவான மிருதுவான பூரணச்சந்திர னுதயமானால்சகங் களனைத்தும் நன்மையாக பிரகாசிக்கமாட்டாதோ? சாத்துவீகத்தை யுடைய மனது தெளிந்தாற் பிராணவாயுவுக்களும் கிரமமாகச் சஞ்சரிக்கும், புசித்தபோனகமுங் கிரமமாகச் சீரணத்தையடையும். அதனாலே வியாதியொன்று முண்டாகாது—எ-ம்.

(இ-உ-க-ம்.) வியாதிகண் மனர்தெளிந் தாநந்த மடைதலின் சிக்குக்கிரம மறிவித்ததாம். (50)

## குண்டலினிசத்திக்குஞ் சீவனுக்கும் பேதங்கூறல்.

ஆதியா திகளிரண்டுந் தோன்றியொடுங்கிடுநெறிக ளறைந்தோமன்றே, யோதிகுண்டலினிதனதொழுங்கான்முன்னுரைப்புற்றயோகங்கேளாய், தீதில்புரி யட்டகமென் றொருபெயர்கொள் சீவனுக்குத்திகழ்பிராண, வாதமெனும் பெயர்பெற்ற குண்டலினிமணத்துக்குமலர்போனிற்கும்.

இ-ள். ஆதிவியாதிகளிரண்டும் - ஆதிவியாதிகளானவிரண்டும் தோன்றியொடுங்கிடும் - உண்டாகிநசிக்கின்ற, நெறிகள் - மார்க்கங்களை, அறைந்தோம்-சொன்னோம், ஓதிய - முன்சொல்லப்பட்ட, குண்டலினிதனது - குண்டலிசத்தியினது, ஒழுங்கால் - கிரமத்தினால், முன்னுரைப்புற்ற-முன்சொல்லிய, யோகங்கேளாய் - யோகத்தைக்கேட்பாய், தீதில்புரியட்டகமென்று - குற்றமற்ற புரியட்டகமென்று, ஒருபெயர்கொள்சீவனுக்கு - ஒருநாமத்தைத்தரித்த சீவனுக்கு, திகழ்பிராணவாதமெனும் - விளங்கியபிராணவாயுவென்கின்ற, பெயர்பெற்ற - நாமத்தைத்தரித்த, குண்டலினி - குண்டலிசத்தியானது, மணத்துக்கு-வாசனைக் (கிடமாகிய) மலர்போல், புட்பத்தைப்போல் - நிற்கும் - இருக்கும்—எ-ம்.

எ - து. ஆதிவியாதிகளான இரண்டு முண்டாகி நசிக்கின்றமார்க்கங்களைச் சொன்னோம். முன்சொல்லப்பட்டகுண்டலிசத்தியினது கிரமத்தினால் முன் சொல்லிய யோகத்தைக்கேட்பாய், குற்றமற்ற புரியகட்டகமென்று ஒரு நாமத்தைத்தரித்த சீவனுக்கு விளங்கிய பிராணவாயுவென்கின்ற நாமத்தைத்தரித்த குண்டலினி சத்தியானது வாசனைக்கிடமாகிய புட்பத்தைப்போல விருக்கும்—எ-ம். (51)

## குண்டலினிசத்தியி னற்பியாசத்தினாலுண்டான சித்திகளுண்மை அறிவிக்கத்தொடங்கி கிரிமாவு மாகாயகமனமுமாகிய இரண்டின் சித்திமார்க்கங்கூறல்.

புகல்வுறுகுண்டலிதன்னைப் பூரகத்தின் பரிசயத்தாற் பூர்ணமாகித், திகழ்வுறுகின் றாலன்று வடமேரு கிரோணதிண்மையுண்டா, மிகவுடலந் தடிப்பெய்தும் பூரகத்தாற் பிராணனிறை வுற்றமெய்

யைப், பகாறிவு மேனோக்கி யொருக்காலே விண்செல்லப் படாவி க்கும்.

இ - ள். புகல்வுறு - சொல்லப்பட்ட, குண்டலிதன்னை - குண்டலிசத்தியை, பூரகத்தின்பரிசயத்தால் - பூரகப்பழக்கத்தினால், பூர்ணமாக்கி - பூரணஞ்செய்து, திகழ்வுறநின்றால் - பிரகாசிக்கும்படிநின்றால், அன்று - அப்பொழுது, வடமேருவிகாரன - மகாமேருவுக்கொப்பாகிய, திண்மையுண்டாம் - வலிமையுண்டாகும், மிக வுடலர்தழப்பெய்தும் - மிகவுஞ் சரீரம் பருக்கும், பூரகத்தால் - பூரகத்தினால், பிராணனிறைவுற்றமெய்யை - பிராணனிறைந்திருக்கின்ற சரீரத்தை, பகாறிவுமேனோக்கின் - சொல்கின்ற வறிவானது மேனோக்கினால், ஒருக்காலே - ஒருபோதே, விண்செல்லப்படாவிக்கும் - ஆகாயகமனஞ்செய்விக்கும் — எ - று.

எ - து. சொல்லப்பட்ட குண்டலிசத்தியைப் பூரகப்பழக்கத்தினால் பூரணஞ்செய்து பிரகாசிக்கும்படி நின்றால் அப்பொழுதுமகாமேருவுக்கொப்பாகிய வலிமையுண்டாகும், மிகவுஞ்சரீரம் பருக்கும், பூரகத்தினாற் பிராண னிறைந்திருக்கின்ற சரீரத்தைச்சொல்கின்ற அறிவானது மேனோக்கினால் ஒருபோதே ஆகாய கமனஞ் செய்விக்கும் — எ - ம். (52)

பாம்புபோல் விரைந்துதடி போனிமிர்ந்து குண்டலினி படர்ந்துமேற்போந், தாம்புபோ லுடல்பிணிந்த நரம்பெல்லாந் தான்கவர்ந்து சரீரமெல்லாந், தேம்புறு வகைமேலே யெழுப்பிவிக்குங் காற்றினாற் செறிந்தபைதான், றும்புசூழ் நீரிடையே யழுத்துகினு மேற்கிளப்புந் தொடர்ச்சிபோல.

இ - ள். பாம்புபோல்விரைந்து - சர்ப்பத்தைப்போல வேகமாய், தடிபோனிமிர்ந்து - தண்டைப்போலுயர்ந்து, குண்டலி - குண்டலிசத்தியானது, படர்ந்துமேற்போம் - விரிந்துமேலேசெல்லும், தாம்புபோல் - கயற்றைப்போல, உடல்பிணித்த - சரீரத்தைக்கட்டிய, நரம்பெல்லாம் - நாடிகளனைத்தும், தான்கவர்ந்து - தான்கிரகித்து, சரீரமெல்லாம் - தேகமியாவும், தேம்புறுவகை - இளையாதவண்ணம், காற்றினாற்செறிந்த பைதான் - வாயுவினாலினிறைந்ததோற்பையானது, தாம்புசூழ்நீரிடையழுத்துகினும் - மடைசூழ்ந்த சலத்தின்மத்தியு லமிழ்த்தினாலும், மேற்கிளப்புந் தொடர்ச்சிபோல - மேலேயெழும்புகின்றதொடர்புபோல, மேலெழுப்பிவிக்கும் - மேலேகிளப்பி விக்கும் — எ - று.

எ - து. சர்ப்பத்தைப்போல வேகமாய்த் தண்டைப்போலுயர்ந்து குண்டலிசத்தியானது விரிந்து மேலேசெல்லும் கயற்றைப் போலச் சரீரத்தைக்கட்டிய நாடிகளனைத்துந் தான்கிரகித்துத் தேக

மியாவும் இளையாதவண்ணம் வாயுவினுனிறைந்த தோற்பையானது மடைசூழ்ந்த சலத்தின்மத்தியி லமிழ்த்தினும் மேலே யெழும்புகின்ற தொடர்புபோல மேலேகிளப்பிவிக்கும்—எ-ம். (53)

இத்திறனே மிகப்பழகு மியோகத்தா லியோகிகடா மெழுந்து விண்மேற், கொத்திகவர் தூண்டில்சேர் மீன்போல வுலா வுவர்குண் டலினியென்னுஞ், சத்தியது பிரமநா டியிலோடிக் கபாலத்தின்றனி ப்புறம்போ, யுத்துளமே லேவிரலோர் பன்னிரண்டி னெல்லையினி லு றுவதாகி.

இ-ள். இத்திறனே - இந்தப்பிரகாரமே, மிகப்பழகும் - மிகவுமப்பியாசிக்கின்ற, இயோகத்தால் - இயோகத்தினால், இயோகிகடாம்-யோகியரானவர்கள், விண்மேலெழுந்து - ஆகாயத்திலெழும்பி, கொத்திகவர்-கொத்திக்கிரிகிக்கின்ற, தூண்டில்சேர்மீன்போல - தூண்டினிலடைந்த மச்சத்தைப்போல, உலாவுவர் - சஞ்சரிப்பார்கள், குண்டலினியென்னுஞ் சத்தியது-குண்டலினியென்கின்ற சத்தியானது, பிரமநாடியிலோடி- சுழிமுனைக்குட்சென்று, கபாலத்தின் - பிரமரந்தரத்தின், தனிப்புறம்போய் - மேலாகப்புறப்பட்டு, உத்துள - பொருந்தியிருக்கின்ற, மேல்விரலோர்பன்னிரண்டின் - மேலொரு பன்னிரண்டங்குலத்தினது, எல்லையினிலுறுவதாகி - அளவிலடைவதாகி—எ-று.

எ-து. இந்தப் பிரகாரமே மிகவுமப்பியாசிக்கின்ற யோகத்தினால் யோகியானவர்கள் ஆகாயத்திலெழும்பி கொத்திக் கிரிகிக்கின்ற தூண்டினிலடைந்த மச்சத்தைப்போலச் சஞ்சரிப்பார்கள் குண்டலினியென்கின்ற சத்தியானது சுழிமுனைக்குட்சென்று பிரமரந்தரத்தின்மேலாகப் புறப்பட்டுப் பொருந்தியிருக்கின்ற மேலொரு பன்னிரண்டங்குலத்தினது அளவிலடைவதாகி—எ-ம். (54)

## சித்ததரிசன சித்திமார்க்கங் கூறல்.

நாடிகளெல்லாந்தகையு மிரேசகத்தா லொருமுகுத்த நண்ணி நிற்கி, னீடியவிண் சரிப்பவரைக் காணலாம் விஞ்ஞான நேர்மையாலே, யூடுறதா ரத்தோடும் புந்திவிழி யால்விண்ணி லூன்றத் தோன் றும், பீடுறுநற் பொருளுதவுஞ் சித்தர்கணங் கனவிலே பிறங்குமா போல்.

இ-ள். நாடிகளெல்லாம் - நாடிகளனைத்தையும், தகையுமிரேசகத்தால்-தடுக்கின்ற இரேசகத்தினால், ஒருமுகுர்த்தம் - இரண்டுநாழிகை, நண்ணி

நிற்கின் - அடைந்திருந்தால், நீடியவிண் சரிப்பவரை - நீண்ட ஆகாயகமனஞ் செய்பவர்களை, காணலாம் - தரிசிக்கலாம், விஞ்ஞானநேர்மையால் - ஞானநுட்பத்தினால், வுடுற - பொருந்த, அதூரத்தோடும் - சமீபத்திற்செல்லுகின்ற, புந்திவிழியால் - ஞானதிருஷ்டியினால், விண்ணிற்பீடுறுநற்பொருளுதவும் - ஆகாயத்திற்பெருமையுள்ள (அணிமாமுதலிய) நல்லவஸ்துக்களைக்கொடுக்கின்ற, சித்தர்கணங்களுவிற்பிறங்குமாபோல் - சித்தர்குழாங்கள் சொற்பனத்திற்றோற்றுவதுபோல, வுன்றதந்தோன்றும் - நிலையாகத்தோற்றும்—எ-று.

எ - று. நாடிகளனைத்தையுந் தடுக்கின்ற இரேசகத்தினால் இரண்டுநாழிகை யடைந்திருந்தால் நீண்ட ஆகாயகமனஞ் செய்பவர்களைத் தரிசிக்கலாம். ஞானநுட்பத்தினாற் பொருந்த சமீபத்திற் செல்லுகின்ற ஞானதிருஷ்டியினால் ஆகாயத்திற் பெருமையுள்ள அணிமா முதலிய நல்ல வஸ்துக்களைக் கொடுக்கின்ற சித்தர்குழாங்கள்சொற்பனத்திற் றோற்றுவதுபோல நிலையாகத்தோற்றும்—எ-ம். (55)

## பரகாயப் பிரவேச சித்திமார்க்கங் கூறல்.

பன்னிரண்டங் குலத்தின்முகத் தின்புறம்போ யிரேசகத்தின்
பழக்கத்தாலே, மன்னுயிர்தா னெடிதுநிலை நிற்குமேல் வேற்றுடலை
மருவுமென்ன, சொன்னமுனி வனைவள்ளல் சூக்கவழி செல்கைக்குந்
தூலமாய்விண், டன்னைநிறை கைக்குமணுத் துவத்தூலத் துவமுடற்
குத் தருமாறெங்ஙன்.

இ - ள். பன்னிரண்டங்குலத்தின் - பன்னிரண்டுவிரலளவு, முகத்தின் புறம்போய் - வதனத்தின் முன்புசென்று, இரேசகத்தின் - இரேசகத்தினுடைய, பழக்கத்தால் - அப்பியாசத்தினால், மன்னுயிர்தான் - நிலைபெற்றபிராணனானது, நெடிதுநிலைநிற்குமேல் - வெகுகாலநிலையாயிருக்குமாயின், வேற்றுடலை மருவுமென்னசொன்னமுனிவனை - பரகாயப் பிரவேசஞ்செய்யுமென்றுரைத்த வசிட்டமுனியை, வள்ளல் - ஸ்ரீராமர், சூக்கவழிசெல்கைக்கும் - சூட்சுமமார்க்கத்திற்போவதற்கும், தூலமாய்விண் டன்னை நிறைகைக்கும் - பருமனாக ஆகாயத்தை நிறைவதற்கும், உடற்கு - சரீரத்துக்கு, அணுத்துவம் - அணுத்துவமும், தூலத்துவம் - பருத்துவமும், தருமாறெங்ஙன் - கொடுக்கும்வண்ணமெப்படி—எ-று.

எ - று. பன்னிரண்டு விரலளவு வதனத்தின் முன்புசென்று இரேசகத்தினுடைய அப்பியாசத்தினால் நிலைபெற்ற பிராணனானதுவெகுகால நிலையாயிருக்குமாயின் பரகாய பிரவேசஞ்செய்யுமென்றுரைத்த வசிட்டமுனியை ஸ்ரீராமர் சூட்சும மார்க்கத்திற் போவ

தற்கும், பருமனாக ஆகாயத்தை நிறைவதற்கும், சரீரத்துக்குவனு த்துவமும், மகத்துவமும், கொடுக்கும்வண்ண மெப்படி—எ-ம்.

(இ-௬-௧-ம்-) நான்குசித்தியுமுண்டாகுங் கிரமமறிவித்ததாம். (56)

## இச்சித்திகளையடையத்தேகத்துக்குச்சூக்குமத்துவமும் தூலத்துவமும் எங்ஙன முண்டாயிற் றென்னும் வினாவுக் குத்தரங்கூறல்.

அருள்வாயென் றலுமுனிவ னுரைசெய்வா னேகமா யறிவொ ன்றேயா, யொருவாத சமமாகிச் சாந்தமாய்ச் சுத்தமா யொருபற்றி ல்லாப், பொருளாய்நுண் மையின்மிகவு நுண்மையாய்ப் புவியன்றா ய்ப் புவிசேராதாய், மருவாநின் றனத்ததாஞ் சங்கற்ப முறத்தனைத் தான் வகையாய்ச்செய்யும்.

இ - ள். அருள்வாயென்றலும் - கிருபைசெய்வாயென்று இராமர்கேட்கவும், முனிவனுரைசெய்வான்-வசிட்டமுனி சொல்லுவார், ஏகமாம்-ஒன்றாகியும், அறிவொன்றேயாய் - சின்மாத்திரமாகியும், ஒருவாதசமமாகி-நீங்காத சமத்துவமாயும், சுத்தமாய்-பரிசுத்தமாகியும், சாந்தமாய் - உபசாந்தமாகியும், ஒருபற்றில்லாப்பொருளாய் - ஒரு சம்பந்தமுமில்லாதவஸ்துவாகியும், நுண்மையில் - சூட்சுமத்தில், மிகுநுண்மையாய் - மிகவுஞ் சூட்சுமமாகியும், புவியன்றாய் - சகமல்லாததாகியும், புவிசேராதாய் - சகத்தைச்சேராததாகியும், மருவாநின்றனது-பொருந்தியிருக்கின்றது (ஒன்றுண்டு), அதுதான்-அதுவே, சங்கற்பமுற-சங்கற்பத்தையுடைய, தனைத்தான்-தன்னைத்தானே, வகையாய்ச்செய்யும்-பிரிவாகச்செய்யும்—எ-று.

எ - து. கிருபைசெய்வாயென்று இராமர் கேட்கவும், வசிட்ட முனிசொல்லுவார். ஒன்றாகியும், சின்மாத்திரமாகியும், நீங்காத சமத்துவமாகியும், பரிசுத்தமாகியும், உபசாந்தமாகியும், ஒரு சம்பந்தமுமில்லாத வஸ்துவாகியும், சூட்சுமத்தில் மிகவுஞ் சூட்சுமமாகியும், சகமல்லாததாகியும், சகத்தைச் சேராததாகியும், பொருந்தியிருக்கின்ற தொன்றுண்டு. அதுவே சங்கற்பத்தையுடைய தன்னைத்தானே பிரிவாகச் செய்யும்—எ-ம். (57)

பலவுஞ்சூழ்வுறச்சீவ னும்பொய்யே சங்கற்பம் பயின்மயக்கா ற், கலங்குஞ்சீ வன்சடமா யிவ்வுடல்கா ணும்பாலர் காணும்பேய் க்கென்றார்க, ளுலகின்க ணப்படியே யதைக்காண்டார் நினைவின்க ணூற்றத்தாலே,

இ - ள். பலவுஞ்சூழ்வுற - அநேகமான (கலக்கங்) சூழ்ந்தபோது, சீவ ஞம்-சீவனுகும், சங்கற்பம் - சங்கற்பமென்று, பயின்மயக்கால் - சொல்லப் பட்ட பிரமையினுல், கலங்குஞ்சீவன்-கலங்கப்பட்ட சீவனுனவன், சடமாய் - மூடமாய், பாலர்காணும் - குழந்தைகள் பார்க்கப்பட்ட, பேய்போல் - பசா சைப்போல, இவ்வுடல்காணும் - (மித்தையாகிய) இந்தச் சரீரத்தைப்பார்க் கும், குலவும்பல்லுயிர்களும் - பொருந்திய அநேகசீவர்களும், இவ்வகையே - இப்படியே, எப்படி யெத்தைக்குறிக்கின்றூர்கள் - எங்ஙன மெதைக்கருது கின்றூர்களோ, அப்படியேயுலகின்கண் - அந்தப்பிரகாரமே சகத்தில், நினை வின்கணூற்றத்தால் - மனதின்கண்ணுள்ள திடத்தினுல், அதைக் காண் பார் - அதைப்பார்ப்பார்கள் — எ - று.

எ - து. அநேகமான கலக்கஞ்சூழ்ந்தபோது சீவனுகும், சங் கற்பமென்று சொல்லப்பட்ட பிரமையினுற் கலங்கப்பட்ட சீவனு னவன் மூடமாய்க் குழந்தைகள் பார்க்கப்பட்ட பசாசைப்போல் மி த்தையாகிய இந்தச்சரீரத்தைப்பார்க்கும். பொருந்திய அநேக சீவர் களும் இப்படியே எங்ஙனமெதைக் கருதுகின்றூர்களோ? அந்தப் பி ரகாரமே சகத்தில் மனதின்கண்ணுள்ள திடத்தினுல் அதைப்பார்ப் பார்கள் — எ - ம். (58)

இதுவுமது.

ஊற்றமுறு பாவனையின் பரிசயத்தான் மூடர்களு மொன்றை யொன்றூன், மாற்றிவிட மமுதாக்கி யமுதத்தை நஞ்சாக்கி மருவா நிற்ப, நேற்றமுறுஞ் சத்தியபா வனையாலே வித்தேகத் தேகமான, தோற்றியவித் தேகமீண் டசத்தியபா வனையால்விண் சுரூபமாய்ப் போம்.

இ - ள் ஊற்றமுறுபாவனையின் - திடமானபாவனையினது, பரிசயத் தால் - அற்பியாசத்தினுல், மூடர்களும் - அறிவில்லாதவர்களும், ஒன்றையொ ன்றூன்மாற்றி - ஒன்றையொன்றினுற்கெடுத்து, விடமமுதாக்கி - விடத்தை யமுதமாக்கி, அமுதத்தைநஞ்சாக்கி - அமுதத்தைவிஷமாக்கி, மருவாநிற்பர் - பொருந்தியிருப்பார்கள், ஏற்றமுறும் - மேன்மைபொருந்திய, சத்தியபாவனை யால் - மெய்ப்பாவனையால், இத்தேகந்தேகமான - இவ்வுடலானது தூலமாயி ற்று, தோற்றியவித்தேகம் - தோற்றப்பட்ட இச்சரீரமானது, மீண்டு - திரும் பவும், அசத்தியபாவனையால் - மித்தையென்னும் பாவனையினுல், விண்சுரூ பமாய்ப்போம் - சூட்சுமரூபமாம் — எ - று.

எ - து. திடமான பாவனையினது அற்பியாசத்தினுல் அறிவில் லாதவர்களு மொன்றையொன்றினுற் கெடுத்து விஷயத்தையமுத மாக்கி அமுதத்தை விஷமாக்கிப் பொருந்தி யிருப்பார்கள். மேன் மைபொருந்திய மெய்ப்பாவனையா லிவ்வுடலானது தூலமாயிற்று,

தோற்றப்பட்ட இச்சரீரமானது திரும்பவும் மித்தையென்னும் பாவனையினால் சூட்சுமரூபமாம்—எ—ம்.

(இ-ங-க-ம்.) அசிகாசரயான சைதன்யம் பாவனையாற் சித்துஞ் சகத்துமாவதுபோல, சிவனனுத்துவபாவனையாற் சூக்குமத்துவமும், மகத்துவபாவனையாற் றூலத்துவமு மவனதுபாவனை வடிவமான தேகத்துக்கு வருமென்பதாம். (59)

## இவ்வணிமாதி அஷ்டசித்திகளையுஞ் சூடாலைபெற்று விளங்குதல்.

அணிமாதி குணப்பேற்றின் பாவனையூ கங்களுமிவ் வடைவேயாகுந், துணிவாலே யோகத்தின் சித்தியறி வார்க்கிதுதான் சுலபமாகுங், குணியான வணிமாதி குணச்செல்வ மிகப்பழகுங் குறிப்பாற்பெற்று, மணியாழி யுலகெலாங் கணத்தில்விளை யாடினாண்மறுவிலாதாள்.

இ-ள். அணிமாதி - அணிமாமுதலிய (அஷ்டசித்தியினது), குணப்பேற்றின் - தன்மையையடைவதின் - பாவனையூகங்களும் - பாவனையாலுண்டானயுத்திகளும், இவ்வடைவேயாகும் - இந்தமார்க்கமேயாகும், துணிவால் - தெளிவினால், யோகத்தின்சித்தி - யோகத்தினது சித்தியை, அறிவார்க்கு - தெரிபவர்களுக்கு, இதுதான்சுலபமாகும் - சுலபமாகும், குணியான - காரணமாகிய, அணிமாதி - அணிமாமுதலிய, குணச்செல்வம் - குணசம்பத்தை, மிகப்பழகுங் குறிப்பாற்பெற்று - மிகவுமப்பியாசிக்கின்ற கருத்தினாலடைந்து, மணியாழி - இரத்தினங்களையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த, உலகெலாம் - சகங்களனைத்திலும், கணத்தில் - க்ஷணநேரத்தில், மறுவிலாதாள் - களங்கமற்ற சூடாலையானவள், விளையாடினாள் - லீலைசெய்தாள்—எ-று.

எ - து. அணிமாமுதலிய அஷ்டசித்தியினது தன்மையையடைவதின் பாவனையாலுண்டான யுத்திகளும் இந்தமார்க்கமேயாகும்; தெளிவினால் யோகத்தினது சித்தியைத் தெரிபவர்களுக்கு சுலபமாகும்; காரணமாகிய அணிமாமுதலிய குணசம்பத்தை மிகவு மப்பியாசிக்கின்ற கருத்தினாலடைந்து இரத்தினங்களையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த சகங்களனைத்திலும் க்ஷணநேரத் திற்களங்கமற்ற சூடாலையானவள் லீலைசெய்தாள்—எ-ம்.

இ-ம். அவ்வவனை யுபசரித்து சித்தித்த சித்திகளைப் பெற்றாளென்பதாம். அணிமாதி அஷ்டசித்திகளாவன: அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவமென்பனவாம். (60)

## நாநாவித உபாயங்களால் போதித்தும் அறிவுண்டாகாமையால் அஃதைநிறுத்தல்

நாயகனை யிமைப்போது நீங்காதா ளல்லமுதா ஞானந்தன்னை, யாயவனுக் கநேகவுபா யத்தினு லறிவித்து மனையமன்னன், றூயறி வி லிளைப்பாறப் பெற்றிலன்மா யோகினியாஞ் சூடாலைக்கு, மேய குணங் களுமறிந்தா னில்லைப்பா லகர்விஞ்சை மேவாதாப்போல்.

இ - ள். நாயகனை - தலைவனை, இமைப்போதுநீங்காதாள் - நொடிநேரமும் பிரியாதவள், நல்லமுதாஞானந்தன்னை - ஆநந்தாமுதமாகிய ஞானத்தை, ஆயவனுக்கு-சிறந்த தனதுபுருடனுக்கு, அநேக உபாயத்தினால் - பல தந்திரங்களினால், அறிவித்தும்-தெரிவித்தும், அனையமன்னன் - அந்தவரசனானவன், தூயறிவில்-பரிசுத்தஞானத்தில், இளைப்பாறப்பெற்றிலன் - விஸ்ராந்தியையடைந்திலன், மாயோகினியாம் - மகாயோகினியாகிய, சூடாலைக்கு மேயகுணங்களும்-சூடாலைக்குப்பொருந்திய குணங்களையும், பாலகர் - குழந்தைகள், விஞ்சைமேவாதாப்போல் - கல்வியையறியாததுபோல, அறிந்தானில்லை-தெரிந்திலன் — எ-று.

எ - து. தலைவனை-நொடிநேரமும் பிரியாதவள் ஆநந்தாமுதமாகிய ஞானத்தைச் சிறந்த தனது புருடனுக்குப் பல தந்திரங்களினாற் றெரிவித்தும் அந்தவரசனானவன் பரிசுத்த ஞானத்தில் விஸ்ராந்தியை யடைந்திலன். மகாயோகினியாகிய சூடாலைக்குப் பொருந்திய குணங்களையும் குழந்தைகள் கல்வியை யறியாததுபோலத்தெரிந்திலன்—எ-ம். (61)

தன்னறிவி லிளைப்பாற விலாமையா லவனுக்குத் தனதுயோக, நன்னிதியை யுரைத்திலளாற் சூத்திரர்க்கு யாகநெறி நவில்வாருண் டோ, வென்னனுமே மகத்தான சித்தயோ கினிவருந்தி யிபம்பவே யு, மன்னசிகித் துவசனறி வுற்றிலனாற் பிறரெங்ங னறிவாரையா.

இ - ள். தன்னறிவில் - தனதாத்மஞானத்தில், இளைப்பாற விலாமையால்-விஸ்ராந்தியடையாததினால், அவனுக்கு - அந்தப்புருடனுக்கு, தனது யோகநன்னிதியை - தனது நல்லஞானயோகத்தை, உரைத்திலள் - சொற்றிலள், சூத்திரர்க்கு-சூத்திரர்களுக்கு, யாகநெறிநவில்வாருண்டோ-யாகமார்க்கத்தைச் சொல்லுவாருமுளரோ, என்னனும்-என்று வசிட்டமுனிசொன்னளவில், மகத்தான சித்தயோகினி - மகாசித்திகளையுடைய சூடாலையானவள், வருந்தியிபம்பவேயும் - வருந்திச்சொல்லவும், அன்னசிகித்துவசன் - அந்தச் சிகித்துவசனானவன், அறிவுற்றிலனால் - ஞானத்தை யடைந்திலை

ஞதலால், ஐயா - ஆசாரியரே, பிறரெங்ஙனறிவார் - மற்றவர்களெப்படிதெரிந்துகொள்ளுவார்கள்—எ-று.

எ-து. தனதாத்மஞானத்தில் விஸ்ராந்தி யடையாததினால் அந்தப் புருடனுக்குத் தனது நல்ல ஞானசம்பத்தைச் சொற்றிலன், சனுத்தர்களுக்கு யாகமார்க்கத்தைச் சொல்லுவாரு முளரோ? என்று வசிட்டமுனி சொன்னவளவில் மகாசித்திகளையுடைய சூடாலையானவள் வருந்திச்சொல்லவும், அந்தச் சிகித்துவசனானவன் ஞானத்தையடைந்திலனுதலால் ஆசாரியரே மற்றவர்களெப்படித் தெரிந்துகொள்ளுவார்கள்.

(இ-உ-ச-ம்.) பக்குவமின்றியகாலத் தெவ்விதத்தில் உண்மையைப்போதிக்கினும் அஃதுதியா தென்பதாம் (62)

வல்லமையுள்ள ஆசிரியர் போதித்து
முதியாதவறிவு மேலெங்ஙன முண்டாமெனில்
ஆசிரியவாக்கியத்தில் நம்பிக்கையுள்ள சீடனறிவே
காரணமாக உண்டாகுமெனல்.

ஒல்லும்வகை யுரையென்ன விராகன்கேட் டலும் வசிட்டனுத்தரிப்பா, னல்லுப தேசந்தா னம்பிக்கை மாத்திரத்தை நன்றாய்ச் செய்த, லெல்லையிலா வறிவுக்குச் சுத்தமா மகனறிவே யேதுவென்று, சொல்லுதலு மீண்டந்த முனிதனக்கு ரகுநதன் சொல்லுகிற்பான்.

இ-ள். ஒல்லும்வகை யுரையென்ன - அடையும்வகையைச்சொல்லுமென்று, இராகவன் கேட்டலும் - ஸ்ரீராமன் கேட்கவும், வசிட்டனுத்தரிப்பான் - வசிட்டமுனி யுத்தரஞ்சொல்லுவார், நல்லுபதேசந்தான் - பிரமோபதேசமானது, நம்பிக்கைமாத்திரத்தை - நம்புதன்மாத்திரம், நன்றாய்ச்செய்தல் நன்மையாகச் செய்வதாம், எல்லையிலா வறிவுக்கு - அறிதற்கரிய ஆத்மஞானத்துக்கு, சுத்தமாமகனறிவே - பரிசுத்தமானசீடனறிவே, ஏதுவென்று - காரணமாகுமென்று, சொல்லுதலும் - சொல்லியவளவில், மீண்டு - திரும்பவும், அந்த முனிதனக்கு - அந்தவசிட்டமுனிக்கு, ரகுநாதன் சொல்லுகிற்பான் - ஸ்ரீராமன் சொல்லுவார்—எ-று.

எ-து அடையும் வகையைச் சொல்லுமென்று ஸ்ரீராமன் கேட்கவும், வசிட்டமுனி யுத்தரஞ்சொல்லுவார். பிரமோபதேசமானது நம்புதன்மாத்திரம் புண்மையாகச் செய்வதாம், அறிதற்கரிய ஆத்மஞானத்துக்குப் பரிசுத்தமானசீடனறிவே காரணமாகுமென்று சொல்லியவளவில் திரும்பவுமந்த வசிட்டமுனிக்கு ஸ்ரீராமன் சொல்லுவார்—எ-ம். (63)

## சீடனறிவே யேதுவென்றால் ஆசிரியவசனம் ஏதுவன்றேவனில் அஃதேயேதுவென்பதற்கோ ரிதிகாச முரைத்தல்.



மகனறிவே யேதுவெனிற் குருவசன மேதுவாய் வருவதெங்ஙன், மிகுமறிவுக் கெனக்கேட்ப வசிட்டனதற் குரைசெய்வான் விந்தவெற்பி, னகல்வனத்திலொருவேடன் பெருங்குடும்பி யவனொருநா ளடவிதன்னிற், புகுநெறியிற் பலகறையொன் றினைக்கெடுத்துத் தேடினான் பலம்பலோடும்.

இ - ள். மகனறிவேயேதுவெனில் - சீடனறிவேகாரணமானால், குருவசனமேதுவாய் - ஆசாரியவசனங்காரணமாக, மிகுமறிவுக்கு - மேலான ஆத்மஞானத்துக்கு, வருவதெங்ஙன் - வருவதெப்படி, எனக்கேட்ப-என்றிராமன்கேட்க, வசிட்டன் - வசிட்டமுனியானவர், அதற்குரைசெய்வான் - அதற்குச்சொல்லுவார், விந்தவெற்பினகல்வனத்தில் - விந்தமலையின்மகாரணியத்தில், ஒருவேடன்பெருங்குடும்பி-ஒருவேடன் பெரியசம்சாரி, அவனொருநாளடவிதன்னில் - அவ்வேடனொருதினம் (புல்லுகணிறைந்த) காட்டில், புகுநெறியிற் பலகறையொன்றினைக்கெடுத்து-நடக்கின்ற மார்க்கத்திலோர் பலகறையைப்போட்டுவிட்டு, புலம்பலோடுந்தேடினான் அழுகையுடன்றேடினான்—எ-று.

எ - து. சீடனறிவே காரணமானால் ஆசாரியவசனங் காரணமாக மேலான ஆத்மஞானத்துக்கு வருவதெப்படி? என்றிராமன் கேட்க வசிட்டமுனியானவர் அதற்குச்சொல்லுவார். விந்தமலையின் மகாரணியத்தி லொருவேடன் பெரிய சம்சாரி, அவ்வேடனொரு தினம் புல்லுகணிறைந்த காட்டில் நடக்கின்ற மார்க்கத்திலோர் பல கறையைப் போட்டுவிட்டு அழுகையுடன் றேடினான்—எ-ம்.

மூன்றுநா டேடியபின் முழுமதிநேர் மணியொன்று முன்னே கண்டா, னென்றுபல கறைதேய வேழுலகும் பெறுமணியை யெதிர்ந்தான்வேடன், ஞான்றவுப தேசத்தாற் கல்வியான் ஞானமுறி மதுவேபோல, வூன்றுறவொன் றைக்கருத வொன்றுவெளிப் படுங் குருவி னுபதேசத்தால்,

இ - ள். மூன்றுநாடேடியபின் - மூன்றுதினந்தேடினபின்பு, முழுமதிநேர்மணியொன்று-பூர்ணசந்திரனையொத்த ஒருவிரத்தினத்தை, முன்னே கண்டான் ;- எதிரேகண்டான், என்று பலகறைதேட - எக்காலமும் பலகறையைத்தேட, எழுலகும்பெறுமணியை - சத்தவுலகமும்விலைபெறத்தகுந்த இரத்தினத்தை, வேடனெதிர்ந்தான் - வேடுவனேநேர்பெற்றான், அதுபோல் - அதைப்போல, ஞான்றவுபதேசத்தால் - (பக்குவ) காலத்திற் செய்யும்

பிரமவுபதேசத்தினாலும், கல்வியால் - வேதாந்தசாஸ்திர) ஞானத்தினாலும், ஞானமுமம் - அறிவுண்டாம், குருவினுபதேசத்தால் - ஆசாரியருபதேசத்தினல், ஊன்றறவொன்றைக்கருத - திரமாகவொன்றைநினைக்க, ஒன்றுவெளிப்படும் - மற்றொன்றுதயமாம்—எ-று.

எ - து. மூன்றுதினந் தேடினபின்பு பூர்ணசந்திரனை யொத்த ஒருவிரத்தினத்தை யெதிரேகண்டான். ஏக்கமுற்றுப் பலகறையைத் தேட சத்தவுலகமும் விலைபெறத்தகுந்த இரத்தினத்தை வேடுவனோ பெற்றான். அதைப்போல பக்குவகாலத்திற் செய்யும் பிரமவுபதேசத்தினாலும் வேதாந்த சாஸ்திரஞானத்தினாலுமறிவுண்டாம். ஆசாரிய ரூபத்தினல் திரமாக வொன்றை நினைக்க மற்றொன்றுதயமாம்—எ-ம்.

(ப-ம். குருவாக்கியப்படி துரியவடிவைச் சிந்திக்கச் சிந்திக்க அச்சிந்தனமிறந்து சிந்தனதீதமான துரியாதீதம் வெளிப்படுமென்பார், ஒன்றைக்கருத வொன்று வெளிப்படுங் குருவினுபதேசத்தா லென்றார்.

(இ-கு-க-ம்.) குருவாக்கியங் காரணமாகச் சீடன் முயற் சிக்கின்ஞானமுதிக்குமாகலின் அதுவேகாரணமாமென்பதாம். (65)

## சீடனறிவு முயற்சிக்கு மாசிரியர்வாக் கதன் பயனுக் கும் ஏதுவெனக்கூறிச் சூடாலையின் கூட்டரவால் அநித்தியவிவேகந் தோற்றிற்றெனல்.

—(·.·)—

நலனுறுபே ரறிவுக்குக் குருவசனங் காரணத்தை நண்ணாதேனும், பலகறைநன் மணிக்கேது வானுப்போ லேதுவாய்ப் பலத்தை நல்கும், குருவுசிகித் துவசஞ்ஞன் ஞானமிலா மையின்மோகங் கூடிச்சாலச். சுலபமுறு கன்செல்வம் பெருங்கனவென் றெண்ணியே துன்பமுற்றான்.

இ - ள். நலனுறுபேரறிவுக்கு - சுகம்பொருந்தியவியாபகஞானத்துக்கு, குருவசனம்- ஆசாரியருபதேசமானது, காரணத்தைநண்ணாதேனும் - காரணமாதலைக்கிட்டாததானாலும், பலகறை - பலகறையானது, நன்மணிக்கு - நல்லவிரத்தினங் (கிடைப்பதற்கு), ஏதுவானுப்போல் - காரணமானதுபோல, யேதுவாய்பலத்தைநல்கும் - காரணமாகப்பயனைக்கொடுக்கும், குலவுசிகித்துவசன்றான் - குலவாநின்றசிகித்துவ அரசனானவன், ஞானமிலாமையின் - ஆத்மஞானமில்லாததினல், மோகங்கூடிசாலச்சுலபமுறு - மயக்கமடைந்து மிகவும் லகுவாய்ப்பொருந்துகின்ற, தன்செல்வம்பெருங்கனவென்றெண்ணி துன்பமுற்றான் - தனதுசெல்வங் காடாக்கினியென்று நினைத்து துக்கமடைந்தான்—எ-று.

எ - து. சுகம்பொருந்திய வியாபகஞானத்துக்கு ஆசாரியருப தேசமானது காரணமாதலைக் கிட்டாததானாலும் பலகறையானது நல்ல இரத்தினங்கிடைப்பதற்குக் காரணமானதுபோல காரணமாகப் பயனைக்கொடுக்கும். குலவாநிலை றசிகித்துவ அரசனானவன் ஆத்மஞானமில்லாததினால் மயக்கமடைந்துமிகவும் லகுவாய்ப்பொருந்துகின்ற தனதுசெல்வங் காடாக்கினியென்று நினைத்து துக்கமடைந்தான்.

## இல்லரத்தருமப்படி தானமுதலியவைகளைச் செய்துந் துன்பநீங்காமையாற் றுறவறத்திற் றவஞ்செய் தலை விரும்பித் தேவிக்குரைத்தல்.

அருந்தானம் பலகொடுத்தான் றவமிகச்செய் தான்றீர்த்தமனைத்துந் தோய்ந்தான், வருந்தாமை யவற்றாலும் பெற்றிலன்பேரிடராலே மனநொந்தோர்நா, ளிருந்தானே காந்தத்தின் மடிமேலே சூடாலையிருக்கச்செய்து, பெருந்தாபமுறுகின்ற தாயவெல்லா மவளுக்குப் பேசலுற்றான்.

இ - ள். அருந்தானம் - அரியதானங்கள், பலகொடுத்தான் - அநேகங்களைச்செய்தான், தவமிகச்செய்தான் - விரதங்களைமிகுதியாகச்செய்தான், தீர்த்தமனைத்துந்தோய்ந்தான் - தீர்த்தங்களிலெல்லாமுழுகினான், வருந்தாமை - துன்பமில்லாமையை, அவற்றாலும்பெற்றிலன் - அவைகளாலுமடைந்திலன், பேரிடரால் - மிகுந்ததுன்பத்தினால், மனநொந்து - மனதுநைந்து, ஓர்நாளே காந்தத்தினிருந்தான் - ஒருதினந்தனியேயிருந்து, மடிமேற்சூடாலையிருக்கச்செய்து - (தனது) மடியின்மேற்சூடாலையைவைத்துக்கொண்டு, பெருந்தாபமுறுகின்றதயவெல்லாம் - மகாவெப்பமடைகின்ற துன்பங்களனைத்தையும், அவளுக்குப்பேசலுற்றான் - அவளுக்குச்சொல்லுவான் — எ - று.

எ - து. அரியதானங்கள் அநேகங்களைச் செய்தான், விரதங்களை மிகுதியாகச்செய்தான், தீர்த்தங்களிலெல்லா முழுகினான், துன்பமில்லாமையை அவைகளாலுமடைந்திலன். மிகுந்த துன்பத்தினால்மனது நைந்து ஒருதினந் தனியேயிருந்து தனது மடியின்மேற் சூடாலையை வைத்துக்கொண்டு மகாவெப்பமடைகின்ற துன்பங்களனைத்தையுமவளுக்குச் சொல்லுவான் — எ - ம். (67)

ஆண்டவா சினும்புசித்த செல்வத்து மின்றுநா னாசையற்றேன், மீண்டவனம் புகநயந்தே னாக்கசுகமாபத்து நிதிகளெல்லா, மாண்டவனத் துறைவோரை துயர்செய்யாப் புலிபொருட்டான் மயங்க வேண்டாக், காண்டகுதன் கினாசந் தோன்றாத நாட்டினும் வன் காடுநன்றே.

இ - ள். ஆண்டவரசினும் - ஆளப்பட்ட வரசாட்சியிலும், புசித்தசெல்வத்தும் - அனுபவித்தசம்பத்திலும், இன்றாசொழிந்தனன் - இப்போது யானிச்சைவிட்டேன், நீண்டவனம்புகநயக்கேன் - நெடியகாட்டினிடத்திற் செல்லவிரும்பினேன், துக்ககம் - துன்பவின் பங்களும், ஆபத்துகதிகள் - ஆபத்துச்சம்பத்துகளுமாகிய, எல்லாம் - யாவும், மாண்டவனத் துறையோரை - மாட்சிமைப்பட்ட ஆரணியத்தில் வசிப்பவர்களை, துயர்செய்யா - துன்பஞ்செய்யாது, புவிப்பொருட்டு - பூமியினிமித்தம், மயங்கவேண்டாம் - பிரமிக்கவேண்டுவதில்லை, காண்டரு - காணத்தகுந்த, தன்கிளை - தனதுயிர்ச்சார்பு(பொருட்சார்பில்), நாசந்தோன்றாது - பற்றுநீங்காதிருக்கும், நாட்டினும் - இராச்சியத்தைக்காட்டிலும், வன்கானன்று - வலியவன நன்மையாம் — எ - று.

எ - து. ஆளப்பட்ட அரசாட்சியிலும், அனுபவித்த சம்பத்திலும், இப்போதுயானிச்சைவிட்டேன். நெடிய காட்டினிடத்திற்செல்லவிரும்பினேன். துன்பவின்பங்களும் ஆபத்துச் சம்பத்துக்களுமாகிய யாவும் மாட்சிமைப்பட்ட ஆரணியத்தில் வசிப்பவர்களைத் துன்பஞ்செய்யாது பூமியினிமித்தம் பிரமிக்கவேண்டுவதில்லை. காணத்தகுந்த தனதுயிர்ச்சார்பு பொருட்சார்பில் பற்று நீங்காதிருக்கும் இராச்சியத்தைக் காட்டிலும் வலியவன நன்மையாம் — எ—ம்.

பற்றின்றித் தனியிருக்கு மனத்தைப்போற் பனிமதியும் பதுமத்தோனும், பொற்றிரள்சேரிந்திரனுஞ் சுகமடையா ராதலிற்கான் போகுமென்னை, குற்றமென விலக்கலைநீ கணவர்நயந் ததுவிலர்கார் குலத்தின்மாதர், சிற்றிடையா யென்றுரைத்த மன்னனுக்குச் சூடாலைசெப்பலுற்றாள்.

இ - ள். பற்றின்றி ஆசையில்லாமல், தனியிருக்கும் - ஏகாந்தமா யிருக்கின்ற, மனத்தைப்போல் - மனதைப்போல, பனிமதியும் - குளிர்ச்சிபொருந்தியசந்திரனும் - பதுமத்தோனும் - பிரமதேவனும், பொற்றிரள் சேரிந்திரனும் - சொன்னசமூகத்தை யடைந்திருக்கிற தேவேந்திரனும், சுகமடையார் - இன்பமடையாதவர், ஆதலில் - ஆதலால், கான்போருமென்னை - வனத்திற்செல்லுகின்ற என்னை, குற்றமெனவிலக்கலை - நீகுற்றமென்று தள்ளாதே, கணவர்நயந்தது - தலைவன்விரும்பியது, குலத்தின்மாதர் - குலஸ்திரீகள், விலக்கார் - மாற்றார்கள், சிற்றிடையா யென்று - நுண்ணிய இடையையுடைய பெண்ணே யென்று, உரைத்த மன்னனுக்கு - சொல்லிய வாசனுக்கு, சூடாலை செப்பலுற்றாள் - சூடாலை சொல்லத் தொடங்கினள் — எ - று.

எ - து. ஆசையில்லாம லேகாந்தமா யிருக்கின்ற மனதைப் போலக்குளிர்ச்சிபொருந்திய சந்திரனும், பிரமதேவனும், சொன்ன சமூகத்தை யடைந்திருக்கின்ற தேவேந்திரனும் இன்பமடைவார்

கள், ஆதலால் வனத்திற்செல்லுகின்ற வென்னை நீகுற்றமென்றுதள்ளாதே, தலைவன் விரும்பியது குலஸ்திரீகள் மாற்றார்கள். நுண்ணிய இடையையுடைய பெண்ணேயென்றுசொல்லிய அரசனுக்குச்சூடாலைசொல்லத்தொடங்கினாள்—எ-ம்.

(இ-ச-க-ம்.) நித்தியா நித்தியவஸ்து விவேகமுண்டாயதனால் அகபரவிச்சை விராகமுதித்ததென்பதாம். (69)

## அரசன்கருத்து முதிருநிமித்தம் கபடமாய் வனஞ்செல்வதை விதிப்படி தடுத்தல்.

———

வசந்தநாண் மலர்விளங்குஞ் சாற்காலங்காய்விளங்கு மாபுபோல, விசைந்தநாட் செய்ததொழில் விளங்குமாற் சரையாலே யாக்கைநைந்தாற், பசைந்தமா லறவனமே போகலா மிளமைநாட் பான்மையன்று. மசைந்திடர் தொழிகவெனச் சூடாலை சொல்லியதற்காசன் சொல்வான்.

இ-ள். வசந்தநாள் - வசந்தகாலத்தில், மலர்விளங்கும் - புட்பங்கள் பிரகாசிக்கும், சாற்காலம் - சாற்காலத்தில், காய்விளங்கும் - காய்கள்பிரகாசிக்கும், மாபுபோல்-முறைமைபோல, இசைந்தநாள் - உரியகாலத்தில், செய்தொழில்விளங்கும் - செய்யப்பட்ட கன்மங்கள் பிரகாசிக்கும், சரையால்-மூப்பினால், ஆக்கைநைந்தால் - சரீரமானதுதளர்ந்தால், பசைந்தமாலற - நட்புற்றவிச்சைகெட, வனமேபோகலாம் - கானகத்திற்செல்லலாம், இளமைநாள் - எவ்வன்னகாலத்திற் (செல்லுதல்), பான்மையன்றும் - முறைமையன்று அசைந்திடா தொழிகவென - செல்லாதிருப்பாயென்று, சூடாலை சொல்லியதற்கு - சூடாலைசொன்னதற்கு, அரசன்சொல்வான்-மன்னவன் கூறுவான்.

எ - று. வசந்தகாலத்தில் புட்பங்கள் பிரகாசிக்கும், சாற்காலத்தில்காய்கள் பிரகாசிக்குமுறைமைபோல உரியகாலத்திற் செய்யப்பட்டகன்மங்கள் பிரகாசிக்கும். மூப்பினாற் சரீரமானதுதளர்ந்தால்நட்புற்ற இச்சைகெடகானகத்திற் செல்லலாம்; எவ்வன்னகாலத்தில்செல்லுதல் முறைமையன்று; செல்லாதிருப்பாயென்று சூடாலை சொன்னதற்கு மன்னன்கூறுவான்—எ—ம். (70)

தடாதொழிவா யேகாந்த வனம்புகுந்தே நிற்பேனுன் சற்றுந்தாழேன், நடாமுலைநீ சிறியையா வுடன்வருதற் காகாநீ

டாரைத்தாங்கி, விடாதிருந்தி நன்மனையிற் கணவாகன் றூற்குடும்ப மெலிவுறாமற், கெடாதளித்தல் குலமகளிர் விரதமெனச் சீர்படிவா னிளர்ந்துபோனான்.

இ - ள். தடாதொழிவாய் - தடுக்காமலிருப்பாய், ஏகாந்தவனம் - ஏகாந்தமானகானகத்தில், நான் புகுந்திருப்பேன் - யான் சென்றிருப்பேன், தற்றுந்தாழேன் - எவ்வளவுந் தங்கமாட்டேன், படாமுலை - கச்சிறுக்கிய தனத்தையுடையவளே, நீசிறியையால் - நீசிறுபெண்ணாதலால், உடன்வருதற்காகா - (என்)னுடன் வருவதற்குக்கூடாது, நீபாரைத்தாங்கி - நீபூமிபாலனஞ்செய்து, விடாதிருந்தி - நீங்காமலிருப்பாய், நன்மனையிற் கணவனின்றால் - நல்லவீட்டினின்று நாயகனீங்கினால், குடும்பமெலிவுறாமல் - சம்சாரமிளைக்காமல், கெடாதளித்தல் - கெடாமலிரட்சிக்குதல், குலமகளீர் விரதமெனக்கிளர்ந்து - குலஸ்த்ரீக்குத்தவமென்றுசொல்லி, சீர்படிவான் - ஸ்நானஞ்செய்யும்பொருட்டு, போனான் - சென்றான் — எ - று.

எ - து. தடுக்காமலிருப்பாய், ஏகாந்தமான கானகத்தில் யான் சென்றிருப்பேன். எவ்வளவுந் தங்கமாட்டேன். கச்சிறுக்கிய தனத்தையுடையவளே நீ சிறுபெண்ணாதலா லென்னுடன் வருதற்குக்கூடாது. நீ பூமிபாலனஞ்செய்து நீங்காமலிருப்பாய். நல்ல வீட்டினின்று நாயகனீங்கினால் சம்சார மிளைக்காமல் கெடாமலிரட்சிக்குதல் குலஸ்த்ரீக்குத் தவமென்றுசொல்லி ஸ்நானஞ் செய்யும் பொருட்டுச் சென்றான் — எ-ம். (71)

## அரசன் அரசி யறியாதவண்ணம் வனஞ்செல்லல்.

பகற்பொழுது சென்றதற்பின் சந்திரிய திகள்பண்ணிப்பாவை யோடுஞ், சுசித்தமளி யெனநிலத்திற் றுயில்வுற்று ளள்ளிரவிற் றுஞ் சும்வஞ்சி, யகத்திருப்ப மெல்லவெழுந் தவளறியா வகையேகியறிந் தோர்க்கெல்லா, நகர்க்குளுலா வுதுமென்று யாவரையு நிறுத்திப் போய் நகரை நீத்தான்.

இ - ள். பகற்பொழுது சென்றதற்பின் - பகற்காலம்போனபின்பு, சந்திரியதிகள்பண்ணி - சந்தியாவந்தன நியமங்களைச்செய்து, பாவையோடும் - மனையாளுடன், சுசித்தமளியென - இன்புற்ற பஞ்சணை மெத்தையைப்போல, நிலத்திற்றுயிற்றான் - பூமியினித்திரைசெய்து, நள்ளிரவில் - அர்த்தசாமத்தில், துஞ்சும்வஞ்சி - நித்திரைசெய்யும் வஞ்சிக்கொடிபோன்ற கூந்தலையாளவன், அகத்திருப்ப - உள்ளேயிருக்க, மெல்லவெழுந் தவளறியாவகையேகி - மிருதுவாகவெழுந்திருந் தவளறியாதபடிபோய், அறிந்தோர்க்செல்லாம் - தெரிந்த

லனைவர்களுக்கும், நகர்க்குளுலாவுதுமென்று - நகர்சோதனையாகச் செல்வோமென்று, யாவரையுநிறுத்தி-எல்லாரையுநிறுத்தி, போய் - (வெளியிற்) சென்று, நகரைநீத்தான்-பட்டணத்தினின்று நீங்கினன்—எ-று.

எ — து. பகற்காலம் போனபின்பு சந்தியாவந்தன நியமங்களைச்செய்து மனையாளுடன் இன்புற்ற பஞ்சணைமெத்தையைப்போலப் பூமியினித்திரைசெய்து, அர்த்தசாமத்தில் நித்திரைசெய்யும் வஞ்சிக்கொடிபோன்ற சூடாலையானவளை உள்ளேயிருக்க மிருதுவாகவெழுந்திருந்தவளறியாதபடி போய்த் தெரிந்த அவனைவர்களுக்கும் நகர்சோதனையாகச் செல்வோமென்று எல்லாரையுநிறுத்தி வெளியிற்சென்று பட்டணத்தினின்று நீங்கினன்—எ-ம். (72)

## மந்தரவெற்பின் சாரலையடைதல்.

சடமகலாப் பெருந்திருவே யுனைத்தொழுதே னில்லென்றுதன்னேயேகி, யடவிபுகுந் தான்றினமோர் பன்னிரண்டிற் பலகிரியு மாறுநீங்கிப், படர்சனங்கள் செலக்கரிதாய் மந்திரவெற்புக்கருகாம்பழுவம்புக்கான், மடலவிழ்பங் கயவாவிமலப்பொழில்சூழவ்விடத்தில்வசிப்பதானான்.

இ - ள். சடமகலாப்பெருந்திருவே - மூடத்தன்மையைநீக்காத பெரிய சம்பத்தே, உனைத்தொழுதேன் - உன்னைவணங்கினேன், நில்லென்று - நிற்பாயென்று (நிறுத்தி), தன்னேயேகி - தானேசென்று, அடவிபுகுந்தான்-காட்டிற்பிரவேசித்து, தினமோர்பன்னிரண்டில - பன்னிரண்டுநாளில், பலகிரியும் - அநேகமலைகளையும், ஆறும் - அநேகநதிகளையும், நீங்கி - கடந்து, படர்சனங்கள் - செல்லுகின்றமனிதர்கள், செலற்கரிதாம் - போகக்கூடாததாகிய, மந்தரவெற்புக்கு - மந்தரமலைக்கு, அருகாம் பழுவம்புக்கான - பக்கமான வனத்திற்சென்று, மடலவிழ்பங்கயவாவி - இதழ்கள்விரிந்த தாமரைத்தடாகமும், மலர்ப்பொழில் - பூங்காவனமும், சூழவ்விடத்தில்-சூழ்ந்திருக்கின்ற அந்தஸ்தானத்தில், வசிப்பதானன் - வாசஞ்செய்வதானன்—எ-று.

எ - து. மூடத்தன்மையை நீக்காதபெரியசம்பத்தே உன்னை வணங்கினேன்; நிற்பாயென்று நிறுத்தித்தானேசென்று காட்டிற்பிரவேசித்துப் பன்னிரண்டுநாளி லநேகமலைகளையும், அநேகநதிகளையுங் கடந்து செல்லுகின்ற மனிதர்கள் போகக்கூடாததாகிய மந்தரமலைக்குப் பக்கமான வனத்திற்சென்று, இதழ்கள்விரிந்த தாமரைத்தடாகமும் பூங்காவனமுஞ் சூழ்ந்திருக்கின்ற வந்தஸ்வானத்தில் வாசஞ்செய்வதானன்—எ-ம்.

## தவவேடம்பூண்டு நியமப்படி தவத்தைச்செய்தல்.

சாலையமைத் தான்மூங்கிற் றண்டிழைத்தான் கமண்டலமுஞ் சமைத்தானக்கு, மாலையுங்கந்தையுங்கனிகா யமைப்பனபாத் திரங்க ளுமான் றோலுஞ்சேர்த்தான், மேலேயுயர் தவந்தொடங்கிச் சந்தி நியமமுஞ்செபமும் விடிந்தசாமஞ், சோலை மலர் பறித்தலிரண்டாஞ் சாம மிவ்வகையே தொழில்களாக்கி.

இ - ள். சாலையமைத்தான் - (பன்னக) சாலைசெய்தான், மூங்கிற்றண் டிழைத்தான் - வேணுத்தண்டஞ்செய்தான், கமண்டலமுஞ் சமைத்தான் - கமண்டலத்தையுஞ் செய்தான், அக்குமாலையும் - செபமாலையும், கந்தையும் - வஸ்திரமும், கனிகாயமைப்பன பாத்திரங்களும் - காய்கனிகள் வைக்கத்தகு ந்த பாத்திரங்களும், மான்றோலும் - மிருகசருமமாகிய இவைகளை, சேர்த் தான் - சேகரஞ்செய்தான், மேலே - மேல், உயர் தவந்தொடங்கி - மேலான தபசைச் செய்யத்தொடர்ந்து, விடிந்தசாமம் - உதயமான முதற்சாமத்தில், சந் தியமம் - சந்தியாவந்தனமும், செபமும் - செபமும், இரண்டாஞ்சாமம் சோலை மலர்பறித்தல் - இரண்டாஞ்சாமத்திற் புட்பமெடுத்தலும், இவ்வகையே தொ ழில்களாக்கி - இப்படியே கன்மங்களுண்டாக்கி—எ - று.

எ - து. பன்னகசாலை செய்தான், வேணுத்தண்டஞ் செய்தா ன், கமண்டலத்தையுஞ் செய்தான், செபமாலையும் வஸ்திரமும் காய் கனிகள் வைக்கத்தகுந்த பாத்திரங்களும் மிருகசருமமுமாகிய இவை களைச் சேகரஞ் செய்தான். மேல் மேலான தபசைச்செய்யத்தொட ர்ந்து உதயமான முதற்சாமத்தில் சந்தியாவந்தனமும், செபமும், இ ரண்டாஞ்சாமத்திற் புட்பமெடுத்தலும் இப்படியே கன்மங்களுண் டாக்கி—எ—ம். [74]

கடவுள்பூசனைமூன்றாஞ் சாமநா லாஞ்சாமங் கனிகாய்கொள் ளல், படரிரவெல் லாஞ்செபமா மிவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்த வேந்தன், மடவாரிங் கரையிரவிற் கண்விழித்தா டன்னருகு மன்னை க்காணு, மிடர்மருவி வாழ்வகன்று வனம்புகுந்த னரசனென விரங் கிவாடி.

இ - ள். மூன்றாஞ்சாமம் - மூன்றாஞ்சாமத்தில், கடவுள்பூசனை - தேவா ருச்சனையும், நாலாஞ்சாமம் - நான்காவதுசாமத்தில், கனிகாய்கொள்ளல் - கனி காய்களைப்புசித்தலும், படரிரவெல்லாம் - படர்ந்தவிராமுழுதும், செபமாம் - செபமுமாகும், இவ்வாறு - இப்படி, பகர்ந்தவேந்தன் - சொல்லப்பட்ட சிகித் துவராசன், தவம்புரிந்தான் - தவஞ்செய்தான், அங்கு - இந்துவாண்மனையி லிருக்கின்ற, மடவாரல் - சூடாலையானவள், அரையிரவில் - பாதிராத்திரியில், கண்விழித்தாள் - விழித்துக்கொண்டாள், தன்னருகு - தனது பக்கத்திலிரு ந்த, மன்னைக்காணுள் - அரசனைக் காணாதவளாய், இடர்மருவி - அன்பு

மடைந்து, வாழ்வகன்று-செல்வத்தினின்று நீங்கி, அரசன்-மன்னவன், வனம் புகுந்தானென-கானகத்திற்சென்றானென்று, இரக்கிவாடி - இரக்கத்துடன் மெலிந்து—எ-று.

எ - து. மூன்றாஞ்சாமத்தில் தேவாருச்சனையும். நான்காவது சாமத்திற் கனிகாய்களைப் புசித்தலும், படர்ந்த இராமுழுதுஞ்செபமுமாகவும். இப்படி சொல்லப்பட்ட சிகித்துவராசன் தவஞ்செய்தான். இந்த அரண்மனையிலிருக்கின்ற சூடாலையானவள் பாதிராத்திரியில் விழித்துக்கொண்டாள் தனதுபக்கத்திலிருந்த அரசனைக் காணாதவளாய்த் துன்பமடைந்து செல்வத்தினின்று நீங்கி மன்னவன் கானகத்திற் சென்றானென்று இரக்கத்துடன் மெலிந்து —எ—ம்.

(இ-க-க-ம். புறப்பற்றாகிய உயிர்ச்சார்பு பொருட்சார்பு துன்பமெனக் கண்டு அவைகளைத் துறந் தகப்பற்றைநீக்கத் தவஞ்செய்ததாம். (75)

## தலைவிதலைவனைப்பார்த்து மேனடக்குங் காரியங்களை யாலோசித்தல்.

பதியொழிந்து கதியில்லைக் குலமகளிர்க் கரசனைநாம் பயிறுமென்று, மதிநினைந்து சாளரத்தாற் புறப்பட்டு வானேகி வானிற்சித்த ரதிகமிதோ மதியென்ன முகந்திகழப் போகின்றா னாங்கே கண்டாள், கதிர்வடிவா ளுடனிரவிற் றனிப்போ மன்னனைக்கண்டுகருதுகிற்பாள்.

இ-ள். - பதியொழிந்து-கொழுநனையல்லாமல், குலமகளிர்க்கு - குலப்பெண்களுக்கு, கதியில்லை - (வேறே) கதியில்லை, (ஆகலின்) அரசனை-இராசாவை, நாமபயிறுமென்று - யாம்கூடவேண்டுமென்று, மதிநினைந்து-மனதிற்சிந்தித்து, சாளரத்தாற் புறப்பட்டு - பலகணிவாயலால்வெளிப்பட்டு, வானேகி-ஆகாயத்திற்சென்று, வானிற்சித்தர்-ஆகாயசித்தர்கள், அதிகமிதோமதியென்ன - மிச்சமானவிதோ வொருசந்திரனென்று சொல்லும்படி, முகந்திகழ - வதனமானதுவிளங்க, போகின்றான் - செல்லுகின்றவன், ஆங்கு - அவ்விடத்தில், கதிர்வடிவாளுடன் - பிரகாசம்பொருந்திய வடித்த கத்தயோடும், இரவில் - இராத்திரியில், தனிப்போம் - ஒருவனாகச் செல்கின்ற, மன்னனைக்கண்டு-அரசனைப்பார்த்து, (சூடாலையானவள்), கருதுகிற்பாள் -சிந்திப்பாள்—எ-று.

எ - து. கொழுநனையல்லாமற் குலப்பெண்களுக்கு வேறேகதியில்லை ஆதலின், இராசாவை யாம்கூடவேண்டுமென்று மனதிற்சிந்

திசிந்தித்துப் பலகணிவாயலால் வெளிப்பட்டு ஆகாயத்திற்சென்று, ஆகாயத்திலுள்ள சித்தர்கள் மிச்சமான விநோதவொரு தந்திரனென்று சொல்லும்படி வதனமானது விளங்கச் செல்லுகின்ற அவ்விடத்திற் பிரகாசம்பொருந்திய வடித்தகத்தியோடும் இராத்திரியில் ஒருவனாகச்செல்லுகின்ற அரசனைப்பார்த்து சூடாலையானவள் சிந்திப்பாள்—எ-ம். (76)

## காணுங்கால மிதுவன்றெனத் திரும்பிவீடுவருதல்.



இனியிவன்செய் வனவென்னென் றெண்ணுதலு மேற்செய்வ
தெல்லாங்கண்டாள், கனிமொழியா டிரும்பினா ளின்றிவனை நாஞ்
சேருங் காலமல்ல, துனியறப்பின் சேர்வதே விதிநெறியா மென
மீண்டு தொல்வீடுற்றாள், வினவினர்க்கு மன்னவனோர் காரணத்தே
கினனென்று விளம்பியார்க்கும்.

இ - ள். இனியிவன் - இனிமேலிவன், செய்வனவென்னென்று-செய்யத்தக்கனவென்னவென்று, எண்ணுதலும் - சிந்தித்துப்பார்த்தலும், மேற்செய்வதெல்லாங்கண்டாள் - இனிநடப்பவை யாவையும்பார்த்தாள், கனிமொழியாள் - மதுரவசனமுள்ள சூடாலையானவள், திரும்பினாள் - (தன்சிந்தனையினின்று) திரும்பினாள், இன்றிவனை - இப்பொழுதிவ்வரசனை, நாஞ்சேருங்காலமல்ல-நாமடையுங்காலமல்ல, துனியற - இராகத்துவேடங்கெட, பின்சேர்வதே - பின்னடைவதே, விதிநெறியாமென - நியதிமார்க்கமாமென்று, மீண்டுதொல்வீடுற்றாள் - திரும்பிப் பழையபதியில்வந்தாள், வினவினர்க்கு - கேட்டவர்களுக்கு, மன்னவனோர், காரணத்தேகினனென்று-அரசனொருகாரணத்தினாற் போனாரென்று, யார்க்கும்விளம்பி - யாவருக்கும் சொல்லி—எ-று.

எ - து. இனிமேலிவன் செய்யத்தக்கன வென்னவென்று சிந்தித்துப்பார்த்தலுங் இனிநடப்பவை யாவையும்பார்த்தாள். மதுரவசனமுள்ள சூடாலையானவள் தன் சிந்தனையினின்று திரும்பினாள். இப்போழுதிவ்வரசனை நாமடையுங் காலமல்ல. இராகத்துவேடங்கெடப் பின்னடைவதே நியதிமார்க்கமாமென்று திரும்பிப் பழையபதியில் வந்தாள், கேட்டவர்களுக்கு அரசனொரு காரணத்தினாற் போனாரென்று யாவருக்குஞ்சொல்லி—எ-ம். (77)

## தலைவனுந்தரவின்படி யரசுசெய்துமீண்டேகுதல்.

அரசனொழுங் காற்புவியைக் தனிகாத்தாள் சமநோக்கா லணங்குபோல்வாள், வரிசையுடன் பதினெட்டாண் டகன்று சூடாலையுந் தன்மனையில்வாழ்ந்தாள், புரைசெறிகா னத்திருந்தான் சிகித்துவச னவன்பாலும் போவதற்கு, விரவியநா ளிதுவென்ன விருளிலே புறப்பட்டு விண்ணிற்போனாள்.

இ - ள். அணங்குபோல்வாள் - தெய்வப்பெண்ணுக்கொப்பான சூடாலையானவள், அரசனொழுங்கால் - இராசநீதியினால், புவியை - பூமியை, சமநோக்கால் - சமதிருஷ்டியினால், தனிகாத்தாள் - தனிமையாக இரட்சித்தாள், வரிசையுடன் - கிரமமாக, பதினெட்டாண்டகன்று - பதினெண்வருட நீங்க, சூடாலையும் - சூடாலையென்பவளும், தன்மனையின்வாழ்ந்தாள் - தனதான் மனையில் வாழ்ந்திருந்தாள், சிகித்துவசன் - சிகித்துவவாசன், புரைசெறி - குற்றமிகுந்த, கானத்திருந்தான் - வனத்திலிருந்தான், அவன்பால் - அவனிடத்தில், போவதற்கு - யாஞ்செல்வதற்கு, இதுவிரவிய நாளென்ன - இதுதகுந்த காலமென்று, இருளிலேபுறப்பட்டு - இராத்திரியிலே வெளிப்பட்டு, விண்ணிற்போனாள் - ஆகாயத்திற்சென்றாள் — எ - று.

எ - து. தெய்வப்பெண்ணுக் கொப்பான சூடாலையானவள் இராசநீதியினாற் பூமியை சமதிருஷ்டியினால் தனிமையாக இரட்சித்தாள். கிரமமாகப் பதினெண்வருடநீங்க சூடாலையென்பவளும் தனதான்மனையில் வாழ்ந்திருந்தாள். சிகித்துவவாசன் குற்றமிகுந்தவனத்திலிருந்தான். அவனிடத்தில் யாஞ்செல்வதற்கு இதுதகுந்த காலமென்று இராத்திரியிலே வெளிபட்டு ஆகாயத்திற் சென்றாள்-எ-று.

## தலைவனைக்கண்டு தலைவி விசனப்படுதல்.

மாருதத்தின் கழுத்தேறி மறைந்துபோய் மந்தரமா மலையைச் சார்ந்தா, ளாரமற மணிப்பூண்க ளின்றியே கறுத்துலர்ந்த வங்கமாகி, யோருடனின்றதுகண்டா ளறிந்திலண்மா யோகத்தா லுணர்ந்துமன்னைக் கூறுமிடர் சிறிதடைந்து தன்னிலே மனத்தோடு கூறலுற்றாள்.

இ - ள். மாருதத்தின் கழுத்தேறி - வாயுவின் றோளிலேறி, மறைந்துபோய் - தெரியாமற்சென்று, மந்தரமாமலையைச்சார்ந்தாள் - மந்தரகிரியைச் சேர்ந்தாள், ஆரம் - முத்துமாலையும், ஆரமணிப்பூண்கள் - மிகுந்த விரத்தின

னுபரணங்களும், இன்றி - இல்லாமல், கறுகதுலர்ந்த - கருகியுலர்ந்துபோன, அங்கமாகி - சரீரமாய், ஒருடனின்றதுகண்டாள் - ஒரு சரீரமிருந்ததைப்பார்த்தாள், அறிந்திலள் - (தனது தலைவனென்று) தெரிந்திலள், மாயோகத்தால் - மகா யோகத்தினால், மன்னை (தனது நாயகனை) அரசனென்று, உணர்ந்து - அறிந்து, கூருயிர் - மிகுந்த துன்பங்களை, பெறிதடைந்து - கொஞ்சமடைந்து, தனனில் - தன்னிடத்தில், மனத்தொடு கூறலுற்றாள் - மனதுடன் சொல்லத்தொடங்கினாள் — எ-று.

எ - று. வாயுவின் றோளிமேலேறித் தெரியாமற் சென்று மந்தரகிரியைச் சேர்ந்தாள். முத்தமாலையும் மிகுந்த இரத்தினாபரணங்களுமில்லாமல் கருகியுலர்ந்துபோன சரீரமாய் ஒரு சரீரமிருந்ததைப்பார்த்தாள். தனது தலைவனென்று தெரிந்திலள். மகாயோகத்தினாற் றனது நாயகனை அரசனென்றறிந்து மிகுந்த துன்பங்களைக் கொஞ்சமடைந்து தன்னிடத்தில் மனதுடன் சொல்லத்தொடங்கினாள்—எ—ம்.

(இ-சு-ஈ-ம்) பக்குவமுண்டாகும் பரியந்தம் பார்த்து அஃதுதித்தகாலம் போதிக்கவேண்டுமென்றருளிந்த துறந்துவந்த அறியாமை செய்ததைப்பார்த்து அகத்தில் வருந்தினளென்பதாம். (79)

## போதித்ததற்கு தெய்வீகவடிவமெடுக்க ஆலோசித்தல்.

அறியாமை யறக்கொடிதந் தோவந்தோ வதனாலிவ் வரசனொந்
தான், பிரியாத ஞானமும்போ கமும்வீடு மின்றளிப்பேன் பிறிதொ
ன்றில்லைச், சிறியாளெம் மனைவியிவ ளென்றிகழா வகைவேறோர்
தேகமேவி, நெறியாக வுணர்த்துவன் பேதைமைதீரு நெஞ்சினனாய்
நிருபனின்றான்.

இ - ள். அந்தோவந்தோ - அதிசயமதிசயம், அறியாமை - அஞ்ஞானமானது, அறக்கொடிது - மிகவுங்கொடியது, ஆதலால் - ஆதலால், இவ்வரசன் - இம்மேவந்தனுமவன், நொந்தான் - துன்பமுற்றான், பிரியாத ஞானமும் - பிரிவற்ற ஆத்மஞானமும், போகமும் - சம்பத்தும், வீடும் - மோக்ஷமுமான இவைகளை, இன்றளிப்பேன் - இப்பொழுதே கொடுப்பேன், பிறிதொன்றில்லை - வேறொருசந்தேகமில்லை, சிறியாள் - சிறியவளாகிய, இவள் - இந்தப்பெண், நம்மனைவி - நமது பாரியாள், என்றிகழாவகை - என்று நிந்தியாதபடி, வேறோர்தேகமேவி - மற்றொருசரீரத்தையெடுத்து, நெறியாகவுணர்த்துவன் - கிரமமாகப்போதிப்பான், பேதைமை தீரும் - அறியாமைநீங்கும், நெஞ்சினனாய் - மனதுடையவனாய், நிருபனின்றான் - அரசனிருந்தான்—எ-று.

எ - து. அதிசயமதிசயம்! அஞ்ஞானமானது மிகவுங் கொடியதாதலால் இவ்வேந்தனானவன் துன்பமுற்றான். பிரிவற்ற ஆத்மஞானமும், சம்பத்தும், மோக்ஷமுமான இவைகளை யிப்போதே கொடுப்பேன் வேறொரு சந்தேகமுமில்லை. சிறியவளாகிய இந்தப் பெண் நமது பாரியாளென்று நிந்தியாதப்படி மற்றொரு சரீரத்தை யெடுத்துக் கிரமமாகப் போதிப்பன். அறியாமை நீங்கும் மனதுடையவனு யாசனிருந்தான்—எ-ம். (80)

## தேவகுமாரனுகத் தெரிசனங்கொடுத்தல்.



பக்குவமா தலினிந்த விமலமனத் தேயறிவு பற்றிபாயுந், தக்கதிது வென்றெண்ணி யொருசிறிது தியானத்தாற் றான்வேறாகி, மிக்கதொரு வேதியன்சே யாய்க்கணவன் முற்குதித்தாள்விண்ணினின்று, மக்கணமே யவனோக்கிக் கடிதெழுந்தங் கீகார மனைத்துஞ்செய்தான்.

இ - ள், பக்குவமாதலின் - பக்குவமாயிருத்தலின், இந்தவிமலமனத்து - இந்தநின்மலமான மனதில், அறிவுபற்றிபாயும் - ஞானமானது பிரதிபலிக்கும், இது - இப்பருவம், தக்கதென்றெண்ணி - தகுந்ததென்று சிந்தித்து, ஒருசிறிதுதியானத்தால் ஒப்பற்ற சில தியானத்தினால், தான்வேறாகி - தான் வேற்றுருவமாகி, மிக்கதொருவேதியன்சேயாய் - மேலானவொருபிராமணன் குமாரனாய், விண்ணினின்று - ஆகாயத்திலிருந்து, கணவன்முற்குதித்தாள் - தனது தலைவன் முன்னிறங்கினாள், அக்கணமே - அந்தக்ஷணமே, அவனோக்கி - அவ்வரசன்பார்த்து, கடிதெழுந்து - சீக்கிரத்திலெழுந்து, அங்கீகாரமனைத்துஞ்செய்தான் - ஏற்கத்தகுந்த பூசைகளெல்லாஞ் செய்தான்—எ-று.

எ - து. பக்குவமாயிருத்தலின் இந்த நின்மலமான மனதில் ஞானமானது பிரதிபலிக்கும், இப்பருவந் தகுந்ததென்று சிந்தித்து ஒப்பற்ற சிலதியானத்தினாற் றான் வேற்றுவமாகி மேலானவொரு பிராமணன் குமாரனாய் ஆகாயத்திலிருந்து தனது தலைவன் முன்னிறங்கினாள். அந்தக்ஷணமே அவ்வரசன் பார்த்துசீக்கிரத்திலெழுந்து ஏற்கத்தகுந்த பூசைகளெல்லாஞ் செய்தான்—எ-ம்.

## பிரயரிஷிய மொருவருக்கொருவ ருபசரித்தல்.

பொன்னிறத்தன் வெண்டாள மாலையன்வெண் டுகிலுடையன் புரிவெண்ணூலோ, னன்னிலத்தை விடச்சிறிது மேனிற்போன்றனை

நோக்கி நடவிங்கென்று, தன்னிடத்தா தனங்கொடுத்தான் சிசித்து வசன் மறையவன்சேய் தானுமீண்டு, மன்னியற்கைத் தவமுனியே யுனைத்தொழுதே னென்றுமறு மாற்றஞ்சொல்லி

இ - ள். பொன்னிறத்தன் - சொன்னமயமான வடிவமுடையவன், வெண்டாளமாலையான் - வெண்மையான முத்துமாலையையுடையவன், வெண்டுகி லுடையவன் - வெள்ளைவஸ்திரத்தைத் தரித்தவன், புரிவெண்ணூலோன் - முறுக்கிய வெண்பூணூலையுடையவன், நன்னிலத்தைவிட - நல்ல பூமியை நீங்க, சிறிதுமேனிற்போன்றனை - கொஞ்சமேலே நிற்கின்றவனை, நோக்கி - பார்த்து, இங்கு - இவ்விடத்தில் நடவென்று - எழுந்தருளுமென்று, சிசித்துவசன் - சிசித்துவவாசன், தன்னிடத்து - தன்னிடத்திலுள்ள, ஆதனங்கொடுத்தான் - ஆசனங்கொடுத்தான், மறையவன் சேய்தானும் - பிராமணனுடைய குமாரனும், மீண்டு - திரும்ப, இயற்கைத்தவம் - இயல்பான தவத்தையுடைய, மன்முனியே யுனைத்தொழுதேனென்று - இராசரிஷியே யுன்னை வணங்கினேனென்று, மறுமாற்றஞ் சொல்லி - மறுவசனஞ் சொல்லி—எ-று.

எ - று. சொன்னமயமான வடிவமுடையவன், வெண்மையான முத்துமாலையையுடையவன், வெள்ளைவஸ்திரத்தைத் தரித்தவன், முறுக்கிய வெண்பூணூலையுடையவன், நல்லபூமியை நீங்கக் கொஞ்சமேலே நிற்கின்றவனைப்பார்த்து இவ்விடத்தி லெழுந்தருளுமென்று சிசித்துவவாசன் றன்னிடத்திலுள்ள ஆசனங் கொடுத்தான். பிராமணனுடைய குமாரனும் திரும்ப இயல்பான தவத்தையுடைய இராசரிஷியே! யுன்னை வணங்கினேனென்று மறுவசனஞ் சொல்லி—எ-ம்.

## பூசித்துத்துதித்த அரசமுனிக்கு இப்பிரமமுனி முகமன் கூறல்.

ஆதனத்தி விருத்தலுமே மன்னுரைப்பான் கடவுண்மகனானீ தான், போதலினும் பயன்பெற்றே னின்றன்றோ வென்றுபல பூசை பண்ணி, யேதமற விட்டதே வதையென்றே கருதினா னிவனுமந் தப், பூதலமன் னனைநோக்கி நின்குணமும் வினையமுமார் பொருந்து கிற்பார்.

இ - ள். ஆதனத்திலிருத்தலும் - ஆசனத்திலிருந்தவளவில், மன்னுரைப்பான் - அரசன்சொல்லுவார், கடவுண்மகனானீதான் - தேவகுமாரனாகிய நீர், போதலினும்-வருதலினால், இன்றன்றோ - இப்பொழுதல்லவா, பயன் பெற்றேனென்று - (ஆத்ம) பிரயோசனமடைந்தே னென்றுசொல்லி, பலபூசைபண்ணி - அநந்தவாராதனைகளைச்செய்து, ஏதமற - களங்கமற, இட்ட

தேவதையென்றது - இஷ்டதெய்வமென்று, கருதினான் - நினைத்தான், இவனு மந்தப் பூதலமன்னனை நோக்கி - இந்தப் பிராமணனும் அப்பூமிக்கரசனைப்பார்த்து, நின்குணமும் வினையுமும் - உமதுகுணமும் வினையமும், ஆர்பொருந்தினர்பார் - ஆரடைந்திருக்கின்றார்கள்—எ - று.

எ - து. ஆசனத்தி லிருந்தவளவில் அரசன் சொல்லுவார். தேவகுமாரனாகிய! நீர் வருதலினா லிப்பொழுதல்லவோ ஆத்மப் பிரயோசனமடைந்தேனென்று சொல்லி அநந்தவாராதனைகளைச் செய்துகளங்கமற நமதிஷ்ட தெய்வமென்று நினைத்தான் இந்தப்பிராமணனுமப் பூமிக்கரசனைப்பார்த்து உமதுகுணமும் வினயமும் ஆரடைந்திருக்கின்றார்கள்—எ-ம். (83)

இதுவுமது.

அதனாலே நீடூழி வாழ்நியா னுபசாந்த மானநெஞ்சால், விதமானகற்பனையற்றரியதவம் வீடுபெறமிகச்செய்தாயோ, சதவேழ்வி வாசவனோர் வேந்தனும் பதம்விட்டுத் தவனத்தை, யிதமாக நினைந்துறைத லசிதார விரதமெனு மியற்கையொக்கும்.

இ - ள். அதனால் - அதனால், நீடூழிவாழ்நி - வெகுகாலம் வாழக்கடவாய், உபசாந்தமான நெஞ்சால - உபசாந்தமுள்ள மனதினால், விதமான கற்பனையிற்ற - நானாவிதமாகிய கற்பனைகளிறந்து, அரியதவம் - அரிதான தவத்தை, வீடுபெற - மோக்ஷத்தையடைய, மிகச்செய்தாயோ - மிகவுஞ்செய்தீரோ, சதவேழ்வி வாசவனோர் - சதமகனையொத்த, வேந்தனும் பதம்விட்டு - அரசனாகிய பதத்தைநீக்கி, தவம் - தவத்தைச்செய்ய, வனத்தையிதமாக நினைந்துறைதல் - காட்டையினிதாகக் கருதிவசித்தல், அசிதாரவிரதமெனு மியற்கையொக்கும் - கத்தி முனையிற்செய்யுந் தவமெனகின்ற இயல்புக் கொப்பாகும்—எ - று.

எ - து. அதனால் வெகுகாலம் வாழக்கடவாய், உபசாந்த முள்ள மனதினால் நானாவிதமாகிய கற்பனைகளிறந்து அரிதான தவத்தை மோக்ஷத்தையடைய மிகவுஞ்செய்தீரோ? சதமகனையொத்த அரசனாகிய பதத்தைநீக்கித் தவத்தைச் செய்யக் காட்டை யினிதாகக்கருதிவசித்தல் கத்திமுனையிற்செய்யுந் தவமென்கின்ற இயல்புக் கொப்பாகும்—எ-ம்.

(நூ-டு-க-ம்) போதிப்பதில் நம்பிக்கை யுண்டாகும்படி யிறந்தகால இயற்கையைக் கூறித் தனது முகப்படுத்திக்கொண்டதாம். (84)

## முனியை மூன்றுவினு வினவுதல்.

என்றமறை யவன்றனைப்பார்த் தரசனுரைப் பானிங்கென்னிய
ற்கையெல்லா, நன்றுணர்வுற் றாய்தேவ னாதலா லிவ்வியப்பு நன்னெ
றிபாற்றா, நின்றனைநீ யார்புதல்வ னின்பெயரென் வருபொருளென்
னிகழ்த்துகென்ன, வொன்றுமொழி யாதுரைப்பக் கேட்டியென
மறையவன்சே யுரைக்கலுற்றான்.

இ - ள். என்ற - இப்படி யென்று சொல்லிய), மறையவன்றனைப்பார்
த்து - பிராமணனைப்பார்த்து, அரசனுரைப்பான் - மன்னவன் சொல்வான்,
இங்கு - இவ்விடத்தில், என்னியற்கையெல்லாம் - என தன்மைகளைத்
தையும், தேவனாதலால் - கடவுளாதலால், நன்றுணர்வுற்றாய் - நன்றாயறிந்
தாய், இதிவ்வியப்புநன்னெறிபாற்றாநின்றனை - இதிலதிசயமுறும்படி நின்றாய்
நீயார்புதல்வன் - நீராருடையபுத்திரர், நின்பெயரென் - உமதுநாமமென்ன,
வருபொருளென் - இங்கு) வந்தகாரியமென்ன, நிகழ்த்துகென்ன - சொல்ல
வேண்டுமென்றுகேட்க, ஒன்றுமொழியாது - ஒன்றுந் தவிராமல், உரைப்ப
க்கேட்டியென - சொல்லக்கேட்பாயென்று, மறையவன்சேய் - பிராமணகுமா
ரன், உரைக்கலுற்றான் - சொல்லத்தொடங்கினார் — எ - று.

எ - று. இப்படியென்று சொல்லிய பிராமணனைப்பார்த்துமன்
னவன் சொல்லுவான்; இவ்விடத்திலென து தன்மைகளனைத்தையும்
கடவுளாதலால் நன்றாயறிந்தாய். அதிலதிசய முறும்படி நின்றாய்.
நீராருடைய புத்திரர் ? உமது நாமமென்ன ? இங்குவந்த காரியமெ
ன்ன ? சொல்லவேண்டுமென்று கேட்க, ஒன்றுந் தவிராமற் சொல்
லக் கேட்பாயென்று பிராமணகுமாரன் சொல்லத்தொடங்கினார்.

## ஒரு சிறிது தியானத்தால் கும்பவடிவெடுத்தலை யோர்வரலாறாகக் கூறுதல்.

நாரதனென் றொருமுனிவன் மெஞ்ஞான விளக்கெப்பானன்
னீர்கங்கைத், திரைமறு பொற்றலத்திற் சமாதியிருந் தானக்க தியான
ம்விட்டோர், சோமிருப்புழிவிளையாட்டொலியொன்று செவியுறவந்
நெறியைப்பார்த்தான், போமுகிலரம்பைதிலோர்த்தமையொப்பார்
இரண்டுசில பெண்கள் வந்தார்

இ - ள். நாரதனென்னு மொருமுனிவன் - நாரதனென்கிற ஒரு ரிஷியானவன், மெ
ஞ்ஞானவிளக்கொப்பான் - மெய்ஞ்ஞான தீபத்தையொத்தவன், நன்னீர் - நல்
லஜலத்தையுடைய, கங்கைத்திரைமறு - கங்கைக்கரையிலிருக்கின்ற, பொற்

றலத்தில்-அழகியவிடத்தில், சமாதியிருந்தான் - நிட்டையிருந்தார், அந்தத்தியானம்விட்டு - அச்சமாதியினின்றுநீங்கி, ஓர்நேரமிருப்புழி - ஒருநேரமிருக்கின்ற சமயத்தில், விளையாட்டொலியொன்று - விளையாடுகின்ற வொருசத்தமானது, செவியுற - காதிற்புக, அந்நெறியைப்பார்த்தான் - அந்தமார்க்கத்தைக்கண்டான், பேரழகிலரம்பை - அழகிலுயர்ந்த அரம்பைக்கும், திலோத்தமை - திலோத்தமைக்கும், ஒப்பார் - ஒத்தவர்களாகிய, சிலபெண்கள்-சிலதெய்வஸ்திரீகள், திரண்டுவந்தார் கூடிவந்தார்கள்—எ-று.

எ-து நாரதனென்றோர் அந்தணன் மெஞ்ஞான தீபத்தையொத்தவன், நல்லசலத்தையுடைய கங்கைக்கரையிலிருக்கின்ற அழகியவிடத்தில் நிட்டையிருந்தார், அச்சமாதியினின்று நீங்கி ஒருநேரமிருக்கின்ற சமயத்தில் விளையாடுகின்ற வொருசத்தமானது காதிற்புக அந்தமார்க்கத்தைக்கண்டான். அழகிலுயர்ந்த அரம்பைக்கும் திலோத்தமைக்கு மொத்தவர்களாகியசிலதெய்வஸ்திரீகள் கூடிவந்தார்கள்—எ-ம். (86)

இதுவுமது.

கங்கையினீர் விளையாட்டிற் களிப்புறுவார் புருடரயல் காணுவாற்றாற், சங்கையறத் துகிலில்லா ரவர்வரத்தைக் கண்டுமனந்தாவியோடி, துங்கவிவேகந்துறந்து சுகமடைய வுயிரலைந்து தொடர்ந்துநிற்கும், பங்கமிலா நாரதன்றன் மனகழுவிச் ,சுக்கிலமும் பாய்ந்ததன்றே.

இ-ள். கங்கையில் - தேவநதியில், நீர்விளையாட்டில்-சலக்கிரீடையில், களிப்புறுவார் - சந்தோஷிப்பவர்களும், புருடரயல் காணுவாற்றால் - புருடர்களைச் சமீபத்திற் காணுதபடியால், சங்கையற - வெட்கமில்லாமல், துகிலில்லார் - வஸ்திரமில்லாதவர்களுமாகிய, அவர்வரத்தைக்கண்டு - அவர்கள் வரவைப்பார்த்து, மனந்தாவியோடி - மனமானது தாவிக்கொண்டுபோய், துங்கவிவேகந்துறந்து - பரிசுத்தமான விவேகத்தைவிட்டு, சுகமடை - (விடய) சுகத்தையடைவதற்கு, உயிரலைந்து - பிராணனலைவுற்று, தொடர்ந்து நிற்கும்-தொடர்ந்திருக்கின்ற, பங்கமிலாநாரதன்றன் - குற்றமற்ற நாரதனது. மனநழுவி - மனமானது நிலைபிறழ்ந்து, சுக்கிலமும்பாய்ந்தது - இந்திரியமுமொழுகிற்று—எ-று.

எ-து. தேவநதியிற் சலக்கிரீடையிற் சந்தோஷிப்பவர்களும் புருடர்களைச் சமீபத்திற் காணுதபடியால் வெட்கமில்லாமல் வஸ்திரமில்லாதவர்களுமாகிய அவர்கள் வரவைப்பார்த்து மனமானதுதாவிக்கொண்டுபோய்ப் பரிசுத்தமான விவேகத்தை விட்டு விடயசுகத்தை யடைவதற்குப்பிராணனலைவுற்றுத் தொடர்ந்திருக்கின்ற குற்ற

மற்ற நாரதனது மனமானது நிலைபிறழ்ந்து விக்கிரியமு மொழு கிற்று—எ-ம்.

## ஞானிக்கெங்ஙனங் காமமுதிக்குமென்று இடையில் அரசன் வினவினதற் குத்தரங்கூறல்.



என்னனுமே நின்மொழியா மின்னமுதா லுளங்குளிர்ந்தேனெ னினும்வேறு, பன்னுமொழி பரம்பொருள்போ லறிவரிதாற் குவித் தனதற் பத்திசொல்வாய், பின்னருயர் பரம்பொருளை வருந்தியுங் கேட் கின்றேன்மேற் பேசுகென்ன, மன்னனுரை செயக்கேட்டுச்சூ டாலை யாமறையோன் மைந்தன் சொல்வான்.

இ - ள். என்னனுமே - (இப்படி) யென்று முனியானவர் சொல்லவும், (அரசன்கேட்குதல்) (அப்படிப்பட்டவராயிருந்து) வெகுஞானியிருந்தும் சீவ ன்முத்தராயிருந்தும் நாரதமுனி இப்படிப்பட்டவராய் மன்மதவசியத்தை யெ ப்படியடைந்தாரென்ற அரசனுக்குக்கும்பமுனிவாக்கியம்— (சு-க) நின்மலமா ன ஆத்மஸ்வரூபம் கிஞ்சிமாத்திர மறக்கப்பட்டால் வருடாகாலத்தின் மேகம் போலத் திரிஸ்யமுல்லாசத்தையடையும்—(சு-உ) சின்மாத்திர சுபாவமான ஸ்வரூபமானது சதாகாலமு மனுசந்தானத்தினுல் கிஞ்சிமாத்திரமு மறக்கப்ப டாம லிருந்ததானுல் திரிஸ்யரூபமான பிரபஞ்சமானது பிரகாசிக்கமாட்டாது— (சு-௩) சீவனுக்கு சுகதுக்கங்கள் அற்பமாவது ஸ்புரிப்பதே பந்தமாகும் அவை களில்லாமையே மோட்சமாகுமென்பது பந்தமோட்சங்களுக்கு நிர்ணயம்— (சு-௪ ஸ்வரூபஞ் ஞானமயமாயும் சுத்தமாயு மிருக்கின்ற அறியத்தக்க தான பதார்த்தவானுபோகத்தினுலே சுகதுக்கங்களில்லை யென்றறியப்பட் டால், ஞானியானவன் சீவன்முக்த பாவத்தை யடைகிறான்— (சு-௫) சகலசக த்துஞ் சிதாகாசமான பிரமமே யென்னுந் திடநிச்சய நிலையையடைந்தாற் சீவ பாவம் நெய்யற்ற தீபம்போல உபசாந்தமடைகிறது—(சு-சு) இந்தச்சகத்து ஆ த்மஸ்ரூபத்தினின்று முண்டானதாய் வாசனையா னிலையையடைந்து தருமா தருமவசத்தி லிருக்கின்றது—(சு-எ) ஆசையால வாசனைகளைக்கெடுத்து தரு மாதருமங்களினுற் பந்தப்படாவிட்டால் சீவன் சத்தத்தை யடையமாட்டா னென்பது எங்களுடைய மகமென்ன—(சு-அ) நின்மொழியாம்- உமதுவசன மாகிய, இன்னமுதால் - இனிய அமுதத்தினுல், உளங்குளிர்ந்தேனெனினும்- மனஞ் சாந்தியானேனாலும், வேறு பன்னுமொழி - வேறாய்ச்சொல்லுகின்ற வசனம், பரம்பொருள்போல் - பரமார்த்தத்தைப்போல, அறிவரிது-அறிதற் கரியது, உனதுற்பத்தி-சீயுதித்ததை, குவித்துச்சொல்வாய் - சுருக்கிச்சொல் லுவாய், பின்னர் - பின்பு, உயர்பரம்பொருளை - மேலான ஞானார்த்தத்தை, வருந்தியுங் கேட்கின்றேன் - பிரார்த்தித்துக்கேட்கின்றேன், மேற்பேசு

தென்ன-மேலேசொல்லுவாயென்று, மன்னனுரைசெயக்கேட்டு- அரசனானவன் சொல்லக்கேட்டு, சூடாலையாம்-சூடாலையாகிய, மறையோன்மைந்தன் - பிராமணகுமாரன், சொல்வான்-உரைப்பார்—ஏ-று.

எ - து. இப்படியென்று முனியானவர் சொல்லவும், உமதுவசனமாகிய வினியவமுதத்தினால் மனஞ்சாந்தி யானேனானாலும் வேறே சொல்லுகின்ற வசனம் பரவார்த்தத்தைப்போல வறிதற்கரியது, நீ யுதித்தலைச் சுருக்கிச்சொல்லுவாய், பின்பு மேலான ஞானார்த்தத்தை பிரார்த்தித்துக் கேட்கின்றேன், மேலேசொல்லுவா யென்று அரசனானவன் சொல்லக்கேட்டுச் சூடாலையாகிய பிராமண குமாரனுரைப் பார்—எ-ம்.

இக்கவியினிடையி லிருக்கவேண்டிய வில்லெவன் சுலோகார்த்தமறைந் திருந்ததை வடநூலோடுக்கண் வெளிப்படுத்தல் (88)

## தாதுகடத்திற் கருக்கொண்டு வளர்தல்.

நழுவுமன மெனுமத்த மதசயத்தை நாரதனாற் நல்விவேகப், ப
பழுதில்பெருந் தூணிலே நற்புத்தி தோட்டியாற் பற்றிக்கட்டி, தழு
வுபடி கக்குடத்திற் றாதுவைவிட் டான்பாலைச் சாலவார்த்தான், செ
ழுமதியம் பார்கடலில் வளர்வதுபோற் கருவளர்ந்து சிறந்ததன்றே.

இ - ள். நழுவுமனமெனும் - நிலைபிறழு மனமென்கின்ற, மத்தமதசயத்தை-மதத்தமதயானையை, நாரதனார் - நாரதமுனியானவர், நல்விவேகம்-நல்லவிவேகமென்னும், பழுதில்பெருந்தூணில் - குற்றமற்ற பெரியஸ்தம்பத்தில், நற்புத்திதோட்டியால் நல்லவறிவென்னு மங்குசத்தினால், பற்றிக்கட்டி - (அப்பென்னும்) வடகயற்றாற்பிணித்து, தழுவும்படிகக்குடத்தில் - தழுவாநின்ற பளிங்குகுடத்தில், தாதுவைவிட்டான் - இந்திரியத்தை விட்டான், பாலைச்சாலவார்த்தான் - பாலைநிரம்பவும்விட்டான், செழுமதியம் - செழுமையானசந்திரன், பாற்கடலில் - க்ஷீரசாகரத்தில், வளர்வதுபோல் - வளருதல்போல, கருவளர்ந்து - கருப்பமானது வளர்ந்து, சிறந்தது - சிறப்புற்றது.

எ - து. நிலைபிறழு மனமென்கின்ற மதத்தமதயானையை நாரத முனியானவர் நல்ல விவேகமென்னுங் குற்றமற்ற பெரிய ஸ்தம்பத்தில் நல்லவறிவென்னு மங்குசத்தினால் அப்பென்னும் வடகயற்றாற் பிணித்துத் தழுவாநின்ற பளிங்குகுடத்தி லிந்திரியத்தை விட்டான், பாலைநிரம்பவும் விட்டான், செழுமையான சந்திரன் க்ஷீரசாகரத்தில் வளருதல்போலக் கருப்பமானது வளர்ந்து சிறப்புற்றது—எ-ம்.

## புறப்பாடுக்கூறி நாமம்வந்தகாரண முரைத்தல்.

குடநின்று புறப்பட்டு குமாரனுக்கு விஞ்சையெனுங் குறைவில் செல்வப், படலங்களுண்டாக்கிப் பிதாமகன்பாற் கொடுபோகப் பதும மத்தோனுங், கடனென்று பேரனுக்கு மெய்ஞ்ஞானக் கரைகாணக் காட்டிவிட்டா, னுடனந்நா ளன்னவனாற் குடம்பெறலாற் கும்பனெ னுமொருபேர்பெற்றேன்.

இ - ள். குடநின்றுபுறப்பட்டு - குடத்திலிருந்துவெளியில்வந்த, குமாரனுக்கு - புத்திரனுக்கு, விஞ்சையெனுங் குறைவில்செல்வம் - வித்தையென்கின்ற குறைவற்ற சம்பத்தாகிய, படலங்களுண்டாக்கி - சமூகங்களைக்கொடுத்து, பிதாமகன்பாற் - பிரமதேவனிடத்தில், கொடுபோக - (என்னைக்) கொண்டுபோக, பதுமமத்தோனும் - பிரமாவும், கடனென்று - (நமக்குச்) கடமையென்று, பேரனுக்கு - பௌத்திரனையெனக்கு, மெய்ஞ்ஞானக் கரைகாண - தத்துவஞானமாகிய முடிவைத்தரிசிக்கும்படி, காட்டிவிட்டான் - தெரிவித்தான், உடனந்நாள் - உடனேயத்தினத்தில், அன்னவனால் - அப்பிதாமகனால், குடம்பெறலால் - (நான்) கும்பத்திற் பிறந்தபடியால், கும்பனெனும் - கும்பமுனியென்கின்ற, ஒருபேர்பெற்றேன் - ஓர்நாமத்தையடைந்தேன் — எ - று.

எ - து. குடத்திலிருந்து வெளியில்வந்த புத்திரனுக்கு வித்தையென்கின்ற குறைவற்ற சம்பத்தாகிய சமூகங்களைக் கொடுத்துப்பிரமதேவனிடத்திலென்னைக் கொண்டுபோகப் பிரமாவும் நமக்குக் கடமையென்று பௌத்திரனை யெனக்குத் தத்துவஞானமாகிய முடிவைத் தரிசிக்கும்படித் தெரிவித்தான். உடனே யத்தினத்திலப்பிதாமகனால் நான்கும்பத்திற் பிறந்தபடியாற் கும்பமுனியென்கின்றவோர்நாமத்தை யடைந்தேன் — எ-ம். (90)

## பிறப்பும் நாமமுங்கூறி வரவைக்கூறல்.

செய்யகலை மகளெனக்குத் தாயாங்கா யத்திரிதான்சிறியதாயா, மையில்சதுர் வேதமெனுந் தோழருடன் விளையாடி வந்தேனென்னை, வையவுனைத் தெரிசித்தேன் பெறவேண்டும் பேறெல்லா மமையப் பெற்றேன், மெய்யிதுவென் றுன்மன்னன் கும்பனதற் கிவ்வாறுவிள ம்பலுற்றான்.

இ - ள். செய்யகலைமகள் - செவ்வையானசரஸ்வதி, எனக்குத்தாயாம் - எனக்குமாதா - வாம், காயத்திரிதான் - காயத்திரியானவள், சிறியதாயாம்சிறிய

மென்பதை - பதுமத்தோனு மெய்ஞ்ஞானக் கரைகாணக் காட்டிவிட்டா னென்றும், அத்துவிதப் பிரமத்தினின்று வெளிப்படுதல் பிரமமேயென் பதை - கு - ம்பெறலாற் கும்பனெனுமொருபேர் பெற்றேனென்றும், வாக்கி யார்த்த நிச்சயமூலமென்பதை-செய்யகலைமகளெனக்குத்தாயென்றும், அவ் வாக்கியத்துக்கு மந்திரமூர்த்தென்பதை - காயத்திரியெனக்குச் சிறியதா யென்றும், மகாவாக்கியார்த்த உல்லாசமாக விளங்குகிறேனென்பதை-சதுர் வேதமெனுந் தோழருடன் விளையாடி வந்தேனென்றுங் கூறினாரெனக் கொள்க—எ-று.

(இ-எ-க-ம்.) பிரமத்தினின்றும் பிரபஞ்சமுண்டா யஃதைப் பிரமமாய் விளங்குமென மேலறிவிப்பதைக் குறிப்பா யறியும்பொருட்டுத் தனது தியானமேவிச் சரீரமாயிற்றென்பதை நாரதமுனி புத்திரனென வோர்வர லாறுகச் சொல்லியதென்பதாம். (91)

## அரசன்வரன்முறையை வினவுதலுக்குத்தரங்கூறல்.

எனையுரைத்தே னுனக்குமுத னீயாரென் செய்கின்றா யென க்குநீயு, முனையுரைப்பா யென்றலுமே மன்னனுரைப் பான்பிறவிக் குள்ளமஞ்சி, வினையறுகா னகம்புகுந்தேன் சிகித்துவசன் பேர்நாட் டில் வேந்தாந்தன்மை, தனையிகழ்ந்திங் கிருக்கின்றேன் பிறவிக்கே விடாமலுளந் தவியாநின்றேன்.

இ - ள். உனக்கு - உமக்கு, முதலெனையுரைத்தேன் - முன்னெனது (வரலாற்றைச், சொன்னேன், நீயார் - நீரார், என்செய்கின்றாய் - (இங்) கெ ன்னசெய்கிறாய், எனக்குநீயும் - என்றனக்குநீரும், உனையுரைப்பாயென்ற லும் - உம வரலாற்றைச் சொல்லுமென்று கும்பமுனிகேட்கவும், மன்ன னுரைப்பான் - அரசன்சொல்லுவான், பிறவிக்குள்ளமஞ்சி - பவத்துக்குனது பயந்து, வினையறுகானகம்புகுந்தேன் - செயலற்ற வனத்துக்கு வந்தேன் - பேர்சிகித்துவசன் - நாஞ்சிகித்துவசனும், நாட்டில்-பட்டணத்தில், வேந் தாந்தன்மைதனையிகழ்ந்து - அரசாந்தன்மையைநீக்கி, இங்கிருக்கின்றேன் - இவ்விடத்திலிருக்கின்றேன், பிறவிக்கே-சநநத்துக்கே, விடாமல் - ஓயாமல், உள்ளந்தவியாநின்றேன்-மனதுதவிக்கின்றேன்—எ-று.

எ - த். உமக்கு முன் னெனதுவரலாற்றைச் சொன்னேன், நீரார்? இங்கென்னசெய்கிறாய் என்றனுக்கு நீரு முமது வரலாற் றைச்சொல்லுமென்று கும்பமுனி கேட்கவும், அரசன் சொல்வான். பவத்துக்கு மனதுபயந்து செயலற்றவனத்துக்கு வந்தேன்; நாமஞ் சிகித்துவசனும்; பட்டணத்திலரசாந்தன்மையைநீக்கி இவ்விடத்தி லிருக்கின்றேன், சநநத்துக்கே லோயாமல் மனது தவிக்கின்றேன்—

## துறந்துசெய்யுந்தவமும் துன்பமுண்டாயிற்றென்ற அரசனுக்கத்துன்பத்தை நீக்கிச் சித்தசாந்தியினுன் ஞானமுதிப்பிக்கும்பொருட்டுச் சுகங்கொடுப்பது ஞானமேயன்றித் தவகிரியை கொடாதெனல்.

இப்பரிசே தவத்தொளிற்கு வேண்டினவெல் லாந்தேடி யிய ற்றுநின்றுஞ், செப்பரிய துயர்விட்டுப் பெருந்துயர் சேர்ந்தேனமு தந் தீரஞ்சான, தொப்பரியா யென்றலுமே கும்பனுரைப் பான்குரா வனுணர்த்துஞான, மெய்ப்படவந் தாற்சுகமாம் போதுபோக் குக் கிரியை விநோதமன்றோ.

இ - ள். இப்பரிசே - இவ்வண்ணமே, தவத்தொழிற்கு - தவக்கிரியைக்கு, வேண்டினவெல்லாந்தேடி - உண்டான சகலமுஞ்சம்பாதித்து, இயற்றுநின்றும் - நடத்தியும், துயர்விட்டு-துன்பத்தைநீக்கி, செப்பரிய பெருந்துயர்சேர்ந்தேன் - உரைத்தற்கரிய பெரியதுன்பத்தையடைந்தேன், ஒப்பரியாய் - உவமித்தற்கரியமுனியே, அமுதந்தீரஞ்சானது - பாற்றீயவிடாயிற்று, என்றலும் - என்றரசன்சொல்லவும், கும்பனுரைப்பான் - கும்பமுனிசொல்லுவார், குரவனுணர்த்துஞானம் - ஆசாரியறிவிக்கு ஞானமானது, மெய்ப்படவந்தால் - உண்மையாகவந்தால், சுகமாம் - பிரமாநந்தமாகும், கிரியை-தவத்தொழிலானது, போதுபோக்கும் - காலத்தைக்கழிக்கின்ற, விநோதமன்றோ-விளையாட்டல்லவா—எ-று.

எ - து. இவ்வண்ணமே தவக்கிரியைக்குண்டான சகலமுஞ் சம்பாதித்து நடத்தியும் துன்பத்தைநீக்கி யுரைத்தற்கரிய பெரிய துன்பத்தை யடைந்தேன், உவமித்தற்கரிய முனியே! பாற்றீயவிடமாயிற்று யென்றரசன் சொல்லவும் கும்பமுனிசொல்லுவார். ஆசாரியறிவிக்கு ஞானமான தன்மையாக வந்தால் பிரமாநந்தமாகும். தவத்தொழிலானது காலத்தைக்கழிக்கின்ற விளையாட்டல்லவா? ()

## கிரியைக்கிப்பயன் வாசனையாதலில் அவ்வாசனை நசிக்கிற்கிரியை நீங்குமெனல்.

ஞானமில்லாதவர்க்கெல்லாங் கிரியையே கதியாநற் கிரியை வேந்தா, வினைமுழுவாதனைமாத் திரம்பலமா தலிற்பலமுமெய்த நல்கு, மானமுறு மிருதுவின் முனைபலங்க ளங்கனை மாய்தல்போல, ஆனமுறுவாதனையப்த் தாற்கிரியை யுமயலமு மொழிந்துபோமே.

இ-ள். வேந்தா - அரசனே, ஞானமில்லாதவர்க்கெல்லாம் - ஞானமில்லாத சகலருக்கும், கிரியையே கதியாம் - கன்மமே கதியாகும், நற்கிரியை - சற்கிருத்தியமானது, சலமுறு வாதனை மாத்திரம்பலம் - அசுத்த வாசனையே பயனாகவுடையது, ஆதலில் - ஆதலால், பலமுமெய்தல்தரும் - (கன்மமுஞ் சொற்காரிய) பலனையடையும்படி கொடுக்கும், மானமுறுமிருதுவரில் - அளவையடைந்த இருதுவந்தால், முன்பலங்கள் - (முந்தின இருதுக்களின்) பயன்கள், அங்ஙனேமாய்தல்போல - அவ்விடத்திலேயே கெடுவதுபோல, மலமுறு வாதனைமாய்ந்தால் - அசுத்தவாசனை கெட்டால், கிரியையுறுபலமும் - கிரியையினால்வரப்பட்ட பிரயோசனமும், ஒழிந்துபோம் - தவிர்ந்துபோகும் — எ-று.

எ-து. அரசனே? ஞானமில்லாத சகலருக்குங் கன்மமே கதியாகும், சற்கிருத்தியமானது அசுத்தவாசனையே பயனாகவுடையது. ஆதலால் கன்மமுஞ் சொற்காரிய பலனையடையும்படிக்கொடுக்கு மளவையடைந்த இருதுவந்தால் முந்தினவிருதுக்களின் பயன்களவ்விடத்திலேயே கெடுவதுபோல அசுத்தவாசனை கெட்டாற் கிரியையினால் வரப்பட்ட பிரயோசனமுந் தவிர்ந்துபோகும். (94)

## சர்வம் பிரமமயமென்னு ஞானம்வந்தால் வாசனை நசிக்குமெனல்.

பலமதனை யொருக்காலும் பலியாத சரவணத்தின்பரிசுபோல்
வலமருவா தனைதீர்ந்த கிரியையுமேற் பலந்தன்னை யளிக்கமாட்டா;
வுலகமெலாம் பிரமமெனும் பாவனையா லஞ்ஞான மொழிந்துபோ
னுன், மலமுறுவா தனைதோன்றாக் கானலினீ ருண்டென்று மதிப்பா
ருண்டோ.

இ-ள். பலமதனை - பழங்களை, ஒருக்காலும்பலியாத - ஒருகாலத்திலுங் கொடாத, சரவணத்தின்பரிசுபோல - நாணலின்றன்மையைப்போல, அலமருவாதனைதீர்ந்த - சஞ்சலமுள்ளவாசனைநீங்கிய, கிரியையும் - கிரியையும், மேற்பலந்தன்னையளிக்கமாட்டா - மேற்பயனைக்கொடுக்கமாட்டாது, உலகமெலாம்பிரமமெனும்பாவனையால் - சர்வம் பிரமமென்கின்ற பாவனையினால், அஞ்ஞானமொழிந்துபோனால் - அஞ்ஞானநீங்கிவிட்டால், மலமுறுவாதனைதோன்றா - அசுத்தவாசனையுண்டாகாது, கானலினீருண்டென்று - கானலிற் சலமிருக்கின்றதென்று, மதிப்பாருண்டோ - நிச்சயிப்பவர்களுண்டோ - எ-று.

எ-து. பழங்களை யொருகாலத்திலுங் கொடாத நாணலின் தன்மையைப்போலச் சஞ்சலமுள்ள வாசனை நீங்கிய கிரியையும் மேற்பயனைக் கொடுக்கமாட்டாது. சர்வம் பிரமமென்கின்ற பாவனை

பினல் அஞ்ஞானநீங்கிவிட்டால் அசுத்தவாசனை யுண்டாகாது. கான விற் சலமிருக்கின்றதென்று நிச்சயிப்பவர்களுண்டோ—எ-ம்.

### வாசனைநசிக்கில் பிரமானுபவமுண்டாமாதலால் அவ்வாசனையுள்ள மனமாகிய அஞ்ஞானத்தைக் கெடுத்த அஃதின்றிய ஞானமனதினாற் பிரமசிந்தனை செய்யில் பவத்துன்ப நீங்குமெனல்.

வாதனைமாத் திரம்விட்டாற் சரைமரண முறுபிறவி மருவா தான, தீதில்பதமுண்டாகும் வாதனையோ டேசேர்ந்த சித்தந் தானே பேதமையஞ் ஞானமாம் வாதனைதீர் மனந்தானேபிறவா ஞான, மேதமறு ஞானத்தா னேயமுணர்ந் தாற்பிறவி யெய்தா தன்றே.

இ - ள். வாதனைமாத்திரம்விட்டால் வாசனையைமட்டுநீக்கினல், சரைமரணம் - சராமரணங்கள், உறுபிறவி - பொருந்திய சநநமானது, மருவாதான-பொருந்தாததாகிய, தீதில்பதமுண்டாகும்-குற்றமற்ற (பரம) பதமுண்டாகும், வாதனையோடு - வாசனையுடன், சேர்ந்தசித்தந்தான் - பொருந்திய மனமானது, பேதமையஞ்ஞானமாம் - வேற்றுமையான அஞ்ஞானமேயாகும், வாதனைதீர்மனந்தான் - வாதனைநீங்கியமனமானது, பிறவாஞானம் - சனியாத ஆத்மஞானமாம், ஏதமறுஞானத்தால் - குற்றமற்றஞானத்தினல், நேய முணர்ந்தால் - (சிவனனவன்) - பிரமவஸ்துவையறிந்தால், பிறவியெய்தாது - சநநமடையாது—எ-று.

எ - து. வாசனையைமட்டு நீக்கினுற் சராமரணங்கள் பொருந்திய சநநமானது பொருந்தாததாகிய குற்றமற்ற பரமபதமுண்டாகும். வாசனையுடன் பொருந்திய மனமானது வேற்றுமையான அஞ்ஞானமேயாகும். வாதனைநீங்கிய மனமானது சனியாத ஆத்மஞான மாம். குற்றமற்ற ஞானத்தினுற் சிவனனவன் பிரமவஸ்துவை யறிந் தால்சநநமடையாது—எ-ம்.

(இ-ச-க-ம்.) வாசனுட்சயம் வரிற் கிரியாபலநீங்கிப் பரஞானமுண்டாய்ச்சநமரண நீங்குமென்பதாம். (96)

### அறிவைவிரும்பாமலுங் குருமுகமாய்ச் சித்தென்னுமுத்தி யாது சகத்துற்பத்திலயமென்கின்ற பந்தமியாதென்று விசாரித் திஃதைநீக்கி அஃதை யடையாமலுமேன் வருந்துகின்றாயெனல்.

ஞானமிக நன்றென்றே யயன்முதலா நல்லோர்க ளவிலாநிற்க, நீயவா திருந்தனையென் னியானுரிவ் வுலகென்ன வேசர்ந்ததென்னன்,

ரூனமுற விறக்குமென நினைகிலையென் பேதையர்போற் றளர்கின் ருயே, ஞானகுர வரையிறைஞ்சி பந்தயம்வீடெப்படியென் றறிகிலா யென்.

இ - ள். ஞானமிகநன்றென்று - ஞானமேமிகவு நல்லதென்று, அயன் முதலாம் - பிரமாமுதலாகிய, நல்லோர்கள் - பெரியோர்கள், கவிலாநிற்க- சொல்லியிருக்க, நீநயவாதிருந்தனையென - நீர்விரும்பாதிருந்ததென்ன, ஈா ஞர் - யாஞர், இவ்வுலகெங்ஙனேர்ந்தது - இச்சகமெப்படியுண்டாயிற்று, எங் ஙன்ருனமுறவிறக்கும் - எவ்விடத்திலிருக்குமென்று, நினைகிலையென் - கரு தாததென்ன, பேதையர்போல் - அறிவில்லாதவர்களைப்போல, தளர்கின்ரு யென் - சோர்கின்றதென்ன, ஞானகுரவரையிறைஞ்சி - மகாஞான ஆசிரியனை வணங்கி, பந்தம்வீடு - பந்தமோக்ஷம், எப்படியென்றறிகிலாயென் - எவ்வித மென்றறியாததென்ன—எ-று.

எ - து. ஞானமே மிகவுநல்லதென்று பிரமாமுதலாகிய பெரி யோர்கள் சொல்லியிருக்க நீர்விரும்பாதிருந்ததென்ன? யாஞர்? இச் சகமெப்படி யுண்டாயிற்று. எவ்விடத்தி லிறக்குமென்று கருதாத தென்ன? அறிவில்லா தவர்களைப்போலச் சோர்கின்றதென்ன? மகா ஞான ஆசிரியனை வணங்கிப் பந்தமோக்ஷ மெவ்விதமென் றறியா தென்ன?—எ-ம்.

## சாதுசங்கத்தால் விசாரஞான முதிக்குமெனல்.

நிறையறிவின் சமமானநோக்கினரைச்சேவித்து நிரந்தரித்துப், பொறையுடனே விஞவிஞன் முத்திபெறு நுண்ணறிவு பொருந்து மென்ஞ, மறையவன்போ தித்தலுமே கண்கணீர்சொரிந்திரங்கிமன் னன் சொல்வா, னிறையவனே யறப்புதுமையுன்ஞலே யுணர்வுற்றே னேழையானே.

இ - ள். நிறையறிவின்-பூரணஞானத்திஞல், சமமானநோக்கினரை-சம திருஷ்டியுள்ளவர்களை, சேவித்து - தரிசித் (தடைந்து), நிரந்தரித்து - நிரந்தர மாய், பொறையுடன் விஞவிஞல்-பொறுமையாக விசாரித்தால், முத்திபெறு நுண்ணறிவு-மோக்ஷமடைகின்ற சூட்சமஞானமானது, பொருந்துமென்ஞ- கிடைக்குமென்று மறையவன்போதித்தலும் - கும்பமுனி சொல்லவும், கண் கணீர்சொரிந்து-கண்களிலாநந்தபாஷ்பம் பொழிந்து, இரங்கி-அழுது, மன் னன்சொல்வான் - அரசனுரைப்பான், இறையவனே - ஆசாரியனே, அறப்பு துமை - மிகவுமாச்சரியம, ஏழையான் - எளியேன், உன்ஞலுணர்வுற்றேன்- தெளிவாற்தெரிந்தேன்—எ-று.

எ - து. பூரண ஞானத்தினாற் சமதிருஷ்டி யுள்ளவர்களைத் தரிசித்தடைந்து நிரந்தமய்ப் பொருமையாக விசாரித்தால் மோக்ஷமடைகின்ற சூட்சுமஞானமானது கிடைக்குமென்று கும்பமுனி சொல்லவும், கண்களிலாநந்தபாஷ்பம்பொழிந்தழுது அரசனுரைப்பான், ஆசாரியனே? மிகமாச்சரியம்! எளியேன் றேவராற்றெரிந்தேன்.

(இ-உ-க-ம்.) ஞானசுகமுண்டாவதற்குக் காரணம் ஆத்மவிசார மென்றறிவித்ததாம். (98)

## தேவரீராசியராய் அடியேனையடிமைகொண் டனுக்கிரகஞ் செய்யவேண்டு மெனல்.

மடமையாற் பெரியவர்தஞ் சேர்வையைவிட் டித்தனியேவனத்
தில்வந்தே, னிடர்மேவு பாவமெலா மின்றொழிந்தேன் வனத்தினீ
யெய்தியென்னைக், கடனாகவுணர்த்துதலாற் குருநீயென்பிதாநீ யெ
ன்காதலோனீ, திடமான மாணாக்க னாய்த்தொழுகின் றேன்கருணை
செய்யவேண்டும்.

இ - ள். மடமையால் - அஞ்ஞானத்தினால், பெரியவர்தம் - மகான்களுடைய, சேர்வையைவிட்டு - சமூகத்தைவிட்டு, இத்தனிவனத்தில்வந்தேன் - இந்தத்தனிமையான காட்டில்வந்தேன், இடர்மேவுபாவமெலாம் - துன்பம்பொருந்திய பாவங்களனைத்தையும், இன்றொழிந்தேன் - இப்பொழுதுதவிர்ந்தேன், வனத்தில் - காட்டிலிருக்கின்ற, எனை - அடியேனை, நீயெய்தி - நீயடைந்து, கடனாகவுணர்த்துதலால் - கடமையாக அறிவிப்பதால், குருநீ - ஆசாரியருநீர்தான், என்பிதாநீ - எனது தந்தையுநீர்தான், என்காதலோனீ - எனது சினேகனுநீர்தான், திடமானமாணாக்கனாய் - திரமுள்ளசீடனாய், தொழுகின்றேன் - (யானுமது பாதத்தை) வணங்குகின்றேன், கருணைசெய்யவேண்டும் - கிருபைசெய்யவேண்டும்—எ-று.

எ - து. அஞ்ஞானத்தினால் மகான்களுடைய சமூகத்தைவிட்டு இந்தத் தனிமையான காட்டில்வந்தேன், துன்பம்பொருந்திய பாவங்களனைத்தையு மிப்பொழுது தவிர்ந்தேன். காட்டிலிருக்கின்ற வடியேனை நீரடைந்து கடையாக அறிவிப்பதால் ஆசாரியரு நீர்தான், எனது தந்தையு நீர்தான்; எனது சினேகிதனுநீர்தான்: திரமுள்ள சீடனா யானுமது பாதத்தை வணங்குகின்றேன் கிருபை செய்யவேண்டும்—எ-ம். (99)

### நித்தியாநந்தமாகும் பொட்டு அனுக்கிரகிக்கும் எனதுவாக்கியத்தில் சித்தமேகாக்கிரப்படுமாயி னுரைப்பே னெனல்.

உதாரமிக வுண்டாகி யுணர்வுற்றாற் றுன்பமெலா மொழிப்பதாகிச், சதாசுகமாம் பொருளாக நீயறிந்த தேதததனைச் சாற்றுகிற்பாய், பிதாமகனைப் பாயென்ற மன்னனுக்குக் கும்பன்றான் பேசுகிற்பான், கதாவியெழு மனமொருப்பட் டுணர்தியே லுனக்குண்மை கழறுகிற் பேன்.

இ-ள். உதாரமிகவுண்டாகி - உதாரமிகவுமுள்ளதாகியும், உணர்வுற்றால் - அறிந்தால், துன்பமெலாமொழிப்பதாகி - துயரங்களனைத்தையு நீக்குவதாகியும், சதாசுகமாம்பொருளாக - சதாநந்தமான வஸ்துவாகியு மிருக்கின்ற, நீயறிந்ததேது - நீயுணர்ந்த வஸ்துவெதுவோ, அதனைச்சாற்றுகிற்பாய் - அதை யெனக்குச்சொல்லுவாய், பிதாமகனைப்பாயென்ற - பிரமதேவனுக்குச்சமானவரேயென் றுசொல்லிய, மன்னனுக்கு - அரசனுக்கு, கும்பன்றான்பேசுகிற்பான் - கும்பமுனி சொல்லுவார், கதாவியெழு மனம் - வேகமாய்த் தாவியெழாநின்றமனதில், ஒருப்பட்டுணர்தியேல் - ஒன்றுபட்டறிவாயானால், உனக்கு - நினக்கு, உண்மைகழறுகிற்பேன் - ஞானத்தைச்சொல்லுவேன் — எ-று.

எ-து. உதாரமிகவு முள்ளதாகியும், அறிந்தால் துயரங்களனைத்தையு நீக்குவதாகியும், சதாநந்தமான வஸ்துவாகியு மிருக்கின்ற நீயுணர்ந்த வஸ்துவெதுவோ? அதையெனக்குச் சொல்லுவாய், பிரமதேவனுக்குச்சமானவானவரே? யென்றுசொல்லி அரசனுக்குக்கும்பமுனி சொல்லுவார். வேகமாய்த் தாவியெழாநின்ற மனதில் ஒன்றுபட்டறிவாயானா லுனக்கு ஞானத்தைச் சொல்லுவேன் — எ-ம்.

சொன்னதனைக் கொள்ளாது விநோதத்தாற் கேட்பவர்க்குச் சொன்னவார்த்தை, பன்னியுமோர் பயனுகா திருளிலே விழிக்குணர்வு பலிப்பதுண்டோ, வென்னனுமன் னவனுரைப்பான் வேதவிதியே நீயிங் கிசைந்தவெல்லா, நின்னருளாற் கைக்கொண்டு சத்தியமே நன்றாக நினையாநிற்பேன.

இ-ள். சொன்னது - உரைத்ததை, கைக்கொள்ளாது - கிரகிக்காமல், விநோதத்தால் - வினோதமாட்டினாலே, கேட்பவர்க்கு - கேட்குமவர்களுக்கு, சொன்னவார்த்தை - உரைத்தவாக்கியம், பன்னியுமோர்பயனுகாது - சொல்லியு மொருபிரயோசனமுமாகாது, இருளில் - அந்தகாரத்தில், விழிக்குணர்வு - கண்களுக்கு உணர்வுபலிப்பதுண்டோ - அறியும்பலனுண்டாமோ, என்னனும் - என்று

கும்பமுனிசொல்லவும், மன்னவனுரைப்பான் - அரசன்சொல்லுவான், நின்னருளால் - உமதுகிருபையினால், நீயிங்கிசைத்தவெல்லாம் - நீரிவ்விடத்திற்சொல்லியசர்வார்த்தமும், வேதவிதியே-வேதநியமமென்று, சத்தியமே-உண்மையாக, கைக்கொண்டு - கிரகித்துக்கொண்டு, நன்றாகநினையாநிற்பேன் - நன்றாகச்சிந்திப்பேன்—எ-று.

எ - து. உரைத்ததைக் கிரகிக்காமல் விளையாட்டினால் கேட்குமவர்களுக்குரைத்தவாக்கியம் சொல்லியுமொருபிரயோசனமில்லை. அந்தகாரத்தில் கண்களுக்கு வரியும் பலனுண்டாமோ வென்று கும்பமுனி சொல்லவும்: அரசன் சொல்லுவான், உமது கிருபையினால் நீரிவ்விடத்திற்சொல்லிய சர்வார்த்தமும் வேதநியமமென் றுண்மையாகக் கிரகித்துக்கொண்டு நன்றாகசிந்திப்பேன்—எ—ம்.

(இ-௯-௧-ம்.) முற்போதனை நிட்பலமானதுபோல வாகாமலுறுதிப்படுத்திக்கொண் டுபதேதிக்கத் தொடங்கினதென்பதாம் (101)

## எளிதாய்க்கிடைத்ததையிகழ்ந் தரிதாய்க்கிடைத்ததைப் புகழ்ந்த அறியாமையை நீக்குநிமித்தஞ் சிந்தாமணிகதையைச் சாமானியமாகச் சொல்லத்தொடங்கல்.

என்றுமன்ன னுரைசெய்ய வெழிலார்கும்ப னுரைசெய்வா
னொன்றுமறியாப் பாலகனுக் குரியதந்தை யுரைப்பதுபோல்
வென்றிமன்ன நானுனக்கு விளம்புமுரையை வினவாது
நன்றிதென்றே கேளென்று ஞானந்தோன்ற நவில்வுற்றான்

இ - ள். என்றுமன்னனுரைசெய்ய - (அப்படி) யென்றரசன் சொல்ல, எழிலார் - அழகுநிறைந்த, கும்பனுரைசெய்வான் - கும்பமுனிசொல்லுவார், ஒன்றுமறியாப்பாலகனுக்கு - ஒன்றுந்தெரியாத குழந்தைக்கு, உரியதந்தையுரைப்பதுபோல் - உரிமையானபிதாசொல்லுவதுபோல, வென்றிமன்ன - வெற்றியையுடையஅரசனே. நான் - யான், உனக்குவிளம்புமுரையை - உமக்குச்சொல்லும் வசனத்தை, வினவாது-தடுத்துக்கேளாமல், நன்றிதென்றேகேளென்று - (இது) நன்மையெனநினைத்துக்கேட்பாயென்று, ஞானந்தோன்றநவில்வுற்றான் - அறிவுண்டாகக் கூறத்தொடங்கினார்—எ-று

எ - து. இப்படி யென்றரசன்சொல்ல, அழகுமிகுந்த கும்பமுனிசொல்லுவார். ஒன்றுந் தெரியாத குழந்தைக் குரிமையான பிதாசொல்லுவது போல வெற்றியையுடைய அரசனே? யானுமக்குச்சொல்லும் வசனத்தைத் தடுத்துக்கேளாமல் இது நன்மை

யென நினைத்துக் கேட்பாயென் றறிவுண்டாகக் கூறத்தொடங்கி னார்—எ-ம். (102)

மன்னாவீதோர் கதைகேட்பாய் மற்றிக்கதையி னுறுபொரு ளைப், பின்னானுரைக்கேன் முன்னாளில் பெரியோனொருவன் பெரு ஞ்செல்வன், பன்னாநின்ற கலைநூல்கள் பலவும்வல்லோன் ஞானமி லோ, னன்னானுயர்சிந் தாமணியை யறவேமுயன்று தேடுற்றான்.

இ-ள். மன்னா - அரசனே, ஈதோர்கதை - இஃதொருகதையை, கேட்பாய் - (சொல்லக்) கேட்கக்கடவாய், இக்கதையின் - இந்தக்கதையில், உறுபொருளை - பொருந்தியவருத்தத்தை, பின்னானுரைக்கேன் - பின்புயான்சொல்லுவேன், முன்னாளில் - முற்காலத்தில், பெரியோனொருவன் - ஒருபெரியவர், பெருஞ்செல்வன் - மிகுந்தசம்பத்துடையவன், பன்னாநின்றகலைநூல்கள் - சொல்லாநின்றகலைஞானங்கள் (முதலிய), பலவும்வல்லோன் - சகல சாஸ்திரங்களிலும் வல்லமையுடையவன், ஞானமிலோன் - ஆத்மஞானமில்லாதவன், அன்னான் - அப்படிப்பட்டவன், உயர்சிந்தாமணியை - மேலான சிந்தாமணியை, அறவேமுயன்று - மிகவுமுயற்சித்து, தேடுற்றான் - தேடத்தொடங்கினான்—எ-று.

எ-து. அரசனே? இஃதொரு கதையைச்சொல்லக் கேட்கக்கடவாய். இந்தக்கதையிற் பொருந்திய வருத்தத்தைப் பின்பு யான்சொல்லுவேன். முற்காலத்திலொரு பெரியவர் மிகுந்த சம்பத்துடையவன். சொல்லாநின்ற கலைஞானங்கள்முதலிய சகல சாஸ்திரங்களிலும் வல்லமையுடையவன் ஆத்மஞானமில்லாதவன். அப்படிப்பட்டவன் மேலான சிந்தாமணியை மிகவுமுயற்சித்துத் தேடத் தொடங்கினான்—எ-ம்.

மிக்கவருத்தத் தாற்றீர மேவவேண்டு மெனுமுயல்வாற்
றக்கமணிகிட் டினவருந்திச் சாலமுயன்றார்க் கேன்கிடையா
தொக்கசுடர்மா மணிதன்முன் றோன்றிமதியின் விளங்கிடவு
நக்கமணியைக் கைக்கொள்ளா நாநாவிதமாய் நாடுற்றான்.

இ-ள். மிக்கவருத்தத்தால் - மிகுந்தபிரயாசமுள்ள தபசினால், தீரமேவவேண்டுமெனும் - தீர்ப்பாகவடையவேண்டுமென்கிற, முயல்வால் - முயற்சியினால், நக்கமணிகிட்டின - நக்கு சிந்தாமணியினை அடைந்தது, வருந்தி - வருத்தப்பட்டு, சாலமுயன்றார்க்கு - மிகவுமுயற்சித்தவர்களுக்கு, கிடையாது - கிடைக்காது, தொக்கசுடர்மாமணி - மிகுந்தபிரகாசமுள்ள சிந்தாமணியானது, தன்முன்தோன்றி - தன்னெதிர்த்தோற்றி, மதியின்விளங்கிடவும் - சந்திரன்போல் பிரகாசிக்கவும், நக்கமணியைக்கொள்ளா - பிரகாசி

த்தசிந்தாமணியைக் கைவசப்படுத்தாமல், நாநாவிதமாய்நாடுற்றான் - பலவித மாகச்சிந்தித்தான்—எ-று.

எ — து. மிகுந்த பிரயாசமுள்ள தபசினால் தீர்ப்பாக அடைய வேண்டுமென்கின்ற முயற்சியினாற் றகுந்தசிந்தாமணி கிடைத்தது. வருத்தப்பட்டு மிகவு முயற்சித்தவர்களுக்கேன் லபிக்காது? மிகுந்த பிரகாசமுள்ள சிந்தாமணியானது தன்னெதிற்றோற்றி சந்திரன் போல பிரகாசிக்கவும், பிரகாசித்த சிந்தாமணியைக் கைவசப்படுத் தாமற் பலவிதமாகச் சிந்தித்தான்—எ—ம். (101)

சிந்தாமணியன் றிதுவேறோர் சிறுமாமணிசிந் தாமணிதா
னொந்தாராய்ந்து வாளுட்போல் நடங்கும்போதல் லால்வருமோ
நைந்தாலும்பா வியர்க்கெய்தா புல்லோர்சிலர்க்கு நண்ணலுறுந்
தந்தாம்வினையை நினையாமற் றளர்ந்தாற்கடிதி னெய்திடுமோ.

இ - ள். இதுசிந்தாமணியன்று - இதுசிந்தாமணியல்ல, வேறோர்சிறுமாமணி - வேறேயொருவற்பமணியாகும், சிந்தாமணிதான்-சிந்தாமணியானது, நொந்து - வருத்தப்பட்டு, ஆராய்ந்து - வெகுநாடேடி, வாளுட்போய் - வாழுங்காலமெல்லாநீங்கி, நடங்கும்போதல்லால் - மெலியுங்காலத்திலல்லாமல், வருமோ-கிடைக்குமோ, நைந்தாலும் - துன்பப்பட்டாலும், பாவியர்க்கெய்தா - பாவிகளுக்குககிடையாது, நல்லோர்சிலர்க்கு - நலலவர்களிற்சில பேர்களுக்கு, நண்ணலுறும் - கிட்டும், தந்தாம்வினையை - தங்கள் தங்கள் கன்மத்தை, நினையாமல் - எண்ணாமல், தளர்ந்தால் - சோர்வுற்றால், கடிதினெய்திடுமோ - (அவர்களுக்கு) ச்சீக்கிரத்திலடையுமோ—எ-று.

எ - து. இது சிந்தாமணியல்ல. வேறேயொரு அவற்பமணி யாகும். சிந்தாமணியானது வருத்தப்பட்டு வெகுநாடேடிவாழுங் காலமெல்லா நீங்கிமெலியுங்காலத்தி லல்லாமற் கிடைக்குமோ? துன் பப்பட்டாலும் பாவிகளுக்குக்கிடையாது. நல்லவர்களிற் சிலபேர் களுக்குக்கிட்டும், தங்கடங்கள் கன்மத்தை யெண்ணாமற் சோர்வுற் றாலவர்களுக்குச் சீக்கிரத்திலடையுமோ?—எ-ம். (105)

மணிதனானென் றவமற்பம் வல்லபங்கள் சிறிதில்லைத்
துனிசெய்திற்பாக் கியனெனக்குத்தோன்றுமணிமுன் றோன்றிடுமோ
நனியின்னமுந்தே டுதுமென்று நன்மாமணியை யெடுத்திடாற்
புனிதமணியும் போயினதாற் பொல்லாதார்க்கு நலனுறுமோ.

இ-ள். நான்மனிதன் - யானொருமனுடன், என்றவமற்பம்-எனது தவமோ சொற்பம், வல்லபங்கள்சிறிதில்லை - வல்லமைகளோ எனக்கற்பமுமில்லை; துனிசெய்திற்பாக்கியன் - துன்பப்படுத்துகின்ற தாரித்திரமுள்ளவன், எனக்கு - (இப்படிப்பட்ட) வெனக்கு தோன்றுமணி - காணற்கரியசிந்தாமணியானது, முன்றோன்றிடுமோ-எளிதாகமுன்னேதோற்றுமா, நனியின்னமுந்தேடுதுமென்று-மிகவுமின்னமுந்தேடுவோமென்று, நன்மாமணியை-நல்லசிந்தாமணியை, எடுத்திலன்-எடுக்கவில்லை, புனிதமணியும் - பரிசுத்தமுள்ளசிந்தாமணியும், போயினது-போய்விட்டது பொல்லாதார்க்கு-தீயவர்களுக்கு, நலனுறுமோ-நன்மையுண்டாமோ—எ-று.

எ-து. யானொமனுடன்; எனது தவமோ சொற்பம்; வல்லமைகளோ எனக்கற்பமுமில்லை; துன்பப்படுத்துகின்ற தாரித்திரமுள்ளவன்; இப்படிப்பட்ட எனக்குக் காணற்கரிய சிந்தாமணியானது எளிதாக முன்னே தோற்றுமா? மிகவு மின்னமுந் தேடுவோமென்று நல்லசிந்தாமணியை எடுக்கவில்லை, பரிசுத்தமுள்ள சிந்தாமணியும் போய்விட்டது, தீயவர்களுக்கு நன்மையுண்டாமோ—எ-ம். (106)

மீண்டுவருந்தித் தேடுற்றான் வெம்பிச்சிலநா ளுழன்றளவே
யாண்டுமறைந்து சிலசித்த ரவனைநருவான் காட்டிவிக்கக்
கீண்டவளையின் முறியொன்று கிடப்பக்கண்டா னறிவில்லான்
மாண்டசிந்தா மணியிதென மகிழ்ந்துவியந்து கைக்கொண்டான்.

இ-ள். மீண்டும் - திரும்பவும், வருந்தித்தேடுற்றான் - வருத்தமுற்றுத் தேடினான், வெம்பிச்சிலநாளுழன்றளவே - வெப்பமுற்றுச் சிறிதுநாட்சுற்றவும், ஆண்டுமறைந்து - அவ்விடத்தின் மறைவாகி, சிலசித்தரவனைநருவான்-சிலசித்தர்களங்கவனைப்பரியாசஞ் செய்யும்பொருட்டு, கீண்டவளையின்முறி-உடைந்தவளையலின் றுணுக்கை, காட்டிவிக்க-எதிரேகாண்பிக்க, ஒன்று கிடப்பக்கண்டான்-ஒருமணியிருக்கப் பார்த்தான், அறிவில்லான் - அறிவில்லாதவன், மாண்டசிந்தாமணியிதெனமகிழ்ந்து-மாட்சிமைப்பட்டசிந்தாமணியிதுவென்றுசந்தோஷித்து, வியந்து - அதிசயித்து, கைக்கொண்டான்-கிரகித்தான்—எ-று.

எ-து. திரும்பவும் வருத்தமுற்றுத் தேடினான். வெப்பமுற்றுச் சிறிதுநாட்சுற்றவு மவ்விடத்தின் மறைவாகிய சிலசித்தர்கள ங்க ளவனைப் பரியாசஞ்செய்யும் பொருட்டு உடைந்த வளையலின் றுணுக்கையை எதிரேகாண்பிக்க ஒருமணியிருக்கப் பார்த்தான். அறிவில்லாதவன் மாட்சிமைப்பட்ட சிந்தாமணி யிதுவென்று சந்தோஷித் ததிசயித்துங் கிரகித்தான்—எ-ம். (107)

வெந்தமணியை மிகப்பேணி மிக்கநிதியெல் லாம்விட்டான்
வந்தமணியெல் லாமளிக்கு மற்றநிதிக ளென்னென்றே
சிந்தைசெய்தா னித்தேசந் தீயோருண்டு சுகமில்லை
யிந்தவிடந்தீதெனவனத்தி லிருந்துசுகிப்போமென்றகன்றான்.

இ-ள். வெந்தமணியை - காச்சுக்கல்லை, மிகப்பேணி - மிகவும்விரும்பி, மிக்கநிதியெல்லாம்விட்டான் - மிகுந்தசெல்வங்களனைத்தையு நீக்கினான், வந்தமணி - கிடைத்தகாச்சுக்கல், எல்லாமளிக்கும் - சகலசெல்வத்தையுங் கொடுக்கும், மற்றநிதிகளென்னென்றே - மற்றத்தனங்களென்னத்துக்கென்று, சிந்தைசெய்தான் - நினைத்தான், இத்தேசம் - இந்தநாட்டில், தீயோருண்டு - கொடியவர்களுண்டு, சுகமில்லை - சுகங்கிடையாது, இந்தவிடந்தீதென - இத்தேசங்கொடியதென்று, வனத்திலிருந்து - கானகத்திலிருந்து, சுகிப்போமென - இன்பமடைவோமென்று, அகன்றான் - நீங்கினான் — எ-று.

எ-து. காச்சுக்கல்லை மிகவும்விரும்பி மிகுந்த செல்வங்களனைத்தையு நீக்கினான். கிடைத்த காச்சுக்கல் சகல செல்வத்தையுங் கொடுக்கும்; மற்றத் தனங்களென்னத்துக்கென்று நினைத்தான். இந்தநாட்டிற்கொடியவர்களுண்டு, சுகங்கிடையாது. இத்தேசங் கொடியதென்று கானகத்திலிருந்து யின்பமடைவோமென்று நீங்கினான் — எ-ம்.

(இ-எ-க-ம்) சிந்தாமணியின் குணந்தெரியினங்ஙனந்துன்பம்வாராதது போலச் சகலத்யாகத்தினுண்மைதெரியின் அஃதெளிதிற்கிடைக்கினுமரிதிற் கிடைக்கினுமப்போதே துன்பமற்ற பரமசுகத்தையடையலாமென்பதைக் குறிப்பாற்சொல்லியதாம். (108)

## அறியாமைக் கிரங்கக்கூடாதென்பதை யுறுதிப்படுத்து நிமித்தம் யானையின்கதையைச் சாமானியமாக நிரூபித்தல்.

வாழலாமென் றெண்ணிப்புன் மணியால்வருத்த மெலாமுற்றுத்
தாழுநின்றான் வேறொன்று சாற்றக்கேளாய் புந்திக்குச்
சூழவறிவுண் டாக்குவிக்குந் தொல்லைவிந்த வனத்திடையே
வேழமொன்று கரிகட்கு மேலாமிகவு முயர்ந்ததுவே.

இ-ள். வாழலாமென்றெண்ணி - சுகிக்கலாமென்று நினைத்து, புன்மணியால் - காச்சுக்கல்லினால், வருத்தமெலாமுற்று - துன்பங்களனைத்தையுமடைந்து, தாழுநின்றான் - தாழ்வையடைந்தான், வேறொன்று சாற்றக்கேளாய் - மற்றொருகதையை சொல்லக்கேட்பாய், புந்திக்குச்சூழவறிவுண்டாக்குவிக்கும் - புத்திக்குப் பூரணமாக அறிவைக்கொடுப்பிக்கும், தொல்லைவிந்த

வனத்திடை - பழயவிந்தவனமத்தியில், வேழமொன்று - ஒருயானையானது- கரிகட்குமேலாக மிகவுமுயர்ந்தது - யானைகளுக்குமேலாக மிகவுமுன்னித முள்ளதாம்—எ-று.

எ - து. சுகிக்கலாமென்று நினைத்துக் காச்சுக்கல்லினாற் றுன்பங்களனைத்தையுமடைந்துத் தாழ்வையடைந்தான். மற்றொரு கதையைச் சொல்லக்கேட்பாய். புத்திக்குப் பூரணமாக அறிவைக்கொடுப்பிக்கும் பழைய இந்தவனமத்தியில் ஒரு யானையானது யானைகளுக்கு மேலாக மிகவுமுன்னிதமுள்ளதாம்—எ—ம். (109)

வயிரத்தினு நீண் டறக்கூராய் வலிதாகியகோ டிரண்டுகளது
பயில்வுற்றிருப்புக் கயிற்றாலே பாகன் பிணித்து விலங்கிட்டான்
செயிர்பற்றியபல் பிணிப்பாலே சிந்தைதளர்ந்து கொம்பிரண்டாற்
குயில்வித்தவலன் கட்டெல்லாங் குலைந்ததொருநாற் கடிகையிலே.

இ - ள். வயிரத்தினும்-வச்சிராயுதத்தைக் காட்டிலும், நீண்டு-நீளமாய், அறக்கூராய் - மிகவுங்கூர்மையையுடையதாய், வலிதாகிய - வலிமையாயிருக்கின்ற, கோடிரண்டுளது - இரண்டுதந்தங்களையுடையதான (யானையுடன்), பயில்வுற்று - பழகி, இருப்புக்கயிற்றால் அயப்பாசத்தினால், பாகன் பிணித்து விலங்கிட்டான் - மாவுத்தன்கட்டி நிகளம்பூட்டினான், செயிர்பற்றிய - குற்றம்பொருந்திய, பல்பிணிப்பால் - அநேகக்கட்டுகளினால், சிந்தைதளர்ந்து-மனஞ்சோர்ந்து, கொம்பிரண்டால்-இரண்டு தந்தங்களினாலும், குயில்வித்தவை-நெருக்கிவைத்த, வன்கட்டெல்லாம் - வலியகட்டுகளனைத்தையும், ஒருநாற்கடிகையில் - ஓரிரண்டுமுகுர்த்தத்தில், குலைத்தது - கெடுத்தது—எ-று.

எ - து. வச்சிராயுதத்தைக்காட்டிலும் நீளமாய் மிகவுங் கூர்மையை யுடையதாய் வலிமையாயிருக்கின்ற இரண்டு தந்தங்களை யுடையதான யானையுடன்பழகி அயப்பாசத்தினால் மாவுத்தன் கட்டி நிகளம் பூட்டினான். குற்றம்பொருந்திய அநேகங்கட்டுகளினால் மனஞ்சோர்ந்து இரண்டுதந்தங்களினாலும் நெருக்கிவைத்த வலியகட்டுகளனைத்தையு மோரிரண்டு முகுர்த்தத்திற் கெடுத்தது—எ—ம்.

இதுவுமது.

விலங்குமுறிந்த படிகண்டான் வேழத்தலைவீழ்ந் துயர்பாகன்
கலங்கிவீழ்ந்தா னவன்வீழக் கண்டகளிறு கருணையினான்
மலங்கதவஞ்செய் யாதகல மற்றபாகன் மீண்டெழுந்து
சலஞ்செனைவேகி யக்களிற்றைத் தானேதேடி யெதிருற்றான்,

இ - ள். விலக்குமுறிந்தபடிகண்டான் - நிகளமுடைந்ததன்மையைப்பார்த்தவனாகிய, உயர்பாகன் - மேலானமாவுத்தன், வெழத்தலைவீழ்ந்து - பனைமரத்திருந்து யானைமத்தகத்திற் குதித்து, கலங்கிவீழ்ந்தான் - கலக்கமுற்றுத்தவறிப்பூமியில் விழுந்தான், அவன்வீழக்கண்டகளிறு - அவன் விழப்பார்த்தயானையானது, கருணையினால் - கிருபையினால், மலங்கசவஞ் செய்யாதகல - சலிக்கும்படிகொல்லாமனீங்க, மற்றப்பாகன் - பின்பந்தமாவுத்தன், மீண்டெழுந்து - திரும்பவுமெழுந்திருந்து, சலங்கொண்டேகி - தணியாத கோபத்துடன்போய், அக்களிற்றைத்தான் - அந்தயானையை, தேடியெதிருற்றான் - தேடியெதிரேசென்றான் — எ - று.

எ - து. நிகளமுடைந்த தன்மையைப் பார்த்தவனாகிய மேலானமாவுத்தன் பனைமரத்திலிருந்து யானைமத்தகத்திற் குதித்துக் கலக்கமுற்றுத்தவறிப் பூமியில்விழுந்தான். அவன்விழப்பார்த்த யானையானது கிருபையினாற் சலிக்கும்படிக் கொல்லாமனீங்க, பின்பந்தமாவுத்தன் திரும்பவு மெழுந்திருந்துத் தணியாத கோபத்துடன் போய் அந்தயானையைத்தேடி யெதிரே சென்றான்—எ—ம். ()

ஒருகானிடையே யக்கரிய யுற்றான்குழியொன் றுண்டாக்கிச்
சருகாற்கொடியான் மறைவித்தான் றந்திசிலநாடிரிந்தங்கே
வருகாலையில்வீழ்ந் ததுகுழியில் வந்தபாக னுறப்பிணித்தான்
கருதாநின்ற திப்போதும்.

இ - ள். ஒருகானிடை - ஒருகாட்டினடுவில், அக்கரியையுற்றான் - அந்தயானையையடைந்தான், குழியொன்றுண்டாக்கி - ஒருபடுகுழிதோண்டி, சருகாற்கொடியான் - உலர்ந்தவிலைகளினாலுங் கொடிகளினாலும், மறைவித்தான் - மறைவுசெய்தான், தந்தி - யானையானது, சிலநாடிரிந்து - சிறிதுநாட் சஞ்சரித்து, அங்கேவருகாலையில் - அவ்விடத்தில் வருகின்றகாலத்தில், குழியில்வீழ்ந்தது - படுகுழியில்விழுந்தது, வந்தபாகன் - வந்தமாவுத்தனானவன், உறப்பிணித்தான் - அழுந்தக்கட்டினான், கருதாநின்றகளிறு - நினைக்கின்ற யானையானது, இப்போதும் - இப்பொழுதும், துயரோடும் - துன்பத்துடன், நின்றது - இருந்தது — எ - று.

எ — து. ஒருகாட்டினடுவில அந்தயானையை யடைந்தான், ஒருபடுகுழிதோண்டி உலர்ந்த இலைகளினாலுங் கொடிகளினாலு மறைவுசெய்தான், யானையானது சிறிதுநாட்சஞ்சரித் தவ்விடத்தில் வருகின்ற காலத்தில் படுகுழியில் விழுந்தது, வந்த மாவுத்தனானவ னழுந்தக்கட்டினான், நினைக்கின்ற யானையான திப்போதுந் துன்பத்துடனிருந்தது—எ—ம். (112)

## இதுவுமது.

தனதுவீட்டிற் சிறையிருக்குந் தனிமாவலிபோ னின்றகரி
முனைமுன்வீழ்ந்த பகைப்பாகன் மூளைசிதறித் தெனில்வந்து
வனவெங்குழியிற் கட்டுண்டு மயங்கவேண்டா மதுபோல
வினவிநிகழ்கா லத்தான்மேல் வினைநோக்காதார் மெலிகுவரே.

இ - ள். தனதுவீட்டில் - தனதரன்மனையில், சிறையிருக்கும் - காவலிலிருக்கின்ற, தனிமாவலிபோல்-ஒப்பற்றமாவலியைப்போல, நின்றகரி-இருந்தயானையானது, முனைமுன்வீழ்ந்த-பூர்வத்திற்றனதுமுன்னேவிழுந்த, பகைப்பாகன் - சத்துருவாகியமாவுத்தன், மூளைசிதறித்தெனில் - தலை மூளைசிதறும்படியாகக் கொன்றால், வனம்வந்து-கானகத்துக்குவந்து, வெங்குழியில்-கொடியபடுகுழியில், கட்டுண்டு-பிணிப்புற்று, மயங்கவேண்டாம்-கலங்கவேண்டியதில்லை, அதுபோல - அக்கதையைப்போல, வினவி-விசாரித்து, நிகழ்காலத்தால் - வர்த்தமானகாலத்திலுைல், மேல் - இனிவருங்காலத்தில், வினைநோக்காதார் - காரியாகாரியங்களைப் பாராதவர்கள், மெலிகுவர் - துன்பத்தையடைவார்கள்—எ-று.

எ - து. தனதரண்மனையிற் காவலிருக்கின்ற வொப்பற்ற மாவிலியைப்போல விருந்த யானையானது பூர்வத்திற் றனதுமுன்னேவிழுந்த சத்துருவாகிய மாவுந்தன் தலைமூளை சிதறும்படியாகக்கொன்றால் கானகத்துக்குவந்து கொடியபடுகுழியிற் பிணிப்புற்றுக்கலங்கவேண்டியதில்லை. அக்கதையைப்போல விசாரித்து வர்த்தமான காலத்திலுனிவருங்காலத்திற் காரியாகாரியங்களைப் பாராதவர்கள் துன்பத்தையடைவார்கள்—எ-ம்.

(இ-டு-க-ம்., வலைலையுள்ள யானையாயிருந்து அஃதின்றிய மனிதனுல்வருந்துயதுபோலப் பூரணஞானமானது; அற்பசங்கற்பமான அறியாமையால் வருந்துவதைப்பார்த் தஃதைக்கெடுக்கவேண்டுமென் றறிவித்ததாம்.

## இவ்விரண்டு கதையையும்

## பகுத்து விஞவினதற்கு மூற்சிந்தாமணியைக்கூறல்.

என்றலோடுஞ் சிகித்துவச னெந்தாய்சிந்தா மணியாலும்
வென்றிவேழந் தனுலும் விளம்புகதையை விளக்குகென
நின்றகும்ப னுரைசெய்வா னெடுநூற்பொருள்கள் பலவுணர்ந்தோ
னன்றிஞானமில்லாதோ னன்மாமணிதேடிய வவன்றான்.

இ - ன். என்றலோடும் (இப்படி) யென்று (கும்பமுனி) சொன்னவளவில், சிகித்துவசன் - சிகித்துவராசனெனவன், எந்தாய் - எனதுபிதாவே, சிந்

தாமணியாலும் - சிந்தாமணியினாலும், வென்றிவேழந்தன்னாலும் - வெற்றியையுடைய யானையினாலும், விளம்புகதையை - சொல்லியகதையை, விளக்குகென - தெரிவிப்பாயென்றுகேட்க, நின்றகும்பனுரைசெய்வான் - நிலையாயிருந்த கும்பமுனிசொல்லுவார், செந்நூற்பொருள்கள் - மிருந்தசாஸ்திரார்த்தங்கள், பலவுணர்ந்தோன் - சகலமுமுணர்ந்தவனும், நன்றி நன்மையான, ஞானமில்லாதோன் - தத்துவஞானமில்லாதவனும், நன்மணிதேடியவன்றான் - நல்லசிந்தாமணியைத் தேடினவனும்—எ-று.

எ - து. இப்படியென்று கும்பமுனி சொன்னவளவிற் சிகித்துவஜனானவன் எனதுபிதாவே? சிந்தாமணியினாலும் வெற்றியையுடைய யானையினாலும் சொல்லியகதையைத் தெரிவிப்பாயென்றுகேட்க, நிலையாயிருந்த கும்பமுனி சொல்லுவார். மிருந்த சாஸ்திரார்த்தங்கள் சகலமு முணர்ந்தவனும் நன்மையான தத்துவஞான மில்லாதவனும், நல்ல சிந்தாமணியைத் தேடினவனும்—எ-ம்.

என்னவுரைத்த துனையாநீ யெல்லாநூலுங் கற்றுணர்ந்து
மன்னுசாந்தி பெற்றிலைவான் மணியென்றதுதா னேதென்னி
லுன்னுவஞ்ச மறவெல்லா மொழிதலாகுந் துயானைத்துந்
துன்னலில்லா வதுதேடத் தொடங்கியரசு துறந்தனையால்.

இ - ள். என்னவுரைத்தது - இப்படியென்று சொல்லியது; உனையாம் - உன்னையேயாம், நீயெல்லாநூலுங் கற்றுணர்ந்தும் - நீசகலசாஸ்திரங்களையும் அற்பியாசித்தறிந்தும், மன்னுசாந்தி பெற்றிலை - நிலைபெற்ற உபசாந்தத்தை யடைந்தாயில்லை, வான்மணியென்றதுதானேதென்னில - சிந்தாமணியென்றதெதுவென்றால், உன்னுவஞ்சமற - நினைக்கப்பட்டவஞ்சகங்கெட, எல்லாமொழிதலாகும் - சர்வத்யாகமாம், துயானைத்தும் - துன்பங்களியாவும், துன்னலில்லாவது - நெருங்காதவச்சகலத்யாகத்தை, தேடத்தொடங்கி - தேடமுயற்சித்து, அரசுதுறந்தனை அரசாக்ஷியைவிடுத்தாய்—எ-று.

எ - து. இப்படியென்று சொல்லிய துன்னையேயாம். நீ சகலசாஸ்திரங்களையு மற்பியாசித் தறிந்தும் நிலைபெற்ற வுபசாந்தத்தை யடைந்தாயில்லை. சிந்தாமணியென்ற தெதுவென்றால் நினைக்கப்பட்டவஞ்சகங் கெட சர்வத்யாகமாம்; துன்பங்களியாவும் நெருங்காத அச்சகலத்யாகத்தைத் தேட முயற்சித்து வாசாக்ஷி விடுத்தாய்—எ-ம்.

மனையுங்கிளையுந் துறந்திங்ஙன் வனத்தில்வந்தாய் நாடகன்று
யனையசகலத் தியாகநிறை வாகுமளவி லதன்விகற்ப
நினைவில்வளர்ந்து விண்மூடு நீலமுகில்போ லுனைமறைக்க
வினையசகலத் தியாகமுப ரிஞ்பமல்ல மகத்கல்ல.

இ - ள். மனையுங்கிளையுந்துறந்து - இல்லாளை முறைவையுநீக்கி, இங்ஙனந்தில்வந்தாய் - இந்தக்காட்டினிடத்தில்வந்தாய், நாடகன்றாய் - (உனது) தேசத்தைவிட்டுநீங்கினாய், அனையசகலத்தியாகம் - அப்படிப்பட்டசகலத்யாகமானது, நிறைவாருமலவில் - நிறைவாகின்ற சமயத்தில், அதன்விகற்பம் - அத்தியாகவிகற்பவபிமானமானது, நினைவில்வளர்ந்து - மனதில் வளர்ந்து, விண்மூடும் - ஆகாயத்தைமறைக்கும், நீலமுகில்போல் - கரியமேகத்தைப்போல, உனைமறைக்க - உன்னைமறைவுசெய்ய, இனையசகலத்தியாகம் - இப்படிப்பட்ட சகலத்யாகமானது, உயரின்பமல்ல - மேலானசுகமல்ல, மகத்தல்ல - மகத்துமல்ல—எ-று.

எ - து. இல்லாளையுமுறவையுநீங்கி இந்தக் காட்டினிடத்தில் வந்தாய். உனதுதேசத்தைவிட்டு நீங்கினாய், அப்படிப்பட்ட சகலத்யாகமானது நிறைவாகின்றசமயத்தில் அத்தியாகவிகற்ப அபிமானமானது மனதில்வளர்ந்து ஆகாயத்தை மறைக்குங் கரியமேகத்தைப் போல உன்னை மறைவுசெய்ய இப்படிப்பட்ட சகலத்யாகமானதுமேலான சுகமல்ல, மகத்துமல்ல—எ—ம். (116)

பிறிதொன்றுயர்ந்ததுளததுதான் பெருநாண்முயன்றுசெய்துமென
வெறியவிகற்ப மனநிறைய மிக்கதியாகம் போயினதாம்
செறிகொள்சகல த்யாகம்போய் நினதுதவமாம் வனையின்முறி
யறிவில்விகற்ப விழியாற்கண் டதுநன்றென்றே யழுங்குதியால்.

இ - ள். பிறிதொன்று - வேறொன்று - உயர்ந்ததுளது - மேலானதுண்டென்று நினைத்து, அதுதான் - அச்சகலத்யாகம், பெருநாண்முயன்றுசெய்துமென - அநேககாலமுயற்சிசெய்தால் வருமென்று, வெறியவிகற்பமனநிறைய - பயனின்றியவிகற்பமானதுமனதிநிரம்ப, மிக்கதியாகம் - மேலான சர்வத்யாகமானது, போயினதாம் - நீங்கினதாம், செறிகொள் - சன்மார்க்கமுள்ள, சகலத்யாகம்போய் - சகலத்யாகமென்னும்மிரத்தினம்போக, நினதுதவமாம் - உனதுதவமாகிய, வனையின்முறி - காச்சுக்கல்லை, அறிவில் - உணர்வில்லாத, விகற்பவிழியாற்கண்டு - விகற்ப திருஷ்டியினாற்பார்த்து, அது நன்றென்று - அதுநன்மையென்று, அழுங்குதி - துன்பப்படுகிறாய்—எ-று.

எ - து. வேறொன்று மேலானதுண்டென்று நினைத்து அச்சகலத்யாக மநேககாலமுயற்சிசெய்தால் வருமென்று பயனின்றியவிகற்பமானது மனதிநிரம்ப மேலான சர்வத்யாகமானது நீங்கினதாம் சன்மார்க்கமுள்ள சகலத்யாகமென்னு மிரத்தினம்போக உனது தவமாகிய காச்சுக்கல்லை உணர்வில்லாத விகற்பதிருஷ்டியினாற் பார்த்து அது நன்மையென்று துன்பப்படுகிறாய்—எ-ம். (117)

அளவற்றெளிதாஞ் சுகமகற்றி யரிதாமற்பமாம் பொருளி
லுளமுற்றவரே யுயிர்க்கொலைஞருயர்வஞ்சகரென் றுலகுரைக்கும்
வளமிக்குயிர்சிந் தாமணிநீ வந்ததென்றெண் ணியதவத்தாற்
றளர்வற்றிலை பெற்றிலையொன்றுந் தந்தியென்றதினிக்கேளாய்.

இ - ள். அளவற்று - மட்டில்லாமல், எளிதாஞ்சுகமகற்றி - இலேசாய்க் கிடைத்த சுகத்தைத்தள்ளி, அரிதாம் - அரிதாகிய, அற்பமாம்பொருளில் - அற்பமானவஸ்துவில், உளமுற்றவரே - மனதுபொருந்தினவர்களே, உயிர்க்கொலைஞர் - ஆத்மாவைக் கொன்றவர்களென்றும், உயர்வஞ்சகரென்று - மிகுந்தகொடியரென்றும் - உலகுரைக்கும் - சத்துக்கள் சொல்லுவார்கள், வளமிக்குயிர்சிந்தாமணி - வளப்பத்தின்மிகுந்த மேலானசிந்தாமணியானது, நீவந்ததென்று - நீகிடைத்ததென்று, எண்ணியதவத்தால் - கருதினதவத்தினால், தளர்வற்றிலை - தளர்வைநீங்கினையில்லை, பெற்றிலையொன்றும் - ஒரு (பளிங்கின்) பிரயோசனத்தையுமடைந்தாயில்லை, தந்தியென்றதினிக்கேளாய் - யானையென்றுசொல்லியதினிமேற்கேட்பாய்—எ-று.

எ—து. மட்டில்லாமல் இலேசாய்க்கிடைத்த சுகத்தைத்தள்ளி அரிதாகிய அற்பமானவஸ்துவில் மனதுபொருந்தினவர்களே ஆத்மாவைக் கொன்றவர்களென்றும், மிகுந்த கொடியவரென்றுஞ் சத்துக்கள் சொல்லுவார்கள், வளப்பத்தின் மிகுந்த மேலான சிந்தாமணியானது நீ கிடைத்ததென்று கருதினதவத்தினால் தளர்வைநீங்கினையில்லை, ஒருபளிங்கின் பிரயோசனத்தையு மடைந்தாயில்லை; யானையென்றுசொல்லிய தினிமேற்கேட்பாய்—எ-ம்.

(இ-கு-க-ம்.) சிந்தாமணி தேடினவன் முதலிய திருஷ்டாந்தத்துக்குச் சாந்தியைத் தேடினவாசன் முதலிய தாஷ்டார்த்தங்களாற் சகலத்யாகமென்னுஞ் சிந்தாமணியுனக்கு லகுவாய்க்கிடைத்தும் அதையிகழ்ந்து தவமென்னுங் காச்சக்கல்லினாற் றுன்பப்படுகின்றாயென்று விசேஷமாய் நிரூபித்தலாம் ()

## யானைக்கதையைப் பகுத்துக்கூறல்.

மதமாவென்ற துனையாகும் வயிராக்கியமும் விவேகமுமே
யதனீள்கொம்பாமுன்குணங்க ளானைமேற்கொண்டுழல்பாகன்
விதமாவுன்னை மெலிவுக்கு மிகுமஞ்ஞான மதனாலே
சிதறுகின்று யரந்தைகளாற் செலுத்துமவனாற் கரிபோல.

இ - ள். மதமாவென்றது - மதத்தையுடையயானையென்று சொல்லியது, உனையாகும் - உன்னையேயாகும், வயிராக்கியமும் - வயிராக்கியமென்

பதும் விவேகமும்-விவேகமென்பது, அதனின் கொம்பாம் - அதனுடைய நீண்டதந்தங்களாகும், உன்குணங்கள்-உன (தறியாமையையுடைய) குணங்களே, ஆனைமேற்கொண்டுழல்பாகன் - யானைமேலேறி நடத்தாநின்ற மாவுத்தனும், விதமாவுன்னை மெலிவிக்கும் - நாநாவிதமாகவுன்னை மெலிவுசெய்கின்றது, மிருமஞ்ஞானம் - மிகுந்தவஞ்ஞானமாகும், அதனால் - அந்தவஞ்ஞானத்தினு லுண்டான, அரங்கைதகளாற்செலுத்தும் - துன்பங்களினு னடாத்துகின்ற, அவனால்-அந்தமாவுத்தனால், கரிபோல - யானையைப்போல, சிதறுகின்றாய்-சிதறுகின்றாய்—எ-று.

எ - து. மதத்தையுடைய யானையென்றுசொல்லிய துன்னையே யாகும். வயிராக்கியமென்பதும், விவேகமென்பதும் அதனுடைய நீண்ட தந்தங்களாகும். உனதறியாமையையுடைய குணங்களே யானைமேலேறி நடத்தாநின்ற மாவுத்தனும். நாநாவிதமாகவுன்னைமெலிவுசெய்கின்றது மிகுந்த அஞ்ஞானமாகும். அந்த அஞ்ஞானத்தினுலுண்டான துன்பங்களினு னடாத்துகின்ற அந்த மாவுத்தனால் யானையைப்போல சிதறுகின்றாய்—எ-ம். (119)

இருப்புக்கயிறும் விலங்குகளு மிச்சாபாச மென்பனவாம்
பெருக்கவிவற்றாற் கட்டுண்டாய்ப் பேசுமிரும்பின்மிகவன்பா
மிருப்புக்கயிறும் விலங்குகளு மிகுநாட்செல்லிற் றேய்ந்தொழியுஞ்
செருக்குமாசை மேன்மேலே திடமாய்வளருந் தீர்க்கமுற.

இ-ள் இருப்புக்கயிறும் - அயப்பாசமும், விலங்குகளும் - நிகளங்களும், இச்சாபாசமென்பனவாம் - ஆசாபாசமென்னும் சொல்லப்பட்டனவாம், பெருக்கவிவற்றாற் கட்டுண்டாம் - மிகவுமிவைகளாற் பந்தப்பட்டாய், பேசுமிரும்பில் - சொல்லப்பட்ட விரும்பிலும், மிகவன்பாம் - இச்சைமிகவுமுறுதியாம், இருப்புக்கயிறு - இரும்புச்சங்கிலிகளும், விலங்குகளும் - சாற்றனைகளும், மிகுநாட்செல்லில் - வெகுகாலமானுல், தேய்ந்தொழியும் - தேய்ந்துகெடும், செருக்குமாசை - களிக்கின்றவிச்சையானது, மேன்மேல்-மேலுமேலும், தீர்க்கமுற - நெடிதாக, திடமாய்வளரும்-உறுதியாகவளரும்-எ-று.

எ - து. அயப்பாசமும், நிகளங்களு மாசாபாசமென்று சொல்லப்பட்டனவாம், மிகவு மிவைகளாற் பந்தப்பட்டாய். சொல்லப்பட்டவிரும்பிலு மிச்சை மிகவுமுறுதியாம், இரும்புச்சங்கிலிகளும், சாற்றனைகளும் வெகுகாலமானுற் றேய்ந்துகெடும். களிக்கின்ற இச்சையானது மேலுமேலும் நெடிதாக வுறுதியாகவளரும்—எ-ம்.

மூரிக்கயிறும் விலங்குகளு முறித்ததானை யென்றதுதான்
பாரிச்சுமெல் லாரீமுன் பற்றற்றெழுமிக்க படியாகுஞ்

சூரிற்பாகன் வீழ்ந்ததுநின் றுறவின்மடமை வீழ்ந்ததுவாம்
பேரிச்சையை நீக்கிடிற்பின்னைப் பிறவிதரும் பேதமையுண்டோ.

இ-ள். சூரிக்கயிரும் - பலமுள்ள (விருப்புக்) கயிற்றையும், விலங்கு களும் - தளைகளையும், ஆனைமுறித்ததென்றதுதான் - களிற்றறுத்ததென்று சொல்லியது, பார் - பூமியிலுள்ள, இச்சகமெல்லாம் - இப்போகங்களனைத்தையும், நீமுன் - நீமுன்னமே, பற்றறவொழித்தபடியாகும் - இச்சையில்லாமற்கெடுத்தவிதமாகும், சூரிற்பாகன் - வீரத்துவமில்லாத மாவுத்தன், வீழ்ந்தது - (பனைமாததினின்று) விழுந்ததென்பது, நின் றுறவில் - உமதுவிரத்தியில், மடமைவீழ்ந்ததுவாம்-அஞ்ஞானங்கெட்டதாகும், பேரிச்சையைநீக்கிடில் - மிகுந்த ஆசையையொழித்தால், பின்னை - பின்பு, பிறவிதரும்பேதமையுண்டோ - சநநத்தைக் கொடுக்கின்ற அஞ்ஞானமுண்டோ—எ-று.

எ - து. பலமுள்ளவிருப்புக் கயிற்றையுந் தளைகளையுங்களிறுத்ததென்று சொல்லியது: பூமியிலுள்ள இப்போகங்களனைத்தையும் நீ முன்னமே இச்சையில்லாமற் கெடுத்த விதமாகும். வீரத்துவமில்லாத மாவுத்தன் பனைமாத்தினின்று விழுந்ததென்பது: உமதுவிரத்தியில்அஞ்ஞானங்கெட்டதாகும். மிகுந்த அசையை யொழித்தாற் பின்பு சநநத்தைக்கொடுக்கின்ற அஞ்ஞானமுண்டோ?—எ-ம்.

போகமயலை விரத்தியினாற் போக்கநினையி லஞ்ஞான
மேகநினைந்து வெட்டுமாத் திருக்கும்பேய்போ னின்றலையு
மோகமறவே போகங்கண் முற்றும்விவேகத் தால்விட்டால்
வேகமறப்போ மஞ்ஞானம் வெட்டிவீழ்ந்த மாப்பேய்போல்.

இ-ள். போகமயலை - செல்வமயக்கத்தை, விரத்தியினாற்போக்கநினையில் - துறவினாற்கெடுக்கவெண்ணினால், அஞ்ஞானம் - அஞ்ஞானமானது, ஏகநினைந்து -ஓடநினைத்து, வெட்டுமாத்திருக்கும்பேய்போல - வெட்டுகின்ற தருவிலிருக்கும் அலகையைப்போல, (நின்றலையும்- இருந்தலையும், மோகமற - மயக்கங்கெடும்படியாக, போகங்கண்முற்றும் - செல்வங்களனைத்தையும், விவேகத்தால்விட்டால் - விவேகத்தினாணீக்கினால், வெட்டிவீழ்ந்த-வெட்டித்தள்ளிய, மாப்பேய்போல் - விருட்சத்திலிருக்கும் பசாசைப்போல, அஞ்ஞானம் - அஞ்ஞானமானது, வேகமறப்போம்-விரைவினீங்கும்—எ-று.

எ - து. செல்வமயக்கத்தைத் துறவினால் கெடுக்கவெண்ணினால், அஞ்ஞானமானது ஓடநினைத்து வெட்டுகின்ற தருவிலிருக்கும் அலகையைப்போல விருந்தலையும். மயக்கங்கெடும்படியாக செல்வங்களனைத்தையும் விவேகத்தினால் நீக்கினால், வெட்டித்தள்ளிய விரு

ட்சத்திலிருக்கும் பசாசைப்போல அஞ்ஞானமானது விரைவி னீங்கும்—எ—ம். (122)

இதுவுமது.

மட்டில்போக மெலாமொழிந்தான் மடமைத்தொடர்ச்சி யெல் லாம்போம், வெட்டி வீழ்ந்தமாநின்று வீழ்ந்துபோம் புட்கூடுகள் போற், கிட்டிவனநீ யடைந்தளவே கிளாஞ்ஞானம் வீழ்ந்துளதாற் றட்டில்சகல த்யாகமெனுந் தனிவாளாற்கொன் றிலையதனை.

இ-ள். மட்டில்போகமெலாம் - அளவற்றபோகங்க ளனைத்தையும், ஒழித்தால்-தவிர்த்தால், மடமைத்தொடர்ச்சியெல்லாம்போம் - அஞ்ஞானத் தொடர்புகளனைத்துநீங்கும், வெட்டிவீழ்ந்தமாநின்று - வெட்டுப்பட்டுவிழுந்த விருக்ஷத்திலிருந்து, வீழ்ந்துபோம் விழுந்துபோகின்ற, புட்கூடுகள்போல் பட்சியின் கூண்டுகளைப்போல, வனம்-கானகத்தை, கிட்டி-நெருங்கி, நீய டைந்தளவே - நீயடைந்தமாத்திரத்தில், கிளாஞ்ஞானம்வீழ்ந்துளது - மிகுந் த அஞ்ஞானமானது விழுந்தது, தட்டில்சகலத்யாகமெனும் - தடையற்றசகல த்யாகமென்கின்ற, தனிவாளால் - ஒப்பற்றசுத்தியினால், அதனை - அவ்வஞ் ஞானத்தை, கொன்றிலை-கெடுத்திலை—எ-று.

எ-று. அளவற்ற போகங்களனைத்தையுந் தவிர்த்தால் அஞ் ஞானத்தொடர்புகளனைத்தைநீங்கும். வெட்டுப்பட்டு விழுந்த விரு க்ஷத்திலிருந்து விழுந்துபோகின்ற பட்சியின் கூண்டுகளைப் போலக் கானகத்தைநெருங்கி நீ யடைந்தமாத்திரத்தில் மிகுந்த அஞ்ஞான மானது விழுந்தது. தடையற்ற சகலத்யாகமென்கின்ற வொப்பற்ற சுத்தியினால் அவ்வஞ்ஞானத்தைக் கெடுத்திலை—எ-ம். (123)

அதனான்மீள முனைத்தெழுந்த வஞ்ஞானத்தா லறநொந்தாய்
மதமாவுக்குப் படுகுழியை வகுத்தான்பாக னென்றதுதான்
றிதமாவுனக்குத்தவத்துன்பஞ் செறியஞ்ஞான சேர்த்தியதாஞ்
சுதமார்குழிமேன் மேன்கொடிக டுயர்கூர்தவஞ்சேர் நற்றொழில்கள்.

இ-ள். அதனால் - அதைக் கொல்லாமையினால், மீளமுனைத்தெழுந் த-திரும்பவுமுண்டாகியெழுந்த, அஞ்ஞானத்தால் - அறியாமையினால், அற நொந்தாய் - மிகவும்வருந்தினாய், மதமாவுக்கு - மதத்தையுடையயானைக்கு, பாகன்-மாவுத்தனானவன், படுகுழியை வகுத்தானென்றதுதான் - கொப்ப முண்டாக்கினனென்பது, இதமாவுனக்கு - இதமாகவுனக்கு, தவத்துன்பம்- தவமென்கின்றதுயரை, செறியஞ்ஞானம் மிகுந்தவஞ்ஞானமானது, சேர்

த்தியதாம்-கொடுத்ததாகும், கடுமார்குழி-கேடுநிறைந்த படுகுழியின், மேன் மேன்கொடிகள் - மேலுமேலுங்கொடிகளென்பது, துயர்கொள் - துன்பமிகுந்த, தவஞ்சேர்-தவத்தைச்சார்ந்த, நற்செழுமிவ்கள்-சற்கிருத்தியங்கள்-எ-று

எ - து. அதைக் கொல்லாமையினுற் றிரும்பவுமுண்டாகி வளர்ந்த அறியாமையினுல் மிகவும்வருந்தினாய். மதத்தையுடைய யானைக்கு மாவுத்தனானவன் கொப்பமுண்டாக்கினுனென்பது நிராமகநினக்குத் தவமென்கிறதுயரை மிகுந்த அஞ்ஞானமானது கொடுத்ததாகும். கேடுநிறைந்த படுகுழியின் மேலுமேலுங் கொடிகளென்பது துன்பமிகுந்த தவத்தைச்சார்ந்த சற்கிருத்தியங்கள்—எ—ம்.

(இ-சு-க-ம்.) யானைமுதலிய திருஷ்டாந்தத்துக்கு, அரசன்முதலிய தாஷ்டாந்தங்களாற் சகலத்யாகமுதித்தவிடத்து நீங்கின அஞ்ஞானத்தை யங்ஙனேகெடுக்காமல் அதனுன்வகுக்கப்பட்ட தவத்துன்பத்தில் வீழ்ந்துவருந்துகின்றுயென் றவ்வினை நீக்கும்பொருட்டு விசேடமாயறிவித்ததாம். (124)

## சகலத்யாகத்தை முன்னிட்டுத் தடுக்கத்தடுக்க அவனே பற்றுக்களனைத்தையுங் கண்டுநீக்கித் தேகமுதலியவற்றையும் நியதிகளைந்து தொய்பத ஸ்வரூபத்தை யடையும்பொருட்டேன் ஞானத்தையுஞ் சகலத்யாகத்தையு மிழந்தாயெனல்

இவ்வாறின்றுமிடர்தவமா மிந்தக்குழியி லுழக்கின்றாய்
வெவ்வால்வலிமா வலிசிறையாய் மிருபாதலத்தி லிருப்பதுபோற்
றவ்வாமொழிமென் சூடாலை சாற்றுஞான மிழந்தனையென்
னைவாய்சகலத் யாகத்தை நழுவினுயே னவில்கென்ன.

இ-ள். இவ்வாறின்றும் - இவ்விதமாயிப்போதும், இடர்தவமாம் - துன்பமென்னுந்தவமாகிய, இந்தக்குழியில் - இந்தப்பள்ளத்தில், வெவ்வால்வலி கொடிய ஆட்டிறத்தையுடைய, மாவலி - மாபலியானவன், சிறையாய் - சிறையிலடைபட்டவனுய், மிருபாதலத்தில் - மிருத்யாதானத்தில், இருப்பது போல் - இருப்பதைப்போல, உழக்கின்றாய் - இருக்கிறாய், தவ்வாமொழி- தவறுதவசனத்தையுடைய, மென்சூடாலை - மிருதுவான சூடாலையானவன், சாற்றுஞானம் சொல்லப்பட்ட ஞானத்தை, எனிழந்தனை - எனிழந்து, ஐவாய்-வருந்துகிறாய், சகலத்யாகத்தை - சகலத்யாகத்தை, ஏனழுவினுய் - ஏன் விட்டுவிட்டாய், நவில்கென்ன - சொல்லென்று கும்பமுனிகேட்க-எ-று.

எ - து. இவ்விதமா யிப்போதுந் துன்பமென்னுந் தவமாகிய இந்தப்பள்ளத்திற் கொடிய வாட்டிறத்தையுடைய மாபலியானவன் சிறையிலடைபட்டவனுய் மிருத்யாதானத்தி லிருப்பதைப்

போல விருக்கிறாய். தவறாத வசனத்தையுடைய மிருதுவான சூடாலையானவள் சொல்லப்பட்ட ஞானத்தை எனிழந்துவருந்துகிறாய் ? சகலத்யாகத்தை என்விட்டுவிட்டாய்? சொல்லென்று கும்பமுனி கேட்க—எ-ம். (125)

## உயிர்ச்சார்பு பொருட்சார்பு நீக்கினேனெனில் அஃது சகலத்யாக மன்றெனல்.



வேந்தனுரைப்பான் பார்விட்டேன் வீடுவிட்டே னிநிவிட்டேன்
காந்தைதனைவிட் டேன்சகல த்யாகங்கைவிட் டதுமற்றென்
றோர்ந்துபுகலென் றனுங்கும்பன் செப்புவானீ தேசமுதற்
சார்ந்தவெல்லாம் விட்டாலுஞ் சகலத்யாக மன்றாகும்.

இ - ள். வேந்தனுரைப்பான் - அரசன் சொல்லுவான், பார்விட்டேன் (எனது) பூமியைவிடுத்தேன், வீடுவிட்டேன் - அரண்மனையைவிடுத்தேன், நிதிவிட்டேன் - செல்வத்தைவிடுத்தேன், காந்தைதனைவிட்டேன் - பாரியாளைவிடுத்தேன், சகலத்யாகம் - சகலத்யாகமானது, கைவிட்டது - இப்பொழுது நீக்கினதைக்காட்டிலும், மற்றென் - வேறியாது, ஓர்ந்துபுகலென்றனும் - ஆராய்ந்து சொல்லவேண்டுமென்று (அரசன்) கேட்கவும், கும்பனசெப்புவான் - கும்பமுனிசொல்லுவார், நீதேசமுதல் - நீ நாடுமுதலாக, சார்ந்தவெல்லாம் - சேர்ந்திருக்கின்றசகலத்தையும், விட்டாலும் - விட்டுவிட்டாலும், சகலத்யாகமன்றாகும் - சகத்தியாகமல்லவாம்—எ-று.

எ — து. அரசன்சொல்லுவான். எனது பூமியைவிடுத்தேன், அரண்மனையை விடுத்தேன், செல்வத்தை விடுத்தேன், பாரியாளை விடுத்தேன், சகலத்யாகமான திப்பொழுது நீக்கினதைக்காட்டிலும் வேறியாது ஆராய்ந்து சொல்லவேண்டுமென்று அரசன்கேட்கவும், கும்பமுனிசொல்லுவார். நீ நாடுமுதலாகச் சேர்ந்திருக்கின்ற சகலத்தையும் விட்டுவிட்டாலுஞ் சகலத்யாகமல்லவாம்—எ-ம்.

## வனப்பற்றிருக்கின்றதென்றறிந் தஃதை நீக்கினேனெனிஃதுஞ் சகலத்யாகமன்றெனல்.



எல்லாத்திலும்பற் றுண்டுனக்கவ் விச்சையெல்லா மறவிட்டு
நல்லார்க்குரிய நல்லின்ப நண்ணுகென்ன மன்னுரைப்பான்
மல்லார்புவிவிட் டதுசகல மன்றேய்வனமே யெனக்குளது
கல்லாற்றருவா னிறைகாட்டிற் காதலுறவா தனைவிட்டேன்.

இ - ள். உனக்கு - நினக்கு, எல்லாத்திலும்பற்றுண்டு - சகத்திலுமாசையுண்டு, அவ்விச்சையெல்லாமறவிட்டு - அந்தவாசைகளனைத்தையு மொருங்கேநீக்கி, நல்லோர்க்குரிய நல்லின்பம் - சத்துக்களுக்குரிய பிரமாநந்தத்தை, நண்ணுவென்ன - அடைவாயென்று கும்பமுனிசொல்ல, மன்னுரைப்பான் - அரசன்சொல்லுவான், மல்லார்புவிவிட்டது - வளமைநிறைந்தசகத்தைவிட்டது, சகலமன்றேல் - சகலத்யாகமல்லவானால், எனக்குளதுவனமே-எனக்குடையதுகானகமே, கல்லால் - மலைகளினாலும், தருவால் - மரங்களினாலும், நிறைகாட்டில் - நிறைந்திருக்கின்ற கானகத்தில், காதலுறு - விரும்பப்பட்ட, வாதனைவிட்டேன் - வாசனைநீக்கினேன்—எ-று.

எ — து. நினக்குச் சகத்திலுமாசையுண்டு, அந்த ஆசைகளனைத்தையு மொருங்கேநீக்கிச் சத்துக்களுக்குரிய பிரமாநந்தத்தை யடைவாயென்று கும்பமுனிசொல்ல, அரசன்சொல்லுவான். வளமைநிறைந்த சமத்தைவிட்டது சகலத்யாகமல்லவானா லெனக்குடையது கானகமே. மலைகளினாலும், மரங்களினாலும் நிறைந்திருக்கின்ற கானகத்தில் விரும்பப்பட்ட வாசனையை நீக்கினேன்—எ—ம்.

இனிநான்சகல த்யாகத்தை யெய்தினேனென் றலுங்கும்பன்
கனியார்மாமு நெடுமலையுங் கழன்றாற்சகல மன்றுனக்குத்
துனியார்பற்றுண்டனைத்திலுமற் றுன்பந்துறந்தாற்சுகமென்னப்
புனிதாயுதுவு மன்றாகிற் புகல்வேனெனப்பூ பதிபுகலும்.

இ - ள். இனிநான் - இப்பொழுதுயான், சகலத்யாகத்தை - சகலத்யாகமென்பதை, எய்தினேனென்றலும் - அடைந்தேனென்றரசன் சொல்லவும், கும்பன் - கும்பமுனியானவர், கனியார்மாமும் - பழங்கணிறைந்த விருட்சங்களும், நெடுமலையும் - உயர்ந்தகிரிகளும், கழன்றால் - நீங்கினால், சகலமன்று - சகலத்தையாகமல்ல, அனைத்திலும் - சகலத்திலும், உனக்குத் துனியார்பற்றுண்டு - நினக்குத்துன்பமிகுந்த ஆசையுண்டு, அத்துன்பந் துறந்தால் - அந்தத்துயரைநீக்கினால், சுகமென்ன - பரமசுகமென்றுசொல்ல, புனிதா - பரிசுத்தத்தையுடையமுனியே, இதுவுமன்றாகில் - இதுவுமல்லவானால், புகல்வேனென - சொல்லுவேனென்று, பூபதிபுகலும் - அரசனவன் சொல்லுவான்—எ-று.

எ - து. இப்பொழுது யான் சகலத்யாகமென்பதை யடைந்தேனென் றரசன்சொல்லவும், கும்பமுனியானவர் பழங்கணிறைந்த விருட்சங்களும், உயர்ந்த கிரிகளும் நீங்கினார் சகலத்யாகமல்ல சகலத்திலும் நினக்குத் துன்பமிகுந்த ஆசையுண்டு, அந்தத் துயரை நீக்கினாற் பரமசுகமென்றுசொல்ல, பரிசுத்தத்தையுடைய முனியே! இதுவுமல்லவானாற் சொல்லுவேனென்று அரசனவன் சொல்லுவான்—எ-ம். (128)

## வஸ்திரமுதலிய பற்றுக்களிருக்கின்றதென் றறிந்து அவைகளைத் தகனஞ்செய்து நீக்குதல்.

கந்தைதண்டு செபமாலை கலைத்தோல்பாண்டங் கமண்டலமுண்
டெந்தையிவற்றை விடுகின்றே னென்றுகூட்டி யெரிகொளுத்திச்
சிந்தைகளித்து வேற்றுடலாய்ச் சிக்கற்றனன்பற் றிலனென்றே
முந்தையறிஞன் முகநோக்கி மொழியலுற்றான் சிசித்துவசன்.

இ - ள். கந்தை - வஸ்திரமும், தண்டு - தண்டமும், செபமாலை - உருத்திராக்ஷத்தாடவமும், கலைத்தோல் - மான்றோலும், பாண்டம் - மண்பாத்திரங்களும், கமண்டலம் - கமண்டலமும், உண்டு - (எனக்) கிருக்கின்றன, எந்தை - என்பிதாவே, இவற்றைவிடுகின்றேனென்று - இவைகளை நீக்குகின்றேனென்று, கூட்டியெரிகொளுத்தி - சேர்த்தக்கினியிலொளித்து, சிந்தைகளித்து - மனமகிழ்ந்து, வேற்றுடலாய் - வேறுசரீரமாய், சிக்கற்றனன் - நட்பற்றனன், பற்றிலனென்று - ஆசையில்லாதவனேனென்று, முந்தையறிஞன் - அநாதிஞானஸ்வரூபியான கும்பமுனியினது, முகநோக்கி - வதனத்தைப்பார்த்து, சிசித்துவசன் - சிசித்துவசவாசன், மொழியலுற்றான் - சொல்லத்தொடங்கினன் — எ - று.

எ - து. வஸ்திரமும், தண்டமும், உருத்திராக்ஷத்தாடவமும், மான்றோலும், மண்பாத்திரங்களும், கமண்டலமு மெனக்கிருக்கின்றன. என்பிதாவே! இவைகளை நீக்குகின்றேனென்று சேர்த்தக்கினியிலொளித்து மனமகிழ்ந்து வேறுசரீரமானாய்ப்பற்றனன். ஆசையில்லாதவனேனென்று அநாதி ஞானஸ்வரூபியான கும்பமுனியினது வதனத்தைப்பார்த்து சிசித்துவசவாசன் சொல்லத்தொடங்கினன்.

### சகலத்யாகத்தை யடைந்தேனெனல்.

அம்மவம்ம கடவுண்மக னனவுன்னா லறிவுற்றேன்
மம்மரொழிந்தேன் கேவலமாய் மலங்களற்றே னிதுவென்று
விம்முசங்கற் பத்தெய்தா வேனென்றறயா வையும்விட்டேன்
செம்முபொருளின் றிரளெல்லாஞ் செநநமளிக்கும் பந்தனையே.

இ - ள். அம்மவம்ம - ஆச்சரியமாச்சரியம், கடவுண்மகனனவுன்னால் - தேவகுமாரனனவும்மால், அறிவுற்றேன் - அறிவைப்பெற்றேன், மம்மரொழிந்தேன் - துன்பத்தினின்று நீங்கினேன், கேவலமாய் - தனிமையாக, மல

ங்களற்றேன் - களங்கமொழிந்தேன், இதுவென்று-இப்படிப்பட்டதென்று, விம்முசங்கற்பத்தெய்தா - மிகவுஞ் சங்கற்பத்தினுற் பொருந்தி, வேறொன்றற -பிறிதொன்றில்லாமல், யாவையும்விட்டேன்-சகலத்தையு நீக்கினேன், செம்பூபொருளின்றிரளெல்லாம் - செவ்வியபதார்த்தங்களின் கூட்டங்களியாவும், செநநமளிக்கும்பந்தனே - பிறவியைக்கொடுக்கின்ற பந்தமாம்—எ-று.

எ - து. ஆச்சரியமாச்சரியம்! தேவகுமாரனுனடம்மாலறிவைப்பெற்றேன். துன்பத்தினின்று நீங்கினேன். தனிமையாகக் களங்கமொழிந்தேன். இப்படிப்பட்டதென்று மிகவுஞ் சங்கற்பத்தினுற் பொருந்தி பிறிதொன்றில்லாமற் சகலத்தையு நீக்கினேன். செவ்வியபதார்த்தங்களின் கூட்டங்களியாவும் பிறவியைக்கொடுக்கின்ற பந்தமாம்—எ-ம். (130)

பொருள்களெம்மட் டெம்மட்டு போனதம்மட் டம்மட்டுந்
தெருளுமனந்தான் சுகமடையுஞ் செயித்தேயந்தச் சுகம்பெற்றேன்
மருள்செய்பந்தங் களுமற்றேன் மாசிலாத திகம்பரனு
யருள்செய்சகல த்யாகத்தை யடைந்தேன்வேறென் னுளவென்றுன்,

இ - ள். பொருள்கள் - பதார்த்தங்களானவை, எம்மட்டெம்மட்டு - எவ்வளவெவ்வளவு, போன - நீங்கினவோ, அம்மட்டம்மட்டும்-அவ்வளவவ்வளவும், தெருளுமனந்தான் - தெளிவுள்ளமனமானது, சுகமடையும் - ஆநந்தத்தைப்பெறும், செயித்தே - (பொருள்களைச்) செயஞ்செய்து, அந்தச்சுகம்பெற்றேன் - அவ்வாநந்தத்தை யடைந்தேன், மருள்செய்பந்தங்களுமற்றேன்-மயக்கத்தைச்செய்கின்ற பந்தங்களுநீங்கினேன், மாசிலாத - களங்கமற்ற, திகம்பரனுய் -நிருவாணியாய், அருள்செய்- (தேவரீர்) கிருபைசெய்யாநின்ற, சகலத்யாகத்தை - சகலத்யாகத்தை, அடைந்தேன் - பெற்றேன், வேறென்னுளவென்றுன்-வேறென்னவிருக்கின்றனவென்று அரசன்கேட்டான்-எ-று.

எ - து. பதார்த்தங்களானவை யெவ்வளவெவ்வளவு நீங்கினவோ அவ்வளவவ்வளவுந் தெளிவுள்ள மனமானது ஆநந்தத்தைப்பெறும். பொருள்களைச் செயஞ்செய்து அவ்வாநந்தத்தை யடைந்தேன். மயக்கத்தைச்செய்கின்ற பந்தங்களு நீங்கினேன். களங்கமற்ற நிருவாணியாய்த் தேவரீர் கிருபைசெய்யாநின்ற சகலத்யாகத்தைப்பெற்றேன், வேறென்னஇருக்கின்றனவென்று அரசன்கேட்டான்-எ-ம்.

(இ-எ-க-ம்.) புறம்பாயுள்ள பற்றுக்களியாவையுந் தானேகண்டு கழலும்படி செய்வித்ததாம், (131)

## இஃதுஞ் சகலத்யாகமன்றெல் இந்திரியங்களுக்கிடமான தேகத்தால் இருக்கின்றதென்றறித் தப்பற்றையு நீக்குகின்றேனெனல்.

கும்பனுரைப்பான் சகலமும்விட் டிலைநீயிந்தக் கூத்தாடல்
வம்புகாணென் றலுமன்னன் மனத்தினினைந்து மீண்டுரைப்பான்
வெம்புகாணப் பாம்புகள்சேர் வெள்ளென்பூ முடலொன்றே
யிம்பமீந்த தெனக்கிதனை யின்றேயெளிதின் விடுகின்றேன்.

இ - ள். கும்பனுரைப்பான் - கும்பமுனிசொல்லுவார், நீ சகலமும்விட்டிலை-நீயொன்றையாவது நீக்கவில்லை, இந்தக்கூத்தாடல் - இச்சகலத்யாகவபிநயம், வம்புகாணென்றலும்-வீணென்றுசொல்லுமளவில், மன்னன் - அரசனானவன் மனத்தினினைந்து - மனதிற்சிந்தித்து, மீண்டுரைப்பான் - திரும்பவுஞ் சொல்லுவான், வெம்புகாணப் பாம்புகள்சேர்-கொடியபஞ்சேந்திரியங்களென்னுஞ் சற்பங்கள் சார்ந்திருக்கின்ற, வெள்ளென்பு - வெள்ளையெலும்புகளும், ஊனும்-மாமிசங்களுமான, உடலொன்றே-சரீரமொன்றே, எனக்கு - அடியேனுக்கு, இம்பமீந்தது - இவ்விடத்தின் மிஞ்சினது, இதனையின்றே - இச்சரீரத்தையிப்போதே, எளிதின்விடுகின்றேன் - சுளுவினீக்குகின்றேன்—எ - று.

எ - து. கும்பமுனி சொல்லுவார். நீயொன்றையாவது நீக்கவில்லை, இச்சகலத்யாக அபிநயம் வீணென்று சொல்லுமளவில் அரசனானவன் மனதிற் சிந்தித்துத் திரும்பவுஞ் சொல்லுவான். கொடிய பஞ்சேந்திரியங்களென்னுஞ் சற்பங்கள் சார்ந்திருக்கின்ற வெள்ளையெலும்புகளும், மாமிசங்களுமான சரீரமொன்றே அடியேனுக் கிவ்விடத்தின் மிஞ்சினது, இச்சரீரத்தை யிப்போதே சுளுவினீக்குகின்றேன்—எ - ம். (132)

## தேகத்யாகமுஞ் சகலத்யாக மன்றெனல்.

காண்டியென்றோர் வரையேறிக் கவிழுமளவி லுயர்கும்ப
னீண்டிதென்னே யிவ்வுடலூ னென்னகுறைசெய் ததுபேதாய்
மாண்டுபயனென் னிராங்கன்றை வல்லேறடர்ந்து முனிவதுபோற்
றூண்டிவிழுந்து மெய்விடினுஞ் சகலத்யாகி யாகயே.

இ - ள். காண்டியென்று - பார்ப்பாயென்று, ஓர்வரையேறி-ஒருமலையிலேறி, கவிழுமளவில் - (அரசன்) விழுகின்றசமயத்தில், உயர்கும்பன் - மேலான கும்பமுனியானவர், ஈண்டிதென்னே-இவ்விடத்திலிதென்னகாரியம், இவ்வுடலூன்-இச்சரீரமானது, பேதாய் - அறிவில்லாதவனே, என்னகுறை

செய்தது - (உனக்கென்ன) குறைவைச்செய்தது, மாண்டுபயனென்-இறந்து பிரயோசனமென்ன, இளங்கன்றை - இளமையான பசுவின்கன்றை, வல்லேறு-பலம்பொருந்திய விடையானது, அடர்ந்து முனிவதுபோல் - பொருந்திக் கோபிப்பதைப்போல, தாண்டிவிழுந்து - தாண்டிக்குதித்து, மெய்விடினும்-சரீரத்தைவிட்டாலும், சகலத்யாகியாகாய்-சகலத்யாகி யாகமாட்டாய்,

எ - து. பார்ப்பாயென் றொருமலையிலேறி அரசன் விழுகின்ற சமயத்தில் மேலான கும்பமுனியானவர் இவ்விடத்தி லிதென்ன காரியம். இச்சரீரமானது அறிவில்லாதவனே? உனக்கென்ன குறை வைச்செய்தது. இறந்து பிரயோசனமென்ன? இளமையான பசுவின் கன்றைப் பலம்பொருந்திய விடையானது பொருந்திக் கோபிப்பதைப்போலத் தாண்டிக் குதித்துச் சரீரத்தை விட்டாலுஞ் சகலத்யாகியாகமாட்டாய்—எ—ம். (133)

## பவபீசமானதை நீக்கலே சகலத்யாகமெனில் அஃதியாததனை நீக்குமுபாய மியாதெனல்.



எந்தாலுடல மசைகின்ற தெதுதான் பிறவிகருமத்தின்
வித்தாய்நின்ற ததுவிட்டால் வேந்தாவெல்லாம் விட்டனவா
நித்தாரமிதென் றலுமுடலை யசைற்துப்பிறவி நிறைவித்தாய்
தத்தாநின்ற தேததனைத் தவிருமாறு சொல்லென்ன.

இ - ள். எத்தாலுடலமசைகின்றது - யாதினுற் சரீரஞ்சஞ் சரிக்கின்றதோ, எதுதான்-யாதொன்று, பிறவி - சநநத்துக்கும், கருமத்தின் - கருமத்திலுக்கும், வித்தாய்நின்றது - விதையாயிருந்ததோ, அதுவிட்டால் - அதை விடுவையாயின், வேந்தா - அரசனே, எல்லாம்விட்டனவாம் - சகலத் யாகமாம், நித்தாரமிதென்றலும்-உண்மையானதிதுவென்று (கும்பமுனி) சொல்லவும், உடலையசைத்து - சரீரத்தையசைத்து, பிறவிநிறைவித்தாய் - சநநத்தைமிகுவிக்கும் விதையாகி, தத்தாநின்றதேது - தாவாநின்றதெதுவோ, அதனைத்தவிருமாறு - அதைநீக்கும்விதத்தை, சொல்லென்ன - சொல்லுவாரென்று அரசன்கேட்டான்—எ-று.

எ - து. யாதினுற் சரீரஞ்சஞ்சரிக்கின்றதோ? யாதொன்று சநநத்துக்கும் கருமத்திலுக்கும் விதையாயிருந்ததோ? அதை விடுவையாயின் அரசனே சகலத்யாகமாம்; உண்மையான திதுவென்று கும்பமுனி. சொல்லவுஞ் சரீரத்தையசைத்துச் சநநத்தை மிகுவிக்கும் விதையாகித் தாவாநின்றதெதுவோ? அதை நீக்கும் விதத்தைச் சொல்லுவாரென் அரசன் கேட்டான்—எ-ம். (134)

## பிரசங்கற்பமான மனமே சகலபற்றுயு மிருக்கின்றதெனல்.

இயலார்கும்ப னுரைசெய்வா னெல்லாற்றினுஞ்சேர்சுகமாகி
வியனுர் சீவன் பிராணனென மேவுபெயர்கள் பலபெற்று
பயனுர்சடமு மசடமுமன் ருகிப்பரந்த சித்தத்தை
யுயர்வோர்சகல மென்றுரைப்ப றுலகுமிதுபந் தமுமிதுவே.

இ - ள். இயலார்க்கும்பனுரைசெய்வான் - சற்குணநிறைந்த கும்பமுனி சொல்லுவார், எல்லாற்றினும் - சகல பதார்த்தங்களிலும், சேர்சுகமாகி - சார்ந்திருக்கின்ற வின்பமாய், வியனுர்சீவன்-பெருமைபொருந்திய சீவனென்றும், பிராணனென - பிராணனென்றும், மேவுபெயர்கள் - பொருந்தியநாமங்கள், பலபெற்று - அநேகந்தரித்து, பயனுர்சடமும் - பிரயோசனமுள்ள சடமும் அசடம் - அசடமும், அன்றாகி - அல்லாததால், பரந்தசித்தத்தை - (மயக்கத்தில்) விரிந்தமனதை, உயர்வோர் - சத்துக்கள், சகலமென்றுரைப்பர் - சகலமென்றுசொல்லுவார்கள், உலகுமிது - சகமுமிது, பந்தமுமிதுவே - பந்தமுமிச்சித்தமே—எ-று.

எ - து. சற்குணநிறைந்த கும்பமுனி சொல்லுவார். சகல பதார்த்தங்களிலுஞ் சார்ந்திருக்கின்ற இன்பமாய்ப் பெருமை பொருந்திய சீவனென்றும், பிராணனென்றும்; பொருந்திய நாமங்களநேகந்தரித்து பிரயோசனமுள்ள சடமும் அசடமுமல்லாததாய், மயக்கத்தில் விரிந்த மனதைசத்துக்கள் சகலமென்றுசொல்லுவார்கள் சகமுமிது பந்தமு மிச்சித்தமே—எ—ம். (135

## சித்தத்யாகமே சகத்யாக அதுவேபரமசுகத்தைக் கொடுக்குமெனல்,

சனனகருமங் களின்வித்தாய்த் தருவையசைக்குங் காற்றேபோற்
றினமுமுடலை யசைப்பதுவுஞ் சித்தமிதனைத் தீர்வதுவே
யனசகலத் யாகமதா மதுவேபரம வாநந்தம்
வினவுபிறவெல் லாமிகவும் வெருகின்ற வெந்துயரே.

இ - ள். சனனகருமங்களின்வித்தாய் - பவக்கன்மங்களுக்குப் பீசமாய், தருவையசைக்குங்காற்றேபோல் - மாத்தையசைக்கின்ற வாயுவைப்போல, தினமும் - நித்தமும், உடலையசைப்பதுவும் - சரீரத்தை யாட்டிவிப்பதும், சித்தம்-மனமாகும், இதனைத்தீர்வதுவே - இம்மனதை விட்டுவிடுவதே, அனக - களங்கமற்றஅரசனே, சகலத்யாகமதாம் - சகலத்யாகமாகும், அதுவேபரமவாநந்தம் - அச்சகலத்யாகமேபிரமாநந்தமாகும், வினவுபிறவெல்லாம்-சொல்லப்பட்ட மற்றயாவும், மிகவும்வெருவுகின்ற - மிகவும்பயப்படுகின்ற, வெந்துயரே - வெவ்வியதுன்பமே—எ-று.

எ - து. பவக்கன்மங்களுக்குப் பீசமாய்; மாத்தை யசைக்கின்ற வாயுவைப்போல நித்தமுஞ் சரீரத்தை யாட்டிவிப்பது மனமாகும். இம்மனதை விட்டுவிடுவதே களங்கமற்ற அரசனே! சகலத்யாகமாகும். அச்சகலத்யாகமே பிரமாநந்தமாகும். சொல்லப்பட்ட மற்றயாவும் மிகவும் பயப்படுகின்ற வெவ்விய துன்பமே—எ-ம்.

சித்தத்யாகமே யாத்மாவெனில் அதன்காரணமு
முருவம் அதைக்கெடுக்கு முபாயமு மியாதெனில்.

---

சகலத்யாகந் தனைச்செய்து சாந்தனாய்மச் சரமின்றி
பகுதிநிலையாற் றெளிவுற்றால் பயின்றவடிவே ததுநீயாய்
நிகழுவாயென் றதுமன்ன னுரைப்பானீசொன் னெஞ்சுக்குப்
பகருமுதலாம் வடிவேதெப் படிநான்றீர்ப்ப துரையென்ன.

இ - ள். சகலத்யாகந்தனைச்செய்து - சகலத்யாகத்தைப்பண்ணி, சாந்தனாய் - உபசாந்தமுடையவனாய், மச்சரமின்றி - துவேடமில்லாமல், பகுதிநிலையால் - இயல்பான குணத்தினால், தெளிவுற்றால்-தெளிவடைந்தால், பயின்றவடிவேது - சொல்லப்பட்ட ஸ்வரூபமெதுவோ, அது - அப்பிரமஸ்வரூபமும், நீ-உனதாத்மஸ்வரூபமும், ஆய் - அயிக்கியமாய், நிகழுவாயென்றதும்- பிரகாசிப்பாயென்று கும்பமுனிசொல்லவும், மன்னனுரைப்பான் - அரசன்சொல்லுவான், நீசொன்னெஞ்சுக்கு-தேவரீர்சொல்லிய மனதுக்கு, பகருமுதலாம்-சொல்லப்பட்ட காரணமியாது, வடிவேது - உருவமியாது, எப்படி - எவ்விதம், நான்றீர்ப்பது - யா (னந்தமனதைக்)கெடுப்பது, உரையென்ன - சொல்லுவாயென்று கேட்க—எ-று.

எ - து. சகலத்யாகத்தைப்பண்ணி உபசாந்த முடையவனாய்த் துவேடமில்லாமல் இயல்பான குணத்தினாற் றெளிவடைந்தால் சொல்லப்பட்ட ஸ்வரூபமெதுவோ! அம்பிரமஸ்ரூபமும் உனதாத்மஸ்வரூபமு மயிக்கியமாய் பிரகாசிப்பாயென்று கும்பமுனி சொல்லவும், அரசன்சொல்லுவான். தேவரீர் சொல்லியமனத்துக்குச் சொல்லப்பட்ட காரணமியாது? உருவமியாது! எவ்விதம் யானந்தமனதைக்கெடுப்பது? சொல்லுவாயென்று கேட்க—எ-ம். (137)

மனதிற்குருவம் வாசனை யதின்காரண மகம்
பாவமாமெனல்.

---

மற்றுங்கும்ப னுரைசெய்வான் மனதுக்குருவம் வாதனையே
யுற்றமனமென் றுரைக்குமுறை யுறுவாதனையின் பரியாயம்

குற்றமெல்லாங் குவிந்திருக்குங் கூடாநாமெனன் பதுதானே
செற்றமனமா மரத்துக்குத் திகழும்விதையாந் தேர்வேந்தே.

இ - ள். மற்றுங் கும்பனுமுனிசெய்வான் - திரும்பவுங் கும்பமுனிசொல்லுவார், மனத்துக்குருவம்-மனத்துக்குவடிவமானது, வாதனையே-வாசனையேயாம், உற்ற-பொருந்திய, மனமெனறுரைக்குமுரை - மனமென்றசொல்லப்பட்டசொல், உறுவாதனையின் - பொருந்துகின்றவாசனையினது, பரியாயம்-பரியாயநாமங்களாகும், குற்றமெல்லாம் - பிழைகளியாவும், குவிந்திருக்குங்கூடாம் - கூடியிருக்கின்ற கூண்டாகிய, நாமெனன்பதுதானே - யானென்கின்றதே, செற்றமனமாமரத்துக்கு - சலஞ்சாதிக்குமனமாகிய விருட்சத்துக்கு, திகழும்விதையாம்-விளங்குகின்றவித்தாகும், வேந்தனே - அரசனே, தேர்-அறிந்துகொள்வாய் — எ - று.

எ — து. திரும்பவுங் கும்பமுனி சொல்லுவார். மனத்துக்கு வடிவமானது வாசனையேயாம். பொருந்திய மனமென்று சொல்லப்பட்ட சொல்பொருந்துகின்ற வாசனையினது பரியாய நாமங்களாகும். பிழைகளியாவுங் கூடியிருக்கின்ற கூண்டாகிய யானென்கின்றதே சலஞ்சாதிக்கு மனமாகிய விருட்சத்துக்கு விளங்குகின்ற வித்தாகும், அரசனே அறிந்துகொள்வாய்—எ—ம். (138)

## அகம்பாவத்திலுதித்தே அந்தக்காரணமாமெனல்

## வேறு.

ஆதியிலுண்டாகித னங்காந்தா னனுபவமெய் யாயமுதி யிடுவதாகி, யோதுமுரு வன்றியிலே யுதிக்குமத்தை யுரைசெய் வர்புந்தியென வுரைத்தவிந்த, நீதியுறு புந்தியெனு மங்குரத்தி னிறைவளர்வைக் கொம்பைச்சங் கற்பமென்பர், பேதமிவை யாதலாற் சித்தம் புந்தி பெரியமன மென்பதெலாம் பேர்கடானே,

இ - ள். ஆதியிலுண்டான - முதலிலுண்டாகிய, இதனங்குரந்தான்-இவ்வகம்பாவத்தின் முளையானது, அனுபவமெய்யாய் - அனுபவாகாரமாய், அமுதியிடுவதாங் - நிச்சயிப்பதாய், ஓதுமுருவன்றியில் - சொல்லும் வடிவமில்லாமல், உதிக்கும்-உண்டாகும், அத்தை - அந்தமுளையை, புந்தியென - புத்தியென்று, உரைசெய்வர் - சொல்லுவார்கள், உரைத்த-சொல்லப்பட்ட, இந்நீதியுறு - இந்நீதியையுடைய, புந்தியெனு மங்குரத்தில் - புத்தியென்கின்ற முளையினிடத்தில், நிறைவளர்வை - நிறைந்து வளர்தலையுடைய, கொம்பைச்சங்கற்பமென்பர் - கிளைகளை சங்கற்பமென்று சொல்லுவார்கள், பேதமிவையாதலால் - வேறுபாடிவையாதலினால், சித்தம்புந்தி -

சித்தமும்புத்தியும், பெரியமனமென்பதெலாம் - பெரிதாகிய மனமென்பன யாவும், பேர்கடான் - அகங்காரத்தினது நாமங்களாம்—எ-று.

எ - து. முதலிலுண்டாகியஇவ்வகம்பாவத்தின் முளையானது அனுபவாகாரமாய் நிச்சயிப்பதாய்ச் சொல்லும் வடிவமில்லாமலுண்டாகு மந்தமுளையைப் புத்தியென்று சொல்லுவார்கள், சொல்லப்பட்ட இந்நீதியையுடைய புத்தியென்கின்ற முளையினிடத்தில் நிறைந்து வளர்தலையுடைய கிளைகளைச் சங்கற்பமென்று சொல்லுவார்கள். வேறுபாடிவை யாதலினுற் சித்தமும் புத்தியும் பெரிதாகிய மனமென்பனயாவும் அகங்கரத்தினது நாமங்களாம்—எ-ம்.

## மனதைக்கெடுக்கு முபாயமறிவித்தல்.



இனையமன மெனும்பொல்லா மாத்தின்கொம்பை யெப்பொழுதும் வெட்டிவே ரீர்த்துமாய்ப்பாய், வினையுறுவா தனைபனைகள் பலகாய்காய்க்கும் வேதனவா ளாலுள்ளே வெட்டின்மாயு, நினைவறப்பற் றறமவுன மாகிவந்து நேர்ந்ததுசெய் வாருள்ளே நெஞ்சைச்செற்றோ, ரனையமரப் பனைவெட்டற் கெவுனமென்ப ரதன்வேரையறுத்தலே யறநன்றென்பார்

இ - ள். இனையமனமெனும் - இப்படிப்பட்டமனமென்கின்ற, பொல்லாமாத்தின்கொம்பை - கொடியவிருட்சத்தினதுகிளையை, எப்பொழுதும் - நாடோறும், வெட்டிவேரீர்த்துமாய்ப்பாய் - தறித்துத்தூரோடுங்கெடுப்பாய் வினையுறுவாதனை - வினையையுடைய வாசனையென்னும், பனைகள் - கிளைகள், பலகாய்காய்க்கும் - வெகுவான காய்களைக் காய்க்கும், வேதனவாளால் - ஞானமென்னுங் கத்தியினல், உள்ளேவெட்டினமாயும் - அகத்திற்றறிக்கிற்கெடும், நினைவற - பாவனைகெடவும், பற்றற - ஆசைகெடவும், மவுனமாகி - மகாமௌனமாய், வந்து நேர்ந்ததுசெய்வார் - வந்தெதிர்ந்ததைச் செய்பவர்கள், உள்ளேநெஞ்சைச்செற்றோர் - அகத்தின்மனதைச் செயித்தவர்கள், அனைய - மரப்பனைவெட்டல் - அவ்விருட்சத்தின் கிளைகளைவெட்டுதல், கெவுனமென்பர் - கெவுனமென்றுசொல்லுவார்கள், அதன்வேரையறுத்தலே - அதனது மூலத்தைக் கெடுத்தலே, அறநன்றென்பார் - முக்கியமென்று சொல்லுவார்கள்—எ-று.

எ—து. இப்படிப்பட்ட மனமென்கின்ற கொடிய விருட்சத்தினது கிளையை நாடோறுந் தறித்துத் தூரோடுங் கெடுப்பாய்.

வினையையுடைய வாசனையென்னுங் கிளைகள் வெகுவான காய்களைக் காய்க்கும். ஞானமென்னுங்கத்தியினால் அகத்திற்றறிக்கிற்கெடும். பாவனைகெடவும் ஆசைகெடவு மகாமௌனமாய் வந்தெதிர்ந்ததைச் செய்பவர்கள் அகத்தின்மனனைதைச் செயித்தவர்கள். அவ்விருட்சத்தின் கிளைகளை வெட்டுதல் கெவுணமென்று சொல்லுவார்கள். அதனது மூலத்தைக் கெடுத்தலே முக்கியமென்று சொல்லுவார்கள்.

(இ-கூக-ம்.) இந்திரியந்தோடுங் தேகப்பற்றறநீக்கிச் சித்தத்யாகஞ்செய்யும்பொருட்டு சூக்ஷுமமாகிய வாசனைமுதலிய சங்கற்பங்களைக் கெடுத்தல் கெவுணமெனவும், அதன்மூலமாகிய அகம்பாவத்தைக் கெடுத்தல் முக்கியமெனவு மிரண்டுவிதமாகக் கூறினரென்பதாம். (கசO)

## அகம்பாவத்தைக்கெடுக்கு முபாயங்கூறல்.

ஆதலினான் மிகநல்ல நெறியாலேயந்த மனமரத்தின் வேரறுத் துச்சுட்டாற், சாதமுறா தென்றலுமே மன்னன்சொல்வான் றனிமரத்தின் வித்தாகு மகம்பாவத்தை, மாதவனே சுடக்கனலே தெனவுங்கும்பன் மறுத்துரைப்பா னானொன் றெண்ணுகின்ற, போதவிசாரந்தானே மனத்தின்வித்தைப் பொன்றுவிக்குங் கனலெனவும் பூபன் சொல்வான்.

இ-ள். ஆதலினால்-ஆதலால், மிகநல்லநெறியால் - மிகுந்தசன்மார்க்கத்தினால், அந்தமனம்-அந்தமனமென்னும், மரத்தின்வேர்-விருட்சத்தினது மூலமாகிய (அகம்பாவனையை), நீயறுத்துச்சுட்டால்-நீகளைந்தெரித்தால் சாதமூறாதென்றலும் - (மன) முண்டாகாதென்று கும்பமுனி சொல்லவும் மன்னன்சொல்வான் - அரசன்சொல்லுவான், தனிமரத்தின் - தனிமையான மனவிருட்சத்தின், வித்தாகும்-பீசமாகிய, அகம்பாவத்தை - அகம்பாவனையை, மாதவனே-மேலானதவமுடையமுனியே, சுடக்கனலேதெனலும்-எரிக்கஅக்கினி யேதென்றரசன்கேட்கவும், கும்பன்மறுத்துரைப்பான்-கும்பமுனி திரும்பவுஞ்சொல்லுவான், யானொன்றெண்ணுகின்ற-யானொன்று சிந்திக்கின்ற, போதவிசாரந்தானே - ஆத்மஞானவிசாரணையே, மனத்தின் வித்தை-மனதினது பீசத்தை, பொன்றுவிக்கும்-கெடுக்கின்ற, கனலெனவும் அக்கினியென்வும், பூபன்சொல்வான்-அரசன்சொல்லுவான்—எ-று.

எ-து. ஆதலால் மிகுந்த சன்மார்க்கத்தினால் அந்த மனமென்னும் விருட்சத்தினது மூலமாகிய அகம்பாவனையை நீ களைந்தெரித்தால் மனமுண்டாகாதென்று கும்பமுனி சொல்லவும், அரசன், சொல்லுவான். தனிமையான மனவிருட்சத்தின் பீசமாகிய அகம்

பாவனையை மேலான தவமுடையமுனியே எரிக்கவக்கினியேதென் றரசன்கேட்கவும், கும்பமுனிதிரும்பவுஞ் சொல்லுவார். யானுமொ ன்று சிந்திக்கின்ற ஆத்மஞான விசாரணையே மனதினது ஆபீசத்தை க் கெடுக்கின்ற அக்கினியெனவு மரசன் சொல்லுவான்—எ-ம்.

இ-ம். அகம்பாவத்தைக்கெடுக்கின் மனமுண்டாகாதாதலால் அதை யாத்மஞான விசாரத்தாற் கெடுக்கவேண்டுமென்பதாம். (கசக)

விசாகமுகத்தான் முன் பற்றறநீக்கிய சகத்து முதலியவைகளை
அறிகின்ற அறிவைக்கொண்டு பார்க்கினவைகள் சடமாயிரு
த்தலால் அவைகளியானன்றெனத் தள்ளிவிடத்தவை
கட்குச் சாக்ஷியாய்விளங்கிய சயஞ்சித்தே சேடித்
திருத்தலால் அதுவே தானெனத் தரிசித்தானெனல்.

என்னுடைய புந்தியினு லெண்ணினேனு னிச்சகநா னல்லமல வுடனுனல்லத், துன்னுபொறி களுமல்ல மனமுமல்லத் தொடர்புந்தி யல்லவகங் காரமல்ல, வின்னசட மாதலினு லெனலுங்கும்ப னிவை யன்றேல்வேறுர்நீ யியம்புகென்ன, மன்னனுரைப்பானெல்லாம்ப டைத்தளித்த மாசறுசின் மாத்திரமாம் வடிவனானே.

இ-ள். என்னுடையபுந்தியினுல் - எனதறிவினுல், நான்-யான், எண் ணினேன் - (அநேகவிதமாகச்) சிந்தித்துப் பார்த்தேன், சடமாதலினுல் - அறிவின்மையாதலின், இச்சகநானல்ல-இவ்வுலகமும்யானன்று, மலவுடனு னல்ல-(இம்) மலசரீரமும்யானன்று, துன்னுபொறிகளுமல்ல-பொருந்திய விந்திரியங்களும் யானன்று, மனமுமல்ல - (சிந்திக்கின்ற) மனமும்யானன் று, தொடர்புந்தியல்ல, தொடர்பாகின்ற புத்தியும்யானன்று இன்னவகங் காரமல்ல-(அபிமானித்தெழுகின்ற) தீயவகங்காரமும் யானன்று, எனலு ம்-என்றரசன்சொல்லவும், கும்பன் - கும்பமுனியானவர், இவையன்றேல்- இவைகணீயல்லவாயின், நீவேறுர் - நீயேயாயார், இயம்புகென்ன - சொ ல்வாயென்றுகேட்க, மன்னனுரைப்பான் - அரசன்சொல்லுவான், எல்லா ம்படைத்து - சகலத்தையுமுண்டாக்கி, அளித்த-இரட்சித்து (ஒடுக்குகின்ற), மாசறு-களங்கமற்ற, சின்மாத்திரமாம்- சைதன்னியமாத்திரமாகிய, வடிவ னானே-ஸ்வரூபமேயான்—எ-று.

எ-து. எனதறிவினுல் யானநேக விதமாகச் சிந்தித்துப் பார் த்தேன். அறிவின்மையாதலின் இவ்வுலகமும் யானன்று. இம்மலசரீ ரமும் யானன்று. பொருந்திய விந்திரியங்களும் யானன்று. சிந்

திக்கின்ற மனமும்யானன்று தொடர்பாகின்ற புத்தியும் யானன்று. அபிமானித் தெழுகின்ற தீயவகங்காரமும் யானன்று என்றரசன் சொல்லவுங், கும்பமுனியானவர் இவைகணீயல்லவாயின் நீ வேறே யார்? சொல்வாயென்றுகேட்க அரசன்சொல்லுவான். சகலத்தையு முண்டாக்கி இரட்சித்தடக்குகின்ற களங்கமற்ற சைதன்னிய மாத்திரமாகிய ஸ்வரூபமேயான்.

(இ-ம்) பாத்யேகாத்ம ஸ்வரூபமாய் விளங்கிய கூடஸ்தஸ்வரூபமானு னென்பதாம். (141)

தொம்பதத்தைத் தரிசிப்பித்து தற்பதத்தை தரிசிப்பிக்கத் தொட
ங்கி யதிகேளாத்த சடம் வேறு சித்துவேறா யிருமைப்பட்
டிருந்தலைச் சின்மாத்திரமா யொருமைப்படுத்து நிமி
த்தமச்சொரூபஞானப் பிரதிபலனமாகத்தோற்றிய
சகத்துமதை யறிந்த விருத்திஞானமு மஃ
தைத் தானென்கின்ற அகம்பாவ முதலி
யவுங் கற்பிதமாகக் காண்பிக்க
அவ்வகம்பாவத்தின் காரண
மியாதென வினவுதல்.



இந்தவடி வாமெனக்கோ ரேதுகாணே னிடர்மனத்தா ருவின் விதையா மகங்காரத்தை, யுந்தும்வகை யறிகிலே னுந்தவுந்த வோடி வரு மிதனுலுள் ளுடைந்தேனென்ன, வந்தணன்சொல் வான்மன்னு காரணத்தை யன்றியோர் காரியமுண் டாகமாட்டா. முந்துமகங் காரகாரணத்தைநாடி மொழியென்ன மீண்டரசன் மொழிவதானுன்.

இ-ள். இந்தவடிவாமெனக்கு - இப்படிப்பட்ட ஞானஸ்வரூபமாகிய எனக்கு, ஓரேதுகாணேன்-ஒருகாரணத்தையுங் கண்டிலன், இடர் - துன்பத்தையுடைய, மனத்தாருவின்விதையாம் - மனவிருட்சத்தின் வித்தாகிய, அகங்காரத்தை-அகம்பாவத்தை, உந்தும்வகையறிகிலேன்-தள்ளுகின்ற மார்க்கத்தைத்தெரிந்திலன், உந்தவுந்த - தள்ளத்தள்ள, ஓடிவருமிதனுல் - ஓடிவாநின்ற (இவ்வகங்) பாவத்தினுல், உள்ளுடைந்தேனென்ன - மனந்தளர்ந்தேனென் றரசன்சொல்ல, அந்தணன்சொல்வான்-கும்பமுனிசொல்லுவார், மன்னு-அரசனே, காரணத்தையன்றி - காரணத்தையல்லாமல், ஓர்காரியமுண்டாகமாட்டா - ஒருகாரியமுண்டாகாது, முந்து-முன்னுகின்ற, அகங்கார காரணத்தைநாடி - அகம்பாவத்தின் காரணத்தைப்பார்த்து, மொழியென்ன - சொல்லுவாயென்றுசொல்ல, மீண்டரசன் மொழிவதானுன் - திரும்பமன்னவன் சொல்லத்தொடங்கினுன்—எ-று.

எ - து. இப்படிப்பட்ட ஞானஸ்வரூபமாகிய வெனக்கு ஒரு காரணத்தையுங் கண்டிலன். துன்பத்தையுடைய மனவிருட்சத்தின் வித்தாகிய அகயம்பாவத்தைத் தள்ளுகின்ற மார்க்கத்தைத் தெரிந்திலன். தள்ளத்தள்ள வோடிவராநின்ற இவ்வகம்பாவத்தினால் மனந்தளர்ந்தேனென் 'றரசன்சொல்ல, கும்பமுனிசொல்லுவார். அரசனே? காரணத்தையல்லாமல் ஒருகாரிய முண்டாகாது, முன்னுகின்ற அகம்பாவத்தின் காரணத்தைப் பார்த்துச் சொல்லுவாயென்று சொல்லத்திரும்ப மன்னவன்சொல்லத்தொடங்கினான்—எ-ம்.

## அகம்பாவத்தின் காரணமறிவெனில் அதன்காரணமிபாதெனல்.

அகமென்னுங் குற்றத்தின் காரணந்தா னறிவாகு மவ்வறிவிங் கடங்குமாறென், மிகவுங்காண் பவற்றிலறி வெழுதலாலே மெலிகின்றேன் காண்பவற்றை விடுமாறெங்ஙன், புகல்கென்ன மீண்டந்தக் கும்பன்சொல்லுவான் போதத்தின் காரணநீ புகன்றாய்பின்னை, நிகழுங்கா ரணமுமகா ரணமுஞ்சொல்லவே னினக்குநா னெனவதற்கு நிருபன் சொல்வான்.

இ - ள். அகமென்னுங்குற்றத்தின் - அகம்பாவமென்கின்ற குற்றத்திற்கு, காரணந்தான்-காரணமானது, அறிவாகும்-போதமாகும், அவ்வறிவு அப்போதமானது, இங்கடங்குமாறென் - இவ்விடத்திலயிக்கும்விதமென்ன, மிகவுங்காண்பவற்றில்-மிகவுந்திரிஸ்யத்தில், அறிவெழுதலால் - போதமுண்டாதலினால், மெலிகின்றேன் - இளைக்கின்றேன், காண்பவற்றை - காணப்பட்டதிரிஸ்யத்தை, விடுமாறெங்ஙன் - நீக்கும்விதமெப்படி, புகல்கென்ன - சொல்லுவாயென்று (அரசன்) கேட்க, மீண்டந்தக் கும்பன்சொல்வான்-இரும்பவந்தக் கும்பமுனிசொல்லுவார், போதத்தின்காரணம்-அறிவின் காரணத்தை, நீபுகன்றால்-நீசொன்னால், பின்னைநிகழுங்காரணமும்-பின்பு விளங்குங்காரணத்தையும், அகாரணமும் - காரணமல்லாததையும், நினக்குநான் சொல்வேனென - உனக்கு யான் சொல்வேனென்றுசொல்ல, அதற்கு நிருபன்சொல்வான்-அதற்கரசன்சொல்வான்—எ-று.

எ - து. அகம்பாவமென்கின்ற குற்றத்திற்குக் காரணமானது போதமாகும். அப்போதமான திவ்விடத்திலயிக்கும் விதமென்ன? மிகவுந் திரியஸ்திற் போதமுண்டாதலினு லிளைக்கின்றேன். காணப்பட்ட திரிஸ்யத்தை நீக்கும் விதமெப்படி சொல்லுவாயென் றரசன்கேட்கத் திரும்ப அந்தக் கும்பமுனிசொல்லுவார். அறிவின்காரணத்தை நீசொன்னால் பின்புவிளங்குங் காரணத்தையும் காரணமல்

லாதனையு முனக்கு யான்சொல்வே னென்றுசொல்ல அதற்கரசன் சொல்லுவான்—எ-ம்.

## விருத்திஞானம் விடயத்தைப்பற்றி யெழுதலி அவ்வி டயங்க காரணமாம் அஃதுநசிக்பாவஞானமு நசிக் குமெனி அவ்விடய நீங்கினவிடத் தறிவெங் ஙனம் விளங்குமெனல்.

புகன்றவுடன் முதற்பொருளுண் டாதலாலே போதமுளதாம வைபொய் யானுவில்லை, யகங்காவே தனமென்னு மனத்தின்வித்து மடங்கிவிடு மெனவதற்குக் கும்பன்சொல்வா, னுகந்தவுட லாதியுள தேற்சித்துண்டா முடலாதி பல்பொருள்க ளிலாதபோதி, னிகழ்ந்த வறி வெப்படியே நின்றதென்று நிகழ்த்தென்ன மீண்டந்த நிருபன் சொல்வான்.

இ-ள். புகன்றவுடன்முதல் - சொல்லப்பட்ட சரீரமுதலாகிய, பொருளுண்டாதலால் - வஸ்துசத்தையினுல், போதமுளதாம் - அறிவுண்டாகும், அவை - அந்தவஸ்துசத்தை, பொய்யானுவில்லை - அசத்யமானு(லறி)வில்லை, அகங்காவேதனமென்னும் - அகம்பாவஞானமென்கின்ற, மனத்தின்வித்தும்-மனத்தின்விதையும், அடங்கிவிடுமென - ஒடுங்கிவிடுமென்(றரசன்)சொல்ல, அதற்குக் கும்பன்சொல்வான் - அதற்குக்கும்பமுனிசொல்லுவார், உகந்தவுடலாதியுளதேல் - விரும்பிய சரீரமுதலான வஸ்துசத்தையிருந்தால், சித்துண்டாம் - அறிவுண்டாயிருக்கும், உடலாதி - சரீரமுதலான, பல்பொருள்களிலாதபோதில் - பலவஸ்துக்களில்லாத சமயத்தில், நிகழ்ந்தவறிவு - விளங்கியஞானமானது, எப்படிநின்றதென்று, எப்படியிருந்ததென்று, நிகழ்த்தென்ன - சொல்லென்றுகேட்க, மீண்டந்தநிருபன்சொல்வான் - திரும்ப அந்தவரசன்சொல்லுவான்—எ-று.

எ-து. சொல்லப்பட்ட சரீரமுதலாகிய வஸ்து சத்தையினுலறிவுண்டாகும். அந்த வஸ்துசத்தை அசத்தியமானு லறிவில்லை. அகம்பாவ ஞானமென்கின்ற மனதின்விதையு மொடுங்கிவிடுமென் றரசன் சொல்ல அதற்குக் கும்பமுனிசொல்லுவார் விரும்பிய சரீரமுதலான வஸ்து சத்தையிருந்தா லறிவுண்டாயிருக்கும், சரீரமுதலான பலவஸ்துக்களில்லாத சமயத்தில் விளங்கிய ஞானமான தெப்படி யிருந்த தென்று சொல்லென்று கேட்கத் திரும்பவந்த அரசன் சொல்லுவான்—எ-ம்.

தேகமுதலிய விடயமெங்கணு நீங்கு மதைப்பற்றி யெழுகின்ற
அறிவெங்ஙனந் தனியே யிருக்குமெனி லங்ஙனந் தனியே
யில்லாமையாற் றேகங்காரணமாகாவஸ்தங்கணமாகவே
யிப்போதகங்காரியமாகா வஸ்தங்கணமாகவே யத
னாற் றோற்றிய வகம்பாவமுதலிய யாவுமித்
தையாய்ப் பிரம பிரதிபாமாத்திரமாய்
விளங்குமெனல்.

---

காசரண முதலங்க முதலாய்க்செய்யுங் கருமபல முளதாய்கை
யாளுங்காயங், குரவவில தெனும்படியென் னெனக்கும்பன், கூறு
வான் காரணத்தைக் கூடாதென்னில், விரவியகா ரியந்தானு மிலதா
மந்த வேயுணமு மயக்கமே மிகுமயக்கால், வருவனவெல் லாமிதலா
மேதுவன்றி வருபொருள்பொய் யாங்கயிற்றில் வருநாகம்போல்.

இ-ள். சரசரணமுதல் - அத்தபாதாதிய, அங்கமுதலாய்ச்செய்யும்-அவயவங்களாதியாகச்செய்யப்பட்ட, கருமபலமுளதாய்-கருமத்தின் பயனையுடையதாய், கையாளுங்காயம் - அனுபவிக்கப்பட்ட சரீரமானது, குரவ - னதாசிரியரே, இலதெனும்படி யென்னென-இல்லையென்கின்ற விதமெப்படியென்றரசன் கேட்க, கும்பன் கூறுவான் - கும்பமுனிசொல்லுவார், காரணத்தைக்கூடாதென்னில் - (கருமத்தினுள்ள இகாயங்) காரணத்தைப்பொருந்தாததானால், விரவியகாரியந்தானுமிலதாம்-பொருந்திய (போதமென்னுங்) காரியமுமில்லையாகும், அந்தவேதனமும் - அந்தவறிவும், மயக்கமே - பிரமையேயாம், மிகுமயக்கால் - மிகுந்தபிரமையினால், வருவனவெல்லாமிலதாம் - வருவனவாகிய (அகம்பாவமுதலிய) சகலமு மில்லாததாகும், ஏதுவன்றிவருபொருள் - காரணமல்லாமல் வரப்பட்டவஸ்துக்கள், கயிற்றில் வருநாகம்போற் பொய்யாம் - இரச்சுவிலுண்டான சற்பத்தைப் போல மித்தையாம்—எ-று.

எ-து. அத்தபாதாதிய அவயவங்களாதியாகச் செய்யப்பட்ட கருமத்தின் பயனையுடையதா யனுபவிக்கப்பட்ட சரீரமானது எனதாசியரே! இல்லையென்கின்றவிதமெப்படியென்றரசன்கேட்கக் கும்பமுனி சொல்லுவார். கருமத்தினு ளுள்ள விக்காயங்காரணத்தைப் பொருந்தாததானாற் பொருந்திய போதமென்னுங் காரியமுமில்லையாகும். அந்தவறியும் பிரமையேயாம். மிகுந்தபிரமையினால்வருவனவாகிய அகம்பாவமுதலிய சகலமுமில்லாததாகும். காரணமல்லாமல்வரப்பட்ட வஸ்துக்கள் இரச்சுவிலுண்டான சற்பத்தைப்போலமித்தையாம்—எ-ம்.

(இ-ச-க-ம்.) பிரமப்பிரதிபாமாத்திரமாகப் பஞ்சபூதமெனத்திகழ்ந்தோற்றி னதேயன்றி யதற்கோருருவமின்மையா லதுவுமதனாற் றோற்றியயாவையுஞ்

சிற்பிரகாசமாய் விளங்குதலாற் காரணகாரியமிரண்டுமின்றென்று தற்பதார்த்தத்தைத் தரிசிப்பித்ததாம். (149)

தற்பதத்தைத் தரிசிப்பித்துத் தொம்பதத்தைத் தரிசிப்பிக்கத்தொடங்கி விடயமும் போதமுங் காரணகாரியமாகாதெனக்கூற அதற்கு முதலிலே சகத்துக்குப் பிரமன் காரணமல்லவா வெனின் யாவுஞ் சத்தாமாத்திரமாயிருத்தலிற் காரணமாகாதெனல்.

என்றலுமே யாதிமுத லுள்ளவேதா வியற்றியபல்படைப்பாகு மிந்தஞால, நின்றவ னிதற்குக்கா ரணமல்லாத நெறியே தென் வலு ங்கும்ப னிகழ்த்துகிற்பான், றுன்றுசிருட் டியின்முன்பு வெறிதாய்ச் சாந்தந் தொடர்பிரம மேயுளதாய்த் துலங்குமந்த, வொன்றொழிய விரண்டில்லாக் காரணத்தா லுயர்வேதாக் காரணத்தை யுறானென் றோத.

இ-ள். என்றலும்-அப்படியென்று கும்பமுனிசொல்லவும், இந்தஞாலம்-இச்சகத்து, ஆதிமுதலுள்ளவேதா - முதன்மையாயிருக்கின்ற பிரமன், இயற்றிய-உண்டாகிய, பல்படைப்பாகும் - பலசிருட்டியாகிய, இந்தஞால நின்றனை-இச்சகமிருந்தன, அவன் - அந்தபிரமன், இதற்குக்காரணமல்லாத-இச்சகத்துக்குக் காரணமல்லாத, நெறியேதென்றலும் - மார்க்கமெதுவென்றாசன்கேட்கவும், கும்பனிகழ்த்துகிற்பான் - கும்பமுனிசொல்லுவார், துன்றுசிருட்டியின்முன்பு - நெருங்கியசிருட்டிக்கு முன்னே, வெறிதாய் - கேவலமாய், சாந்தந்தொடர்பிரமமே- உபசாந்தமாகியபிரமஸ்வரூபமே உளதாய்த் துலங்கும் - சத்தாய்ப்பிரகாசிக்கும், அந்தவொன்றொழிய-அவ்வொன்றைத் தவிர, இரண்டில்லாக்காரணத்தால் - இரண்டில்லாதகாரணத்தினால், உயர் வேத-மேலானபிரமாவும், காரணத்தையுறான் - காரணத்தையடையான், என்றோத-என்றுசொல்ல—எ-று.

எ-து. இப்படியென்று கும்பமுனிசொல்லவும், இச்சகத்து முதன்மையா யிருக்கின்ற பிரமனுண்டாக்கிய பலசிருட்டியாகியஇச் சகமிருந்தன, அந்தப்பிரம னிச்சகத்துக்குக் காரணமல்லதா மார்க்கமெதுவென் றாசன்கேட்கவும், கும்பமுனிசொல்லுவார். நெருங்கிய சிருட்டிக்கு முன்னே கேவலமாய் உபசாந்தமாகிய பிரமஸ்வரூபமே சத்தாய் பிரகாசிக்கும். அவ்வொன்றைத்தவிர விரண்டில்லாத காரணத்தினால் மேலான பிரமாவுங் காரணத்தை யடையானென்று சொல்ல—எ—ம். (147)

## அங்ஙனமாயின் பிரமனுக்குப் பிரசங்காரணமன்றோ வெனில் அஃது மில்லையெனல்.

காவலன்பார்த் துயர்பிரமம் வேதாவுக்குக் காரணமன் றோவெ ன்னக் கும்பன்சொல்வான், கேவலமாகச் சுதமநந்தஞ் சாந்தஞ்சுத்த ங்கேடுபிறப் பிடர்தோற்றங் கிட்டாதென்றும், பாவனையற் றடிமுடி வற்றொன்றாய்த்துன்றிப் பகர்வரிதாய்ப் நாடறிதாய்ப் பரமநிற்குந், தாவரிய வதுவெங்ங னேதுவெத்தாற் சமைப்பவனுய்ப்புசிப்பவனுய் ச்சாருமாறே.

இ - ள். காவலன்பார்த்து - அரசன்கும்ப முனியை நோக்கி, உயர்பிரமம் - மேலானபிரமமானது, வேதாவுக்கு - பிரமாவுக்கு, காரணமன்றோவென்ன - காரணமல்லவா வென்றுகேட்க, கும்பன்சொல்வான் - கும்பமுனி சொல்லுவார், கேவலம் - கைவல்யமாகியும், அச்சுதம் - கெடாததாகியும், அநந்தம் - அளவில்லாததாகியும், சாந்தம் - உபசாந்தமாகியும், சுத்தம் - பரிசுத்தமாகியும், கேடு - இறத்தலும், பிறப்பு - சனித்தலும், இடர் - துன்பமும், தோற்றம் வியத்தமும், என்றும் - எப்போதும், கிட்டாது - நெருங்காமல், பாவனையற்று - பாவமிறந்து, அடிமுடிவற்று - ஆதியந்தமிறந்து, ஒன்றாய்த்துன்றி - அத்துவிதமாகநிறைந்து, பகர்வரிதாய் - நாடரிதாய், வசனாதீதமாகியும் - சிந்தனாதீதமாகியுமிருக்கின்ற, பரமநிற்கும் - பிரமஸ்வரூபமிருக்கும், தாவரியவதுவெங்ஙனேது - அரிதற்கரியவப்பிரம மெப்படிகாரணமாம், எத்தால் - யாதினால், சமைப்பவனுய்ப் புசிப்பவனுய்ச் சாருமாறு - கருத்தாவாகியும் போக்தாவாகியுஞ் சேரும்விதம் — எ - று.

இ - ள். அரசன் கும்பமுனியைநோக்கி 'மேலான பிரமமானது பிரமாவுக்குக் காரணமல்லவாவென்று கேட்கக் கும்பமுனி சொல்லுவார் கைவல்யமாகியும், கெடாததாகியும், அளவில்லாததாகியும், உபசாந்தமாகியும் பரிசுத்தமாகியும், இறந்தலுஞ் சனித்தலும், துன்பமும் வியத்தமுமெப்போதும் நெருங்காமற் பாவமிறந்து ஆதியந்தமிறந்து, அத்துவிதமாக நிறைந்து, நாடரிதாய்ச் சிந்தனாதீதமாகியு மிருக்கின்ற பிரமஸ்வரூபமிருக்கும். அறிதற்கரிய அப்பிரமமெப்படிகாரணமாம்? யாதினாற் கருத்தாவாகியும் போக்தாவாகியுஞ் சேரும்விதம்? — எ - ம். (148)

## சர்வம் பிரமமயமெனல்.

ஆதலினு லீதோன்றுஞ் செய்ததல்ல வடுத்துளவிச் சகமில்லை யறிவுமட்டு, மேதகுசங் கற்பிதமே வேதாவாகு மெய்யாகவறிவன்றி வேறொன்றில்லைச், சேதனமாத் திரத்துதித்த சிருட்டியந்தச் சேத

னமே வடிவென்று செப்பலாகு, மோதியசெய் வோன்புசிப்போ னிரண்டுமல்ல னுறுபவந்தீர் பிரமமே யுள்ளவெல்லாம்.

இ- ள். ஆதலினால்-ஆகையினால், ஈது - இச்சகம், ஒன்றுஞ்செய்தல்ல- எவ்வளவும் பண்ணப்பட்டதன்று, அடுத்துள - சேர்ந்திருக்கின்ற, இச்சக மில்லை - இவ்வுலக முண்டானது மில்லை, அறிவுமட்டும் - சித்துமாத்திரத் தின், மேதருசங்கற்பிதமே - மேன்மையான சங்கற்பமே, வேதாவாகும் - பிரமாவாகும், மெய்யாக - உண்மையாக, அறிவன்றி - ஞானத்தைத்தவிர, வேறொன்றில்லை - வேறேயொன்றுமில்லை, சேதனமாத்திரத்து - ஞானமாத் திரத்தில், உதித்தசிருட்டி - உண்டான சிருட்டியானது, அந்தச் சேதனமே வடிவென்று - அந்தஞானமேஸ்வரூபமென்று, செப்பலாகும்-சொல்லப்படும், உள்ளவெல்லாம்-இருக்கின்ற சகலமும், உறுபவந்தீர்பிரமமே - பொருந்திய சநநந்தீர்ந்த பிரமஸ்வரூபமே (யாதலால்) ஓதியசெய்வோன் - சொல்லப்பட்ட கருத்தாவும், புசிப்போன் - போக்தாவும், இரண்டுமல்லன் - இவ்விரண்டு மல்லாத—எ-று.

எ — து. ஆகையினால் இச்சக மெவ்வளவும் பண்ணப்பட்ட தன்று. சேர்ந்திருக்கின்ற இவ்வுலகமுண்டானதுமில்லை. சித்து மாத் திரத்தின் மேன்மையான சங்கற்பமே பிரமாவாகும். உண்மையாக ஞானத்தைத்தவிர வேறேயொன்றுமில்லை. ஞானமாத்திரத்தி லுண் டான சிருஷ்டியானது அந்தஞானமே ஸ்வரூபமென்று சொல்லப் படும். இருக்கின்ற சகலமும் பொருந்திய சநநந்தீர்ந்த பிரமஸ்வரூ பமே யாதலால் சொல்லப்பட்ட கருத்தாவும் போக்தாவும் இவ்விர ண்டு மல்லாதவன்—எ-ம்

(இ-ங-க-ம்.) பிரமப்ரதிபாமாத்திரமாய்ச் சகத்துவிளக்குதலாற் சகமே யில்லை இங்ஙனமாம்போ தெங்ஙனங்காரியமா யிங்ஙனங்காரிய மாகாத போது பிரமமெங்ஙனங் காரணமாவ னிவர்க்குக்காரணம் பிரமமென்று லது சுசாதியம் விசாதியஞ் சுகதபேதமறத் தானேதானாய் விளங்குதலி னெங்ஙனங்காரணமாமாதலாக் காரணகாரியமின்றிச் சின்மாத்திரமே விள ங்குமெதன வசிபதவருத்தத்தைத் தரிசிப்பித்ததாம். (49)

## சர்வம பிரமயமமென்னு மனுபவதிருஷ்டியா அஞ்ஞானங் கெடுமெனல்.

திடமுறநிச் சயத்துள்ளே யஞ்ஞானத்தைச் சிதைவித்த லஞ் ஞானஞ் சிதைந்ததேயாம், படர்கருமச் சிதைவினு லன்றி மோகம் படாநிலைமை கழுவாது பகாஞ்ஞான, மடைவுறத்தேய்ந்திடிற்பழைய

நிலைமைநீங்கா வாதிபத மாமதனு லாதிதேவன், றடமுறுசிற் சுருபத்தாற் றன்மனத்தாற் றானேநித் தலுஞ்சிருட்டி தந்துநல்கும்.

இ - ள். திடமுறநிச்சயித்து - உறுதியாக நிச்சயஞ்செய்து, உள்ளஞ் ஞானத்தைச் சிதைவித்தால் - அகத்தின்கண்ணுள்ள வறியாமையைக் கெடுப்பித்தால், அஞ்ஞானம் - அறியாமையானது, சிதைந்ததேயாம் - அழிந்ததேயாகும், படர்கருமச் சிதைவினாலன்றி - மிகுந்த கருமநாசத்தினாலல்லாமல், மோகம் பகர்நிலைமைவழுவாது - மயக்கமாகச்சொல்லிய நிச்சயம் வழுவாது, பகரஞ்ஞானம் - சொல்லப்பட்ட அஞ்ஞானமானது, அடைவுறத்தேந்திடில் - கிரமமாகாநசிக்கில், பழையநிலைமைநீங்கா - முன்னுள்ள சகத்தினிச்சயநீங்காமல், ஆதிபதமாம் - முதன்மையான பரமபதமாகும் அதனுலாதிதேவன் - அதனுன்முதற்கடவுளான பரமாத்மா, திடமுறுசிற்சுருபத்தால் - வியாபகமாகிய ஞானஸ்வரூபத்தினுல், தன்மனத்தாற்றான் - தன்மனதினுல், நித்தலுஞ் சிருட்டிதந்துநல்கும் - எப்போதுஞ்சிருஷ்டியைச்செய்யும் — எ-று.

எ - து. உறுதியாக நிச்சயஞ்செய்து அகத்தின் கண்ணுள்ள அறியாமையைக் கெடுப்பித்தால் அறியாமையான தழிந்ததேயாகும். மிகுந்த கருமநாசத்தினுலல்லாமல் மயக்கமாகச்சொல்லிய நிச்சயம் வழுவாது. சொல்லப்பட்ட அஞ்ஞானமானது கிரமமாக நசிக்கில் முன்னுள்ள சகத்தினிச்சயநீங்காமல் முதன்மையான பரமபதமாகும். அதனுன் முதற்கடவுளான பரமாத்மா வியாபகமாகிய ஞானஸ்வரூபத்தினுற் றன்மனதினு லெப்போதுஞ் சிருஷ்டியைச்செய்யும் - எ-ம்.

## அஞ்ஞான நீங்கி விளங்கிய ஸ்வாநுபூதியைக்கூறல்.

ஆற்றுமதத் துவமான வதனுற்றுனே யயனென்று சொலப்பட்ட தகிலமாகித், தோற்றுமிவை யுபசாந்தச் சுருபமாகுந் தோன்றலே யெனவொக்குஞ் சொன்னதெல்லா, மேற்றனவே படைப்பவனின் மையினுல்வைய மில்லையா மதனுற்பல் பொருளுக் கில்லைத், தேற்றுகின்ற விவ்வகையா லறிந்தேனன்றாய்ச் சிவமானேன் வேறொன்றுந் தெரியக்காணேன்.

இ - ள். ஆற்றுமதத்துவமானவதனுல் - ஆத்மதத்துவமாகியவதனுலே, அயனென்று - பிரமாவென்று, சொல்லப்பட்டது - சொல்லப்படுவது, அகிலமாகி - எல்லாமாய், தோற்றுமிவை - காணப்பட்ட - இச்சகங்கள், உபசாந்தச் சுருபமாகும் - உபசாந்தஸ்வரூபமேயாகும், தோன்றலேயென - அரசனேயென்று, சொன்னதெல்லாம் - (கும்பமுனி) யுபதேசித்தவனைத்தும், ஒக்கும் -

லொப்பேயாகும், ஏற்றனவே - (சிருட்டிக்கு) முன்னமே, படைப்பவன் - சிருட்டிப்பவன், இன்மையினால்-இல்லாததினால், வையமில்லையாம் - சகமில்லையாகும், அதனால்-அதினாலே, பல்பொருளுக்கில்லை - பலவானபதார்த்த திருஷ்டியுமில்லை, தேற்றுகின்ற-தெளிவிக்கின்ற, இவ்வகையால் - இந்த பிரகாரத்தினால், நன்றாய்-நன்றாக, அறிந்தேன் - தெரிந்தேன், சிவமானேன்-சிவஸ்ரூபமானேன், வேறொன்றும் - மற்றொன்றும், தெரியக்காணேன்-தோற்றப்பார்த்திலன்——எ-று.

எ - து. ஆத்மதத்துவமாகிய அதனாலே பிரமமென்று சொல்லப்படுவது எல்லாமாய் காணப்பட்ட இச்சகங்களுபசாந்த ஸ்வரூபமேயாகும், அரசனே யென்று கும்பமுனி யுபதேசித்த அனைத்துமொப்பேயாகும். சிருட்டிக்கு முன்னமே சிருட்டிப்பவனில்லாதலினாற் சகமில்லையாகும், அதினாலே பலவானபதார்த்த திருஷ்டியில்லை, தெளிவிக்கின்ற இந்த ப்ரகாரத்தில் நன்றாகத் தெரிந்தேன்; சிவஸ்வரூபமானேன்; மற்றொன்றுந் தோற்றப்பார்த்திலன்——எ-ம்.

(இ-உ-க-ம்) பிரமமே பிரமனைப்போலவும் பிரபஞ்சம்போலவுந் தோற்றியதேயன்றி வேறின்றென்னு மனுபவத்தினால் அஞ்ஞானங்கெடுமெனப் போதிக்க முன்னமே யாதோசரமான பிரம மாத்திரமாய் விளங்குதலி அம்மெனனக் காரணமாகுதுகாரண மாகாததோது சகமெப்படி காரியப்படுமன்றியபோ ததையறியும்போத மெய்யனமுண்டா மன்றியபோ ததையாவனனு மகம்பாவ மெய்யனமுண்டா மன்றிய போதமதைச் சிந்திக்குஞ் சித்தமெய்யன முண்டாமதலாற் சர்வம் பிரமமென்னுந் திருஷ்டியாற் சர்வமில்லாமற்போனதா லஞ்ஞானநீங்கிச் சிவஸ்வரூபமாய் விளங்குகின்றேனென்பதாம். (151)

இவ்வனுபவஞ் சமாதிகூடிச் சகசத்திலாளவேண்டு
நிமித்தஞ் சின்மயமாய் நிற்கின்றேனென்றவனை
நெடுநாளாயுள்ள விடயபழக்கமிதனால்
சிலநாளினீங்கிச் சின்மாத்திரமாய் விளங்குவாயெனல்.

---

எனைத்தொழுதேன் பல்பொருளைக் கறிவினாலே யிப்படிபொய்யாய்த்தோன்றிற் றிப்போதத்தா, வினைப்பிலுபசாந்தமாய் விசும்பினைப்போ னிற்கின்றே னெனநிருப னிகழ்த்தலோடுந், தனைத்தருகும் பனுஞ்சொலிவான் றேசகாலந் தடைத்திசைச்சிந் தனைத்தொழில்கள் சார்ந்தவெல்லா, மனைத்தையுங்கான் பதுசகத்தைப் பிரித்துக்காண்கை யதுநெடுநாளிற்சாந்த மாகிப்போகும்.

இ - ள். எனைத்தொழுதேன் - ஆத்மாவைவணங்கினேன், பல்பொருள் பலபதார்த்தங்களை, நோக்கவறிவினால் - பார்க்கின்ற அறிவினால், இப்படி பொய்யாய்த்தோன்றிற்று - இங்ஙனமசத்தியமாய்த் தோற்றினதென்றறிந்தது, இப்போதத்தால் - இந்தஞானத்தினால், நினைப்பிலுபசாந்தமாய் - சிந்தனையற்றவுபசாந்தமாகி, விசும்பினைப்போல் - ஆகாயத்தைப்போல, நிற்கின்றேனென - (பூரணமா) யிருக்கின்றேனென்று, நிருபன் - அரசனானவன், நிகழ்த்தலோடும்-சொல்லவும் தனைத்தரு-ஆத்மாவைக்கொடுக்கின்ற, கும்பனுஞ்சொல்வான்-கும்பமுனியுஞ்சொல்லுவார், தேசம் - தேசமும், காலம் - காலமும், தடந்திசை - விசாலமாகியதிக்குகளும், சிந்தனைத்தொழில்கள்-மனச்செயல்களும், சார்ந்தவெல்லாம் - அடைந்த சகலமும், அனைத்தையுங்காண்பது-யாவையும்பார்ப்பது, சகத்தை - உலகத்தை, பிரித்துக்காண்கை-பகுத்துப்பார்ப்பதாம், அதுநெடுநாளில் - அப்பிரிவு வெகுகாலமாயுள்ளது, (சிலநாளில்) சாந்தமாகிப்போகும் - விடுபட்டுப்போகும்—எ-ம்.

எ - து. ஆத்மாவை வணங்கினேன், பல பதார்த்தங்களைப் பார்க்கின்றவறிவினால் இங்ஙனமசத்தியமாய்த் தோற்றினதென்றறிந்தது. இந்தஞானத்தினாற் சிந்தனையற்ற வுபசாந்தமாகி ஆகாயத்தைப் போலப் பூரணமாயிருக்கின்றேனென்று அரசனானவன் சொல்லவும், ஆத்மாவைக்கொடுக்கின்ற கும்பமுனியுஞ் சொல்லுவார். தேசமுங் காலமும், விசாலமாகிய திக்குகளும், மனச்செயல்களுமடைந்த சகலமும், யாவையும்பார்ப்ப துலகத்தைப் பகுத்தும்பார்ப்பதாம். அப்பிரிவு வெகுகாலமாயுள்ளது, சிலநாளில் விடுபட்டுப்போகும்—எ—ம்.

## முன்சிரவணமானபடி மனனஞ்செய்து நிதித்தியிற் காசுஷிப்பட்டானெனல்.



சாந்தமுற வழிவற்ற பிரமமாங்கே தனிநிற்கு மெனக்கும்பன் சாற்றலோடும், வேந்தனறிவுற்றுமிக விளங்கிநின்றான் வெம்மாயைக் குகைநின்று வெளியிலானு, ஞந்திறமே பணதியறக் கும்பன்சொன்ன வதுகுறித்துத் தனதாமித் தற்பதத்தே, காந்தியுறச் சேர்ந்தொளித்தான் மனமுங்கண்ணுங் கட்டுரையற் றுனிறைந்தான் கணத்திலாங்கே.

இ - ள். சாந்தமுற-உபசாந்தமடைய, அழிவற்றபிரமம் - நாசமில்லாத பிரமமானது, ஆங்கேதனிநிற்குமென-அவ்விடத்திற் றனிமையாயிருக்குமென்று, கும்பன்சாற்றலோடும்-கும்பமுனிசொல்லவும், வேந்தன் - அரசனானவன், அறிவுற்று - ஞானத்தையடைந்து, மிக விளங்கிநின்றான் - மிகவும் பிரகாசித்திருந்தான், வெம்மாயைக் குகைநின்று - கொடிய மாயாக்கிரகத்து

விருந்து, வெளியிலானுன்-வெளிப்பட்டான், ஆந்திறமே-அப்படியே, பணதியற - கற்பனைநீங்கும்படி, கும்பன்சொன்ன - கும்பமுனியருள்செய்த, அது குறித்து-அதைக்கருதி, தனதாயித்தற்பதத்து-தனதாகிய இப்பிரமபதத்தில் காந்தியுற-பிரகாசமாக, சேர்ந்தொளித்தான் - சேர்ந்தடங்கினுன், மனமும்-மனதையும், கண்ணும் - பார்வையையும், கட்டுரை-சிகுவசனத்தையும், அற்றான் - நீங்கினவன், கணத்தில் - ஒருக்ஷணத்தில், ஆங்கு - அந்தப்பிரமபதத்தில், நிறைந்தான் - பூரணமானுன்—எ-று.

எ - து. உபசாந்தமடைய நாசமில்லாத பிரமமான தவ்விடத்திற் றனிமையாயிருக்குமென்று கும்பமுனிசொல்லவும், அரசனுனவன் ஞானத்தையடைந்து மிகவும் பிரகாசித்திருந்தான். கொடிய மாயாக்கிரகத்திலிருந்து வெளிப்பட்டான். அப்படியே கற்பனைநீங்கும்படி கும்பமுனி யருள்செய்வதைக் கருதித் தனதாகிய இப்பிரமபதத்திற் பிரகாசமாகச் சேர்ந்தடங்கினுன். மனதையும் பார்வையையும் சிகுவசனத்தையு நீங்கினவன் ஒருக்ஷத்தி அந்தப்பிரமபதத்திற் பூரணமானுன்—எ-ம்.

(இ-உ-க-ம்.) சந்தேகம் விபரீதமின்றி யாத்மஸ்ரூபத்தைத் தரிசித்தானென்பதாம். (153)

## நிதித்தியின் காக்ஷியிற் றுக்கநிவிர்த்தியுந் தடையற்ற ஆநந்தமுதலிய அனுபவமு முண்டாயிருக்குதோவென்று சிரியரனுபவம் வினவுதல்.

ஒருமுகுர்த்த மிருந்துணர்ந்துவிழித்தலோடு முயர்கும்பனுரைசெய்வா னுளதாய்நன்றாய் நிருமலமாய்ச்சுத்தமாய்மிகமெற்றென்று நிருவிகற்பங் களுக்கெல்ல நிலையமாகித், திருமிகுமிப் பதத்திலே சுகமாய்த்துன்பந் தீர்ந்தனையோ வுள்ளுணர்வு தெளிவுற்றாயோ, வருமயக்க மொழிந்தனையோ ஞேயநன்றா யறிந்தனையோ காண்பனகண்டனையோ வென்றான்.

இ - ள். ஒருமுகுர்த்தமிருந்துணர்ந்து - இருகடிகைநிதித்தியிலிருந்தறிந்து, விழித்தலோடும் - (அரசன்) விழித்தமாத்திரத்தில், உயர்கும்பனுரைசெய்வான் - மேலானகும்பமுனிசொல்லுவார், உளதாய் - உள்ளதாகியும், நன்றாய் - நன்றாகியும், நிருமலமாய் - நிருமலமாகியும், சுத்தமாய் - பரிசுத்தமாகியும், மிகமெற்றென்று - மிகவுமிருதுவாகியும், நிருவிகற்பங்களுக்கெல்லாம் - நிருவிகற்பங்களனைத்திலுக்கும், நிலையமாகி - நிலமையாகியுமிருக்கின்ற, திருமிகும் - செல்வமிகுந்த, இப்பதத்தில் - இந்தப்பிரமபதத்தில், சுகமாய் - ஆநந்தமாகி, துன்பந்தீர்ந்தனையோ - துக்கநீங்கினுயோ, உள்ளுணர்வு ஆத்மஞானத்தில், தெளிவுற்றாயோ - தெளியடைந்தாயே, வருமயக்க

மொழிந்தனையோ - வாராநின்ற பிரமை நீங்கினையோ, ஞேயமன்றாயறிந் தனையோ - அறியத்தக்கதை நன்றாயறிந்தாயோ, காண்பனகண்டனையோ வென்றான் - பார்க்கவேண்டியதைப் பார்த்தாயோவென்றுகேட்டார்—எ-று.

எ - து. இருகடிகை நிதித்தியிலிருந்தறிந்து அரசன்விழித்த மாத்திரத்தில் மேலான கும்பமுனி சொல்லுவார். உள்ளதாகியும், நன்றாகியும், நிருமலமாகியும், பரிசுத்தமாகியும், மிகவுமிருதுவாகியும் நிருவிகற்பங்க ளனைத்திலுக்கும் நிலையாகியுமிருக்கின்ற செல்வமிகு ந்த இந்தப் பிரமபதத்தி லாநந்தமாகி துக்கநீங்கினையோ? ஆத்மஞா னத்திற் றெளிவடைந்தாயோ? வாராநின்ற பிறமைநீங்கினையோ? அறி யத்தக்கதை நன்றா யறிந்தாயோ? பார்க்கவேண்டியதைப் பார்த்தா யோவென்றுகேட்டார்—எ—ம்.

## பெற்றவனுபூதியின் விலாசத்தைச்சொல்லுதல்.

நரபால னதற்குரைப்பான் பகவனேநின் னருளாலே பெருஞ் செல்ப நலத்தான்மிக்கும், வரமாகி யனைத்திற்கு மேலாய்விஞ்சு பவங் கண்டேன்கோவகோ பரமஞானந், திரமான பெரும்பெரியோர் கூட் டங்கிட்டாத் தெள்ளமுதாய்ப்பேரின்பந்தேங்கநல்கு, வரமாநின் கூட் டத்தா லொருகாலத்தும் வாராதநல்லமுது வரப்பெற்றேனால்.

இ - ள். நரபாலன் - அரசனானவன், அதற்குரைப்பான் - அதற்குச்சொ ல்லுவார், பகவானே -பகவானே, நின்னருளால் - உமது கிருபையினால், பெ ருஞ்செல்வநலத்தால் - மகாசம்பத்தாகியவின்பத்தினால், மிக்குயரமாகி - மிக வுமகத்தாகி, அனைத்திற்குமேலாய்-சகலத்துக்குமுயர்வாகி, விஞ்சுபதங்கண் டேன் - மிஞ்சியபரமபதத்தையறிந்தேன், அகோவகோ - ஆச்சரியமாச்சரி யம், பரமஞானந்திரமான - பிரமஞானத்தைத் திடமாகப்பெற்ற, பெரும் பெரியோர் - மகத்துக்கள், கூட்டங்கிட்டா - குழாத்தையடைந்து, தெள்ள முதாய்ப்பேரின்பந்தேங்கநல்கும் - தெளிவான அமிர்தாய்ப் பேராநந்தத்தை நிறையக்கொடுக்கின்ற, வரமாநின்கூட்டத்தால் - வரமாகிய வுமது சங்கத்தி னால், ஒருகாலத்தும்வாராதநல்லமுது - ஒருபொழுதுங்கிடையாத பராவமு தத்தை, வரப்பெற்றேன் - அடையப்பெற்றேன்—எ-று.

எ - து. அரசனானவன் அதற்குச்சொல்லுவார் பகவானே! உமது கிருபையினால் மகாசம்பத்தாகிய இன்பத்தினால் மிகவுமகத்தாகி சக லத்துக்கு முயர்வாகி மிஞ்சிய பரமபதத்தை யறிந்தேன. ஆச்சரிய மாச்சரியம்! பிரமஞானத்தைத் திடமாகப்பெற்ற மகத்துக்கள்

குழாத்தைய‌டைந்து தெளிவானவமுதமாய்ப்போராநந்தத்தை நிறைய‌க்கொடுக்கின்றவரமாகிய உமதுசங்கத்தினுலொருபொழுதுங்கிடையாத பராவமுதத்தை யடையப்பெற்றேன்—எ-ம். (155)

## சென்றகாலத்துக்கிரங்கி விளைவுதலுக் குத்தாங்கூறல்.

---

அனந்தமா மிவ்வமுத மெனக்குமுன்னு ளரிதான தென்னவெனக் கும்பன்சொல்வான், மனந்தனிலே சாந்தியாய்ப் போகங்கைத்து வன்பொறிமீண் டுளமட்டமை மாய்ந்தபோதே, புனந்தருசெங் குசும்பைநீ ரழுக்குப்போன புடவையிலே நிறமுறல்போற் புதல்வர் நெஞ்சிற், கனந்தருநற் குருவசனங் கலந்துநன்றாய் காயமலங் களுமரத்தின் காய்கள்போற்போம்.

இ-ள். அனந்தமாம் - அளவில்லாததாகிய, இவ்வமுதம் - இந்தப்பராவமுதமானது, எனக்கு - அடியேனுக்கு, முன்னுள் - பூர்வத்தில், அரிதான தென்னவென - அரியதானதென்னவென்றாசன்கேட்க, கும்பன்சொல்வான் - கும்பமுனி சொல்லுவார், மனந்தனிலேசாந்தியாய் - மனதிற்சாந்தமடைந்து, போகங்கைத்து - போகத்திற்கசப்புவந்து, வன்பொறி மீண்டு - வலியவிந்திரியங்களகத்திற்றிரும்பி, உளமட்டமைமாய்ந்தபோதே - மனவஞ்ஞான நசித்தபோதே, புனந்தரு - வனத்திலுண்டாகும், செங்குசும்பைநீர் - சிவந்தகுசும்பாசலமானது, அழுக்குப்போன புடவையில் - களங்கமற்றவஸ்திரத்தில், நிறமுறல்போல் - ஒளியடைவதுபோல, புதல்வர்நெஞ்சில் - சீடனுடையமனதில், கனந்தரும் - மேன்மையான, நற்குருவசனம் - சற்குருவாக்கியம், கலந்துநன்றாம் - கலந்துநன்மையாகும், காயமலங்களும் - தேகத்திலுள்ள களங்கங்களும், மரத்தின்காய்கள்போல் - விருட்சத்தினது கனிகளைப்போல, போம் - நழுவிப்போகும்—எ-று.

எ — து. அளவில்லாததாகிய இந்தப்பராவமுதமான தடியேனுக்குப் பூர்வத்திலரிதானதென்னவென் றாசன்கேட்கக் கும்பமுனி சொல்லுவார். மனதிற் சாந்தமடைந்து போகத்திற் கசப்புவந்து வலியவிந்திரியங்களகத்திற்றிரும்பி மனவஞ்ஞான நசித்தபோதே வனத்திலுண்டாகுஞ் சிவந்த குசும்பாசலமானது களங்கமற்ற வஸ்திரத்தி லொளிவடைவதுபோலச் சீடனுடையமனதில் மேன்மையான சற்குருவாக்கியங் கலந்து நன்மையாகும். தேகத்திலுள்ள களங்கங்களும் விருட்சத்தினது கனிகளைப்போல நழுவிப்போகும்-எ-ம்.

## இங்ஙனம்பெற்ற வனுபவப்படி ஸ்திரமாய் நிற்பாயெனல்.

உள்ளத்தி லிருமையென வொருமையென்ன வுன்னுதலஞ் ஞானமிவை யொழிதன்ஞானந், தெள்ளுற்றகதியுமது தெளிந்து முத்தி சேர்ந்தனைசித் தமும்விட்டாய் செல்வனாகித், தள்ளுற்ற மல நீங்கி மௌனியாகித் தனிநிற்பா யென்றலுமே தமையுணர்ந்தோர், கொள்ளுற்ற தொழிலெல்லா மனத்ததன்றோ கொள்மனமன் றியினடக்குங் கொள்கையென்னே.

இ-ள். உள்ளத்தில்-மனதில் இருமையென - இரண்டென்றும், ஒருமையென்ன-ஒன்றென்றும், உன்னுதலஞ்ஞானம் - நினைத்தலே அஞ்ஞானமாம், இவையொழி தன்ஞானம்-இவ்விரண்டுநீங்குதலேஞானமாகும், தெள்ளுற்றகதியுமது - தெளிவானபாகதியுமதுவேயாகும், தெளிந்துமுத்திசேர்ந்தனை-தெளிவுற்றுமோக்ஷத்தையடைந்தாய், சித்தமுமவிட்டாய் - மனதையுந்தவிர்த்தாய், செல்வனாகி - (ஞான) சம்பத்தையுடையவனாய், தள்ளுற்ற மலநீங்கி-தள்ளப்பட்ட களங்கத்தைவிட்டு, மௌனியாகி - மகாமவுனியாய், தனிநிற்பாயென்றலும்-தனித்திருப்பாயென்று, கும்பமுனிசொல்லவும், தமையுணர்ந்தோர் - சீவன்முத்தர்கள், கொள்ளுற்றதொழிலெல்லாம்-கொள்ளப்பட்டசெயல்களனைத்தும், மனத்ததன்றோ-மனநிலல்லவா, கொள்மனமன்றியில் கொள்ளப்பட்டமனதையன்றி, நடக்குங் கொள்கையென்னே-நடக்குந்தன்மையாது—எ-று.

எ - து. மனதிலிரண்டென்றும் ஒன்றென்றும் நினைத்தலே யஞ்ஞானமாம். இவ்விரண்டு நீங்குதலே ஞானமாகும். தெளிவான பாகதியு மதுவேயாகும். தெளிவுற்று மோக்ஷத்தை யடைந்தாய் மனதையுந் தவிர்த்தாய், ஞானசம்பத்தை யுடையவனாய்த் தள்ளப்பட்ட களங்கத்தைவிட்டு மகாமவுனியாய்த் தனித்திருப்பாயென்று கும்பமுனி சொல்லவும்; சீவன்முத்தர்கள் கொள்ளப்பட்ட செயல்களனைத்து மனநிலல்லவா? கொள்ளப்பட்ட மனதையன்றி நடக்குந்தன்மையானது—எ-ம். (157)

## சமாதியிற் றியானிக்தன்முதலிய தொழின் மனதையன்றி யெங்ஙனங்கூடுமெனில் அதற்குத்தரங்கூறல்.

உரையெனமன் னவன்கேட்பக் கும்பன்சொல்வா னுளமென்று சொன்னதுவே ரென்றுமன்று. கரையறுபல் பவந்தருவா தனை யேவுள்ளங் கண்டதனை யறிந்தாலக் கவலையில்லை, வரையறக்கண் டவர்கருமங் களிற்சரிக்கும் வாதனைதான் மறுபிறப்பை வழங்கா

தந்தப், புரைமனஞ்சத் துவவென்பர் சித்தமென்று பேதமில்லாச் சித்தத்தைப் புகல்வான்றே.

இ - ள். உரையென - சொல்லவேண்டுமென்று, மன்னவன்கேட்ப - அரசனானவன்கேட்க, கும்பன்சொல்வான் - கும்பமுனிசொல்லுவார், உளமென்றுசொன்னது - மனமென்றுசொல்லியது, வேறொன்றுமன்று - மற்றொன்றுமல்ல, கரையறுபல்பவந்தரு - அளவற்ற சநநங்களைக்கொடுக்கின்ற, வாதனையேயுள்ளம் - வாசனையேமனமாம், கண்டதனையறிந்தால் - காணப்பட்ட தன்னைத்தெரிந்துகொண்டால், அக்கவலையில்லை - அந்தவச்சமில்லை, வரையறக்கண்டவர் - தடையறப்பார்த்தவர்கள், கருமங்களிற்சரிக்கும் - கருமங்களிற் சஞ்சரிக்கின்ற, வாதனைதான் மறுபிறப்பைவழங்காது - அந்தவாசனை மறுபவத்தைக்கொடாது, அந்தப்புரைமனம் - அவ்வுயர்வுள்ளமனதை, சத்துவமென்பர் - சாத்துவிதமென்று சொல்லுவார்கள், போதமில்லாச்சித்தத்தை - ஞானமில்லாதமனதை, சித்தமென்றுபுகல்வர் - மனமென்றுரைப்பர்.

எ - று. சொல்லவேண்டுமென்று அரசனானவன்கேட்கக்கும்பமுனிசொல்லுவார். மனமென்றுசொல்லியது மற்றொன்றுமல்ல. அளவற்ற சநநங்களைக்கொடுக்கின்ற வாசனையே மனமாம். காணப்பட்ட தன்னைத்தெரிந்துக்கொண்டால் அந்தவச்சமில்லை, தடையறப்பார்த்தவர்கள்கருமங்களிற்சஞ்சரிக்கின்றஅந்தவாசனை மறுபவத்தைக்கொடாது. அவ்வுயர்வுள்ள மனதைச் சாத்துவிதமென்று சொல்லுவார்கள். ஞானமில்லாதமனதை மனமென்றுரைப்பர்—எ-ம். (158)

இதுவுமது.

ஞானமனஞ் சத்துவமே யென்றுசொல்வர் ஞானமிலாதார் சித்த நடையினிற்ப, ரீனமறு ஞானிகள்சத்துவத்தேநிற்ப ரேதொன்று சுவர்க்கம்வீ டெல்லாநல்கு, மானவையெல் லாம்விட்டுச் சமமாஞ்சோதி யானூலை தாகுதியிங் கதுவேயாகு, மூனமுறு பொருளொன்றுங் கைக்கொளாமலுள்ளமசை வறநிற்பா யுறுதியாக.

இ - ள். ஞானமனம் - ஞானமுள்ளமனதை, சத்துவமே யென்றுசொல்வர் - சாத்துவிதமேயென்று சொல்லுவார்கள், ஞானமிலாதார் - ஞானமில்லாதவர்கள், சித்தநடையினிற்பர் - மனநடையிலிருப்பார்கள், ஈனமறு ஞானிகள் - குற்றமற்ற ஞானவான்கள், சத்துவத்தேநிற்பர் - சாத்துவிதத்திலிருப்பார்கள், ஏதொன்று - யாதொன்று, சுவர்க்கம்வீடு - சுவர்க்கமுமோக்ஷமுமாகிய, எல்லாநல்கும் - இவைகளனைத்தையுங் கொடுக்கின்றதோ,

ஆனவையெல்லாவிட்டு - ஆகியவச்சகலத்தையுந்தள்ளி, சமமாஞ்சோதியானால் - சமமமான சுயம் பிரகாசமானால், எதாகுதி - ஏதாகின்றாயோ, இங்கு- இவ்விடத்தில், அதுநீயாகும் - அதுவேயுனது ஸ்வரூபமாகும், ஊனமுறு பொருள் - ஈனமாகியபதார்த்தங்கள், ஒன்றுங்கைக்கொள்ளாமல் - ஒன்றையுங் கைவசப்படுத்தாமல். உன்னமசைவற - மனோசலனமில்லாமல், உறுதியாக - திடமாக, இருப்பாய் - இருப்பாய்—எ-று.

எ — அ. ஞானமுள்ள மனதைச் சாத்துவிகமேயென்றுசொல்லுவார்கள். ஞானமில்லாதவர்கள் மனதிநடையிலிருப்பார்கள். குற்றமற்ற ஞானவான்கள் சாத்துவிகத்தி லிருப்பார்கள். யாதொன்று சுவர்க்கமு மோக்ஷமுமாகிய இவைகளனைத்தையுங் கொடுக்கின்றதோ! ஆகிய வச்சகலத்தையுந் தள்ளிச்சமமான சுயம் பிரகாசமானாலேதாகின்றாயோ! இவ்விடத்திலதுவே யுனது ஸ்வரூபமாகும். ஈனமாகிய பதார்த்தங்களொன்றையுங் கைவசப்படுத்தாமல் மனோசலன மில்லாமற் றிடமாகயிருப்பாய்—எ-ம்.

(இ-உ-ச-ம். வர்சுரூபமான மனமிரண்டு விதமா மவற்றுள் இராசததாமதத்துடன்கூடி வெளிமுகத்தில் அறிவின்மையாகச்செய்யுந்தொழிலாற் பவத்தைக் கொடுக்குமனதுக்கு மனமென்றுபேர், சத்துவத்துடன் கூடிய சுமுகத்தின் ஞானமயமாய்ச்செய்யுங்கிரியையான் முத்தியைக்கொடுக்கு மனதுக்கு மனமெனப் பெயரின்று மாதலால் அவ்விரண்டையு நீக்கி மகாவாக்கியார்த்தப்படி சலனசலனமின்றிச் சுயஞ்சோதியே நீயாய் விளங்குவா யென்பதாம்.

## பிரமத்திலுண்டான ஸ்புரணம் பிரமமாய் விளங்குதென்பதைக் கையாண்டஃதொருமையாய்ச் சமாதியடையு நிமித்தஞ் சலனுமின்றி யயிக்கியங்கூடும் விதம் எங்ஙனமெனி லதற்குத்தரங்கூறல்.

நெஞ்சிலா தவர்பிறவி நெடுந்தூரம்போ நீணிலத்திற் றுயரொன்று நேர்ந்ததல்ல, வஞ்சுமன மசைதலிலுண் டானதாகு மசைவசையா மைகளிரண்டு மயிக்கமாக்கிச், சஞ்சலமாற் றிச்சித்தாம் படிநில்லென்னத் தாணிபன்சொல் வானயிக்கஞ் சார்வதெங்ஙன், விஞ்சுமசை வசையாமை யிரண்டுமொன்றாய் விடும்படிசொல் லெனக்கும்பன் விளம்பலுற்றான்.

இ-ள். நெஞ்சிலாதவர்பிறவி - மனமில்லாதவர்கள்பவம், நெடுந்தூரம்போம் - வெகுதூரத்திற்செல்லும், நீணிலத்தில் - நீண்டபூமியில், துய

ரொன்று சேர்ந்ததல்ல-துன்பமானது சற்றுநேரிடாது, அஞ்சுமனம் - பயப்படுகின்றமனமானது, அசைதலிலுண்டானதாகும் - சஞ்சலத்திலுண்டானதாகும், அசைவு - அசைதலும், அசையாமைகள் - அசையாமைகளுமாகிய, இரண்டுமயிக்கமாக்கி - இரண்டையுமொன்றாக்கி, சஞ்சலமாற்றி - சஞ்சலத்தைக்கெடுத்து, சித்தாம்படி - ஞானமாகும்படிக்கு, நில்லென்ன - நிற்பாயென்று கும்பமுனிசொல்ல, சாணியன் சொல்வான் - அரசன் சொல்லுவான், அயிக்கஞ்சார்வதெங்ஙன் - அயிக்கியமடைவதெப்படி, விஞ்சுமசைவு - மிகுந்தவசைவும், அசையாமை - அசையாமையும், இரண்டுமொன்றாய் - இரண்டுமொன்றாக, விடும்படிசொல்லெனை-நீங்கும்படி சொல்லுவாயென்றரசன்கேட்க, கும்பன்விளம்பலுற்றான் - கும்பமுனிசொல்லத்தொடங்கினார்—எ-று

எ - து மனமில்லாதவர்கள் பவம் வெகுதூரத்திற்செல்லும் நீண்டபூமியிற் றுன்பமானது சற்றுமேரிடாது, படுகின்றமனமானது சஞ்சலத்திலுண்டானதாகும். அசைதலும் அசையாமைகளுமாகிய இரண்டையுமொன்றாக்கிச் சஞ்சலத்தைக்கெடுத்து ஞானமாகும்படிக்கு நிற்பாயென்று கும்பமுனிசொல்ல, அரசன்சொல்லுவான், அயிக்கியமடைவதெப்படி? மிகுந்த அசைவும் அசையாமையு மிரண்டுமொன்றாகநீங்கும்படிச் சொல்லுவாயென்று அரசன்கேட்கக் கும்பமுனிசொல்லத்தொடங்கினார்—எ-ம். (160)

இதுவுமது.

உவரிநீர் போலுலகெல் லாமொன்றென வுணர்வுமாத்திரமதுதா
னுற்றபுந்திக், கவர்வுறுத லாலசையு நிறையுநீர்தான் கல்லோலத் தா
லசையுங்கணக்கேபோலச், சிவமுணர்வு மாத்திரமெய்ப்பிரமமாதித்
திரள்பெயராய்ப் புகல்பொருளைச் சகமென்றெண்ணித், தவமறுபே
தையர்காண்க ளறிவுதானே சற்றசைந்த மாத்திரத்தாற் சருக்கமுண்
டாம்.

இ - ள். உவரிநீர்போல் - சமுத்திரத்தின் சலத்தைப்போல, உலகெல்லாம் சகங்களனைத்தும், ஒன்றென-ஏகமாகிய, உணர்வுமாத்திரம்-சின்மாத்திரமேயாகும்; அதுதான் - அச்சின்மாத்திரமானது, உற்றபுந்தி-பொருந்தியபுத்தியை, கவர்வுறுதலால் - கிரகித்தலினால், நிறையுநீர்தான் - நிறைந்தசலமானது, கல்லோலத்தால்-பேரலையினால், அசையுங்கணக்கேபோல - அசைகின்ற தன்மையைப்போல, அசையும்-சஞ்சரிக்கும், சிவம் - சிவமும், உணர்வுமாத்திரம் - சின்மாத்திரமும், மெய்-சத்தியமும், பிரமமாதி-பிரமமுதலாகிய, திரள்பெயரால்-அநேகநாமங்களையுடையதாய், புகல்பொருளை-சொல்லிய பரவஸ்துவை, சகமென்றெண்ணி - உலகமென்று மதித்து, தவமறுபேதையர்

காண்பர்-நிஷ்டையற்ற மூடர்கள் பார்ப்பார்கள், அறிவுதான்-சித்தானது, சற்றசைந்தமாத்திரத்து-கொஞ்சமசைந்த மாத்திரத்தில், சருக்கமுண்டாம்-சகசிருட்டியுண்டாகும்—எ-று.

எ-து. சமுத்திரத்தின் சலத்தைப்போலச் சகங்ளனைத்தும் ஏகமாகிய சின்மாத்திரமேயாகும். அச்சின்மாத்திரமானது பொருந்திய புத்தியைக் கிரகித்தலினால் நிறைந்தசலமானது போலேயினால் அசைகின்ற தன்மையைப்போலச் சஞ்சரிக்கும். சிவமும், சின்மாத்திரமும், சத்தியமும், பிரமமுதலாகிய அநேகநாமங்களை யுடையதாய்ச் சொல்லிய பாவஸ்துவை யுலகமென்று மதித்து நிஷ்டையற்ற மூடர்கள் பார்ப்பார்கள். சித்தானது கொஞ்சமசைந்தமாத்திரத்திற் சகசிருட்டியுண்டாகும்—எ-ம். (161)

உண்டானசிருட்டிதானன்றுப்பார்க்கி லொழிந்துபோமுறுதியா யுணராவாற்றாற், கண்டார்கள் கயிற்றிலே பாம்பென்பார்போற்காட்சியுறுங் கலைநூலாற் கற்றோர்சார்வாற், றண்டாத பரிசாயத்தாற் சிலகாலத்திற் றூயமன நின்மலமாய்ச் சசிபோனிற்கிற், பண்டாயவனுபூதிமயமாய்த்தானே பாக்கியவான்களுக்கிந்தப் பார்வைதோன்றும்.

இ-ள். உண்டானசிருட்டிதான் - தோன்றினசகசிருட்டியை, நன்றாய்ப்பார்க்கில் - ஞானசுகமாகப்பார்த்தால், ஒழிந்துபோம்-அஃதிறந்துபோகும், உறுதியாய்-திடமாக, உணராவாற்றால் - அறியாததன்மையினால், கயிற்றில்-பழுதையில், பாம்பென்பார்போல் - சற்பமென்பவர்களைப்போல, கண்டார்கள்-திரிஸ்யமாகப்பார்த்தார்கள், காக்ஷியுறும் - பிரதயக்ஷமாகின்ற, கலைநூலால்-ஞானசாஸ்திரங்களினாலும், கற்றோர்சார்வால்-சாதுசங்கத்தினாலும், தண்டாதபரிசதத்தால் - தடையற்ற அற்பியாசத்தினாலும், சிலகாலத்தில்-சிலநாட்களில், தாயமனம் - பாயாநின்ற மனமானது, நின்மலமாய்-விமலமாக, சசிபோனிற்கில் - சந்திரனைப்போலநின்றால், பண்டாய பழமையான, அனுபூதிமயமாய்த்தானே - அனுபூதிமயமாகவே, பாக்கியவான்களுக்கு - ஞானசம்பத்துள்ளவர்களுக்கு, இந்தப்பார்வை தோன்றும் - இந்தத் திருஷ்டி தோற்றும்—எ-று.

எ-து. தோன்றின சகசிருட்டியை ஞானசுகமாகப்பார்த்தால் அஃதிறந்துபோகும். திடமாகவறியாததன் மையினாற் அழுதையில் சற்பமென்பவர்களைப் போலத் திரிஸ்யமாகப் பார்த்தார்கள். பிரத்யக்ஷமாகின்ற ஞானசாஸ்திரங்களினாலும், சாதுசங்கத்தினாலும், தடையற்ற வற்பியாசத்தினாலும், சிலநாட்களிற் பாயாநின்ற மனமானது விமலமாகச் சந்திரனைப்போல நின்றால் பழமையான

அநுபூதிமயமாகவே ஞானசம்பத்துள்ளவர்களுக் கிந்தத் திருஷ்டி தோற்றும்—எ-ம்.

(இ-ரு-க-ம்.) உததியும் புனலும்போலச் சுயஞ்சைதன்யமு மதன் ஸ்புரணமும் விளங்குவதேயன்றி வேறின்றெனக் காரணத்தைத் தரிசித்தது வாக நிற்கிற் காரியமுமதுவாகவிளங்கு மப்போது சலனசலனமின்றி யயிக்கிய மான நிருவிகற்பசமாதி கூடுமென்பதாம். (162)

சமாதியிற் றனது ஸ்வானுபூதியினின்று ஸ்புரிக்கின்ற
ஸ்புரணமெதிரிடாமற் றன்மயமாக்கிக் கொள்ளு
னச்சமாதியில்வைத் தஃது கூடு நிமித்தந்
தனியே வைக்க நினைத்தல் - வேறு.

உலகத னுதயநாச முண்மையை யுரைத்தேனித்தை
நலனுறச் செய்துநாடி நழுவுறு நயந்தவண்ணம்
விலகலற் றெதிர்ந்தவெல்லா மெய்ப்பதத் தாக்கிநிற்பாய்
திலகமாஞ் சொன்னநாடு சேர்வனுன் காலமீதே.

இ-ள். உலகதன்-சகத்தினுடைய, உதயநாசம் - உற்பத்திலயத்தின், உண்மையையுரைத்தேன் - தத்துவத்தைச்சொன்னேன், இத்தை - இந்தவருத்தத்தை, நலனுறச்செய்து-சுகமுண்டாக அற்பியாசித்து, நாடி - சிந்தித்து, நழுவுறு - வழுவாமல், நயந்தவண்ணம் - விரும்பியபடி, விலகற்று - நீங்குதலில்லாமல், எதிர்ந்தவெல்லாம் - நேரிட்டவனைத்தையும், மெய்ப்பதத்தாக்கிநிற்பாய் பிரமபதத்துக்காகச் செய்திருப்பாய், திலகமாம் - (சகலத்துக்குந்) திலதமாகிய, சொன்னநாடு-சுவர்க்கலோகத்தை, நான்சேர்வேன் - யானடைவேன், ஈதுகாலம்-இதுவேகாலமாம்—எ-று.

எ - து. சகத்திலுடைய உற்பத்தி லயத்தின் தத்துவத்தைச் சொன்னேன். இந்தவருத்தத்தைச் சுகமுண்டாக அற்பியாசித்துச் சிந்தித்து வழுவாமல் விரும்பியபடி நீங்குதலில்லாமல் நேரிட்டவனைத்தையும் பிரமபதத்துக்காகச் செய்திருப்பாய். சகலத்துக்குந திலதமாகிய சுவர்க்கலோகத்தை யானடைவே னிதுவேகாலமாம்—எ-ம்.

அயனுல கினும்பொன்னூடுற் றங்கெனைக் காணுனெண்ணிற்
பயமுற முனியுமெந்தை நாரதன் பரிந்தமைந்த
ருயர்குரு முனியப்பண்ண வொருசற்று மமாண்ணுமன்று
மயலறப் பேதநீக்கி மகிழ்ந்திதை நோக்கிநிற்பாய்.

இ - ள். அயனுலகினும்-சத்தியலோகத்தினின்றும், பொன்னூடுற்று - தெய்வலோகத்தை யடைந்து, அங்கு-அவ்விடத்தில், எனைக்காணு மென்னில்-என்னைப்பார்க்காணுயின், எந்தை-எனதுபிதாவாகிய, நாரதன் - நாரதமுனியானவர், பயமுறமுனியும்-பயப்படும்படிகோபிப்பார், பரிந்தமைந்தர்-அன்புள்ளசீடர், உயர்குரு-மேலானவாசிரியரை, முனியப்புண்ணு - கோபம்வரும்படிசெய்ய, ஒருசற்றுமொண்ணு - எவ்வளவுங்கூடாது, மன்னு - அரசனே, மயலற-மயக்கமில்லாமல், பேதநீக்கி - வேற்றுமையைக்கெடுத்து, மகிழ்ந்து-சந்தோஷித்து, இதைநோக்கிநிற்பாய் - இந்தத்திருட்டியிலிருப்பாயென்று கும்பமுனிசொன்னர்—எ-று.

எ - து. சத்தியலோகத்தினின்றுந் தெய்வலோகத்தை யடைந்து அவ்விடத்தி லென்னைப் பார்க்காணுயின், எனதுபிதாவாகிய நாரதமுனியானவர் பயப்படும்படிக் கோபிப்பார். அன்புள்ளசீடர் மேலான ஆசாரியரைக் கோபம்வரும்படிசெய்யஎவ்வளவுங்கூடாது. அரசனே! மயக்கமில்லாமல் வேற்றுமையைக் கெடுத்துச் சந்தோஷித்திந்தத்திருட்டியி லிருப்பாயென்று கும்பமுனிசொன்னர்—எ-ம்.

(இ-உ-க-ம்.) நிருவிகற்பசமாதி கூடுநெறியையறிவித் தகன்றனரென்பதாம். (164)

## நிகித்கியிற்கண்ட பேரானந்தபோதமே தானுகவியப்புறிதல்.

போதுநா மென்னக்கும்பன் மறைதலும் பூபனென்னுஞ்
சீதளஞ் சுத்தஞ்சாந்தந் தெள்ளமு தூறலொக்கு
மீதொரு பதவியென்னு ளிருந்தவா வென்னேயென்னே
கோதிலென் சத்துவத்திற் குளி வுறற் செய்ததென்றான்.

இ - ள். நாம்போது மென்ன-யாம்போகின்றேனென்று, கும்மன்மறைதலும் - கும்பமுனியானவர் மறையவும், பூபனென்னும் - அரசனுனவனினைக்கின்றான், சீதனம்-குளிர்ச்சியாகியும், சுத்தம் - பரிசுத்தமாகியும், சாந்தம்-உபசாந்தமாகியும், தெள்ளமுதூறலொக்கும் - தெளிந்த அமுதவூற்றுக்கொப்பாகியு மிருக்கின்ற, ஈதொருபதவி - இந்தவொப்பற்ற பதவியானது, என்னுளிருந்தவா-எனக்குள்ளிருந்தவிதம், என்னேயென்னே - ஆச்சரியமாச்சரியம், கோதிலென்-குற்றமற்றவென்னை, சத்துவத்தில் - சத்தாமாத்திரத்தில், குளிர்வுறச்செய்ததென்றான் - விஸ்ராந்தியடையச் செய்ததென்று அரசன்சொன்னன்—எ-று.

எ - து. யாம் போகின்றேனென்று கும்பமுனியானவர் மறையவும், அரசனுனவ னினைக்கின்றான். குளிர்ச்சியாகியும், பரிசுத்தமா

கியும் உபசாந்தமாகியும், தெளிந்த அமுதவிற்றுக் கொப்பாகியு மிரு க்கின்ற இந்தவொப்பற்ற பதவியானது எனக்குள்ளிருந்தவிதம் ஆச் சரியமச்சரியம்! குற்றமற்ற வெண்ணெச்சாக்காமாத்திரத்தில் விஸ்ரா ந்தியடையச் செய்ததென் றாசன்சொன்ளுன்—எ-ம். (165)

## வியப்புற்றபடி சமாதிகூடல்.



ஆனவா தனைகளின்றி யசைவற்றுப் போரூகி
மோனமாய் நிருவிகற்ப மாயப்பற்று முற்றமற்று
தானமே யழுந்திக்கற்போற் றருவைப்போற் சுவர்போனின்ருன்
போனகூ டாலைபண்டைப் பொற்கொடி வடிவமெய்தி.

இ - ள். ஆனவாதனைகளின்றி - உண்டாகிய வாதனைகளிறந்து, அசை வற்று-சலனமற்று, போரூகி-நிலையினீங்காதவனும், மோனமாய் - மௌன மாகியும், நிருவிகற்பமாய் - நிருவிகற்பமாகியும், பற்றுமுற்றுமற்று - இச்சை யனைத்துமற்று, தானமேயழுந்தி-இடத்திலமர்ந்து, கற்போல்-கல்லைப்போல வும், தருவைப்போல் - மரத்தைப்போலவும், சுவர்போல் - மதிலைப்போல வும், நின்ருன் - சமாதியி லிருந்தான், போனகூடாலை-சென்ற (கும்பமுனி யென்னுஞ்) சூடாலையானவள், பண்டைபொற்கொடி வடிவமெய்தி - முன் னழகியபுட்பக்கொடிபோன்ற தனதுருவமடைந்து—எ-று.

எ - து. உண்டாகிய வாதனைகளிறந்து சலனமற்று நிலையினீங் காதவனுய் மௌனமாகியும், நிருவிகற்பமாகியும், இச்சையனைத்து மற்றவிடத்தில் அமர்ந்துக் கல்லைப்போலவும், மரத்தைப்போலவும், மதிலைப்போலவுஞ் சமாதியிலிருந்தான். சென்ற கும்பமுனியென்னு ஞ் சூடாலையானவள் முன்னழகிய புட்பக்கொடிபோன்ற தனதுருவ மடைந்து—எ-ம்.

(இ-உ-க-ம்) ஆசாரியானுக்கிரகத்தில் அனுபவமான தனதுஸ்வானுபூதி மாத்திரமாய் நிருவிகற்பசமாதி யடைந்தனரென்பதாம். (166)

## ஆசாரியர்சென்று பின்னுமெழுந்தருளுதல்.



அம்பரத் தேகியந்தப் புரம்புக்கா ளவனிகாவ
னம்பர மென்றுகாத்தா ணடந்தது வருடமூன்று
கும்பனுய்க் கனவன்காட்டைக் குறிகியாங்கவனைக்கண்டா
டம்பமாய் நிருவிகற்ப சமாதியி லிருத்தல்கண்டு.

இ - ள். அம்பரத்தேகி - ஆகாயத்திற்போய், அந்தப்புரம்புக்காள்-அந்தப்புரத்திற்புகுந்தாள், அவனிகாவல்-பூமிபாலனம், நம்பரமென்று காத்தாள்-நமதுபாரமென்றிரட்சித்தாள், வருடமூன்றகடந்தது - மூன்றுவருடஞ் சென்றது, கும்பனுப் - (திரும்பவுங்) கும்பமுனியாய், கணவன்காட்டைக்குறுகி-தலைவனிருக்கின்ற வனத்தையடைந்து, ஆங்கவனைக்கண்டாள் - அவ்விடத்தில் அக்கணவனைப்பார்த்தாள், தம்பமாய் நிருவிகற்பசமாதியி லிருத்தல்கண்டு - தூணைப்போல நிருவிகற்பசமாதியி லிருக்கையைப்பார்த்து—எ-று.

எ - து. ஆகாயத்திற்போய் அந்தப் புரத்திற்புகுந்தாள். பூமிபாலனம் நமதுபாரமென் றிரசிட்க்தாள். மூன்றுவருடஞ்சென்றது. திரும்பவுங் கும்பமுனியாய்த் தலைவனிருக்கின்ற வனத்தையடைந்து அவ்விடத்தில் அக்கணவனைப்பார்த்தாள். தூணைப்போலநிருவிகற்ப சமாதியி லிருக்கையைப்பார்த்து—எ—ம். (167)

## சமாதியிலசைவற நிற்றலைப் பார்த்தாலோசித்தல்.



அறிவிப்போமென்றுசிங்க நாதத்தாலார்த்தமட்டிற்
பொறியுற்றதில்லைமேன்மேற் றொனித்திவள்பூபன்றன்னை
மறியத்தள்ளுதலும்வீழ்ந்து மறிந்திலன்மற்றென்னென்று
நெறியுய்க்குங்கும்பன்மேனி நேரிழைநினைப்பதானாள்.

இ - ள். அறிவிப்போமென்று - (நமதுவரவைத் தெரிவிப்போ மென்று, சிங்கநாதத்தால் - சிங்கத்தொனியினால், ஆர்த்தமட்டில் - சத்தித்தவளவிலும், பொறியுற்றதில்லை - அறிந்ததில்லை, மேன்மேற்றொனித்து-மேலுமேலுஞ்சத்தித்து, இவள். இந்தச்சூடாலையானவள், பூபன்றன்னை - அரசனை, மறியத்தள்ளுதலும் - கவிழும்படிதள்ளவும், வீழ்ந்துமறிந்திலன் - கீழேவிழுந்து முணர்ந்திலன், மற்றென்னென்று-இதென்னவென்று, நெறியுய்க்கும்-கிரமமாகவாழ்விக்கின்ற, கும்பன்மேனி - கும்பவடிவத்தையுடைய, நேரிழை நினைப்பதானாள்-சூடாலையானவள் எண்ணத்தொடங்கினாள்—எ-று.

எ - து. நமதுவரவைத் தெரிவிப்போமென்று சிங்கத்தொனியினாற் சத்தித்தவளவிலு மறிந்ததில்லை. மேலுமேலுஞ்சத்தித்து இந்தச் சூடாலையானவள அரசனைக் கவிழும்படித்தள்ளவும் கீழேவிழுந்து முணர்ந்திலன். இஃதென்னவென்று கிரமமாக வாழ்விக்கின்ற கும்பவடிவத்தையுடையசூடாலையானவள்எண்ணத்தொடங்கினாள்.

உத்தமன்றற்பதத்தோ டொன்றினன் வியப்பிதம்மா
வித்தனியுடலைப்பார்த்தா லிதயத்தினதி வின்வித்தாஞ்

சத்துவசேமுண்டேற் றலைவனைப்புணர்வமெல்லன்
றத்தியால்வாழ்துமன்றே லங்ஙனைவடிவம்விட்டு.

இ - ள். உத்தமன் - உத்தமனுனவரசன், தற்பதத்சோடொன்றினன், பிரமபதத்திற்கலந்தான், வியப்பிதம்மா - ஈததிசயம், இத்தனியுடலை - இந்தத்தனிமையான சரீரத்தை, பார்த்தால் - நோக்கினுல், இதயத்தின் - இருதயத்தில், அறிவின்வித்தாம் - அறிவுக்குவிதையாகிய, சத்துவசேடமுண்டேல் - சத்துவசேடமிருக்குமாயின். தலைவனைப்புணர்வம் - நாயகனைச்சேர்ந்து, மெல்லென்று - மிருதுவாக, அத்தியால்வாழ்தும்- திரமாகவாழ்வோம், அன்றேல் - (சத்துவசேட) மில்லாவிடின், அங்ஙனைவடிவம்விட்டு - நமது பெண்ணுருவத்தைவிட்டு—எ-று.

எ - து. உத்தமனுனவரசன் பிரமபதத்திற் கலந்தான். ஈததிசயம்! இந்தத்தனிமையான சரீரத்தைநோக்கினு லிருதயத்தி லறிவுக்கு விதையாகிய சத்துவசேட மிருக்குமாயின் நாயகனைச்சேர்ந்து மிருதுவாகத் திரமாகவாழ்வோம். சத்துவசேடமில்லவிடில் நமது பெண்ணுருவத்தைவிட்டு—எ—ம். (169)

மறுபவமுறாதவண்ண மாசறுபதத்தைச்சேர்து
மறுதியிதென்னவுன்னிப் பரிசத்தால்விழியாலன்னு
னுறுமறிவுக்குவித்தா யுற்றசத்துவசேடந்தா
னிருதியற்றிதயந்தன்னி லிருந்ததுகண்டாளென்ன.

இ - ள். மறுபவம் - மறுபிறப்பை, உறாதவண்ணம் - அடையாதபடி மாசறு - குற்றமற்ற, பதத்தைச்சேர்தும் - பிரமபதத்தையடைவோம், அறுதியீதென்னவுன்னி - நிச்சயமிதுவென்று சிந்தித்து, பரிசத்தால் - பரிசத்தினுலும், விழியால் - கண்ணினுலும், அன்னுன் - அவ்வரசன், உறுமறிவுக்கு - பொருந்தியவறிவுக்கு, வித்தாயுற்ற - விதையாகப்பொருந்திய, சத்துவசேடந்தான் - சத்துவசேடமானது, இறுதியற்று - கெடுதலில்லாமல், இதயந்தன்னில் - இருதயத்தில், இருந்ததுகண்டாளென்ன - இருந்ததைப்பார்த்தாளென்று வசிட்டமுனிசொல்ல—எ-று.

எ - து. மறுபிறப்பை யடையாதபடிக் குற்றமற்ற பிரமபதத்தையடைவோம்; நிச்சயமிதுவென்று சிந்தித்துப் பரிசத்தினுலும் கண்ணினுலும் அவ்வரசன் பொருந்திய அறிவுக்குவிதையாகப்பொருந்திய சத்துவசேடமானது கெடுதலில்லாம லிருதயத்தி லிருந்ததைப்பார்த்தாளென்று வசிட்டமுனிசொல்ல—எ—ம்.

(இ-க-க-ம்.) இச்சமாதி சீவனமுத்தமா லிருதமுத்தமா வென்றையுந் றான்றிப்பார்க்கின் சிவனமுத்திதன்மையினி லககணத்தைக் கணடன ரெனபதாம். (170)

## மனமிறந்த ஸ்வரூபசமாதியிற் சத்துவசேடமெங்ஙனமிருக்குமெனல்.

கேட்டலுமிராமன்சொல்வான் கிளர்மனந்தீரமாய்ந்து
காட்டமோட்டம்போற்சுத்தக் கண்ணில்கலந்துளோருக்
கீட்டுசத்துவசேடந்தா னெங்ஙனேமுளைக்குமென்ன
வாட்டமின்ஞானமிக்க வசிட்டமா முனிவன்சொல்வான்.

இ - ள். கேட்டலும் - (இதைக்) கேட்கவும், இராமன்சொல்வான் - ஸ்ரீராமன் சொல்லுவார், கிளர் - சொல்லப்பட்ட, மனந்தீரமாய்ந்து - மனது முழுதுங்கெட்டு, காட்டமோட்டம்போல் - கட்டையுங்கல்லையும்போல, சுத்தக்கண்ணில் - பரிசுத்தஞானமான திருஷ்டியில், கலந்துளோர்க்கு - கலந்தவர்களுக்கு, ஈட்டுசத்துவசேடந்தான் - இவ்விடத்திற்சத்துவசேடமானது, எங்ஙனேமுளைக்குமென்ன - எப்படியுண்டாமென்று கேட்க, வாட்டமில் - தளர்வில்லாத, ஞானமிக்க - அறிவின்மிகுந்த, வசிட்டமுனிவன் - வசிட்டமாமுனியானவர், சொல்லுவான் - சொல்லுவார் — எ - று.

எ - று. இதைக்கேட்கவும் ஸ்ரீராமன் சொல்லுவார். சொல்லப்பட்ட மனது முழுதுங்கெட்டுக் கட்டையுங் கல்லையும் போலப் பரிசுத்த ஞானமான திருஷ்டியிற் கலந்தவர்களுக்கு இவ்விடத்திற் சத்துவசேடமானதெப்படியுண்டாமென்று கேட்கத் தளர்வில்லாத அறிவின்மிகுந்த வசிட்டமுனியானவர் சொல்லுவார் — எ - ம்.

## தேகநிமித்தஞ் சத்துவசேட மிருக்குமெனல்.

வித்தினுட்பூவுங்காயு மேவல்போலிதயந்தன்னிற்
சித்தின்காரணமதான சத்துவசேடநிற்கு
முத்தனாய்மனமிறந்தான் மெய்யுடல்போகாபோகத்
தொத்தவின்பத்துன்பங்கள் சார்தலற்றொருமைதாகும்.

இ - ள். வித்தினுள் - விதைக்குள், பூவும் - புட்பமும், காயும் - பழங்களும், மேவல்போல் - பொருந்தியிருப்பதுபோல, இதயந்தன்னில் - இருதயத்தில், சித்தின்காரணமதாம் - அறிவுக்குக்காரணமாகிய, சத்துவசேடநிற்கும் - சத்துவசேடமிருக்கும், முத்தனாய்மனமிறந்தால் - சீவன்முத்தனாய் மனோநாசமானால், மெய்யுடல்போகா - மெய்யுடல் சரீரமழியாது, போகத்தொத்த - போகங்களிற் பொருந்திய, இன்பத்துன்பங்கள் - சுகதுக்கங்கள், சார்தலற்று - கிட்டாமல், ஒருமைதாகும் - ஒருமையாகும் — எ - று.

எ - று. விதைக்குள் புட்பமும் பழங்களும் பொருந்தியிருப்பதுபோல இருதயத்தில் அறிவுக்குக்காரணமாகிய சத்துவசேட

மிருக்கும். சிவன்முக்தனாய் மநோநாசமானால் வலிமையுள்ள சரீரநசி யாது. போகங்களிற்பொருந்திய சுகதுக்கங்கள் கிட்டாம லொற்று மையாகும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) சத்துவசேடமிருக்குந் தன்மையை விருவிளைதற் குத்தா ங்கூறிக்காய: சத்துவசேடமென்பது அறிவுந்து விர்ந்திய சத்திலவ்வறிவு, சிவன்முத்தி யரியத்தக் கனையமை ந்தி று ணிதாய் மிஞ்சியிருந்ததெனக் கொள்க. (172)

சித்தாய்ச்சென்று சத்திலடங்கியிருந்த சித்தை

வெளிப்படுத்தல்.

ஆதலாலிராமனேயவ் வணங்கனாத்தமெய்விட்
டேதமிலாதியந்த மின்றியவறிவினுட்போய்
மேதகுசத்துவஞ்சேர் வேந்தனெஞ்சசைப்பண்ணி
தீதிறன்னுடலின்மீளச் சேர்ந்தனள்கூடார்புட்போல்.

இ - ள். ஆதலால் - ஆதலினால், இராமனே - ஸ்ரீராம, அவ்வணங்க னால் - அத்தெய்வகன்னிக்கொப்பான சூடாலையானவள், ஆதியந்தமின்றிய - ஆதிமத்யாந்தரகிதமான, அறிவினுட்போய் - சித்தினுள்ளே புகுந்து, மேத கு - மேன்மைபொருந்திய, சத்துவஞ்சேர் - சத்துவசேடமடைந்திருக்கின்ற, வேந்தனெஞ்ச - அரசனதுமனதை, அசைப்பண்ணி - சலிக்கச்செய்து தீதிறன்னுடலில் - குற்றமற்ற தனதுசரீரத்தில், கூடார்புட்போல் - கூண் டிலடைகின்ற பட்சியைப்போல, மீளச்சேர்ந்தனள் - திரும்பவந்தடைந் தனள்—எ-று.

எ - து. ஆதலினால் ஸ்ரீராமா! அத்தெய்வகன்னிக்கொப்பான சூடாலையானவள் அக்கும்ப வடிவத்தைவிட்டுக் குற்றமற்றதாய் ஆதி மத்யாந்தரகிதமான சித்தினுள்ளே புகுந்து மேன்மைபொருந்திய சத்துவசேட மடைந்திருக்கின்ற அரசனது மனதைச் சலிக்கச்செ ய்து குற்றமற்ற தனது சரீரத்திற் கூண்டிலடைகின்ற பட்சியைப் போலத் திரும்பவந்தடைந்தனள்—எ-ம் (173)

சத்தினின்றுஞ் சித்து விகசித்தல்.

கும்பன்மெய்யாகிப்பூமே லிருந்தனள்குழல்போற்பாடத்
தம்பமாயிருந்தோன்மெய்யிற் சத்துவகுணஞ்சார்போதங்
கம்பினேர்பாட்டைக்கேட்டு மைய்ப்பையத்தூரியன்சே
ரம்புயம்போல்விரிந்து வல்லண்மனிலையாயிற்றே.

இ - ள். கும்பன்மெய்யாகி - கும்பமுனிவடிவமாய், பூவேயிருந்தனன் - பூமியிற்றனதாசனத்திலிருந்தவனாய், குழல்போல்பாட - பிள்ளாங்குழலைப்போல சாமகானஞ்செய்துக்கொண்டிருக்க, தம்பமாயிருந்தோன் - கட்டையைப்போலிருந்தவரசன், மெய்யில் - சரீரத்தில், சத்துவகுணஞ்சார்போதம் - சாத்துவிதகுணத்தையடைந்திருக்கின்ற ஞானமானது, தும்பிளேர் - வண்டுக்கொப்பாக, பாட்டைக்கேட்டு - பாடுகின்ற சாமகானத்தைக்கேட்டு, பையப்பைய - மெல்லமெல்ல, சூரியன்சேர் - ஆதித்தகிரணத்தைச்சார்ந்த, அம்புயம்போல் - தாமரைமலரைப்போல, விரிந்து - விகசிதமாய், அவன்மனநிலையாயிற்று - அவனுடையமனதுநிலையாயினது—எ - று.

எ—து கும்பமுனிவடிவமாய்ப் பூமியிற் றனதாசனத்திலிருந்தவனாய்ப் பிள்ளாங்குழலைப்போலச் சாமகானஞ் செய்துக்கொண்டிருக்கக் கட்டையைப்போலிருந்த அரசன் சரீரத்திற் சாத்துவிதகுணத்தை யடைந்திருக்கின்ற ஞானமானது வண்டுக்கொப்பாகப் பாடுகின்ற சாமகானத்தைக்கேட்டு மெல்லமெல்ல ஆதித்த கிரணத்தைச் சார்ந்ததாமரைமலரைப்போல விகசிதமா யவனுடையமனது நிலையாயினது—எ-ம். (174)

## ஆநந்தத்தோடு மாசிரியரைத்தரிசித்து வணங்கித் துதித்தல்.

கண்டனன்கும்பன்றன்னைக் களிப்புறு மனத்தனாகித்
தண்டலிலருளாலென்னை வாழ்விப்பான்றானேவந்தான்
பண்டையக்குரவனென்று பரவிநன்மலர்தூயேத்த
மண்டலவேந்தன்றன்னை மற்றவனோக்கிச்சொல்வான்.

இ - ள். கும்பன்றன்னை - கும்பமுனியை, கண்டனன் - பார்த்தனன், களிப்புறுமனத்தனாகி - இன்பமிகுந்தமனதையுடையவனாய், தண்டலில் - தடையற்ற, அருளால் - கிருபையினால், என்னைவாழ்விப்பான் - என்னைச் சுகிக்கச்செய்யும்பொருட்டு, பண்டையக்குரவன் - முன்பெழுந்தருளியகுருநாதன், தானேவந்தானென்று - சுயமாகவேவந்தாரென்று, நன்மலர்தூய் - நல்லபுட்பங்களைச்சொரிந்து பரவியேத்த - வணங்கித்துதிசெய்ய, மண்டலவேந்தன்றன்னை - பூமிக்கரசனை மற்றவனோக்கி - பின்பந்தக்கும்பமுனியவரவர்பார்த்து, சொல்வான் - சொல்வார்—எ - று.

எ - து. கும்பமுனியைப் பார்த்தனன். இன்பமிகுந்தமனதையுடையவனாய்த் தடையற்ற கிருபையினா லென்னைச் சுகிக்கச்செய்யும்பொருட்டு முன்பெழுந்தருளிய குருநாதன் சுயமாகவே வந்தாயென்று நல்ல புட்பங்களைச் சொரிந்து வணங்கித்துதி செய்யப்

பூமிக்காசனைப் பின்பந்த கும்பமுனியானவர் பார்த்துச்சொல்லு வார்—எ-ம்.

(இ-க-க-ம்.) சமாதியி னிரதிசயானந்தமாய்க் கரைந்த அறிவவ்வனுபவத் தோடும் வெளிப்பட் டாசிரியரை அத்வைதவடிவமாகத் தரிசித்ததாம், (175)

## சீடன் சமாதிசுகத்தைக்கண்டு சந்தோடித்தல்,

இங்குனின்றகன்றநாடொட் டின்றளவுன்பாற்சித்தம்
பங்கறநின்றதண்டர் பதியுநின்கூட்டம்போல
வங்கிதமல்லவென்ன வண்ணலேவாழ்ந்தேனின்றற்
றுங்கமாயுற்றவின்ப சமாதியிற்றுயர்தீர்ந்தேன்.

இ - ள். இங்குனின்று - இவ்விடத்திலிருந்து, அகன்றநாடொட்டு-நீங் கினநாடொடங்கி, இன்றளவு - இன்றைவரைக்கும், உன்பாற்சித்தம்-உன்னிடத் திலென்மனமானது, பங்கறநின்றது-பிரிவற்றிருந்தது, அண்டர்பதியும்-தெ ய்வலோகமும், நின்கூட்டம்போல-உனது கூட்டத்தைப்போல, அங்கிதமல்ல வென்ன - இன்பமல்லவென்று கும்பமுனிசொல்ல, அண்ணலே - பெருமை யிற் சிறந்ததெய்வமே, நின்னுறல்வாழ்ந்தேன்-உம்மாற் சுகத்தையடைந்தேன், துங்கமாய்-பரிசுத்தமாகி, உற்ற இன்பசமாதியில்-பொருந்திய சுகசமாதியில், துயர்தீர்ந்தேன் - துன்பமற்றேன்—ஈ-று.

எ - து. இவ்விடத்திலிருந்துநீங்கின நாடுடங்கியின்றைய வரை க்கும் உன்னிடத்திலென்மனமானது பிரிவற்றிருந்தது. தெய்வலோ கமுமுனதுசந்நிதிபோல வின்பமல்லவென்றுகும்பமுனி சொ ல்ல, பெருமையிற் சிறந்த தெய்வமே! யும்மாற் சுகத்தையடைந் தேன். பரிசுத்தமாகிப் பொருந்திய சுகசமாதியிற் றுன்பமற்றேன்,

## ஆரியரவ்வனுபவ விலாசத்தை நான்குவிதமாகப் பகுத்து வினவுதல்.

நிருவிகற்பத்தினின்ப நிறைந்தபொன்னாட்டுமில்லை
யொருமையுற்றதனைமேவி யும்பரிவிம்பர்தன்னிற்
றிரிவனென்றரசன்சொல்லக் கும்பனுஞ்செப்புகிற்பா
னரியவானந்தவாழ்வி லயர்வெலாமறவாழ்ந்தாயோ.

இ - ள். நிருவிகற்பத்தில் - நிருவிகற்பசமாதியிலுள்ள, இன்பம்-ஆநந்த மானது, நிறைந்த - (புண்ணியம்) நிறைந்த, பொன்னாட்டுமில்லை - சுவர்க்கத் திலுமில்லை, ஒருமையுற்று - தனிமையாகி, அதனைமேவி - அவ்வாநந்தத்தை

யடைந்து, உம்பரில்-தெய்வலோகத்திலும், இம்பர்தன்னில் - பூலோகத்திலும், இரிவுவென்று - உலாவுவனென்று, அரசன்சொல்ல - வேந்தன் சொல்ல, கும்பனுஞ்செப்புகிற்பான்-கும்பமுனியுஞ் சொல்லுவார், அரியவானந்த வாழ்வில் - அரிதானபிரமானந்தவாழ்வில், அயர்வெலாமற - வருத்தங்களைத் துநீங்க, வாழ்ந்தாயோ - சுகித்தாயோ—எ-று.

எ - து. நிருவிகற்பசமாதியிலுள்ள ஆனந்தமானது புண்ணிய நிறைந்த சுவர்க்கத்திலுமில்லை. தனிமையாகி அவ்வானந்தத்தையடைந்து தெய்வலோகத்திலும் பூலோகத்திலு முலாவுவனென்று வேந்தன்சொல்லக் கும்பமுனியுஞ் சொல்லுவார். அரிதான பிரமானந்தவாழ்வில் வருத்தங்களைந்து நீங்கச் சுகித்தாயோ—எ-ம். (

பேதமேவடிவமான துன்பங்கள் பேதித்தாயோ
போதல்போதினிதாஞ்சங்கற் பத்தினிற்பூண்டவின்பந்
தீதெனவேருஞ்செற்று சமதரிசன முற்றாயோ
யாதினும் வீடுபற்றற் றியைந்த செய்தின் புற்றாயோ.

இ - ள். பேதமேவடிவமான - வேற்றுமையே புருவமாயிக்கின்ற, துன்பங்கள் - துயரங்களை, பேதித்தாயோ - கெடுத்தாயோ, போதல்போது-வரும்பொழுது, இனிதாம்-இனிமையாகிய, சங்கற்பத்தினில்-சங்கற்பத்தில், பூண்டவின்பம் - கொண்டசுகத்தை, தீதென-குற்றமென்று, வேருஞ்செற்று-மூலத்துடன்கெடுத்து, சமதரிசனம் - சமதிருஷ்டியை, உற்றாயோ - அடைந்தாயோ, யாதினும் - எதிலும், வீடுபற்றற - விடுதலும்பற்றுதலு நீங்கி, இயைந்தசெய்து - நேர்ந்தகாரியங்களைச்செய்து, இன்புற்றாயோ-சுகமடைந்தாயோ—எ-று.

எ - து. வேற்றுமையே யுருவமா யிருக்கின்ற துயரங்களைக் கெடுத்தாயோ? வரும்பொழுதினிமையாகிய சங்கற்பத்திற்கொண்ட சுகத்தைக் குற்றமென்று மூலத்துடன் கெடுத்துச் சமதிருஷ்டியை யடைந்தாயோ? எதிலும் விடுதலும் பற்றுதலுநீங்கி நேர்ந்தகாரியங்களைச்செய்து சுகமடைந்தாயோ? —எ-ம்.

(இ-கூ-க-ம், சுட்டறப்பெற்ற சுகானுபவத்தைச் சுட்டிற்றரிசிக்கப்பகுத்து வினாவினவாம். (178)

## அனுபவவிலாசத்தைச் சொல்லுதல்.

எனலுமின்ன ருளாற்பங்கிற் றெய்வத்தா லெல்லாம்விட்டப்பாண்
மனநிலைநின்றென்மாயைக் கரைகண்டேன் வுருபேறெல்லாம்

கனமுறப்பெற்றேன் கேட்கக் காணவேண்டுவதொன் றில்லை
யனவரதமுநிறைந்தே னயர்வற்றேன் பிறவியற்றேன்.

இ - ள். என்றலும் - (இப்படி) யென்று (கும்பமுனி கேட்கவும்), நின்னருளால் - உமது திருவருளினாலும், பக்கிற்றெய்வத்தால் - என்பக்கிலுள்ள தேவாதீனத்தினாலும், எலாம்விட்டப்பால் - திரிஸ்யமனைத்து நீங்கின அதீதத்தில், மனநிலைநின்றேன் - மனநிலையாயிருந்து, மாயை - சம்சாரத்தினது, கரையன்டேன் - முடிவைப்பார்த்தேன், வரும்பேறெல்லாம் - வரப்பட்ட விலாபங்களனைத்தையும், கனமுறப்பெற்றேன் - திடமாகவடைந்தேன், கேட்கக் காண - கேட்பதற்கும் பார்ப்பதற்கும், வேண்டுவதொன்றில்லை - விரும்புவதொன்றுமில்லை, அனவரதமும் - எப்பொழுதும், நிறைந்தேன் - பூரணமானேன், அயர்வற்றேன் - துன்பநீங்கினேன், பிறவியற்றேன் - பவநீங்கினேன்.

எ - து. இப்படியென்று கும்பமுனிகேட்கவும்; உமது திருவருளினாலும், என்பக்கிலுள்ள தேவாதீனத்தினாலும் திரிஸ்யமனைத்து நீங்கினவதீதத்தில் மனநிலையாயிருந்த சம்சாரத்தினது முடிவைப்பார்த்தேன். வரப்பட்ட விலாபங்களனைத்தையுந் திடமாகவடைந்தேன். கேட்பதற்கும் பார்ப்பதற்கும் விரும்புவதொன்றுமில்லை. எப்பொழுதும் பூரணமானேன், துன்பநீங்கினேன், பவநீங்கினேன் — எ-ம்.

பயமற்றேன் மோகமற்றேன் பற்றற்றேன் சமமாய்நின்றே
னுயர்வுற்றேனெல்லாமானே னொருசெயலற்றேன் விண்ணு
ளியலொத்தவெளிவாய்ச்சாந்த மெய்தினேனென்று மோகச்
செயன்முற்றுங்கடந்தநிலைச் சிகித்துவசப்போர்மன்னன்.

இ - ள். பயமற்றேன் - அச்சநீங்கினேன், மோகமற்றேன் - மயக்கநீங்கினேன், பற்றற்றேன் - ஆசைநீங்கினேன், சமமாய்நின்றேன் - சமமாயிருந்தேன், உயர்வுற்றேன் - மேன்மையடைந்தேன், எல்லாமானேன் - சகலமுமானேன், ஒருசெயலற்றேன் - ஒருதொழிலுமில்லாதவனானேன் - விண்ணுளியலொத்த - ஆகாயத்தின் றன்மையையொத்த, வெளிவாய் - வெளியையுடையவனாய், சாந்தமெய்தினேன் - உபசாந்தத்தையடைந்தேன், மோகச்செயன்முற்றும் - மயக்கத்தாலான தொழில்களெல்லாம், கடந்தநிலை - தாண்டிய நிலையையுடைய, சிகித்துவசப்போர் - சிகித்துவசனென்னும் யுத்தத்தையுடைய, மன்னவனென்றான் - அரசனென்றுசொன்னான் — எ-ம்.

எ - து. அச்சநீங்கினேன், மயக்கநீங்கினேன், ஆசைநீங்கினேன், சமமாயிருந்தேன், மேன்மையடைந்தேன், சகலமுமானேன், ஒருதொழிலுமில்லாதவனானேன், ஆகாயத்தின் றன்மையை

யொத்தத் தெளிவையுடையவனு உபசாந்தத்தை யடைந்தேன், மய க்கத்தினது தொழிலையெல்லாந்தாண்டினமனத்தையுடைய சிகித்து வசனென்னு நாமத்தையுடைய அரசன்சொன்னான்—எ-ம்.

(இ-உ-க-ம்.) நீக்கவேண்டின பேதநீங்கி யடையவேண்டின வபேதம டைந்ததைப் பதினோந்துவிதமாகப் பகுத்துச்சொல்லியதாம். (180)

## சகசதிருஷ்டியாயிற் சாக்ஷாத்கார அனுபவமுண்டாகும் பொருட்டு ஆசிரியருஞ் சீடனுமொன்றாகச் சஞ்சரித்தல்

அவ்வகையிரண்டுபேரு மாற்றுமதத்துவத்தின்
செவ்வியவிசாரத்தானுந் தெளிதருமொழிகளானுந்
தவ்வறுநேயமிக்கோர் தம்மிற்றாமுணர்தலுற்று
வெவ்வனமோடைகுன்று வேறறவெங்கும்வாழ்ந்தார்.

இ - ள். அவ்வகை-அப்படியே, இரண்டுபேரும் - இருவரும், ஆற்றும தத்துவத்தின் - ஆன்மதத்துவத்தினது, செவ்வியவிசாரத்தானும் - அழகான விசாரணையினாலும், தெளிதருமொழிகளானும் - தெளிகின்றவசனங்களினா லும், தவ்வறுநேயமிக்கோர் - அழிவில்லாதவன்பின்மிகுந்தவர்கள், தம்மிற் றாம்-தங்களிற்றாங்கள், உணர்தலுற்று - அறிந்துகொண்டு, வெவ்வனம் - வி ருப்பத்தையுடைய கானகங்களிலும், ஓடை - தடாகங்களிலும், குன்று-மலை களிலும், வேறறவெங்கும்வாழ்ந்தார் - வேற்றுமையின்றி யெவ்விடத்திலுஞ் சுகித்தார்கள்—எ-று.

எ - து. அப்படியே யிருவரும் ஆன்ம தத்துவத்தினது அழ கான விசாரணையினாலும், தெளிகின்ற வசனங்களினாலும், அழிவில் லாத அன்பின்மிகுந்தவர்கள் தங்களிற்றாங்க ளறிந்துகொண்டு விரு ப்பத்தையுடைய கானகங்களிலும், தடாகங்களிலும், மலைகளிலும் வேற்றுமையின்றி யெவ்விடத்திலுஞ் சுகித்தார்கள்—எ-ம்.

## தாங்கள்கொண்டகோலமே கோலமாகச் சஞ்சரித்தல்.

இயலறிவன்புசெய்கை யிணையற்றோர்பற்றும்வீடு
மயலறவிட்டுதென்றற் கசைவுறுவடகுன்றெப்பார்
பயிலுடலொருகாற்றூளி படர்விப்பாரொருகானீறு
வியனுறவணிவரோர்காற் சந்தனவிரையேசேர்வார்.

இ-ள். இயலறிவு - சுபாவமான ஞானத்திலும், அன்புசெய்கை - அன்புள்ளதொழில்களிலும், இணையற்றோர் - ஒப்பில்லாதவர்கள், பற்றும் - இராகமும், வீடும் - துவேடமுமாகிய, மயலறவிட்டு - மயக்கத்தையொருங்கே யொழித்து, தென்றற்கு - தென்றற்காற்றுக்கு, அசைவுறா வடதுன்றூப் பார் - சலியாதமகம்மேருவுக் கொப்பானவர்கள், பயிலுடல் - சொல்லப்பட்ட சரீரத்தில், ஒருகால் - ஒருபொழுது, தூளிபடர்விப்பார் - புழுதியைப்படரச்செய்வார்கள், ஒருகால் - ஒருபொழுது, நீறு வியனுறவணிவர் - விபூதியைப் பெருமையாகத்தரிப்பார்கள், ஓர்கால் - ஒருபொழுது, விரை - வாசனையுள்ள, சந்தனம் - சந்தனத்தை, சேர்வார் - தரிப்பார்கள்—எ-று.

எ—து. சுபாவமான ஞானத்திலும், அன்புள்ள தொழில்களிலு மொப்பில்லாதவர்கள், இராகமும் துவேடமுமாகிய மயக்கத்தை யொருங்கேயொழித்துத் தென்றற்காற்றுக்குச் சலியாத மகம்மேருவுக்கொப்பானவர்கள் சொல்லப்பட்ட சரீரத்தி லொருபொழுது புழுதியைப் படரச்செய்வார்கள், ஒருபொழுது விபூதியைப் பெருமையாகத் தரிப்பார்கள், ஒருபொழுது வாசனையுள்ள சந்தனத்தைத் தரிப்பார்கள்—எ-ம்.

(இ-உ-க-ம்.) இராகத்துவேடமின்றி யேதேதேப்படியோ வதுவதப்படியாய் விளங்கினரென்னவறிந்ததாம்.

முன்பு ஞானமும்போகமும்வீடு மின்றளிப்பே னென்றபடி ஸ்வரூப ஞானத்தைக் கொடுத்துப் போகங் கொடுப்பதற்கு அதின்பற்றுநீக்கம் பரிசோதிக்கச் சிந்தித்தல்.



சிறிதுநாளுடனேவாழ்ந்து தேமொழிவேங்கைநோக்கி
பிரிவுறுகணவன்சால வுதாரமாய்ப்பீடையற்றூற்
செறியெழில்விடலையாகுஞ் செல்வம்பூமனையுமெல்லாம்
வரியபோலவமாய்ப்போமால் வாழுனரிலாமையாலே.

இ-ள். சிறிதுநாள் - கொஞ்சகாலம், உடனேவாழ்ந்து - கூடவேவாழ்ந்திருந்து, தேமொழி - மதுரவசனத்தையுடைய ஆடாலையானவள், வேங்கை நோக்கி - அரசனை யனதிற பார்த்து, பிரிவுறுகணவன் - தன்னைப்பிரிந்திருக்கின்ற தலைவனுடைய ஆசிரிதனுமான, சால வுதாரமாய் - அதிக தயையுடையவனாய், பீடையற்றான் - துன்பநீங்கினவன், செறியெழில் - மிகுந்தவழகையுடைய, விடலையாகும் - இளமையாகிய, செல்வம் - சம்பத்தும், பூமனையும் - புட்பங்களணிந்த மாளிகையுமாகிய, எல்லாம் - சகலமும், வறிய போல - இல்லாமையைப்போல, வாழுனரிலாமையால் - சுகிக்கின்றவர்களில்லாமையினால், அவமாய்ப்போம் - வீணாய்ப்போகும்—எ-று.

எ-து. கொஞ்சகாலங்கூடவே வாழ்ந்திருந்த மதுரவசனத்தையுடைய சூடாலையானவள் அரசனை மனதிற் பார்த்துத் தன்னைப் பிரிந்திருக்கின்ற தலைவனை சிகித்துவசன் அனுபூதியின் மிகவு முறுதியுள்ளவனாய்த் துன்பநீங்கினான். மிகுந்த அழகையுடைய விளமையாகிய சம்பத்தும், பட்டபங்கணிறைந்த அரண்மனையுமாகிய சகலமு மில்லாமையைப்போலச் சுகிக்கின்றவர்க ளில்லாமையினால் வீணாய்ப் போகும்---எ-ம். (183)

## ஸ்த்ரீயிச்சையைப் பரிசோதிக்கச் சிந்தித்தல்.



இழிவறுஞானம்பெற்றோ ரியல்புறத்தானேவந்த
தொழிலுறவிடுவரென்னி லுண்மையையுணர்ந்ததென்னும்
வழிபடுமன்னனம்பான் மணஞ்செயற்கானதொன்றை
யழிவெறுமறிவினாலிங் கமைத்துமென்றுளத்திலெண்ணி.

இ-ள். இழிவறுஞானம்பெற்றோர் - பூரணஞானத்தையடைந்தவர்கள், இயல்புற - சுபாவமாக, தானேவந்தது - வலியவந்ததை, ஒழிவற - தவிரும்படியாக, விடுவரெனில் - விடுவார்களானால், உண்மையை - தத்துவத்தை, உணர்ந்ததென் - அறிந்ததென்ன, வழிபடுமன்னன் - சன்மார்க்கமுள்ளவரசன், நம்பால் - நம்மிடத்தில், மணஞ்செயற்கு - கலியாணஞ்செய்வதற்கு, ஆனதொன்றை - உண்டாகியவொருயுக்தியை, அழிவறுமறிவினால் - அழிவற்ற வுணர்வினால், இங்கமைத்துமென்று - இவ்விடத்திலுண்டாக்குவோமென்று, உளத்திலெண்ணி - மனதினினைத்து---எ-று.

எ-து. பூரணஞானத்தை யடைந்தவர்கள் சுபாவமாகவலியவந்ததைத் தவிரும்படியாக விடுவார்களானாற் றத்துவத்தை யறிந்ததென்ன? சன்மார்க்கமுள்ளவரசன் நம்மிடத்திற் கலியாணஞ் செய்வதற்குண்டாகிய வொருயுக்தியை அழிவற்ற வுணர்வினாலிவ்விடத்திலுண்டாக்குவோமென்று மனதினினைத்து---எ-ம். (684)

## திருவிழாவைக்குறித்துச் சொல்லவேண்டுமெனல்.



தலைவனைநோக்கிச் சொல்வாள் சதமகனுலகினின்றோர்
நிலைபெறுவிழாவுண்டாங்கே நேருநாதமோரடியானு
முலைவறநிற்றல்வேண்டு முயர்விதிவலியார்வெல்வர்
மலைமிசையிரவிபோங்கால் வருவனிவ்விரவிலிங்கே.

இ - ள். தலைவனைநோக்கி - நாயகனைப் பார்த்து, சொல்வாள் - (கும்பமுனியான) சூடாலைசொல்லுவாள், சுரயகநாலகில் - தேவலோகத்தில், இன்று - இன்றையதினம், ஓர்நிலைபெற - ஒருநிலைபெறும்படி செய்யும், விழாவுண்டு - திருவிழாவுண்டு, ஆங்கு - அவ்விடத்தில், சேருநாரதரோடு - பொருந்தியநாரதருடன், இயானும் - நானும், உலைவாதிற்றல் வேண்டும் - அசைவறவிருக்கவேண்டும், உயர்விதிவலி - மேலானவிதியின் பலத்தை, யார்வெல்வர் - யாவர்செயிப்பார்கள், மலைமிசை - அஸ்தமனபர்வதத்தின்மேல், இரவி போங்கால் - சூரியன்போகின்றசமயத்தில், இவ்விரைவில் - இதோசீக்கிரமாக, இங்குவருவன் - இவ்விடத்தில்வருவேன் — எ - று.

எ - து. நாயகனைப்பார்த்துக் கும்பமுனியான சூடாலைசொல்லுவாள் தேவலோகத்தி லின்றையத்தின மொருநிலைபெறும்படி செய்யுந் திருவிழாவுண்டு; அவ்விடத்திற் பொருந்திய நாரதருடனியானுமசைவறவிருக்கவேண்டும் மேலான விதியின் பலத்தையாவர் செயிப்பார்கள்; அஸ்தமன பர்வதத்தின்மேற் சூரியன்போகின்றசமயத்தி லிதோசீக்கிரமா யிவ்விடத்தில் வருவேன் — எ - ம்.

## சுகச்சமாதியி லிருத்திச் செல்லுதல்.



நீங்கருமுணர்வினோடு நீயிவணிருத்தியென்றோர்
தேங்கமழ்மலரின் கொத்தைச் சிகித்துவசனுக்குநல்கி
யோங்கினள்விசும்பிலேகி யவன்விழியுறாதமட்டுற்
றாங்கியகும்பன்மேனி தவிர்த்துதன்வடிவமானாள்.

இ - ள். நீங்கருமுணர்விநோடு - நீங்குதற்கரிய அறிவுடன், நீயிவணிருத்தியென்று - நீஇவ்விடத்திலிருப்பாயென்று, ஓர் - ஒரு, தேங்கமழ்மலரின் கொத்தை - வாசனைபரிமளிக்கும் புட்பக்கொத்தை, சிகித்துவசனுக்குநல்கி - சிகித்துவவாசனுக்குக்கொடுத்து, விசும்பிலோங்கினள் - ஆகாயத்திலெழும்பினள், அவன்விழியுறாதமட்டிலேகி - அவன்கண்ணுக்குத்தெரியாதவரைக்கும்போய், தாங்கியகும்பன் - சுமந்தகும்பனென்கின்ற, மேனிதவிர்த்து - சரீரத்தைவிட்டு, தன்வடிவமானாள் - தனதுசூடாலை வடிவமுள்ளவளானாள்.

எ - து. நீங்குதற்கரிய அறிவுடன் நீ யிவ்விடத்தி லிருப்பாயென் றொருவாசனைபரிமளிக்கும் புட்பக்கொத்தை சிகித்துவவாசனுக்குக்கொடுத்து ஆகாயத்திலெழும்பினாள். அவன்கண்ணுக்குத் தெரியாதவரைக்கும்போய்ச் சுமந்தகும்பனென்கின்ற சரீரத்தைவிட்டுத்தனது சூடாலை வடிவமுள்ளவளானாள் — எ - ம். (186)

## அரசாக்ஷிசெய்து வருதல்.

இந்திரனிருக்கை யெய்ந்த வில்லம்புக்க றியா வண்ண
மந்திரநெறியின் மன்னன் காரியமாயிற்செய்து
சந்திரவதனி மீண்டுங் கும்பனுப் தலைவன்றன்பால்
வந்திழிவுற்றுசால வாடியமுகத்தள் போலாய்.

இ - ள். இந்திரன் - தேவேந்திரனானவன், இருக்கையெய்ந்த - இருக்கின்ற தெய்வலோகத்துக்கொப்பாகிய, இல்லம்புக்கு - அரண்மனையிற்புகுந்து, அறியா வண்ணம் - யாவருமறியாதபடி, மந்திரநெறியில் - அரசநீதியில், மன்னன்காரியம் - இராசகாரியங்களை, மாயிற்செய்து - முறைமையாகச்செய்து, சந்திரவதனி - சந்திரனைப்போல குளிர்ந்தமுகத்தையுடைய சூடாலையானவள், மீண்டும் - திரும்பவும், கும்பனும் - கும்பமுனிவடிவமாகி, தலைவன்றன்பால் - நாயகனிடத்தில், வந்திழிவுற்று - வந்திறங்கி, சாலவாடிய - மிகவுஞ்சுருங்கின, முகத்தள் போலாய் - முகத்தையுடையவளைப்போலாகி — எ - று.

எ - து. தேவேந்திரனானவனிருக்கின்ற தெய்வலோகத்துக் கொப்பாகிய அரண்மனையிற்புகுந்து யாவருமறியாதபடி அரசநீதியில் இராசகாரியங்களை முறைமையாகச்செய்து சந்திரனைப்போலக் குளிர்ந்த முகத்தையுடைய சூடாலையானவள் திரும்பவுங் கும்பமுனி வடிவமாகிய நாயகனிடத்தில்வந்திறங்கிமிகவுஞ்சுருங்கின முகத்தையுடையவளைப்போலாகி — எ - ம். (187)

## ஓர் பாசாங்குரைக்க முகம்வாடி நிற்றல்.

பனிபடர்மதியமென்னப் பங்கய மென்னச் சோம்பி
நனிமுகம் வாடிச்சிந்தை யயர்விலானனுகலோடும்
புனிதநாயகனு நோக்கிப் பொருக்கெனவருந்தியெந்தாய்
துனியுறுகின்றார் போன்றாய் துயரெனத்துடைத்தியென்று.

இ - ள். பனிபடர் - பனிமூடிய, மதியமென்ன - சந்திரனைப்போலவும், பங்கயமென்ன - தாமரைமலரைப்போலவும், சோம்பி - சோம்பலாய், நனிமுகம்வாடி - மிகவும் வதனஞ்சுருங்கி, சிந்தையயர்விலான் - மனதிற்றுன்பமுற்றகும்பமுனியான சூடாலையானவள், கனுகலோடும் - சேர்ந்தவளவில், புனிதநாயகனும் - பரிசுத்தமுள்ளகணவனான சிகித்துவசனும், நோக்கி - (கும்பமுனியைப்) பார்த்து, பொருக்கென - சீக்கிரமாகவெழுந்து, வருந்தி - பிரார்த்தனைசெய்து, எந்தாய் - எனதுபிதாவே, துனியுறுகின்றார்போன்றாய் - துன்பமடைந்தவர்களைப்போலக் காணப்படுகின்றாய், துயரென - துன்பமென்ன, துடைத்தியென்று - கெடுப்பாயென்று — எ - று.

இ-ள். பனிமூடிய சந்திரனைப்போலவும், தாமரைமலரைப் போலவுஞ் சோம்பலாய் மிகவும் வதனஞ்சுருங்கி மனதிற்றுன்பமுற்ற கும்பமுனியான கூடாலையானவள் சேர்ந்தவளவிற் பரிசுத்தமுள்ள கணவனான சிகித்துவசனுங் கும்பமுனியைப்பார்த்து சீக்கிரமாக வெழுந்து பிரார்த்தனை செய்து எனதுபிதாவே! துன்பமடைந்தவர்களைப்போலக் காணப்படுகின்றாய், துன்பமென்ன கெடுப்பாயென்று.

## அரசன் றேற்றுதல்.

தத்துவஞானமுற்ரோர் தளர்வுறார்மகிழார்கஞ்சப்
பத்திரம்பயின்றநீரின் பற்றுமோவென்றலோடும்
குத்திரமேனிக்கும்பன் விளம்புறுகுழலின்பண்போற்
சித்திரமாகவொன்றைச் சிகித்துவசனுக்குச்செப்பும்.

இ-ள். தத்துவஞானமுற்ரோர் - உண்மைஞான மடைந்தவர்கள், தளர்வுறார் - தளரார்கள், மகிழார் - சந்தோஷியார்கள், கஞ்சப்பத்திரம் - தாமரையிலையானது, பயின்றநீரின் - கூடியிருந்தசலத்தில், பற்றுமோ - பொருந்துமோ, என்றலோடும் என்றரசன்சொல்லவும், குத்திரமேனிக்கும்பன் - வஞ்சகவடிவத்தையுடைய கும்பமுனி, விளம்புறு - சொல்லப்பட்ட, குழலின் பண்போல் - வேய்ங்குழலினோசையைப்போல, சித்திரமாக - அதிசயமாக, ஒன்றை - ஒருசரித்திரத்தை, சிகித்துவசனுக்குச்செப்பும் - சிகித்துவவாசனுக்குச்சொல்லுவாள் — எ-று.

எ-து. உண்மைஞான மடைந்தவர்கள் தளரார்கள், சந்தோஷியார்கள், தாமரையிலையானது கூடியிருந்தசலத்திற் பொருந்துமோ வென்றரசன் சொல்லவும், வஞ்சகவடிவத்தையுடைய கும்பமுனி சொல்லப்பட்ட வேய்ங்குழலி னோசையைப்போல அதிசயமாக வொரு சரித்திரத்தைச் சிகித்துவவாசனுக்குச் சொல்லுவாள்-எ-ம்.

(இ-எ-க-ம்,) மாயோகத்தைக் கொண்டுசூழ்ச்சித்தம் பரிசோதிக்கத் தொடங்கினதாம். (கஅக)

## பிராரத்த கன்மசேட மனுபவித்து நீங்கவேண்டு என்பதை யுறுதிப்படுத்து நிமித்த நீங்காத தேககன்மத்தை நீக்குப்படி நினைத்து வருந்துவார்களெனல்.

உடலுளவளவுங்கன்மேந் தியத்துடனுறல்செய்யாரேற்
றிடமுறசமசித்தத்தே ஒசறிபவா றிஞால்லார்

சடர்களேயாவர்தானே சார்வுறுமவத்தைவென்று
விடநினைத்தறிவிலாதார் வீணிலேமெலிந்துநைவர்.

இ-ள். திடமுறசமனிர்தத்து - திரமாகச்சமத்துவமனதில், செறிபவர் - சேர்ந்தவர்கள், உடலுளவளவும் - தேகமிருக்குமட்டும், கன்மேந்திரியத்துடன் - கன்மேந்திரியங்களோடும், உறல்செய்யாரேல் - பொருந்தார்களாயின், அறிஞரல்லார் - ஞானிகளல்ல, சடர்களேயாவர் - வஞ்சகராவார்கள், தானே, சுயமாகவே, சார்வுறுமவத்தை - வந்தடைகின்றவவஸ்தையை, வென்றவிட நினைத்து - செயஞ்செய்யும்படிகருதி, அறிவிலாதார் வீணிலேமெலிந்துநைவர் - ஞானமில்லாதவர்கள் விருதாவாக விளைத்துவருந்துவார்கள்—எ-று.

எ-று. திரமாகச் சமத்துவமனதிற் சேர்ந்தவள் தேகமிருக்குமட்டுங் கன்மேந்திரியங்களோடும் பொருந்தார்களாயின் ஞானிகளல்ல, வஞ்சகராவார்கள். சுயமாகவே வந்தடைகின்ற வவஸ்தையைச் செயஞ்செய்யும்படிக்கருதி ஞானமில்லாதவர்கள் விருதாவாக விளைத்து வருந்துவார்கள்—எ-ம். (190)

## தேகமுள்ளமட்டும் அவத்தை நீங்காதெனல்.

திலமுளவளவும்போகாத் தயிலம்போற்றேகமட்டும்
பலபலவவத்தைநீங்காப் பற்றறவிவற்றைத்தீர்ப்போ
ரலகிலாவிண்ணைவாளா லறுப்பவரொக்குமன்னா
மலவுடலவத்தைநீக்கி லதற்கொக்கும்வாழ்வுண்டாமோ.

இ-ள். திலமுளவளவும் - எள்ளுள்ளமட்டும், போகாத்தயிலம்போல் - நீங்காதவெண்ணெயைப்போல, தேகமட்டும் - சரீரமிருக்குமளவும், பலபலவவத்தைநீங்கா - நானாவிதமான அவத்தைகணீங்கமாட்டாது, பற்றற - பற்றுதலில்லாமல், இவற்றைத்தீர்ப்போர் - இவ்வவத்தையைக் கெடுப்பவர்கள், அலகிலாவிண்ணை - அளவிடக்கூடாதவாகாயத்தை, மன்னா - அரசனே, வாளால் - கத்தியினால், அறுப்பவரொக்கும் - அறுப்பவர்களுக்கொப்பாகும், மலவுடலவத்தை - மலசரீரத்துக்குள்ள பருவதுன்பத்தை, நீக்கில் - (கன்மேந்திரியநிக்கிரகத்தால்) நீக்கில், அதற்கு - அந்த (ஞானத்தாற்செய்யுந் தேகத்துக்கபரித்தியாகமான) வதற்கு, ஒக்கும்வாழ்வுண்டாமோ - இணையானசுகமுண்டாகுமோ—எ-று.

எ-று. எள்ளுள்ளமட்டு நீங்காத வெண்ணெயைப்போலச் சரீரமிருக்குமளவும் நானாவிதமான அவத்தைகணீங்கமாட்டாது பற்றுதலில்லாம லிவ்வவத்தையைக் கெடுப்பவர்கள் அளவிடக் கூடாத வாகாயத்தை அரசனே! கத்தியினா லறுப்பவர்களுக்

கொப்பாகும் மலசரீரத்துக்குள்ள பருவதுபைபத்தைக்கன்மேந்திரிய நிக்கிரகத்தானீங்கில் அந்த ஞானத்தாற் செய்யுந் தேகதுக்கபரித்தியாகமான அதற்கு இணையான சுகமுண்டாகுமா?—எ-ம். (191)

## கன்மநீங்காதென்னும் விதியைச்சொல்லுதல்.

ஒருபான் ஞானேந்தியத்துடனு மொருபாலகன்மேந்தியத்துடனும்
வருமாருளதாமுடலுக்கு மலரோன்முதலா மெல்லோருந்
தெருள்பான்மை யாராயினுந்தேக வவத்தைதீரா தென்றுணர்கை
யருகாநின்றுவழுவாம லுறுதியானவிதிநெறியே.

இ-ள். உடலுக்கு-தேகத்துக்கு ஒருபால் - ஒருபக்கத்தில், ஞானேந்தியத்துடனும்-ஞானேந்திரியத்தோடும், ஒருபால்-ஒருபக்கத்தில், கன்மேந்தியத்துடனும்- கன்மேந்திரியத்தோடும் வருமாருளதாம்-வருகின்றவிதமுண்டாயிருக்கின்ற, மலரோன்முதலாம் - பிரமன்முதலாகிய, எல்லோரும் - யாவரும தெருள்பான்மையாராயினும் - தெளிவானகுணத்தையுடையவராயினும், தேகவவத்தை-சரீரவேதனையானது, தீராதென்றுணர்கை - நீங்காதென்றறிதல், அருகாநின்றுவழுவாத-நசித்துநீங்காத, உறுதியான - நிச்சயமாகிய, விதிநெறியே-நியதிமார்க்கமாம்—எ-று.

எ-து. தேகத்துக் கொருபக்கத்தில் ஞானேந்திரியத் தோடும், ஒருபக்கத்திற் கன்மேந்திரியத்தோடும் வருகின்றவித முண்டாயிருக்கின்ற பிரமன் முதலாகிய யாவருந் தெளிவுள்ள குணத்தையுடையவராயினுஞ் சரீரவவத்தையானது நீங்காதென்றறிதல் நசித்து நீங்காத நிச்சயமாகிய நியதிமார்க்கமாம்—எ-ம். (192)

## அறிஞர்விதிமார்க்கத்தை யனுசரிப்பார்களெனல்.

—(.·.)—

கற்றவறிஞரறிவில்லோ ரெல்லாங்காணப்படுபொருளா
யுற்றபடியால்விதிவசத்தே யுறுவங்கடலினுறுநீர்போ
னித்தமறிஞர்சமபுந்தி நிலையாற்கைகாலசைதவிறுற்
பெற்றவுடலம்விடுமளவும் பெயராவிதியைப்பின்செல்வர்.

இ-ள். கற்றவறிஞர் - கற்றுணர்ந்தஞானவான்களும், அறிவில்லோர் - அஞ்ஞானிகளும், எல்லாங்காணப்படுபொருளாய - யாவுந்திரிஸ்யவஸ்துக்களாய், உற்றபடியால்-பொருந்தியதால், கடலினுறுநீர்போல் - சமுத்திரத்தி

ளுள்ள சலத்தைப்போல, விதிவசத்தையுறுவர் - நியதியின்வசத்திற்செல்லுவார்கள், நித்தம்-நாடோறும், அறிஞர் - ஞானவான்கள், சமபுந்திநிலையால்-சமமானவறிவினிச்சயத்தினால், கைகாலசைசுசலினல் - காசரணங்கள் சரிக்க, பெற்றவுடலம் - பெற்றிருக்கின்ற சரீரமானது, விடுமளவும்-நீங்கும்பரியந்தம், பெயராவிதியை-நீங்காதநியதியை, பின்செல்வர் - அனுசரிப்பார்கள்

எ-று. கற்றுணர்ந்த ஞானவான்களு மஞ்சாணிக ளியாவுந் திரிஸ்யுவஸ்துக்களாய்ப் பொருந்தியகாற் சமுத்திரத்திலுள்ள சலத்தைப்போல் நியதியின் வசத்திற்சொல்லுவார்கள். நாடோறும் ஞானவான்கள் சமமான அறிவினிச்சயத்தினற் காசரணங்கள் சரிக்கப்பெற்றிருக்கின்ற சரீரமானது நீங்கும்பரியந்த நீங்காத நியதியை யனுசரிப்பார்கள்—எ—ம். (193)

### தனக்குவந்த கன்மத்தைச் சொல்லத்தொடங்கல்.

---

இரங்கித்தேம்பியறிவில்லோ ரின்பதுன்பங் களின்மூழ்கும்
குரம்பைத்திரள்களெடுத்தவற்றாற் குறையாவிதியைப் பின்செல்வர்
நிரம்பப்புகன்றேனான்பட்ட நெறியிற்றுன்பந் தனைக்கேளா
யரங்கட்குவமையாந்துன்ப மன்பர்க்குரைத்தாலாறுதோ.

இ-ள். அறிவில்லோர்-அஞ்ஞானிகள், இரங்கித்தேம்பி - கலக்கமுற்று, இன்பதுன்பங்களின்மூழ்கும் - சுகதுக்கங்களிலமிழ்ந்தும், குரம்பைத்திரள்களெடுத்தும் - தேகமநேகமெடுத்தும், அவற்றால்-அவைகளினல், குறையாவிதியைப்பின்செல்வர்-குறைந்தநியதியை யனுசரிப்பார்கள், நிரம்பப்புகன்றேன்-மிகவுஞ்சொன்னேன், நெறியில்-மார்க்கத்தில், நான்பட்ட துன்பந்தனைக்கேளாய்-யான்பட்ட துயரதனைக்கேட்பாய், அரங்கட்குவமையாந்துன்பம் - அரங்களுக்கொப்பாகிய துயரத்தை, அன்பர்க்குரைத்தால்- அன்புள்ளவர்களுக்குச்சொன்னல், ஆறுதோ-சாந்தியாகாதோ—எ-று.

எ - து. அஞ்ஞானிகள் கலங்கமற்றுச் சுகதுக்கங்களி லமிழ்ந்தும், தேகமநேகமெடுத்தும் அவைகளினினிறைந்தநியதியையனுசரிப்பார்கள். மிகவுஞ்சொன்னேன். மார்க்கத்தில் நான்பட்டதுயரைக் கேட்பாய். அரங்களுக்கொப்பாகிய துயரத்தை யன்புள்ளவர்களுச்குச் சொன்னாற் சாந்தியாகாதோ?—எ-ம்.

(இ-ங-க-ம்) யாவராயினும் பிராரத்தகன்ம மனுபவித்துத் தீரவேண்டுமென்பதாம்.

---

வியவென்னை, அம்முனிவன் - அந்தரிஷியானவர், கோதமுனிவுற்று - மிக வுங்கோபித்து—எ-று.

எ - து. மேகமார்க்கமாகப் போகப்பட்ட தூருவாச ரென்கின்ற ரிஷியை நேரேபார்த்து ஆகாயத்தி லளவற்ற*பெருமையுள்ள பாதத்தில்வணங்கிப் பின்பு முனியைப்பார்த்து நீ கரியவஸ்திரத்தைத்தரித்தாய், நார்த்தபுருடனை யிச்சிக்கின்ற விபசாரிகளைப்போலப் போகத் தொடங்கினையென்று சொல்லிய வென்னை அந்தரிஷியானவர் மிகவுங்கோபித்து—எ—ம். (196)

இதுசொல்லுதலாலிரவுதொறு மெழிலேந்திழையாயிருத்தியென
முதுவன்சாபமுறைத்தலுமம் மொழிகேட்டிரங்கிமுனிதாளாம்
பதுமம்புகழ்ந்து வேண்டுதற்குப்பார்த்தேனிமைப்பின்முனிமறைந்தா
னதுகண்டுளநொந்திங்கணைந்தே னணங்காந்தன்மையகலாதே.

இ - ள். இதுசொல்லுதலால் - நீயிங்ஙனமிசைத்தலால், இரவுதொறும் - இரவுகடோறும், எழிலேந்திழையாய் - அழகியவாபரணங்களை யணிந்த பெண்ணாகி, உருத்தியென - இருப்பாயென்று, முதுவன் - மூதுணர்ந்த முனிவன், சாபமுரைத்தலும் - சாபமிடவும், அம்மொழிகேட்டிரங்கி - அந்த வசனத்தைக்கேட்டழுது, முனிதாளாம்பதுமம் - முனிவனது பாதபங்கயத்தை, புகழ்ந்து - துதித்து, வேண்டுதற்கு - வேண்டிக்கொள்வதற்கு, பார்த்தேன் - சிந்தித்தேன், இமைப்பின் - நொடியில், முனிமறைந்தான் - முனியானவர்மறைந்துபோனார், அதுகண்டு - அதைப்பார்த்து, உளநொந்து - மனம்வருந்தி, இங்கணைந்தேன் - இவ்விடத்தில்வந்தேன், அணங்காந்தன்மை - பெண்ணாந்தன்குணம், அகலாது - (எனக்கு) நீங்காது—எ-று.

எ - து. நீ யிங்ஙனமிசைத்தலா லிரவுகடோறு மழகியவாபரணங்களையணிந்த பெண்ணாகியிருப்பாயென்று மூதுணர்ந்த முனிவன் சாபமிடவும், அந்தவசனத்தைக்கேட்டழுது முனிவனது பாதபங்கயத்தைத்துதித்து வேண்டிக் கொள்வதற்குச் சிந்தித்தேன். நொடியில் முனியானவர்மறைந்துபோனார். அதைப்பார்த்து மனம்வருந்தி யிவ்விடத்தில்வந்தேன், பெண்ணாகுங்குண மெனக்கு நீங்காது. (197)

குருவானவர்மாதவர்முதலோர் கூட்டங்காணக்கூசாம
விருளாவாய்பகலாயெவ்வண்ண மிருப்பேனெனவுஞ் சிகித்துவசன்
வெருவாதொழிநீபுலம்புதலான் மேவுபயனென்விதிவலியால்
வருமேவருகவுடற்கல்லான் மாசிலறிவிற்பற்றுதே.

**இ - ள்.** குரு-ஆசாரியர், வானவர்-தேவர்கள், மாதவர் - முனிவர்கள், முதலோர் - முதலானவர்கள், கூட்டங்காண - குழாங்களைத்தரிசிப்பதற்கு, கூசாமல் - நாணாமல், இருள்வாய்-இராத்திரியில், மகளாய்-பெண்ணாகி, எவ்வண்ணமிருப்பேனெனவும் - எப்படியிருப்பேனென் றுகும்பமுனி சொல்லவும், சிகித்துவசன்-சிகித்துவசராசனானவன், நீ வெருவாதொழி-தேவர்பயப்படாதிரும், புலம்புதலால்-இரங்குதலால், மேவுபயனென்- வருகின்ற பிரயோசனமென்ன, விதிவலியால் - நியதிவல்லமையினால், வருமேவருக - வருவது வரட்டும், உடற்கல்லால்-சரீரத்துக்கல்லாமல், மாசிலறிவிற்பற்றாது - களங்கமற்ற ஆத்மஞானத்திற் பொருந்தாது—எ-று.

எ - து. ஆசாரியர், தேவர்கள், முனிவர்கள் முதலானவர்கள் குழாங்களைத் தரிசிப்பதற்கு நாணாமலிராத்திரியிற் பெண்ணாகி யெப்படியிருப்பேனென்று கும்பமுனிசொல்லவும். சிகித்துவசராசனானவன் தேவர் பயப்படாதிரும்; இரங்குதலால் வருகின்ற பிரயோசனமென்ன? நியதிவல்லமையினால் வருவது வரட்டும், சரீரத்துக்கல்லாமற் களங்கமற்ற ஆத்மஞானத்திற் பொருந்தாது—எ-ம். (198)

இதுவுமது.

அறிவாலுயர்ந்தநீ துன்பத் தமிழ்ந்தற்குரித்தோ வறிவற்ற
சிறியாரன்றோ வுள்ளயர்வா ரென்றுதேற்றித் தம்மிற்றும்
பிரியாவின்பதுன்பங்கள் பிறிவற்றிருந்தா ரவ்வளவி
னெறியார்க்கும்பற்கணங்குருவ னேர்வான்போல் வெய்யவனொளித் [தான்

**இ - ள்.** அறிவாலுயர்ந்த நீ - ஞானத்தினன் முதிர்ந்த நீர், துன்பத்து - துயரினிடத்தில், அமிழ்ந்தற்குரித்தோ - மூழ்குதற்குரியதாமோ அறிவற்ற - அறிவில்லாத, சிறியாரன்றோ - மூடர்களல்லவா, உள்ளயர்வாரென்று - மனதிற் றுன்பப்படுவார்களென்று, தேற்றி-தெளிவித்து, தம்மிற்றும்பிரியா - தங்களிற்றாங்கள்பிரியாமல், இன்பதுன்பங்கள் - சுகதுக்கங்கள், பிறிவற்றிருந்தார் - பேதமில்லாமலிருந்தார்கள்; அவ்வளவினெறியார்க்கும்பற்கு - அம்மட்டினிநிநிறைந்த கும்பமுனிக்கு, அணங்குருவனேர்வான்போல் - பெண்வடிவந்தாச் (செல்வது) போல, வெய்யவனொளித்தான் - சூரியன் மறைந்தான்.

எ - து. ஞானத்தினன் முதிர்ந்த நீர் துயரினிடத்தில் மூழ்குதற்குரியதாமோ? அறிவில்லாத மூடர்களல்லவா மனதிற்றுன்பப்படுவார்களென்று தெளிவித்துத் தங்களிற்றாங்கள் பிரியாமற் சுகதுக்கங்கள் பேதமில்லாமலிருந்தார்கள். அம்மட்டி னிநிநிறைந்த கும்பமுனிக்குப் பெண்வடிவந் தாச்செல்வதுபோலச் சூரியன்மறைந்தான்—எ-ம்.

(இ-ரு-கம்.) இராவிற்பெண்வடிவு வருதலைநோக்கி வினயமாகக்கூறினதை ஆக்யாவுக்குண்டோவெனத் தேற்றினதாம். (199)

## இராவிற் பெண்வடிவம் வருதல்.

அந்தியவா றநியமங்க ளாற்றியிருந்தா ரதுகாலை
முந்துமரசன் முகநோக்கி மொழிவான்கும்பன் றளர்ச்சியொடு
இந்தவுடல் வீழ்வதுபோன் மேலெழுதல்போனின் றியங்குதல்போல்
வந்ததொருநாணுறும்பெண்மை மன்னாவென்னை வளைந்ததுவே.

(இ - ள்.) அந்தியவாறும் - மாலைப்பொழுதாகவும், நியமங்கள் - நித்திய கன்மங்களை, ஆற்றியிருந்தார் - செய்திருந்தார்கள், அதுகாலை - அக்காலத்தில் முந்துமரசன் முகநோக்கி - முன்னேயிருக்கின்ற வேந்தனது முகத்தைப் பார்த்து, கும்பன் - கும்பமுனிவரானவர், தளர்ச்சியொடுமொழிவன் - தளர்வுடன் கூறுவார், இந்தவுடல் - இச்சரீரமானது, வீழ்வதுபோல் - (பூமியில்) விழுவதுபோலும், மேலெழுதல்போல் - பெண்குறிகள் மேலெழுகின்றதுபோலும், இயங்குதல்போல் - விளங்குவதுபோலும், பெருநாணுறும்பெண்மை - மிகுந்த வெட்கத்தோடுங்கூடிய பெண்டன்மையானது, மன்னா - அரசனே, என்னை - என்னை, வந்து வளைந்தது - வந்து சுற்றிக்கொண்டது - எ - று.

எ - து. மாலைப்பொழுதாகவும் நித்திய கன்மங்களைச் செய்திருந்தார்கள், அக்காலத்தில் முன்னேயிருக்கின்ற வேந்தனதுமுகத்தைப்பார்த்துக் கும்பமுனிவரானவர் தளர்வுடன்கூறுவார். இச்சரீரமானது பூமியில் விழுவதுபோலும், பெண்குறிகள் மேலெழுகின்றதுபோலும், விளங்குவதுபோலும், மிகுந்த வெட்கத்தோடுங்கூடிய பெண்டன்மையானது அரசனே என்னைவந்து சுற்றிக்கொண்டது---

## பெண்ணினவயவங்களைக் காட்டுதல்.

கூந்தல்வளர்கின்றதுபாராய் கொங்கையெழுகின்றதும்பாராய்
சேர்ந்துவருமேகலையாராய் செறியுமுன்பின்னுண்டான
காந்தைவடிவானதும்பாராய்க் காவலாவென்றிரங்கினனாய்ச்
சாந்தமுறுகும்பனுமிருந்தான் றலைவன்றானுந்தளர்ந்திருந்தான்.

(இ - ள்.) கூந்தல் வளர்கின்றதுபாராய் - அளகம்வளர்கின்றதைப்பார், கொங்கையெழுகின்றதுபாராய் - தனம் வளர்கின்றதைப்பார், சேர்ந்துவரு

மேகலையாராய் - கூடவருகின்ற வஸ்திரத்தைப்பார், செறியு முன்பின்னு ண்டான - நெருங்குமுன்குறியும் பின்குறியுமுடைய, கார்வைதவடிவானது பாராய் - பெண்வடிவமானதைப்பார், காவலாவென்றிறங்கினனும் - அரச னேயென்று துக்கப்பட்டவனும், சாந்தமுறுகும்பனுமிருந்தான் - உபசாந்த முள்ள கும்பமுனியுமிருந்தார், தலைவனானும் - அரசனும், தளர்ந்திருந் தான் - சோர்வுற்றிருந்த (ஆசிரியரைப்பார்த்து)—எ-று.

எ - து. அளகம்வளர்கின்றதைப்பார், தனம் வளர்கின்றதை ப்பார், கூடவருகின்ற வஸ்திரத்தைப்பார், நெருங்கு முன்குறியும் பின்குறியுமுடைய பெண்வடிவமானதைப்பார், அரசனேயென்று துக்கப்பட்டவனும் உபசாந்தமுள்ள கும்பமுனியுமிருந்தார். அரச னுஞ் சோர்வுற்றிருந்த வாசிரியரைப்பார்த்து—எ-ம். (201)

## வந்தகன்ம மனுபவிக்கக்கடவதென் றிரக்கமுற்றிருத்தல்.

ஞானவானீவிதிநெறியை நன்றாயறிந்தாயுறற்பால
தானதுற்றாலிரங்கலென் றாசனுரைப்பவுயர்கும்பன்
றானுஞ்சொல்வானினிச்செயலென் றப்பாவிதியையார்தடுப்பார்
மேனிபெண்மையாயிரவு மேவக்கடவேனென்றுரைத்து.

இ - ள். ஞானவனீ - ஞானவானாகியநீர், விதிநெறியை - நியதிமார் க்கத்தை, நன்றாயறிந்தாய் - நன்றாகத்தெரிந்தனை, உறற்பாலதானதுற்றால் - வரத்தக்கதுவந்தால், இரங்கலென்று - துன்பப்படாதேயென்று, அரசனு ரைப்ப - வேந்தன்சொல்ல, உயர்கும்பன்றானுஞ்சொல்வான் - மேலானகும்ப முனியுஞ்சொல்லுவார், இனிச்செயலென் - இனிச்செய்யவேண்டியதென்ன, தப்பாவிதியை - தவறாதநியதியை, ஆர்தடுப்பார் - ஆர்தடுப்பார்கள், இரவு - இராவில், மேனிபெண்மையாய் - சரீரம் பெண்வடிவமாய், மேவக்கடவே னென்றுரைத்து - அடையக்கடவதானேனென்றுசொல்லி—எ-று.

எ—து. ஞானவானாகிய நீர் நியதிமார்க்கத்தை நன்றாகத்தெ ரிந்தனை. வரத்தக்கது வந்தாற் றுன்பப்படாதேயென்று வேந்தன் சொன்ன, மேலான கும்பமுனியுஞ் சொல்லுவார். இனிச்செய்ய வேண்டியதென்ன? தவறாதநியதியை யார்தடுப்பார்கள்? இராவிற் சரீ ரம் பெண்வடிவமா யடையக்கடவதானேனென்றுசொல்லி—எ-ம்.

(இ-கு-க-ம்.) பெண்வடிவத்தைக்கண்டு மயங்காததன்மையைத் தெரி த்தனனென்பதாம். (202)

## ஏகாசனத்திற் பரிசித்திருந்து மயங்காத தன்மையைத் தெரிதல்.

பாயலொன் றிலவ்விரவு பயின்றார்வெறிதே விடியலின்
மேயபெண்மைதனைவிட்டு மீண்டுகும்பவடிவாக
வேயவிவ்வா றிராப்பெண்ணா யிரவுபோனாற்கும்பனுமா
யாயகன்னியழியாம லமர்ந்தாள்சின்னாட்கூடாலே.

இ-ள். அவ்விரவு - அன்றிராத்திரி, பாயலொன்றில் - ஒருசயனத்தில், வெறிதேபயின்றார் - சும்மாய்க்கூடி (நித்திரைசெய்தார்கள்) விடியலில் - உதயகாலத்தில், மேயபெண்மைதனைவிட்டு - அடைந்தபெண்வடிவத்தைவிட்டு, மீண்டுகும்பவடிவாகவேய - திரும்பக்கும்பமுனியுருவமாக, இவ்வாறு - இந்தப்பிரகாரம், இராப்பெண்ணாய் - இரவின்மாதாகவும், இரவுபோனால் - இராக்காலநீங்கினால், கும்பனுமாய் - கும்பமுனியாகவும், ஆயகன்னியழியாமல் - ஆகிய கன்னித்தன்மைகெடாமல், கூடாலே - கூடாலையானவன், சின்னாளமர்ந்தான் - சிலநாட்கூடியிருந்தான்—எ-று.

எ-து. அன்றிராத்திரி யொருசயனத்திற் சும்மாய்க்கூடி நித்திரைசெய்தார்கள். உதயகாலத்திலடைந்த பெண்வடிவத்தைவிட்டுத் திரும்பக் கும்பமுனியுருவமாக, இந்தப் பிரகார மிரவின்மாதாகவும், இராக்காலநீங்கினாற் கும்பமுனியாகவுமாகிய கன்னித்தன்மைகெடாமற் கூடாலையானவள் சிலநாட்கூடியிருந்தாள்—எ-ம். (203)

## புணரும்போ தின்புளவோ வென்பதறியுநிமித்த மனைவினைவேட்டல்.

அன்னாள்கும்பமேனியளா யரசன்றனைப்பார்த்தொருபகலின்
மன்னாநித்தமிராப்பெண்மை வருமேன்மடவாரியல்பன்றி
யென்னாளிருப்பதொருகணவ னெய்தவேண்டுமுனையலது
பின்னாரையுமூவுலகினுமியான் பேணேனன்பாற்பெருமையினால்.

இ-ள். அன்னான் - அந்தக்கூடாலையானவன், கும்பமேனியனாய்-கும்பமுனிவடிவத்தையுடையவனாய், ஒருபகலில் - ஒருமத்தியானத்தில், அரசன்றனைப்பார்த்து - வேந்தனைப்பார்த்து, மன்னா - அரசனே, நித்தம் - நாடோறும், இராப்பெண்மைவருமேல் - இரவிற்பெண்டன்மை வருமாயின், மடவாரியல்பன்றி - பெண்களின்றன்மையல்லாமல், என்னாளிருப்பது-எத்தனைகாலமிருப்பது, ஒருகணவனெய்தவேண்டும் - ஒருநாயகனையடையவேண்டும், அன்பாற்பெருமையினால் - அன்பின்மிகுதியினால், உனையலது - உன்னையல்லாமல், மூவுலகினும் - திரிலோகத்திலும், பின்னாரையும்யான் பேணேன் - மற்றெவரையும் நான் விரும்பேன்—எ-று.

எ - து. அந்தச் சூடாலையானவள் கும்பமுனிவடிவத்தையுடைய வளாயொருமந்திரியானத்தில் வேந்தனைப்பார்த்து அரசனே! நாமோர் று மிரவிற் பெண்டன்மை வருமாயின் பெண்களின் றன்மையல்லா மலெத்தனைகாலமிருப்பது? ஒருநாயகனை யடையவேண்டும், அன்றி ன்மிகுதியிஞ லுன்னையல்லாமற் றிரிலோகத்திலு மற்றெவரையும்நா ன்விரும்பேன் — எ-ம். (204)

## ஆசிரிய ரவிப்பிராயப்படி யரசனமைந்திருத்தல்.

மனைவியாகவிவாகத்தால் வரிப்பாய்நிசிக்கெப்போதுமெனை
யினையதியற்றிற் றீங்குநல மிரண்டுமில்லையென லோடு
மனையவிருப்பேநன்றென்று ரைசனதுகேட்டலுங்கும்பன்
புனையுநலத்தாவணிமாதப் புரணையின்றுபுரவலனே.

இ - ள். விவாகத்தால் - கலியாணத்தினால், மனைவியாக - பாரியாளாக நிசிக்கப்போதும் - இராவிற்கென்றும், எனை வரிப்பாய் - என்னையேற்றுக்கொள்ளுவாய், இனையதியற்றில் - இப்படிப்பட்டதைச்செய்தால், தீங்குநல மிரண்டும் - நரகசுவர்க்கமாகியவிரண்டும், இல்லையெனலோடும் - இல்லையென்று (கும்பமுனி) சொல்லவும், அனையவிருப்பே - அவ்விருப்பமே, நன்றென்று ரைசன் - நல்லதென்றரசன் சொல்ல, கும்பன் - கும்பமுனியானவர், அதுகேட்டலும் - அதைக்கேட்டவளவில், புரவலனே - அரசனே, இன்று - இன்றைக்கு, ஆவணிமாதப்புரணை - ஆவணிமாதப்பருவம், புனையுநலத்தது - (மாங்கிலியந்) தரிக்குநன்மையுள்ள (தினம்) — எ - று.

எ - து. கலியாணத்தினாற் பாரியாளாக இராவிற்கென்று மென்னையேற்றுக்கொள்ளுவாய். இப்படிப்பட்டதைச் செய்தால் நரகசுவர்க்கமாகிய விரண்டுமில்லையென்றுகும்பமுனிசொல்லவும், அவ்விருப்பமே நல்லதென்றரசன்சொல்லக் கும்பமுனியானவ ரதைக்கேட்டவளவில் அரசனே இன்றைக்காவணிமாதப் பருவம் மாங்கிலியந்தரிக்கு நன்மையுள்ளதினம் — எ-ம். (205)

## முகூர்த்தம் வைத்தல்.

திங்களுதிக்குங்காலத்திற் செய்கவிவாகமெனச்செப்பி
யங்கணரசனொடுமேவி யணியுமணிப்பூண் சந்தனங்க
டுங்கமலையிற்கொடுவந்து தூய்நீர்கங்கைதனின்மூழ்கிப் [றி
பொங்குநெறியாற்கடவுளர் தென்புலத்தோர்தவத்தோர்கழல்போற்

இ - ள். திங்களுதிக்குங்காலத்தின் - சந்திரோதயகாலத்தில், விவாகஞ்செய்கவென - கலியாணஞ்செய்யக்கடவதென்று, செப்பி - சொல்லி, அங்கண் - அழகியகண்களையுடைய, அரசனொடுபோகி - வேந்தனுடன்சென்று, அணியும் - தரிக்கப்படுகின்ற, மணிப்பூண் - இரத்தினாபரணங்களும், சந்தனங்கள் - சந்தனங்களும், தாங்கமலையிற்கொடுவந்து-உயர்வாகியமகம்மேருவிலிருந்துகொண்டுவந்து, தூய்நீர்கங்கைதனின்மூழ்கி - பரிசுத்தமாகியசலத்தையுடைய தேவநதியில் ஸ்நானஞ்செய்து, பொங்குநெறியால் - உயர்ந்தவேதமார்க்கத்தினால், கடவுளர் - தேவர்களும், தென்புலத்தோர் - பிதிர்களும், தவத்தோர்-முனிவர்களுமாகியவிவர்களுடைய, கழல்போற்றி - பாதத்தைவணங்கி—எ-று.

ப - து. சந்திரோதயகாலத்திற் கலியாணஞ் செய்யக் கடவதென்றுசொல்லி அழகிய கண்களையுடைய வேந்தனுடன்சென்று தரிக்கப்படுகின்ற இரத்தினாபரணங்களும், சந்தனங்களும், உயர்வாகிய மகம்மேருவிலிருந்து கொண்டுவந்து பரிசுத்தமாகியசலத்தையுடைய தேவநதியில் ஸ்நானஞ்செய்து, உயர்ந்தவேதமார்க்கத்தினாற் றேவர்களும் பிதிர்களு முனிவர்களுமாகிய இவர்களுடைய பாதத்தைவணங்கி—ப-ம். (206)

## மணஞ்செய்தல்.

கிரியையொழியார்பலம்விரும்பார் கிளர்கற்பகநல்கியவெண்பட்
டுரியதெனச்சாற்றினர்வெய்யோ னுயர்ந்தவெற்பினிடைச்சென்றான்
பெரியவிந்துதோன்றுதலும் பேசுமுறைமைக்கிரியைகளா
லரியநியமஞ்செய்துமணஞ் செய்தானரச னப்போது.

இ - ள். கிரியையொழியார்-தொழிலைத்தவிராதவர்களும், பலம்விரும்பார் - பிரயோசனத்தைவிரும்பாதவர்களுமானவிவர்கள், கிளர்கற்பகநல்கிய - விளங்கியகற்பகவிருட்சங்கொடுத்த, வெண்பட்டு - வெள்ளைப்பட்டை, உரியதெனச்சாற்றினர் - உரியதென்று தரித்தார்கள், வெய்யோன் - சூரியன், உயர்ந்தவெற்பினிடைச்சென்றான் - உயர்ந்திருக்கின்ற அஸ்தமனகிரியின்மறைந்தான், பெரியவிந்து - பூரணசந்திரன், தோன்றுதலும் - உதயமாகவும், பேசுமுறைமைக்கிரியைகளால் - சொல்லப்பட்ட முறைமையையுடைய கருமங்களால், அரியநியமஞ்செய்து - அருமையானசந்தியாவந்தனஞ்செய்து, அப்போதரசன் - அப்பொழுதேசிகித்துவசவரசன், மணஞ்செய்தான் - கலியாணஞ்செய்தான்—எ-று.

எ-து. தொழிலைத்தவிராதவர்களும், பிரயோசனத்தை விரும்பாதவர்களுமான இவர்கள் விளங்கிய கற்பக விருட்சங்கொடுத்த வெள்ளைப்பட்டை யுரியதென்று தரித்தார்கள். சூரிய னுயர்ந்திருக்கின்ற வஸ்தமனகிரியின் மறைந்தான். பூரணச்சந்திர னுதயமாகவுஞ் சொல்லப்பட்ட முறைமையையுடைய கருமங்களா லருமையான சந்தியாவந்தனஞ் செய்தப்பொழுதே சிகித்துவசவரசன் கலியாணஞ்செய்தான்—எ-ம். (207)

## புணர்ந்து மகிழ்தல்

### வேறு.

இவ்வா றுயர் மந்தரவெற் பிடைமேமணஞ்செய் திவர்கள்
கவ்வாவின்பந் துய்த்து கடஞ்சூழ்வனங்க டோறுந்
செவ்வாய்மயின்மன்னவனுந் திரிந்தார் தினமும்மூன்றில்
வெவ்வாளரசன் றுயிலும் வேலைதனிற்சூடாலை.

இ-ள். இவ்வாறுயர் - இவ்வண்ணமுயர்ந்த, மந்தரவெற்பிடை - மந்தரமலையினிடத்தில், மணஞ்செய்து - கலியாணஞ்செய்து, இவர்கள் - இவ்விருவரும், கவ்வாவின்பந்துய்த்து - பற்றில்லாத சுகத்தைப்புசித்து, கடஞ்சூழ் - மலைப்புறஞ்சூழ்ந்த, வனங்கடோறும் - கானகங்கடோறும், செவ்வாய்மயில் - சிவந்தவாயையுடைய மயில்போன்ற சூடாலையும், மன்னவனும் - சிகித்துவசவரசனும், திரிந்தார் - சஞ்சரித்தார்கள், தினமும்மூன்றில் - மூன்மூன்று நாளில், வெவ்வாளரசன் - கொடியவாளாயுதத்தையுடையவேந்தன், துயிலும் வேலைதனில் - நித்திரைசெய்கின்ற சமயத்தில், சூடாலை - சூடாலையானவள்—எ-ம்.

எ-து. இவ்வண்ணமுயர்ந்த மந்தரமலையினிடத்திற் கலியாணஞ்செய் திவ்விருவரும் பற்றில்லாத சுகத்தைப் புசித்து மலைப்புறஞ்சூழ்ந்த கானகங்கடோறுஞ் சிவந்த வாயையுடைய மயில்போன்ற சூடாலையும் சிகித்துவசவரசனுஞ் சஞ்சரித்தார்கள். முன் மூன்று நாளிற் கொடிய வாளாயுதத்தையுடைய வேந்தன் நித்திரைசெய்கின்ற சமயத்திற் சூடாலையானவள்—எ-ம். (208)

## இடையிலரசுசெய்தல்.

சென்றுசென் றுமன்னன் றேசநீதிநடாத்தி
யொன்றும்பாயறன்னி லொழியாதவள்போன்மீளு
மன்றன்மதனிகைப்பேர் மனைவியானமாது
நின்றசிலநாளிற்பின் னெஞ்சினென்றைநினைப்பாள்,

இ-ள். சென்றுசென்று-அடிக்கடிபோய், மன்னன்-அரசனது, தேச நீதிநடாத்தி - தேசத்தைநீதியாகநடப்பித்து, ஒன்றும்பாயறன்னில்-பொருந்தாநின்றபடுக்கையில், ஒழியாதவன்போல் - நீங்காதவனைப்போல மீளும் - திரும்புவள், மன்றல் - விவாகஞ்செய்த, மதனிகைப்பேர் - மதனிகையென்னுநாமத்தையுடைய, மனைவியாம் மாது - பாரியாளாகிய சூடாலையானவள், நின்ற சிலநாளிற்பின் - (இப்படி) யிருந்த சிறிதுநாளின்பின்பு நெஞ்சிலொன்றை நினைப்பாள்-மனதிலொன்றைச் சிந்தனைசெய்வாள்—எ-று.

எ-து. அடிக்கடிபோ யரசனது தேசத்தை நீதியாக நடப்பித்துப் பொருந்தாநின்ற படுக்கையில் நீங்காதவனைப்போலத் திரும்புவள். விவாகஞ்செய்த மதனிகையென்னு நாமத்தையுடைய பாரியாளாகிய சூடாலையானவள் இப்படியிருந்த சிறிதுநாளின் பின்பு மனதிலொன்றைச் சிந்தனைசெய்வாள்—எ-ம்.

(இ-எ-க-ம்.) தனதிஷ்டப்பிரகாரமாதன்பதி நீங்குமென்றறிந்தன ளென்பதாம். (209)

## செல்வத்தி லிராகமுளவோவெனப் பரிசோதிக்கத் தொடங்கல்.

உற்றபோகங்களிற்பற் றொன்றுமிவனுக்கென்றுந்
துற்றபோகங்களினாற் சோதிப்போமென்றெண்ணி
கற்றமாயையாலே கைதவமொன்றிழைத்தாட்
சுற்றுந்தேவர்நெருங்கச் சுரர்கோன்வனத்திற்றோன்ற.

இ-ள். உற்றபோகங்களில் - (இவ்வுலகத்திற்பொருந்திய) போகங்களில், இவனுக்கென்றும் - இவ்வரசனுக்கெப்போதும், பற்றொன்றுறாது - ஆசைபொருந்தாது, துற்றபோகங்களினால் - மிகுந்த (தேவ) போகங்களினால், சோதிப்போமென்றெண்ணி - சோதிக்கவேண்டுமென்று நினைத்து, கற்றமாயையால் - தானற்பியாசஞ் செய்திருக்கின்ற (அணிமாமுதலிய) வித்தைகளினால், சுற்றுந்தேவர்நெருங்க - நான்குபுறத்திலுந் தேவர்கள் சூழ்ந்துவர, சுரர்கோன் - தேவேந்திரன், வனத்திற்றோன்ற - (இந்தக்) கானகத்திற் றோற்றும்படியாக, கைதவமொன்றிழைத்தாள் - ஒருமாயைசெய்தாள்—எ-று.

எ-து. இவ்வுலகத்திற் பொருந்திய போகங்களி லிவ்வரசனுக்கெப்போது மாசைபொருந்தாது. மிகுந்ததேவபோகங்களினாற் சோதிக்கவேண்டுமென்று நினைத்துத் தானற்பியாசஞ் செய்திருக்கின்ற அணிமாமுதலிய வித்தைகளினால் நான்குபுறத்திலுந் தேவர்கள் சூழ்ந்துவர தேவேந்திர னிந்தக்கானகத்திற் றோற்றும்படியாக ஒரு மாயை செய்தாள்—எ-ம். (210)

இதுவுமது.

வந்தமகவான்றன்னை மன்னன்கண்டுவணங்கி
முந்துபூசைசெய்து முதல்வநீயிங்கெய்த
வெந்தவாமுன்செய்தே னென்னவிமையோரிறையு
மந்தமன்னைநோக்கி யன்பாலிவ்வாறறைவான்.

இ - ள். வந்தமகவான்றன்னை - வந்திருக்குந்தேவேந்திரனை, மன்னன் - அரசனானவன், கண்டுவணங்கி - பார்த்துநமஸ்கரித்து, முந்துபூஜைசெய்து - முன்னே ஆராதனைசெய்து, முதல்வ - முதன்மையானவரே, நீயிங்கெய்த - நீரிவ்விடத்தில்வர, எந்தவாமுன்செய்தேனென்ன - என்னதருமத்தைமுன் செய்தேனோவென்றுசொல்ல, இமையோரிறையும் - தேவேந்திரனும், அந்த மன்னைநோக்கி - அச்சிசித்துவசராசனைப்பார்த்து, அன்பால் - அன்பினால், இவ்வாறறைவான் - இவ்வண்ணஞ்சொல்லுவான்—எ - று.

எ - து. வந்திருக்குந் தேவேந்திரனை யரசனானவன் பார்த்து நமஸ்கரித்து முன்னே ஆராதனைசெய்து முதன்மையானவரே! நீரிவ்விடத்தில் வர என்னதருமத்தை முன்செய்தேனோ வென்று சொல்ல, தேவேந்திரனு மச்சிசித்துவச அரசனைப்பார்த் தன்பினா லிவ்வண்ணஞ்சொல்வான்—எ-ம். (211)

உனதுகுணத்தினலத்தா லும்பருடனான்வந்தேன்
சனகவுலகமுமக்கே கடவதாமங்குள்ளோர்
நினதுவரவுநோக்கி நின்றாரரம்பைமுதலோர்
வனசவதனம்மலர மார்த்தாண்டனைப்போல்வருவாய்.

இ - ள். உனதுகுணத்தினலத்தால் - உமதுகுணத்தி னன்மையினால், உம்பருடனான்வந்தேன் - தேவர்களோடுமியான்வந்தேன், சனகவுலகம் - தேவலோகம், உமக்கேகடவதாம் - உமக்கேயாகக் கடவதென்று, அங்குள்ளோர் - அவ்விடத்திலுள்ள ஸ்திரீகள், நினதுவரவுநோக்கிநின்றார் - உமது வரவைப் பார்த்திருக்கிறார்கள், அரம்பைமுதலோர் - அரம்பைமுதலிய தெய்வஸ்திரீகள், வனசவதனமலர - அம்புசமலரைப்போல முகமானது விகசிக்க, மார்த்தாண்டனைப்போல் வருவாய் - சூரியனைப்போல வருவாய்—எ - று.

எ - து. உமது குணத்தினன்மையினாற் றேவர்களோடுமியான் வந்தேன், தேவலோக முமக்கேயாகக் கடவதென் றவ்விடத்திலுள்ள ஸ்திரீகளுமது வரவைப் பார்த்திருக்கிறார்கள். அரம்பை முதலிய தெய்வஸ்திரீகளது அம்புசமலரைப்போல முகமானது விகசிக்கச் சூரியனைப்போல வருவாய்—எ-ம். (212)

கற்பமளவுமிருந்து கடவுட்போகமெல்லாஞ்
சிற்பமன்றித் துய்க்கச் சீவன்முத்திமன்னா
அற்பந்தாழாதடைவா யழைப்பான்வந்தேனென்ற
சொற்பங்கிகளைக்கேட்டு தூயமன்னன்சொல்வான்.

இ-ள். கற்பமளவுமிருந்து - கற்பகாலமட்டுமிருந்து, கடவுட்போகமெல்லாம் - தேவபோகங்களனைத்தையும், சிற்பமன்றித் துய்க்க - விசித்திரமாகப் புசிக்க, சீவன்முத்திமன்னா - சீவன்முத்தியையுடையவரசனே, அற்பந்தாழாதடைவாய் - க்ஷணநேரந்தங்காமல்வருவா (யென்று) அழைப்பான் வந்தேனென்ற - அழைக்கும்பொருட்டு வந்தேனென்று (சொல்லிய தேவேந்திரன்) சொற்பங்கிகளைக் கேட்டு - சொல் விசித்திரங்களைக்கேட்டு, தூயமன்னன்சொல்வான் - மேலானவரசன் கூறுவான்—எ-று.

எ-து. கற்பகாலமட்டு மிருந்து தேவபோகங்க ளனைத்தையும் விசித்திரமாகப் புசிக்கச் சீவன் முத்தியையுடைய அரசனே! க்ஷண நேரந்தங்காமல் வருவாயென் றழைக்கும்பொருடு வந்தேனென்று சொல்லிய தேவேந்திரன் சொல் விசித்திரங்களைக் கேட்டு மேலான வரசன் கூறுவான்—எ-ம். (213)

அங்குந்துறக்கத்தின்ப மனைத்துமறிவேனெந்தா
யிங்கென்றங்கென்றில்லை யெங்குஞ்சுவர்க்கமெனக்குப்
பொங்குஞ்சுகமேயெங்கும் பொன்னாடதனால்வேண்டேன்
றங்கும்பதமேவென்றே சற்றும்பற்றற்றுரைப்ப.

இ-ள். அங்கும் - அங்கு, துறக்கத்து - சுவர்க்கத்திவ்விடத்திலுள்ள, இன்பமனைத்தும் - சுகங்களையெல்லாம், எந்தாயறிவேன் - எனது பிதாவான (தேவனேயா)னறிவேன், இங்கென்றும் - இவ்விடமென்றும், அங்கென்றில்லை - அவ்விடமென்னும் பேதமில்லை, எனக்கு - அடியேனுக்கு, எங்குஞ் சுவர்க்கம் - எவ்விடத்துஞ்சுவர்க்கமேயாம், எங்கும் - எவ்விடத்திலும், பொங்கு சுகமே - மிகுந்தசுகமேயாம், பொன்னாடு - தேவலோகத்தை, அதனால் வேண்டேன் - ஆதலால் விரும்பேன், தங்கும் - நீவாசஞ்செய்யாநின்ற, பதமே வென்று - இடத்துக்குப்போயென்று, சற்றும் பற்றற்றுரைப்ப - எவ்வள வேனுமிச்சையின்றி யரசன்சொல—எ-ம்.

எ-து. அவ்விடத்திலுஞ் சுவர்க்கத்திலுள்ள சுகங்களையெல்லாம் எனதுபிதாவான தேவனே யானறிவேன். இவ்விடமென்று மவ்விடமென்று பேதமில்லை, அடியேனுக் கெவ்விடத்துஞ் சுவர்க்கமேயாம், எவ்விடத்திலு மிகுந்தசுகமேயாம், தேவலோகத்தையாதலால் விரும்பேன்; நீர் வாசஞ்செய்யாநின்ற வி..த்துக்குப் போமினென் றெவ்வளவேனு மிச்சையின்றி யரசனசொல்ல—எ-ம்.

(இ-கு-க-ம்.) தனதுமாயையாற்றேவேந்திரன் முதலியோர்களாகவந்து தேவபோகங்கொடுக்கப் பிரார்த்தித்தழைத்து அதுவொருசுகமாகத்தோற்று முற்றனதுசுகத்திற் சுகித்திருந்ததைத்தெரிந்தன னென்பதாம் (214)

## அபிமானமகங்காரமானது வேடமுளவோவெனப் பரிசோதித்தல்.

மடங்கியமரர்கூட்டம் வந்தவழியேபோகத்
தொடங்குமாயைபலவாற் சோதித்திடவுநெஞ்சு
மடங்கிவிடுதல்கண்டு மயலோர்மாயையாலே
தடங்கண்மயில்சூடாலைத் தனிசோதனைசெய்தனளே.

இ-ள் மடங்கியமரர்கூட்டம்-திரும்பித்தேவகுழாங்கள், வந்தவழியே போக - வந்தமார்க்கத்திற்செல்ல, தொடங்குமாயை - தொடங்காநின்ற மாயையினால், பலவாற்சோதித்திடவும் - நாநாவிதமாகச் சோதனைசெய்யவும், நெஞ்சமடங்கிவிடுதல்கண்டு - மனநசித்ததைப்பார்த்து, அயல்-பக்கத்தில், ஓர்மாயையால் - ஒருமாயாவித்தையினால், தடங்கண் மயிற்சூடாலை - விசாலமாகிய கண்களையுடைய மயில்போல சூடாலையானவள், தனிச்சோதனை செய்தனள் - ஏகாந்தமா யொருசோதனை செய்தாள்—எ-று

எ று. திரும்பித் தேவகுழாங்கள் வந்த மார்க்கத்திற் செல்லத் தொடங்காநின்ற மாயையினால் நாநாவிதமாகச் சோதனை செய்யவும், மனநசித்ததைப் பார்த்துப் பக்கத்திலொரு மாயாவித்தையினால் விசாலமாகிய கண்களையுடைய மயில்போன்ற சூடாலையானவள் ஏகாந்தமா யொருசோதனைசெய்தாள்—எ-ம். (215)

## தாலேஸ்சோரனுகிக்கூடல்.

திங்களுதித்தவளவிச் செபித்துக்கங்கைக்கரையிற்
றுங்கவரசனிருப்பத் தோகையன்னுள்புறம்போய்
கொங்குமலரானிறைந்த கோலவமளியொன்றிற்
றங்குமொருதூர்த்தனைத்தான் சங்கற்பித்துப்புணர்ந்தாள்.

இ-ள். திங்களுதித்தவளவில் - சந்திரோதயமான சமயத்தில், கங்கைக்கரையில்-கங்காதீரத்தில், செபித்து-செபஞ்செய்து, துங்கவரசனிருப்ப - பரிசுத்த முன்ன சிகித்துவசனிருக்க, தோகையன்னுள் - மயிலுக்கொப்பாகிய சூடாலையானவள், புறம்போய் - புறப்பாங்கய (கொடியவீட்டிற்) சென்று, கொங்குமலரானிறைந்த - கொங்குமலர்களினுனிரம்பிய, கோ

லமளியொனறில் - அழகியவொருசயனத்தில், தங்குமொரு தூர்த்தனை-வசிக்கின்றவொருதூர்த்தபுருடனை, தான்சங்கற்பித்து - தானுண்டாக்கி, புணர்ந்தான்-கூடினுள்—எ-று.

எ - து. சந்திரோதயமான சமயத்திற் கங்காதீரத்திற் செஞ்செய்து பரிசுத்தமுள்ள சிகித்துவசவாசனிருக்க, மயிலுக்கொப்பாகிய சூடாலையானவள் புறம்பாகிய கொடியவீட்டிற் சென்று கோங்குமலர்களினு னிரம்பிய அழகிய வொருசயனத்தில் வசிக்கின்ற ஒரு தூர்த்தபுருடனைத் தானுண்டாக்கிக்கூடினுள்—எ-ம். (216)

## அரசன்கண்டு மகிழ்தல்.

சந்திமுடித்துமாதைச் சாரலூறுந்தேடி
வந்தவழியிற்புணர்ந்து மகிழுமலரைநோக்கிச்
சிந்தைவிகற்பமின்றிச் சித்தமகிழ்ந்தங்கவரை
முந்தவிடையூறறநீர் முயங்குமென்றுபோனுன்.

இ - ள். சந்திமுடித்து - சந்தியாவந்தனஞ்செய்து, மாதை - மதனிகையானபெண்ணை, சாரலூறுந்தேடி-மலைப்பக்கங்களெல்லாந்தேடி, வந்தவழியில் - வரப்பட்டமார்க்கத்தில், புணர்ந்துமகிழும்-கூடிக்களிக்கின்ற, அவரை நோக்கி - அவர்களைப்பார்த்து சிந்தை விகற்பமின்றி - மனோவிகற்பமில்லாமல், சித்தமகிழ்ந்து - மனமகிழ்ச்சியாய், அங்கவரை - அவ்விடத்திலவர்களை, முந்த-முன்னனுபவித்தபிரகாரம், இடையூறற-விக்கினமில்லாமல், நீர்முயங்குமென்று போனுன்-நீங்கள் புணருங்களென்று (சொல்லிப்)போனுர்-எ-று.

எ - து. சந்தியாவந்தனஞ் செய்து மதனிகையான பெண்ணை மலைப்பக்கங்களெல்லாந்தேடி வரப்பட்ட மார்க்கத்திற் கூடிக்களிக்கின்ற அவர்களைப் பார்த்து மனோவிகற்பமில்லாமல் மனமகிழ்ச்சியாய் அவ்விடத்தி லவர்களை முன்னனுபவித்தப் பிரகாரம் விக்கினமில்லாமல் நீங்கள் புணருங்களென்று சொல்லிப்போனுர்—எ-ம். (217)

## தூர்த்தவிலக்கணத்துடனெதிரே நிற்றல்.

---

போகமறைந்து முகூர்த்தம் போனபின்னரிவளும்
வேகியாகப்போனுள் விகற்பமின்மைகாண்பா

ளேகியமளித்தொடர்ச்சி யெழிலும்வடிவுந்தோன்ற
யோகிமுன்னர்நின்றா ளொதுங்கிநாணிவணங்கி.

இ-ள். மறைந்துபோகி - மறைந்துபோய், மூகூர்த்தம்போனபின்னர் - இரண்டுநாழிகை கழிந்தபின்பு, இவளும் - இந்தமதனிகையும், வெகியாது போனான் - கோபிக்காமற்போனவனாகிய அரசனிடத்தில், விகற்பமின்மை - விகற்பமில்லாமையை, காண்பான்போகி - பார்க்கும்படிபோய், அமளித்தொடர்ச்சி - படுக்கையின்றொடர்பும், எழிலும் - அதினழகும், வடிவுந்தோன்ற - அதினுருவமுந் தோற்றும்படி, யோகிமுன்னரொதுங்கி - இராசயோகிமுன்பு பதுங்கி, நாணிவணங்கி நின்றாள் - வெட்கத்துடன் வணக்கமுற்று நின்றனள்—எ-று.

எ-து. மறைந்துபோய் இரண்டுநாழிகை கழிந்தபின்பு இந்த மதனிகையும் கோபிக்காமற் போனவனாகிய அரசனிடத்தில் விகற்பமில்லாமையைப் பார்க்கும்படிபோய்ப் படுக்கையின் றொடர்பும் அதினழகும் அதினுருவமுந் தோற்றும்படி விராசயோகி முன்பு பதுங்கி வெட்கத்துடன் வணக்கமுற்று நின்றனள்—எ-ம். (218)

## அரசன்குளிர்ந்துரைத்தல்-வேறு.



மதனிகைப்பெயர் மங்கையுமிவ்வணம்வருந்தி
விதனமுற்றனள்போ னிற்பவேந்தனுஞ்சமாதி
யதனையுற்றிருந்தா னறிவுற்றனன்பார்த்துக்
கதமறக்குளிர்புந்தி யான்மெல்லெனக்கழறும்.

இ-ள். மதனிகைப்பெயர் - மதனிகையென்னு நாமத்தையுடைய, மங்கையும் - சூடாலையும், இவ்வணம்வருந்தி - இவ்விதமாய் நொந்து, விதனமுற்றனள்போனிற்க - விசனத்தையடைந்தவளைப்போல நிற்க, வேந்தனும் - அரசனும், சமாதியதனையுற்றிருந்தான் சமாதியை யடைந்திருந்தான், அறிவுற்றனன் - சமாதியைவிட்டறியவந்த சிகித்துவசன், பார்த்து - (மதனிகையைக்) கண்டு, கதமற - கோபமில்லாமல், குளிர்புந்தியால் - சாந்தமுள்ள புத்தியினால், மெல்லெனக்கழறும் - மிருதுவாகச்சொல்லுவர்—எ-று.

எ-து. மதனிகையென்னு நாமத்தையுடைய சூடாலையுமிவ்விதமாய் நொந்து விசனத்தையடைந்தவளைப்போல நிற்க, அரசனுஞ் சமாதியையடைந்திருந்தான். சமாதியை விட்டறியவந்தசிகித்துவசன் மதனிகையைக்கண்டு கோபமில்லாமற் சாந்தமுள்ள புத்தியினால் மிருதுவாகச் சொல்லுவார்—எ-ம் (219)

## சோரத்தைச் சகிக்கவேண்டுமெனல்.

——( ·.· )——

விரைவில்வந்ததென் முயங்குறுமகிணனைவிட்டு
நிரைவளைக்கையாய்மீண்டுபோயின்பமேநிறையென்
றுரைசெய்காலையின் மதனிகையுரைசெய்வாளுயர்ந்த
புரையிலாதவர் பிழைபலபொறுப்பதுபுகழே.

இ - ள். முயங்குறுமகிணனைவிட்டு - புணராநின்ற நாயகனை விட்டு விரைவில்வந்ததென் - சீக்கிரமாக வந்ததென்ன, நிரைவளை - வரிசையாக வளையலையணிந்த, கையாய் - கரங்களையுடைய பெண்ணே, மீண்டுபோய் - திரும்பிப்போய் - இன்பநிறையென்று சுகத்தை நிறைப்பாயென்று, உரைசெய்காலையில் - அரசன் சொன்ன சமயத்தில் மதனிகை யுரைசெய்வாள் - மதனிகைசொல்லுவாள், புரையிலாதவர் பலபிழைபொறுப்பது - குற்றமற்றவர்கள் (மூடர்களது) பல குற்றங்களைச் சகிப்பது, உயர்ந்தபுகழே - மேலான கீர்த்தியேயாம்—எ-று.

எ - து. புணராநின்ற நாயகனைவிட்டுச் சீக்கிரமாக வந்ததென்ன? வரிசையாக வளையலையணிந்த கரங்களையுடைய பெண்ணே! திரும்பிப்போய் சுகத்தைநிறைப்பாயென்று அரசன் சொன்னசமயத்தில் மதனிகை சொல்லுவாள் குற்றமற்றவர்கள் மூடர்களது பல குற்றங்களைச் சகிப்பது மேலானகீர்த்தியேயாம்—எ-ம். (220)

மாதராரியலளவறு பேதமாய்மருளுங்
காதலோவெனிலெண்மடி கருமமொன்றறியா
ராதலாலெனதரும்பிழை பொறுத்தருளென்னப்
போதபாரகன் மதனிகைக் கிவ்வுரைபுகன்றான்.

இ - ள். மாதராரியல் - பெண்களுடைய குணமானது, அளவறுபேதமாய்மருளும் - அனந்தபேதமாகமயக்கும், காதலோவெனில் - ஆசையோ வென்றால், எண்மடி - எட்டுப்பங்காம், கருமமொன்றறியார் - ஒருகாரியமுந்தெரியமாட்டார்கள், ஆதலால் ஆதலினால், எனதரும்பிழை - என்னுடைய அரிதானதப்பிதத்தை, பொறுத்தருளென்ன - சகித்தருள்வாயென்று (மதனிகை சொல்ல), போதபாரகன் - ஞானபாரகனான இந்திரதுவசன், மதனிகைக்கு - மதனிகையான (பாரியாளுக்கு), இவ்வுரைபுகன்றான் - இந்தவசனத்தைச் சொன்னான்—எ-று.

எ - து. பெண்களுடைய குணமான தனந்தபேதமாக மயங்கும், ஆசையோவென்றா லெட்டுப்பங்காம், ஒருகாரியமுந் தெரியமாட்டார்க ளாதலினா லென்னுடைய அரிதான தப்பிதத்தைச்

சமித்தருள்வாயென்று மதனிகைசொல்ல ஞானபாரகனான சிகித்துவசன் மதனிகையான பாரியாளுக் கிந்தவசனத்தைச் சொன்ஞன்—எ-ம். (221)

## அரசன் சமதிருஷ்டியிலிருத்தல்.

வானிலேமரமுளைக்கினு முனிவென்கண்வாரா
தானமேலவரிகழ்வரென் றன்னமேயுன்னை
மேனயந்துபெண் ணெனவிரும்பலெனென்றுவேந்த
னீனமிலதோர் சமமுறுபார்வையோடிருப்ப.

இ - ள். வானில் - ஆகாயத்தில், மரமுளைக்கினும் - விருக்ஷமுண்டானாலும், முனிவென்கண்வாரா - கோபமென்னிடத்தில் வரமாட்டாது, ஆன மேலவர் - ஆகியசத்துக்கள், இகழ்வரென்று - நிந்திப்பார்களென் (றன்று வதேயன்றி), அன்னமே - அன்னத்தைப்போல நடையையுடையவளே, உன்னை மேனயந்து - உன்னை மேலாகவிரும்பி, பெண்ணெனவிரும்பலெனென்று - மனைவியாக இச்சிக்கிலேனென்றுசொல்லி, வேந்தன் - சிகித்துவசவாரசனானவன், ஈனமில்லது - குறைவில்லாததான, ஓர்சமமுறு - ஒப்பற்ற சமத்துவமுள்ள, பார்வையோடிருப்ப - திருஷ்டியுடனிருக்க—எ-று.

எ - று. ஆகாயத்தில் விருக்ஷமுண்டானாலும் கோபமென்னிடத்தில் வரமாட்டாது. ஆகிய சத்துக்கள் நிந்திப்பார்களென் றன்றுவதேயன்றி அன்னத்தைப்போல நடையையுடையவளே! உன்னை மேலாகவிரும்பி மனைவியாக இச்சிக்கிலேனென்றுசொல்லிச் சிகித்துவசவாரசனானவன் குறைவில்லாததான ஒப்பற்ற சமத்துவமுள்ள திருஷ்டியுடனிருக்க—எ-ம்.

(இ-அ-க-ம்.) அபிமானவலங்கார மின்மையைக்கண்டனனென்பதாம்.

## சின்மாத்திரமாய்ச் சகலபற்றையு நீக்கிஞனெனல்.

கண்டுநின்றகுடாலையுங் கருத்திஞனினைவான்
மண்டிராகமுங்கோபமும் வேரறமாய்த்தான்
மிண்டுபோகமுந் செல்வமுமேவிடாதினி
நின்டிறற்புன்ஞானத்தின் கரைகண்டுசேர்த்தான்.

இ-ள். கண்டுநின்றகுடாலையும் - பார்த்திருக்க குடாலையானவளும், கருத்திஞனினைவான் - மனதிஞனிக்கிப்பான், மண்டிராகமும் - மிகுத்த காமத்தையும், கோபமும் - குரோதத்தையும், வேரறமாய்த்தான் - மூலத்து

டன் கெடுத்தான், மின்போகமும் - மிகுந்தபோகங்களும், செல்வமும் - சிறந்த சித்திகளும், இவனைமேவிடாது - இவ்வாசனை யடையமாட்டாது, திணடிறற்புயன் - வலிபபுசத்தை யுடைய அரசனானவன், ஞானத்தின் - ஞானத்தினது, கரைகண்டு சேர்ந்தான் - முடிவைத்தரிசித்தடைந்தான்—எ-று.

எ-து. பார்த்திருந்த சூடாலையானவளு மனதினுற் சிந்திப்பாள். மிகுந்த காமத்தையுங் குரோதத்தையு மூலத்துடன் கெடுத்தான். மிகுந்தபோகங்களுஞ் சிறந்த சித்திகளு மிவ்வாசனை யடையமாட்டாது. வலிய புசத்தையுடைய அரசனானவன் ஞானத்தினது முடிவைத் தரிசித்தடைந்தான்—எ-ம். (223)

## இனிப்பரிசோதிக்குங் கருத்தையும் போதிக்கவந்த மறைவையு நீக்கிச சூடாலையாக நிற்றல்.

மறைதன்மட்டினி மதனிகைவடிவினைமாற்றி
முறைமையானசூடாலையாய் முன்னிற்பனென்று
மிறைவன்முன்புசூடாலை யாய்த்தோன்றவுமிவளைப்
பொறையினின்றவ னோக்கிநல்வியப்பொடுபுகலும்.

இ-ள். மறைதன்மட்டு - மறைந்திருப்பதுபோதும், இனிமதனிகை வடிவினைமாற்றி - இப்போது மதனிகையென்னு முருவத்தைவிடுத்து, முறைமையான - தனக்குமுறைமையா யிருக்கின்ற, சூடாலையாய்-சூடாலைவடிவத்தை யுடையவளாய், முன்னிற்பனென்று-எதிரேநிற்பேனென்று நினைத்து, இறைவன்முன்பு - அரசன்முன்னே, சூடாலையாய்த்தோன்றவும் - சூடாலையாகத்தோற்றவும், இவளை - இச்சூடாலையை, பொறையினின்றவனோக்கி - உபசாந்ததிலிருந்தவன்பார்த்து, நலவியப்பொடுபுகலும் - நல்ல அதிசயத்துடன் சொல்லுவார்—எ-று.

எ-து. மறைந்திருப்பதுபோதும் இப்போது மதனிகையென்னு முருவத்தைவிடுத்துத் தனக்கு முறைமையா யிருக்கின்ற சூடாலை வடிவத்தை யுடையவளா யெதிரேநிற்பேனென்று நினைத்து அரசன் முன்னே சூடாலையாகத் தோற்றவும் இச்சூடாலையை யுபசாந்தத்தி லிருந்தவன்பார்த்து நல்ல அதிசயத்துடன் சொல்லுவார்.

## அரசன் விஞவுக்குத் தாங்கூறல்.

வடிவும்வார்த்தையு மொடுக்கமுமற்றுளகுணமு
முடிவிலாதசூடாலைபோற்றோன்றினைமுன்னே

நெடியகண்ணினீ யாரெனநிருபதிகேட்பக்
கடிமணஞ்செய்சூ டாலைநாளெனமற்றுங்கழறும்.

இ-ள். வடிவும் - உருவமும், வார்த்தையும் - வசனமும், ஒடுக்கமும்-அடக்கமும், மற்றளகுணமும்-இன்னமுமுண்டாகிய சகலகுணங்களும், முடிவிலாத சூடாலைபோல் - அளவற்றிருக்கின்ற சூடாலையைப்போல, முன்றோன்றினை - (என்) முன்றோற்றினாய், நெடியகண்ணி - நீண்டகண்களையுடையவளே, நீயாரென - நீயாரென்று, நிருபதிகேட்ப - அரசன்கேட்க, கடிமணஞ்செய் - சீர்கலியாணஞ்செய்த, சூடாலைநாளென - சூடாலையானவள் யானென்றுசொல்லி, மற்றுங்கழறும் - இன்னமுஞ் சொல்லுவாள்—எ-று.

எ-து. உருவமும் வசனமு மடக்கமு மின்ன முண்டாகிய சகலகுணங்களு மளவற்றிருக்கின்ற சூடாலையைப் போல வென்முன் றோற்றினாய், நீண்டகண்களை யுடையவளே! நீயாரென்று அரசன் கேட்க, சீர்கலியாணஞ்செய்த சூடாலையானவள் யானென்றுசொல்லி யின்னமுஞ்சொல்லுவாள்—எ-ம். (225)

மறுவேடங்கொண்டு வந்தவள் அடியேனே யெனல்.

கும்பவேடமு மதனிகைவேடமுங்கொடுநா
னம்பனேயுனை யுணர்த்தினேன் ஞானத்தினிலைமை
யிம்பர்மாயையாற் சோதனைபண்ணினேனிவற்றைக்
கம்பமின்றிய தியானத்தாற்காண்குதியென்ன.

இ-ள். நான் - யான், கும்பவேடமும் - கும்பமுனி வடிவத்தையும், மதனிகைவேடமும் - மதனிகைவடிவத்தையும், கொடு - கொண்டு, நம்பனே - எனதுநாயகனே, உனையுணர்த்தினேன் - உனதாத்மஞானத்தை யறிவித்தேன், ஞானத்தினிலைமை - ஞானத்தினது நிச்சயத்தை, இம்பர்-இவ்விடத்தில், மாயையால் - மாயையினால், சோதனைபண்ணினேன் - பரிசோதித்தேன், இவற்றை - இவைகளை, கம்பமின்றியதியானத்தால் - நிருவிகற்பசமாதியினால், காண்குதியென்ன - பார்ப்பாயென்றுசொல்ல—எ-று.

எ-து. யான் கும்பமுனிவடிவத்தையு மதனிகை வடிவத்தையுங்கொண்டு எனது நாயகனே! உனதாத்மஞானத்தை யறிவித்தேன். ஞானத்தினது நிச்சயத்தை இவ்விடத்தில் மாயையினாற் பரிசோதித்தேன். இவைகளை நிருவிகற்பசமாதியினாற் பார்ப்பாயென்றுசொல்ல—எ-ம். (226)

## ஞானதிருஷ்டியாற் றெரிந்தா னெனல்.

ஞானயோகமாந் தியானத்தா னரபதிநோக்கி
மானார்ச்சியந் துறந்ததுமுதலெனவந்து
தானலஞ்செய்சூ டாலைதான்றோன்றியதளவா
யீனமின்றியே யாவையுமுணர்ந்தனனிருந்து.

இ - ள். ஞானயோகமாம் - சைதன்யத்திலயிக்யமான, தியானத்தால் - கருத்தினால், நரபதிநோக்கி - அரசன்பார்த்து, மானார்ச்சியந் துறந்தது முதலென - மாட்சிமைப்பட்ட நகரத்தைநீக்கின நாள்முதலாக, வந்துதானலஞ்செய் - (தானே) வந்தனுபவத்தைவிளக்கின, சூடாலைதான்றோன்றியதளவாய் - சூடாலையாகத்தோற்றின பரியந்தம், ஈனமின்றியிருந்து ஒன்றுங்குறைவில்லாமல் சமாதியிலிருந்து, யாவையுமுணர்ந்தனன் - சகலத்தையுமறிந்தான்—எ-று.

எ-து. சைதன்யத்தில் ஐயிக்யமான கருத்தினால் அரசன் பார்த்து மாட்சிமைப்பட்ட நகரத்தை நீக்கினநாள் முதலாகத் தானே வந்தனுபவத்தை விளக்கின சூடாலையாகத் தோற்றின பரியந்தம் ஒன்றுங்குறை வில்லாமற் சமாதியிலிருந்து சகலத்தையும் அறிந்தான்—எ-ம். (227)

## துதித்தாலிங்கனஞ்செய் தாநந்தத்தின் மூழ்குதல்.

தியானநீங்கிநன் புளகமேநிறைந்தனன்றிண்டோ
டயாவுமன்புமீ தென்னைத்தயங்குசூடாலைக்
குயாசலந்தழீஇ நெடிதிருந்தொன்றுமேற்கூறா
னியாயமன்னவ னாநந்தத்தமிழ்ந்தனனணிமிடம்.

இ - ள். தியானநீங்கி - சமாதியைவிட்டு, நன்புளகநிறைந்தனன் - நல்லபுளகாங்கிதநிறைந்தவனாய், திண்டோள் - பலம்பொருந்திய புசத்தினால், தயாவும் - தயவும், அன்பும் - ஆசையும், ஈதென்னைத்தயங்கு சூடாலை - இதென்னவென்றுசொல்லும்படியாக பிரகாசிக்கின்ற சூடாலையினது, குயாசலந்தழீஇநெடிதிருந்து - தனகிரியைத்தழுவி வெகுநேரமிருந்து, ஒன்றுமேற்கூறான் - ஒன்றையுமேற்சொல்லாதவனாய், நியாயமன்னவன் - நீதியுள்ளவரசன், நிமிடம் - ஒருக்ஷணம், ஆநந்தத்தமிழ்ந்தனன் - ஆநந்தத்தின் மூழ்கினான்—எ-று.

எ-து. சமாதியைவிட்டு நல்ல புளங்காங்கித நிறைந்தவனாய்ப் பலம்பொருந்திய புசத்தினாற் றயவுமாசையு மிதென்னவென்று

சொல்லும்படியாகப்பிரகாசிக்கின்ற சூடாலையினது தனகிரியைத் தழுவி வெகுநேரமிருந்தொன்றையு மேற்சொல்லாதவனாய் நீதியுள்ள வரச னொருக்ஷண மாநந்தத்தின் மூழ்கினான்—எ—ம்.

## கைம்மாறுளவோவென வினாவுதல்.

மடியின்மேலந்த வஞ்சியைவைத்தவனுரைப்பான்
முடிவில்பேரிருட் குகைநிகர்மோகநின்றென்னை
நெடியபுந்தியா லுய்த்தனையுனக்கெவர்நிகரோ
கொடிமருங்குலா யியற்றுகைம்மாறுமொன்றுளவோ.

இ - ள். மடியின்மேல் - துடையின்மேல், அந்தவஞ்சியைவைத்து-அந்த சூடாலையைவைத்துக்கொண்டு, அவனுரைப்பான்-அவ்வரசன் சொல்லுவான், முடிவில்-அளவற்ற, பேரிருட்குகைநிகர்-பெரிதான இருண்மூழைக்கொப்பாகிய, மோகநின்றென்னை - மோகத்திலிருந்தவென்னை, நெடியபுந்தியால்-விசாலமான அறிவினால், உய்த்தனை-கரையேற்றினாய், உனக்கெவர்நிகர் - உனக்காரொப்பானவர்கள், கொடிமருங்குலாய் - கொடிபோன்ற இடையையுடைய பெண்ணே, இயற்று-செய்கின்ற, கைம்மாறு மொன்றுளவோ - பதிலுபகாரமொன்றுண்டோ சொல்வாய்—எ-று.

எ - து. துடையின்மேலந்தச் சூடாலையை வைத்துக்கொண்டு அவ்வரசன் சொல்லுவான். அளவற்ற பெரிதான இருண்மூழைக்கொப்பாகிய மோகத்தி லிருந்தவென்னை விசாலமான அறிவினாற் கரை யேற்றினாய் உனக்காரொப்பானவர்கள்? கொடிபோன்றவிடையையுடைய பெண்ணே! செய்கின்ற பதிலுபகார மொன்றுண்டோ சொல்வாய்—எ-ம். (229)

இதுவுமது.

வருபவக்கடற் கரையிலாய்நிராசையைமருவுந்
தருமமேவிதற்கென் கைம்மாறுளதெனச்சாற்றத்
தெரிவையோதுவா ளுணங்குபல்கிரியையிற்றியங்குங்
கருமங்கண்டுனை யுய்விக்கநாடினேனன்கவன்று.

இ - ள். வருபவக்கடல்-வாராநின்ற சநநசாகரத்தின், கரையிலாய் - கரையேறியிருப்பவனே, நிராசையைமருவும் - நிராசையைப் பொருந்துகின்ற, தருமமே - நீதியானவனே, இதற்கென்கைமாறுளது - இதற்கென்ன பிரதியுபகாரமிருக்கின்றது, எனச்சாற்ற - என் (றரசன்)சொல்ல, தெரிவையோதுவாள் - சூடாலையானவள் சொல்லுவாள், உணங்கு-வாடுகின்ற, பல்கிரியை

யிற்றியங்கும்-பலதவத்தொழிலாற் கலங்குகின்ற, கருமகாண்டு - கன்மத்தைப்பார்த்து, உனையய்விக்க-உன்னைக்கரையேற்ற, கவன்று-வருத்தமாய், நாடினேன்-தேடிவந்தேன்—எ-று.

எ - து. வராநின்ற சநநசாகரத்தின் கரையேறியிருப்பவளே! நிராசையைப்பொருந்துகின்ற நீதியானவளே! இதற்கென்ன பிரதியுபகார மிருக்கின்றதென் றரசன்சொல்லச் சூடாலையானவள் சொல்லுவாள். வாடுகின்ற பலதவத்தொழிலாற் கலங்குகின்ற கன்மத்தைப் பார்த்துன்னைக் கரையேற்ற வருத்தமாய்த் தேடிவந்தேன்—எ—ம்.

## சங்கற்பமற்றநீ சங்கற்பித்தேன் றுதிக்கின்றாயெனல்.



நீயிதற்கெனை மேம்படநிகழ்த்துவதென்னே
மேயபுன்றொழி னினைவுகள்சங்கற்பவிகற்ப
மாயதெத்தனை யவையெலாமகற்றினையன்றோ
தூயநாயகவென்னலும் வேந்தனுஞ்சொல்வான்.

இ - ள். நீயிதற்கெனை-நீயிதற்காகவென்னை, மேம்பட - மேம்பாடாக, நிகழ்த்துவதென்னே - சொல்லுவதென்ன, மேயபுன்றொழில் - பொருந்திய அற்பச்செயல்களும், நினைவுகள் - நினைப்புகளும், சங்கற்பவிகற்பம் - சங்கற்பவிகற்பங்களும், ஆயதெத்தனை - ஆகியதெவ்வளவோ, அவையெலாம் - அவையாவையும், அகற்றினையன்றோ - நீக்கினையல்லவா, தூயநாயகவென்னலும்-மேலானதலைவனேயென்று சூடாலைசொல்லவும், வேந்தனுஞ்சொல்வான் அரசனுஞ்சொல்லுவான்—எ-று.

எ - து. நீயிதற்காக வென்னை மேம்பாடாகச் சொல்லுவதென்ன? பொருந்திய அற்பச்செயல்களும், நினைப்புகளும், சங்கற்பவிகற்பங்களுமாகிய தெவ்வளவோ அவையாவையும் நீக்கினையல்லவா? மேலானதலைவனேயென்று சூடாலைசொல்லவும் அரசனுஞ்சொல்லுவான்—எ-ம். (231)

## மனைவியாற்பெற்ற மகிழ்ச்சியை யுரைத்தல்.



ஐயமற்றனை னுசையற்றேன்பிறிவற்றே
னெய்யவின்னையொத் தேன்பொருள்வடிவமாய்நடங்கேன்
செய்யலாவதோர் நிட்டையுற்றேன்சித்தமகிழ்ச்சி
வெய்யதுன்பமொன் றிலனிதுவதுவெனவிளங்கேன்.

இ - ள். ஐயமற்றனன் - சந்தேகநீங்கினேன், ஆசையற்றேன் - இச்சையற்றேன், பிரிவற்றேன் - வேற்றுமையற்றேன், தொய்ய விண்ணையொத்தேன் - சொச்சமான ஆகாயத்துக் கொப்பானேன், பொருள்வடிவமாய் - பதார்த்தவடிவங்களாக, நடக்கேன் - வாடேன், செய்பலாவது - செய்யத்தகுந்ததான, ஓர்நிட்டையுற்றேன் - ஒப்பற்ற சமாதியடைந்தேன், சித்தமகிழ்ச்சி வெய்யதுன்பம் - மனமகிழ்ச்சியுங் கொடியதுயரமும், ஒன்றிலன் - பொருந்திலன், இதுவதுவென விளங்கேன் - இதுவதுவென்று பிரகாசிக்கேன்—எ-று.

எ - து. சந்தேகநீங்கினேன், இச்சையற்றேன், வேற்றுமையற்றேன், சொச்சமான ஆகாயத்துக்கொப்பானேன், பதார்த்தவடிவங்களாக வாடேன், செய்யத்தகுந்ததான வொப்பற்ற சமாதியையடைந்தேன், மனமகிழ்ச்சியுங் கொடியதுயரமும் பொருந்திலன், இதுவதுவென்று பிரகாசிக்கேன்—எ-ம். (232)

சோதிமண்டலத் தெழுந்ததாய்ச்சுவரினிற்படாமன்
மீதுவிஞ்சுதல் குறைதலற்றிருப்பதோர்விளக்கந்
தீதிலாவெனக் குவமையாஞ்சகத்தினைத்தீர்ந்து
யாதுமேவிவிண் ணிற்பதகினையொத்துநின்றேன்.

இ - ள். சோதிமண்டலத்து - பிரகாசமுள்ள சூரியமண்டலத்தி லிருந்து, எழுந்ததாய் - உண்டானதாய், சுவரினிற்படாமல் - சுவர்ப்படாமல், மீதுவிஞ்சுதல் - மேனிறைதலும், குறைதல் - குறைதலும், அற்றிருப்பதோர் விளக்கம்-இல்லாதிருக்கின்ற வொப்பற்ற பிரகாசமானது, தீதிலாவெனக்கு - குற்றமற்றவெனக்கு, உவமையாம்-ஒப்பாகும், சகத்தினைத்தீர்ந்து - உலகத்தைவிட்டு, யாதுமேவி-சகலத்தையும்பொருந்தி, விண்ணிற்பதற்கு - ஆகாயமிருப்பதற்கு, இணையொத்துநின்றேன் - ஒப்பாயிருந்தேன்—எ-று.

எ - து. பிரகாசமுள்ள சூரியமண்டலத்தி லிருந்துண்டானதாய்ச் சுவரிற்படாமல் மேனிறைதலுங் குறைதலு மில்லாதிருக்கின்ற வொப்பற்ற பிரகாசமானது குற்றமற்ற வெனக்கொப்பாகு முலகத்தைவிட்டுச் சகலத்தையும் பொருந்தி ஆகாயமிருப்பதற் கொப்பாயிருந்தேன்—எ-ம். (233)

## அனுபவாவேசத்தால் ஆசிரியரை வணங்குதல்.

உண்டெனுந்தன்மை யென்னுருவேறென் றுமுறைக்கக்
கண்டிலேனத னெனக்கருணைசெய்குருநீ
முண்டகப்பதந் தொழுதனனென்றவன்மொழியத்
தொண்டைவாயவள் மேற்செயல்சொல்லுதியென்றாள்.

இ - ள். உண்டெனுந்தன்மை - சத்தாமாத்திரமென்னுங் குணத்தை யுடையது, என்னுரு - எனதுசொரூபம், வேறொன்றும் - மற்றொன்றையும், உரைக்கக்கண்டிலேன் - சொல்லவறியேன், அதனாலெனக்கு - ஆதலாலடி யேனுக்கு, கருணைசெய்குருநீ - கிருபைசெய்கின்ற ஆசாரியர்நீயே, முண்டகப்பதம்-(உனது) தாமரைமலர்போன்றபாதத்தை, தொழுதனனென்று - வணங்கினேனென்று, அவள்மொழிய - அந்தவாசகஞ்சொல்ல, தொண்டை வாயவள் - கோவைப்பழம்போன்ற அதரமுள்ள சூடாலையனவள், மேற்செயல் - இனிச்செய்யுங்காரியத்தை, சொல்லுதியென்றாள் - சொல்லுமென்று கேட்டாள்—எ-று.

எ - து. சத்தாமாத்திரமென்னுங் குணத்தையுடையது என துசொரூபம் மற்றொன்றையுஞ் சொல்லவறியேன் ஆதலாலடியே னுக்குக் கிருபைசெய்கின்ற ஆசாரியர் நீயே. உனது தாமரைமலர் போன்ற பாதத்தை வணங்கினேனென்றந்த வாசகஞ்சொல்ல, கோ வைப்பழம் போன்ற அதரமுள்ள சூடாலையானவளினிச்செய்யுங் கா ரியத்தைச் சொல்லுமென்று கேட்டாள்.—எ-ம்.

(இ-கஉ-ச-ம்.) தலைவியெனத் தலைவனைகண் டொருவருக்கொருவர் முகமன்வசனத்தோடு மகிழ்ந்திருந்ததாம். (234)

## பிராரத்தகன்மசேடம்
## நீங்கும்பொருட்டு அரசாங்கஞ்செய்யவேண்டுமெனல்.



பற்றுவீடிலன் படிகமேற்பாயொளியென்ன
நிற்றநீசொன்ன செய்தனனென்றனனிருப
னுற்றநீதெனிற் பேதமையொன்றையுமொழித்து
மற்றைமுன்னுள வியற்கையிலிருப்பதுவழக்கே

இ - ள். பற்றுவீடிலன் - இராகத்துவேட மில்லாதவனானேன், படிகமேற்பாயொளியென்ன - பளிங்கிற்பற்றிப்பாய்கின்ற பஞ்சவன்னத்தைப் போல, நிற்றம்-நாடோறும், நீசொன்ன - உனதாக்கினைப்படியே, நிருபன்-அரசனானவன், செய்தனனென்றனன்-செய்வேனென்றுசொல்லினன், உற்றநீதெனில் - நீயடைந்ததுவானால், பேதமையொன்றையு மொழித்து-மற்ற அறிவின்மையைமாத்திரந்தள்ளி, முன்னுள-முன்னமேயுள்ள, இயற்கையிலிருப்பதுவழக்கே - ஆரியல்பிலிருப்பதே நியாயமாம்—எ-று,

எ - து. இராகத்துவேட மில்லாதவனானேன், பளிங்கிற்பற் றிப்பாய்கின்ற பஞ்சவன்னத்தைப்போல நாடோறு முனதாக்கினைப் படியே அரசனானவன் செய்வேனென்று சொல்லினன். நீயடைந்த

திருவாரு லறிவின்மையை மாத்திரந்தள்ளி முன்னமேயுள்ள அரசி யல்பி விருப்பதே நியாயமாம்—எ-ம். (235)

## துறவுமறுசென்மமாதலால் அதை நீக்கினதற் கடையாளமாகப் பட்டாபிஷேகஞ்செய்ய எத்தனஞ் செய்தல்.

சிறிதுகாலநா மிவ்வகையிருந்துபின்றேகம்
பிறியுநாளந்த நிலையினைப்பெறுதுமாலென்ன
நெறிசெல்வேந்தனு மிசைந்தனனேரிழையெழுந்து
குறிகொள்சங்கற்ப விதியினுலிவையிவைகொணர்ந்தாள்.

இ-ள். நாம்-யாம், சிறிதுகாலம்-சிலகாலம், இவ்வகையிருந்து - இந்தப்பிரகாரஞ் (சீவன்முத்தனுய்ப்பிராச்சியபரிபாலனம்பண்ணிக்கொண்)டிருந்து, பின்-பின்பு, தேகம்பிரியுநாள் - சரீராந்தத்தில், அந்தநிலையினை-அந்தவிதேக கைவல்யத்தை, பெறுதுமென்ன - அடைவோமென்று (சூடாலையானவள்) சொல்ல, நெறிசெல்வேந்தனும் - நீதியிற்செல்லாநின்றவரசனும், இசைந்தனன்-சம்மதித்தான், நேரிழையெழுந்து - சூடாலையெழுந்து, குறிகொள் சங்கற்பவிதியினுல் - குறிப்பாகக்கொண்ட சங்கற்பநியமத்தால், இவையிவை கொணர்ந்தாள்-இவையிவைகளைக் கொண்டுவந்தாள்—எ-று.

எ-று. யாம் சிலகால மிந்தப்பிரகாரஞ் சீவன்முத்தனுய்ப் பிராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்து பின்பு சரீராந்தத்தி லந்த விதேக கைவல்யத்தை யடைவோமென்று சூடாலையானவள் சொல்ல, நீதியிற் செல்லாநின்ற அரசனுஞ் சம்மதித்தான். சூடாலை யெழுந்து குறிப்பாகக்கொண்ட சங்கற்ப நியமத்தா லிவையிவைகளைக்கொண்டுவந்தாள்—எ-ம். (236)

## முடிசூட்டல்

—(..)—

எழுவாரிநீர் மணிக்குடத்தினைநீராட்டிக்
கேழுலாமணித் தவிசிடைக்கிளர்வுறவைத்து
வாழியென்றன ளவறுசேனையும்வகுத்தாள்
வேழவெம்பரித்தேரொடுவீரரால்விளங்க.

இ-ள். எழுவாரிநீர்-சத்தசமுத்திரத்தின் தீர்த்தங்களைநிறைந்த, மணிக்குடத்து-இரத்தினகும்பங்களினுல், இவனைநீராட்டி - இவனைஅபிடேகஞ் செய்வித்து, கேழுலாம்-ஒளிபொருந்திய, மணித்தவிசிடை - இரத்தினாசனத்தில், கிளர்வுறவைத்து-பிரகாசிக்கும்படியிருத்தி, வாழியென்றனள் - வாழக்கடவாயென்று சூடாலையானவள் பட்டாபிஷேகஞ்செய்தாள், வேழம் - கஜ

ங்களினுலும், வெம்பரி-வேகமுள்ள துரகங்களினுலும், தேரொடு - இரதங்களினுலும், வீரால்-பதாதிகளாலும், விளங்க - பிரகாசிக்கும்படியாக, அளவறு சேனையும் வகுத்தாள - அளவற்றபடைகளையு முண்டாக்கினள்—எ - று.

எ - து. சத்தசமுத்திரத்தின் றீர்த்தங்கணிறைந்த இரத்தினக்கும்பங்களினு லிவளை யபிஷேகஞ்செய்வித் தொளிபொருந்திய இரத்தினசனத்திற் பிரகாசிக்கும்படி யிருத்தி வாழ்க்கடவாயென்று சூடாலையானவள் பட்டாபிஷேகஞ் செய்தாள். கஜங்களினுலும், வேகமுள்ள துரகங்களினுலும், இரதங்களினுலும், பதாதிகளாலும், பிரகாசிக்கும்படியாக அளவற்றப்படைகளையு முண்டாக்கினள்--எ-ம்.

## சதுரங்கசேனையுங் கற்பித்துப் பட்டணத்துக் கேகுதல்.

இனையவேலையி லிதயமொத்தின்பமேயியற்று
மனையதேவிசூ டாலையுமரசனுமெழுந்து
புனையும்வேழமேற் கொண்டனர்பொன்னகர்நோக்கி
வினைசெய்நாற்பெரும் படையொடுமகிழ்வுறமீண்டார்.

இ - ள். இனையவேலையில் - இப்படிப்பட்ட சமயத்தில், இதயமொத்து - மனமொத்து, இன்பமேயியற்றும - சுகத்தையே செய்கின்ற, அனைய தேவி சூடாலையும் - அப்படிப்பட்ட மனைவியான சூடாலையும், அரசனும் - இராசனும், எழுந்துபுனையும் வேழமேறகொண்டனா - எழுந்திருந்தலங்கரித்த யானைமேலேறினாகள், பொன்னகர்நோக்கி - அழகியபட்டணத்தைப் பார்த்து, வினைசெய் - யுத்தஞ்செய்கின்ற, நாற்பெரும்படையொடும் - மிகுந்த சதுரங்கசேனைகளோடும், மகிழ்வுறமீண்டார் - சந்தோஷிக்கத் திரும்பினார்கள்—எ-று.

எ - து. இப்படிப்பட்ட சமயத்தில் மனமொத்துச் சுகத்தையேசெய்கின்ற அப்படிப்பட்ட மனைவியான சூடாலையு மிராசனுமெழுந்திருந் தலங்கரித்த யானைமேலேறினார்கள். அழகிய பட்டணத்தைப்பார்த்து யுத்தஞ்செய்கின்ற மிகுந்த சதுரங்க சேனைகளோடுஞ் சந்தோஷிக்கத் திரும்பினார்கள்--எ-ம். (238)

## சீவன்முத்தியையும் விதேகமுத்தியையுங் கொடுத்தல்.

புரிசைநண்ணு நகருறுதானைபோமென்று
வரிசையாலெகிர் கொளவிருதானையும்வயங்கப்
பரிவினண்ணினர் நகர்பதிறையிரமவருடந்
தெரிவையோடிருந் தழிவிலாப்பதம்பின்புசேர்ந்தான்.

இ - ள். புரியடைந்தனனாலும் - பட்டணத்தை யடைந்தவளவில், நகருறுதானைபோமென்று - பட்டணத்திலுள்ள சதுரங்கசேனையை நடவுமென்று (சாமந்தர்களையேவ), வரிசையால் - கிரமமாக, எதிர்கொள - எதிர்ப்பட்ட, இருதானையும் வயங்க - இரண்டுசேனையும் விளங்க, பரிவினர் நண்ணினர் - அன்பினொடு பட்டணத்தை யடைந்தவர்களாய், பதினாயிரம் வருடந்தெரிவையோடிருந்து - பதினாயிரமாண்டு நாயகியுடன் கூடியிருந்து, அழிவிலாப்பதம் - விதேககைவல்யத்தை, பின்புசேர்ந்தனர் - பின்படைந்தார் — எ - று.

எ - து. பட்டணத்தை அடைந்தவளவிற் பட்டணத்திலுள்ள சதுரங்கசேனையை நடவுமென்று சாமந்தர்களையேவக் கிரமமாக எதிர்ப்பட்ட இரண்டுசேனையும் விளங்க அன்பினொடு பட்டணத்தை யடைந்தவர்களாய்ப் பதினாயிரமாண்டு நாயகியுடன் கூடியிருந்து விதேக கைவல்யத்தைப் பின்படைந்தார் — எ - ம்.

(இ-ச-க-ம்) பதினாயிரம் வருடஞ் சீவன்முத்தராய் இராச்சியஞ் செய்து மேல்விதேக முத்தியை யடைந்தனரென்பதாம். (239)

## இராகவற் கிக்கதையைச்சொல்லி யிவ்வண்ணம் பெற்றான் ஞானமுஞ் சீவன்முத்தித்தன்மையிலுள்ள போகமும் விதேகமுத்தியும் பெறலாமென் றுபதேசித்தல்.

வள்ளலேயிந்த மாதிறத்தொழில்களின்மருவித்
துள்ளுமின்பமிற் சாந்தமெப்போதினுந்தொடர்ந்தா
றொள்ளுபோகமும் வீடுமுண்டாமென்றுதெளிந்த
வுள்ளமாதவ வசிட்டமாமுனிவரனுரைத்தான்.

இ - ள். வள்ளலே - ஸ்ரீராமா, இந்தமாதிறத்தொழில் - இம்முறைமையினிற்றொழில், தொழில்களின் மருவி - காரியங்களிற் கூடி, துள்ளுமின்பமில - துள்ளாநின்ற விடயசுகமில்லாத, சாந்தம் - உபசாந்த ஞானமானது, எப்போதினுந்தொடர்ந்தால் - சதாகாலமுந் தொடரில், ஒள்ளுபோகமும் - ஒளிவான போகங்களும், வீடும் - மோக்ஷமும், உண்டாமென்று - கிடைக்குமென்று, தெளிந்தவுள்ளம் - தெளிந்த மனத்தையும், மாதவ - மகாதவத்தையுமுடைய, வசிட்டமாமுனிவரன் - வசிட்டமகாமுனியானவர், உரைத்தான் - சொன்னார் — எ - று.

எ - து. ஸ்ரீராமா! இம்முறைமையினுற காரியங்களிற் கூடித் துள்ளாநின்ற விடயசுகமில்லாத உபசாந்த ஞானமானது சதாகாலமுந் தொடரிற் றெளிவான போகங்களும் மோக்ஷமுங் கிடைக்குமென்று தெளிந்த மனத்தையும் மகாதவத்தையுமுடைய வசிட்டமகாமுனியானவர் சொன்னார் — எ - ம். (240)

சிகித்துவசன்கதை முற்றிற்று. ஆக கதை 37-க்கு கவிதை 1844.

# கசன் கதை.

முற்கதையி லாசிரியர் கேட்கும் வினவைக்கொண்டரிதாயுதித்த
அசம்பாவனீக்கமாகிய சித்தத்யாகமென்னுஞ் சகலத்யாகத்
தாற்சர்வம் பிரமமயமாய் விளங்கினமையறிவித்தவ்
வசம் பாவத்யாகமாகிய சித்தத்யாகமே சகலத்
யாகமன்றிவேறின்றென்பதைச்சுருவிலறி
விக்கு நிமித்தங் கசன்கதையை
நிரூபிக்கிறார்.

## இதற்கொப்பன கசன்கதையையுங் கூறுதல்-

## வேறு.

தெளிவின்மிக்குயர் சிகித்துவசன்கதை செப்பினனிவ்வாறே, யளியநிற்றியா லருந்துயரணுகலை யனையவனெறிபோலக், குளிர்மு கச்சுரர் குருமகனுணர்ந்தன னதுகுறித்துணர்கென்ன, வெளிப்படவ னுணர்ந்துளநெறியினை விளம்புதியெனக்கேட்டான்.

இ-ள். தெளிவின்மிக்கு - தெளிவின் மிகுந்த, உயர்சிகித்துவசன் - மேலான சிகித்துவசனுடைய, கதைசெப்பினன் - கதையைச்சொன்னேன், இவ்வாறு - இந்தப்பிரகாரம், அளியநிற்றியால் - கனிவாக நின்றாயானால், அருந்துயரணுகலை - அரியதுன்பத்தை யடையமாட்டாய், அனையவனெறி போல - அவனது மார்க்கத்தைப்போல, குளிர்முகம் - குளிர்ந்தவதனத்தை யுடைய, சுரர்குருமகன் - தேவகுருவின் புத்திரனாகிய கசன், உணர்ந்தனன் - அறிந்தனன், அதுகுறித்து - அதைக்கருதி, உணர்கென்ன - அறிவாயென்று (வசிட்டமுனி) சொல்ல, வெளிப்பட - பிரத்யக்ஷமாக, அவனுணர்ந்தன - அக்கசனறிந்திருக்கின்ற, நெறியினை - மார்க்கத்தை, விளம்புதி - சொல்லுவாய், எனக்கேட்டான் - என்று ஸ்ரீராமர் கேட்டார்—எ-று.

எ-து. தெளிவின் மிகுந்த மேலான சிகித்துவச வாசனது கதையைச்சொன்னேன். இந்தப்பிரகாரம் கனிவாகநின்றாயானா லரிய துன்பத்தை யடையமாட்டாய். அவனது மார்க்கத்தைப் போலக் குளிர்ந்த வதனத்தையுடைய தேவகுருவின் புத்திரனாகிய கசனறிந் தனன். அதைக் கருதியறிவாயென்று வசிட்டமுனிசொல்ல, பிரத்ய க்ஷமாக வக்கசனறிந்திருக்கின்ற மார்க்கத்தைச் சொல்லுவாயென்று ஸ்ரீராமர் கேட்டார்—எ-ம்.

## பவநீங்குமார்க்கம் யாதெனஆசாரியரை விசாரித்தல்.

குருசில்கேட்டலும் வசிட்டனங்குரைசெய்வான் குருமகன்கச னென்பான்,றெரிபதத்தொடுபதப்பொருடெரிந்துளோன்றேவர்தே சிகன்முன்போய், விரிபிறப்பெனுங் கூட்டினின்றுயிரெனும் வெங்க ரிபுறம்போகைக், குரியவாறெது கூறெனக்கேட்டலு மும்பர்மந்திரி சொல்வான்.

இ - ள். குருசில்கேட்டலும் - ஸ்ரீராமர் கேட்கவும், வசிட்டன் - வசிட்ட முனியானவர், அங்குரைசெய்வான் - அவ்விடத்திற் சொல்லுவார், குருமகன் - குருபுத்திரனை, கசனென்பான் - கசனென்னும் பெயரையுடைய வர், தெரிபதத்தொடு - தெரியப்பட்டபதத்தோடும், பதப்பொருடெரிந்துளோன் - பதார்த்தத்தைத் தெரிந்தவரான கசமுனி, தேவர்தேசிகன் - தேவ குருவின், முன்போய் - முன்புசென்று, விரிபிறப்பெனும் - மிகுந்த சநந மென்கின்ற, கூட்டினின்று - கூண்டிலிருந்து, உயிரெனும் - பிராணனென் கின்ற, வெங்கரிபுறம் போகைக்கு - கொடியயானை புறம்பிற் செல்லுதற்கு, உரியவாறெது - தகுந்தபிரகாரமியாது, கூறெனக்கேட்டலும் - சொல்லெ ன்று கேட்கவும், உம்பர்மந்திரி சொல்வான் - தேவகுருசொல்லுவார்—எ-று.

எ — து. ஸ்ரீராமர் கேட்கவும், வசிட்டமுனியானவர் அவ்விடத் திற் சொல்லுவார். குருபுத்திரனை கசனென்னும் பெயரையுடைய வர் தெரியப்பட்ட பதத்தோடும் பதார்த்தத்தைத் தெரிந்தவரான கசமுனி தேவகுருவின் முன்புசென்று மிகுந்த சநநமென்கின்ற கூண்டிலிருந்து பிராணனென்கின்ற கொடிய யானைப்புறம்பிற் செல் லுதற்குத் தகுந்த பிரகாரமியாது சொல்லென்று கேட்கவுந் தேவகு ருசொல்லுவார் —எ-ம். (2)

## பவத்தை நீக்குநெறி சகலத்யாகமென்ன அப்படியே புறப்பற்று நீக்குதல்.

அனந்தமாமக ரங்களுக்குறையுளாயகன்றவிப்பவவேலைக், கட த்ததேர்சக லத்தியாகத்தினாற் கடக்கலாமென்றோதத், தனத்தை யாதியாஞ் சகலமும் விட்டனன் றனியனுப்க்கசன் சென்று, வனத் தின்மேவிளா னெட்டியாண்டிருந்தனன் மறித்தவன்பிதாவந்தான்.

இ - ள். அனந்தமாம் - அனந்தமாகி, மகரங்களுக்கு - மகரமச்சங்க ளுக்கு, உறையுளாய் - வசிக்கின்றவிடமாகி, அகன்ற - விசாலம்பொருந்திய, இவ்வேலை - இந்தச்சநநசமுத்திரத்தைத், கடத்தது - கடத்ததான, ஓர்சக

லயாகத்தினால் - ஒப்பற்ற சகலயாகத்தினால், கடக்கலாமென்றோத - தாண்டலாமென்று (குருவானவர்) சொல்ல, தனத்தையாதியாம் - சொன்னமுதலாகிய, சகலமும் விட்டனன் - யாவையும்விட்டு, தனியனும் - தனித்தவராகி, கசன்சென்று வனத்தின்மேவினன் - கசனானவர்போய் கானகத்திலடைந்து, எட்டியாண்டிருந்தனன் - எட்டுவருடமிருந்தார், மறித்தவன்பிதாவந்தான் - திரும்பவு மவருடைய தந்தையான குருவந்தார்—எ-று.

எ — து. அனந்தமாகிய மகாமச்சங்களுக்கு வசிக்கின்ற இடமாகி விசாலம் பொருந்திய இந்தச்சநகசமுத் ரத்தைக் கனத்ததான ஒப்பற்ற சகலயாகத்தினாற் றாண்டலாமென்று குருவானவர்சொல்ல, சொன்னமுதலாகிய யாவையும் விட்டுத் தனித்தவராகிக் கசனானவர் போய்க் கானகத்திலடைந் தெட்டு வருடமிருந்தார், திரும்பவுமவருடைய தந்தையான குருவந்தார்—எ-ம். (3)

## அஃதுமன்றெனக்கூற வஸ்திரமுதலியவையு நீக்குதல்.

---

வந்ததந்தையை வணங்கியேசகலமு மாற்றியேயெட்டாண்டு
சிந்தையற்றிருந் துந்துயர்தீர்ந்திலே னிமலனேயென்னென்று
நொந்துகூறலுஞ் சகலமுநீக்கெனு நுவன்றுமீளவும்போனான்
றந்தைபோனபின் வற்கலைமுதலிய சகலமுமறநீத்தான்.

இ - ள். வந்ததந்தையை - வந்தபிதாவை, வணங்கி - தொழுது, சகலமுமாற்றி - யாவையுமவிட்டு, எட்டாண்டு - எட்டுவருடம், சிந்தையற்றிருந்தும் - மனமற்றிருந்தும், துயர்தீர்ந்திலேன் - துன்பத்தை நீங்கிலேன், நிமலனே - நின்மலமானவரே, என்னென்று - இதென்ன (காரண) மென்று, நொந்துகூறலும் - துன்பமுற்று கசமுனியானவர் சொல்லவும், சகலமுநீக்கெனு - யாவையுந்தள்ளுவாயென்று, நுவன்று - சொல்லி, மீளவும்போனான் - திரும்பவும் போயினன், தந்தைபோனபின் - பிதாவானவர் சென்றபின்பு, வற்கலைமுதலிய - மரவுரிவஸ்திரமுதலான, சகலமும் - யாவையும், அறநீத்தான் - ஒருங்கேயொழித்தான்—எ-று.

எ - து. வந்த பிதாவைத்தொழுது யாவையும்விட்டு எட்டு வருட மனமற்றிருந்துந் துன்பத்தை நீங்கிலன். நின்மலமானவரே! இதென்ன காரணமென்று துன்பமுற்று கசமுனியானவர் சொல்லவும யாவையுந் தள்ளுவாயென்று சொல்லித்திரும்பவும போயினன் பிதாவானவர் சென்றபின்பு மரவுரிவஸ்திர முதலான வியாவையு மொருங்கேயொழித்தான்—எ-ம். (4)

## புறப்பற்று நீக்கத்தைச் சகலத்யாகஞ் செய்தேனெனல்.

பானுமாமதி முகிலுடுமுதலிய பற்றறுசாற்காலம்
வானமொத்தனன் றமியனாய்க்கசன்சென்றுவனத்தின்மீளவுந்தாதை
யானவன்றனை யெய்தினனன்பினா லடிதொழுதயர்வெய்தி
யானணிந்துள வற்கலைமுதலியயாவையுமறநீத்தேன்.

இ - ள். பானு - சூரியனும், மாமதி - அழகுள்ள சந்திரனும், முகில் - மேகமும், உடுமுதலிய - நக்ஷத்திரமுதலாகிய, பற்றறுசாற்காலம் - பற்றற்ற சாற்காலத்தின், வானமொத்தனன் - ஆகாயத்துக்கொப்பானான், தமியனாய் - தனியனாய், கசன்சென்று - கசமுனிபோய், மீளவும் - திரும்பவும், வனத்தில் - கானகத்தில், தாதையானவன்றனை - தந்தையானகுருவை, எய்தினன் - அடைந்தவனாய், அன்பினால் - அன்பினால், அடிதொழுது - பாதத்தைவணங்கி, அயர்வெய்தி - துன்பமடைந்து, யானணிந்துள - நான்றரித்திருக்கின்ற, வற்கலைமுதலிய - மரவுரிமுதலாகிய, அனைத்தையும் - யாவையும், அறநீத்தேன் - ஒருங்கே தள்ளினேன் — எ-று.

எ - து. சூரியனும், அழகுள்ளசந்திரனும், மேகமும், நக்ஷத்திரமுதலாகிய பற்றற்ற சாற்காலத்தி னாகாயத்துக் கொப்பானான். தனியனாய்க் கசமுனிபோய்த் திரும்பவுங் கானகத்திற் றந்தையான குருவையடைந்தவனா யன்பினாற் பாதத்தை வணங்கித் துன்பமடைந்து நான் றரித்திருக்கின்ற மரவுரிமுதலாகிய யாவையு மொருங்கே தள்ளினேன் — எ-ம். (5)

## அகப்பற்றை நீக்கும்படி மனோ நீக்கமே சகலத்யாகமெனல்.

யாதுநீத்துமென் பாலிலைப்பாறிலே னினிச்செயலேதென்னத்,
தாதைகூறுவான் மனத்தையேயுலகெலாஞ் சகலமென்றுரைசெய்வ,
ராதலான்மன மகற்றுதல்சகலமு மகற்றுதலதனாலே, கேதநீங்கு
மென்றனன் றனன்மந்திரி கிளர்கசனிதுசெய்தான்.

இ - ள். யாதுநீத்தும் - எதைநீக்கியும், என்பால் - என்னிடத்தில், இலைப்பாறிலேன் - விஸ்ராந்தியடைந்திலன், இனிச்செயலேதென்ன - இனிச்செய்ய வேண்டுவதென்னவென்று கசன்கேட்க, தாதைகூறுவான் - பிதாவானவர் சொல்லுவார், மனத்தையே - மனதையே, உலகெலாம் - உயர்ந்தோர்களனைவரும், சகலமென்றுரைசெய்வர் - சகலமென்று சொல்லுவார்கள், ஆதலால் - ஆதலினால், மனமகற்றுதல் - மனதைநீக்குதலே, சகலமு

மகற்றுதல் - சகலமுநீக்குதல், அதனால் - அச்சகலத்யாகத்தினால், தேதநீங்குமென்று - துன்பநீங்குமென்று சொல்லி, மந்திரியகன்றனன் - குருவானவர்நீங்கினார், இலங்கசன்-விளங்காநின்ற கசமுனியானவர், இதுசெய்தான்-இதைச் செய்தார்—எ-று.

எ - து. எதைநீக்கியு மென்னிடத்தில் விஸ்ராந்தியடைந்திலன். இனிச்செய்யவேண்டுவதென்னவென்று கசங்கேட்க, பிதாவானவர் சொல்லுவார். மனதையே உயர்ந்தோர்களனைவருஞ் சகலமென்று சொல்லுவார்களாதலினால் மனதை நீக்குதலே சகலமுநீக்குதல்; அச்சகலத்யாகத்தினாற் றுன்ப நீங்குமென்று சொல்லிக்குருவானவர்நீங்கினார்; விளங்காநின்ற கசமுனியானவ ரிதைச்செய்தார்.

மனமிதென விசாரித்தலுக் கசுப்பாவமே மனமெனல்.

---

சித்தமேதென நாடினனறிந்திலன் றேகமாதிகளெல்லாஞ், சித்தமன்றெனிற் குறைசெயாவிதனையான் நீர்ந்துமென்பய னென்னச், சித்தமேதெனச் சுரர்குருவிடத்துறச் சென்றுகே ட்டலுமன்னான், சித்தமாவது நானெனச்செப்புவர் சித்தத்தை யறிவுற்றோர்.

இ - ள். சித்தமேதெனநாடினன் - மனமியாதென்றாராய்ந்தனன், அறிந்திலன் - தெரிந்திலன், தேகமாதிகளெல்லாம் - சரீரமுதலான சகலமும், சித்தமன்றெனில் - மனமல்லவானால், குறைசெயா - குறைவு செய்யாது, இதனை - இச்சரீரமுதலியவைகளை, யான்நீர்ந்து மென்பயனென்ன - யானீங்கியுமென்ன பிரயோசனம், சித்தமேதென - சித்தமான தெதுவென்று, சுரர்குருவிடத்துறச்சென்று - தேவகுருவினிடத்திற்போய், கேட்டலும் - கேட்கவும், அன்னான் - அத்தேவகுருவானவர், சித்தமாவது - மனமானது, சித்தத்தையறிவுற்றோர் - மனதையறிந்த சத்துக்கள், நானெனச்செப்புவர் - அகம்பாவமென்று சொல்லுவார்கள்—எ-று.

எ - து. மனமியாதென்றாராய்ந்தனன், தெரிந்திலன், சரீரமுதலானசகலமு மனமல்லவானாற் குறைவுசெய்யாது இச்சரீரமுதலியவைகளை யானீங்கியுமென்னபிரயோசனம்? சித்தமானதெதுவென்று தேவகுருவினிடத்திற்போய்க் கேட்கவும் அத்தேவகுருவானவர் மனமானது மனதையறிந்த சத்துக்கள் அகம்பாவமென்றுசொல்லுவார்கள்—எ-ம்.

## அகம்பாவமெங்ஙனங்கெடுமெனில் அஃது சுளுவிற் கெடுமெனப் பரமபாவனை போதிக்கத் தொடங்கல்.

உயிர்களியாவையு முள்ளுறநானென வுன்னுபாவனைதானே
செயிர்செய்சித்தமென் றுரைத்தலுமிங்கிது தீர்ப்பதுமிகவன்பாம்
வயிரமாவது தீர்வதெவ்வகையென மறித்துமந்திரிசொல்வான்
வெயில்செய்துன்பமோர் சிறிதிலையகங்காரம் விடமிகவெளிதாகும்.

இ-ள். உயிர்களியாவையும் - பிராணிகளனைத்தையும், உள்ளுற - அகத்திற்பொருந்த, நானென - நானென்று, உன்னுபாவனைதானே - நினைக்கின்ற பாவனையே, செயிர்செய் - குற்றஞ்செய்கின்ற, சித்தமென்று - மனமென்று, உரைத்தலும் - தேவகுருசொல்லவும், இங்கிது - இவ்விடத்தி லிதை, தீர்ப்பது - நீக்குவது, மிகவன்பாம் - மிகவும் வலிமையாம், வயிரமாவது - இப்படிப்பட்ட வயிரமானது, தீர்வதெவ்வகையென - நீங்குவதெப்படியென்று கசன்கேட்க, மறித்தும் - திரும்பவும், மந்திரிசொல்வான் - தேவகுருசொல்லுவார், வெயில்செய்துன்பம் - காய்கின்ற துன்பமானது, ஓர்சிறிதிலை - அற்பமுமில்லை, அகங்காரம்விட - அகங்காரநீக்குதற்கு, மிகவெளிதாகும் - மிகவுமிலேசாம—எ-று.

எ-து. பிராணிகளனைத்தையு மகத்திற்பொருந்த நானென்று நினைக்கின்ற பாவனையே குற்றஞ்செய்கின்ற மனமென்று தேவகுரு சொல்லவும் இவ்விடத்தி லிதைநீக்குவது மிகவும் வலிமையாம். இப்படிப்பட்ட வயிரமானது நீங்குவதெப்படி யென்று கசன்கேட்கத் திரும்பவுந் தேவகுருசொல்லுவார் காய்கின்ற துன்பமானதற்பமுமில்லை, அகங்கார நீக்குதற்கு மிகவுமிலேசாம்—எ-ம் (8)

## பிரமபாவனையால் அகம்பாவநீங்கி விஸ்ராந்தியுண்டாமெனல்.



அலர்கசக்குமுன் னிமைக்குமுனகங்கா மகற்றுதலெளிதாகும்
பலவுரைப்பதென் னேகமாயகந்தமாய்ப் பரமசித்தேயாகிக்
குலவசந்தமாம்விண்ணினுறுமனன்னரிதாங்குறைவிலாப்பொருணிற்குஞ்
சலனமற்றதைப் பாவனைசெய்துபசாந்தனாயிடர்தீர்வாய்.

இ-ள். அலர்கசக்குமுன் - புட்பமசைக்கக்குமுன்னும், இமைக்குமுன் - இமைத்தலுக்குமுன்னும், அகங்காரம் - அகங்காரத்தையது, அகற்றுதலெளிதாகும் - நீக்குதல் சுளுவாகும், பலவுரைப்பதென் - பலசொல்லவே

ண்டியதென்னை, ஏகமாம் - ஒன்றாகியும், அநந்தமாய - முடிவில்லாததாகியும், பரமசித்தேயாகிக்குலவுசுத்தமாம் - பரமஞானமாகியும் பொருந்தியபரிசுத்தமாகியும், விண்ணினுநுண்ணிதாய்நிறைவெலாப்பொருணிற்கும - ஆகாயத்திலுஞ் சொச்சமாகியுமிருக்கின்ற பூரணவஸ்துவிருக்கும், சலனமற்றதைப் பாவனைசெய்து - சஞ்சலமில்லாமல அவ்வாத்மாவைத் தியானித்து, உபசாந்தனாய் - உபசாந்தத்தையுடையவனாய், இடர்தீர்வாய் - துன்பநீங்குவாய்—எ-று.

எ-து. புட்பத்தைக் கசக்குமுன்னு மிமைத்தலுக்கு முன்னும் அகங்காரத்தை நீக்குதற்கனுவாகும். பலசொல்லவேண்டியதென்ன! ஒன்றாகியும் முடிவில்லாததாகியும், பரமஞானமாகியும், பொருந்திய பரிசுத்தமாகியும் ஆகாயத்திலுஞ் சொச்சமாகியுமிருக்கின்ற பூரணவஸ்துவிருக்கும். சஞ்சலமில்லாமல் அவ்வாத்மாவைத் தியானித்து உபசாந்தத்தை யுடையவனாய்த் துன்பநீங்குவாய்—எ-ம். (9)

## தத்துவபாவனையால் அசத்தானவகம்பாவம் எங்கேயிருக்குமெனல்.

சுத்தமித்தையே யாதலிலகங்காரந் தொலைந்துபோமெய்யான
தத்துவந்தனை நினைதலாற்சித்திலே சாற்றகங்காரமெங்கே
மெத்துநீரிலே புழுதியுங்கனலிலே மேவுதோயமுமுண்டோ
நித்தரூபத்தை நினைந்திலனுனெனு நிச்சயமுறநிற்பாய்.

இ-ள். சுத்தமித்தையேயாதலில் - முழுதுமசத்தியமே யாதலால், அகங்காரம் - அகங்காரமானது, தொலைந்துபோம் - கெட்டுப்போகும், மெய்யான - சத்தியமாகிய, தத்துவந்தனைநினைதலால - ஆத்மாவைச் சிந்தித்தலினால், சித்தில் - ஞானத்தில், சாற்றகங்காரமெங்கே - சொல்லிய அகங்காரமெங்கேயிருக்கும், மெத்துநீரில்புழுதியும் - மிருதுவானசலத்திற் றூளியும், கனலில் - அக்கினியில், மேவுதோயமுமுண்டோ - மேவாநின்றசலமுண்டாயிருக்குமோ, நித்தரூபத்தை - நித்தியஸ்ரூபத்தை, நினைந்து - சிந்தித்து, இவனுனெனும் - இவனென்கின்ற, நிச்சயமாநிற்பாய் - மெய்ம்மையுறும்படியிருப்பாய்—எ-று.

எ-து. முழுதும் சத்தியமே ஆதலால் அகங்காரமானது கெட்டுப்போகும். சத்தியமாகிய வாத்மாவைச் சிந்தித்தலினால் ஞானத்திற்சொல்லிய அகங்காரமெங்கேயிருக்கும? மிருதுவானசலத்திற் றூளியும அக்கினியால் மேவாநின்ற சலமுண்டாயிருக்குமோ? நித்தியஸ்வரூபத்தைச் சிந்தித்து இவனென்கின்ற மெய்ம்மையுறும்படி யிருப்பாய்—எ-ம். (10)

## விடயத்தோற்றமின்றிச் சுயஞ்சித்தாய்விளங்கி நிற்பாயெனல்.

திக்குங்காலமு முதலியவசத்துறு சிறுவடிவறத்துன்பந்
தொக்கவன்னவற் றுன்மறையாமலே சூக்கமாய்ச்தொய்தாகி
மிக்கசோதியாயனைத்துமாயொன்றுமாய் மெய்யறி வொன்றேயாந்
தக்கவிந்நிலை நில்லெனவுரைத்தனன் றலைமையா முபதேசம்.

இ-ள். திக்கும் - திசையும், காலமுமுதலிய - காலமு முதலாகிய இவைகளின், வசத்திற்பொருந்திய, சிறுவடிவற - அற்பமாகியவடிவமில்லாமல், துன்பந்தொக்க - துக்கமானது நிறையும்படி, அன்னவற்றால் - அப்படிப்பட்டவைகளால், மறையாமல் - மறைவுபடாமல், சூக்கமாய் - சூட்சுமமாகியும், தொய்தாகி - சொச்சமாகியும், மிக்கசோதியாய் - மேலான (சுயஞ்)சோதியாகியும், அனைத்துமாய் - எல்லாமாகியும், ஒன்றுமாய் - ஏகமாகியுமிருக்கின்ற, மெய்யறிவொன்றேயாம் - தத்துவஞானமான தொன்றேயாகும், தக்கவிந்நிலை - தகுந்தநிச்சயம், நில்லென - (உனதாத்மஸ்வரூபமென்றறிந்ததி னிற்பாயென்று, தலைமையாமுபதேசம் - முதன்மையான உபதேசத்தை, உரைத்தனன் - (பிரகஸ்பதிபகவான்) சொன்னார்—எ-று.

எ-து. திசையுங் காலமு முதலாகிய இவைகளின் வசத்திற் பொருந்திய வற்பமாகிய வடிவமில்லாமற் றுக்கமானது நிறையும்படி அப்படிப்பட்டவைகளால் மறைவுபடாமற் சூட்சுமமாகியுஞ் சொச்சமாகியு மேலானசுயஞ்சோதியாகியு மெல்லாமாகியுமேகமாகியுமிருக்கின்ற தத்துவஞானமான தொன்றேயாகும். தகுந்த இந்தநிச்சயம் உனதாத்மஸ்வரூபமென்றறிந் ததினிற்பாயென்று முதன்மையான உபதேசத்தைப் பிரகஸ்பதிபகவான்சொன்னார்—எ-ம்

(இ-கக-க-ம்.) உன்னதான ஸ்வாநுபூதிநிஷ்டியினால் இல்லாததான அகம்பாவநீங்கும் அஃதே சகலத்யாகமென்பதை யறிவித்ததாம். (11)

## ஸ்ரீராகவற்கிதவுபதேசஞ்செய்தல்.

சீவன்முத்தனு நிலைமைபெற்றகங்காரந் தீர்ந்தெனதென்னுமன், மேவுமுட்பந்தம் வீழ்ந்துபோய்ப்புந்தியில் விகற்பங்க ளனைத்தும் போய்ப், பாவமுற்றிய கசனின்றநிலையினீ பற்றுதலறநிற்பாய், கேவலத்திக்க வகங்காரம்பொய்ம்மையாங் கெடுத்தல்பற்றுதல்வேண்டாம்.

இ-ள்., சீவன்முத்தனும் - சீவன்முத்தனாகிய, நிலைமைபெற்று - நிலைமையையடைந்து, அகங்காந்தீர்ந்து - அகம்பாவம்விட்டு, எனதென்னாமல் - யானெனதென்றுசொல்லாமல், மேவுமுட்பந்தம் - பொருந்திய அகப்பற்றானது, வீழ்ந்துபோய் - கெட்டுப்போய், புந்தியில் - புத்தியில், விகற்பங்களனைத்தும்போய்-விகற்பங்களியாவுநீங்கி, பாவமுற்றிய- ஆத்மபாவனைமுதிர்ந்த, கசனின்றநிலையில் - கசமுனிநின்றநிலையில், நீ-ஸ்ரீராமனே, பற்றுதலற நிற்பாய்-இச்சையானது நீங்கும்படியிருப்பாய், கேவலத்து கைவல்யத்தில், இந்தவகங்காரம் - இந்த அகம்பாவமானது, பொய்ம்மையதாம் - மித்தையேயாகும், கெடுத்தல்-இதைவிடுத்தலும், பற்றுதல்-பிடித்தலும், வேண்டாம் - உனக்கு வேண்டாம்—எ-று.

எ-து. சீவன்முத்தனாகிய நிலைமையையடைந் தகம்பாவம் விட்டு யானெனதென்று சொல்லாமற் பொருந்திய வகப்பற்றானது கெட்டுப்போய் புத்தியில விகற்பங்களியாவுநீங்கி ஆத்மபாவனைமுதிர்ந்த கசமுனியிருந்த நிலையில் ஸ்ரீராமா! நீ இச்சையானது நீங்கும் படி யிருப்பாய். கைவல்யத்தி லிந்தவகம் பாவமானது மித்தையே யாகும். இதைவிடுத்தலும் பிடித்தலுமுனக்குவேண்டாம்—எ-ம்.

சகலத்திலும் நான் கர்த்தனல்ல வென்னுந் திடபாவனையினாலே பிராகிருதத்தில் வருகின்ற தொழில்களைச்செய்தாலும் அதினால் பாதப்படமாட்டான். ௬-௧, தனது மனதின் பிரவிர்த்தி யில்லாததினாலே விடயவிராகத்தை யடைகிறான், ஆகையினால் சதாகாலமும் நான் கர்த்தனல்லவென்னும் பாவனையினாலே பரமானந்தமென்னு நாமமுடைய அந்தசமபாவம் சேடமாகும். ௬-௨, நான் சகலமுஞ்செய்கிறேனென்னும் மகாகர்த்துவ பாவத்தினாலேநிலையை இச்சித்தீரேயாகில் அந்த மகாகர்த்துவத்தையும் உத்தமமாக சத்துக்கள் சொல்லுகிறார்கள். ௬-௩, சகலபதார்த்தங்களில் யாதொருசமபாவமுண்டோ அதுவே உண்மையானநிலை. அதில்வைக்கப்பட்டசித்தம் திரும்பவுஞ் சாசந்தையடையமாட்டாது. ௬-௪, சகச்சம்பந்தமான சகலப்பிரமத்தையு நான்செய்கிறேனென்று சொல்லப்பட்டகர்த்துவத்தில் வேறுகர்த்தாயில்லாததினாலே ராகத்துவேடங்களேது. ௬-௫, எனதுதேகமானது அன்னியனால் பாலனை செய்யப்பட்டது, அன்னியனால்-தகனஞ்செய்யப்பட்டது, என்றுசொல்லப்பட்டது-யாதொன்றோ அது எனதுகன்மவிபாகம்-என்னுங்கர்த்துவத்தில் ராகத்துவேடமேது. ௬-௬, எனது சகதுக்கங்களின் விஸ்தாரமாகிய சகதிரளின் உதயாசத்தினாலே கர்த்தாவென்னுமுன்னததிற் சிந்திக்கின்றமகாகர்த்துவத்தில் ராகத்துவேடங்களேது. ௬-௭, சகதுக்கவிலாசங்களில் ஆன்மாவுக்கே முக்கியமானகர்த்துவபாவத்தினாலேதனது சங்கற்பசமூகமுண்டானால்

சமபாவமேசேடமாகிறது. க-அ, இவ்வெண் சுலோகார்த்தத்தை யந்நூலாசிரியர் சீவன்முத்தனுமென்னும் பதத்தி லடக்கிக்கூறினர். (12)

## அகம்பாவமோர் பொருளன்றுதலால் அதைப்பற்றுதல் விடுதல் கூடாவெனல்.



பொய்யதாமுயற் கொம்பினைப்பற்றவும் போக்கவுநினைப்பாரா
ரையனேபர போதபூரணத்திலே யயலொன்று வருமாறென்
பொய்யதாகிய வநேகபாவனையினைப் பொருந்தல்புன்பிறப்பாகு
மையமின்றிய வேகபாவனையினி லழுந்துதல் பவந்தீர்தல்.

இ-ள். பொய்யதாம் - மித்தையாயிருக்கின்ற, முயற்கொம்பினை - சகவிஷணத்தை, பற்றவும் - பிடிக்கவும், போக்கவும் - விடுக்கவும், நினைப்பாரார் - கருதுபவர்யாவர், ஐயனே - எனதாசிரியரே, பரபோத பூரணத்தில் - பிரமஞானமாகிய பூரணத்தில், அயலொன்று - வேறொன்று, வருமாறென் - வருகின்ற விதமென்ன, பொய்யதாகிய - அசத்தியமாகிய, அநேகபாவனையினை - பலபாவனையை, பொருந்தல் - அடைதல், புன்பிறப்பாகும் - அற்பமான சநநமாகும், ஐயமின்றிய - சந்தேகமில்லாத, ஏகபாவனையினில் - ஒன்றான ஸ்வரூப பாவனையில், அழுந்துதல் - அமிழுதலே, பவந்தீர்தல் - சநநந்தீர்த லென்று (வசிட்டமுனி) சொன்னார்—எ-று.

எ-து. மித்தையாயிருக்கின்ற சகவிஷணத்தைப் பிடிக்கவும் விடுக்கவுங் கருதுபவரியாவர்? எனதாசிரியரே! பிரமஞானமாகிய பூரணத்திலே வேறொன்று வருகின்ற விதமென்ன? அசத்தியமாகியபல பாவனையையடைதல் அற்பசநநமாகும். சந்தேகமில்லாத ஒன்றான சுரூபபாவனையில் அமிழுதலே சநநந்தீரலென்று வசிட்டமுனிசொன்னார்—எ-ம்.

(இ-உ-க-ம்.) அறிவினுண்மையைப் போதித் தகம்பாவத்தை நீக்கினதென்பதாம். (13)

கசன்கதை முற்றிற்று.

ஆக கதை 38-க்கு கவிதை 1857.

# மித்தையாபுருடன் கதை.

அவதாரிகை.

முற்கதையி லாத்மவிசாரத்திலுதித்த அகங்கார த்யாகமான சகலத்யாகத்தாற் சர்வம் பிரமமயமென்றறிவித் தவ்விசாரமின்றி யகங்கார நீங்காத விடத்திற் றிரிஸ்யரூபமா யனுபவிக்குந் துன்பங்களை யறிவிக்குமித்த மகம்பாவ வுருவகமாக மித்தையாபுருடன் கதையை நிரூபிக்கிறார்.

## பேதநீங்கியசுயஞ்சித்தில் சுகிப்பாயெனல்-வேறு.

இருமையோ டொருமைநீக்கி நின்றதிலெய்தியின்ப
மருவுவாய்மித்தையான புருடன்போல்வருந்தவேண்டாங்
குருசிலேயெனலுமெந்தாய் கூறுபொய்ப்புருடனோ
னொருபயனின்றித்துன்ப முற்றவனுலைந்தவாறென்.

இ - ள். இருமையோடு - இரண்டுடன், ஒருமைநீக்கி - ஒன்றையுந் தள்ளி, நின்றதிலெய்தி - இருந்த ஆத்ம ஞானத்தையடைந்து- இன்பமருவுவாய் - பரம) சுகத்தையடைவாய், மித்தையான புருடன்போல் - மித்தையான புருடனைப்போல, குருசிலே - ஸ்ரீராமா, வருந்தவேண்டா மெனலும் - வருத்தப்பட வேண்டாமென்று வசிட்டமுனி சொல்லவும், எந்தாய் - எனதுபிதாவான வசிட்டமுனியே, கூறுபொய்ப் புருடனோன் - சொல்லாநின்ற மித்தையா புருடனவன், ஒருபயனின்றி - ஓர் பிரயோசனமுமில்லாமல், துன்பமுற்று - துயரத்தை யடைந்து, அவனுலைந்தவாறென் - அவனலைந்த விதமென்ன—எ-று.

எ- து இரண்டுட னொன்றையுந் தள்ளியிருந்த வாத்மஞானத்தையடைந்து பரமசுகத்தை யடைவாய். மித்தையான புருடனைப் போல ஸ்ரீராமா! வருத்தப்பட வேண்டாமென்று வசிட்டமுனிசொல்லவும், எனது பிதாவான வசிட்டமுனியே! சொல்லாநின்ற மித்தையா புருடனவன் ஓர் பிரயோசனமு மில்லாமற் றுயரத்தை யடைந்து அவனலைந்த விதமென்ன—எ-ம். (1)

## அகம்பாவ நீக்கற்பொருட்டுதன் விகாசத்தைச் சாமானியமா யறிவிக்கத் தொடங்கல்.



ஞானமாமமுதினாலே நலம்பெறநிறைந்ததேனு
மியானறிவுறவித்தன்மை யியம்பெனவிராமன்கேட்ப

மாணமாவசிட்டன்சொல்வான் வள்ளலேநகைக்குமூல
மானவிக்கதையான்சொல்வ தறவியப்புளதுமன்று.

இ-ள். ஞானமாயமுதினால் - ஞானமாகிய அமுர்தத்தினால், நலம்பெற - நன்மையுண்டாக, நிறைந்தேனும் - நிறைந்தானாலும், யானறிவுற - நானறியும்படியாக, இந்தன்மையியம்பென - இந்தசிமையைச் சொல்லுவாயென்று, இராமன்கேட்ப - இராகவர்கேட்க, மாணமாவசிட்டன்சொல்வான் - மாட்சிமையுள்ள வசிட்டமுனியானவர் சொல்லுவார், வள்ளலே - இராசாவே, நகைக்குமூலமான - சிரிப்புக்குக்காரணமாகிய, இக்கதை - இந்தக் கதையை, யான்சொல்லுவது - நான்செப்புவது, அறவியப்புளது - மிகவுமதிசயமுடையது—எ-று.

எ-து. ஞானமாகிய அமுர்தத்தினால் நன்மையுண்டாக நிறைந்தானாலும் நானறியும்படியாக இந்தத்தன்மையைச் சொல்லுவாயென்றிராகவர்கேட்க, மாட்சிமையுள்ள வசிட்ட முனியானவர் சொல்லுவார். இராசாவே! சிரிப்புக்குக் காரணமாகிய இந்தக் கதையை நான்செப்புவது மிகவுமதிசயமுடையது—எ-ம். (2)

## சூனியத்திலுண்டானவன் அகங்காரனெனல்.

ஒருதலத்தேகாந்தத்தி லுற்றசூனியத்திலுண்டாய்
மருவுமத்தலத்தினிற்போன் மாயையேந்திரமயத்தோர்
புருடனுண்டஞ்ஞானத்தே ன் புன்மையாயிளமைப்பண்பாய்
மிருதுவாம்புந்தியுள்ளோன் கேவலமிருந்தமூர்க்கன்.

இ-ள். ஒருதலத்து-(சிதாகாசமான) வோரிடத்தில், ஏகாந்தத்தில் - (பிரபஞ்சமில்லாமற்) றனித்தவிடத்தில், உற்ற சூனியத்தில் - பொருந்தியவிசேடமில்லாதவிடத்தில், உண்டாய்மருவும்-உண்டாகிப் பொருந்துகின்ற, அத்தலத்தினிற்போன் - அந்தவிடத்திலிருப்பவன், மாயையேந்திரமயத்து - மாயாயேந்திரமயத்தையுடைய ஓர்புருடனுண்டு - ஓராண்மகனுண்டு, அஞ்ஞானத்தோன் - அவனஞ்ஞானத்தையுடையவன், புன்மையாய்-ஈனமாகியும், இளமைப்பண்பாய்-குழந்தையின்றன்மையாகியும், மிருதுவாம் - அற்பமாகியுமிருக்கின்ற, புந்தியுள்ளோன் - புத்தியையுடையவன், கேவலமிருந்த மூர்க்கன் - மிகுந்த மூர்க்கத்தன்மையையுடையவன்—எ-று.

எ-து. சிதாகாசமான வோரிடத்திற் பிரபஞ்சமில்லாமற் றனித்தவிடத்திற் பொருந்திய விசேடமில்லாதவிடத்தி லுண்டாகிப் பொருந்துகின்ற அந்தவிடத்திலிருப்பவன், மாயாயேந்திர மயத்தை

யுடைய ஓராண்மகனுண்டு. அவனஞ்ஞானத்தை யுடையவன். ஈனமாகியுங் குழந்தையின் றன்மையாகியு மற்பமாகியு மிருக்கின்ற புத்தியையுடையவன், மிகுந்த மூடத்தன்மையை யுடையவன்—எ-ம். ()

## சூனியத்தில் வளர்கின்றவனெனல்.

> வானிலேசுருண்டுதோன்று மயிற்சுருண் மருத்தலத்திற்
> கானனீரென்னவன்னான் றோன்றியேகலந்தபாழிற்
> சூனியமலாதொன்றில்லை யாதொன்று தோன்றிற்றங்கே
> மானவவதுவுமன்னான் மற்றவன்வளர்வுமாங்கே,

இ - ள். வானில்-ஆகாயத்தில், சுருண்டுதோன்றும் - சுருண்டுதோற்றுகின்ற, மயிற்சுருளைப்போலவும், மருத்தலத்தில், அளர்ப்பூமியிற் றோற்றுகின்ற, கானனீரென்ன - கானற்சலத்தைப்போலவும், அன்னான் - அந்தமித்தையாபுருடன், தோன்றி-உண்டாகி, கலந்தபாழில்-கலந்திருக்கின்ற சூனியத்தில், சூனியமலாது-சூனியமேயல்லாமல், ஒன்றில்லை-வேறொன்றுமில்லை, அங்கு-அவ்விடத்தில், யாதொன்று - எதொன்று, தோன்றிற்று - உண்டானதோ, மானவ-மனுகுலத்திற் பிறந்தவனே, அதுவுமன்னான் - அதுவு மந்தமித்தையாபுருடனே, அவன்வளர்வுமாங்கு-அவனதுவளர்ச்சியும்அவ்விடத்தில்

எ-து. ஆகாயத்திற் சுருண்டு தோற்றுகின்ற மயிற் சுருளைப் போலவும் அளர்ப்பூமியிற்றோற்றுகின்ற கானற்சலத்தைப் போலவும் அந்தமித்தையாபுருடனுண்டாகிக் கலந்திருக்கின்ற சூனியத்திற் சூனியமேயல்லாமல் வேறொன்றுமில்லை அவ்விடத்திலே தொன்றுண்டானதோ! மனுகுலத்திற் பிறந்தவனே, அதுவுமந்த மித்தையாபுருடனே! அவனது வளர்ச்சியு மவ்விடத்தில்—எ-ம். ()

## ஆகாயத்தைக்காக்க வோரகங்கட்டல்.

> வேறுமாயேயெப்போதும் விளங்குந்தன்மையவன்கானான்
> கூறுவானோர்சங்கற்பங் கூடினான்விண்ணினைப்பேணி
> யூறுபடாமல்வைகுதுமீ துயர்ந்ததே யென்றுளத்துன்னி
> தேறுமுவகையுடன்விண்ணைச் சேமிப்பானோர்வீடமைத்தான்

இ - ள். வேறுமாயே - (பிரபஞ்சத்துக்கும்) வேறாகவே, எப்போதும் - எக்காலமும், விளங்குந்தன்மை - பிரகாசிக்கின்ற (சித்தினது) சுபாவத்தை,

அவன்காணென் - அவன்யாராதவனாய், கூறுவான - சொல்லப்பட்டமித்தையா புருடன், ஓர்சங்கற்பங்கூடினன் - ஒருசங்கற்பத்தையடைந்து, விண்ணைப் பேணி - ஆகாயத்தைவிரும்பி, ஊறுபடாமல வைகுதும - இடையூறில்லாமல் வைப்போம், ஈதுயர்ந்ததேயென்று - இதுமேலானதேயென்று, உளத்துன்னி, மனதினினைந்து, தேறுமுவகையுடன் - திடமானசந்தோஷத்தோடும், விண்ணை - ஆகாயத்தை, சேமிப்பான் - காவல்செய்யும்பொருட்டு, ஓர்வீட்டைமைத்தான் - ஒருவீடுகட்டினன் — எ-று.

எ - து. பிரபஞ்சத்துக்கு வேறாகவே எக்காலமும் பிரகாசிக் கின்ற சித்தினது சுபாவத்தை அவன்யாராதவனாய்ச் சொல்லப்பட்ட மித்தையாபுருடனொருசங்கற்பத்தையடைந்து ஆகாயத்தை விரும்பி இடையூறில்லாமல் வைப்போம் இது மேலானதேயென்று மன தினினைத்துத் திடமான சந்தோஷத்தோடும் ஆகாயத்தைக் காவல் செய்யும்பொருட் டொருவீடுகட்டினன் — எ-ம். (5)

## வீடுகெடவிண்போனதெனவருந்தல்.

அந்தமனையில்விண்ணினைவைத் தளிக்கின்றேமென்றதிலாசை
பந்தமுறலுமவன்வீடு படர்காலத்தாலழிவெய்தி
யிந்தமருத்தாற்றரங்கம்போ லிருதுமுடிவால்வருடம்போற்
சிந்தியொழியவவன்கண்டு சேண்போயினதென்றலறலுற்றான்.

இ - ள். அந்தமனையில் - அவ்வீட்டில், விண்ணினைவைத்து - ஆகாயத்தை வைத்து, அளிக்கின்றேமென்று - காக்கின்றேமென்று, அதில் - அவ்விண் ணில், ஆசைபந்தமுறலும் - இச்சைகட்டுப்படவும், அவன்வீடு - அவன்மனை யானது, படர்காலத்தால் - வெகுகாலத்தினால், அழிவெய்தி - நாசமடைந்து இந்தமருத்தாற்றரங்கம்போல் - இந்தக்காற்றினால் அலையுமலையைப் போலவும், இருதுமுடிவால் - சரிதுவினாசத்தினால், வருடம்போல் - மழையைப்போல வும், சிந்தியொழிய - கெட்டுப்போக, அவன்கண்டு - அந்தமித்தையா புருடன் பார்த்து, சேண்போயினதென்று - ஆகாயம்போய்விட்டதென்று, அலறலுற்றா ன் - அழத்தொடங்கினன் — எ-று.

எ - து. அவ்வீட்டில் காயத்தைவைத்துக் காக்கின்றேமென் றவ்விண்ணி லிச்சைகட்டுப்படவும் அவன் மனையானது வெகுகாலத் தினானாசமடைந் திந்தக்காற்றினால் அலையுமலையைப்போலவுஞ் சரி துவினாசத்தினால் மழையைப்போலவுங் கெட்டுப்போக அந்தமித் தையா புருடன்பார்த்து ஆகாயம் போய் விட்டதென் றழத்தொடங் கினன் — எ-ம். (6)

## மனைகெட விண்ணைக் கூபத்தில் வைத்தல்.

நில்லாவீட்டில்விண்ணேயோ நீயெங்ககன்றுயொருகணத்தி
லல்லாயானுயென்வீட்டி ஞுகாசத்துக்கறம்புலம்பி
பொல்லாமனத்தான்மீண்டங்கோர் புதியகிணறுசமைத்தொருவர்
கொல்லாதிதனிலிருத்துமெனக் கூபாகாசபாணுனன்.

இ - ள். வீட்டினில்லா - மனையிலிராமல், விண்ணேயோ - ஆகாயமே, ஒருகணத்தில் - ஒருக்ஷணத்தில், நீயெங்ககன்றாய் - நீயெங்கேபோனுய், அல்லாயானுயென - இல்லாததானுயென்று, வீட்டினுகாசத்துக்கு - கிரகாகாயத்துக்கு, அறம்புலம்பி - மிகவுமழுது, பொல்லாமனத்தால் - கொடியமனதினுல், மீண்டங்கு - திரும்பவும் அவ்விடத்தில், ஓர் புதியகிணறு சமைத்து - ஒரு நூதனமான கூபத்தையுண்டாக்கி, ஒருவர்கொல்லாது - ஒருவருங்கெடுக்காமல், இதனிலிருத்துமென - இவ்விடத்தில் வைப்போமென்று, கூபாகாசபாணுனன் - கிணற்றுகாயத்திற் பற்றுள்ளவனுனவன் — எ - று.

எ - து. மனையிலிராமல் ஆகாயமே! ஒருக்ஷணத்தி னீயெங்கே போனுய், இல்லாததானுயென்று கிரகாகாயத்துக்கு மிகவுமழுது, கொடிய மனதினுற்றிரும்பவும் அவ்விடத்திலொருநூதனமான கூபத்தையுண்டாக்கி யொருவருங்கெடுக்காமல் இதனி த்தில் வைப்போமென்று கிணற்றுகாயத்திற் பற்றுள்ளவனுனன் — எ-ம். (7)

## கிணறுகெட விண்ணுக்கிரங்கிக் குடபாகாயத் தடைத்தல்.

காலமதனுற்கூபந்தான் கழிதலோடுங்கதறுற்றான்
சாலவருந்திமீண்டங்கே தனைக்காப்பதற்கோர் குடம்பண்ணிக்
கோலமுடையதெனமகிழ்ந்துக் கும்பாகாசபாணு
னீலமுகிலேயக்குடமு நிகழ்காலத்தாலுடைந்ததுவே.

இ - ள். காலமதனுல் - சிலகாலத்தினுல், கூபந்தான் - கிணறனது, அழிதலோடும் - அழிந்தமாத்திரத்தில், சாலவருந்தி - மிகவுந்துன்புற்று, கதறுற்றான் - கதறினான், மீண்டு - திரும்பவும், அங்ஙனே காப்பதற்கு - அவ்விடத்திலவ்வாகாயத்தைப் பாதுகாப்பதற்கு, ஓர் குடம் பண்ணி - ஒரு குடத்தைச் செய்து, கோலமுடையதென - அழகையுடையதென்று, மகிழ்ந்து - சந்தோஷித்து, அக்கும்பாகாசபாணன் - அக்குடாகாயத்திற் பற்றுள்ளவனுனவன், நீலமுகிலே - கறுத்தமேகம்போன்ற ஸ்ரீராமா, அக்குடமும் - அக்குடமும், நிகழ்காலத்தாலுடைந்தது - நடக்குங்காலத்தாலுடைபட்டது — எ - று.

எ - று. சிலகாலத்தினாற் கிணறானதழிந்தமாத்திரத்தில் மிகவுந் துன்புற்றுக்கதறினான் திரும்பவும் அவ்விடத்திலவ்வாகாயத்தை யிரட்சிப்பதற் கொருகுடத்தைச் செய்து அழகை யுடையதென்று சந்தோஷித் தக்கடாகாயத்திற் பற்றுள்ளவ னானான். கறுத்தமேகம் போன்ற ஸ்ரீராமா! அக்கலசமும் நடக்குங்காலத்தா லுடைபட்டது.

## குடங்கெட அவ்விண்ணிக்கிரங்கிக் குண்டத்திலடைதல்.

நம்பிநம்பியடைந்தவெலா நாசமெய்தத்திருவிலியக்
கும்பவிண்ணுக்கழுததற்பின் குண்டமொன்றங்கேகெல்லித்
தம்பமென்றுதற்பரனாய்ச் சார்ந்தானந்தக்குழிதனையுந்
தும்பிகாலமழித்துளதாற் றுன்னுமிருளைச்சுடர்போல.

இ - ள். நம்பிநம்பி - மிகவுநம்பிக்கையுற்று, அடைந்தவெலாம் - பெற்றவனைத்தும், நாசமெய்த - கெட்டுப்போக, திருவிலி - செல்வமற்றமித்தையாபுருடன், அக்கும்பவிண்ணுக்கழுது - அந்தக்கடாகாயத்துக்குப்புலம்பி, அதற்பின் - அதன்பின்பு, குண்டமொன்று - ஒருகுழியை, அங்கேகெல்லி - அவ்விடத்திற்றோண்டி, தம்பமென்று - நிலையென்று, தற்பரனாய் - அக்குண்டாகாயத்திற் பற்றுள்ளவனாய், சார்ந்தான் - அடைந்தான், அந்தக்குழிதனையும் - அப்பள்ளத்தையும், துன்னுமிருளை - நெருங்கியவிருட்டைக் (கெடுக்கின்ற) சுடர்போல - பிரகாசத்தைப்போல, தும்பிகாலமழித்துளது - யானையாகிய காலமழித்தது—எ - று.

எ - று. மிகவும் நம்பிக்கையுற்றுப் பெற்றவனைத்துங் கெட்டுப் போகச் செல்வமற்ற மித்தையாபுருடன் அந்தக்கடாகாயத்துக்குப் புலம்பியதன்பின்பு ஒருகுழியை யவ்விடத்திற்றோண்டி நிலையென்று அக்குண்டாகாயத்திற் பற்றுள்ளவனா யடைந்தான். அப்பள்ளத்தையும்நெருங்கிய இருட்டைக்கெடுக்கின்ற பிரகாசத்தைப்போல யானை யாகிய காலமழித்தது—எ-ம். (9)

## குண்டங்கெட அவ்விண்ணுக்கிரங்கி நாற்சாரகங்கட்டி யதில்வைத்தல்

குண்டவிண்ணுக்கழுததற்பின் குலவுநாற்சாரகங்கட்டி
மண்டுமருள்கூர்தற்பரனாய் வாழ்ந்தானந்தமனைதனையு
மண்டமுழுதுங்கொல்கால மழியச்செய்யவதற்கழுது
கண்டபாவனைவிடைப்பட்ட சருகுபோலத்துணர்க்கலங்கினான்.

இ-ள். குண்டவின்னுக்கு குழியாகாசத்துக்கு, அழுதசற்பின்-புலம்பினபின்பு, நாற்சாரகங்கட்டி-வளைவான நாற்சாரி மனையைக்கட்டி, மண்டுமருள்கூர்-அளவற்ற கிருபைமிகுந்த, தற்பாரையவாழ்ந்தான்-அதுபற்றுள்ளவனாகவாழ்ந்தான், அந்தமனைதனையும்-அந்தவீட்டையும், அண்டமுழுதும்-அண்டங்களையெல்லாம், கொல்காலம்-அழிக்கின்றகாலமானது, அழிவுசெய்ய-கெடுக்க, அதற்கழுது-அதற்குவிசனப்பட்டு, சண்டபவனனிடைப்பட்ட-பெருங்காற்றிலகப்பட்ட, சருகுபோல-உலர்ந்த இலையைப்போல, தளர்ந்திலைந்தான்-சோர்வுற்றலைந்தான்—எ-று.

எ-து. குழியாகாசத்துக்குப் புலம்பினபின்பு வளைவான நாற்சாரிமனையைக்கட்டி அளவற்ற கிருபைமிகுந்த அதுபற்றுள்ளவனாக வாழ்ந்தான். அந்தவீட்டையு மண்டங்களையெல் லாமழிக்கின்ற காலமானது கெடுக்க அதற்கு விசனப்பட்டுப் பெருங்காற்றிலகப்பட்ட உலர்ந்த இலையைப்போல சோர்வுற்றலைந்தான்—எ-ம். (10)

## நாற்சாரகங்கெட அதற்கிரங்கிக் குதிர்செய்தடைத்தல்.

தடஞர்நாற்சாற்கழுததற்பின் றற்காப்பதர்கோர் குதிர்பண்ணி
யிடஞர்குதிர்புக்கவனிருப்ப விதுவுங்காலனிறப்பித்தா
னுடனேகுதிர்விண்ணினுக்கழுதா னொன்றோவீடுகுதிர்குண்டங்
குடநாற்சாரவென்பவற்றாற் குறைவில்காலந்துயருற்றான்.

இ-ள். தடஞர்நாற்சாற்கு-விசாலமுள்ள நாற்சாரியாகாயத்துக்கு, அழுதற்பின்-இரங்கினவதன்பின்பு, தற்காப்பதற்கு - அந்தவாகாயத்தை காவல்செய்வதற்கு, ஓர்குதிர்பண்ணி-ஒருகுதிரைச்செய்து, இடஞர்குதிர்ப்புக்கு-விசாலமுள்ளகுதிர்ப்பிரவேசித்து, அவனிருப்ப-அவனிருக்க, இதுவும்-இக்குதிரையும், காலனிறப்பித்தான்-காலனழிப்பித்தான், உடனேகுதிர்விண்ணினுக்கழுதான்-உடனேகுதிராகாயத்துக்கலறினான், ஒன்றோ-ஒன்றுதானோ, வீடும்-வீடாகாயமும், குதிர்-குதிராகாயமும், குண்டம்-குழியாகாயமும், குடம்-கடாகாயமும், நாற்சார-நாற்சாராகாயமும், என்பவற்றால்-என்கின்ற இவைகளினால், குறைவில்காலம்-வெகுகாலம், துயருற்றான்-துன்பத்தையடைந்தான்—எ-று.

எ-து. விசாலமுள்ள நாற்சாரியாகாயத்துக்கிரங்கின அதன்பின்பு அந்தவாகாயத்தைக் காவல்செய்வதற்கொரு குதிரைச்செய்து விசாலமுள்ள குதிரிற் பிரவேசித்தவனிருக்க இக்குதிரையுங் காலனழிப்பித்தான். உடனே குதிராகாயத்துக்கலறினான். ஒன்றுதானோ! வீடாகாயமுங் குதிராகாயமுங் குழியாகாயமுங் கடாகாயமும் நாற்

சாராகாயமுமென்கின்ற இவைகளினால் வெகுகாலந் துன்பத்தையடைந்தான்—எ—ம். (11)

விண்ணைவீட்டிலடைத்தவனாய் வீட்டில்விண்டான்றானாகி
யுண்ணையுற்றபெருந்துயரா லுழைக்கும்பிழைக்குமோரொருகா
லெண்ணணிநிற்பதிதுபோவ திதுவென்றறியானிவனென்று
புண்ணியத்தின்வடிவானோன் புகலவீரன்புகலுற்றான்.

இ-ள். விண்ணை - ஆகாயத்தை, வீட்டிலடைத்தவனாய் - கிரகத்திலடைத்தவனாய், வீட்டில்விண்டான்-கிரகாகாயமானது, தானாகி - தன்மயனாய், உண்ணையுற - மனந்தளர்வையடைந்த, பெருந்துயரால - மிகுந்ததுக்கத்தினால், ஓரொருகால்-ஒவ்வொருகாலத்தில், உழைக்கும் உழைப்பவனாகவும், பிழைக்கும்-பிழைப்பவனாகவும், எண்ணணி-நினைத்து, நிற்பதிது-இருப்பதிது, போவதிதுவென்றறியான்-நசிப்பதிதுவென்றறியாத, இவன்-இந்தப்புருடன், அறியனென்று-தெரியாதவனென்று, புண்ணியத்தின் வடிவானோன் புகல-தருமரூபியான வசிட்டமுனிசொல்ல, வீரன்புகலுற்றான்-ஸ்ரீராமன் சொல்லத்தொடங்கினார்—எ-று.

எ-து. ஆகாயத்தைக் கிரகத்திலடைத்தவனாய்க் கிரகாகாயமானது தன்மயனாய் மனந்தளர்வையடைந்த மிகுந்த துக்கத்தினாலொவ்வொரு காலத்தி லுழைப்பவனாகவும், பிழைப்பவனாகவும், நிலைத்திருப்பதிது, நசிப்பதிதுவென்றறியாத இந்தப்புருடன் றெரியாதவனென்று தருமரூபியான வசிட்டமுனி சொல்ல, ஸ்ரீராமன் சொல்லத் தொடங்கினார்—எ-ம்.

(இ-கூ-க-ம்.) வீடுமுதலியவைகண் மரித்தாலே விண்ணிறந்ததாக நினைத்து வருந்தினனென்பதாம். (12)

## இத்திருஷ்டாந்தத்தி னபிப்பிராயங்கூறத்தொடங்கல்.

---

பொய்யாமனிதன் கதையாலென் புகன்றாய்மாயாபுருடனையே
யையாவிவன் விண்காத்தானென் றறைந்ததேதென் றருள்கென்ன
மெய்யாமவசிட்டனுரைசெய்வான் மித்தாபுருடனென்றவிவன்
மையார்முகிலேருனியமாம் வானிலெழுந்த வகங்காரமே.

இ-ள் பொய்யாமனிதன் - மித்தையாபுருடனுடைய, கதையாலென் புகன்றாய்-கதையினாலென்னசொன்னீர், ஐயா-ஆசாரியரே, மாயாபுருடனை-மித்தையாபுருடனை, இவன்விண்காத்தானென்று - ஆகாயத்தைக்காவல் செய்தானென்று, அறைந்ததேதென்று-சொன்னதேதுவென்று, அருள்கென

ன்ன - அருள்வாயென்றிராமன்கேட்க, மெய்யாம் - உண்மையான, வசிட்டனுரைசெய்வான் - வசிட்டமுனிசொல்லுவார், மித்தாபுருடனென்றவிவன் - மித்தையாபுருடனென்று சொல்லியவிவன், மையார்மூகிலே - கரியநிறத்தையுடையமேகம்போன்றவரே, சூனியமாம்வானில் - சூனியவாகாயத்தில், எழுந்தவகங்காரமே - உண்டான அகங்காரமாம்—எ-று.

எ - து. மித்தையாபுருடனுடைய கதையினு லென்ன சொன்னீர் ஆசாரியரே! மித்தையாபுருடனை இவனுகாயத்தைக் காவல் செய்தானென்று சொன்ன தெதுவென்றருள் செய்வாயென் றிராமன்கேட்க, உண்மையான வசிட்டமுனி சொல்லுவார். மித்தையாபுருடனென்று சொல்லிய விவன் கரியநிறத்தையுடைய மேகம்போன்றவரே! சூனியவாகாயத்திலுண்டான அகங்காரமாம்—எ—ம். (13)

இந்தவுலகெல்லாமிருக்கு மிந்தவிண்ணே ததுநிறைவுற்
றந்தமின்றிச் சிருட்டிதனக் காதிதனிற்றானேநிற்கு
மைந்தவதன் பாலகங்கார மருத்திற்பரிசம்வருவதுபோன்
முந்துதோன்றித்தனைக்காக்கமுயன்றான்வடிவாய்முளையாதோன்.

இ - ள். இந்தவுலகெல்லாமிருக்கும் - இச்சகங்களனைத்துமிருக்கின்ற, இந்தவிண்ணேது - இவ்வாகாயமெதுவோ, அது நிறைவுற்று - அது பூரணமாய், அந்தமின்றி - முடிவில்லாததாய், சிருட்டிதனக்காதிதனில் - சிருட்டிக்கு முன்னமே, தானேநிற்கும் - சுயமாகவேயிருக்கும், மைந்த - குழந்தாய், அதன்பால் - அதனிடத்தில். அகங்காரம் - அகம்பாவமானது, மருத்திற்பரிசம் வருவது போல் - காற்றிற்பரிசமுண்டாவதுபோல, முந்துதோன்றி - முன்னமேயுண்டாகி, தனைக்காக்க - (சிதாகாசமான) ஆத்மாவைக் காப்பதற்காக, வடிவாய் முளையாதோன் - சூனியமானவகங்காரன், முயன்றான் - முயற்சித்தான்—எ-று.

எ - து. இச்சகங்களனைத்து மிருக்கின்ற இவ்வாகாயமெதுவோ அதுபூரணமாய், முடிவில்லாததாய், சிருட்டிக்கு முன்னமே சுயமாக வேயிருக்கும். குழந்தாய்! அதனிடத்தில் அகம்பாவமானது காற்றிற் பரிசமுண்டாவதுபோல் முன்னமே யுண்டாகிச் சிதாகாசமான ஆத்மாவைக்காப்பதற்காகச் சூனியமான அகங்காரன் முயற்சித்தான். ()

கூவங்குண்டங்குடநாற்சார் குதிரென்பனவாங்குரம்பைகளை
மேவநாநாவிதமாக விதித்துமீண்டுமீண்டிழந்து
தாவமுற்றானுடரேறாந் தனைக்காத்தனனென்றாகாச
பாவனைக்கேநிலைப்பட்டான் பாழேவருந்திப்பதைத்தனனுல்.

இ-ள். கூவம் - கிணறும், குண்டம் - குழியும், குடம் - கடமும், நாற்சார் - நாற்சாரிடம், குதிர் - குதிரும், என்பனவாம் - என்று சொல்லப்பட்டனவாகிய, கூரம்பைகளைமேவ - சரீரங்களைப்பொருந்த, நானாவிதமாகவிதித்து - பலவித மாகவுண்டாக்கி, மீண்டு மீண்டிழந்து - திரும்பத்திரும்பவிழந்து, தாவுற்றான் - துன்படைந்தான், உடலோறும் - சரீரங்கடோறும், தலைக்காத்தனனென்று - (சிதாகாச) ஆத்மாவைக்காவல்செய்தேனென்று, ஆகாசயாவனைக்கு - பூதாகாயபாவனைக்கு, நிலைப்பட்டான் - நிலையானான், பாழேவருந்தி - வீணாகவருத்தப்பட்டு, பதைத்தனன் - பதைபதைத்தான் - எ-று.

எ - து. கிணறும், குழியும், கடமும், நாற்சாரியும், குதிரு மென்றும் சொல்லப்பட்டனவாகிய சரீரங்களைப்பொருந்தப் பலவிதமாகவுண்டாக்கி திரும்பத்திரும்ப இழந்து துன்பமடைந்தான் சரீரங்கடோறுஞ் சிதாகாச ஆத்மாவைக் காவல் செய்தேனென்று பூதாகாயபாவனைக்கு நிலையானான், வீணாக வருத்தப்பட்டு பதைபதைத்தான்—எ-ம். (15)

விண்ணானென்றேசேமித்து வீட்டாகாசமாதிகளி
னண்ணாமெலிவுற்றிடுபித்தை யானைபோல்வருந்தாதொழிமலர்க்
கண்ணாவிண்ணினுமப் பெரிதாய்க் களங்கமற்றுநுண்ணியதா
யெண்ணாலடங்காவழிவிலசிவ மியலாத்துமதத்துவந்தானே.

இ - ள் விண்ணானென்று - (பூ) தாகாயத்தை நானென்று, சேமித்து - காவல்செய்து, வீட்டாகாசமாதிகளின் - கிரகாகாசமுதலானவைகளில், நண்ணாமெலிவுற்றிடும் - பொருந்தித்தளர்வடைகின்ற, பித்தையான்போல் - பித்தையாபுருடனைப்போல, மலர்க்கண்ணா - தாமரைக்கண்ணனான ஸ்ரீராமா, வருந்தாதொழி - துன்புறுமனீங்கக்கடவாய், விண்ணில் - ஆகாயத்திலும், மிகப்பெரிதாய் - மிகவும் வியாபகமாகியும், களங்கமற்று - மாசில்லாததாகியும், நுண்ணியதாய் - சொச்சமாகியுமிருக்கின்ற, எண்ணாலடங்கா - நினைவினாலடங்காத, அழிவில்சிவம் - அழிவற்றசிவமே, இயலாத்தும தத்துவந்தான் - சுபாவமான வாத்மதத்துவமாம்—எ-று.

எ - து. பூதாகாயத்தை நானென்று காவல்செய்து கிரகாகாச முதலானவைகளிற் பொருந்தித் தளர்வடைகின்ற பித்தையாபுருடனைப் போலத் தாமரைக்கண்ணனான ஸ்ரீராமா! துன்புறுமனீங்கக்கடவாய். ஆகாயத்திலு மிகவும் வியாபகமாகியும், மாசில்லாததாகியும், சொச்சமாகியு மிருக்கின்ற நினைவினாலடங்காததழிவற்றசிவமே சுபாவமான ஆத்மதத்துவமாம்—எ-ம்.

(இ-சு-சு-ம்.) உன்னதாவ சிதாகாயத்தி லில்லாததாயுதித்த அகம்பாவமே பித்தையாபுருடன், சிதாகாயத்தைக்காக்க நினைத்தல் விண்காக்கநினைத்

தல் தேவர்முதலிய சரீரங்கள் வீடுமுதலியன சகாரணமே, அவைகளுண்டாகி யழிதல் நீங்காத சிதாகாய நிமித்தமாக விரங்குதலே, வீணாகக்கதறிறெனக்கூறி இவ்விதம்பாவத்தால் வருந்தாமற் சிவஸ்ரூபமாய் விளங்குவாயென்பதாம் (16)

## தேகநீங்கினலுஞ் சித்து நீங்காதெனல்.



அவ்வாத்துமதத்துவங் காணலாமோவெவர்க்குமகப்படுமோ
விவ்வாறிருக்கவுடலிறந்தா லிதயாகாசமாத்திரத்தை
வெவ்வாளரசேநானிறந்தே னென்றுமெலிவர்விவேகமிலார்
தவ்வாவசும்புகடாதிகடா நகர்ந்தபோது தணந்திடுமோ.

இ - ள் அவ்வாத்துமதத்துவம் - அந்தவாத்துமதத்துவமானது, காணலாமோ - தரிசிக்கப்படுமோ, எவர்க்குமகப்படுமோ-யாவர்க்குங் கிடைக்குமா, இவ்வாறிருக்க - இப்படியிருக்க, உடலிறந்தால் - சரீரமரித்தால், இதயாகாசமாத்திரத்தை - இதயம்பரமாத்திரமானவை, வெவ்வாளரசே - கொடியவாளாயுதத்தையுடையவரசனே, நானிறந்தேனென்று - யானிறந்து போனேனென்று, விவேகமிலார் - விவேகமற்றவர்கள், மெலிவர் - தளருவார்கள், தவ்வா விசும்பு - தவிராதவாகாயமானது, கடாதிகடான் - கடமுதலியவைகள், தகர்ந்தபோது-கெட்டபோது, தணந்திடுமோ-நீங்கிப்போமோ—எ-று.

எ - து. அந்த ஆத்துமதத்துவமானது தரிசிக்கப்படுமோ! யாவர்க்குங்கிடைக்குமா! இப்படியிருக்கச் சரீரமரித்தால் இதயம்பரமாத்திரமானவை கொடிய வாளாயுதத்தை யுடையவரசனே! யானிறந்துபோனேனென்று விவேகமற்றவர்கள் தளருவார்கள். தவிராதவாகாயமானது கடமுதலியவைகள் கெட்டபோது நீங்கிப்போமோ—எ-ம். (17)

## தானென்பது நிறைந்து நானென்பதிறக்குமெனல்.



கடமதுடைந்தால்விண்பிரியாக் காயமழிந்தாலுயிரழியா
தடவிதாஞ்சின்மாத்திரமாய்ச் சத்தாய்விண்ணினுண்ணியதாய்த்
தொடருமனுவுக்கணுவாகுஞ் சுருபமைந்தாநானென்று
படருமனுபூதியினைவே பயிலுங்குடம் பாணசித்திடுமால்.

இ - ள். கடமதுடைந்தால் - குடமுடைந்தால், விண்பிரியா ஆகாயமானது பிரியமாட்டாது, காயமழிந்தால்-சரீரநசித்தால், உயிரழியா-ஆத்மாவானதழியாமாட்டாது, தடவிதாஞ்சின்மாத்திரமாய் - பெருமை பொருந்திய

சின்மாத்திரமாகியும், சத்தாய்-சத்தாகியும், விண்ணினுண்ணியதாய் - ஆகாயத்திலுஞ் சூட்சுமமாகியும், தொடருமணுவுக்கணுவாகும் - தொடராநின்ற அணுவுக்கணுவாகியுமிருக்கின்ற, சுருபம் - பிரமஸ்வரூபமானது, மைந்தா - குழந்தாய், அனுபூதியினளவேபடரும் - அனுபூதியின்மட்டே வியாபிக்கும், நானென்று பயிலும் - யானென்று சொல்லிய (அகங்காரமானது), குடம்போலசித்திடும் - கடத்தைப்போலழியும்—எ-று.

எ - து. குடமுடைந்தால் ஆகாயமானது பிரியமாட்டாது. சரீரநசித்தால் ஆத்மாவானது அழியமாட்டாது. பெருமை பொருந்திய சின்மாத்திரமாகியும், சத்தமாகியும், ஆகாயத்திலுஞ் சூட்சுமமாகியும் தொடராநின்ற அணுவுக்கணுவாகியுமிருக்கின்ற பிரமஸ்வரூபமானது குழந்தாய்! அனுபூதியின்மட்டே வியாபிக்கும்யானென்று சொல்லிய அகங்காரமானது கடத்தைப்போலழியும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) வீடுமுதலியவைகள் நசிக்கினு மதிலகப்பட்டது போலத் தோற்றிய கிரகாகாசமுதலாகச் சொல்லுஞ் சத்தமிறந்ததே யன்றி அதனருத்தமான பூதாகாசமிறவாததுபோலத் தேகாதிகள் நசிக்கினு அதிற்பந்தப் பட்டதுபோலத் தோற்றின சுத்தரூபமான சிதாபாசனென அகம்பாவ நீங்குவதே யன்றி அதனருத்தமான சித்து நீங்காவென்பதாம். (18)

## செகத்துருவஞ்சித்தேயெனல்.

யாதுமென்று மெவ்விடத்து மிறத்தல்பிறத்தலிலதாகு
மோதுமிந்தருபத்தா லுலகாய்ப்பிரமமேவளரு
மாதலாலிவ்வுலகெல்லா மடியுமுடியுநடுவுமறப்
பேதமறப்பாவாபாவம் பிறவாப்பொருளென்றிடர் தீர்வாய்.

இ - ள். யாதும்-எதுவும், என்றும்-எப்போதும், எவ்விடத்தும்-எந்தவிடத்திலும், இறத்தல்-மரித்தலும், பிறத்தல்-செனித்தலும், இலதாகும்-இல்லாததாகும், ஓதுமிந்தருபத்தால்-சொல்லப்பட்ட இவ்வுருவத்தினால், உலகாய் - சகமாய், பிரமமேவளரும்-பிரமமேவிர்த்தியடையும், ஆதலால் - ஆதலினால், இவ்வுலகெல்லாம்-இச்சகமனைத்தும், அடியும்-ஆதியும், நடுவும்-மத்தியும், முடிவுமற - அந்தமுமில்லாமலும், பேதமற-பேதாபேதமில்லாமலும், பாவாபாவம்பிறவா - பாவமும்பாவமுமுண்டாகாமலு மிருக்கின்ற, பொருளென்று - பரவஸ்துவென்றெண்ணி, இடர்தீர்வாய்-துனபநீங்குவாய்—எ-று.

எ-து. எதுவு மெப்போதும் எந்தவிடத்திலு மரித்தலுஞ் செனித்தலு மில்லாததாகும். சொல்லப்பட்ட இவ்வுருவத்தினால் சகமாய்ப்பிரமமே விர்த்தியடையுமாதலினால் இச்சகங்களனைத்தும் ஆதியுமந்தியு மந்தமு மில்லாமலும், பேதாபேதமில்லாமலும், பாவமும் பாவமுண்டாகாமலு மிருக்கின்ற பாவஸ்துவென் றெண்ணித் துன்பநீங்குவாய்—எ-ம். (19)

## அகம்பாவத்தை அறிவிற்கெடுக்க வேண்டுமெனல்.

ஆபத்துக்கெல்லா நிலைய மநித்தமவசமவிவேகம்
பாவத்துக்குமுதன்மடமைப் பவவித்தழிவைப்பற்றியது
தாபத்துக்கோரிடமான தகவிலகங்காரந்தன்னை
நீபற்றில்லாவறிவாலே நீக்கிலதுவேநிமலநிலை.

இ-ள். ஆபத்துக்கெல்லாம்-ஆபத்துக்களனைத்திற்கும், நிலையம்-இடமாகியும், அநித்தம்-அநித்தியமாகியும், அவசம்-வசமில்லாததாகியும், அவிவேகம்-விவேகமில்லாததாகியும், பாவத்துக்குமுதல்-பாவங்களுக்கு முதலாகியும், மடமை-அஞ்ஞானமாகியும், பவவித்து-சநநபீசமாகியும், அழிவைப்பற்றியது-நாசத்தையுடையதாகியும், தாபத்துக்கோரிடமான-துன்பத்துக்கோர் வித்தாகியுமிருக்கின்ற, தகவிலகங்காரந்தன்னை-அறிவற்ற அகம்பாவத்தை நீபற்றில்லாவறிவால்-இராகவவிச்சையற்ற ஆத்மஞானத்தினால், நீக்கில-கெடுப்பாயானால், அதுவே-(அவ்வகங்காரமிறந்த) விடமே, நிமலநிலை-நின்மலமான சீவன்முத்திப்பதமாம் எ-று.

எ-. ஆபத்துக்களனைத்திற்கு மிடமாகியும், அநித்தியமாகியும், வசமில்லாததாகியும், பாவங்களுக்கு முதலாகியும், அஞ்ஞானமாகியும், சநநபீசமாகியும், நாசத்தையுடையதாகியும், துன்பத்துக்கோர் வித்தாகியுமிருக்கின்ற அறிவற்ற அகம்பாவத்தை இராகவவிச்சையற்ற ஆத்மஞானத்தினால் கெடுப்பாயானால் அவ்வகங்காரமிருந்தவிடமே நின்மலமான சீவன்முத்திப்பதமாம்—எ-ம்.

(இ-உ-க-ம்) சிதமேசகத்தாய் விளங்கு தென்றறியின் அம்மையானென்னும் அகம்பாவநீங்கிச் சர்வபூர்த்தாகவே விளங்குமென்பதாம் (20)

மித்தையா புருடன் கதை முற்றிற்று.

ஆக கதை 39-க்கு கவிதை 1877.

# விரதரூபை கதை.

அவதாரிகை.

முற்கதையில் அகம்பாவத்தால் வீறுகவருந்துவதை திருஷ்டாந்தப் படுத்தி அஃது நீங்கிற் சர்வம்பிரமமயமாய் விளங்குமென்பதை யறிவித் திவ்வனுபவ மியாவிற்குஞ்சான்றுதானேயென்னு மகாகர்த்தத்வ முதலியவற்றால் விளங்குமென்பதை யறிவிக்குநிமித்தம் விரதரூபை கதையை நிரூபிக்கிறார்.

## சிற்பிரகாசமே சகத்தாக விளங்குமெனல்.

ஆதலாற்காண்பவற்றி னுண்மைநிலையிப்படியே யறிவில்லை
யம், பேதமாய்வேறொன்றிற் பிறந்ததில்லைக்கயிற்றிலாப்பிறப்பதே
போ, லாதபனில்வேறில்லையா தபமென்றேபாவித்தோர்க் காதபந்தா
ன், பேதமறவாதபனும் பேணுநிரு விகற்பமிது பேசுங்காலே.

இ - ள். ஆதலால் - ஆதலினால், காண்பவற்றினுண்மைநிலை - சகத்தில் நிச்சயமானது, இப்படியே - இந்தப் பிரகாரமேயாகும். அறிவில் - ஆத்மஞானத்தில், ஐயம் - சகமானது, கயிற்றிலாப்பிறப்பதேபோல் - ரச்சுவிற் சற்பமுண்டாவதுபோல (உதித்ததேயன்றி), பேதமாய் - வேற்றுமையாக, வேறொன்றிற் பிறந்ததில்லை - மற்றொன்றி லுண்டானதில்லை, ஆதபனில் - சூரியனைவிட, ஆதபம் - கிரணமானது, வேறில்லையென்று - வேறில்லையென்று, பாவித்தோர்க்கு - பாவனைசெய்தவர்களுக்கு, ஆதபந்தான் - கிரணமே, பேதமறவாதபனும் - வேற்றுமையில்லாமற் சூரியனுக்கும், பேசுங்கால் - சொல்லுமிடத்தில், இதுபேணுநிருவிகற்பம் - இதுவே விரும்பப்பட்ட நிருவிகற்பமாகும் — எ - று.

எ - து. ஆதலினால் சகத்தில் நிச்சயமானது இந்தப்பிரகாரமேயாகும். ஆத்மஞானத்திற் சகமானது ரச்சுவிற் சற்பமுண்டாவதுபோல விதித்ததேயன்றி வேற்றுமையாக மற்றொன்றி லுண்டானதில்லை, சூரியனைவிட கிரணமானது வேறில்லையென்று பாவனை செய்தவர்களுக்கு வேற்றுமையில்லாமற் சூரியனுக்கும், சொல்லுமிடத்தில் இதுவே விரும்பப்பட்ட நிருவிகற்பமாகும் — எ - ம். (1)

## அபேதானுபவ முரைத்தல்.

பொன்னில்வேற்றுமையன்று கேயூரமெனநினையிற் பொன்னென்றேயா, மின்னதேநிருவிகற்ப மென்பரா விரவிவெயிலென்று நாடின், மின்னுகதிரிரவிக்கு வேறுபோலாங்கண்டாய் விவிதமாகத், துன்னுநாநாத்துவம்விட் டறிவகிலாநல்லறிவிற்றணிந்துநிற்பாய்.

இ - ள். பொன்னில் - கனகத்துக்கு, கேயூரம் - தோளணியானது, வேற்றுமையன்றெனநினையில் - வேறுபாடல்லவென்றுபாவிக்கில, பொன்னென்றேயாம் - தமனியமொன்றமேயாம், இன்னது - இவ்வபின்னதசையே, நிருவிகற்பமென்பர் - நிருவிகற்ப மென்று சொல்லுவார்கள், இரவி - சூரியனென்றும, வெயிலென்று - கிரணமென்றும், நாடில் - வேறாக நாடினால், மின்னுகதிர் - பிரகாசிக்கின்ற கிரணத்துக்கும், இரவிக்கு - சூரியனுக்கும், வேறுபோலாங்கண்டாய் - வேற்றுமையைப் போலத்தோற்றும், விவிதமாகத்துன்னும் - நாநாவிதமாக நெருங்கிய, நாநாத்துவம்விட்டு - பல விதங்களையும் விட்டு, அறிவகிலா - சகமில்லாத, நல்லறிவில் - அனுபூதி ஞானத்தில், தணிந்து நிற்பாய் (ஸ்ரீராமா) நீதெளிந்திருப்பாய்—எ-று.

எ - து. கனத்துக்குத் தோளணியானது வேறுபாடல்ல வென்று பாவிக்கில் தமனியமொன்றுமேயாம், இவ்வபின்னத்தையே நிருவிகற்பமென்று சொல்லுவார்கள் சூரியனென்றும் கிரணமென்றும வேறாக நாடினால் பிரகாசிக்கின்ற கிரணத்துக்கும் சூரியனுக்கும் வேற்றுமைபோலத் தோற்றும், நாநாவிதமாக நெருங்கிய பலவிதங்களையும் விட்டுச் சகமில்லாத அனுபூதிஞானத்தில் ஸ்ரீராமா! நீதெளிந்திருப்பாய்—எ—ம்.

(இ-உ-க-ம்.) கிரணமென்றும் ஆபரணமென்றும் வேறுபிரித்துப் பாராமல் சூரியனாகவும் பொன்னாகவும் பாக்கில் அவைகளாய் விளங்குவது போலச் சகத்தை வேறுபிரித்துப் பாராமற் சின்மாத்திரமாகப் பார்க்கில் அஃதாகவே யாவும் விளங்கு மென்பதாம். (2

## பிரமசங்கற்பமே மனமுதலிய சகமாகத் தோற்றுமெனல்.



சங்கற்பமெனுமபுராண சத்தியினைத்தற்பரமந்தானேதன்னாற்
பொங்குற்றவாயுவலை வைச்செய்யுமாறுபோற் புரிந்ததுபோது
சங்கற்பவிரியுருவா யயல்போலாய்ச் சகவடிவாய்த்தனைத்தானுடிப்
பொங்குற்றமனமாகுஞ் சங்கற்ப மயமாயிப் புவியைக்காண்க.

இ - ள். சங்கற்பமெனும் - சங்கற்ப மென்கின்ற, புரணசத்தி யினை - சலனசத்தியை, தற்பரந்தானே - பிரமமே, பொங்குற்றவாயு - மிக்குற்ற காற்றானது, அலைவைச் செய்யுமாறுபோல் - சலனத்தைச் செய் யுந் தன்மையைப்போல, தன்னூற் புரிந்தபோது - தன்னூற் சங்கற்பித்த பொழுதில், சங்கற்பம் - அச்சங்கற்பமானது, விரியுருவாய் - பரந்தவடிவ மாகி, அயல் போலாய் - வேறு போலாகி, சகவடிவாய் - உலகத்துருவமாகி, தனைத்தாளுடி - தன்னைத்தானேபார்த்து, பொங்குற்ற மனமாகும் - பொலி வுள்ள மனமாகும், சங்கற்ப மயம்ாம் - (அதன்) சங்கற்ப மயமாக, இப்புவி யைக் காண்க - இச்சகத்தைப்பார்க்கக் கடவாய்—எ-று.

எ - து. சங்கற்பமென்கின்ற சலனசத்தியைப் பிரமமே மிக் குற்றகாற்றானது சலனத்தைச்செய்யுந் தன்மையைப்போலத் தன் னூற் சங்கற்பித்தபொழுதில் அச்சங்கற்பமானது பரந்தவடிவமாகி, வேறுபோலாகி, உலகத்துருவமாகித் தன்னைத்தானேபார்த்துபொலி வுள்ள மனமாகும். அதன் சங்கற்பமயமாக இச்சகத்தைப் பார்க்கக் கடவாய்—எ—ம். (3)

## அனுபவாச்சியமான சகத்து முதலிய சர்வமும் பிரமமாகவே விளங்குமெனல்.



தெரிபொருளென்றுளதல்ல பொய்யுமலசொற்பனத்தின்றிரள்
போற்றோன்றுந்,தெரிபவன்கேட்போன்சொல்வோன்பரிசிப்போன்
மணங்கொள்வோன் செல்வோன்மீள்வோன், புரிவனவெல்லாந்தா
னே புதிதாகுமலவெல்லாம் பொருளென்றோர்வாய், புரிதருநின்
றொழி லெல்லா மலமறுசின்மாத்திரமாம் பொருளேகண்டாய்.

இ - ள். தெரிபொருள் - சகமானது, என்று - எப்போதும், உள தல்ல - சத்தியமுமல்ல, பொய்யுமல - அசத்தியமுமல்ல, சொற்பனத்தின் றிரள்போல் - கனவின் கூட்டத்தைப்போல, தோன்றும் - தோற்றும், தெரி பவன் - காண்பவனும், கேட்போன் - கேட்பவனும், சொல்வோன் - பேசு பவனும், பரிசிப்போன் - பரிசிப்பவனும், மணங்கொள்வோன் - வாசனை கொள்ளுபவனும், செல்வோன் - நடப்பவனும், மீள்வோன் - திரும்புபவ னும், புரிவன வெல்லாந்தான் - சொல்லப்பட்ட சகலமும், புதிதாகுமல - நூதனமாகவுண்டானதல்ல, எல்லாம் பொருளென்று - சகலமு முண்மை யென்று, ஓர்வாய் - அறிவாய், புரிதரும் - செய்கின்ற, நின்றொழி லெல் லாம் - உனது செய்கைக ளனைத்தும், மலமறு - களங்கமற்ற, சின்மாத் திரமாம் பொருளே - ஞானமயமான வஸ்துவேயாம்—எ-று.

எ - து சகமானதெப்போதும் சத்தியமுமல்ல, அசத்தியமுமல்ல, கனவின் கூட்டத்தைப்போலத் தோற்றும். காண்பவனும், கேட்பவனும், பேசுபவனும், பரிசிப்பவனும், வாசனைகொள்ளுபவனும், நடப்பவனும் திரும்புபவனும், சொல்லப்பட்ட சகலமும் நூதனமாக உண்டானதல்ல; சகலமுமுண்மையென்றறிவாய். செய்கின்ற உனதுசெய்கைகளனைத்தும் களங்கமற்ற ஞானமயமான வஸ்துவேயாம்—எ-ம்.

(இ-உ-க-ம்.) சைதன்யத் தனதல்லாசத்தினால் தானேசகமுதலியவைபோலத் தோற்றி மகிழ்தலேயன்றி வேறின்றென்பதாம். (4)

## சைதன்ய வியாபக முரைத்தல்.

பெரும்பெரியவடிவான பிரமமேயாதலாற் பிறிதொன்றில்லை
வரும்பொருளெல்லாமறிவின்கனதையா யிருத்தலிலிவ்வையமெல்லா
கரும்புயலேயறிவேயாங் கற்பனைவேறில்லையாற் காணப்பட்ட [ங்
வரும்பொருள்கடனிலறிவுண்டாதலினாலறிபொருளாமனைத்துமில்லை

இ - ள். பெரும்பெரிய வடிவான - மகத்துக்கு மகத்துருபமானது, பிரமமே யாதலால் - பிரமஸ்வரூபமே யாதலால், பிறிதொன்றில்லை - (சகத்தென்பது) வேறொன்று மில்லை, வரும்பொருளெல்லாம் - வாராநின்ற வஸ்துக்களனைத்தும், அறிவின் கனதையாய் - சித்தின் வடிவாகி, இருத்தலில் - தங்குதலினால், இவ்வையமெல்லாம் - இச்சகங்களனைத்தும், கரும்புயலே - கரியமேகமே, அறிவேயாம் - சின்மாத்திரமேயாம், கற்பனை வேறில்லையால் - கற்பிதம் வேறில்லாததினால், காணப்பட்ட - பார்க்கப்பட்ட, வரும்பொருள் கடனில் - வாராநின்ற வஸ்துக்களில், அறிவுண்டாதலினால் - சித்துண்டாயிருத்தலின், அறிபொருளாமனைத்துமில்லை - விடயமாகிய சகலமுமில்லை—எ-று.

எ - து மகத்துக்கு மகத்துருபமானது பிரமஸ்வரூபமேயாதலால் சகத்தென்பது வேறொன்றுமில்லை. வாராநின்ற வஸ்துக்களனைத்தும் சித்தின்வடிவாகித் தங்குதலினா லிச்சகங்களனைத்தும் கரியமேகமே சின்மாத்திரமேயாம், கற்பிதம் வேறில்லாததினால் பார்க்கப்பட்ட வாராநின்ற வஸ்துக்களில் சித்துண்டாயிருத்தலின் விடயமாகிய சகலமுமில்லை—எ-ம்.

(இ-ம்.) காணப்பட்ட சகலவஸ்துக்களுஞ் சைதன்யமாய் நிறைந்திருக்கின்றபடியால் அதைத்தவிர வேறுவஸ்து இல்லையென்பதாம். (5)

## அகம்பாவநீங்கி அரசாங்கஞ் செய்வாயெனல்.

ஆதலினற்பந்தம்வீ டெங்குளதுவீடிதென வடுத்தபந்த, மீதெ னவெண்ணுவதெல்லாம் வலிந்தகற்றியபிமான மிறையுமின்றித், தீது தவிர்மவுனியாய்ப் பொறிவென்றுமானமதந்தீர்மேலோனு, யோதிய நின்காரியஞ்செய் திராமனே யகங்காரமொழிந்துநிற்பாய்.

இ-ள். ஆதலினல் - ஆசையினுல், பந்தம்வீடு - பெத்தமுத்தி, எங்குளது - எங்கேயிருக்கின்றது, வீடிதென - முத்தியிது வென்றும், அடுத்த பந்தமிதென - சேர்ந்திருக்கின்ற பெத்தமிதுவென்றும், எண்ணுவதெல்லாம் - நினைப்பதனைத்தையும், வலிந்தகற்றி - உறுதியாகத்தள்ளி, அபிமானம் - அபிமானமானது, இறையுமின்றி - அற்பமுமில்லாமல், தீது தவிர்மவுனியாய் - குற்றமற்ற மவுனியாகி, பொறிவென்று - இந்திரியங்களைச் செயித்து, மானம் - அபிமானமும், மதம் - செருக்கும், தீர்மேலோனுய் - நீங்கியமேலானவனுய், ஓதியநின்காரியஞ்செய்து - சொல்லியவுனது தொழிலைச் செய்து, இராமனே - ஸ்ரீராமா, அகங்காரமொழிந்து நிற்பாய் - அகம்பாவந் தவிர்ந்திருப்பாய்—எ-று.

எ-து. ஆகையினுல் பெத்தமுத்தி எங்கே யிருக்கின்றது, முத்திஇதுவென்றும், சேர்ந்திருக்கின்ற பெத்தம் இதுவென்றும், நினைப்பதனைத்தையும் உறுதியாகத் தள்ளி அபிமானமானதற்பமுமில்லாமற் குற்றமற்ற மவுனியாகி இந்திரியங்களைச்செயித்து அபிமானமும் செருக்கும் நீங்கிய மேலானவனுய்ச்சொல்லிய உனது தொழிலைச்செய்து ஸ்ரீராமா! அகம்பாவந்தவிர்ந்திருப்பாய்—எ-ம்.

(இ-ம்.) பந்தமோக்ஷ முதலியயாவும் மிதைப்பதத் தவிரவில்லை யெனனும் அனுபவத்தினுல் அகம்பாவத்தைநீக்கி இராசபரிபாலனத்தியைச்செய்வாயென்பதாம்.

## பிரமமயமாயிருந்து உபசரிக்கும் பொருட்டுமோகர்த்தன் முதலியவற்றைச்சொல்லத் தொடங்கல்.

மோகத்தில்வருமையமெல்லாம்போயறுதிநிலை முற்றும்பற்றி, மாக த்தன்மாபோகி மகத்தாகியாகியாய் வாழ்தியென்ன, மேகத்தை நிகர்வள்ள லிம்மூன்றுகுணங்களவை விளம்பாயென்ன, யோகத் தை யுணர்முனிவ னக்குணமூன்றையுந்தோன்ற வுரைக்கலுற்றான்.

இ-ள். மோகத்தில்வரும் - மயக்கத்தினுல் வாரநின்ற, ஐயமெல்லாம் போய் - சந்தேகங்களனைத்து நீங்கி, அறுதி நிலை முற்றும் பற்றி - நிச்

சயமான குணத்தை முழுதும் பிடித்து, மாகத்தன் - மகாகர்த்த னாகியும், மாபோகி - மகாபோகி யாகியும், மகத்தான தியாகியாய் - மகாத்யாகி யாகியும், வாழ்தி யென்ன - நீவாழக்கடவா யென்று வசிட்டமுனி சொல்ல, மேகத்தை நிகர் வள்ளல் - முகிலுக் கொப்பாகிய ஸ்ரீராமர், இம் மூன்று குணங்கள் - இந்த மூன்று குணங்களும், எவை விளம்பா யென்ன - யாது சொல்வா யென்று கேட்க, யோகத்தையுணர் முனிவன் - உபாயந்தெரிந்த வசிட்ட முனியானவர், அக்குண மூன்றையும் - அந்த மூன்று குணங்களை யும், தோன்ற உரைக்கலுற்றான் - தோற்றும்படி சொல்லத்தொடங்கினார்.

எ - து. மயக்கத்தினால் வாராநின்ற சந்தேகங்களனைத்து நீங்கி நிச்சயமான குணத்தை முழுதும்பிடித்து மகாகர்த்தனாகியும், மகா போகியாகியும், மகாத்யாகியாகியும் நீ வாழக்கடவாயென்று வசிட்ட முனிசொல்ல; முகிலுக்கொப்பாகிய ஸ்ரீராமர் இந்த மூன்றுகுணங் களுமியாது சொல்வாயென்று கேட்டு, உபாயந்தெரிந்த வசிட்டமு னியானவர் அந்த மூன்று குணங்களையுந் தோற்றும்படிச் சொல்லத் தொடங்கினார்—எ-ம். (7)

## பிருங்கீசன் றனதுமயக்க நீங்கும்பொருட்டுப் பரமேஸ்வரனை வினவுதல்.



மூன்றுவகைவிரதமெனுமிது தன்னைப்பிருங்கீசன்மோகம்போக, வீன்றுபரம்பொருளறியும் விருப்பினாலேமகிரி வடகோடெய்தி, வா ன்றுணையாஞ்சங்கரனைத் தொழுதிறைஞ்சி யிப்பிறவி மயக்கைநோக் கித், தோன்றுணர்விலாறுதலில் லாமையினான் மோகித்துத் துவண் டேனென்றும்.

இ - ள். மூன்று வகைவிரத மெனும் - மூவகையான நோன்பென் கின்ற, இது தன்னை - இந்த வருத்தத்தை, பிருங்கீசன் - பிருங்கீசனானவர், மோகம் போக - தனது மயக்கங்கெட, ஈன்று பரம் பொருள் - உண்டான பரமார்த்தத்தை, அறியும் விருப்பினால் - அறிய வேண்டு மென்கிற பிரி யத்தினால், ஏமகிரிவடகோடெய்தி - மகம்மேருவினுத்தர சிகரத்தை யடைந் து, வான்துணையாம் - சிதாகாசத்துக் கொப்பாகிய, சங்கரனை - பரமேஸ்வர னை, தொழுதிறைஞ்சி - வணங்கிப் போற்றி, இப்பிறவி மயக்கை நோக்கி - இந்தச் சகத மயக்கத்தைப் பார்த்து, தோன்றுணர்வில் - தோற்றப்பட்ட ஞானத்தில், ஆறுதலில்லாமையினால் - விசிராந்தியில்லாததினால், மோகித்து மயக்கமுற்று, துவண்டேனென்றும் - அலைந்தேனென்றுஞ் சொல்லி—எ-து.

எ — து. மூவகையான நோன்பென்கிற இந்தவருத்தத்தைப் பிருங்கீசனனவர் தனது மயக்கங்கெட உண்டான பரமார்த்தத்தை

யறியவேண்டுமென்கின்ற பிரியத்தினால் மகம்மேருவினுத்தாசிகாத் தையடைந்து சிதாகாசத்துக் கொப்பாகிய பரமேஸ்வரனை வணங்கிப் போற்றி இந்தச் சகமயக்கத்தைப் பார்த்துத் தோற்றப்பட்ட ஞானத்தில் விஸ்ராந்தியில்லாததினால் மயக்கமுற்றலைந்தேனென்றுஞ் சொல்லி—எ-ம். (8)

## மோகநீங்கும்படி விரதத்தினையமாவாயெனல்.

இச்சகமாம்பழங்குடிலி லிளைப்பாறிநான்றிரிவ தெங்ஙனென்று
மச்சமறுநிச்சயமா மொழுங்கையருள்வாயென்று மன்பாற்கேட்ப
நிச்சயமாயானருள்வானையமெலாமறுத்தறுதி நிலைமைபற்றின்
மெச்சியமாகத்தன்மா போகிமாத்யாகியாய்விடுவையென்ன.

இ-ள். இச்சகமாம் - இவ்வுலகமாகிய, பழங்குடிலில் - சீரணமானவீட்டில், இளைப்பாறி - விஸ்ராந்தியடைந்து, நான்றிரிவ தெங்ஙன் - யான் சஞ்சரிப்பதெப்படி, என்றும் - எப்போதும், அச்சமறும் - பயமில்லாமலிருக்கின்ற, நிச்சயமா மொழுங்கை - நிச்சயமான மார்க்கத்தை, அருள்வாயென்றும் - அனுக்கிரகஞ் செய்வாயென்று, அன்பாற் கேட்ப - அன்பினாற் கேட்க, நிச்சயமாயானருள்வான் - நிச்சயமாகப் பரமேஸ்வரன் கிருபைசெய்வார், ஐயமெலாமறுத்து - சந்தேகங்களனைத்தையுங் கெடுத்து, அறுதி நிலைமை பற்றில் - முடிவான நிச்சயத்தைப் பிடித்தால், மெச்சிய மாகத்தன் - துதிக்கப்பட்ட மகாகத்தனும், மாபோகி - மகாபோகியும், மாத்யாகி - மகாத்யாகியும், ஆய்விடுவை யென்ன - ஆவாயென்று சொன்னார்

எ-று. இவ்வுலகமாகிய சீரணமானவீட்டில் விஸ்ராந்தியடைந்து யான் சஞ்சரிப்பதெப்படி? எப்போதும் பயமில்லாமலிருக்கின்ற நிச்சயமான மார்க்கத்தை அனுக்கிரகஞ் செய்வாயென்றன்பினாற் கேட்க, நிச்சயமாகப் பரமேஸ்வரன் கிருபைசெய்வார். சந்தேகங்களனைத்தையுங் கெடுத்து முடிவான நிச்சயத்தைப் பிடித்தால் துதிக்கப்பட்ட மகாகத்தனும், மகாபோகியும், மகாத்யாகியும் ஆவாயென்று சொன்னார்—எ-ம்.

(இ-௯-௩-ம்.) பவப்பிணிநீங்கும் பொருட்டு இவ்விரத மூன்றையு மனுட்டித்தன்மய மாவா யென்பதாம் (9)

## மாகத்தனிலக் கணங்கூறல்.

செப்பியவிம்மாகத்தன் மாபோகிமகத்தான தியாகியென்ற
விப்பரிசுவிளங்கவரு ளெனக்கேட்டபிருங்கிசற் கீசன்சொல்வான்

வெப்பமுறுமிராகமுனி வின்பமிடர் றம்பாவ மிகுமிவற்றின்
றப்பில்பலாபலமிவற்றில் விருப்பமறச்செய்வோனேதனிமாகத்தன்.

இ - ள். செப்பிய - சொல்லிய, இம்மாகத்தன் - இந்த மகாகத்தனும், மாபோகி - மகாபோகியும், மகத்தானதியாகி - மகாத்யாகியும், என்ற - என்று சொல்லிய, இப்பரிசு - இக்குணங்களை, விளங்கவருளென - தெரியும் படியாகவருள் செய்வா யென்று, கேட்ட பிருங்கீசற்கு - வினாவின பிருங்கீசருக்கு, ஈசன் சொல்லுவான் - பரமேஸ்வரன் சொல்லுவார், வெப்பமுறும் - கொடிதாகிய, இராகமுனிவு - விருப்பு வெறுப்பும், இன்பமிடர் - சுகதுக்கமும், அறம்பாவம - தருமா தருமமுமாகிய, மிகுமிவற்றின் - மிகுந்தவிவைகளில், தப்பில் பலாபல மிவற்றில் - தவறாத பலமும் அபலமுமாகிய இவைகளில், விருப்பமற - இச்சை யில்லாமல், செய்வோனே - இயற்றுபவனே, தனிமாகத்தன் - ஒப்பற்றமகா கத்தனும்—எ-று.

எ - து. சொல்லிய இந்த மகாகத்தனும், மகாபோகியும், மகாத்யாகியுமென்று சொல்லிய இக்குணங்களைத் தெரியும்படியாக வருள்செய்வாயென்று வினாவின பிருங்கீசருக்குப் பரமேஸ்வரன் சொல்லுவார். கொடிதாகிய விருப்பு வெறுப்பும், சுகதுக்கமும், தருமாதருமமுமாகிய மிகுந்த இவைகளில் தவறாதபலமு மபலமுமாகிய இவைகளிலிச்சை யில்லாம லியற்றுபவனே ஒப்பற்ற மகாகத்தனும்—எ-ம்.

மோனமுறவகங்கரமு மானமுமச்சரமும்போய் முடுகிவாடா
தீனமிலாதனசெய்வோ னெங்கணுமன்பறச்சாட்சியெனலாயிச்சை
தானறவேகாரியஞ்செய் வோன்வெருட்சியாநந்தந் தாக்குறாதோ
ஞனசமநொய்யதொழி லாவிடாற்றுதயமுறா தவன்மாகத்தன்.

இ - ள். மோனமுற - மௌனமாய், அகங்கரமும் - அகங்காரமும், மானமும் - அபிமானமும், மச்சரமும்போய் - மாச்சரியமு நீங்கி, முடுகிவாடாது - வலிந்து மெலியாமல், ஈனமிலாதன செய்வோன் - குறைவற்றவைகளைச் செய்பவனும், எங்கணும - எவ்விடத்தும், அன்பற - பற்றற, சாட்சியெனலாய் - சாக்ஷியென்று சொல்லும் படியாய், இச்சைதானற - ஒன்றிலுமாசையற, காரியஞ் செய்வோன் - தொழிலைச் செய்பவனும், வெருட்சி - பயமும், ஆநந்தம் - சுகமும், தாக்குறாதோன் - தட்டுப் படாதவனும், ஞனசமம் - ஞானசமமாக, நொய்ய தொழிலால் - சொற்பமான செயலினால், இடாற்று - துன்பமுற்று, உதயமுறாதவன் - (தோன்றாத) முடியாதவனுமாகிய விவனே, மாகத்தன் - மகா கத்தனும்—எ-று.

எ - து. மௌனமாய் அகங்காரமும் அபிமானமும், மாச்சரியமு நீங்கி வலிந்துமெலியாமல் குறைவற்றவைகளைச் செய்பவனும் எவ்விடத்தும் பற்றறச் சாக்ஷியென்று சொல்லும்படியாய் ஒன்றினு மாசையறத் தொழிலைச்செய்பவனும், பயமும் சுகமுந் தட்டுப்படாதவனுமாகிய சமமாகச் சொச்சமனசெயலினால் துன்பமற்று சந்தோடமுறியாதவனுமாகிய விவனேமகாகத்தனும்—எ-ம்.

(இ-உ-ம். சக்திமாத்திரத்தின் விளக்கிய வினும் பற்றற்றதற்குச்சாக்ஷியாக நின்றவைகளை நடத்து மவனென்கின்றதைத் தானென்னு மனுபவமாய் நடாத்திவிப்பதே மாகத்தனென்பதாம். (11)

## மாகத்தனிலக்கணங்கூறி
## மாயோகியினிலக்கணங் கூறல்.

சனநத்தின்மரணத்தி னுதயத்திலத்தமனந் தனினேராகி, மனமொத்தோன்மாகத்த னெனத்தெளிவாய்மாயோகி மாபுகூறிற், சினமுற்றொன்றினைநீக்கா னொன்றைவிரும் பான்பகுதிசேரத்துய்ப்போன், வினவுற்றமாயோகி யிவன்பெருமைமீளவுநாம் விளம்பக்கேளாய்.

இ - ள். சனநத்தில் - பிறப்பிலும், மரணத்தில் - இறப்பிலும் உதயத்தில் - தோற்றுதலிலும், அத்தமனத்தனில் - மறைதலிலும், நேராகி - சமமாய், மனமொத்தோன் - மனமொத்தவன் மாகத்தனெனத்தெளிவாய் - மாகத்தனென்று தெளிந்து கொள்வாய், மாயோகிமாபுகூறில் - மாயோகியினது குணத்தைச் சொல்லுமிடத்தில், சினமுற்று - கோபமடைந்து, ஒன்றினைநீக்கான் - ஒன்றையுந் தள்ளாதவனும், ஒன்றைவிரும்பான் - ஒன்றையுமாசியாதவனும், பகுதிசேரத்துய்ப்போன் - இயல்பாகவந்ததை முழுதும் புசிப்பவனு (மாகிய இவனே), வினவுற்றமாயோகி - முன்சொல்லிய மகாயோகியாம், இவன் பெருமை - இவனது பெருமையை, மீளவும் - திரும்பவும், நாம்விளம்பக்கேளாய் - யான் சொல்லக் கேட்பாய்—எ-து.

எ - து. பிறப்பிலும், இறப்பிலும், தோற்றுதலிலும், மறைதலிலும் சமமாய் மனதொத்தவன்; மாத்தனென்று தெளிந்துகொள்வாய். மாயோகியினது குணத்தைச் சொல்லுமிடத்தில் கோபமடைந்து ஒன்றையுந் தள்ளாதவனும், ஒன்றையுமாசியாதவனும், இயல்பாக வந்ததை முழுதும் புசிப்பவனுமாகிய இவனே முன்சொல்லிய மகாயோகியாம். இவனதுபெருமையைத் திரும்பவும் யாஞ்சொல்லக்கேட்பாய்—எ-ம். (12)

மிகவெருவலாநந்த மில்லவாய்மயக்கமே விளைப்பதாள, சுகமிடர்கள்புசித்தவற்றாற்கலங்காதோன்சாமரணத்தொடருமாபத்,தகலரச

மிடிகளுநன் றெனப்புசிப்போன் புளிப்புக்கைப்பழற்சியுப்புப், பகர்நி றைவுகுறைவுசம மாய்ப்புசிப்போன் மாபோகிப் பான்மையோனே.

இ - ள். மிகவெருவல் - மிகவும் பயப்படுதலும், ஆநந்தம் - சுகமும், இல்லவாய் - இல்லாதவனும், மயக்கமே விளைப்பதான - பிரமையே யுண் டாக்குவதான, சுகமிடர்கள் - சுகதுக்கங்களை, புசித்து - அனுபவித்து, அவற் ருற் கலங்காதோன் - அவைகளாற்கலங்காதவனும், சராமரணம் - மூப்பி றத்தலும், தொடருமாபத்து - தொடராநின்றவாபத்தும், அகலாசும் - சிறந் தவராசாகூடியும், மிடிகளும - தாரித்திரங்களும், நன்றெனப் புசிப்போன் - நல்லதென் றனுபவிப்பவனும், புளிப்பு - புளிப்பும், கைப்பு - கசப்பும், அழ ற்சி - உறப்பும், உப்பு - உவர்த்தலும், பகர்-சொல்லப்பட்ட (இவைகளின்), நிறைவுகுறைவு - சந்துஷ்டி யசந்துஷ்டியின்றி, சமமாய்ப் புசிப்போன் - சம மாயுண்பவனும் மாபோகிப்பான்மையோன் - மகாபோகித்தன்மையையுடை யவன்—எ-று.

எ - து. மிகவும் பயப்படுதலும், சுகமுமில்லாதவனும் பிரமை யே யுண்டாக்குவதான சுகதுக்கங்களை யனுபவித்து இவைகளாற் கலங்காதவனும், மூப்பிறத்தலும், தொடராநின்ற ஆபத்தும், சிறந் தவராசாகூடியும், தாரித்திரங்களும் நல்லதென்றனுபவிப்பனும், புளி ப்பும், கசப்பும், உறப்பும், உவர்த்தலும், சொல்லப்பட்ட இவைக ளின் சந்துஷ்டி யசந்துஷ்டியின்றி சமமாயுண்பவனு மகாபோகித்த ன்மையை யுடையவன்—எ-ம்.

(இ-உ-க-ம்.) விருப்புவெறுப்பின்றிச் சகலபோகங்களுந் தனதானந்தா னுபவமாகப் போகிப்பவனே மகாபோகி யென்பதாம். (13)

## மாபோகியினிலக்கணங்கூறி மாத்யாகியினிலக்கணங்கூறல்.



உப்பினியல்பெனநன்மை தீமையிரண்டிலுஞ்சமமா யொத்துநி ற்போன், றப்புறுமாபோகியாமகத்தாணதியாகிகுணஞ்சொல்லக்கே ளாய்த், தப்பிலறம்பாவமிடர் சுகமரணஞ் சநநமெலாஞ் சேரத்தள் ளுஞ், செப்பமுளாபுந்தியு ளோன் மகத்தானதியாகியெனத் தெளிந் துகொள்வாய்.

இ - ள். உப்பினியல்பென - உப்பின்றன்மையைப்போல, நன்மை தீமை - நன்குதீங்காகிய, இரண்டிலும - இவ்விரண்டிலும், சமமாய் - சம மாகி, ஒத்துநிற்போன் - சேர்ந்திருப்பவன், றப்புறுமா போகியாம் - பரி சுத்தம் பொருந்திய மகாபோகியாகும், மகத்தானதியாகிகுணம் - மகத்யா கியின்றன்மையை, சொல்லக்கேளாய் - மொழியக் கேட்பாய், தப்பிலறம் பாவம் - குற்றமற்ற தருமாதருமமும், இடர்சுகம் - துன்பவின்பமும், மா ணஞ்சநமெலாம் - மரித்தல்செனித்தலாகியவனைத்தையும், சேரத்தள்ளும்

ஒருமிக்கத்தள்ளாநின்ற, செப்பமுளபுந்தியுளோன் - செவ்வையான புத்தியையுடையவனே, மகத்தானதியாகியென - மகாத்யாகியென்று, தெளிந்துகொள்வாய் - அறிந்துகொள்ளுவாய்—எ-று.

எ - து. உப்பின்றன்மையைப்போல நன்குதீங்காகிய இவ்விரண்டிலும் சமமாகிச் சேர்ந்திருப்பவன் பரிசுத்தம்பொருந்திய மகாபோகியாகும். மகாத்யாகியின் றன்மையை மொழியக்கேட்பாய். குற்றமற்ற தருமாதருமம், துன்பவின்பமும், மரித்தல் செனித்தலாகிய அனைத்தையும் ஒருமிக்கத்தள்ளாநின்ற செவ்வையான புத்தியையுடையவனே மகாத்யாகியென்றறிந்துகொள்ளுவாய்—எ-ம். (14)

அனைத்தாசையனைத்தையு மனைத்தான தொழிலனைத்தாமறுதியாவுந்
தினைத்தானுமேவாத புந்தியோன்றன்னைமகத்யாகியென்ப [தோன்
றனைத்தானவறம்பாவமனமனனத் தொழிலிதயத்தெல்லாந்தீர்ந்
வினைத்தாயபிருங்கீசா மகத்தானதியாகியென விளம்புமன்றே.

இ - ள். அனைத்தாசை - சகலவிச்சைகளும், அனைத்தையும் - சகலசந்தேகங்களும், அனைத்தானதொழில் - சகலசெய்கைகளும் சகலநிச்சயங்களுமாகிய, யாவும் - எல்லாம், தினைத்தானும் - தினையளவேனும், மேவாதபுந்தியோன்றன்னை - அடையாத அறிவையுடையவனை, மகத்யாகியென்பர் - மகாத்யாகியென்று சொல்லுவார்கள், எனைத்தான - மற்றுள்ளதாகிய, அறம்பாவம் - தருமாதருமமும், மனம் - மனதும், மனனம் - சிந்தனையும், தொழிலுமெல்லாம் - செயல்களுமாகிய யாவையும், இதயத்து - உள்ளத்தில், தீர்ந்தோன் - நீங்கினவனே, வினைத்தாய - வணக்கமுடையவரான பிருங்கீசா - பிருங்கீசனே, மகத்தானதியாகியென - மகாத்யாகியென்று, விளம்பும் - சுருதிசொல்லும்.

எ - து. சகலவிச்சைகளும், சகல சந்தேகங்களும், சகலசெய்கைகளும், சகல நிச்சயங்களுமாகிய எல்லாம் தினையளவேனு மடையாத அறிவையுடையவனை மகாத்யாகியென்று சொல்லுவார்கள். மற்றுள்ளதாகிய தருமாதருமமும் மனதும், சிந்தனையும், செயல்களுமாகிய யாவையுமுள்ளத்தில் நீங்கினவனே வணக்கமுடையவரான பிருங்கீசனே மகாத்யாகியென்று சுருதிசொல்லும்—எ-ம். (15)

இதுவுமது.

தெரிபவத்திலெண்ணமாய்க் காணுமிவை யெவ்வளவத் திரளகளெல்லாந், துரிசறவன்றாய்விட்டோன் மகத்தானதியாகியெனக் சுரு

ணையீச, னுரியபிருங்கீசனுக்கு முன்னுளோதினனிந்த வுயர்ந்தநோக்கைப், பரிசயமுற்றுப்பிடித்துத் துயரொழிவாயுலகளிக்கும் பதுமக் கண்ணு.

இ - ள். ரிபவுத்திலென்னைமாய் - திரிஸ்யத்தினிலேவாக, காணுமிவைவெவ்வளவு - பார்க்கின்றவைகளெவ்வளவோ, அத்திரள்களெல்லாம் - அக்கூட்டங்களைத்தும், களிகற - களங்கமில்லாமல், நன்றாய் விட்டோன் - நன்றாகவிட்டவனே, மகத்தியாகியென - மகாத்யாகியென்று, கருணையீசன் - கிருபாஸ்வரூபியான பரமேஸ்வரன், உரியபிருங்கீசனுக்கு - உரித்தாகிய பிருங்கீசருக்கு, முன்னுளோதினன் - முன்னாளிற்சொன்னார், இந்த வுயர்ந்த நோக்கை - இம்மேலான பார்வையை, பரிசயமுற்று - பழக்கஞ்செய்து, பிடித்து - நீபற்றிக்கொண்டு, உலகளிக்கும் - சகத்தை யிரட்சிக்கின்ற, பதுமக்கண்ணு - தாமரைக்கண்ணை யுடைய இராமா, துயரொழிவாய் - துன்பநீங்குவாய்—எ-று.

எ - து. திரிஸ்யத்தினிலேவாகப் பார்க்கின்றவைக ளெவ்வளவோ அக்கூட்டங்களைத்தும் களங்கமில்லாமல் நன்றாகவிட்டவனே மகாத்யாகியென்று கிருபாஸ்வரூபியான பரமேஸ்வர னுரித்தாகிய பிருங்கீசருக்கு முன்னாளிற்சொன்னார். இம்மேலான பார்வையைப் பழக்கஞ்செய்து நீபற்றிக்கொண்டு சகத்தை யிரட்சிக்கின்றதாமரைக்கண்ணையுடைய இராமா! துன்பநீங்குவாய்—எ-ம்.

(இ-ரு-க-ம். தனக்கெதிராயுள்ள யாவையும் பிரமமாகவறிந்து அஃதுதான்மாத்திரமாய் விளங்கி யவைகளனைத்தையுந் தள்ளினவனே மாத்யாகியென்றீஸ்வரனனுக்கிரகப்படி நீ விளங்குவா யென்பதாம். (16)

## இத்திஷ்டியினின்று யாவுஞ்செய்வாயெனல்.

நித்தமுமுறுமுதயமுளா தாதியாகுவதந்த நிமலமேக, மத்தகைய பிரமமே யுளதுவிகற்பத்தெண்ண மயலொன்றில்லை, யித்திறமென் றேபாவித்தழுக்கிலனுய்ச்சுகமேவி யியற்றுஞ்செய்கை, சுத்தவிமலச் சாந்த முறவெல்லாமேவுவாய் சுத்தவீரா.

இ - ள். நித்தமுமுறுமுதயமுளது-சதோதய முள்ளதும், ஆதியாகு-முதலாவது, அந்தம் - முடிவில்லாததும், நிமலம் - நின்மலமானதும், ஏகம்-ஒன்றானதுமாயிருக்கின்ற, அத்தகையபிரமமேயுளது - அப்படிப்பட்டபிரமஸ்வரூபமேயுள்ளது, விகற்பத்தெண்ணம் - வேறுநினைவு, அயலொன்றில்லை - மற்றொன்றுமில்லை, இத்திறமென்று - இந்தப் பிரகாரமென்று, பாவித்து - பாவனைசெய்து, அழுக்கிலனாய் - களங்கமில்லாதவனாய், சுகமேவி - ஆநந்தத்

தையடைந்து, இயற்றுஞ்செய்கை - முயற்சிக்கின்ற தொழில்கள், சுத்தம்-பரிசுத்தமாகி, விமலச்சாந்தமுற - நின்மலமான வுபசாந்த முண்டாக, சுத்த வீரா - (ஸ்ரீராமா,) எல்லாமேவுவாய் - அனைத்தையும் பொருந்துவாய்.

எ - து. சதோதயமுள்ளதும், முதலாவது முடிவில்லாததும் நின்மலமானதும் ஒன்றானதுமாயிருக்கின்ற அப்படிப்பட்ட பிரமஸ்வரூபமேயுள்ளது. வேறுநினைவு மற்றொன்றுமில்லை. இந்த ப்பிரகாரமென்று பாவனைசெய்து களங்கமில்லாதவனு ஆநந்தத்தையடைந்து முயற்சிக்கின்ற தொழில்கள் பரிசுத்தமாகி நின்மலமான வுபசாந்தமுண்டாக ஸ்ரீராமா! அனைத்தையும் பொருந்துவாய்---எ-ம்.

(இ-ம்.) நிரதிசயாநந்தவடிவமாய் நின்று சகலதொழிலையுஞ் செய்யிற் செய்துஞ் செய்யாததென்பதாம். (17)

## பாவனையனைத்து மின்றி எப்போதுஞ்சின்மாத்திரமே விளங்குமெனல்.

தீங்கிடார்தீர் பிரமமாய்க் கற்பனை யெலலாமேவிச் செய்கையொன்றே, யோங்கியவித்தாய்ப்பாம ரூபமாய்ப் பெரியோனுயர்மகத்தாய், வீங்கியபாவனையெல்லா நிறைவதாய் மெய்ஞ்ஞானவீராகிஞ்சி,வீங்கிலதென்றுரைப்பதாமாகாயமேததுவேயெனறுமுண்டால்.

இ - ள். தீங்கடர்தீர - குற்றமுள்ள துன்பநீங்கிய, பிரமமாய் - பிரமமாகியும், கற்பனையெல்லாமேவி - கற்பனைகளனைத்தும் பொருந்தி, செய்கையொன்றே - கிரியையொன்றுக்கு, ஓங்கியவித்தாய் - யோர்ந்த வித்தையாகியும், பரரூபமாய் - பரமாத்மஸ்வரூபமாகியும், பெரியோனாய் - மகானாகியும், உயர்மகத்தாய் - மேலான மகத்தாகியும், வீங்கியபாவனையெல்லாம் - பருத்தபாவனைகளனைத்தும், நிறைவதாய் - நிறைவதாகியிருக்கின்ற, ஆகாயமேது - (ஞா) ஞாகாசமெதுவோ, அதுவேயென்றுமுண்டு - அதுவே யெப்போதுமுண்டாயிருக்கின்றது, மெய்ஞ்ஞானவீரா - மெய்ஞ்ஞானவீரனான ஸ்ரீராமா, ஈங்கு - இவ்விடத்தில், கிஞ்சில - அற்பமும், இலதென்றுரைப்பதாம் - வேறொன்று மில்லையென்று சொல்லுவதாம்---எ-று.

எ---து. குற்றமுள்ள துன்பநீங்கிய பிரமமாகியும் கற்பனைகளனைத்தும்பொருந்திக் கிரியையொன்றுக்கு முயர்ந்த வித்தையாகியும், பரமாத்மஸ்வரூபமாகியும், மகானாகியும், மேலான மகத்தாகியும்,பருத்த பாவனைகளனைத்தும் நிறைவதாகியிருக்கின்ற ஞானாகாசமெதுவோ அதுவே எப்போதுமுண்டாயிருக்கின்றது. மெய்ஞ்ஞான வீரனை

ஸ்ரீராமா! இவ்விடத்திலற்பமும் வேறொன்றுமில்லையென்று சொல்லுவதாம்—எ-ம். (18)

## பிரமத்தைத்தவிர அற்பமும் வேறின்றெனல்.

அன்னியமாவோரிடத்தி லிதுகிஞ்சிலெனவென்று மசத்துஞ் சத்துந், துன்னலுறாதென்றுள்ளே திடநிலையாயகங்காரந் துடைத்து நிற்பா, யுன்னுள்ளேமுகமாகிப் புறத்தின்வரு வனவெல்லா மொருங் குசெய்து, பின்னுதொழிலிடர்மேவா துருவமிலாவகந்தையைநீபிறி யவென்றான்.

இ - ள். அன்னியமா - அயலாக, ஓரிடத்தில் - ஒருவிடத்திலும், இது கிஞ்சிலென - ஈதற்பமுமில்லையென்றும், என்றும் - எப்போதும், அசத்தும் - அசத்தியமும்; சத்தும் - சத்தியமும், துன்னலுறாதென்று - நெருக்க மாட்டாதென்றும், உள்ளே திடநிலையாய் - உள்ளே திடநிச்சயமாய், அகங்காரந் துடைத்துநிற்பாய் - அகம்பாவத்தைக் கெடுத்திருப்பாய், உன்னுள்ளேமுகமாகி - உன்னி லகமுகத்தையுடையவனாய், புறத்தின் - புறம்பில், வருவனவெல்லாம் - வருவனவாகியசகலமும், ஒருங்குசெய்து - ஒற்றுமைசெய்து, பின்னுதொழில் - பின்னுநின்றசெயலினாலு, இடர்மேவாது - துன்பமடையாமல், உருவமிலா - வடிவமில்லாத, அகந்தையை - அகங்காரத்தை, நீபிரிய வென்றனை - ஸ்ரீராமா நீ நீங்கக்கடவதென்று சொன்னார் — எ-று.

எ - து. அயலாக வொருவிடத்திலு மீதற்பமுமில்லையென்றும், எப்போது மசத்தியமும் சத்தியமும் நெருங்கமாட்டாதென்றுமுள்ளே திடநிச்சயமா யகம்பாவத்தைக் கெடுத்திருப்பாய். உன்னி லகமுகத்தையுடையவனாய்ப் புறம்பில் வருவனவாகிய சகலமு மொற்றுமைசெய்து பின்னுநின்ற செயலினாதுன்பமடையாமல் வடிவமில்லாத அகங்காரத்தை ஸ்ரீராமாநீ நீங்கக்கடவதென்று சொன்னார்.

(இ·உ-க·ம்.) தன்னைத்தவிரவற்பமும் வேறின்றென்கின்றஸ்வானுபவநிஷ்டியினு லகம்பாவத்தைக்கெடுத்துத் தன்மயமாய் விளங்குவா யென்பதாம்.

விரதசூயைகதை முற்றிற்று.

ஆகூ கதை 40-க்கு கவிதை 1896.

# இட்சுவாகு கதை.

அவதாரிகை

முற்கதையின் மாகர்த்ருத்வ முதலிய மூன்றினாலுஞ் சமாதிநிஷ்டை
யின்றிச் சகசநிஷ்டையினாற் சர்வம் பிரமமயமென்பதை
விளக்கி யிவ்வனுபவர் நிராமாம்பொருட்டு
இட்சுவாகுகதையை நிரூபிக்கிறார்.

## சுமன நினிலக்கணம் விசாரித்தல்.

தருமமெல்லாமுணர்முனியே சாற்றுமகங்காரப்பெயரை
மருவுமனந்தன்வடிவிருக்க மாய்ந்தாலந்தவுண்மைக்குப்
பெருகுகுறியேதுரையெனவெம் பெருமான்கேட்பமுனியுரைப்பா
னுருவமிருக்கமனமிறந்த வுண்மைக்குள்ளகுறிகேளாய்.

இ - ள். தருமமெல்லாம் - தன்மங்களனைத்தையும், உணர்முனியே - அறியாநின்றவசிட்டமுனியே, சாற்றும் - சொல்லப்பட்ட, அகங்காரப்பெயரை - அகங்காரமென்னுநாமத்தை, மருவுமனம் - பொருந்தாநின்றமனமானது, தன்வடிவிருக்க - தன (நிதார்த்த) ஸ்வரூபமிருக்க, மாய்ந்தால் - (கற்பனுவடிவ) மிறக்கின், அந்தவுண்மைக்கு - அதனுள்ளதத்துவத்துக்கு, பெருகுகுறியேது - பெரிதானவடையாளமியாது, உரையென - சொல்லுவாயென்று, எம்பெருமான்கேட்ப - எம்பெருமானாகிய ஸ்ரீமான் கேட்க, முனியுரைப்பான் - வசிட்டமுனி சொல்லுவார், உருவமிருக்கமனமிறந்த - வடிவமிருக்கமனநசித்த, உண்மைக்குள்ளகுறிகேளாய் - தத்துவத்துக்குள்ள அடையாளங்கேட்பாய்—எ-று.

எ - து. தன்மங்களனைத்தையு மறியாநின்ற வசிட்டமுனியே! சொல்லப்பட்ட அகங்காரமென்னு நாமத்தைப் பொருந்தாநின்ற மனமானது தனநிதார்த்த ஸ்வரூபமிருக்கக் கற்பனு வடிவமிறக்கின் அங்குள்ள தத்துவத்துக்குப் பெரிதான அடையாளமியாது? சொல்லுமென் றெம்பெருமானாகிய ஸ்ரீராமன்கேட்க, வசிட்டமுனிசொல்லுவார். வடிவமிருக்க மனநசித்த தத்துவத்துக்குள்ள அடையாளங் கேட்பாய்—எ-ம்.

(ஞ-ம்.) விடயசம்பந்த நீங்கிப் பிரமசம்பந்தமாகச் சஞ்சரிக்கு மனதுக்கப்போதுண்டான துரிக்கபாவத்தை விசாரிக்கிறதாம். (1)

## அனுபவிமனதின் இலக்கணங்கூறல்.

அழுந்துவசத்திலிருப்போனை யம்புயத்தினீர்போல
வெழுந்தலோபமோகமுத லெக்குற்றமும்வன்புறநலியா
முழுந்துமுதிதைமுதற்குணங்கண் முகத்திலழகாய்ச்சிறிதகலா
விழுந்துபாவமெல்லாம்போ மிருவாதனைக்கட்டறுமெல்ல.

இ - ள். அழுந்துவசத்தில் - திடமுள்ளவாத்மவசத்தில், இருப்போனை - இருப்பவனை, அம்புயத்தினீர்போல - கமலபத்ரோதகம்போல, எழுந்த - உண்டான, லோபமோகமுதல் - ஆசைமயக்கமுதலிய, எக்குற்றமும் - எந்தக் குற்றங்களும், வன்புறநலியா - வருத்தமாட்டாது, முழுந்தும் - எல்லாமான, முதிதை முதற்குணங்கள் - முதிதைமுதலாகிய சற்குணங்கள், முகத்திலழகாய்ச் சிறிதகலா - வதனத்திற் சுந்தரமாக அற்பமுநீங்காது, பாவமெல்லாம் விழுந்துபோம் - பாவங்களனைத்துங்கெடும், மிருவாதனைக்கட்டு - மிகுந்தவாசனையினதுபந்தமானது, மெல்லவறும் - மிருதுவாகக் கெடும்.

எ - து. திடமுள்ள வர்த்மவசத்தி லிருப்பவனைக் கமலபத்ரோதகம்போ லுண்டான ஆசைமயக்கமுதலிய எந்தக்குற்றங்களும் வருத்தமாட்டாது. எல்லாமான முதிதை முதலாகிய சற்குணங்கள் வதனத்திற் சுந்தரமாக அற்பமுநீங்காது பாவங்களனைத்துங்கெடும். மிகுந்த வாசனையினது பந்தமானது மிருதுவாகக்கெடும்—எ—ம்.

(இ-ம்.) ஆத்மாவிற் சுகிக்குமனதை மோகமுதலிய குற்றங்களணுகாமல் மைத்திரியாதி குணங்கள் விளங்கு மென்பதாம். (2)

வேகந்தேயுமுலோபகுண மெலியுங்காமவினையடங்கு
மோகம்போயெங்கொளித்திடுமோ முடுகிக்கிளராதைம்பொறிகள்
சோகந்தாவியடாது சுகமுமேலிட்டெழமாட்டா
தாகந்தீரக்குளிர்ந்துள்ளே சமந்தோன்றிடுமா லெவ்விடத்தும்.

இ - ள். வேகந்தேயும் - கோபமானதழியும், உலோபகுணமெலியும் - ஆசையுள்ள குணமுமிளைக்கும், காமவினையடங்கும் - காமவிகாரத்தின் குணங்கெடும், மோகம்போய் - மயக்கமானதுபோய், எங்கொளித்திடுமோ - எவ்விடத்திலொளிக்குமோ, ஐம்பொறிகள் - பஞ்சேந்திரியங்களும், முடுகிக்கிளராது - வலிமையாகப் பிரகாசியாது, சோகந்தாவியடாது - துன்பமானதெழுந்து வருத்தாது, சுகமுமேலிட்டெழமாட்டா - இன்பமுமதிகரித்துண்டாகமாட்டாது, தாகந்தீர - துன்பநீங்க, உட்குளிர்ந்து - அகமகிழ்ந்து, எவ்விடத்தும் - எந்தவிடத்திலும், சமந்தோன்றிடும் - சமத்துவந்தோற்றும்—எ-று

எ - து. கோபமானதழியும், ஆசையுள்ள குணமுமிளக்கும் காமவிகாரத்தின் குணங்கெடும், மயக்கமானதுபோ யெவ்விடத்தி லொளிக்குமோ? பஞ்சேந்திரியங்களும் வலிமையாகப் பிரகாசியாது, துன்பமானதெழுந்து வருத்தாது, இன்பமு மதிகரித்துண்டாகமாட்டாது, துன்பநீங்க அகமகிழ்ந்து எந்த விடத்திலுஞ் சமத்துவந் தோற்றும்—எ-ம்.

(இ-ம்.) இராகத்வேடமுதலிய குணங்களிறந்து சமதிஷ்டியாய் விளங்குமென்பதாம். (3)

துன்பமின்பமெலாமுகத்திற் றேன்றுமெனினுந்தோன்றிடுக
வன்பிலவைநெஞ்சினைநலியா மனமேயிறக்கில்வானோரு
மன்பினயப்பர்நலனுண்டா மங்கேசமமாமதியுதிக்கு
மென்புகுளிருஞ்சாந்தியெழி லெய்துந்தடைதீர்பெருமையுறும்.

இ - ள். துன்பமின்பமெலாம் - துக்கசுக (முதலிய) வனைத்தும், முகத்திற்றேன்றுமெனினும் - வதனத்திற் றேன்றுமானாலும், தோன்றிடுக - தோற்றக்கடவது, வன்பிலவை - வலியின்றியவச்சுகதுக்கங்கள், நெஞ்சினை நலியா - மனத்தைவருத்தாது, மனமேயிறக்கில் - மனமாத்திரநசித்தால், வானோரும் - தேவர்களும், அன்பினயப்பார் - (அவனை) யன்பினுற் சினேகிப்பார்கள், நலனுண்டாம் - ஆநந்தமுண்டாகும், அங்கு - அவ்விடத்தில், சமமாமதியுதிக்கும் - சமத்துவமாகிய அறிவுண்டாகும், என்புகுளிரும் - அஸ்திகுளிருகின்றது, சாந்தியெழிலெய்தும் - சாந்தமானவழகுண்டாகும்—எ-று.

எ - து. துக்கசுகமுதலிய அனைத்தும் வதனத்திற் றேற்றுமானாலுந் தோற்றக்கடவது, வலியின்றிய அச்சுகதுக்கங்கள் மனத்தை வருத்தாது. மனமாத்திரநசித்தாற் றேவர்களுமவனை அன்பினுற் சினேகிப்பார்கள், ஆநந்தமுண்டாகும், அவ்விடத்திற் சமத்துவமாகிய அறிவுண்டாகும் அஸ்திகுளிருகின்றது சாந்தமான அழகுண்டாகும், அளவற்ற மாட்சிமை பொருந்தும்—எ-ம்.

(இ-ம்.) சுகதுக்கமின்றிச் சாந்தமானதேகசாய் விளங்குமென்பதாம். (4)

இதுவுமது

பணிதலொளிர்தனொய்ம்மையுறும் பழுதிலமலவடிவுண்டாம்
பிணியில்பெரியோர்குடும்பமயற் பெரிதாய்ப்புதுமைத்தானுலுந்
தணிவில்பாவாபாவத்தாற்றன்னேற்றூலுமின்பமிடர்
கணிதமெனினுஞ்செயமாட்டாக் கருணைத்தடங்கட்கருங்காரே.

இ - ள். பணிதல் - (யாவரும்) வணங்குதலும், ஒளிர்தல் - விளங்குதலும், நொய்ம்மையுறும் - சொச்சமும்பொருந்திய, பழுதிலமலவடிவுண்

டாம் - குற்றமற்றநின்மலஸ்வரூபமுண்டாகும், பிணியில்பெரியோர் - துன்பமற்ற சத்துக்களை, குடும்பமயல் - சம்சாரப் பிரமையானது,பெரிதாய்ப்புதுமைத்தாறுலும் - மகத்தானவதிசயமானாலும், தணிவில்பாவாபாவத்தால் - அடங்காத உற்பத்திநாசத்திறைல், தன்னூற்றாலும்-அலைக்கப்பட்டாலும், இன்பமிடர்கணிதமெனினும் - சுகதுக்கங்கணூறுகோடியானாலும், கருணைத்தடதடங்கட்கருங்காரே-கிருபையுள்ளவிசாலமான கண்ணையுடைய இராமா, செயமாட்டா - (ஒன்றுஞ்) செய்யமாட்டாது—எ-று.

எ - து. யாவரும் வணங்குதலும் விளங்குதலுஞ் சொச்சமும் பொருந்திய குற்றமற்ற நின்மலஸ்வரூபமுண்டாகும். துன்பமற்ற சத்துக்களைச் சம்சாரப்பிரமையானது மகத்தான அதிசயமானாலும் அடங்காத உற்பத்திநாசத்தினாலலைக்கப்பட்டாலுஞ் சுகதுக்கங்கணூறு கோடியானாலுங் கிருபையுள்ள விசாலமான கண்ணையுடைய இராமா! ஒன்றுஞ் செய்யமாட்டாது—எ—ம்.

(இ-ம்.) நின்மலமா யாதுவரினும் அதனாற்சுகதுக்கமடையாதென்பதாம்.

## சுத்தமனதினிலக்கணஞ் சொல்லித் தன்னை யறியாதவனை யிகழ்ந்து அறிபவர்களை விசாரவிலக்கணஞ் சொல்லுதல்.



புந்திப்பார்வைக்கெட்டுவதாய்ப் புகலாபத்தெல்லாமிறந்த
விந்தப்பொருளைமோகத்தா லெய்தாதவர்சீசீயிழிந்தோர்
தொந்தஞ்சிற்காலப்பற்றாற் றோன்றுதுயராமணிகள்செறி
பந்தப்பிறவிக்கடல்கடக்கும் பான்மைநயந்தோர்நெறிகேளாய்.

இ - ள். புந்திப்பார்வைக்கெட்டுவதாய் - ஞானதிஷ்டிக்ககப்படுவதாகி, புகல் - சொல்லப்பட்ட, ஆபத்தெல்லாமிறந்த - ஆபத்துக்களனைத்துமரித்த இந்தப்பொருளை - இப்பாவஸ்துவை, மோகத்தால் - ஆசையினால், எய்தாதவர் - அடையாதவர்கள், சீசீயிழிந்தோர் - சைசைகீழ்ப்பட்டவர்களேயாம், தொந்தம் - தொந்தமாகிய, சிற்காலப்பற்றாற்றோன்றுதுயராம் - சிலகாலப் பற்றினாற் றோற்றுந் துன்பமென்கின்ற, மணிகள்செறிபந்தம் - இரத்தினங் கணிறைந்த பந்தமென்னும், பிறவிக்கடல்கடக்கும் பான்மைநயந்தோர் - பவசாகரந்தாண்டுங் குணம்விரும்பினவர்களது, நெறிகேளாய் - கிரமத்தைக்கேட்பாய்—எ-று.

எ - து. ஞானதிஷ்டிக் ககப்படுவதாகிச் சொல்லப்பட்ட ஆபத்துக்களனைத்து மரித்த இப்பாவஸ்துவை யாசையினா லடையாதவர்கள் சைசை கீழ்ப்பட்டவர்களேயாம். தொந்தமாகிய சிலகாலப் பற்றினாற் றோற்றுந் துன்பமென்கின்ற இரத்தினங்கணிறைந்த பந்தமென்னும் பவசாகரந்தாண்டுங் குணம் விரும்பினவர்களது கிரமத்தைக்கேளாய்—எ-ம்.

ஊனூர்பிறவிகடல்கடப்போர்க் குரியவிளைப்பாறுதலெய்த
நானூரிந்தச்சகமெங்ஙனூடும்பரமனூராகு
மானூவிடயபோகத்தா லாவதென்னேவென்னுமதி
தானூம்பரமவுபாயமெனச் சாற்றுங்கண்டாய்சற்குணனே.

இ - ள். ஊனூர்பிறவிகடல் - மாமிசனிறைந்த பவசமுத்திரத்தை, கடப்போர்க்குரிய - தாண்டுபவர்களுக் குரித்தாயிருக்கின்ற, இளைப்பாறுதலெய்த - விஸ்ராந்தியையுடைய, நானூர் - யானூர், இந்தச்சகமெங்ஙன் - இவ்வுலகமான தெப்படிப்பட்டது, நாடும்பரமனூராகும் - தேடும்பரம மெவனும், ஆனூவிடய போகத்தால் - நீங்காதவிடயபோகத்தினூல், ஆவதென்னே - உண்டாவதென்ன, என்னுமதிதான் - என்கின்ற விசாரஞானமே, ஆம்பரமவுபாயமென - ஆகியமேலானவுபாயமென்று, சற்குணனே - சற்குணத்தையுடைய ஸ்ரீராமா, சாற்றுங்கண்டாய். (வேதங்கள்) சொல்லும்—எ-று.

எ - து. மாமிசனிறைந்த பவசமுத்திரத்தைத் தாண்டுபவர் களுக்குரித்தாயிருக்கின்ற விஸ்ராந்தியையடைய யானூர்? இவ்வுலகமான தெப்படிப்பட்டது? தேடும்பரமமென்னும்? நீங்காதவிடயபோகத்தினூலுண்டாவ தென்னவென்கின்ற விசாரஞானமேயாகிய மேலான உபாயமென்று சற்குணத்தையுடைய ஸ்ரீராமா! வேதங்கள் சொல்லும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) ஆத்மாயாது சகம்யாதிது நீங்கியபிரமம் யாதெனவிசாரித்தலே மேலான விசாரயுக்தி யென்பதாம். (7)

## இங்ஙனம் விசாரித்த இட்சுவாகு கதையைச் சொல்லத் தொடங்கல்.



ஏற்றமுனதுகுலமுதல்வ னிக்குவாகுவெனுமன்ன
னூற்றலுயர்வீடடைவுற்ற வடைவுகேளாயருள்வேந்தன்
றேற்றமுடையதன்புவனந் தொல்லைநெறியினடத்திடுநா
ளேற்றவுடையவுளத்தாலே யொருவன்றனேயிருந்துணர்வான்.

இ - ள். ஏற்றம் - மேலான, உனதுகுலமுதல்வன் - உனதுகுலத்துக்கு முதன்மையாகிய, இக்குவாகுவெனும் - இட்சுவாகென்கின்ற, மன்னன் - அரசனூனவன், ஆற்றலுயர்வீடு - ஞானமென்னு மேலானமோட்சத்தை, அடைவுற்ற - அடைந்த, அடைவுகேளாய் - கிரமத்தைக்கேட்பாய், அருள்வேந்தன் - இருபையுள்ளவரசன், தேற்றமுடைய - தோற்றத்தையுடைய, தன்புவனம் - தனது பூமியை, தொல்லைநெறியின் - பழமையானமார்க்கத்தில், நடத்திடுநாள் - நடாத்துகின்ற காலத்தில், ஊற்றமுடையவுளத்தால் - மேலானமனதினூல், ஒருவன்றனே - தனியனூகவே, இருந்துணர்வான் - இருந்து சிந்திப்பான்—எ-று.

எ-அ. மேலான உனது குலத்துக்கு முதன்மையாகிய இட்சுவாகுவென்கின்ற அரசனானவன் ஞானமென்னு மேலானமோட்சத்தையடைந்த கிரமத்தைக்கேட்பாய். கிருபையுள்ள அரசன் றோற்றத்தையுடைய தனது பூமியைப் பழமையான மார்க்கத்தினடாத்துகின்ற காலத்தில் மேலானமனதினாற் றனியனாகவே யிருந்து சிந்திப்பான்—எ-ம். (8)

## தனித்திருந்து சகத்காரணமியாதென விசாரித்தல்.

சரைசாவின்பதுன்பங்க டளர்மோகங்கண்மயக்கங்கள்
வரையாநிலையாய்க்காண்பனவு மட்டிலாதசகத்துக்குப்
புரைதீர்மூலமேதென்று புரிதந்நினைந்தான்பூபால
னுரைசாருலகின்மூலத்தை யுன்னுநின்றுமுணர்ந்திலனால்.

இ-ள். சரைசாவு - மூப்பிறப்பையும், இன்பதுன்பங்கள் - சுகதுக்கங்களும், தளர்மோகங்கள் - வாடுகின்றபிரமைகளும், மயக்கங்கள் - மயக்கங்களும், வரையா - அளவிடாத, நிலையாய்க்காண்பனவும் - நிலையாகக்காணப்பட்டனவும், மட்டில்லாதசகத்துக்கு - அளவில்லாத உலகத்துக்கு, புரைதீர்மூலமேதென்று - குற்றமற்றகாரணமெதுவென்று, பூபாலன் - பூபதியானவன், புரிந்துநினைந்தான் - விரும்பிச்சிந்தித்தான், உரைசார் - வசனநிறைந்த, உலகின்மூலத்தை - சகத்காரணத்தை, உன்னுநின்றும் - சிந்தித்தும், உணர்ந்திலன் - அறிந்திலன்—எ-று.

எ-அ. மூப்பிறப்பையும், சுகதுக்கங்களும், வாடுகின்ற பிரமைகளும், மயக்கங்களும். அளவிடாத நிலையாகக் காணப்பட்டனவும், அளவில்லாத வுலகத்துக்குக் குற்றமற்ற காரணமெது வென்று பூபதியானவன் விரும்பிச் சிந்தித்தான். வசனநிறைந்த சகத்காரணத்தைச் சிந்தித்து மறிந்திலன்—எ-ம்.

(இ-உ-க-ம்.) சகத்தி னனித்தியத்தைப் பார்த்ததற்குக் காரணமான நித்தியத்தை விசாரித்தும் தெரிந்தில னென்பதாம். (9)

## பிரமனைவணங்கித் துதித்தல்.



அயனாட்டினும் வந்தடைவுற்ற வாதிமனுவாம் பகவனைக்கண்
டியலாற்பூசித்தருட்செல்வா யின்றுநீயிங்கெளிதெய்தி
முயல்வாலளித்த நின்னருளான் மோகந்தீர்ந்து நிலைநிற்கும்
பயனாலென்னையருளென்று பரவியரசனுரை செவான்.

இ - ள். அயனாட்டினும் - சத்தியலோகத்தினின்று, வந்தடைவுற்ற - வந்துபொருந்திய, ஆதிமனுவாம்பகவனைக்கண்டு - முதன்மனுவாகியபகவானைத்தரிசித்து, இயலாற்பூசித்து - கிரமத்திலாராதித்து, அருட்செல்வா - கிருபாநிதியே, இன்று - இப்போது, நீயிங்கெளிதெய்தி - நீயிவ்விடத்திலெளிதாகவந்து, முயல்வாலெளிதர்சின்னருளால் - முயற்சியினாலருள்செய்தவுமது கிருபையினால், போகத்தீர்ந்துநிலைநிற்கும்பயனால் - மயக்கநீங்கிநிலையாயிருக்கும் பிரயோசனத்தினால், என்னையருளெனப்பரவி - எனதுஸ்ரூபத்தையனுக்கிரகிப்பாயென்றுவணங்கி, அரசனுரைசெய்வான் - மன்னன்சொல்லுவான்—எ-று.

எ - து. சத்தியலோகத்தினின்றும் வந்து பொருந்திய முதன் மனுவாகிய பகவானைத் தரிசித்துக் கிரமத்திலாராதித்துக் கிருபாநிதியே! இப்போதுநீயிவ்விடத்திலெளிதாகவந்து முயற்சியினாலருள் செய்த உமது கிருபையினால் மயக்கநீங்கி நிலையாயிருக்கும் பிரயோசனத்தினால் எனது ஸ்வரூபத்தை யனுக்கிரகிப்பாயென்று வணங்கி மன்னன் சொல்லுவான்—எ-ம். (10)

## இப்பவமோக நீங்குதற்பொருட்டு
## இச்சகத்தையாறுவிதமாகப்பிரித்துவினாவினனெனல்.

எங்குநின்றுவந்ததிச் சிருட்டியிதெப்படியுருவ
மங்குமுலகமெம்மட்டு மற்றுருடையதெதுகால
மிங்கீதெதனாலெனவுணர்த்தி யேறிக்குறைந்தவிப்பிறவிப்
பொங்குமயக்கைவலையகலும் புட்போனீங்கும்வகைபுகல்வாய்.

இ - ள். இச்சிருட்டி - இந்தச்சகசிருட்டியானது, எங்குநின்றுவந்தது - எவ்விடத்திலிருந்துதித்தது, இச்சகம்எப்படியுருவாம் - இச்சகத்திலுருவெப்படிப்பட்டது, மங்குமுலகம்மெம்மட்டு - கெடாநின்றசகமெவ்வளவு, மற்றுருடையது - எதாரையுடையது, எதுகாலம் - எக்காலத்தில், இங்கீதெதனாலென - இதென்னகாரணத்திலுண்டானதென்று, உணர்த்தி - அறிவித்து, ஏறிக்குறைந்த - உயர்ந்துதாழ்ந்த, இப்பிறவி - இச்சனனத்தின், பொங்குமயக்கை - மிகுந்தமயக்கத்தை, வலையகலும்புட்போல் - வலையினின்றுநீங்கும்பட்சியைப்போல, நீங்கும்வகைபுகல்வாய் - நீங்கும் விதத்தைச் சொல்லுவாயென்றிட்சுவாகுகேட்டார்—எ-று.

எ - து. இந்தச் சகசிருட்டியானது எவ்விடத்திலிருந் துதித்தது? இச்சகத்தி லுருவெப்படிப்பட்டது? கெடாநின்ற சகமெவ்வளவு? எதாரையுடையது? எக்காலத்திலிதென்ன காரணத்தினா

லுண்டானதென்றறிவித்து, உயர்ந்துதாழ்ந்த இச்சகத்தின் மிருந்த மயக்கத்தை வலையினின்று நீங்கும் பட்சியைப்போல நீங்கும் விதத்தைச் சொல்லுவாயென் றிட்சுவாகு கேட்டார்—எ-ம்.

இதற்கெப்படி யுருவமென்றது, சத்தா, அசத்தா, சதசத்தாவெனவும், ஆருடையதென்றது சீவனுடையதா ஈசனுடையதாவெனவும் விசாரித்ததெனக்கொள்க.

(இ-உ-க-ம்.) மாயாசகமுண்டான விடமுமதன்வடிவமு மதன்முடிவும் அஃதையுடையவனும் அஃதுதித்தகாலமுங் காரணமும் விசாரித்தா னென்பதாம். (11)

## உ-ச-சகத்காரண மதனுருவமு முரைத்தல்.



என்றலோடுமறப்புதிதா மெண்ணில்காலத்தோடே நீ
துன்றுவிவேகவிசாலத்தாற் சொன்னவினுவே விதிப்பொருளைப்
பொன்றுவிக்குமென்றுமனுப் புகல்வான்சிறிதாக்காணுமிவை
யொன்றுமில்லைக்கந்தற்ப வூர்போன்மருப்பூமியில் சலம்போல்.

இ-ள். என்றலோடும் - இப்படியென்றாசன் சொல்லவும், அறப்புதிதாம் - மிகவுமாச்சரியமாம், எண்ணில்காலத்தோடு — அளவில்லாத காலத்தோடும், நீதுன்ற - நீ நெருங்கி, விவேகவிசாலத்தால் - விவேகமிகுதியினால், சொன்னவினுவே - கேட்டசங்கையே, விதிப்பொருளை - (மித்தையாகச்)சொல்லிய மாயாவஸ்துவை, பொன்றுவிக்குமென்று - கெடுப்பிக்குமென்று, மனுப்புகல்வான் - மனுவானவர்சொல்லுவார், சிறிதாக்காணுமிவை - அற்பமாகப்பார்க்கின்ற இச்சகங்கள், கந்தற்பவூர்போல் - கந்தர்வநகரம்போலவும், ஒன்றுமில்லை - எவ்வளவுமில்லை—எ-று.

எ-து. இப்படியென் றாசன்சொல்லவும் மிகவுமாச்சரியமாம். அளவில்லாத காலத்தோடும் நீ நெருங்கி விவேகமிகுதியினாற் கேட்ட சங்கையே மித்தையாகச்சொல்லிய மாயாவஸ்துவைக் கெடுப்பிக்குமென்று மனுவானவர் சொல்லுவார். அற்பமாகப் பார்க்கின்ற இச்சகங்கள் கந்தர்வநகரம்போலவும் அளர்ப்பூமியிற்றோன்றுங் கானற்சலம்போலவு மெவ்வளவுமில்லை—எ-ம். (12)

கிஞ்சில்காரணங்களுக்கெட்டாக் கிளர்வானிலுஞ்சற்றுய்முடிவி
லெஞ்சவிலதாமழிவின்றி யிருந்ததென்றும்மான்மாவாம்
விஞ்சுமந்தப்பெருங்கண்ணா டியிலேநேயம்விரிவிடய
பஞ்சபூதசிருட்டியெலாம் பத்திபாய்ந்துவிளங்கிடுமால்.

இ - ள். இந்திரிய - அற்பமும், காணைக்களுக்கெட்டா - இந்திரியங்களுக்கெட்டாததாகியும், இளர் - விளங்காநின்ற, வானிலுஞ்சூற்றாய் - ஆகாயத்திலுஞ் சூட்சமமாகியும், முடிவில் (வே) தாந்தத்தில், வஞ்சவிலதாம் - குறைவில்லாததாகியும், அழிவின்றி - அழிவில்லாமல், என்றும் - எப்போதும், இருந்தது - இருந்ததே, ஆன்மமாம் - ஆத்மஸ்வரூபமாகும், விஞ்சும் - மேலான, அந்தப்பெருங்கண்ணடியில் - அந்தப்பெரியதற்பணத்தில், சேயம் - திரிஸ்யமாகிய, விரிவிடய - விரிந்தவிடயமான, பஞ்சபூதசிருட்டியெலாம் - பஞ்சபூத சிருட்டிகளனைத்தும், பத்தியாய்ந்து விளங்கிடும் - பிரதி பலித்தொளிரும் — எ - று.

எ - து. அற்பமு மிந்திரியங்களுக் கெட்டாததாகியும், விளாங்காநின்ற ஆகாயத்திலுஞ் சூட்சமமாகியும், வேதாந்தத்திற் குறைவில்லாததாகியும், அழிவில்லாமலெப்போது மிருந்ததே ஆத்மஸ்வரூபமாகும். மேலான அந்தப் பெரியதற்பணத்திற் றிரிஸ்யமாகிய விரிந்த விடயமான பஞ்சபூத சிருட்டிகளனைத்தும் பிரதிபலித்தொளிரும் — எ-ம்.

(இ-உ-க-ம்.) ஆத்மாவினிடத்திற் சகத்தோற்றமும் அஃதின்னுருவங் காணற்சலம்போலத் தோற்றமாத்திரமாமென்பதாம். (18)

## க-சா-சகத்தினளவு உரைத்தல்.

பிரமத்தினவாயொளியுருவாய்ப் பிறந்துபிறங்குஞ்சத்திகடாம்
விரவிப்பிரமாண்டத்தினது மேனியாகிநின்றசில
வுரவுபலபூதத்திரளி னுருவமாகிநின்றசில
சார்பொற்பதியாய் நின்றசில தோன்றுசகத்தினிலையிதுவே.

இ - ள். பிரமத்தினவாய் - பிரமசம்பந்தமாயும், ஒளியுருவாய் - பிரகாசரூபமாயும், பிறந்துபிறங்கும் - உண்டாகிவிளங்கிய, சத்திகடாம்விரவி - பூரணசத்திகள்சேர்ந்து, பிரமாண்டத்தினது - பிரமாண்டத்தினுடைய, மேனியாகி - வடிவமாகி, சிலநின்ற - சிலசத்திகளிருந்தன, உரவுபலபூதத்திரளின் - உரமானபலசீவக்கூட்டங்களின், உருவமாகிநின்ற - வடிவமாய் சில சத்திகளிருந்தன, சார்பொற்பதியாய் - சேவலோகமாய், சிலநின்ற - சிலசத்திகளிருந்தன, தோன்றுசகத்தினிலையிதுவே - தோற்றுகின்றசகத்தினுண்மையிதுதான் — எ - று.

எ - து. பிரமசம்பந்தமாயும், பிரகாசரூபமாயும் உண்டாகிவிளங்கிய பூரணசத்திகள்சேர்ந்து பிரமாண்டத்தினுடைய வடிவமாகிச் சிலசத்திகளிருந்தன, உரமான பலசீவக்கூட்டங்களின்படிவமா

ய்ச் சிலசத்திகளிருந்தன, தேவலோகமாய்ச் சிலசத்திகளிருந்தன தோற்றுகின்ற சகத்தினுண்மை யிதுதான்—எ—ம்.

(இ-ம்.) பஞ்சபூத பௌதிகமாகத்தோற்றிய சிற்சத்தியினளவே சகத்தினளவாமென்பதாம். (14)

## ௬-ரு-௬-உத்தரங்கூறல்.

பந்தமில்லைவீடில்லைப் படர்தீர்பிரமமேயுளதா
மந்தவயிக்கமில்லையிரண் டில்லையறிவேவளர்ந்தெழுந்த
சிந்துதரங்கப்பங்கத்தாற் றிகழுகின்றநீர்போல
வந்தமில்லாவறிவுருவே விளங்குமயலொன்றிலதாகும்.

இ-ள். பந்தமில்லை - பெத்தமுமில்லை, வீடில்லை - முத்தியுமில்லை, படர்தீர்பிரமமேயுளதாம் - துன்பமில்லாத பிரமமேயுள்ளதாகும், அந்தவயிக்கமில்லை - அவ்வொருமையுமில்லை, இரண்டில்லை - இருமையுமில்லை, அறிவே - ஞானமே, வளர்ந்தெழுந்த - வளர்ந்தெழுந்தது, சிந்துதரங்கம் - சமுத்திரத்தலையினது, பங்கத்தால் - வேறுபாட்டினால், திகழுகின்றநீர்போல - விளங்குகின்ற சலத்தைப்போல, அந்தமில்லாத - முடிவில்லாத, அறிவுருவே - ஞானஸ்வரூபமே, விளங்கும் - பிரகாசிக்கும், அயலொன்றிலதாகும் - வேறொன்றுமில்லையாம்—எ-று.

எ-து. பெத்தமுமில்லை, முத்தியுமில்லை, துன்பமில்லாத பிரமமேயுள்ளதாகும். அவ்வொருமையுமில்லை, இருமையுமில்லை, ஞானமே வளர்ந்தெழுந்தது. சமுத்திரத்தலையினது வேறுபாட்டினால் விளங்குகின்ற சலத்தைப்போல முடிவில்லாத ஞானஸ்வரூபமே பிரகாசிக்கும், வெறொன்றுமில்லையாம்—எ—ம்.

(இ-ம்.) சின்மாத்திரமே யுள்ளதென்னு மனுபவமில்லாதவனை யுடையதென்று மிவ்வனுபவ மில்லாதபோ து சித்தமென்று, மிவ்வனுபவம், நவநவமாய் விளங்குகிறத்த முண்டானதென்று மறிந்திலது சின்மாத்திரமாயிருக்கின்றதென் றறிந்தயலென்னுங் கற்பனையை நீக்கவேண்டுமென்பதாம்.

## இவ்வாறுசங்கைக்கு முத்தரஞ்சொல்லி மேலாத்மானுபவ முண்டாகும் பொருட்டு ஆத்ம சங்கற்பமே சீவனாயிற்றெறனல்.

பந்தமுத்திகிளைவுகளைப் பயிலாதோட்டியுன்வசமாய்
முந்துபிறவிப்பயமெல்லா முற்றுமொழித்துநிலைநிற்பா
யந்தநீசங்கற்பநினை வடைந்தாற்சின்மாத்திரவறிவு
வந்துசீவத்துவமடைந்த வாரியலையாவதுபோல.

இ-ள். பந்தமுத்தி - பந்தம் வீடென்கின்ற, நினைவுகளை - எண்ணங்களை, பயிலாதோட்டி - கூடாமற்றுரத்தி, உன்வசமாய் - உனதுவசமாகி, முந்துபிறவி - முன்னுனபவத்தின், பயமெல்லாம் - அச்சங்களனைத்தையும், முற்றுமொழித்து - முழுதுநீக்கி, நிலைநிற்பாய் - நிலையாயிருப்பாய், அந்த நீ - அப்படிப்பட்டநீ, சங்கற்பநினைவடைந்தால் - சங்கற்பமுள்ளமனதைச்சேர்ந்தால், சின்மாத்திரவறிவு - சின்மாத்திரஞானமானது, வாரியலை யாவதுபோல - சலமலையாவதுபோல, வந்து சீவத்துவமடைந்த - உண்டாகிச் சீவத்தன்மையை யடைந்தது—எ-று.

எ-து. பந்தம் வீடென்கின்ற வெண்ணங்களைக்கூடாமற்றுரத்தி யுன்துவசமாகி முன்னுனபவத்தி னச்சங்களனைத்தையு முழுது நீக்கி நிலையாயிருப்பாய். அப்படிப்பட்டநீ சங்கற்பமுள்ள மனதைச் சேர்ந்தால் சின்மாத்திர ஞானமானது சலமலையாவதுபோ லுண்டாகிச் சீவத்தன்மையை யடைந்தது—எ-ம். (16)

சுகதுக்கஞ் சங்கற்பத்துக்கே அன்றி
ஆத்மாவுக்கின்றெனல்.

ஆதிகாலத்தெழுந்தபவத் தனையசீவருழல்கின்று
ரோதுமின்பதுன்பமயக் குளத்துக்கொழியவுனக்கில்லை
மீதுதெரியாவிராகுமதி மேவித்தெரிதல்போலவனு
பூதியளவாமுயிர்காணும் பொருளாய்க்காணப்படுமன்றே.

இ-ள். ஆதிகாலத்தெழுந்தபவத்து - முதற்காலத்திலுண்டான சகத்தில், அனையசீவருழல்கின்றார் - அந்தச்சீவர்கள் சுழலுகின்றார்கள், ஓதும் - சொல்லப்பட்ட, இன்பதுன்பமயக்கு - சுகதுக்கங்களின் பிரமையானது, உளத்துக்கொழிய - மனத்துக்கேயல்லாமல், உனக்கில்லை - ஆத்மாவுக்கில்லை, மீதுதெரியாவிராகு - மேலேதெரியாத இராகுவானவன், மதிமேவித் தெரிதல்போல - சந்திரனையடைந்து காணப்படுதல்போல, அனுபூதியளவாமுயிர் - அனுபூதிமாத்திரமான ஆத்மாவானது, காணும்பொருளாய் - திரிஸ்யமானதில், காணப்படும் - தோற்றப்படும்—எ-று.

எ-து. முதற்காலத்திலுண்டான சகத்தில் அந்தச்சீவர்கள் சுழலுகின்றார்கள், சொல்லப்பட்ட சுகதுக்கங்களின் பிரமையானது மனத்துக்கே யல்லாமல் ஆத்மாவுக்கில்லை. மேலேதெரியாத இராகுவானவன் சந்திரனையடைந்து காணப்படுதல் போல அனுபூதிமாத்திரமான ஆத்மாவானது திரிஸ்யமானதிற் றோற்றப்படும்—எ-ம்.

## ஆத்மாவையும் அநாத்மாவையும் அறிகின்ற இலக்கண முரைத்தல்.

கலைகளாலுங்குருவாலுங் காண்டற்கரியபான்றனே
தலைமையானசாத்திகஞ்சேர் தன்புந்தியினாற்றன்னாலே
நிலையின்வெளியா நெறிபோவார் நெறிசேர்காட்சிகளிற்புந்திச்
செலவுபற்றில்லாததுபோற் றெவ்வாங்காணங்களைக்காண்பாய்.

இ - ள். கலைகளாலும் - (ஞான) சாஸ்திரங்களினாலும், குருவாலும் - ஆசாரியராலும், காண்டற்கரியபான்றனே - பார்ப்பதற் கரியபிரமமானது, தலைமையான - முதன்மையாகிய, சாத்திகஞ்சேர் - சத்துவஞ்சேர்ந்த, தன்புந்தியினால் - தனதறிவினாலும், தன்னால் - தன்னாலும், நிலையின்வெளியாம் - நிலையில் வெளிப்படும், நெறிபோவார் - மார்க்கத்திற் செல்லுபவர்கள், நெறிசேர்காட்சிகளில் - மார்க்கத்திற் சேராநின்ற திரிஸ்யங்களில், புந்திசெலவு - புத்திசென்று (பார்ப்பதில்), பற்றில்லாததுபோல் - பற்றற்றிருப்பதுபோல, தெவ்வாம் - பகையாகிய, காணங்களை - இந்திரியங்களை, காண்பாய் - பார்ப்பாய்—எ-று.

எ - து. ஞானசாஸ்திரங்களினாலும், ஆசாரியராலும்பார்ப்பதற் கரிய பிரமமானது முதன்மையாகிய சத்துவஞ்சேர்ந்த தனதறிவினாலும் தன்னாலும் நிலையில் வெளிப்படு மார்க்கத்திற் செல்லுபவர்கள் மார்க்கத்திற் சேராநின்ற திரிஸ்யங்களிற் புத்திசென்று பார்ப்பதிற் பற்றற்றிருப்பதுபோலப் பகையாகிய இந்திரியங்களைப்பார்ப்பாய்.

## அநாத்மாவை நீக்கி யாத்மாவாயிருப்பாயெனல்.

இனையகாணங்களைப்பற்ற லிகழ்தலிரண்டு மியல்பல்ல
வினைசெயுடலமுதற்பொருள்கண் மேவுமியல்பின்மேவிடுக
வனையபொருள்கள்புந்தியினா லகலநீக்கியதிசீதம்
புனையுட்காணத்தினனாயெப் போதும்பாமமயமாவாய்.

இ - ள். இனையகாணங்களை - இப்படிப்பட்டவிந்திரியங்களை, பற்றல் - விரும்புதலும், இகழ்தல் - வெறுத்தலும், இரண்டு மியல்பல்ல - இரண்டு மொழுங்கல்ல, வினைசெய் - கன்மத்தினாலுண்டாக்கப்பட்ட, உடலமுதற் பொருள்கள் - தேகமுதலிய வஸ்துக்கள், மேவுமியல்பின்மேவிடுக - வாத்தக்க சுபாவமாய் வாக்கடவது, அனையபொருள்கள் - அப்படிப்பட்டவஸ்துக்களை, புந்தியினாலகலநீக்கி - அறிவினால் விலகும்படி தள்ளி, அதிசீதம் புனை - மிகுந்த குளிர்ச்சியைத்தரித்த, உட்காணத்தினனாய் - அந்தக்காணத்தையுடையவனாய், எப்போதும் - எக்காலமும், பாமமயமாவாய் - பிரமமய மாவாய்—எ-று.

எ - து. இப்படிப்பட்ட இந்திரியங்களை விரும்புதலும் வெறுத்தலு மிரண்டுமொழுங்கல்ல. கன்மத்தினாலுண்டாக்கப்பட்ட தேக முதலிய வஸ்துக்கள் வரத்தக்க சுபாவமாய் வரக்கடவது. அப்படிப் பட்ட வஸ்துக்களை யறிவினால் விளங்கும்படித் தள்ளி யிருந்த குளிர்ச்சியைத்தரித்த அந்தக்கரணத்தையுடையவனா யெக்காலமும் பிரமமயமாவாய்—எ-ம். (19)

## பந்தமும் அதனிவிர்த்தியுங் கூறல்.

உடனானெனென்னும்புந்தி பிறப்புற்றகட்டாமொருக்காலு
மிடர்தீர்வீடுவிருப்புறுவோர்க் கியல்பன்றாகுமிப்புந்தி
திடமாங்கிஞ்சின்மாத்திரமு மில்லாச்சின்மாத்திரவடிவன்
றடவானிலுநானானுமென்னுஞ் சமமாம்புந்திபிறப்பறுக்கும்.

இ - ள். உடனானெனென்னும்புந்தி - தேகத்தையானென்கின்ற புத்தியானது, பிறப்புற்றகட்டாம் - பவத்தையடைந்த பந்தமாகும், ஒருக்காலும் - ஒருபோதும், இடர்தீர்வீடு - துன்பமில்லாத நிருவாணத்தை, விருப்புறுவோர்க்கு - இச்சிப்பவர்களாகிய (முமுட்சுக்களுக்கு), இயல்பன்றாகும் - உரியதல்லவான, இப்புந்தி - இம்மதியானது, கிஞ்சின்மாத்திரமுமில்லா - அற்பமுமில்லாத, திடமாம் - திரமாகிய, சின்மாத்திரவடிவன் - சின்மாத்திரவடிவமுள்ளவன், தடவானிலும் - விசாலம்பொருந்திய ஆகாயத்திலும், நானானுமென்னும் சமமாம்புந்தி - யான்சூட்சுமமென்கின்ற சமமாகிய புத்தியானது, பிறப்பறுக்கும் - பவத்தைக் கெடுக்கும்—எ-று.

எ-து. தேகத்தை யானென்கின்ற புத்தியானது பவத்தையடைந்த பந்தமாகும். ஒருபோதுந் துன்பமில்லாத நிருவாணத்தை இச்சிப்பவர்களாகிய முமுட்சுக்களுக்குரியதல்லவான இம்மதியானது அற்பமுமில்லாத திரமாகிய சின்மாத்திரவடிவமுள்ளவன் விசாலம் பொருந்திய ஆகாயத்திலுமியான் சூட்சுமமென்கின்ற சமமாகியபுத்தியானது பவத்தைக்கெடுக்கும்—எ-ம்.

(இ-கு-க-ம்.) சங்கற்பமேபந்தமும் அதன்விடுதியேமுத்தியுமாமென்பதாம்.

## ஆத்மவியாபகங்கூறல்.

தெளியுநீரிலுட்புறம்பு செறியும்வெயில்போற் பொருளனைத்தி
லொளிகொளசின்மாத்திரன்றீடுமா லுருவமெல்லாமுட்புகுந்து

வெளிசெய்பணிகடொறும்பொன்னின்விசித்திரம்போல்விளங்கிடுமா
ளியவஃதெல்லாவுருவா மான்மாவுடையசகமாகி.

இ - ள். தெளியுநீரில் - தெளிந்தசலத்தில், உட்புறம்பு - உள்ளிலும் புறம்பிலும், செறியும்வெயில்போல் - நெருங்கியசூரியகிரணத்தைப்போல, பொருளனைத்தில் - வஸ்துக்களெல்லாவற்றிலும், ஒளிகொளான்மா - பிரகாசமுள்ள ஆத்மாவானது, நின்றிடும் - நிற்கும், உருவமெல்லாம் - வடிவங்களனைத்தின், உட்புகுந்து - அகத்திற்பிரவேசித்து, வெளிசெய் - வெளியாகச்செய்கின்ற, பணிகடொறும் - ஆபரணங்கடோறும், பொன்னின்விசித்திரம்போல் - சொன்னம் விளங்கு மதிசயத்தைப்போல, விளங்கிடும் - (ஆத்மாவானது) பிரகாசிக்கும், அளிய - கனிந்த, அஃதெல்லாவுருவம் - அவ்வபின்னமாய் விளங்காதவடிவமானது, ஆன்மாவுடைய - ஆத்மசத்தையுடைய, சகமாகி - உலகமாகத்தோற்றும் — எ-று.

எ - து. தெளிந்த சலத்திலுள்ளிலும் புறப்பிலு நெருங்கிய சூரியகிரணத்தைப்போல வஸ்துக்களெல்லாவற்றிலும்பிரகாசமுள்ள ஆத்மாவானது நிற்கும். வடிவங்களனைத்தி னகத்திற் பிரவேசித்து வெளியாகச்செய்கின்ற ஆபரணங்கடோறுஞ் சொன்னம் விளங்கு மதிசயத்தைப்போல ஆத்மாவானது பிரகாசிக்கும். கனிந்தவவ்வபின்னமாய் விளங்காத வடிவமானது ஆத்மசத்தையையுடைய வுலக மாகத்தோற்றும்—எ-ம். (21)

நாசவடவைக்கனல்படா நடுக்கஞ்செய்யுங் காலமெனு
மூசுகடலிற்சகத்திரளா முடுகுநதிகள்பல்லுயிராம்
வீசுதரங்கத்தொடுபாய்ந்து நிறையாதந்தவேலையையு
மாசமனஞ்செய்யகத்தியனு மான்மாவென்றுவகத்துணர்வாய்

இ-ள். நாசம் - நாசமென்கின்ற, வடவைக்கனல்படா - வடவாமுகாக்கினிபடர்ந்துவர, நடுக்கஞ்செய்யும் - பயத்தைச்செய்யும், காலமெனும் - காலமென்கின்ற, மூசுகடலில் - நெருங்கியசமுத்திரத்தில், சகத்திரளாம் - சகக்கூட்டங்களாகிய, முடுகுநதிகள் - வேகமுள்ளவாறுகள், பல்லுயிராம் - பலசீவர்களாகிய, வீசுதரங்கத்தொடு - போதாநின்ற அலைகளுடன், பாய்ந்து நிறையாது - சேர்ந்துநிரம்பாமலிருக்கின்ற, அந்தவேலையையும் - அக்கடலையும், ஆசமனஞ்செய் - ஆசமனஞ்செய்த, அகத்தியனுமான்மாவென்று - கும்பமுனியாகியவர் ஆத்மாவென்று, அகத்துணர்வாய் - மனதிலறிந்து கொள்ளுவாய் — எ-று.

எ — து. நாசமென்கிற வடவாமுகாக்கினி படர்ந்து வரப் பயத்தைச் செய்யுங் காலமென்கின்ற நெருங்கிய சமுத்திரத்திற் சகக் கூட்டங்களாகிய வேகமுள்ள ஆறுகள் பல சீவர்களா

கிய மோதாநின்ற வலைகளுடன்சேர்ந்து நிரம்பாமலிருக்கின்ற அக்க டலையுமாசமனஞ்செய்த கும்பமுனியாகிய ஆத்மாவென்று மனதில நிறுத்திக்கொள்ளுவாய்—எ—ம்.

(இ-உ-க-ம்.) ஆத்மாவானது சகலவஸ்துக்களுள்ளிலும் புறம்பிலுமிடை யின்றிக் காலாதீதமான பூரணமாய் விளங்குமென்பதாம். (22)

## ஆத்மதிருஷ்டியைக் கூறல்.

தானலாதாய்முன்சொன்ன சகத்தின்றிரளாயுடலமுத
லானபொருளின்சாலத்தை யான்மாவாலேயறத்தள்ளி
ஞானசற்பாவந்தன்னை நனிமேற்கொண்டுமறைந்தோனு
மீனமில்லாமதிவேந்தே யிச்சையானபடிநிற்பாய்.

இ-ள். தானலாதாய் - அநாத்மாவாய், முன்சொன்ன - முன்சொல்லிய, சகத்தின்றிரளாய் - உலகத்தினதுகூட்டமாய், உடலமுதலானபொருளின் - சரீரமுதலாகியவஸ்துக்களின், சாலத்தை - கூட்டத்தை, ஆன்மாவால் - ஆத்மாவினால், அறத்தள்ளி - மிகவு நீக்கி, ஞானசற்பாவந்தன்னை - ஞானசற்பாவத்தை, நனிமேற்கொண்டு - மிகவு மேற்கொண்டு, மறைந்தோனாய் - அடக்கமுடையவனாய், ஈனமில்லா - குறைவில்லாத, மதிவேந்தே - அறிவையுடைய அரசனே, இச்சையானபடிநிற்பாய - இச்சாப்பிரகாரமிருப்பாய்-எ-று.

எ-து. அநாத்மாவாய் முன்சொல்லிய வுலகத்தினது கூட்டமாய்ச் சரீரமுதலாகிய வஸ்துக்களின் கூட்டத்தை யாத்மாவினால் மிகவுநீக்கி ஞானசற்பாவத்தைமிகவுமேற்கொண்டு அடக்கமுடையவனாய்க் குறைவில்லாத அறிவையுடையவரசனே! இச்சாப்பிரகாரமிருப்பாய்—எ-ம்.

(இ-ம். அநாத்மாவை யாத்மாவினாற் கெடுத்ததுவாயிருந்து இச்சையின் படிசஞ்சரிப்பாயென்பதாம். (23)

## அநாத்மநாசத்தை யாத்மநாசமாக நினைத்தறியாது வருந்துதல்.

தனங்கன்றுடேறுயின்மகவைத் தாய்தான்மறந்துமிகத்தேடி
மனங்கன்றுதல்போற்சராமரண மருவாதம்மையறியாமற்
செனங்கள்சலித்துக்கெட்டேனென் றெறியுநாதரிலாதவனு
னனங்கொள்காயம்போமளவி லழிக்கேனுவாமென்றழுவார்.

இ-ள். தனங்கன்றுடே - தொட்டிலையிடத்தில், தாயின்மகவை - நித்திரை செய்கின்ற குழந்தையை, தாய்தான்மறந்து - மாதாவானவளமறந்து, மிகத்

தேடி மிகவுந்தேடி, மனங்கன்றுதல்போல் - மன நைகின்றதுபோல, சரா மரணமருவா - மூப்பிறப்புப்பொருந்தாத, தம்மையறியாமல் - ஆத்மாவை யுணராமல், செனங்கள்சலித்து-சனங்களானவை சலனமுற்று, நான்கெட்டேன் - யான்கெட்டேனென்றும், நான்செறியுநாதரிலாதவன் - யானெருங்கிய நாதரில்லாதவனென்றும், அனங்கொள்காயம் - அன்னியமாகிய சரீரமானது, போமளவில் - நசிக்கின்றகாலத்தில், அழிந்தேன் - நானழிந்தேனென்றும், ஆவாவென்றழுவார் - அந்தோவந்தோ என்றழுவார்கள்—எ-று.

எ - து. கொங்கையினிடத்தில் நித்திரைசெய்கின்ற குழந்தையை மாதாவானவள் மறந்து மிகவுந்தேடி மனநைகின்றதுபோல மூப்பிறப்புப்பொருந்தாத ஆத்மாவை யுணராமற் சனங்களானவை சலனமுற்று யான் கெட்டேனென்றும், யானெருங்கிய நாதரில்லாதவனென்றும், அன்னமயமாகியசரீரமானது நசிக்கின்றகாலத்தில் நானழிந்தேனென்றும் அந்தோ அந்தோவென் றழுவார்கள்—எ-ம்.

## சிதாநந்தமாயிருந்து அரசுசெய்வாயெனல்.



வாரியசைந்தவசைவில்பல வடிவாமதுபோற்சங்கற்ப
நேரிஞலேசிற்பிரமநெடிதாகிரியுஞ்சங்கற்ப
பாரகளக்கமறவிட்டுப் படர்ந்தவறிவையான்மாவிற்
றீரநிறுத்திச்சந்தேகத் திறங்களெல்லாந்தீர்ந்தோனுய்.

இ - ள். வாரி - சலமானது. அசைந்தவசைவில் - சலித்தசலத்தினுல், பலவடிவாமதுபோல் - (அலைமுதலிய) நானுவிதவுருவங்களாவதுபோல, சங்கற்பநேரினுல் - சங்கற்பத்தின் மிகுதியினுல், சிற்பிரமம் - சிற்பிரமமானது நெடிதாகிரியும் - மிகவும்வியாபிக்கும், சங்கற்பம் - சங்கற்பமென்னும். பாரகளங்கமறவிட்டு - பெரிதானகளங்கத்தை மிகவும்விட்டு, படர்ந்தறிவை - விரிந்தசித் (தத்) தை, ஆன்மாவில் - ஆத்மாவினிடத்தில். தீரநிறுத்தி - தீர்ப்பாகவிருத்தி. சந்தேகத்திறங்களெல்லாம் - ஐயத்தினது குணங்களனைத்தையும், தீர்ந்தோனுய்-நீங்கினவனுய்—எ-று.

எ - து. சலமானது சலித்தசலனத்தினுல்அலைமுதலிய நானுவித உருவங்களாவதுபோல சங்கற்பத்தின் மிகுதியினுற்சிற்பிரமமானது மிகவும் வியாபிக்கும் சங்கற்பமென்னும் பெரிதான களங்கத்தை மிகவும் விட்டு விரிந்த சித்தத்தை யாத்மாவினிடத்திற் றீர்ப்பாகவிருத்தல் ஐயத்தினதுகுணங்களனைத்தையும் நீங்கினவனுய்—எ-ம்.

அலைவிலலையா துயர்பரம வான்மாப்போலநிலைநின்று
நிலைகொள்சுகியாயிவ்வரசு நெடிதுபுரப்பாய்நிருபநியே
தலைமையான்மா தன்னிடத்தே தன்னதானவசைவுகளாற்
றொலைவிலாதவிளையாட்டைத் தொடர்பிற்செய்யும்பாலரைப்போல்.

இ-ள். அலைவில் - அசைவிலும், அலையாது - அசைவில்லாமல், உயர் பரமவான்போல - மேலானபரமாத்மாவைப்போல, நிலைநின்று - நிலையாக விருந்து, நிலைகொள்சுகியாய் - நித்தியத்துவத்தையுடையவாநந்தியாய், இவ்வரசு - இந்தநாட்டை, நிருபநியே - அரசனே, நெடிதுபுரப்பாய் - வெகுகாலமிரட்சிப்பாய், தலைமையான்மா - சேடமான ஆத்மாவானது, தன்னிடத்து - தன்னிடத்தில். தன்னதானவசைவுகளால் - தனதுசங்கற்பசத்திகளினால், தொலைவிலாதவிளையாட்டை - அளவற்றலீலையை, பாலரைப்போல் -குழந்தைகளைப்போல, தொடர்பிற்செய்யும் - தொடர்பாகச்செய்யும் — எ-று.

எ - து. அசைவிலு மசைவில்லாமல் மேலான பரமாத்மாவைப்போல நிலையாகவிருந்து நித்தியத்துவத்தையுடைய வாநந்தியாய் இந்தநாட்டை அரசனே வெகுகாலமிரட்சிப்பாய். சேடமான ஆத்மாவானது தன்னிடத்திற்றனது சங்கற்ப சத்திகளினலளவற்ற லீலையைக் குழந்தைகளைப்போலத் தொடர்பாகச் செய்யும் — எ-ம்.

(இ-உ-க-ம்.) சைதன்னிய சங்கற்பத்தைத் தரைத்து நித்தியாநந்தனாயிருந்து பூமிபாலனஞ் செய்வா யென்பதாம். (26)

## ஆத்மசத்தியினுற்பத்திநாசஞ் சொல்லுதல்.

அழிக்குந்தன்சத்தியினாற்பின் னழித்துத்தன்பாலமர்ந்திடுமா
விழிக்கும்பந்தமுறுஞ்சத்தி யிதற்குத்தன்பாற்றானேயெழும்
பழிக்கும்பந்தமெப்படியோ பற்றற்றகலுமப்படியே
யொழிக்குஞ்சத்திதானேவந் துதயமாகுமிவனுக்கே.

இ - ள். அழிக்கும் - சங்கரிக்கின்ற, தன் சத்தியினால் - தனதுசத்தியினால், பின்னழித்து - பின்சங்கரித்து, தன்பாலமர்ந்திடும் - தன்னிடத்திற் பொருந்தும், இழிக்கும் - இழிவுசெய்யும், பந்தமுறுஞ்சத்தி - பந்தத்தையடைகின்ற சத்தியானது, இதற்கு - இந்த ஆத்மாவுக்கு, தன்பாற்றானேயெழும் - தன்னிடத்திற்றானேயுண்டாகும், பழிக்கும்பந்தமெப்படியோ - நிந்திக்கின்ற பந்தசத்தியெங்ஙனமுதித்ததோ, அப்படியேபற்றற்றகலும் - அங்ஙனமே பற்றில்லாமனீங்கும், ஒழிக்குஞ்சத்தி - சங்காரசத்தியானது, இவனுக்குத் தானேவந்துதயமாகும் - இவ்வாத்மாவுக்குத் தானேவந்துண்டாகும் — எ-று.

எ - து. சங்கரிக்கின்ற தனது சத்தியினாற் பின்சங்கரித்துத் தன்னிடத்திற் பொருந்தும், இழிவுசெய்யும், பந்தத்தை யடைகின்ற சத்தியானது இந்தவாத்மாவுக்குத் தன்னிடத்திற்றானேயுண்டாகும், நிந்திக்கின்ற பந்தசத்தி எங்ஙனமுதித்ததோ அங்ஙனமது பற்றில்லா மனீங்கும். சங்காரசத்தியானது இவ்வாத்மாவுக்குத் தானேவந்துண்டாகும்—எ-ம். (27)

## பிரமத்திற் பிரபஞ்சந்தோற்றுதலைக் கூறுதல்.

மதியோடிரவிகதிர்பாய மணிகளிற்சே ரொளிகளைப்போன்
முதிருமரங்கள்கனியிலையை முதலாயினபோலருவிகளிற்
பிதிருந்துளிகள்போற்சாலப் பிறங்கும்பிரமத்திடைதோன்றுங்
கதிகொள்புந்திமுதலாகக் கற்பிதஞ்சேரிச்சகமே.

இ - ள். மதியோடிரவி - சந்திரசூரியருடைய, கதிர்பாய - கிரணங்கள் சேர, மணிகளிற்சேர் - இரத்தினங்களிற்சேர்கின்ற, ஒளிகளைப்போல் — பிரகாசங்களைப்போலவும், முதிருமரங்கள் - முதிர்ந்தவிருட்சங்கள், கனியிலையை முதலாயினபோல் - பழம்பத்திரங்கண் முதலானவையுடையன போலவும், அருவிகளிற்பிதிருந்துளிகள்போல் - மலையருவிகளிற் சிதறுந்துளிகள்போலவும், சாலப்பிறங்கும்பிரமத்திடை - மிகவும்விளங்கும் பிரமத்தில், கதிகொள் புந்திமுதலாக - சலனத்தையுடைய புத்திமுதலாக, கற்பிதஞ்சேரிச்சகம் - கற்பிதமான இவ்வுலகமானது, தோன்றும் - உண்டாகும்—எ-று.

எ — து. சந்திரசூரியருடைய கிரணங்கள்சேர இரத்தினங்களிற்சேர்கின்ற பிரகாசங்களைப்போலவும், முதிர்ந்த விருட்சங்கள் பழம் பத்திரங்கண் முதலானவை யுடையனபோலவும், மலையருவிகளிற் சிதறுந்துளிகள்போலவும், மிகவும் விளங்கும் பிரமத்திற் சலனத்தையுடைய புத்திமுதலாகக் கற்பிதமான இவ்வுலகமானதுண்டாகும்—எ-ம். (28)

## ஆத்மாவினிடத் தில்லாமையாகத் தோற்றின சகமலைதயே மறைக்குமெனல்.

அதுதானறியார்க்கிடர்கல்கி யதுவேயதுவல்லாததுபோற்
றிதமாய்நிற்குமிம்மாயைச் சித்திரந்தானற்புதமே
பொதுவாயங்கமத்தனையும் புணர்ந்துபிறிவற்றிருக்கவுந்தா
னிதமாயுயிரையுயர்காணு திருக்கமயக்குமியாரையுமே.

இ - ள். அதுதானறியார்க்கு- அவ்வாத்மாவையுணராதவர்களுக்கு, இடர்நல்கி - துன்பத்தைக்கொடுத்து, அதுவே - அச்சகமே, அதுவல்லாதது போல் - அக்கற்பிதமாகாததுபோல, நிதமாய்நிற்கும் - நிலையாயிருக்கும். இம்மாயை - இந்தமாயையினது, சித்திரந்தான் - விசித்திரமானது. அற்புதமே- அதிசயமேயாம், பொதுவாய் - சாதாரணமாய், அங்கமத்தனையும் - அவயவங்களியாவையும், புணர்ந்து - கலந்து. பிறிவற்றிருக்கவும் - பிரிவில்லாமலிருக்கவும். இதமாயுரை - உரிமையாக ஆத்மாவை, உயிர்காணுதிருக்க - ஆத்மாவானது காணுமலிருக்கும்படியாக, இயாரையும் - யாவரையும், மயக்கும் - பிரமைசெய்யும்—எ-று.

எ - து. அவ்வாத்மாவை யுணராதவர்களுக்குத் துன்பத்தைக் கொடுத்து அச்சகமே அக்கற்பித மாகாததுபோல நிலையாயிருக்கு மிந்த மாயையினது விசித்திரமான ததிசயமேயாம். சாதாரணமா யவயவங்களியாவையுங் கலந்து பிரிவில்லாமலிருக்கவு முசமையாக ஆத்மாவை ஆத்மாவானது காணுமலிருக்கும்படியாக யாவரையும் பிரமைசெய்யும்—எ-ம். (29)

பிரமகவச முரைத்தல்.



பரமவிண்ணிற்சகமெல்லா மென்றுபாவித்தாசையறிற்
பிரமகவசனின்பமுள பெரியோருநானெனனும்
பொருளைநீக்கிநினைவின்மைவடிவாநினைவாற்பொருளனைத்து
முருவமில்லைநிராலம்ப முணர்வுசாந்தமெனநினைவாய்.

இ — ள். பரமவிண்ணில் - பரமாகாயத்தில், சகமெல்லாமென்று - உலகங்களனைத்து மிருக்கின்றனவென்று, பாவித்து - பாவனைசெய்து, ஆசையறில் - இச்சைநீங்கினுல், பிரமகவசன் - பிரமத்தையே கவசமாகத் தரித்தவனை, இன்பமுளபெரியோருநும் - பேராநந்தத்தையுடைய சீவன்முத்தருநும், நானெனனும்பொருளை - யானென்கின்ற அகங்காரத்தை, நீக்கி - கெடுத்து, நினைவின்மைவடிவாம் - அபாபரூபமான, நினைவால் - பாவனையினுல், பொருளனைத்தும் - வஸ்துக்களியாவும், உருவமில்லை - வடிவமில்லாததாகியும், நிராலம்பம் - பற்றுக்கோடில்லாததாகவும், உணர்வு - சித்தாகவும், சாந்தமென - சாந்தமாகவுமிருக்குமென்று, நினைவாய் - பாவிப்பாய்—எ-று.

எ - து. பரமாகாயத்தி லுலகங்களனைத்து மிருக்கின்றனவென்று பாவனைசெய் திச்சைநீங்கினுல் பிரமத்தையே கவசமாகத் தரித்தவனை பேராநந்தத்தையுடைய சீவன் முத்தனுநும் யானென்கின்ற அகங்காரத்தைக்கெடுத்து அபாபரூபமான பாவனையினுல்

வஸ்துக்களியாவும் வடிவமில்லாததாகவும் பற்றுக்கோடில்லாததாக வுஞ் சித்தாகவுஞ் சாந்தமாகவு மிருக்குமென்று பாவிப்பாய்—எ-ம்.

(இ-சு-க-ம். சிற்பிரகாசமே சகத்தென்றறிதல் பேதிக்கப்படாத ஞான கவசமாமென்பதாம். (30)

## மனோபேதத்தைக் கெடுத்தல்.

இதுவேநன் றீதன்றெண் ணு மிதுவேவித் தாமிடரொழுங்குக்
கதுதான்சமமாமங்கியில்வெந் தழிந்தாலிடருக்கவசரமென்
பொதுவாநலந்தீங்கெனும்பேத மபாவமென்னும்பொருவாளால்
விதமாம்புருடவருத்தத்தான் மெல்லமனதில்வெட்டுதியால்.

இ - ள். இதுவேநன்று - இதுவேநல்லதென்றும், ஈதன்று - இதுநல்ல தல்லவென்றும், எண்ணுமிதுவே - நினைக்கின்றவிப்பேதபாவனையே, இட ரொழுங்குக்கு - துக்கபாம்பரைக்கு, வித்தாம் - விதையாகும், அதுதான் - அந்தவித்தானது, சமமாகியில் - சமபாவனையான அக்கினியில், வெந்த ழிந்தால் - எரிந்தொழிந்தால், இடருக்கு - துன்பத்துக்கு. அவசரமென் - இடமேது, பொதுவாம் - சாதாரணமான. நலந்தீங்கெனும்பேதம் - நன்மை தீமையென்னும்பேதத்தை, அபாவமென்னும் - அபாவமென்கின்ற, பொரு வாளால் - வெட்டுகின்றகத்தியினால், விதமாம்புருடவருத்தத்தால் - நாநாவித மாகிய புருடப் பிரயத்தநத்தினால், மெல்ல - மிருதுவாக, மனதில்வெட்டுதி- மனதிற்றறிப்பாய்—எ-ம்.

எ - து. இதுவே நல்லதென்றும், இது நல்லதல்லவென்றும் நினைக்கின்ற இப்பேதபாவனையே துக்கபாரம்பரைக்கு விதையாகும். அந்த வித்தானது சமபாவனையான அக்கினியிலெரிந் தொழிந்தாற் றுன்பத்துக்கிடமேது? சாதாரணமான நன்மை தீமையென்னும் பே தத்தை அபாவமென்கின்ற வெட்டுகின்ற கத்தியினால் நாநாவிதமா கிய புருடப்ரயத்தனத்தினால் மிருதுவாக மனதிற்றறிப்பாய்—எ-ம்.

(இ-ம்.) மனதின்கண்ணுள்ள பேததுன்பங்களை யறிவின்கண்ணுள்ள அபேதசுகத்தாற் கெடுக்கவேண்டுமென்பதாம். (31)

## கன்மத்யாகஞ்செய்து விவேகத்தாற் பிரமபதத்தைப் பெற்றிருப்பாயெனல்.

நினைவான்முடிக்குங்கருமமெனு நீண்டபெரியவன்காடு
தனைநீ நினைவின்மையினாலே தடிந்துபாமபதமேவி

வினைதீருனதுவிவேகத்தை மேவியென்றுநிலைநிற்பாய்
புனைதாரிக்குவாகுவெனும் புகழாணிறைந்தபூபதியே.

இ - ள். நினைவான்முடிக்கும் - எண்ணத்தினால் நிறைவேற்றப் பட்ட, கருமமெனும் - கன்மமென்கின்ற, நீண்ட - நீண்டிருக்கின்ற, பெரிய வன் காடுதனை - பெரியகொடியவனத்தை, புனைதாரிக்குவாகுவெனும் - அலங்க ரிக்குமாலையுடைய இட்சுவாகுவென்கின்ற, புகழாணிறைந்தபூபதியே - கீர்த்தி யாணிறைந்த அரசனே, நீநினைவின்மையினால் - நீயபாவனையினால், தடிந்து - வெட்டி, பரமபதமேவி - பரமபதத்தையடைந்து, வினைதீர் - கன்மநீங்கிய, உனதுவிவேகத்தைமேவி - உன்னுடைய விவேகத்தைப்பொருந்தி, என்றும், எப்பொழுதும், நிலைநிற்பாய் - நிலையாயிருப்பாய் — எ-று.

எ - து. எண்ணத்தினால் நிறைவேற்றப்பட்டகன்மமென்கின்ற நீண்டிருக்கின்ற பெரிய கொடியவனத்தை யலங்கரிக்குமாலை யுடைய இட்சுவாகு வென்கின்ற கீர்த்தியாணிறைந்த அரசனே! நீயபாவனையி னால் வெட்டிப் பரமபதத்தை யடைந்துகன்ம நீங்கிய வுன்னுடைய விவேகத்தைப்பொருந்தி யெப்பொழுதும் நிலையாயிருப்பாய்—எ-ம்,

துக்கநிவிர்த்தியாய்த் தடையற்ற ஆநந்தமடைதல்..

உலகின்பரப்பையுள்ளாக்கி யுன்னுநினைவுக்கப்பாலாய்க்
கலகமடவார்பொருளென்னுங் காதனமுவிநானென்னுங்
குலவுமிருள்போய்விவேகநிலை கூடுமவனேபராநந்த
மிலகவடைந்தோனெடுங்கால மிவனேதுன்பமில்லாதோன்.

இ - ள். உலகின்பரப்பை - சகத்தினதுவிரிவை, உள்ளாக்கி - தனக் குள்ளடக்கி, உன்னுநினைவுக்கு - நினைக்கின்றபேதநினைவுக்கு, அப்பாலாய் -அதீதமாய், கலகமடவார் - கலகத்தை விளைக்கின்றபெண்களும், பொரு ளென்னும் - பொன்னுமென்கின்ற, காதனமுவி - ஆசைவிட்டு, நானென் னும் - யானென்கின்ற, குலவுமிருள்போய் - குலவாநின்ற அஞ்ஞானவிரு ணீங்கி, விவேகநிலை - விவேகநிச்சயத்தை, கூடுமவனே - சேராநின்றவவ னே, பராநந்தமிலக - பிரமாநந்தமானது பிரகாசிக்க, அடைந்தோன் - பெற் றவனும், நெடுங்காலம் - அநேககாலம், இவனேதுன்பமில்லாதோன் - இவ னேதுக்க மில்லாதவனும்—எ-று.

எ - து. சகத்தினது விரிவைத் தனக்குள்ளடக்கி நினைக்கின்ற பேதநினைவுக்கதீதமாய்க் கலகத்தை விளைக்கின்றபெண்களும் பொ ன்னுமென்கின்ற ஆசைவிட்டு யானென்கின்ற குலவாநின்றவஞ்ஞா

னவிருணீங்கி விவேகநிச்சயத்தைச் சேராநின்றவவனே பிரமாநந்த மானது பிரகாசிக்கப்பெற்றவனும், அநேககாலமிவனே துக்கமில்லாதவனும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) பாவனுகன்மங்களை யபாவனையாற்கெடுத்துச் சகலமுந்தனது வியாபகத்திற்கரைத்துப் பிரமாநந்தத்திற் சுகிப்பவனே துன்பமற்றவனு மென்பதாம். (33)

## ஆத்மாவைத்தரிசித்தபிது அஃதையடைவதற்கு உண்மை நெறியான ஞானபூமியைச் சொல்லத்தொடங்கி முதற்பூமியான சுபேச்சையைக்கூறுதல்.

சாந்தனுகிச்சமநிலையாய்ச் சாலநொய்தாயறிவுருவை
வேந்தனே சந்ததநினைவா யென்றுமனுமீண்டுரைசெய்வா
ருய்ந்தநூலானல்லோரா லறிவைவளர்க்கவேண்டுமுத
லேய்ந்தயோகத்துக்குமுதற் பூமியிதுயோகிக்கில்லை,

இ - ள். சாந்தனுகி - உபசாந்தனுகியும், சமநிலையாய் - சமநிலையாகியும், சாலநொய்தாய் - மிகவுஞ்சொச்சமாகியுமிருந்து, அறிவுருவை - ஞானஸ்வரூபத்தை, வேந்தனே - அரசனே, சந்ததநினைவாயென்று - எப்பொழுதுந்தியானிப்பாயென்று, மனுமீண்டுரைசெய்வான் - மனுவானவர் திரும்பவுஞ்சொல்லுவார், ஆய்ந்த நூலானல்லோரால் - ஆராய்ந்தறிந்த ஞானசாஸ்திரங்களினுலுஞ் சத்துக்களினுலும், அறிவைமுதல் வளர்க்கவேண்டும் - ஞானத்தைமுன்புவளரச்செய்யவேண்டும், ஏய்ந்தயோகத்துக்கிதுமுதற்பூமி - பொருந்திய ஞானத்துக்கிச்சுபேச்சையே முதற்பூமியாகும், யோகிக்கில்லை - கன்மயோகிகளுக்கில்லை-எ-று.

எ - து. உபசாந்தனுகியும், சமநிலையாகியும், மிகவுஞ் சொச்சமாகியுமிருந்து ஞானஸ்வரூபத்தை அரசனே? எப்பொழுதுந் தியானிப்பாயென்று மனுவானவர் திரும்பவுஞ் சொல்லுவார். ஆராய்ந்தறிந்த ஞானசாஸ்திரங்களினுலுஞ்சத்துக்களினுலும் ஞானத்தை முன்புவளரச்செய்யவேண்டும், பொருந்தியஞானத்துக்கிச்சுபேச்சையே முதற்பூமியாகும், கன்மயோகிகளுக்கில்லை—எ—ம்.

## விசாரணைதனுமாநசிசத்துவாபத்தியசம்சத்தியென்னும் இந்நான்கு பூமியையுஞ் சொல்லுதல்.

அயர்வில்விசாரமிரண்டாகு மசங்கபாவமூன்றுகும்
பயிலுநாலாம்விலாபினியே படர்வாசனையைப்பற்றறுக்கு

*பயர்வில்சுத்தநல்லறிவின்மயவாநந்தவடிவைந்தாந்
துயில்சாக்கிரம்பாதிகளில்லாத் தொடர்சீவனின் முத்தியுமிதுவே.*

இ - ள். அயர்வில்விசாரம் - தளர்வற்ற ஆத்மவிசாரணையே, இரண்டாகும் - இரண்டாம்பூமியாகும், அசங்கபாவம் - அசங்கபாவனையே, மூன்றாகும் - மூன்றாவதுபூமியாகும், பயிலுநாலாம்விலாபினியே, சொல்லப்பட்ட நான்காம்பூமியானவிலாபினியே, படர்வாதனையை - வளருகின்றவாசனையை, பற்றறுக்கும் - பற்றில்லாமற்கெடுக்கும், மயர்வில்சுத்தம் - மயக்கமில்லாத பரிசுத்தமாகிய, நல்லறிவின்மயவாநந்தவடிவு - நல்லஞானமயமான ஆநந்தஸ்வரூபமே, ஐந்தாம் - ஐந்தாம்பூமியாம், துயில் - நித்திரையும், சாக்கிரம்பாதிகளில்லா - விழிப்புப்பாதிகளில்லாத, இதுவே - இதுதானே, தொடர்சீவனில்முத்தியும் - தொடராநின்ற சீவன்முத்தியும்—எ-ம்.

எ - து. தளர்வற்ற ஆத்மாவிசாரணையே இரண்டாம் பூமியாகும், அசங்கபாவனையே மூன்றாவது பூமியாகும், சொல்லப்பட்டநான்காம்பூமியான விலாபினியே வளருகின்ற வாசனையைப் பற்றில்லாமற்கெடுக்கும், மயக்கமில்லாத பரிசுத்தமாகிய நல்ல ஞானமயமான ஆநந்தஸ்வரூபமே வைந்தாம்பூமியாம், நித்திரையும் விழிப்புப்பாதிகளில்லாத இதுதானே தொடராநின்ற சீவன்முத்தியும்—எம்.

## பதார்த்தாபாவனை, துரியமெனுமிவ்விரண்டு பூமியையுங்கூறல்.

---

*அறிவிலாமைவடிவாகி யகலாநந்தமொன்றாலுஞ்
செறியும்வடிவாய்ச்சுழுத்தியைப் போற்றிகழுமாறாமுயர்பூமி
பிறிவில்சமமாயறநொய்தாய்ப் பெரிதுநன்றாய்ச்சாந்தமதாய்
வெறியதுரியங்கேவலமாம் வீடேயேழாம்வியன்பூமி.*

இ - ள். அறிவிலாமைவடிவாகி - அறிதலில்லாமையேவுருவமாகி, அகலாநந்தமொன்றாலும் - பூரணமான ஓராநந்தத்தினாலும். செறியும்வடிவாய் - நிறைந்தபடிவமாகி, சுழுத்தியைப்போல் - சுழுத்தியவத்தையைப்போல, திகழும் - விளங்குகின்ற, உயராறும்பூமி - மேலான ஆறும்பூமியாம். பிறிவில்சமமாய் - பிரிவற்றசமமாகியும், அறநொய்தாய் - மிகவுஞ்சொச்சமாகியும், பெரிதுநன்றாய் - மிகவுநல்லதாகியும், சாந்தமதாய் - உபசாந்தமாகியும், வெறியதுரியம் - சுத்ததுரியமாகியுமிருக்கின்ற. கேவலமாம் வீடே - கைவல்யமாகிய மோக்ஷமே, ஏழாம்வியன்பூமி - ஏழாவதான பெருமை பொருந்திய பூமியாம்—எ-று.

எ - து. அறிதலில்லாமையே உருவமாகிப் பூரணமானபோ ராநந்தத்தினாலும் நிறைந்தபடிவமாகிச் சுழுத்தி யவத்தையைப்போ ல விளங்குகின்ற மேலான ஆறும்பூமியாம் பிரிவற்ற சமமாகியும், மிகவுஞ்சொந்தமாகியும், மிகவு நல்லதாகியும், உபசாந்தமாகியும், சுத் த துரியமாகியுமிருக்கின்ற கைவல்யமாகிய மோக்ஷமே 'ஏழாவதான பெருமைபொருந்திய பூமியாம்—எ-ம்.

(இ-ஙு-க-ம்.) ஞானசத்தபூமியினருத்தத்தை யப்பியாசிக்குங் கிரமமறி வித்ததாம். (36)

## ஞானபூமிகாஸ்வரூபமானபிரமபுருடனுக்கு அதையை த்தவத்தையாகச் சொல்லத் தொடங்கி முதற்பூமி மூன்றையுஞ் சாக்கிரவவத்தை யெனல்.

மன்னுவிடயம் விடுதலினால் வாழுமிவ்வேழாம்பூமி
தன்னைநிருவாணத் துருவாய்ச் சான்றதுரியாதீதபத
மென்னவுரைத்தார்சிலர்வேறே இவ்வேழவத்தைகளின்முன்னஞ்
சொன்னவவத்தையொருமூன்றுந்தொடர்சாக்கிரமாய்க்கருதுவதாம்.

இ - ள். மன்னுவிடயம் - நெருங்கிய விடயங்கள், விடுதலினால் - நீங்கு தலினால், வாழும் - (பேராநந்தத்தில்) வாழும், இவ்வேழாம்பூமிதன்னை - இந் தவேழாம்பூமியை. நிருவாணத்துருவாய் - மோட்சஸ்வரூபமாய், சான்றதுரி யாதீதபதமென்ன - சித்தான துரியாதீதபதமென்று, சிலருரைத்தார் - சிலர் சொன்னார்கள், வேறே - வேறாக, இவ்வேழவத்தைகளில் - இந்தவேழுபூமிக ளில், முன்னஞ்சொன்ன - முதற்கண்சொல்லிய. அவத்தை - அவத்தைக ளான, ஒருமூன்றும் - மூன்றுபூமியும். தொடர்சாக்கிரமாய் - தொடராநின் றசாக்கிரவவத்தையாக, கருதுவதாம் - நினைப்பதாகும் —எ-று.

எ - து. நெருங்கிய விடயங்க ணீங்குதலினாற் பேராநந்தத் தில் வாழுமிந்த ஏழாம்பூமியை மோட்சஸ்வரூபமாய்ச் சித்தான துரியாதீதபதமென்று சிலர்சொன்னார்கள். வேறாக இந்த ஏழுபூமி களில் முதற்கண்சொல்லிய அவத்தைகளான மூன்றுபூமியுந் தொட ராநின்ற சாக்கிரவவத்தையாக நினைப்பதாகும்—எ-ம். (37)

## நான்காம்பூமி சொற்பனம் ஐந்தாம்பூமி சுழுத்தி ஆறாம்பூமி துரியமெனக் கூறுதல்.

சகங்கள்கனவிற்றோற்றுவாந் தன்மைநாலாவதுகனவா
நிகழாநந்தமொன்றாலு நெருங்குவடிவமைந்தென்று

புகன்றவவத்தைசுழுத்தியதாம் போதமின்மைவடிவாகித்
திகழ்ந்தவாறுமவத்தையினைச் சிறந்ததுரியமெனலாகும்.

இ - ள். சகங்கள் - உலகங்களானவை, கனவிற்றோற்றுவாம் - சொற்பனத்தைப்போலத் தோற்றுவனவாகிய, தன்மை - குணமுடைய, நாலாவது கனவாம்-நான்காம்பூமியே சொற்பனவத்தையாம், திகழ் - பிரகாசியாநின்ற, ஆநந்தமொன்றாலும் - ஓரானந்தத்தினாலும், நெருங்குவடிவம் - நிறைந்தவுருவமானதை, ஐந்தென்று புகன்றவவத்தை - ஐந்தென்றுசொல்லிய பூமியே, சுழுத்தியதாம் - சுழுத்தியவத்தையாகும், போதமின்மைவடிவாகி-அறிதலில்லாத (ஆநந்தமே) ஸ்வரூபமாய், திகழ்ந்தவாறுமவத்தையினை - விளங்காநின்ற வாறும்பூமியை, சிறந்ததுரியம் - சிறப்புள்ளதுரியவவத்தை, எனலாகும் - என்றுசொல்லப்படும்-எ-று.

எ - து. உலகங்களானவை சொற்பனத்தைப்போலத் தோற்றுவனவாகிய குணமுடைய நான்காம் பூமியேசொற்பனவத்தையாம். பிரகாசியாநின்ற வோரானந்தத்தினாலும் நிறைந்த உருவமானதை ஐந்தென்று சொல்லிய பூமியே சுழுத்திய வத்தையாகும். அறிதலில்லாத ஆநந்தஸ்வரூபமாய் விளங்காநின்ற பூமியைச் சிறப்புள்ள துரியவவத்தையென்று சொல்லப்படும்—எ—ம். (38)

## ஏழாம்பூமி துரியாதீத மெனல்.

தரியாமனவாக்கெட்டரிதாய்த் தனதேசுண்மைவடிவான
துரியாதீதப்பதவவத்தைத் தூயவேழாமுயர்பூமி
பிரியாதுள்ளேவசமான பிரத்தியாகாரத்தாலே
தெரியாதாகிக்காண்கின்ற திரள்களனைத்தும்போமாகில்.

இ - ள். தரியாமனவாக்கு - சலனமானமனமும் வாக்கும், எட்டரிதாய்-எட்டுதற்கரிதாகியும், தனதேசு - தனதுபிரகாசமாகியும், உண்மைவடிவான-சத்துருவாகியுமிருக்கின்ற, துரியாதீதப்பதவவத்தை - துரியாதீதப்பத மானவவத்தையே, தூயவேழாமுயர்பூமி - பரிசுத்தம்பொருந்தியமேலான ஏழாவது பூமியாகும், பிரியாது - நீங்காமல், உள்வசமான - அகத்தின்வசமாகிய, பிரத்தியாகாரத்தால் - சித்தநிரோதனத்தினால், தெரியாதாகி-தெரியாததால், காண்கின்றதிரள்களனைத்தும் - பார்க்கப்பட்ட திரிஸ்யக்கூட்டங்களியாவும், போமாகில் - நீங்குமானால்-எ-று.

எ - து. சலமான மனமும்வாக்கு மெட்டுதற்கரிதாகியும், தனது பிரகாசமாகியும், சத்துருவமாகியு மிருக்கின்றதுரியாதீதப் பதமான

வவத்தையே பரிசுத்தம்பொருந்திய மேலான வேழாவதுபூமியாகும் நீங்காமல் அகத்தின் வசமாகிய சித்தநிரோதனத்தினுற் றெரியாததா ய்ப்பார்க்கப்பட்ட திரிஸ்யக்கூட்டங்களியாவும் நீங்குமானல்—எ-ம்.

(இ-ரு-க-ம்.) முன்மூன்று பூமியற்பியாசத்திற் சகமுள்ளதுபோலத்தோற் றுதலினுற் சாக்கிரமென்றும், நான்காம் பூமியிற் சகம் ஸ்புரணரூபமாகத்தோ ற்றுதலாற் சொற்பனமென்றும். ஐந்தாம் பூமியிற் சகஞ் சுகரூபமாய்த் தோற் றுதலிற் சுழுத்தியென்றும். ஆரும்பூமியிற் சகமறிதலிறந்து விளங்குதலிற் றுரி யமென்றும், ஏழாம்பூமியிற் சகமகோசரமான சாக்ஷாத்காரமாய் விளங்குதலிற் றுரியாதீதமென்று மிதுவேயாத்மார்த்தமென் றறிவித்ததாம்.

## ஞானபூமியற்பியாசத்தினுற் சத்யோமுத்தனுவனெனல்.

அந்தமகாசத்தையினுலே யவனேமுத்தனையமிலே
வந்தபோகசுகதுக்க வகையாற்ருக்காதறநிறைந்த
புந்தியுளனுயான்மாவிற் பொருந்துமகிழ்ந்துநிற்குமெனி
லிந்தமனிதனிலேதானே யிங்கேதோன்று முயர்முத்தி.

இ - ள். அந்த - அப்படிப்பட்ட, மகாசத்தையினுல் - மகாசத்தையினுல், அவனேமுத்தன் — அவனேசீவன்முத்தனுனவன், ஐயமில்லை - சந்தேகமில்லை, வந்தபோகம் - வந்திருக்கின்றபோகங்கள், சுகதுக்கவகையால் - இன்பதுன்ப விதங்களினுல், தாக்காது - தாக்காமல், அறநிறைந்த-மிகவுநிறைந்திருக்கின்ற, புந்தியுளனுய் - அறிவையுடையவனுய் - ஆன்மாவிற்பொருந்தும் - ஆத்மாவிற் கலந்து. மகிழ்ந்துநிற்குமெனில் - மகிழ்ச்சியுற்றிருக்குமாயின். இந்தமனிதனி லேதான் - இப்புருடனிச்சயத்திற்கு. உயர்முத்தி - மேலானமோக்ஷமானது, இங்கேதோன்று - இவ்விடத்திற் ருேற்றும்—எ-று.

எ - து. அப்படிப்பட்ட மகாசத்தையினுலவனே சீவன் முத்த னுனவன், சந்தேகமில்லை. வந்திருக்கின்ற போகங்களின்பதுன்ப விதங்களினுற்ருக்காமல் மிகவுநிறைந்திருக்கின்ற வறிவையுடையவனுயா த்மாவிற்கலந்து மகிழ்ச்சியுற்றிருக்கும். யினிப்புருடனிச்சயத்திற்கு மேலான மோக்ஷமானதிவ்விடத்திற் ருேற்றும்—எ-ம்.

## துரியாதீதவனுபவி யெங்ஙன மிருக்கினுஞ் சுகியேயன்றி துன்புருனெனல்.

பொங்குதொழின் மேவினன்சாந்தன் புகல்வீட்டுறைவோன்சங்யாசி
யங்கமுள்ளோன்சரீரமிலோ னெனினுமவனேமுனியாகு

மெங்குமிறவேனுயிர்வாழே னிலனுமுளனுமலனிவனே
தங்குநான்கிஞ்சிலுமிலனென் றுன்னித்தீரன்றளர்வனாகான்,

இ - ள். பொங்குதொழில் - மிகுந்தசெயலை, மேவினன் - அடைந்தவன், சாந்தன் - தொழிலற்றவன், புகல்வீட்டுறைவோன் - சொல்லப்பட்ட கிரகஸ்தன், சந்யாசி - துறவி, அங்கமுள்ளோனன் - சரீரமுள்ளவன், சரீரமிலோன் - தேகமில்லாதவன், எனினும்-என்று சொல்லப்பட்டாலும், அவனே முனியாகும் - அவனேசீவன்முத்தனாகும், எங்கும் - எவ்விடத்திலும், இறவேனுயிர்வாழேன் - மரிக்கேன்பிழைக்கேன், இலனுமுளனுமலன் - இல்லாதவனுமுண்டானவனுமல்லாதவன், இவன் - இவனென்பதும், தங்குநான் - தங்காநின்ற நானென்பதும், கிஞ்சிலுமிலன் - அற்பமுமில்லாதவன், என்றுன்னி - என்றுசிந்தித்து, தீரன் - தீரனானவன், தளர்வனாகான் - சோர்வையடையான்--எ-று.

எ - து. மிகுந்த செயலையடைந்தவன், தொழிலற்றவன், சொல்லப்பட்ட கிரகஸ்தன், துறவி, சரீரமுள்ளவன், தேகமில்லாதவன் என்று சொல்லப்பட்டாலும் அவனே சீவன்முத்தனாகும். எவ்விடத்திலுமரிக்கேன், பிழைக்கேன், இல்லாதவனுமுண்டானவனுமல்லாதவன், இவனென்பதுந் தங்காநின்ற நானென்பதுமற்பமுமில்லாதவனென்ன சிந்தித்துத் தீரனானவன் சோர்வையடையான்—எ-ம்.

ஒன்றிலனாகேனான்நரைபற் றுள்ளமமதையகங்கார
மென்றவொன்றுமிலனென்றே யெண்ணித்தீரனிடரனாகான்
றுன்றுகுணமூன்றிலன்நரைசா விலனான்சுத்தன்றூயறிஞ
னின்றசாந்தன்சமரசனா னென்றுநினைத்தோன்றுயரனாகான்.

இ - ள். நான் - யான், ஒன்றிலனாகேன் - ஒன்றிலுநெருங்கேன், நரை - நரையும், பற்று - ஆசையும், உள்ளம்-மனதும், மமதை - மமதையும், அகங்காரம் - அகங்காரமும், என்ற-என்றுசொல்லப்பட்ட, ஒன்றுமிலனென்று - ஒன்றுமில்லாதவனென்று, எண்ணி-நினைத்து, தீரன் - தீரனானவன், இடரனாகான் - துன்பமடையான், துன்றுகுணமூன்றிலன் - நெருங்கியமூன்றுகுணமில்லாதவன், நரைசாவிலன்-மூப்பிறப்பில்லாதவன், நான்சுத்தன் - யான்பரிசுத்தன், தூயறிஞன் - (நான்) பரிசுத்தஞானி, நின்றசாந்தன் - நானிலையான வுபசாந்தன், நான்சமரசன் - யான்சமரசன். என்று-இப்படியென்று. நினைத்தோன் - சிந்தித்தவன், துயரனாகான் - துன்பத்தையடையான்-எ-று.

எ - து. யானொன்றிலு நெருங்கேன் நரையும், ஆசையும், மனதும், மமதையும், அகங்காரமுமென்றுசொல்லப்பட்ட வொன்றுமில

லாதவனென்று நினைத்துத் தீரனானவன் றுன்பமடையான். நெருங்கிய மூன்றுகுணமில்லாதவன் மூப்பிறப்பில்லாதவன், யான்பரிசுத்தன், நான்பரிசுத்தஞானி, நானிலையான வுபசாந்தன், யான்சமாசன் இப்படியென்று சிந்தித்தவன் றுன்பத்தையடையான்—எ-ம்.

திரணநுனிகள்விசும்பிரவி தேவருரகர்நரரிடத்தில்
விரியுமறிவேநானென் றுவிளங்குந்தீரன்மெலிவணுகான்
புரியுங்குறுக்குமேல்கீழென் போதப்பெருமையுலாவியதென்
றரிதினநந்தவிசாரஞ்செய் ததனையறிந்தோனழிவில்லோன்.

இ-ள். திரணநுனிகள் - துரும்புகளினுனிகளிடத்திலும், விசும்பு - ஆகாயத்தினிடத்திலும், இரவி - சூரியனிடத்திலும், தேவர் - அமரர்களிடத்திலும், உரகர் - நாகரிடத்திலும், நரரிடத்தில் - மனிதரிடத்திலும், விரியுமறிவே - வியாபித்திருக்கின்றஞானமே, நானென்றுவிளங்கும் - யானென்று பிரகாசிக்கும், தீரன் - தீரனானவன், மெலிவணுகான் - இளைப்பையடையான், புரியுங்குறுக்கும் - சொல்லப்பட்டகுறுக்கும், மேல்கீழ் - மேலுங்கீழும், என்போதப்பெருமை - எனது சித்துவிலாசமானது, உலாவியதென்று - வியாபித்திருக்கின்றதென்று, அரிதின் - அரியதாய், அநந்தவிசாரஞ்செய்து - அளவற்றவிசாரணைபண்ணி, இதனையறிந்தோன் - இந்த நிலையையுணர்ந்தவன், அழிவில்லோன் - நாசமில்லாதவன்—எ-று.

எ-து. துரும்புகளினுனிகளிடத்திலும், ஆகாயத்தினிடத்திலும், சூரியனிடத்திலும், அமரர்களிடத்திலும், நாகரிடத்திலும், மனிதரிடத்திலும் வியாபித்திருக்கின்ற ஞானமே யானென்று பிரகாசிக்கும் தீரனானவனிளைப்பையடையான், சொல்லப்பட்டகுறுக்கும் மேலுங்கீழும் எனது சித்துவிலாசமானது வியாபித்திருக்கின்றதென்றுவரியதா யளவற்ற விசாரணைபண்ணி இந்த நிலையையுணர்ந்தவனாசமில்லாதவன்—எ-ம்.

(இ-௪-க-ம்.) சராசரங்களாய்ப் பிரகாசிக்கின்ற சைதன்யமே நானென்கிற ஞானநிஷ்டையுடையவன் யாதினுங் கடிபடுங்கூடாதவனுய்த் துரியாதீத வடிவமாய்ப் பிரகாசிப்பானென்பதாம். (43)

## சுகதுக்கநிவிர்த்தியின்பொருட்டு ஆத்மவொருமையைக் கூறல்.

திரவாசனை போமெடப்பொருள்க ளனுபவிக்கச்சேர்ந்துளவோ
துருசிலதுவேசுகஞ்செய்யுஞ் சுகமேதனிக்குமதுவிராவில்
வெருவுகாலத்தானசிக்கு மதனாற்றுன்பம்வினைபொருட்டாம்
பெரியசுகதுக்கங்களுக்குப் பிரிவற்றிருக்கைப்பிரசித்தம்.

இ - ள். திரவாசனையோடு - திரமானவாசனையுடன். எப்பொருள்களனுபவிக்கச்சேர்ந்துளவோ - யாதொருவஸ்து அனுபவிக்கப்படுதோ, துருசிலதுவேசுகஞ்செய்யும் - சீக்கிரமாகவதுவே சுகத்தைக்கொடுக்கும், சுகமேதளிக்கும் - யாதொருவஸ்து சுகத்தின்பொருட்டாகுதோ, அதுவிரைவில் - அப்பொருள்சீக்கிரத்தின், வெருவுகாலத்தானசிக்குமதனால் - பயங்கரமான காலத்தினு னசிக்கின்றபடியினல், துன்பம்விளைபொருட்டாம் - துக்கமுண்டாகுநிமித்தமாம், பெரியசுகதுக்கங்களுக்கு - மகத்தான சுகதுக்கங்களுக்கு, பிரிவற்றிருக்கைப்பிரசித்தம் - நீங்காதிருத்தல் பிரசித்தமாம்—எ-று.

எ — து. திரமானவாசனையுட னியாதொருவஸ்து அனுபவிக்கப்படுதோ சீக்கிரமாகவதுவே சுகத்தைக்கொடுக்கும், யாதொருவஸ்து சுகத்தின்பொருட்டாகுதோ அப்பொருளைச் சீக்கிரத்தின் பயங்கரமான காலத்தினு னசிக்கின்றபடியினுற் றுக்கமுண்டாகு நிமித்தமாம். மகத்தான சுகதுக்கங்களுக்கு நீங்காதிருத்தல் பிரசித்தமாம்.

நிருவாசனையினுனு நேர்வாசனையினுனும்
பொருள்தானடையினதனுலே யின்பதுன்பம் பொருந்தாவாம்
வருபோதிரண்டுமொன்ருக வந்துவிளங்குஞ்சுகதுக்க
மருகாநின்றநாசத்தி லவைகளிரண்டு மடங்கிடுமால்.

இ - ள். நிருவாசனையினுனும் - வாசனையிறந்தாயினும், நேர்வாசனையினுனும் - தேய்ந்தவாசனையினுயினும், பொருள்தானடையில் - (விடய) வஸ்துவையடைந்தால், அதனுலின்பதுன்பம் பொருந்தாவாம் - அதனுற்சுகமுண்டாகாது. சுகதுக்கம் - இன்பதுன்பங்கள், வருபோது - உதிக்கும்போது, இரண்டுமொன்ருகவந்து - இரண்டுமொருமித்துண்டாய், விளங்கும் - ஸ்திதியடையும், அருகாநின்றநாசத்தில் - குறைந்துகெடும்போதில், அவைகளிரண்டுமடங்கிடும் - அச்சுகதுக்கங்களிரண்டு மொன்றாய்நசிக்கும்.

எ - து. வாசனையிறந்தாயினும், தேய்ந்த வாசனையினுயினும் விடயவஸ்துவையடைந்தால் அதனுற் சுகதுக்கமுண்டாகாது. இன்பதுன்பங்களுதிக்கும்போதிரண்டு மொருமித்துண்டாய் ஸ்திதியடையும், குறைந்துகெடும்போதில் அச்சுகதுக்கங்களிரண்டுமொன்றாய்நசிக்கும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) வாசனையின்றிச்செய்யுங் கன்மங்களிலுண்டாகாத சுகதுக்கங்களுக்குப் பட்சியின்சிறகைப்போலப் பிரிவில்லை யென்பதாம். (45)

## வாசனையிறந்துசெய்யுங் கன்மபவமன்றெனல்.

புந்திதணிந்தவாசனையாற் புரிகாரியமீண்டங்குரியா
வெந்தவிதையினுடல்கரண முதலவெவ்வேறாய்விரிந்து
நந்துகருமகாரணங்க ணாட்டுமொருவன்செய்வோன்றான்
முந்துபுசிப்போன்றானெவனே முன்வந்தடைவனவ்விடத்தே.

இ - ள். புந்தி - மனமானது, தணிந்தவாசனையால் - சீரணித்தவாசனையினால், புரிகாரியம் - செய்யப்பட்டகன்மமானது, வெந்தவிதையின் - வறுபட்டவித்தைப்போல, மீண்டங்குரியா - திரும்ப (சுகதுக்கங்களா) யுண்டாகாது, உடல்கரணமுதல் - தேகேந்திரியங்கண்முதலிய, வெவ்வேறாய் விரிந்து - வேறுவேறாகவிரிந்து, காரணங்கணந்துகருமநாட்டும் - காரணங்களினாற்றிடமான (பேத) கன்மங்களுண்டாகும், அவ்விடத்து செய்வோன்றான்-ஆங் (க்காரணங்களுள்) சமைப்பவனாகவும், முந்துபுசிப்போன்றான் - முன் புசிப்பவனாகவும், எவனொருவன் - யாரொருவன், முன்வந்தடைவன் - எதிரிடுவன்—எ-று.

எ - து. மனமானது சீரணித்த வாசனையினாற் செய்யப்பட்ட கன்மமானது வறுபட்டவித்தைப்போலத் திரும்பச்சுகதுக்கங்களாயுண்டாகாது. தேகேந்திரியங்கண் முதலிய வேறுவேறாக விரிந்துக் காரணங்களினாற்றிடமான பேதகன்மங்களுண்டாகும், ஆங்கக்காரணங்களுள் சமைப்பவனாகவும், முன் புசிப்பவனாகவு மியாரொருவனெதிரிடுவன்—எ-ம்.

இ-ம்.) சாந்தமானவாசனையாற் பவகன்மநீங்குவதன்றியுங் கன்மபாவமுமுண்டாகாவென்பதாம். (46)

## சீவன்முத்தன் கன்மநிவிர்த்தியைக் கூறல்.

பாவிப்பனயாவையினுமுளம் பற்றாதுயர்ந்தோன்றாரகையின்
றேவிற்குளிர்ந்துநிறைந்தொளிர்வன் செய்யகதிரோன்றன்கதிரின்
பூவிற்றொழிலினுலைந்துழலும் பொத்தவுடலாமிலவுகனை
மேவுதொழிற்பஞ்சோடிப்போ ஞானக்காற்றால்விசைந்தொருபால்.

இ - ள். பாவிப்பனயாவையினும் - பாவிக்கப்பட்டனவாகிய வஸ்துக்களனைத்தினும், உளம்பற்றாது - மனம்பற்றாமல், உயர்ந்தோன் - (அறிவி) லுயர்ந்தவன், தாரகையின்றேவின் சந்திரனைப்போல, குளிர்ந்து -(அகத்திற்) சீதளமாய், செய்யகதிரோன்கதிரின் - சிவந்தசூரிய கிரணத்தைப்போல, நிறைந்தொளிர்வன் - பூரணமாகப் பிரகாசிப்பன், பூவிற்றொழிலினுலைந் துழ

லும் - உலகவிபகாரங்களில் வருந்திச்சுழலாநின்ற, பொத்தவுடலாமிலவுதனை - நவத்துவாரமுள்ளதேகமென்னு மிலவமரத்தில், மேவுதொழிற்பஞ்சு - பொருந்திய (சஞ்சிதாகாமியமென்னும்) வினைப்பஞ்சானது, ஞானக்காற்றால் - அறிவென்னுஞ் (சண்ட) மாருதத்தினால், விசைந்தொருபாலோடிப்போம் - வேகமாயொருபக்கத்திற்பறந்துபோம்—எ-று.

எ - து. பாவிக்கப்பட்டனவாகிய வஸ்துக்களைத்தினு மனம்பற்றும லறிவிலுயர்ந்தவன் சந்திரனைப்போல அமுத்திற் சீதளமாய்ச் சிவந்த சூரியகிரணத்தைப்போலப் பூரணமாக பிரகாசிப்பன். உலக விவகாரங்களில் வருந்திச் சுழலாநின்ற நவத்துவாரமுள்ள தேகமென்னு மிலவமரத்திற் பொருந்திய சஞ்சிதாகாமியமென்னும் வினைப்பஞ்சானது அறிவென்னுஞ் சண்டமாருதத்தினால் வேகமாயொரு பக்கத்திற் பறந்துபோம்—எ-ம். (47)

## ஞானமற்பமாயுதிக்கினு மகண்டமாய் வளருமெனல்.



எண்ணமெல்லாம்பழகாம லாலேயிறக்கும்பிறப்போர்க்குக்
கண்ணதானவிஞ்ஞானக் கலைதானொருசாற்றோன்றிடினும்
பண்ணுநல்லகழனிதனிற் பயின்றவித்துப்பலிப்பதுபோற்
றிண்ணமானவன்பாலே மிகவும்வளருஞ்சிறப்பாக.

இ - ள். பிறப்போர்க்கு - சனிக்கின்ற சீவர்களுக்கு, எண்ணமெல்லாம் - மதிக்கின்ற கலைஞானமனைத்தும், பழகாமலால் - அடிக்கடியப்பியாசிக்காததினால், இறக்கும் - மரிக்கும், கண்ணதான - நேத்திரமாகிய, விஞ்ஞானம் - ஞானமுள்ள, கலைதான் - கல்வியானது, ஒருசாற்றோன்றிடினும் - ஒருபோதுண்டானாலும், பண்ணும் - உழவுசெய்திருக்கின்ற, நல்லகழனிதனில் - நல்லவயலில், பயின்றவித்துப்பலிப்பதுபோல் - விரைத்தவிதையானது பலங்கொடுப்பதுபோல, திண்ணமானவன்பால் - மெய்யன்பினால், சிறப்பாக - மேன்மையாக, மிகவும்வளரும் - மிகவும்விருத்தியடையும் - எ-று.

எ - து. சனிக்கின்ற சீவர்களுக்கு மதிக்கின்ற கலைஞானமனைத்தும் அடிக்கடியப்பியாசிக்காததினால் மரிக்கும். நேத்திரமாகியஞானமுள்ள கல்வியானது ஒருபோதுண்டானாலு முழவுசெய்திருக்கின்ற நல்லவயலில் விரைத்த விதையானது பலங்கொடுப்பதுபோல மெய்யன்பினால் மேன்மையாக மிகவும் விருத்தியடையும்—எ-ம். ( )

## ஆத்மசத்தையே சகத்தாக விளங்குமெனல்.

முழுதுவடிவமாயொன்று மான்மாமுழுதுசத்தியினுங்
கெழுமுநதியிலுவரிகளிற் கீலாலம்போனின்றொளிரு
மொழிவினிலினின்பரப்பிலதா யொன்றுஞ்சற்பாவந்தன்னிற்
றழுவுகூறுமாத்திரமா யுணர்வாய்ச்சகலசகங்களையும்.

இ - ள். முழுதுவடிவமாய் - எல்லாரூபங்களாயும், ஒன்றுமான்மா - ஏகமாகியுமிருக்கின்ற ஆத்மாவானது, கெழுமுநதியில் - நிறைந்தவாற்றிலும், உவரிகளில் - சமுத்திரங்களிலுமுள்ள, கீலாலம்போல - நீரைப்போல, முழுதுசத்தியினும் சகலசத்திகளிடத்திலும், நின்றொளிரும் - இருந்து பிரகாசிக்கும், ஒழிவினிலினின் - நீங்காதவெண்ணத்தினது, பரப்பிலதாய் - சமுகமில்லாததாய், ஒன்றும் - ஏகமாகியிருக்கின்ற, சற்பாவந்தன்னில் - சற்பாவத்தில், சகலசகங்களையும் - எல்லாவுலகங்களையும், தழுவுகூறுமாத்திரமாய் - தழுவாநின்ற பங்கினளவாக, உணர்வாய் - அறிவாய்—எ-று.

எ - து எல்லாரூபங்களாயு மேகமாகியுமிருக்கின்ற ஆத்மாவானது நிறைந்தவாற்றிலுஞ் சமுத்திரங்களிலுமுள்ள நீரைப்போலச் சகலசத்திகளிடத்திலு மிருந்து பிரகாசிக்கும். நீங்காத வெண்ணத்தினது சமுகமில்லாததாய் ஏகமாயிருக்கின்ற சற்பாவத்தி லெல்லாவுலகங்களையுந் தழுவாநின்ற பங்கினளவாக வறிவாய்—எ-ம்.

(இ ௯-௧-ம்.) கன்மநிவர்த்தியும் ஞானவிருத்தியுஞ் சகத்துபின்னத்துவதையு மறிவித்ததாம். (49)

## ஆத்மாவுக்கிச்சையுண்டாதலும் அழிதலுங்கூறல்.

என்றுமனுமீண்டுரைசெய்வா னிசையந்தபுலன்போகத்தாசை
நின்றதெம்மட்டம்மட்டு நிகழ்சீவப்பேர்பெறுமான்மா
வொன்றுமவிவேகத்தாலவ் வாசையுண்டாந்தன்னாலே
யன்றுநிருபாவிவேகத்தா லந்தவாசையழிவெய்தும்.

(இ-ள்) என்று - இப்படியென்று சொல்லிய, மனுமீண்டுரைசெய்வான் - மனுத்திரும்பவுஞ் சொல்லுவார், இசையந்தபுலன் - இசைந்தவிடயமான, போகத்தாசை - போகவிச்சையில், நின்றதெம்மட்டு இருந்ததெந்தமட்டோ, அம்மட்டும் - அந்தமட்டும், ஆன்மா - ஆத்மாவானது, நிகழ்சீவப்பேர்பெறும், விளங்காநின்ற சீவனென்னு நாமத்தையடையும், ஒன்றும்விவேகத்தால் பொருந்தாநின்ற அவிவேகத்தினால், அவ்வாசையுண்டாம் - அந்தவிடயவிச்சையுண்டாகும், நிருபா - அரசனே, தன்னாலேயன்று - காரணமன்

டாகமாட்டாது, விவேகத்தால் - விவேகத்தினால், அந்தவாசையழிவெய்தும் அவ்விச்சையானது நாசமடையும் —எ-று.

எ - து. இப்படி யென்றுசொல்லி மனுத்திரும்பவுஞ் சொல்லுவார் இசைந்த விடயமான போகவிச்சையிலிருந்த தெந்தமட்டோ அந்தமட்டு மாத்மாவானது விளங்காநின்ற சீவனென்னு நாமத்தை யடையும். பொருந்தாநின்ற அவிவேகத்தினாலந்த விடயவிச்சையுண்டாகும். அரசனே! தானேயுண்டாகமாட்டாது. விவேகத்தினாலவ்விச்சையானது நாசமடையும்—எ-ம்.

## ஆத்மாவுக்கிச்சையேபந்தம் அதன்விடுதியே முத்தியெனல்.

காதலென்றுபோமன்று கலந்தசீவத்திறம்விட்டுத்
தீதிலாதபரப்பிரமத் திறத்தையான்மாசேர்ந்திடுமாற்
கேதமார்கமேனின்றுங் கீழெய்துங்கீழ்நின்று
மேதமில்லாமேலேசென் றெய்துநெடுநாளிவ்வான்மா.

இ - ள். காதலென்றுபோம் - இச்சையெப்பொழுதுநீங்குமோ, அன்று - அப்போது, கலந்தசீவத்திறம்விட்டு - கூடியசீவத்தன்மையைநீங்கி, தீதிலாத - குற்றமற்ற, பரப்பிரமத்திறத்தை - மேலானபிரமத்தின்றன்மையை, ஆன்மா - ஆத்மாவானது, சேர்ந்திடும் - அடையும், இவ்வான்மா - இந்த ஆத்மாவானது, நெடுநாள் - வெகுகாலம், கேதமாக - துன்பமாக, மேனின்றுங் கீழெய்தும் - சுவர்க்கத்திலிருந்து நரகத்துக்குவரும், கீழ்நின்றும் - நரகத்திருந்தும், ஏதமில்லாமேலே சென்றெய்தும் - குற்றமற்ற சுவர்க்கத்திற் செல்லும்—எ-று.

எ - து இச்சை யெப்பொழுதுநீங்குமோ அப்போது கூடிய சீவத்தன்மையைநீங்கிக்குற்றமற்ற மேலானபிரமத்தின் றன்மையை ஆத்மாவானதடையும், இந்த ஆத்மாவானது வெகுகாலந்துன்பமாக சுவர்க்கத்திலிருந்து நரகத்துக்குவரும். நரகத்திருந்துங் குற்றமற்ற சுவர்க்கத்திற் செல்லும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) இச்சாத்யாகம் வரவேண்டுமென் றறிவித்ததாம். (51)

## அகப்பாவமுள்ளவனிழிவு கூறல்.

கனமார்பிறவிப்பெரும்பூட்டைக் கருத்தாங்கயிற்றிற்கட்டமாகே
லெனதிதற்குநானென்றே யிறுகும்பிராந்திவிகார

நனிமோகத்திற்செறிபவர்யா ரந்தநவைசேர்வஞ்சகரே
தனிவேன்மன்னுகீழ்நின்றும் கீழேசரிக்கத்தக்கவரே.

இ - ள். கனமார் - கூட்டமாயுள்ள, பிறவிப்பெரும்பூட்டை - பவமென்னும் பெரியவேற்றத்தினது, கருத்தாங்கயிற்றின் - சிந்தனையென்னுங்கயிற்றின், கடமாகேல் - கடமாகாதே, ஈதெனது - இதென்னுடையது, இதற்கு நானென்று - இதற்குநானே கருத்தாவென்று, இறுகும்பிராந்திவிவகாரம் - உறுதிப்படுத்துந்தொழிலாகிய, நனிமோகத்தில் - மிகுந்தமயக்கத்தில், செறிபவர்யார் - நெருங்குபவர்களியாவர், அந்தநவைசேர் - அக்குற்றத்தையடைந்திருக்கின்ற, வஞ்சகரே - வஞ்சகரானவர்களே, தனிவேன் மன்னு - ஒப்பற்ற வேலாயுதத்தையுடையவரசனே, கீழ்நின்றும் - கீழேயிருந்தும், கீழேசரிக்கத்தக்கவர் - கீழேபோகத்தக்கவர்கள்—எ று.

எ - து. கூட்டமாயுள்ள பவமென்னும் பெரியவேற்றத்தினது சிந்தனையென்னுங்கயிற்றின்கடமாகாதே இதென்னுடையது, இதற்குநானே கருத்தாவென் றுறுதிப்படுத்துந் தொழிலாகிய மிகுந்தமயக்கத்தி னெருங்குபவர்களியாவர்? அக்குற்றத்தையடைந்திருக்கின்ற வஞ்சகரானவர்களே ஒப்பற்றவேலாயுதத்தையுடையவரசனே! கீழேயிருந்துங் கீழேபோகத் தக்கவர்கள்—எ—ம்.

அகம்பாவத்திற்கட்டுபட்டு மயங்குபவர்களே கீழுக்குங்கீழான சநநத்தையடைவார்க ளென்பதாம். (52)

## அகப்பாவமற்றவர்களின் உயர்வுகூறல்.



இதற்குநானீதெனக்கவன்மற் றிவனுனென் றிடுமோக
விதத்தையுயர்புந்தியினாலே விட்டோர்மேற்குமேற்செல்வோர்
திதத்தவொளிகூ ரான்மாவைச் சிறிதுந்தாழா துறப்பற்றி
யுதித்தசகத்தைத்தற்புரண வுருவமாகநோக்குதியால்.

இ - ள். இதற்குநான் - இதற்குநானுடையனென்றும், ஈதெனக்கு - இதெனக்குள்ளதென்றும், அவன் - அவனென்றும், இவன் - இவனென்றும், நானுனென்றிடும் - நானென்றுஞ் சொல்லப்பட்ட, மோகவிதத்தை - மயக்கமான நாநாவிதத்தை, உயர்புந்தியினால் - மேலானவறிவினால், விட்டோர் - நீக்கினவர்கள், மேற்குமேற்செல்வோர் - மேலுக்குமேலான (முத்தியிற்) செல்பவர்கள், திதத்தவொளிகூர் - திரமானதனது சுப்பிரகாசமிகுந்த, ஆன்மாவை - ஆத்மஸ்வரூபத்தை, சிறிதுந்தாழாது - எவ்வளவுந்தவக்கப்படாமல், உறப்பற்றி - பொருந்தும்படிபிடித்து, உதித்தசகத்தை - உண்டாகிய வுலகத்தை,

தற்பூரணவுருவமாக - தனது பூரணஸ்வரூபமாக. நோக்குதி - பார்க்கக்கடவாய்—எ-று.

எ - து. இதற்கு நானுடையவனென்றும், ஈதெனக்குள்ளதென்றும் அவனென்றும் இவனென்றும் நானென்றுஞ்சொல்லப்பட்ட மயக்கமான நாநாவிதத்தை மேலானவறிவினு னீக்கினவர்கள் மேலுக்குமேலான முத்தியிற் செல்பவர்கள். திரமானதனது சுப்பிரகாசமிகுந்த ஆத்மஸ்வரூபத்தை எவ்வளவுந்தவக்கப்படாமற் பொருந்தும்படி பிடித்து உண்டாகிய வுலகத்தைத் தனது பூரணஸ்வரூபமாகப் பார்க்கக்கடவாய்—எ—ம்.

(இ-ம்.) அசம்பாவத்தை யறிவினாற்கெடுத்தவர்களே மேலுக்குமேலான முத்தியையடைவ ரென்பதாம். (53)

## சித்துருவம் அத்துவிதமாக விளங்குமெனல்.

என்றிப்படிதன்சித்துருவ மிரண்டற்றுள்ளே தனித்தோன்று
மன்றிப்பவம்போய்ப்பரமேச னாகலாகுமயன்சிவன்மால்
வென்றிக்குலிசத்தவன்முதலோர் செய்தவெல்லாமெய்ம்மையினு[ய்.
லொன்றிச்செறிசித்துருவுடைநான் செய்கின்றேனென் றுணர்வுறுவா

இ - ள். என்று - எப்போது, இப்படி - இந்தப் பிரகாரம், தன்சித்துருவம் - தனது ஞானஸ்வரூபமானது, இரண்டற்று - தொய்தமின்றி, உள்தனித் தோன்றும் - அசத்தினென்றாயுதிக்குமோ, அன்று - அப்போது, இப்பவம் போய் - இச்சசநநீங்கி, பரமேசனாகலாகும் - பரமேஸ்வரனாகலாம், அயன்-பிரமாவும். சிவன் - உருத்திரனும், மால் - விட்டுணுவும், வென்றி - வெற்றியுள்ள, குலிசத்தவன்முதலோர் - வச்சிராயுதத்தையுடைய விந்திரனுமிவர்களாதியானவர்கள், செய்தவெல்லாம் - செய்யும் (பஞ்சகிருத்தியமுதலிய) வெவையும், மெய்ம்மையினுலொன்றி-தத்துவத்திற்கலந்து, செறிசித்துருவுடைநான்-நிறைந்த ஞானஸ்வரூபத்தையுடையநானே, செய்கின்றேனென்று - இயற்றுகிறேனென்று, உணர்வுறுவாய் - அறிவாய் --எ-று.

எ - து. எப்போதிந்தப் பிரகாரந்தனது ஞானஸ்வரூபமானது தொய்தமின்றி யசத்தினென்றாயுதிக்குமோ வப்போதிச் சநநநீங்கிப் பரமேஸ்வரனாகலாம். பிரமாவும் உருத்திரனும் விட்டுணுவும் வெற்றியுள்ள வச்சிராயுதத்தையுடைய விந்திரனுமிவர்களாதியானவர்கள் செய்யும் பஞ்சகிருத்தியமுதலிய வெவையுந் தத்துவத்திற் கலந்து நிறைந்த ஞானஸ்வரூபத்தையுடைய நானேஇயற்றுகிறேனென்றறிவாய்—எ-ம்.

(இ-ம்.) சிவன்முதலியோ ரனுபவமுமிதுவேயெனத் தெரிவித்ததாம்.

## ஞானதிருஷ்டியின் பெருமையுரைத்தல்.

யாதியாதெப்பொழுதெதிர்ந்த தவற்றிலென்னேசொல்லப்பட்ட
தோதுமவையெல்லாந்தடைதீ ருணர்வின்விலாசமேநன்றாந்
தீதிலறிவுமாத்திரமாந் திறனாய்க்காலச்செயம்பண்ணி
கோதின்மனத்தோடிருப்பவன்சேர் குறைவில்சுகத்தோடெதுநிகரே.

இ-ள். யாதியாது - எந்தவெந்த (தரிசனங்கள்). எப்பொழுதெதிர்ந்தது - எப்போதுநேரிடுமோ, அவற்றில் - அத்தரிசனங்களில், என்னேசொல்லப்பட்ட - எது (தத்துவமாகச்) சொல்லப்பட்டதோ, ஓதுமவையெல்லாம்- சொல்லப்பட்ட அவையனைத்தும், தடைதீருணர்வின் - தடையற்றஞானத்தினது, நன்றாம்விலாசமே - இனிதானலீலையேயாம், தீதிலறிவுமாத்திரமாந் திறனாய் - குற்றமற்றசின்மாத்திரமான குணத்தையுடையவனாய், காலச்செயம்பண்ணி - காலனைச்செயஞ்செய்து, கோதின்மனத்தோடிருப்பவன் - குற்றமற்றமனதுடனிருப்பவன், சேர் - அடையாநின்ற, குறைவில் சுகத்தோடு - பூரணாநந்தத்துடன், எதுநிகர் - யாதொப்பாகும்—எ-று.

எ-து. எந்தவெந்த தரிசனங்களெப்போது நேரிடுமோ அத்தரிசனங்களிலெது தத்துவமாகச் சொல்லப்பட்டதோ சொல்லப்பட்ட அவையனைத்துந் தடையற்ற ஞானத்தினது இனிதானலீலையேயாம். குற்றமற்ற சின்மாத்திரமான குணத்தையுடையவனாய்க் காலனைச்செயஞ் செய்து குற்றமற்ற மனதுடனிருப்பவன் அடையாநின்றபூரணாநந்தத்துடனியாதொப்பாகும்—எ-ம்.

(இ-ம்.) எதிரிட்ட சகலவஸ்துவுஞ் சைதன்யவிலாச மென்றறிந்த பூரண மனதுள்ளவன் சுகத்துக்கிணை யாதென்பதாம். (55)

## செகத்தினிலக்கணஞ் சொல்லிச் சித்துருவமான முத்தியைக்கூறல்.

இல்லதன்றுண்டல்லவறி வில்லாவுருவிலறிவுருவ
மல்லவான்மவுருவமல வயலன்றுலகமெனநினைவாய்ச்
சொல்லுமிந்தச்சுருபமுறத் தொடர்ந்தபகுதிபோயிறக்கும்
புல்லுதேசங்காலமலப் புறத்தோர்நிலையன்றுயர்முத்தி.

இ-ள். உலகம் - சகமானது, இல்லதன்று - இல்லாததுமல்ல, உண்டல்ல - உண்டானதுமல்ல, அறிவில்லாவுருவில் - அசித்துவமுமல்ல, அறிவுருவமல்ல - சித்துருவமுமல்ல, ஆன்மவுருவமல்ல - ஆத்மஸ்வரூபமுமல்ல,

அயலன்று - அநாத்மஸ்வரூபமுமல்ல, எணிநினைவாய் - என்றுநினைப்பாய், சொல்லும் - சொல்லப்பட்ட, இந்தச்சுரூபமுற — இச்சுரூபத்தையுடைய, தொடர்ந்தபகுதிபோயிறக்கும் - (பழமையாய்த்) தொடர்ந்தமாயையான திறக்கும், உயர்முத்தி - மேலானமோக்ஷமானது, புல்லுதேசங்காலமல - பொருந்தாநின்றதேயமுங்காலமுமல்லவாம், புறத்தோர்நிலையன்று - புறம்பானவொருஸ்திதியுமல்ல—எ-று.

எ - து. சகமான தில்லாததுமல்ல. உண்டானதுமல்ல, அசித்துருவமுமல்ல; சித்துருவமுமல்ல, ஆத்மஸ்வரூபமுமல்ல, அநாத்மஸ்வரூபமு மல்லவென்று நினைப்பாய். சொல்லப்பட்ட இச்சுரூபத்தையுடைய பழமைபாய்த் தொடர்ந்த மாயையானதிறக்கும். மேலான மோக்ஷமானது பொருந்தாநின்றதேயமுங் காலமுமல்லவாம். புறம்பான வொருஸ்திதியுமல்ல—எ—ம்.

(இ-ம்.) இச்சகமர்த்தக்கிரியைகளைச் செய்வதனுவில்லதும், கற்பிதமாகையாலுள்ளதும், விகாரமுள்ள வாதலாலறிவும், பிரகாசிக்கின்றபடியாலறியாமையும், பேதமாகத்தோற்றுகின்றபடியால் ஆத்மரூபமும், ஆத்மாவைத்தவிரவில்லாதபடியா லயலுமல்லவெனக்கூறினதாம். (56)

## சீவன்முத்த னிலக்கணங்கூறத் தொடங்கி சாத்திரவாசனை முதலியயாவுநீங்கிற் சமதிருஷ்டியிற் சுகிப்பானெனல்.

அகங்காரத்தினகமென்னு மோகமழிந்தாற்பாவனையா
மிகும்பேர்பெற்றபகுதியந்தம் வீடாமொருவனையவனுத்
தொகுஞ்சாத்திரத்தின்பொருணினைவிற் றுவளுநாநாவிதவின்பம்,
புகுங்காவிய வேட்கையுமனைத்து விகற்பத்துயரும் பொருந்தாமல்.

இ - ள். அகங்காரத்தின் - அகங்காரத்தினது, அகமென்னும்-நானென்கின்ற, மோகமழிந்தால் - மயக்கமானதுகெட்டால், பாவனையா - பாவனையென்கின்ற, மிகும்பேர்பெற்ற - மிகுந்தநாமத்தையடைந்த, பகுதியந்தம் - மாயையின்முடிவு, வீடாம் - மோக்ஷமாகும், தொகும் - தொகுத்துச் சொல்லாநின்ற, சாத்திரத்தின் - சாத்திரங்களினது, பொருணினைவில் - அழுந்தபாவனையில், துவளுநாநாவிதவின்பம் - துவளாநின்ற பலவிதமான சுகங்களில், புகுங்காவியவேட்கையும் - பிரவேசிக்குங் காவிய விச்சையுமாகிய, அனைத்து விகற்பத்துயரும் - எல்லாவேறுபாட்டின்றுன்பங்களும் - பொருந்தாமல் - அடையாமலிருக்கின்ற, ஒருவனையவனும் - ஒருவனை (முத்தியைப் பெற்ற) வனுதும்—எ-று.

எ - து. அகங்காரத்தினது நானென்கின்ற மயக்கமானது கெட்டால் பாவனையென்கின்ற மிகுந்த நாமத்தையடைந்த மாயையின் முடிவுமோக்ஷமாகும். தொகுத்துச்சொல்லாநின்ற சாத்திரங்களினது அருத்தபாவனையிற் றுவளாநின்ற பலவிதமான சுகங்களிற் பிரவேசிக்குங் காவியவிச்சையுமாகிய எல்லாவேறுபாட்டின் றுன்பங்களுமடையாமலிருக்கின்ற ஒருவனே முத்தியைப்பெற்றவனாகும்.

இதுவுமது.

அன்னான்சமமாமழிவில்லா வான்மாவாய்நின் றின்பமுறு
மென்னுகினுமொன் றுடுப்பவனு யென்னுகினுமொன் றுண்பவனு
யுன்னுதெங்காகினுமொருபா லுறங்குவோனுயாங்கவனே
பொன்னுர்பூமிமுழுதாளும் பூபாலனைப்போற்பொலிவுறுமால்.

இ - ள். அன்னான் - அவன், அழிவில்லா - நாசமற்ற, சமமாம் - சமமாகிய, ஆன்மாவாய்நின்று - ஆத்மாவாகவிருந்து, இன்பமுறும் - ஆநந்தத்தையடைவான், என்னுகினுமொன்று - ஏதாகிலுமொன்றை, உடுப்பவனுய் - தரிப்பவனாகியும், என்னுகினுமொன்று - ஏதாகிலுமொன்றை, உண்பவனுய் - புசிப்பவனாகியும், உன்னாது - நினையாமல், எங்காகினும் - எவ்விடத்திலாகிலும், ஒருபால் - ஓரிடத்தில், உறங்குவோனுய் - அறிதுயிற்செய்கின்றவனுயுமிருக்கின்ற, அவனே - அவன்றான், பொன்னார்பூமி - அழகியபூவுலகத்தை, முழுதாளும் பூபாலனைப்போல் - ஆளுஞ் சக்கரவர்த்தியைப்போல, பொலிவுறும் - பிரகாசிப்பன்.—எ-ம்.

எ - து, அவன் நாசமற்றச்சமமாகிய ஆத்மவாகவிருந்து ஆநந்தத்தையடைவான். ஏதாகிலுமொன்றைத் தரிப்பவனாகியும் ஏதாகிலுமொன்றைப் புசிப்பவனாகியும்; நினையாமலெவ்விடத்திலாகிலுமோரிடத்தில் அறிதுயிற்செய்கின்றவனுயுமிருக்கின்ற அவன்றான் அழகிய பூவுலகத்தையாளுஞ் சக்கரவர்த்தியைப்போலப் பிரகாசிப்பான்.

(இ-உ-க-ம்.) அகம்பாவமுதலான பேதநீங்கிச் சமதிஷ்டியிற் சகலகிரியையுஞ் செய்பவனே யெதிரற்ற சுகியாய் விளங்குவனென்பதாம். (58)

## கன்மத்யாகங்கூறல்.

வருணுசிரம வாசாரவழி நூனடத்துநடை நீங்கி, யருகாவுலகின் றலையகன்றே யருங்கூடகன்றகேசரிபோ, லிருபாவுரைகட்கேட்டரியானேடிப் பிறக்கு நிலைநீத்தோ, ரொருசோலையைச் சேர்ந்தவன் மழைபோ யொளித்தகானில்விண்டலம்போல்.

இ - ள். அருங்கூடகன்ற - அரிய (விருப்புக்கூண்டினின்று) நீங்கிய, கேசரிபோல் - சிங்கத்தைபோல், நூனடத்தும் — (கன்ம) சாஸ்திரங்கணடத்துகின்ற, வருணாசிரமவாசாரவழி - வருணாச்சிரம தருமநெறியின், நடை நீங்கி - நடையைவிட்டு, அருகாவுலகின்றுலேயகன்று - நசிக்கின்ற சகத்தின்கண் நீங்கி, நிருபா - அரசனே, உரைகட்கேட்டரியோன் - வசனங்களைக் கேட்குதற்கரியவன், நேடிப்பிறக்குநிலைநீத்தோன் - (தன்னைத்) தேடிப்பிறவியைநீக்கினவன், மழைபோயொளித்தநாளில் - மேகமறைந்த சரற்காலத்திலுள்ள, விண்டலம்போல் - ஆகாயத்தைப்போல, ஒருசோபையைச் சேர்ந்தவன்-ஒப்பற்றசாந்தியையடைந்தவன்—எ-று.

எ - து. அரிய விருப்புக்கூண்டினின்று நீங்கிய சிங்கத்தைப் போலக் கன்மசாஸ்திரங்க ணடத்துகின்ற வருணாச்சிரம தருமநெறியினடையைவிட்டு நசிக்கின்ற சகத்தின் கணீங்கி அரசனே வசனங்களைக் கேட்குதற்கரியவன், தன்னைத்தேடிப் பிறவியைநீக்கினவன் மேகமறைந்த சரற்காலத்திலுள்ள ஆகாயத்தைப்போல வொப்பற்ற சாந்தியையடைந்தவன்—எ-ம்.

(இ-ம்.) வருணாச்சிரம தருமமுதலியவைகளை யனுபவமாய் நீக்கினவனேயொப்பற்ற ஞானப் பிரகாசமாய் விளங்குவானென்பதாம். (59)

## கருமபலம் விட்டவனிலக்கணங் கூறல்.

தெளிவுகெம்பீரங்கள்கிரி சேர்ந்தபெரியசுனைபோல்வன்
களிகொள்பரமசுகச்சுவையாந் தன்பாற்றானேகலங்காம
லெளிதுசுகிப்பன்கருமபல மெல்லாம்விட்டோனழிவின்றி
யொளிருநிறைவோனிருவினைவேறொன்றுந்தாக்காதொன்றனுகான்

இ - ள். தெளிவு - தெளிவும், கெம்பீரங்கள் - ஆழமுமுள்ள, கிரிசேர்ந்த - மலையைச்சேர்ந்த, பெரியசுனைபோல்வன் - பெரியகுளத்துக்கொப்பானவன், களிகொள் - களிப்பையுடைய, பரமசுகச்சுவையாம் - பிரமாநந்த விரசமாகிய, தன்பாற்றானே - தன்னிடத்திற்றானே, கலங்காமல் - கலக்கமுறாமல், எளிதுசுகிப்பன் - எளிதாகரமிப்பவன், கருமபலமெல்லாம் விட்டோன் - கன்மபலன்களனைத்தையு நீக்கினவன், அழிவின்றியொளிரும் - நசியாமற் பிரகாசிக்கின்ற, நிறைவோன் - பூரணஞானவன், இருவினைவேறொன்றும் - இருவினைமுதலிய விகற்பங்களொன்றும், தாக்கான் - தாக்கப்படாதவன், ஒன்றனுகான் - ஒன்றுஞ்சேராதவன் — எ-று.

எ - து. தெளிவும் ஆழமுமுள்ள மலையைச்சேர்ந்த பெரியகுளத்துக்கொப்பானவன், களிப்பையுடைய பிரமாநந்த விரசமாகிய

தன்னிடத்திற்றானே கலக்கமுறும வெளிதாக ரமிப்பவன், கன்மபல ங்களனைத்தையு நீக்கினவன், நசியாமற் பிரகாசிக்கின்ற பூரணனான வன். இருவினைமுதலிய விகற்பங்களொன்றுந் தாக்கப்படாதவன், ஒன்றுஞ் சேராதவன்—எ-ம்.

(இ-ம்.) பலாபேக்ஷையின்றிக் கருமஞ்செய்பவனே பரமசுகத்திற் சுகிப்பவனென்பதாம். (60)

## அனைத்துப்பற்றியுப் பற்றற்றிருக்கின்ற இலக்கணங்கூறல்.

பத்திபாய்ந்துட்பற்றுத பளிங்குபோலக்கருமபலம்
பத்திபாய்ந்துட்பற்றுதோன் பலநீண்மணிதருடனுறைந்தும்
பத்தியாலற்சித்தாலும் பகையாலுடலையரிந்தாலும்
பத்திபாச்சலுற்றதுபோற் பயிலுமகிழ்வுதுயரறியான்.

இ-ள். பத்திபாய்ந்து - (பஞ்சவன்னங்கள்) பிரதிபலித்தும், உட்பற்றுதபளிங்குபோல - உட்பிடிப்பில்லாத படிகமணியைப்போல, கருமபலம் - கன்மபலமானது, பத்தியாய்ந்து-பிரதிபலித்தும், உட்பற்றுதோன் - அகத்திற்பற்றுதவன், பலநீண்மணிதருடனுறைந்தும் - அநேகமாகவிரிந்த நாரகளுடன்கூடியும், பத்தியாலற்சித்தாலும் - பத்தியினாலாராதனை செய்தாலும், பகையால் - விரோதத்தினால், உடலையரிந்தாலும் - சரீரத்தையறுத்தாலும், பத்திபாய்ச்சலுற்றதுபோல் - பிரதிபலனத்தையடைந்ததுபோல, பயிலும் - சொல்லப்பட்ட, மகிழ்வுதுயரறியான் - சுகதுக்கங்களையறியமாட்டான்.

எ — து. பஞ்சவன்னங்கள் பிரதிபலித்தும் உட்பிடிப்பில்லாத படிகமணியைப்போலக் கன்மபலமானது பிரதிபலித்து மகத்திற்பற்றுதவன் அநேகமாக விரிந்த நாரகளுடன்கூடியும், பத்தியினாலாராதனைசெய்தாலும், விரோதத்தினற் சரீரத்தையறுத்தாலும், பிரதிபலனத்தை யடைந்ததுபோலச் சொல்லப்பட்ட சுகதுக்கங்களை யறியமாட்டான்—எ-ம்.

(இ-ம்.) பலனையுத்தேசியாமற்செய்யுங் கருமத்தாற் சுகதுக்கத்தையடையானென்பதாம். (61)

## சற்கருமஞ்செய்தும் செய்யாதவனெனல்.

துதிகள்கடவுளோமங்க டொடர்பூச்சியன்பூசைகளில்லோன்
விதிசெய்கிரியாசார மேவப்படுவோன்மேவாதோ
னெதிருந்தன்னூலுலகோர்க ளிறையும்வெருவாவகையிருப்போ
னுதிதமானவுலகத்தி லொன்றால்வெருவாதுறைகிற்போன்.

இ - ள். துதிகள் - தோத்திரங்களும், கடவுளோமங்கள் - தேவயாகங்களும், தொடர்பூச்சியன் - தொடர்பாகப் பூசிக்கப்படுவோனும், பூசைகள் - பூசைகளும், இல்லோன் - இல்லாதவன், விதிசெய் - வேத விதிப்படி செய்கின்ற, நீதியாசாரம் - நீதிநடையை, மேவப்படுவோன்மேவாதோன் - பொருந்தியும் பொருந்தப்படாதவன், எதிருந்தன்றால் - எதிரிடப்பட்டதன்றால், உலகோர்கள் - சகத்திலுள்ளவர்கள், இறையும்வெருவாவகையிருப்போன் - எவ்வளவும் அச்சப்படாதவண்ணமிருப்பவன், உதிதமானவுலகத்திலொன்றால் - உண்டான - சகத்திலுள்ள வொன்றினாலும், வெருவாதுறைகிற்போன் பயப்படாமல் வாசஞ்செய்பவன்—எ-று.

எ - து. தோத்திரங்களுந் தேவயாகங்களுந் தொடர்பாகப்பூசிக்கப்படுவோனும் பூசைகளுமில்லாதவன் வேதவிதிப்படிச்செய்கின்ற நீதிநடையைப்பொருந்தியும் பொருந்தப்படாதவன் எதிரிடப்பட்டதன்றாற் சகத்திலுள்ளவர்கள் எவ்வளவும் அச்சப்படாதவண்ண மிருப்பவ னுண்டானசகத்திலுள்ள வொன்றினாலும் பயப்படாமல் வாசஞ்செய்பவன்—எ-ம்.

(இ-ம்.) சீவன்முத்தனுக்கியல்பான நடையைக் கூறினதாம். (62)

## சீவன்முத்தன் சரித்திரஞ் சொல்லி அவ னெங்ஙனமரிக்கினும் முத்தியே அடைவானெனல்

பற்றுமுனிவுபயஞ்சுகங்கள் பயிலானெனினும்பயின்றிடினுஞ்
சொற்றவெவர்க்கும்பிரமேயந் தொடாானெனினுநன்பாலர்
பெற்றபிரமேயத்துறினும் பெரியமனத்தோன்காசியிற்சா
வுற்றபொழுதுநாய்க்கெரிப்போ ருழைசாவுறினுமுறும்பதங்கள்.

இ - ள், பெரியமனத்தோன் - பூரணமனதுடையவன், பற்றும் - ஆசையும், முனிவு - கோபமும், பயம் - அச்சமும், சுகங்கள் - சந்தோடங்களுமான இவைகளில், பயிலானெனினும் - கூடாதவனானாலும், பயின்றிடினும் - கூடினவனானாலும், சொற்றவெவர்க்கும் - முன்சொல்லப்பட்டயாவருக்குமுள்ள, பிரமேயந்தொடானெனினும் - பிரமேயந்தொடாதவனானாலும், நன்பாலர் பெற்றபிரமேயத்துறினும் நற்குழந்தைகளடைந்தபிரமேயத்தையடைந்தவனேனும், காசியிற்சாவுற்றபொழுதும் - காசியிலிறந்தபோதும், நாய்க்கெரிப்போருழைசாவுறினும் - புலையர்வீட்டிலிறந்தாலும், பதங்களும் - பரமபதத்தைப் பொருந்துவன்—எ-று.

எ - து. பூரணமனதுடையவன், ஆசையுங்கோபமும் அச்சமுஞ் சந்தோடங்களுமான இவைகளிற் கூடாதவனானாலும் கூடினவனானாலும், முன்சொல்லப்பட்ட யாவருக்குமுள்ள பிரமேயத்தை யடைந்தவனானாலும், காசியிலிறந்தபோதும் புலையர்வீட்டிலிறந்தாலும் பரமபதத்தைப் பொருந்துவன்—எ-ம். (63)

## அகம்பாவமான பந்தநீங்கி அறிவாய்விளங்கினவனை யாவருமாராதிக்கத்தக்க தெனல்.

ஞானமடைந்தபொழுதிலிவ னல்வீடுற்றேன்மனமிறந்தோ
னீனமானவகம்பாவப் பிராந்தியன்றேவிடர்பந்த
மானவீடாவதுமடமை யந்தகாரங்கெடலன்றே
மானமிருந்தவிவனெய்தின் மனிதர்பூசைசெயவேண்டும்.

இ - ள். ஞானமடைந்தபொழுதில் - சைதன்யத்தைப் பெற்றமாத்திரத்தில், இவனல்வீடுற்றேன் - இவன்நல்லமோக்ஷத்தையடைந்தவன், மனமிறந்தோன் - மனோநாசமானவன், இடர்பந்தம் - துன்பமுள்ள பந்தமாவது, ஈனமான இழிவாகிய, அகம்பாவப்பிராந்தியன்றே - அகங்காரமயக்கமல்லவா, ஆனவீடாவது - ஆகியமோக்ஷமாவது, மடமையந்தகாரங்கெடலன்றே - அஞ்ஞானந்தகாரங்கெடுவதல்லவா (வென்றிருந்த), மானமிருந்த இவனெய்தின் - மாட்சிமையிலுயர்ந்தவிவ் (வறிஞன்) வரின்; மனிதர்பூசைசெயவேண்டும் - புருடராராதிக்கவேண்டும் எ - று.

எ - து சைதன்யத்தைப் பெற்றமாத்திரத்தில் இவனல்லமோக்ஷத்தையடைந்தவன், மனோநாசமானவன், துன்பமுள்ள பந்தமாவது இழிவாகிய அகங்காரமயக்கமல்லவா ஆகியமோக்ஷமாவது அஞ்ஞானந்தகாரங் கெடுவதல்வா வென்றறிந்த மாட்சிமையிலுயர்ந்த இவ்வறிஞன்வரின் புருடராராதிக்கவேண்டும் (64)

## அவன் முமுட்சுக்களாராதிக்கத் தக்கவனெனல்.

போற்றவணங்கப்பூசிக்கப் புகழவருந்திப்போய்க்காண
ஆற்றவுரியோனெவனவன்வன் பிறவியறுப்போர்க்கனவரதஞ்
சாற்றுமகத்தாற்றீர்த்தத்தாற் றவத்தாற்றானத்தாற்கிட்டா
வூற்றவறிவாற்பிறவியறுத் துயர்ந்தோன்பத்திதரும்பயனே.

இ - ள். வன்பிறவியறுப்போர்க்கு - கொடிய சநநங்களைக்கெடுப்பவர்களுக்கு, அவன் - அச்சீவன் முத்தனே, அனவரதம் சதாகாலம், போற்ற-துதிக்கவும், வணங்க - வணங்கவும், பூசிக்க — ஆராதிக்கவும், புகழ - புகழவும், வருந்திப்போய்க்காண - பிரார்த்தித்துப்போய்த்தரிசிக்கவும், ஆற்றவுரியோன்-மிகவுமுரியவன், எவன் - யாவன், ஊற்றவறிவால் - சலனமில்லாதஞானத்தினால், பிறவியறுத்துயர்ந்தோன் - பவத்தைநீக்கி மாட்சிமைப்பட்டவனோ, பத்தி - அவனுக்குச்செய்யு மன்பு, தரும்பயன் - கொடுக்கும் பிரயோசனமானது, சாற்றுமகத்தால் - சொல்லப்பட்ட யாகங்களினாலும், தீர்த்தத்தால் - நதிகளினாலும், தவத்தாற்றானத்தாற்கிட்டா - தவங்களினாலுந் தானங்களினாலும் லபியாது—எ-று.

எ - து. கொடிய சநநங்களைக் கெடுப்பவர்களுக்கு அச்சீவன் முத்தனே சதாகாலந்துதிக்கவும், வணங்கவும், ஆராதிக்கவும், புகழவும், பிரார்த்தித்துப்போய்த் தரிசிக்கவும் மிகவுமுரியவனியாவன்? சலனமில்லாத ஞானத்தினுற் பவத்தைநீக்கி மாசுநீமைப்பட்டவனே அவனுக்குச்செய்யு மன்பு கொடுக்கும் பிரயோசனமானது சொல்லப்பட்ட யாகங்களினுலும், தவங்களினுலும், தானங்களினுலும் லபியாது—எ-ம்.

(இ-ரூ-க-ம்.) முததிவிருப்ப முள்ளவர்க ளிச்சீவன்முத்தரைப்பூசித்தடையவேண்டுமென்பதாம், (65)

## பிரமனுபதேசித் தெழுந்தருளுதல்.

பரிந்திவ்வா றுகற்பித்துப் பகவன்மனுவாம்பேர்விரிஞ்சன்
புரிந்துதனது பொன்மனைபோய்ப் புக்கானிக்குவாகுவெனும்
விரிந்தபுகழ்மன்னனுமந்த விழியேபற்றிநிலைநின்றான்
வரிந்தகழற்காலிராமவென வசிட்டமுனிவனருள்செய்தான்.

இ - ள். பரிந்திவ்வாறு - அன்புற்றிந்தவண்ணம், கற்பித்து - புரிந்துபோதித்து, பகவன் - பகவானுன, மனுவாம்பேர்விரிஞ்சன் - மனுவென்னு நாமத்தையுடைய பிரமாவானவர், தனதுபொன்மனை - தனதுகனக (மயமானசத்தியலோகத்திலுள்ள)அரண்மனையில், போய்ப்புக்கான் - போய்ச்சேர்ந்தார், கழல்வரிந்தகாலிராம - வீரகண்டாமணியைவரிந்திருக்கின்ற பாதத்தையுடைய ஸ்ரீராமா, இக்குவாகுவெனும் - இட்சுவாகு வென்கின்ற, விரிந்தபுகழ்மன்னனும் - மிகுந்தகீர்த்தியையுடைய வரசனும், அந்தவிழியேபற்றி - அந்தத்திருவடியையேபிடித்து, நிலைநின்றானென (தனதாத்ம) நிச்சயத்திலிருந்தானென்று, வசிட்டமுனிவனருள் செய்தான் - வசிட்டமுனியானவர் சொன்னார்—எ-று.

எ - து. அன்புற்றிந்தவண்ணம் போதித்துப் பகவானுன மனுவென்னு நாமத்தையுடைய பிரமாவானவர் தனது கனகமயமானசத்தியலோகத்திலுள்ள அரண்மனையிற்போய்ச்சேர்ந்தார். வீரகண்டாமணியை வரிந்திருக்கின்ற பாதத்தையுடைய ஸ்ரீராமா! இட்சுவாகு வென்கின்ற மிகுந்த கீர்த்தியையுடைய அரசனு மந்தத்திருவடியையேபிடித்துத் தனதாத்மநிச்சயத்தி லிருந்தானென்று வசிட்டமுனியானவர் சொன்னார்—எ-ம்.

(இ-ம்.) பிரமவுபதேசத்தால் இட்சுவாகுவுஞ் சீவன்முத்திப்பதத்தையடைந்தனரென்பதாம். (66)

இட்சுவாகுகதை முற்றிற்று.

ஆ க்கதை 41-க்கு கவிதை 1962.

# மானுவேடன் கதை.

அவதாரிகை

முற்கதையிற்றனது விசாரத்தாலடையக்கூடாமலாசிரியர் முகவிசாரத்தா லகம்பாவநீங்கிச் சர்வம் பிரமமயமென்னுமனுபவம் விளைந்ததை விளக்கிமேற்றுரியானுபவத்தை விளக்கும் பொருட்டு மிருகவியாதன் கதையை நிரூபிக்கிறார்.

## அணிமாதிமுதலிய சித்திகளில்லாத சீவன்முத்தருக் கற்புதமியாதென வினவுதல்.

### வேறு.

இந்தவாறிருக்கிற்சீவன் முத்தனாயினியதான
புந்திசேரிவனுக்கேது புதுமையாமதிசயந்தா
னந்தமில்பரத்தைக்கண்டோர்க் கதிகனேயென்றுகேட்ட
சுந்தரவிராமற்கந்தத் தொன்மறைவசிட்டன் சொல்வான்.

இ - ள். இந்தவாறிருக்கில் - இவ்வண்ணமிருந்தால், சீவன்முத்தனாய் - சீவன்முத்தனாகி, இனியதான - இனிமையாயிருக்கின்ற, புந்திசேரிவனுக்கு - அறிவையுடையவிவனுக்குள்ள, புதுமையாமதிசயந்தான் - புதுமையானவியப்பானது, அந்தமில் - முடிவற்ற, பரத்தைக்கண்டோர்க்கு - பிரமத்தைத்தரிசித்தவர்களுக்கு, அதிகனே - அதீதனாகியவசிட்டமுனியே, ஏதுவென்றுகேட்ட - யாதென்றுகேட்ட, சுந்தரவிராமற்கு - அழகுள்ள விராமனுக்கு, அந்தத்தொன்மறை வசிட்டன்சொல்வான் - அப்பழமையான வேதத்தையுடைய வசிட்டமுனிசொல்லுவார்—எ-று.

இ-ள். இவ்வண்ணமிருந்தாற் சீவன்முத்தனாகி இனிமையாயிருக்கின்ற வறிவையுடைய விவனுக்குள்ள புதுமையானவியப்பானது முடிவற்றபிரமத்தைத் தரிசித்தவர்களுக்கு அதீதனாகிய வசிட்டமுனியே யாவதென்று கேட்ட அழகுள்ள விராமனுக்கு அப்பழமையான வேதத்தையுடைய வசிட்டமுனி சொல்லுவார்—எ-ம்.

## ஆத்மாநந்தத்தில் அதிசயிப்பவ னணிமாதிசித்திகளில் அதிசயிக்கானெனல்.

ஒப்பறுஞானிபுந்தி யொன்றிலேயதிசயிக்குந்
தப்பறநிறைந்துசார்ந்த னாயகன்றன்பானிற்குஞ்

செப்புமந்திரங்களோன்பு தந்திரஞ்சித்தியானோர்
கைப்படுவிண்போக்காதி கருமத்திற்புதுமையென்னே.

இ-ள். ஒப்பறுஞானிபுந்தி - சமானமில்லாத ஞானவானுடையபுத்தியானது, ஒன்றில் - ஒன்றான (ஆத்மாவி) னிடத்தில், அதிசயிக்கும் - வியப்பையடையும், தப்பறநிறைந்து - குற்றமில்லாமற் பூரணமாய், சாந்தனாய் - உபசாந்தமுடையவனாய், அவன் - அச்சீவன்முத்தன், தன்பானிற்கும் - ஆத்மாவினிடத்திருப்பான், செப்புமந்திரங்கள் - சொல்லப்பட்ட மந்திரங்களும், நோன்பு - தவங்களும், தந்திரம் - உபாயங்களும், சித்தியானோர் - சித்தித்தவர்களுக்கு, கைப்படும் - கைவசமாகின்ற, விண்போக்காதி - ஆகாயகமனமுதலிய, கருமத்திற்புதுமையென்னே - கன்மத்திலதிசயமென்ன—எ-ம்.

எ - து. சமானமில்லாத ஞானவானுடைய புத்தியானது ஒன்றான ஆத்மாவினிடத்தில் வியப்பையடையும். குற்றமில்லாமற் பூரணமா யுபசாந்தமுடையவனாய் அச்சீவன்முத்த னாத்மாவினிடத்திருப்பான். சொல்லப்பட்ட மந்திரங்களும், தவங்களும், உபாயங்களுஞ் சித்தித்தவர்களுக்குக் கைவசமாகின்ற ஆகாயகமனமுதலிய கன்மத்திலதிசயமென்ன—எ-ம்.

(இ-உ-க-ம்.) சீவபாவநீங்கிச் சிவமாவதற்கேதுவல்லாத ஆகாயகமன முதலியவை பறவைத்தொழிலுக் கொப்பென வதிசயிக்கா ரென்பதாம். (2)

சித்திமுத்தியி னிலக்கணங்கூறல்.



உலகாய்விரிந்தவிவராலு மொழுங்கால்விரிந்தவருத்தத்தாற்
பலமாமணிமாதியும்பண்ணப் படுமாதலினாற்றனையறிந்தோர்க்
கிலதாமிவர்க்கோர்விசேடமுள விழிந்தமூடப்புந்திகள்போ
லலனுகுவனெங்கனுமாசை யறலாலிவனெஞ்சமலமதாம்.

இ - ள். உலகாய்விரிந்த - சகமாகப்பரவிய, இவராலும் - இவர்களாலும், ஒழுங்கால் விரிந்த - முறைமையாகவிரிந்த, வருத்தத்தால்-பிரயாசையினாலும், பலமாம் - பயனாயிருக்கின்ற, அணிமாதியும் - அணிமாமுதலிய (அஷ்டசித்திகளும்), பண்ணப்படும் - செய்யப்படும், ஆதலினால்-ஆகையால், தனையறிந்தோர்க்கிலதாம் - ஆத்மஞானிகளுக் கிச்சித்தியில்லையாம், இவர்க்கு - இந்த ஞானிகளுக்கு, ஓர்விசேடமுள - ஒருவிசேடமுண்டாயிருக்கின்றது, இழிந்த மூடப்புந்திகள்போல் - இழிவுள்ள மூடமதிகளைப்போல, அலனுகுவன் - அல்லாதவனாவன், எங்கனும் - எவ்விடத்திலும், ஆசையறலால் - இச்சையற்றதினால், இவனெஞ்சு - இவனது மனம், அமலமதாம் - நின்மலமாகும்—எ-று.

எ - து. சகமாகப்பரவிய விவர்களாலும், முறைமையாக விரிந்த பிரயாசையினாலும் பயனுபிருக்கின்ற அணிமாமுதலிய அஷ்டசித்திகளுஞ்செய்யப்படும் ஆகையால்ஆத்மஞானிகளுக்கு இச்சித்தியில்லையாம். இந்த ஞானிகளுக்கொரு விசேடமுண்டா யிருக்கின்றது. இழிவுள்ள மூடமதிகளைப்போல வல்லாதவனுனவன், எவ்விடத்திலு மிச்சையற்றதினு லிவனதுமனம் நின்மலமாகும்—எ-ம்.

(இ-ம்) மாயாசகிதத்தாலடையும் அணிமாதிசித்திக்கு மாயாரகிதத்தால் அடையுமுத்தி மிகவும் விசேடமாமென்பதாம். (3)

## சீவன்முத்தர் இலக்கணங்கூறல்.



குறிதீர்வடிவாய்ப்பிறப்பிறப்பிற் கொடுநீள்காலமயக்கறலாற்
பிறியாவின்பத்தறிஞனுக்குப் பேசுங்குறியிவ்வளவன்றே
வெறிகூராசைசினமோகம் விதனமுலோபமாபத்து
சிறிதாநிபுணநாளுமெனச் செப்பிவசிட்டன்மீண்டுரைப்பான்.

இ - ள். குறிதீர்வடிவாய் - (வருணாச்சிரமக்) குறிகளில்லாதவுருவமாய், பிறப்பிறப்பில் - சநநமரணத்தில், நீள்காலங்கொடு - அநேககாலங்கொண்டிருந்த, மயக்கறலால் - பிரமையானது நீங்குதலினால், பிறியாவின்பத்தறிஞனுக்கு - பின்னமற்றசுகபோதனுக்கு, பேசுங்குறி - சொல்லப்பட்ட அடையாளமானது, இவ்வளவென்றே - இம்மட்டல்லவோ, வெறிகூராசை - வாசனைமிருந்த இச்சையும், சினம் - கோபமும், விதனம் - துக்கமும், உலோபம் - உலோபமும், ஆபத்து - ஆபத்துமாகிய இவைகள், - நிபுணநாளும் - நிபுணமாகத்தினங்கடோறும், சிறிதாமெனச்செப்பி - அற்பமாகத் தேய்ந்து போகுமென்று சொல்லி, வசிட்டன் மீண்டுரைப்பான் - வசிட்டமுனி திரும்பவுஞ் சொல்லுவார்—எ-று.

எ - து. வருணாச்சிரமக் குறிகளில்லாத வுருவமாய்ச் சநநமரணத்தில் அநேககாலங் கொண்டிருந்த பிரமையானது நீங்குதலினாற் பின்னமற்ற சுகபோதனுக்குச் சொல்லப்பட்ட அடையாளமானதிம்மட்டல்லவா! வாசனைமிருந்த இச்சையுங் கோபமுந் துக்கமு முலோபமு மாபத்துமாகிய இவைகள் நிபுணமாகத் தினங்கடோறு மற்பமாகத் தேய்ந்துபோகுமென்று சொல்லி வசிட்டமுனி திரும்பவுஞ் சொல்லுவார்—எ-ம்.

இ-ள். காமக்குரோதாதிய சகலகன்மங்களு மிறந்திருப்பதே யடையாளமாமென்பதாம். (4)

## சித்பிரகாசமாய் விளங்கிய சீவேஸ்வரனுக்குக் காரணமின்றெனல்.

மறையோனொருவன்றன்னுடைய மகிமைகடந்துசூத்திரனாய்
முறைதீர்வதுபோற்சீவனென முளைத்தானீசன்சிருட்டிதொறு
நிறைநீடுயிர்களளவின்றி நிகழுமூலச்சித்தசைவாற்
றுறைதோறவைதான்றோன்றிடுமாற் றொடர்காரணமிங்கிலதாகும்.

இ - ள். மறையோனொருவன் - ஒருபிராமணன், தன்னுடையமகிமை கடந்து - தனதுபெருமையைவிட்டு, சூத்திரனாய் - சூத்திரனாகி, முறைதீர் வதுபோல் - மரபுநீங்குவதுபோல, ஈசன் - ஈசனானவன், சீவனெனமுளை த்தான் - சீவனென்றுசொல்லும்படி யுண்டாயினன், சிருட்டிதொறும் - சிருஷ்டிகடோறும், நிறைநீடுயிர்கள் - நிறைந்திருக்கின்ற நீண்டபிராணிக ளானவை, அளவின்றிநிகழும் - மட்டில்லாமற் பிரகாசிக்கும், மூலச்சித்தசை வால் - காரணமான அறிவின்சலனத்தினால், துறைதோறு - வழிகடோறும், அவைதான்றோன்றிடும் - அச்சீவவீசருண்டாகும், தொடர்காரணம் - தொ டராநின்ற காரணமானது, இங்கிலதாகும் - இவ்விடத்தில்லையாம் —எ-று.

எ - து. ஒரு பிராமணன் தனது பெருமையைவிட்டுச் சூத்தி ரனாகி மரபுநீங்குவதுபோல ஈசனானவன் சீவனென்று சொல்லும்படி யுண்டாயினன், சிருஷ்டிகடோறும் நிறைந்திருக்கின்ற நீண்டப்பிரா ணிகளானவை மட்டில்லாமற் பிரகாசிக்கும் காரணமான அறிவின்ச லனத்தினால் வழிகடோறு மச்சீவவீசருண்டாகும். தொடராநின்ற காரணமான திவ்விடத்தில்லையாம்—எ-ம். (5)

## சீவர்கள்பிறத்தற்குக் காரணமுரைத்தல்.

ஈசனிடைநின் றுற்பவமா யெழுந்தவுயிர்கடானுசெய்த
வீசகருமங்களினாலே மேன்மேற்பிறவிகளைமேவுந்
தேசமுடையாய்காரியகா ரணத்தின்செய்திபீதுவாகு
மேசுபிறவிகருமமெனு மிரண்டினுக்குமிப்படியே.

இ - ள். ஈசனிடைநின்று - ஈஸ்வரனிடத்திலிருந்து, உற்பவமாய் - உ ண்டாகி, எழுந்தவுயிர்கள் - வளர்ந்தசீவர்கள், தானுசெய்த - தாங்கள்செய்த, வீசகருமங்களினால் - வீசாநின்றகன்மங்களினால், மேன்மேல் - மேலுமேலும், பிறவிகளைமேவும் - சநநங்களைப்பொருந்தும், தேசமுடையாய் - தேயத்தையு டைய ஸ்ரீராமா, காரியகாரணத்தின்செய்தி - காரியகாரணத்தி னொழுங்கு, இதுவாகும் - இதுவேயாகும், ஏசு - பழிக்கத்தக்க, பிறவிகருமமெனும் - பவ முங்கருமமு மென்கின்ற, இரண்டினுக்குமிப்படியே - இரண்டுக்கு மிந்தப்பிர காரமே—எ-று.

எ - து. ஈஸ்வரனிடத்தி லிருந்துண்டாகி வளர்ந்த சீவர்கள் தாங்கள்செய்த வீசாகின்ற கன்மங்களினால் மேலுமேலுஞ் சநநங்களைப்பொருந்தும். தேயத்தையுடைய ஸ்ரீராமா! காரியகாரணத்தினுழுங்கிதுவேயாகும். பழிக்கத்தக்கப்பவமுங் கருமமுமென்கின்ற விரண்டுக்கு மிந்தப் பிரகாரமே—எ—ம்.

(இ-உ-க ம்.) சீவர்களுதித்தற்குக் காரணமின்றாயினுஞ் செனித்துமரித்தலுக்குக்கன்மசன்மமே யொன்றுக்கொன்று காரணமாயிற் றென்பதாம்.

## அகாரணமாயுண்டான சீவர்களுக்குப் பின்வந்தகாரணங்களைக் கூறுதல்.

பரமமதனிலகாரணத்தாற் பரந்தவுயிரெல்லாமுண்டாம்
விரவுமதற்பின்பவர்கெல்லா மிகத்தாஞ்செய்தகருமங்க
ளுரியசுகதுக்கங்கடமக் குறுகாரணமாந்தனையறியாப்
பிரமைதனிற்சேர்சங்கற்பப் பேசுங்கருமங்களின்மூலம்.

இ - ள். பரமமதனில் - பிரமபதத்திலிருந்து, அகாரணத்தால் - நிஷ்காரணமாய், பரந்தவுயிரெல்லாமுண்டாம் - விரிந்தசீவர்களனைவருமுதிக்கும், விரவுமதற்பின்பு - உண்டானதன்பின்பு, அவர்க்கெல்லாம் - அவ்வுயிர்களனைவர்க்கும். மிகத்தாஞ்செய்த - மிகவுந்தாங்கள்செய்த, கருமங்கள் - கன்மங்களானவை, உரியசுகதுக்கங்கடமக்கு - உரிமையானசுக துக்கங்களுக்கு, உறுகாரணமாம் - பொருந்துகின்றகாரணமாகும், தனையறியா - ஆத்மாவையறியாத, பிரமைதனில் - மயக்கத்தில், சேர்சங்கற்பம் - உண்டானசங்கற்பமானது, பேசுங்கருமங்களின்மூலம் - சொல்லப்பட்ட கன்மங்களினதுகாரணமாகும்—எ-று.

எ - து. பிரமபதத்திலிருந்து நிஷ்காரணமாய் விரிந்த சீவர்களனைவருமுதிக்கும். உண்டானதன்பின் அவ்வுயிர்களனைவர்க்கு மிகவுந்தாங்கள்செய்த கன்மங்களானவை உரிமையான சுகதுக்கங்களுக்குப்பொருந்துகின்ற காரணமாகும், ஆத்மாவையறியாத மயக்கத்திலுண்டான சங்கற்பமானது சொல்லப்பட்ட கன்மங்களினது காரணமாகும்—எ-ம்.

(இ ம்.) பிரமப்பிரகாசமாத்திரமா யுண்டாயிருக்கின்ற சீவர்கடாஞ்செய்யுஞ் சங்கற்பத்திற் கருமமுங் கருமத்திற் சுகதுக்கங்களு முண்டாமென்பதாம்.

## சங்கற்பத்தைக் கெடுக்க வேண்டுமெனல்.

பந்தநிதானஞ்சங்கற்ப மன்றேவதுநீபற்றறுப்பாய்
முந்துசங்கற்பந்தவிர்ந்தான் முத்தியதுவாமதுதன்னைப்

புந்தியதனுற்பரிசயிப்பாய் பொருளும்பொருள்கொள்பவனுமுறின்
மைந்தமெள்ளவெப்போது மறவாதொழிப்பாய்சங்கற்பம்.

இ - ள். பந்தநிதானம் - பந்தத்துக்காதிகாரணமானது, சங்கற்பமன்றே - சங்கற்பமல்லவா, அதுநீபற்றறுப்பாய் - அதைநீபற்றில்லாமற்கெடுப்பாய், முந்துசங்கற்பந்தவிர்ந்தால் - முதன்மையான சங்கற்பமொழிந்தால், முத்தியதுவாம் - மோக்ஷமதுவேயாகும், அதுதன்னை - அச்சங்கற்ப நாசத்தை, புந்தியதனுல் - அறிவினுல், பரிசயிப்பாய் - பழக்கஞ்செய்வாய், பொருளும் - விடயமும், பொருள்கொள்பவனும் - விடயத்தைக் கிரகிப்பவனும், உறில் - வந்தால், மைந்த - குழந்தாய், மெள்ள - மெதுவாக, எப்போதும் - எக்காலமும், சங்கற்பம் - சங்கற்பத்தை, மறவாதொழிப்பாய் - மறவாமற் கெடுப்பாய்—எ-று.

எ - து. பந்தத்துக் காதிகாரணமானது சங்கற்பமல்லவா? அதை நீ பற்றில்லாமற் கெடுப்பாய். முதன்மையான சங்கற்ப மொழிந்தால் மோக்ஷமதுவேயாகும். அச்சங்கற்ப நாசத்தையறிவினுற் பழக்கஞ்செய்வாய். விடயமும் விடயத்தைக் கிரகிப்பவனும் வந்தால் குழந்தாய்! மெதுவாக எக்காலமுஞ் சங்கற்பத்தை மறவாமற்கெடுப்பாய்—எ-ம்.

(இ-ம்.) பந்தத்துக்காரணமான சங்கற்பத்தை யெப்போதுங்கெடுக்க வேண்டுமென்பதாம். (8)

## இச்சாத்யாகமே முத்தியெனக்கூறுதல்.



கொள்ளும்பொருளாகவும்வேண்டா கொள்வோன்வடிவாகவும்
வேண்டா, வெள்ளுங்கருத்தெல்லாநீக்கியெதுசேடித்ததுவாவாய்,
நள்ளும்பொருளொன்றினையிந்த நாடுபொறிகளுறிலாங்கே, தெள்-
ளும்பற்றுள்ளதுபந்தஞ் சிறக்கும்பற்றில்லதுமுத்தி.

இ - ள். கொள்ளும் - கிரகிக்கப்படுகின்ற, பொருளாகவும்வேண்டா விடயமாகவும்வேண்டாம், கொள்வோன் - கிரகிப்பவனுகிய ஞாதாவின், வடிவாகவும்வேண்டா - உருவமாகவும்வேண்டாம், எள்ளும் - நிந்திக்கின்ற, கருத்தெல்லாநீக்கி - சங்கற்பங்களனைத்தையுங்கெடுத்து, எதுசேடித்தது - எது மிஞ்சினதோ, அதுவாவாய் - அதுவேயாவாய், நள்ளும்பொருளொன்றினை - விரும்பட்டவொருவிடயார்த்தத்தை, இந்தநாடும்பொறிகளுறில் - இந்நாடாநின்ற பஞ்சேந்திரியங்களடையுமாலுல், ஆங்குதெள்ளும் பற்றுள்ளது பந்தம் - அவ்விடத்திற்றௌளாநின்ற ஆசையையுடையதே பந்தமாகும், சிறக்கும்பற்றில்லது - சிறக்காநின்றபற்றில்லாததே, முத்தி - மோக்ஷமாம்.

விவேகமாகிய சலத்தைப்பாய்ச்சி முயற்சித்து இதைக்காத்திரட்சிக்க ப்படும்—எ-ம். (27)

விடுதியாலேதழைக்குமிது விசாரத்தாலவ்விடுதிதனை
வடுவிலுழவர்நென்முளைப்போல் வருந்திவளர்க்கநாடோறு
மொடிவின்மறுபூமிக்கிந்த வொன்றேசநபூமியென
முடிவில்வெளியாமதிலிரண்டா மூன்றும்பூமிதனைப்பெறலாம்.

இ - ள். விடுதியால் - பற்றின்மையினால், இது தழைக்கும் - இந்த(முதற்பூமியானது) வளரும், விசாரத்தால் - விசாரணையினால், அவ்விடுதிதனை - அப்பற்றின்மையை, வடுவில் - களங்கமற்ற, உழவர்நென்முளைபோல் - பள்ளர்கள் தங்கள்பூமியில் நெல்முளையை (வளர்ப்பது) போல, நாடோறும் - தினந்தோறும், வருந்திவளர்க்க - வருத்தப்பட்டுவளரச்செய்ய, ஒடிவில் - கெடுதலில்லாத, மறுபூமிக்கு - அடுத்தபூமிகளுக்கு, இந்தவொன்றே - இம்(முதற்பூமியான) தொன்றுமே, சநநபூமியென - உண்டாகும் பூமியாக, முடிவில் - அந்தத்தில், வெளியாம் - வெளிப்படும், அதில் - அதினின்றும், இரண்டாம் - இரண்டாம் (பூமியாகிய விசாரணையையும்), மூன்றும்பூமிதனை - (தனுமானசியாகிய) மூன்றும் பூமியையும், பெறலாம் - அடையலாகும் —எ-று.

எ - து. பற்றின்மையினாலிந்த முதற்பூமியானது வளரும், விசாரணையினால் அப்பற்றின்மையைக்களங்கமற்ற பள்ளர்கள் தங்கள்பூமியினெல்முளையை வளர்ப்பதுபோலத் தினந்தோறும் வருத்தப்பட்டு வளரச்செய்யக் கெடுதலில்லாத அடுத்தபூமிகளுக் கிம்முதற்பூமியான தொன்றுமேயுண்டாகும், பூமியாக அந்தத்தில் வெளிப்படும், அதினின்று மிரண்டாம்பூமியாகிய விசாரணையையும் தனுமானசியாகிய மூன்றும்பூமியையு மடையலாகும்—எ-ம்.

(இ-உ-க-ம்.) சாதுசங்க நிஷ்காமபதம் வித்தாசவுண்டான சுபேச்சை யென்னு மாத்மாங்குரத்தை விவேகவிசாரமான சலத்தைப்பூரித்து முயற்சியாற் காக்கின் பற்றின்மையான தனுமானசியினாற் றழைக்குமாதலி னம் முதற்பூமியே காரணமா மென்பதாம். (28)

ஞானபூமியினிலக்கணங்கேட்ட இராமன்
மூடர்முதலியோர்க் கிம்மூன்று பூமியுண்டாதலு மிதில்
இறந்தவன் கதியுமியாதெனை வினவுதல்.

சேட்டமெனச்சொல்பற்றின்மை சேர்ந்தான்மூன்றும்பூமியதா
மீட்டுபுருடன்சங்கற்ப வெண்ணமொன்றுமில்லென்னக்

கேட்டகுமரனுரைசெய்வான் கீழாங்குலத்தோனுணர்வில்லோன்
பூட்டுதொழிலோன்பொல்லாதோன் புகன்றயோகமில்லாதோன்.

இ - ள். சேட்டமெனச்சொல் - சேட்டமென்றுசொல்லுகின்ற, பற்றின்மைசேர்ந்தால் - பற்றின்மையை யடைந்தால், மூன்றும்பூமியதாம் (அதுவே) மூன்றும்பூமியாகும், ஈட்டுபுருடன் - இதைச்சம்பாதிக்கிறபுருடன், சங்கற்பவெண்ணமொன்றும் - ஒருசங்கற்பநினைவும், இல்லென்ன - இல்லாதவனென்று (வசிட்டமுனி) சொல்ல, கேட்டகுமரனுரைசெய்வான் - கேள்வியுற்ற ஸ்ரீராமனவர்சொல்லுவார், கீழாங்குலத்தோன் - இழிவானகுலத்தையுடையவனும், உணர்வில்லோன் - அறிவில்லாதவனும், பூட்டுதொழிலோன் - பந்தத்தொழிலையுடையவனும், பொல்லாதோன் - பொல்லாதவனும், புகன்றயோகமில்லாதோன் - சொல்லப்பட்ட ஞானமில்லாதவனும்.

எ - து. சேட்டமென்றுசொல்லுகின்ற பற்றின்மையையடைந்தா லதுவேமூன்றும்பூமியாகும். இதைச்சம்பாதிக்கிற புருடன் ஒருசங்கற்பநினைவுமில்லாதவனென்று வசிட்டமுனிசொல்லக் கேள்வியுற்ற ஸ்ரீராமனவர் சொல்லுவார், இழிவான குலத்தையுடையவனு மறிவில்லாதவனுஞ் சொல்லப்பட்ட ஞானமில்லாதவனும்— எ-ம்.

அவனுக்கெங்ஙனேயுண்டா மறைந்தநன்மையிதுநிற்க
விவணமுயர்பூமியிலொன்றை யிரண்டைமூன்றும் வேறொன்றைக்
கவலுற்றடைந்தோனுயிர்மாய்ந்தாற் கலந்துமேவுங்கதியேது
தவறிற்பெரியோயுரையென்ன சான்றவசிட்டனுரைசெய்வான்.

இ - ள். அவனுக்கு - அக்குணமுள்ளவர்களுக்கு, அறைந்தநன்மை - சொல்லப்பட்ட முத்தியானது, எங்ஙனேயுண்டாம் - எப்படியுண்டாகும், இதுநிற்க - இதுவிருக்க, இவணம் - இந்தப்பிரகாரம், உயர்பூமி - மேலானஞானபூமிகளில், ஒன்றை - முதற்பூமியையாவது, இரண்டை - இரண்டாம்பூமியையாவது, மூன்றும்வேறொன்றை - மற்றமூன்றும் பூமியையாவது, கவலுற்றடைந்தோன் - வருத்தப்பட்டடைந்தவனது, உயிர்மாய்ந்தால் - சீவன்பிரிந்தால், கலந்துமேவும் - சேர்ந்தடைகின்ற, கதியேது - கதியென்ன, தவற்றிற்பெரியோய் - குற்றமற்றமகானே, உரையென்ன - சொல்லுமென்று கேட்க, சான்ற - அறிஞரிய, வசிட்டனுரைசெய்வான் - வசிட்டமுனி சொல்லுவார்— எ-று.

எ - து. அக்குணமுள்ளவர்களுக்குச் சொல்லப்பட்ட முத்தியான தெப்படியுண்டாகும். இதுவிருக்க இந்தபிரகாரம் மேலான

ஞானபூமிகளில் முதற்பூமியையாவது இரண்டாம் பூமியையாவது மற்றமூன்றும்பூமியையாவது வருத்தப்பட்டடைந்தவனது சீவன்பிரிந்தாற்சேர்ந்தடைகின்ற கதியென்ன? குற்றமற்ற மகானே சொல்லுமென்றுகேட்க, அறிஞனாகிய வசிட்டமுனி சொல்லுவார் —எ-ம்.

(இ-உ-க-ம்.) இராமன்வினாவுக்கு உத்தரஞ்சொல்லத் தொடங்கினதாம்.

## முதல்வினாவினுக் கிரண்டுவிதமாக உத்தரங்கூறல்.

மூடனாகிப்பலகுற்ற மூடுமவனுக்கநேகமென
நீடுபிறப்பாமுதற்பூமி நேருமட்டும்பிறப்பகலா
நாடுமிதுவன்றிபிற்காக தாலீயம்போனல்லநெறி
கூடுமெனினுமதனாலே குறைவினிராசையதுபிறக்கும்.

இ - ள். மூடனாகி - மூடனாய், பலகுற்றம் - அநேகம்பிழைகள், மூடுமவனுக்கு - சூழுகின்ற அவனுக்கு, அநேகமென - பலவிதமாகச் சொல்லப்பட்ட, நீடுபிறப்பாம் - அநேகசநநமுண்டாகும், முதற்பூமி - முதன்மையான பூமியானது, நேருமட்டும் - கிடைக்கின்றபரியந்தம், பிறப்பகலா - சநநநீங்காது, நாடுமிதுவன்றியில் - தேடுகின்ற இதுவல்லாமல், காகதாலீயம்போல்-காகதாலிய ஞாயத்தைப்போல, நல்லநெறிகூடுமெனினும் — சன்மார்க்கங்கூடினாலும், அதனால் - அதனால், குறைவினிராசையது - குறைவில்லாத நிராசையானது, பிறக்கும் - உண்டாகும்—எ-று.

எ - து. மூடனாயநேகம்பிழைகள் சூழுகின்றவனுக்குப் பலவிதமாகச் சொல்லப்பட்ட அநேகசநநமுண்டாகும், முதன்மையான பூமியானது கிடைக்கின்றபரியந்தஞ் சநநநீங்காது, தேடுகின்றவிதுவல்லாமற் காகதாலிய ஞாயத்தைப்போலச் சன்மார்க்கங் கூடினாலு மதனாற் குறைவில்லாத நிராசையானதுண்டாகும்—எ-ம். (31)

இதுவுமது.

அன்றிநல்லோர்கூட்டரவா லடுத்தவிகாரமதுபிறக்கு
மொன்றுநிராசையுறுபோதே யோகபூமியுறற்றப்பா
தன்றுமதனாற்பிறப்பகலுந் தொகுநூற்பொருளின்சுருக்கமிதா
நின்றயோகபூமியுட னிதனமடைந்தோர்நெறிகேளாய்.

இ - ள். அன்றி - அல்லாமல், நல்லோர் கூட்டரவால் - சாதுக்கள் சங்கத்தினால், அடுத்தவிராகமது - மதுசேர்ந்தநிராசையானது, பிறக்கும் - உண்

டாகும், ஒன்றுநிராசை - பொருந்தாநின்ற நிராசையானது, உறுபோதே - அடைந்தபொழுதே, யோகபூமி-ஞானபூமியானது, உறல்தப்பா - அடைதல் தப்பாது, துன்றுமதனால் - நிறைந்தவந்த (ஞானபூமியி)னால்," பிறப்பகலும்-சநநநீங்கும், தொகுநூற்பொருளின்-தொகுத்தசாஸ்திரார்த்தத்தின், சுருக்கமிதாம்-முடிவிதுவாகும், நின்றயோகபூமியுடன் - இவனிருந்தஞானபூமியோடும், நிதனமடைந்தோர் - மாணமடைந்தவர்களின், நெறிகேளாய் - மார்க்கத்தைக்கேட்பாய்—எ-று.

எ - து. அல்லாமற் சாதுக்கள் சங்கத்தினாற்சேர்ந்த நிராசையானது துண்டாகும், பொருந்தாநின்ற நிராசையான தடைந்தபொழுதே ஞானபூமியான தடைதல் தப்பாது, நிறைந்த வந்த ஞானபூமியினாற் சநநநீங்கும், தொகுத்த சாஸ்திரார்த்தத்தின் முடிவிதுவாகும் இவனிருந்த ஞானபூமியோடு மரணமடைந்தவர்களின் மார்க்கத்தைக்கேட்பாய்—எ-ம்.

(இ-உ-க-ம்.) முதற்பூமிகிடையாதமூடனுக்குப்பவநீங்காதென்றும்அவனுக்குத்தெய்வீகமாய்ச்சத்கிருத்தியமுண்டாய்அதனால் நிராசையுண்டாய் அதனாற் சாதுசங்கமுண்டாய் அதனால் விராகம்பெறின்அதனா லிப்பூமி தவறாமல் வரும் அதனாற் பவநீங்குமென்பது சாஸ்திரார்த்த சங்கிரகமென்றுந் தெரிவித்ததாம்.

## இரண்டாம்வினாவுக்கு உத்தரங்கூறல்.

யோகபூமியம்சம்விடா துறலாற்பழயதீவினைபோ
மாகவிமானமதற்பின்பு வந்துகொடுபோய்வானவர்வாழ்
நாகமுதலாமுயர்பதியி னன்மேருவின்சூழ்பொழின்முழையி
போகமடவாரொடுங்கூடிப் புணர்ந்துசிந்தைகளிகூர்வன்.

இ -ள். யோகபூமி - ஞானபூமி (மூன்றின்), அம்சம்விடாதுறலால் - அம்மிசம்விடாமலடைதலினால், பழயதீவினைபோம் - முன்னுள்ள தீவினைகெடும், அதற்பின்பு - அதன்பின்பு, மாகவிமானம்வந்து - தெய்வவிமானத்தைக்கொண்டுவந்து, கொடுபோய் - (இவனைக்) கொண்டுபோய், வானவர்வாழ் - தேவர்கள்வாழாநின்ற, நாகமுதலாம் - தெய்வலோகமுதலாகிய, உயர்பதியின் - மேலான இடங்களிலும், நன்மேருவின்சூழ் பொழின்முழையில் - நல்லமேருவிலுஞ் சூழ்ந்தசோலைகளிலுங் குகைகளிலும், போகமடவாரொடும் - போகமாதர்களுடன், கூடிப்புணர்ந்து சிந்தைகளிகூர்வன் - சேர்ந்து மனங்களிப்பன்—எ று.

எ - து. ஞானபூமி மூன்றினம்சம் விடாமலடைதலினால் முன்னுள்ள தீவினைகெடும். அதன்பின்பு தெய்வ விமானத்தைக்கொண்டு

போய் தேவர்கள் வாழாநின்ற தெய்வலோக முதலாகிய மேலானவி டங்களிலும் நல்லமேருவிலுஞ் சூழ்ந்த சோலைகளிலுங் குகைகளிலும் போகமாதர்களுடன் சேர்ந்து மனங்களிப்பன்—எ-ம்.

அருந்துபோகமாய்தலினு லளவில்பண்டையிருவினையும்
பொருந்தமாயுமப்போது புவியிற்பிறப்பர்யோகிகளாய்
திருந்துசெல்வங்குணஞ்சுத்தஞ் சிறந்தநல்லோர்மனைப்பிறந்து
வருந்திமுன்னம்பழகுதலால் வழுவாயோகநெறிநிற்பர்.

இ - ள். அருந்துபோகமாய்தலினுல்-புசிக்கப்பட்ட போகநசிப்பதினுல், அளவில் - அளவில்லாத, பண்டையிருவினையும் - பழயவிரண்டு வினைகளும், பொருந்தமாயும் - ஒருங்கேகெடும், அப்போது - அப்பொழுதே, யோகிகளா ய் - ஞானிகளாய், புவியிற்பிறப்பர் - பூமியிற்செனிப்பார்கள், திருந்துசெல்வ ம் - திருத்தமானசம்பத்தும், குணம் - சற்குணமும், சுத்தம் - பரிசுத்தமும், சிறந்த - சிறப்புற்றிருக்கின்ற, நல்லோர் - சத்துக்களினது, மனைப்பிறந்து-வீட் டிற்செனித்து, முன்னம்வருந்தி - முன்பு வருத்தப்பட்டு, பழகுதலால் - அற் பியாசஞ்செய்தலினுல், வழுவாயோக நெறிநிற்பர் - தவருமல் ஞானமார்க்கத் திலிருப்பார்—எ-று.

எ - து. புசிக்கப்பட்ட போகநசிப்பதினுல்அளவில்லாதபழயவி ரண்டுவினைகளு மொருங்கேகெடும். அப்பொழுதே ஞானிகளாய்ப் பூமியிற்செனிப்பார்கள், திருத்தமான சம்பத்தும் சற்குணமும் பரி சுத்தமும் சிறப்புற்றிருக்கின்ற சத்துக்களினது வீட்டிற்செனித்துமு ன்பு வருத்தப்பட்டு அற்பியாசஞ் செய்தலினுற் றவருமல் ஞானமார் க்கத்திலிருப்பார்—எ-ம்.

(இ-உ-க-ம்.) முன் மூன்றுபூமியின் அபபியாசத்தினுள் ளெங்ஙனமரித்தா ன் மீளவுமுதித்தவ் விட்டகுறையால் அங்ஙனநின்றப்பியாசித்து முத்தியைய டைவ னென்பதாம். (34)

ஞானபூமி யேழையும் அஞ்சவத்தை யாகச் சொல்லத்
தொடங்கி இம்மூன்றுபூமி அப்பியாசத்திற் சகஞ்
சாமானியமாகத் தோற்றுமாதலாற் சாக்கிரா
வத்தை யெனவும் அஃதை யடைந்தவன்
இலக்கணமுங் கூறுதல்.

விதமாஞ்சகத்தைச் சாக்கிரத்தின் மிகப்போதந்நீர்புந்தியினுற்
பொதுவாய்நோக்குமதனுலிப் பூமிமூன்றுஞ்சாக்கிரமா
மதுவேதனிக்கேவலமியோகிக் காரியப்பேர்பெறுந்திறமா
மிதனுலிவனேயுய்ந்தவனென் றேத்தத்தோன்றுமறிவிலர்க்கும்.

இ - ள். விதமாஞ்சகத்தை - நாநாவிதமாயுள்ளஉலகத்தை, சாக்கிரத்தில் - நனவில், மிகப்போதந்தீர் - மிகவுமறிவில்லாத, புந்தியினுல் - புத்தியினுல், பொதுவாய்நோக்குமதனுல் - சாதாரணமாகப் பார்க்கின்றவதனுல், இப்பூமிமூன்றும் - இந்தமூன்றுபூமியும், சாக்கிரமாம் - நனவேயாகும், அதுவே - அந்தப்பூமியே, தனிக்கேவலம் - தனித்தகேவலமாகிய, யோகிக்கு - ஞானிக்கு, ஆரியப்பேர்பெறும் - ஆசாரியனென்னு நாமமுண்டாகும், திறமாமிதனுல் - காரணமானவிந்த (ஆசாரியநாமத்தி)னுல், இவனுய்ந்தவனென்று—இவன்மோக்ஷமடைந்தவனென்று, அறிவிலர்க்கும் - அஞ்ஞானிகளுக்கும், ஏத்தத்தோன்றும் - (மோக்ஷவிச்சையுண்டாகித்) தோத்திரஞ்செய்யத்தோற்றும்—எ-று.

எ - து. நாநாவிதமாயுள்ள வுலகத்தை நனவில் மிகவுமறிவில்லாத புத்தியினுற் சாதாரணமாகப் பார்க்கின்றவதனு லிந்தமூன்றுபூமியும் நனவேயாகும் அந்தப்பூமியே தனித்த கேவலமாகிய ஞானிக்கு ஆசாரியனென்னு நாமமுண்டாகும். காரணமான இந்தவாசாரிய நாமத்தினு லிவன் மோக்ஷமடைந்தவனென் றஞ்ஞானிகளும்மோக்ஷவிச்சையுண்டாகித் தோத்திரஞ்செய்யத் தோற்றும்—எ-ம். ()

செயலினுரியமிகச்செய்வோன் செய்யத்தகாத செய்யாதோ
னியல்பினெழுக்கந்தனினிற்போ னியாவனவனேயாரியனு
முயலுமொழுக்கநூற்சித்தமுந்துநிலைமைவிகாரம்
புயலினிறத்தோயுள்ளபடி பொருந்துமவனேயாரியனும்.

இ - ள். செயலினுரிய - செய்வதற்குரித்தான (தொழிலை), மிகச்செய்வோன் - மிகவுஞ்செய்பவன், செய்யத்தகாத - செய்யத்தகாத (காரியங்களை), செய்யாதோன் - செய்யாதவன், இயல்பினெழுக்கந்தனில் - இயல்பினையுடையமார்க்கத்தில், நிற்போனியாவன் - இருப்பவனெவனே, அவனேயாரியனும் - அவனேயுயர்ந்தோனுகும், முயலுமொழுக்கம் - முயற்சிக்கின்றவாசாரத்திலும், நூற்சித்தம் - சாஸ்திரவப்பியாசத்திலும். முந்து - முதன்மையான, நிலைமைவிகாரம் - நிச்சயவிவகாரத்திலும், புயலினிறத்தோய்-மேகவண்ணனுன ஸ்ரீராமா, உள்ளபடி - உள்ளபிரகாரம், பொருந்துமவனேயாரியனும்- அமையுமவனேயுயர்ந்தவனுகும் - எ-று.

எ- து. செய்வதற்குரித்தான தொழிலை மிகவுஞ்செய்பவன், செய்யத்தகாத காரியங்களைச் செய்யாதவன் இயல்பினையுடைய மார்க்கத்திலிருப்பவனெவனே அவனே யுயர்ந்தோனுகும், முயற்சிக்கின்ற ஆசாரத்திலுஞ் சாஸ்திரவப்பியாசத்திலு முதன்மையான நிச்சயவிவகாரத்திலு மேகவண்ணனுன ஸ்ரீராமா, உள்ளபிரகார மமையுமவனே யுயர்ந்தவனுகும்— எ-ம்.

———

## மூன்றுபூமியிலுதிக்கும் பயனைக்கூறுதல்.

முதலாமியோகபூமியிலே முளைக்குமிரண்டாவதின்மலருந்
தழையுமூன்றாவதிற்பலிக்குந் தனியாரியனுந்திறமியோகி
யிதனிலிறந்தானெடுங்கால மிருந்துசுத்தசங்கற்பத்
துதவுபோகங்களையருந்தி யோகியாய்மீண்டுற்பவிப்பான்.

இ - ள். முதலாமியோகபூமியில் - முதலானஞானபூமியில், முளைக்கும் - உண்டாகும், இரண்டாவதின்மலரும் - இரண்டாம்பூமியில் விகசிதமாகும், தழையுமூன்றாவதில் - நெருங்கிய மூன்றாம்பூமியில், தனியாரியனும் - ஒப்பற்றவாசிரியனுன, திறம்பலிக்கும் - தன்மைபலிக்கும், இயோகி - ஞானியானவன், இதனிலிறந்தால் - இந்த (பூமிகளினிற்கும்போதின்) மரித்தால், நெடுங்காலமிருந்து - அநேககாலஞ் (சுவர்க்கத்தி) லிருந்து, சுத்தசங்கற்பத்து - சுத்தசங்கற்பத்தினால், உதவுபோகங்களையருந்தி - கொடாநின்ற போகங்களைப்புசித்து, யோகியாய் மீண்டுற்பவிப்பன் - ஞானியாய்த்திரும்பச்செனிப்பன்—எ-று.

எ - து. முதலான ஞானபூமியிலுண்டாகும், இரண்டாம் பூமியில் விகசிதமாகும், நெருங்கிய மூன்றாம்பூமியிலொப்பற்ற ஆசிரியனுன தன்மைபலிக்கும். ஞானியானவ னிந்தப் பூமிகளினிற்கும்போதின்மரித்தால் அநேககாலஞ் சுவர்க்கத்திலிருந்து சுத்தசங்கற்பத்தினாற் கொடாநின்ற போகங்களைப்புசித்து ஞானியாய்த்திரும்பச் செனிப்பான்—எ-ம். (37)

## மூன்று பூமியினப்பியாசத்தால் அஞ்ஞானநீங்கி ஞானமுதிக்குமெனல்.

மூன்றுபூமிப்பரிசயத்தான் மூடத்தன்மையிறந்தழியே
யான்றஞானேதயமுண்டா யாதியந்தமறவிரிந்து
பூன்றமதியினுதயம்போற் பொலியுமனத்திற்போதமுற
வூன்றுயோகத்துடன்சேர்ந்த வுள்ளமுடைய யோகிக்கே.

இ — ள். மூன்றுபூமிப்பரிசயத்தால் - மூன்றுபூமியினப்பியாசத்தினால், மூடத்தன்மையிறந்தழி - அறிவின்மையானதிறந்தமாத்திரத்தில், ஆன்றஞானேதயமுண்டாய் - மாக்ஷிமையானஞானமுதித்து, ஆதியந்தமறவிரிந்து - ஆதியந்தமில்லாமல் வியாபகமாய், பூன்றமதியினுதயம்போல் - பூரணசந்திரோதயம்போல, மனத்தில் - மனதில், போதமுற - ஞானமடைய, ஊன்றுயோகத்துடன் - திரமாகியஞானத்தோடும், சேர்ந்தஉள்ளமுடைய - சேர்ந்தமனதையுடைய, யோகிக்கு - ஞானிகளுக்கு, பொலியும் - விளங்கும்—எ-று.

எ - து. மூன்றுபூமியினப்பியாசத்தினலறிவின்மையான திறந்தமாத்திரத்தில் மாக்ஷிமையான ஞானமுதித்து ஆதியந்தமில்லாம

ல்வியாபகமாய்ப் பூர்ணசந்திரோதயம்போல மனதில் ஞானமடையத் திரமாகிய ஞானத்தோடுஞ் சேர்ந்தமனதையுடைய ஞானிகளுக்கு விளங்கும்—எ-ம்.

(இ ச க-ம்.) இம்மூன்றுபூமியினவத்தையும் அதையடைந்தவன்றிறமும் அதனால் ஞானமுதிப்பதுங் கூறியதாம். (38)

## நான்காவதான சத்துவாபத்தில் சொற்பனவவத்தை யெனல்.

சமமதாகச்சொற்பனம்போற் சகத்திலனைத்தும்நோக்கிடுவ
ரமரநாலாம்பூமிதனை யடைந்தோர்முதற்பூமிகண்மூன்றுங்
குமரனேசாக்கிரமாகுங் கூறுநாலாவதுகனவாம்
விமலசித்தஞ்சாற்கால மேகசாலம்போலிறக்கும்.

இ - ள். நாலாம்பூமிதனை - நான்காவதுபூமியை, அடைந்தோர் - அடைந்தவர்கள், சமமாக — சமதத்துவமாக, சொற்பனம்போல் - கனவைப் போல, சகத்திலனைத்தும் - உலகத்தின்கண் சகலத்தையும், அமரநோக்கிடுவர் - அமரப்பார்ப்பார்கள், முதற்பூமிகண்மூன்றும் - முதன்மையான மூன்று பூமிகளும், குமரனே - ஸ்ரீராமா, சாக்கிரமாகும் - சாக்கிரவவத்தையாகும், கூறுநாலாவதுகனவாம் - சொல்லப்பட்ட நான்காம் பூமியானது சொற்பனவவத்தையாகும், விமலசித்தம் - நின்மலமானது, சாற்காலம் - சாற்காலத்திலுண்டான, மேகசாலம்போல் - முகிற்கூட்டங்களைப்போல, இறக்கும்- நசிக்கும்—எ-று.

க - து. நான்காவது பூமியையடைந்தவர்கள் சமத்துவமாகக் கனவைப்போல உலகத்தின்கண்சகலத்தையும் அமரப்பார்ப்பார்கள், முதன்மையான மூன்றுபூமிகளும் ஸ்ரீராமா சாக்கிரவவத்தையாகும், சொல்லப்பட்ட நான்காம்பூமியானதுசொற்பனவவத்தையாகும்,நின் மலமனமானது சாற்காலத்திலுண்டான முகிற்கூட்டங்களைப்போல நசிக்கும்—எ-ம்.

(இ-ம்.) முன்மூன்றுபூமியின் அப்பியாசத்தினால் ஞானமுதயமாய் அதனால் சகஞ்சொற்பனம் போலத்தோற்றுதலின் இனிப் பூமிசொற்பன வவத்தை யென்பதாம். (39)

## ஐந்தாவதான அம்சத்தில் சுழுத்தியவத்தையெனல்.



சிறக்குஞ்சற்பாவந்தானே சேடமாகநின்றிடுவர்
பறக்குஞ்சித்தமிறத்தலினாற் படர்ந்தவிகற்பமெலாந்தோன்று

உறக்குஞ்சுழுத்திப்பதமென்ன வுரைக்குமைந்தாம்பூமியிற்போய்
நிறக்கும்விசேடமனைத்துமற நிற்பனொன்றாநிலைமட்டில்.

இ - ள். சிறக்குஞ்சற்பாவந்தான் - விசேடமானசற்பாவமே, சேடமாக நின்றிடுவர் - மிஞ்சினதென்றிருப்பார்கள், பறக்குஞ்சித்தம் - வேகமுள்ள மனமானது, இறத்தலினால் - மரித்ததினால், படர்ந்தவிகற்பமெலாந்தோன்றா - விரிந்தவிகற்பங்களனைத்துமுண்டாகாது, உறக்கும் - நித்திரைசெய்யும், சுழுத்திப்பதமென்ன - சுழுத்தியவத்தையென்று உரைக்கும் - சொல்லப்பட்ட, ஐந்தாம் பூமியிற்போய் - ஐந்தாம் பூமியிற்சென்று (நிற்கும் குணமான), விசேடமனைத்துமற - விசேடங்களெல்லாங்கெடும்படி, ஒன்றாநிலைமட்டில் - அத்துவிதநிச்சயமாத்திரத்தில், நிற்பன் இருப்பன் — எ-று.

எ - று. விசேடமான சற்பாவமே மிஞ்சினதென்றிருப்பார்கள், வேகமுள்ளமனமானது மரித்ததினால் விரிந்தவிகற்பங்களனைத்துமுண்டாகாது, நித்திரைசெய்யுஞ் சுழுத்தியவத்தையென்றுசொல்லப்பட்ட ஐந்தாம்பூமியிற்சென்று நிற்கும் குணமான விசேடங்களெல்லாங் கெடும்படியத்துவித நிச்சயமாத்திரத்தி லிருப்பன்—எ-ம்.

இதுவுமது.

இருமையென்னுமிருள்போயுள் ளெரியாநின்றபேருணர்வோ
னருமையானசுழுத்திநிலை யாகிநிற்பனனவரதம்
பொருவிலுண்ணோக்குடனிற்பன் புறத்திற்றொழிலிற்புரிந்தேயு
மொருமையுபசாந்தத்தாலே யுறக்கமிருத்தோன்போற்றெரிவன்.

இ - ள். இருமையென்னுமிருள்போய் - துவிதமென்கின்ற அந்தகாரமானதுநீங்கி, உள்ளெரியாநின்ற - உள்ளத்தின்கண் பிரகாசிக்கின்ற, பேருணர்வோன் - பூரணஞானமுடையவன், அருமையானசுழுத்திநிலையாகி - அருமையாகிய சுழுத்திநிலையையுடையவனாய், அனவரதநிற்பன் - எப்பொழுதுமிருப்பன், பொருவில் - ஒப்பில்லாத, உண்ணோக்குடனிற்பன் - அந்தர்முகத்திலிருப்பன், புறத்தில் - சுற்றுமுகத்தில், தொழிலிற்புரிந்தேயும் - கிரிகைகளைச் செய்தாலும், ஒருமையுபசாந்தத்தால் - ஏகமானவுபசாந்தத்தினால், உறக்கமிருத்தோன்போல் - நித்திரையகிரித்தவனைப்போல, தெரிவன் காணப்படுவன் — எ-று.

எ - று. துவிதமென்கின்ற அந்தகாரமானது நீங்கி யுள்ளத்தின்கண் பிரகாசிக்கின்ற பூரணஞானமுடையவன் அருமையாகிய சுழுத்திநிலையையுடையவனா யெப்பொழுதுமிருப்பன், ஒப்பில்லாத அந்தர்முகத்திலிருப்பன், சுற்றுமுகத்திற் கிரிகைகளைச்செய்தாலும்

ஏகமான வுபசாந்தனு னித்திரை யதிகரித்தவனைப்போலக் காணப் படுவன்—எ-ம்.

(இ-உ-க ம்.) முன்பூமியிலுதித்த ஞானத்தினால் மனோநாசமாய்ச் சுழுத்தியவத்தையைப்போலச் சுகமாகச் சகந்தோற்றுதலிற் சுழுத்தியவத்தை யென்பதாம். (41)

## ஆறும்பூமியான பதார்த்தாபாவனை துரியாவத்தையெனல்.



அழுந்துதுரியமெனுநாமத் தாறும்பூமியடைந்தொழுங்கி
னெழுந்தபலவாதனையிலனு யிப்பூமியிலேபரிசயிப்ப
னுழைந்துநானென்பதுமென்று ததுவுமுளதுமில்லாதுங்
கழிந்துவெறிதேநினைவிலனுய் காணுனிருமையொருமைகளை.

இ-ள். அழுந்துதுரியமெனும் - அழுத்தமானதுரியமென்கின்ற, நாமத்து - பெயருரையுடைய, ஆறும்பூமி - ஆறுவதுபூமியை, ஒழுங்கினடைந்து - கிரமமாகச்சேர்ந்து, எழுந்த - உண்டாகிய, பலவாதனையிலனுய் - நாநாவிதவாசனை யில்லாதவனுய், இப்பூமியில் - இவ்வாறும்பூமியில், பரிசயிப்பன் - அப்பியாசஞ்செய்வன், நுழைந்து - புகுந்து, நானென்பதும் - யானென்பதும், என்றுததுவும் - நானென்பதல்லாததும், உளதுமில்லாததும் - உள்ளதுமில்லாததுமாகிய விவைகள், கழிந்து - நீங்கி, வெறிது - கேவலமாய், நினைவிலனுய் - மனமில்லாதவனுய், இருமையொருமைகளை - பேதாபேதங்களை, காணுன் - பாரான்—எ-று.

எ-து. அழுத்தமான துரியமென்கின்ற பெயருரையுடைய ஆறுவதுபூமியைக் கிரமமாகச்சேர்ந்து உண்டாகிய நாநாவிதவாசனையில்லாதவனு யிவ்வாறும்பூமியில் அப்பியாசஞ்செய்வன், புகுந்து யானென்பதும் நானென்பதல்லாததும் உள்ளதும் இல்லாததுமாகிய இவைகணீங்கிக் கேவலமாய் மனமில்லாதவனுய்ப் பேதாபேதங்களைப்பாரான்—எ-ம். (42)

இதுவுமது.

செறியுமுடிச்சுமையமும்போய்ச் சீவன்முத்தசுபாவத்தால்
வெறிதுவீடன்றியும்விடு விளைந்தோவியத்தின்விளக்கொப்பான்
பிறிவில்விண்ணில்வெறுங்குடம்போற் பிறிதுபுறனுட்சூனியமா
யெறியுங்கடலினிறைகடம்போலெங் தம்புறனுண்ணிறைந்திருப்பன்.

இ-ள். செறியுமுடிச்சும் - நெருங்கிய அகங்காரகிரந்தியும், ஐயமும்போய் - சந்தேகமுநீங்கி, சீவன்முத்தசுபாவத்தால் - சீவன்முத்தத்தன்மையினால்

வெறிதுவீடன்றியும் - கேவலமானநிருவாணமல்லாதவனும், வீடுவிளைந்தும் நிருவாணமுண்டானவனுமாய், ஓவியத்தின்விளக்கொப்பான் - சித்திரதீபத்துக்குச் சமானமானவன், பிரிவில்விண்ணில் - நீங்காதவாகாயத்தில், வெறுங்குடம்போல் - சூனியகடத்தைப்போல, பிறிது - வேறாகிய(பிரபஞ்சசிருட்டியானது), புறனுட்சூனியமாய் - வாகியாந்தரங்களிலின்றி, எறியுங்கடலில்-அலைகள்வீசாநின்ற சமுத்திரத்தில், நிறைகுடம்போல் - நிறைந்தகடத்தைப்போல, எங்கும் - எவ்விடமு (மானபிரமதிருஷ்டியால்), புறனுண்ணிறைந்திருப்பன் - வாகியாந்தரங்களிற் பூரணனாயிருப்பான்—எ-று.

எ — து. நெருங்கிய அகங்காரகிரந்தியுஞ் சந்தேகமுநீங்கி சீவன்முத்தத்தன்மையினாற் கேவலமான நிருவாணமல்லாதவனும் நிருவாணமுண்டானவனுமாய்ச் சித்திரதீபத்துக்குச்சமானமானவன் நீங்காத ஆகாயத்திற் சூனியகடத்தைப்போல வேறாகிய பிரபஞ்சசிருட்டியானது வாகியாந்தரங்களிலின்றி அலைகள் வீசாநின்ற சமுத்திரத்தில் நிறைந்த கடத்தைப்போல எவ்விடமுமான பிரமதிருஷ்டியால் வாகியாந்தரங்களிற் பூரணனாயிருப்பான்—எ-ம்.

(இ-உ-க-ம்.) முன்னைந்தாம் பூமியிலுண்டான சுகத்தைவிளக்கும்விளக்கமாகச் சுகந்தோற்றுதலிற் றுரியவவத்தை யென்பதாம். (43)

## ஏழாவதானதுரியமே துரியாதீத அவத்தையெனல்.

இவனேயுளதாய்ச்சிறிதாங்கே யிவனேசிறிதுமிலனாவன்
றவறுவாறாம்பூமியிலே தனிநின்றேழாம்பூமிதனை
யவனேயடைவனுடலின்றி யடையுமுத்தியதுவாகுங்
கவர்சாந்தமமேமொழிக்கெட்டாக் கனபூமிகளினெல்லையிதாம்.

இ - ள். இவனே - இப்புருடனே, சிறிதுளதாய் - கொஞ்சமுள்ளவனாய், ஆங்கு - அவ்விடத்தில், இவனேசிறிதுமிலனாவன் - இவனேகொஞ்சமுமில்லாதவனாவான், தவறுவாறாம்பூமியில் - குறையாத ஆறாவது பூமியில், தனிநின்று - தனிமையாயிருந்து, ஏழாம்பூமிதனை - ஏழாவதுபூமியை, அவனேயடைவன் - அந்தச்சீவன்முத்தனே யடைவான், உடலின்றியடையுமுத்தி - அடைகின்ற விதேகமுத்தியும், அதுவாகும் - அந்தவேழாம் பூமியேயாகும், கவர்சாந்தம் - நிரங்கின்றசாந்தமும், மொழிக்கெட்டா - வசனத்துக் கெட்டாததுமாகிய, கனபூமிகளின் - மேன்மையானஞானபூமிகளின், எல்லையிதாம் - அளவிதுவாகும்—எ-று.

எ - து. இப்புருடனே கொஞ்சமுள்ளவனாயவ்விடத்திலிவனே கொஞ்சமுமில்லாதவனாவான். குறையாதவாறாவது பூமியிற்றனிமை

யாயிருந்து ஏழாவது பூமியையடைந்தச் சீவன் முத்தனே யடைவான் அடைகின்ற விதேகமுத்தியு மந்த ஏழாம்பூமியேயாகும். கிரகிக்கின்ற சாந்தமும் வசனைத்துக்கெட்டாததுமாகிய மேன்மையான ஞான பூமிகளினளவிதுவாகும்.

(இ-ம்.) மூன்பூமியிற் சுகபோதமாய் விளங்குமதீதமே துரியாதீதமாதலால் அதுவேதுரியாதீத அவத்தை யென்பதாம். (44)

## துரியாதீத விலாசத்தைக் கூறுதல்.

குலவுமுடற்றீர்முத்தியெனக் கூறுமேழாம்பூமிதனைச்
சிலர்நற்சிவமென்றுரைசெய்வர் சிலர்சூனியமென்றுரைசெய்வ
ரிலகுபொருளென்றுரைப்பர்சில ரியைந்தகாலமென்பர்சிலர்
விலகுபகுதியென்பர்சிலர் வெவ்வேறாகவிசாரித்து.

இ - ள். குலவும் - பொருந்திய, உடற்றீர்முத்தியென - விதேகமுத்தியென்று, கூறுமேழாம்பூமிதனை - சொல்லப்பட்ட ஏழாவதுபூமியை, விசாரித்து - விசாரணைசெய்து, வெவ்வேறாய் - வேறுவேறாகப்பிரித்து, சிலர் சிலமதஸ்தர்கள், நற்சிவமென்றுரைசெய்வர் - பரமசிவமென்றுசொல்லுவார்கள், சிலர் - சிலமதஸ்தர்கள், சூனியமென்றுரைசெய்வர் - சூனியமென்றுசொல்லுவார்கள், சிலர் - சிலமதஸ்தர்கள், இலகுபொருளென்றுரைப்பர் - விளங்காநின்ற விஞ்ஞானமென்றுசொல்லுவார்கள். சிலர்-சிலமதஸ்தர்கள், இயைந்தகாலமென்பர் - பொருந்தியகாலமென்று சொல்லுவார்கள், சிலர் - சிலமதஸ்தர்கள், விலகுபகுதியென்பர் - நீங்குகின்றபிரகிருதியென்று சொல்லுவார்கள்—எ-று.

எ - து. பொருந்திய விதேகமுத்தியென்று சொல்லப் பட்ட ஏழாவது பூமியை விசாரணைசெய்து வேறுவேறாகப்பிரித்துச் சிலமதஸ்தர்கள் பரமசிவமென்று சொல்லுவார்கள், சிலமதஸ்தர்கள் சூனியமென்று சொல்லுவார்கள், சில மதஸ்தர்கள்விளங்காநின்ற விஞ்ஞானமென்று சொல்லுவார்கள்; சிலமதஸ்தர்கள்பொருந்திய காலமென்றுசொல்லுவார்கள், சிலமதஸ்தர்கள் நீங்குகின்ற பிரகிருதியென்று சொல்லுவார்கள்—எ-ம்.

(இ-ம்.) துரியாதீதமான விதேகமுத்தியே சிவன்முதலான நாமங்களாகச்சிலர் பகுத்துரைக்கின்றார்களென்பதாம். (45)

## இப்பூமிகளினப்பியாசிகளி னிலக்கணங்கூறல்.

அரியலோரான்மவிகற்பந்தோ ரவதானந்தீர்பேதத்தோ
ரியல்பாவிதுவென்றறிவிக்க வெட்டாவிதனைமிகவருந்தி

முயல்வாராகியறிவிப்பர் மொழிந்தபூமியிவையேழு
மயறீர்நிலேயாற்பரிசயிக்கில் வருத்தஞ் சிறிதும்வாராதே.

இ - ள். அயலோர் - பிறர்கள், ஆன்மகவிகற்பத்து - தமதுவிகற்பத்தினுல், ஓரவதானந்தீர் - ஒருறுதியில்லாத, பேதத்து - வேற்றுமையினுல், ஓரியல்பால் - ஒருதன்மையினுல், இதுவென்றறிவிக்க - இதுவென்றறிவிப்பதற்கு-எட்டாவிதனே - அகோசரமான இந்தவிதேகபூமியை, மிகவருந்தி - மிகவும் வருத்தப்பட்டு, முயல்வாராகி - முயற்சியையுடையவர்களாய், அறிவிப்பர் - தெரிவிப்பார்கள், மொழிந்த - சொல்லப்பட்ட, பூமியிவையேழும் - இந்தஞானபூமியேழும், மயல்தீர்நிலேயால்-மயக்கமற்றகுணத்தினுல், பரிசயிக்கில் - அப்பியாசஞ்செய்தால், வருத்தம் - துன்பமானது, சிறிதும்வாராது - அற்பமும் வாமாட்டாது—எ-து.

எ - து. பிறர்கள்தமதுவிகற்பத்தினு லோருறுதியில்லாதவேற்றுமையினுலொருதன்மையினு லிதுவென்றறிவிப்பதற்கு அகோசரமானவிந்த விதேகபூமியைமிகவும் வருத்தப்பட்டு முயற்சியையுடையவர்களாய்த் தெரிவிப்பார்கள். சொல்லப்பட்ட இந்தஞானபூமியேழும் மயக்கமற்றகுணத்தினுல் அப்பியாசஞ்செய்தாற் றுன்பமானதற்பமும் வாமாட்டாது—எ-ம்.

(இ-ம்.) ஞானபூமிகளினப்பியாசமயக்கமுள்ளவர்களுக்கு வருத்தமுமஃதில்லாதவர்களுக்குஅஃதெவ்வளவுமின்றென்பதாம். இன்னு ஞானபூமியேழையுமைந்தவத்தையாகக் கூறினபடியால் ஐந்துசரீரமும் ஐந்தபிமானியுமுண்டெனக்கொள்ளப்பட்டது அவையாவன-முன்மூன்றுபூமியுந்தூலம் அபிமானியப்பியாசி, நான்காம்பூமி சூக்குமம், அபிமானி பிரமவித்தன், ஐந்தாம்பூமி காரணம், அபிமானி பிரமவரன், ஆறும்பூமி சைதன்யம், அபிமானிபிரமவரியான் ஏழாம்பூமி, அதீதம்-அபிமானி பிரமவரிட்டனென்பதாம்.

## ஞானபூமியினிலக்கணங்கூறி அஃதடையு முபாயமும் கூறத்தொடங்கி இச்சையை பதார்ததயாக வுருவகப் படுத்தி அஃதைக்கெடுக்கில் இப்பூமியின் முடிவைத் தெரிசிக்கலா மெனல்.

மிகவும்தத்துமதம்பொழிந்து மெத்தென்றினிதாநடையுடைத்தாய்
புகர்கொடுதிக்கைநுனிபதறிப் பொருகோட்டினைச்சங்கினை நிகராம்
பகடுண்டநர்த்தம்பண்ணுமது படுக்கப்படுமேலப்பொழுதே
சுகமாய்விரைவினார்கடப்பா சொன்னபூமிப்பரப்பெல்லாம்.

இ - ள். மிகவுமதத்து-நிரம்பவுமதங்கொண்டு, மதம்பொழிந்து-மதசலத்தைவருஷித்து, மெத்தென்று-மிருதுவாக, இனிதாம்-இனிமையாகிய, நடை

யுடைத்தாம் - நடையையுடையதாகி, புகர்கொள் - புள்ளிகளையுடைய, துதிக்கைநுனிபதறி - தும்பிக்கையின் முனைதுடித்து. சங்கினைநிராம் - பணிலத்துக்கொப்பாகிய, பொருகோட்டினை - பொருதாநின்றதந்தங்களையுடைய, பகடுண்டு - யானையானதுண்டு. அநர்த்தம்பண்ணும்-அநர்த்தஞ்செய்கின்ற, அது படுக்கப்படுமேல் அதுகொல்லப்படுமாயின், அப்பொழுதே - அப்போதே, சுகமாய்-ஆநந்தமாக, விரைவில் - சீக்கிரத்தில், நரர் - மானிடர்கள், சொன்ன-முன்சொல்லப்பட்ட, பூமிப்பரப்பெல்லாம் - ஞானபூமியின் விரிவனைத்தையும், கடப்பார் - தாண்டுவார்கள் — எ-று.

எ - து நிரம்பவுமதங்கொண்டு மதசலத்தை வருஷித்து மிருதுவாக இனிமையாகிய நடையையுடையதாகிப் புள்ளிகளை யுடைய தும்பிக்கையின் முனைதுடித்து பணிலத்துக்கொப்பாகிய பொருதாநின்ற தந்தங்களையுடையயானையானதுண்டு. அநர்த்தஞ்செய்கின்ற அது கொல்லப்படுமாயின் அப்போதே ஆநந்தமாகச்சீக்கிரத்தில்மானிடர்கள்முன்சொல்லப்பட்ட ஞானபூமியின் விரிவனைத்தையுந் தாண்டுவார்கள்—எ—ம். (47)

## அவ்யானையைக்கெடுக்கும் பொருட்டு அஃது யாதென வினவுதல்.



வழியுங்கடமாக்களிறதனை வன்பாற்கொல்லா திருப்பளவு
மிழியுந்துயராற்போர்க்களத்தி லெவனேசுபடனுமென்ன
மொழியுந்தவனைநீசொன்ன மூரிக்களிறேதமர்க்களமே
தழியும்படியேதுறைவிடமே தருள்வாயென்றனருண்மூர்த்தி.

இ - ள். கடம்வழியும் - மதசலங்களொழுகுகின்ற, மாக்களிறதனை-பெரிதாகிய யானையை, வன்பால் - பலத்தினுல், கொல்லாதிருப்பளவும்-கொலைசெய்யா திருக்குமட்டும், இழியும் இழிவுள்ள, துயரால்-துன்பநிறைந்த, போர்க்களத்தில் - யுத்தகளத்தில், எவனேசுபடனுமென்ன - எவன்மகாவீரனுவானென்று, மொழியுந்தவனை - சொல்லிய வசிட்டமுனியைப் பார்த்து, நீசொன்ன- நீர்சொல்லிய, மூரிக்களிறேது-பலமுள்ளயானையாது, அமர்க்களமேது - யுத்தகளமியாது, அழியும்படியேது - அதுகெடுந்தன்மையாது, உறைவிடமேது-அதுவாசஞ்செய்யும் ஸ்தானமியாது, அருண்மூர்த்தி - கிருபாவடிவமான ஸ்ரீராமர், அருள்வாயென்றனன் - அனுக்கிரகஞ் செய்வாயென்று வசிட்டமுனியைக் கேட்டார்—எ-று.

எ - து. மதசலங்களொழுகுகின்ற பெரிதாகிய யானையைப் பலத்தினுற் கொலைசெய்யாதிருக்குமட்டு மிழிவுள்ள துன்பநிறைந்த யுத்தகளத்தி லெவன் மகாவீரனுவானென்று சொல்லிய வசிஷ்ட

முனியைப்பார்த்து நீர் சொல்லிய பலமுள்ள யானை யாது? யுத்தகள முயாது? அது கெடுந்தன்மையாது? அது வாசஞ்செய்யும் ஸ்தானமி யாது? அனுக்கிரகஞ் செய்வாயென்று கிருபாவடிவான ஸ்ரீராமர் வசிட்டமுனியைக்கேட்டார்—எ-ம். (48)

## யானையினுருவகத்தை வெளிப்படுத்தல்.



இராகவர்க்குமுனிசொல்வா னீதுண்டாகவெனல்வடிவாய்
சோகவிச்சையெனப்பெயர்கொள் சொரிமாமதத்தவெங்களிறு
தேகமென்னும்பெருங்காட்டிற் றிளாஞ்செருக்குமிகச்செய்யும்
வேகமதத்தவிந்தியமாம் வெங்கன்றுகளையுடைத்தாகும்.

இ - ள். இராகவர்க்கு - ஸ்ரீராமருக்கு, முனிசொல்லுவான் - வசிட்டமுனிசொல்லுவார், ஈதுண்டாகவெனல் - இதெனக்குண்டாக வேண்டுமென்றல், வடிவாய் - உருவமாய், சோகவிச்சையென - துன்பத்தைவிளைக்கு மாசையென்று, பெயர்கொள் - நாமத்தையுடைய, சொரிமாமதத்த - பொழியாநின்ற மகாமதசலத்தையுடைய, வெங்களிறு - கொடியயானையானது, தேகமென்னும் - சரீரமென்கின்ற, பெருங்காட்டில் - மகாரண்யத்தில், திளாஞ்செருக்கு - மிகுந்தகளிப்பையுடைய (லீலையை), மிகச்செய்யும் - மிகவுஞ்செய்யும், வேகமதத்த - கோபமு மதமுமுள்ள, இந்தியமாம் - இந்திரியங்களாகிய, வெங்கன்றுகளை - கொடியகுட்டிகளை, உடைத்தாகும் - உடையதாகும்—எ-று.

எ - து. ஸ்ரீராமருக்கு வசிட்டமுனிசொல்லுவார் இதெனக்குண்டாகவேண்டுமென்றல் உருவமாய்த் துன்பத்தை விளைக்கு மாசையென்று நாமத்தையுடைய பொழியாநின்ற மகாமத சலத்தையுடைய கொடிய யானையானது சரீரமென்கின்ற மகாரண்யத்தில் மிகுந்தகளிப்பையுடைய லீலையை மிகவுஞ்செய்யுங் கோபமு மதமுமுள்ள இந்திரியங்களாகிய கொடியகுட்டிகளை யுடையதாகும்—எ-று.

இனிதுநாவாலுரைசெய்யு மிதயமென்னுங்காட்டுறையும்
பனிவல்வினைகோடிரண்டுளதாம் பலவாதனைபாமதஞ்சொரியு
மணிசமெங்குபடர்வடிவா மறிவில்பிறவிநோக்கங்கண்
முனிவிலடுபோர்ப்பூமிகளா மூரியிச்சைமதகளிறே.

இ - ள். இனிது - இனிமையாக, நாவாலுரைசெய்யும் - நாக்கினால்வாணிக்கும், இதயமென்னும் - மனமென்கின்ற, காட்டுறையும் - (தூர்க்கமான)

வனத்திலடங்கும், பனிவல்வினை-நிடுக்கஞ்செய்கின்ற கொடியவிருவினைகளாகிய, கோடிரண்டுளதாம் - இரண்டுகொம்புள்ளதாம், பலவாதனையாம் - அநேகவாதனையாகிய, மதஞ்சொரியும்-மதத்தைப்பொழியும், அனிசமெங்கும்-எப்பொழுது மெவ்விடத்திலும், படர்வடிவால் - பரவுகின்ற வுருவத்தையுடையதாம், அறிவில் - உணர்வில்லாத, பிறவிநோக்கங்கள் - சம்சார திருட்டிகளே, முனிவிலடுபோர்ப்பூமிகளாம் - சினத்தினுற் கொள்ளுகின்ற யுத்தகளமாகும் - மூரியிச்சை மதகளிறு பலமுள்ள ஆசையே மதயானையாம்—எ-று,

எ - து இனிமையாக நாக்கினால் வசனிக்கும், மனமென்கின்ற துர்க்கமான வனத்திலடங்கும், நடுக்கஞ்செய்கின்ற கொடியவிருவினைகளாகிய விரண்டு கொம்புள்ளதாம், அநேகவாதனையாகிய மதத்தைப்பொழியும், எப்பொழுது மெவ்விடத்திலும் பரவுகின்ற வுருவத்தையுடையதாம், உணர்வில்லாத சம்சாரதிருட்டிகளே சினத்தினுற் கொல்லுகின்ற யுத்தகளமாகும், பலமுள்ள ஆசையே மதயானையாம்—எ-று.

(இ-ச-க-ம்.) இச்சையென்னு மியானையானது வினைகளென்னுந் தந்தங்களையும் வாதனையென்னு மதங்களுடன் றேகமென்கின்ற வனத்திலிருந்து இந்திரியமென்னுங் கன்றுகளோடும் பவப்பார்வையென்னும் யுத்தகளத்தில்வசிக்குமென்பதாம். (50)

## வீறுள்ளவிவ்விச்சையே ஆத்மத்துரோகஞ்செய்யுமெனல்.

வெற்றித்திறமுந்தோல்விகளு மேன்மேனல்கியிச்சையெனுஞ்
செற்றகளிறுதீனர்களாஞ் சீவத்திரளைச்சங்கரிக்கு
நிற்றத்தொழில்வாதனைபாவ நெஞ்சுமதிசங்கற்பங்கள்
பற்றும்பிறவுமிதன்பெயராய்ப் பண்டமாய்நெஞ்சுள்ளிருக்கும்.

இ - ள். வெற்றித்திறமும் - செயமும், தோல்விகளும் - அபசெயமும், மேன்மேனல்கி - மேலுமேலுங்கொடுத்து, இச்சையெனும் - ஆசையென்கின்ற, செற்றகளிறு - கோபத்தையுடையயானையானது, தீனர்களாம்-எளியரான, சீவத்திரளை - சீவகோடிகளை, சங்கரிக்கும் - சங்காரஞ்செய்யும், நிற்றத்தொழில் - நிலையாயிருக்கின்ற விருத்தியையுடைய, வாதனை - வாதனையும், பாவம் - பாவனையும், நெஞ்சும் - மனமும், மதி - புத்தியும், சங்கற்பங்கள் - சங்கற்பங்களும், பற்றும் - ஆசைகளும், பிறவும் - மற்றவைகளும், இதன்பெயராய் - இதனதுநாமங்களான, பண்டமாய் - திரவியங்களாய், நெஞ்சுள்ளிருக்கும் - அந்தக்காணத்திலிருக்கும்—எ-று.

எ - து. செயமும், அபசெயமும், மேமேலுங்கொடுத்து ஆசையென்கின்ற கோபத்தையுடைய யானையானது எளியரான சீவகோடிகளைச்சங்காரஞ்செய்யும், நிலையாயிருக்கின்ற விருத்தியையுடைய வாதனையும், பாவனையும், மனமும், புத்தியும் சங்கற்பங்களும், ஆசைகளு மற்றவைகளு மிதனது நாமங்களான திரவியங்களாய்அந்தக்கரணத்திலிருக்கும்—எ-ம். (51)

## எவ்விதத்திலு மிச்சாத்தியாகஞ் செய்யவேண்டுமெனல்.

நிலைமையென்னுமுயர்கணையா னிறைந்தவலியால்விநோதத்தாற்
றொலைவில்பொருளியாவையுமாகித் துன்னியொன்று மிச்சைதனை
யுலைவிலெல்லாவகையாலு மியோகிவெல்வதுத்தமமா
மலைவோடீதுண்டாகவென லகத்தேதழைக்கிலதுகேளாய்.

இ - ள். நிலைமையென்னும் - தைரியமென்கின்ற, உயர்கணையால் - மாட்சிமைப்பட்டஅம்பினால், நிறைந்தவலியால் - மிகுந்தபலத்தினால், விநோதத்து-விளையாட்டாக, தொலைவில்பொருளியாவையுமாகி-அளவற்றவஸ்துக்களனைத்துமாய், துன்னியொன்றும் - நெருங்கியொன்றாகிய, இச்சைதனை - ஆசையென்கின்ற (யானையை), உலைவில் அச்சமில்லாமல், எல்லாவகையாலும் - எந்தப்பிரகாரத்தினாலும், யோகிவெல்வது-ஞானியானவர் செயிப்பது, உத்தமமாம் - நன்மையாகும், அலைவோடு - சஞ்சலத்துடன், ஈதுண்டாகவெனல்-இதெனக்குண்டாகவேண்டுமென்பது, அகத்தேதழைக்கில - மனதில் வளர்ந்தால் அதுகேளாய் - அதைக்கேட்பாய் — எ-று.

எ - து. தைரியமென்கின்ற மாட்சிமைப்பட்டஅம்பினால்மிகுந்தபலத்தினால் விளையாட்டாகஅளவற்ற வஸ்துக்களனைத்துமாய்நெருங்கி ஒன்றாகி ஆசையென்கின்ற யானையை அச்சமில்லாமலெந்தப்பிரகாரத்தினாலும் ஞானியானவர் செயிப்பது நன்மையாகும். சஞ்சலத்துடன் இது எனக்குண்டாக வேண்டுமென்பது மனதில்வளர்ந்தாலதைக்கேட்பாய்—எ-ம். (52)

## இச்சையே பந்தமதனிவிர்த்தியே முத்தியெனல்.

பேசுமிதுதானிற்பளவும் பிறப்பர்நச்சுவிசிகைதா
னூசமடையாதிராகவனே ஞானச்சுருக்கமிதுகேளாய்

பாசமுறவீதுண்டாக வென்றுபடருமனந்தானே
யேசுபிறவியிம்மனத்தி னிறவேமுத்தியிவ்வளவே.

இ - ள். பேசும் - சொல்லப்பட்ட, இதுதானிற்பளவும் - இவ்வாசையா னதிருக்கும்பரியந்தம், பிறப்பாம் - சம்சாரமாகிய, நச்சுவிருசிகைதான் விடவி ருசியானது, இராகவனே-ஸ்ரீராமா, நாசமடையாது -அழியமாட்டாது, ஞான சுருக்கமிதுகேளாய் ஞானசங்கிரகமான இதைக்கேட்பாய், பாசமுற - பந்தம டைய, ஈதுண்டாகவென்று - இதெனக்குண்டாகவேண்டுமென்று, படருமன ந்தானே - விரியாநின்றமனதே, ஏசுபிறவி - பழிக்கின்றசம்சாரமாகும், இம்ம னத்தினிறவே - இந்தமனோநாசமே, முத்தி - மோக்ஷமாகும், இவ்வளவே-இவ் வளவுதான்—எ-று.

எ - து. சொல்லப்பட்டதுஇவ்வாசையான திருக்கும்பரியந்தஞ் சம்சாரமாகியவிடஇருசியானது ஸ்ரீராமா! அழியமாட்டாது. ஞான சங்கிரகமான அதைக்கேட்பாய். பந்தமடைய இதெனக்குண்டாக வேண்டுமென்று விரியா ன்ற மனதே பழிக்கின்ற சம்சாரமாகும். இந்த மனோநாசமே மோக்ஷமாகும் இவ்வளவுதான்—எ-று.

(இ-ங-க-ம்.) இச்சாத்தியாகஞ்செய்யும்பொருட்டு அதன்றன்மைகளைப்ப குத்துச்சொல்லியதாம். (53)

## இச்சாத்யாக வுபாயங்கூறல்.

மருளுமயறீர்விமலன்பால் வடித்துத்தெளிந்தவுபதேசந்
தருதல்கண்ணுடியின்புறத்திற் றயிலத்துளிபோலிளைப்பாறுந்
தெருளுமுணர்வாலிம்மோகந் தீர்ந்துவிச்சையங்குரமா
யுருவமனங்கிஞ்சிலுந்தோன்று துணர்விலாமைமாத்திரத்தால்.

இ - ள். மருளுமயல்தீர்-மருட்சிசெய்கின்றமயக்கந்தீர்ந்த, விமலன்பால்-நின்மல (சித்தனுன) சீடனிடத்தில், வடித்துத்தெளிந்த - தெரிவாகத்தெளி ந்த, உபதேசந்தருதல் - உபதேசத்தைக்கொடுத்தல், கண்ணுடியின்புறத்தில் - தற்பணத்தின் பக்கத்தில், தயிலத்துளிபோல்-தயிலவிந்துவைப்போல, இளை ப்பாறும் - விஸ்ராந்தியடையும், தெருளுமுணர்வால் - தெளிவுள்ள ஞானத்தி னுல், இம்மோகந்தீர்ந்து - இச்சநமயக்கத்தைவிட்டு, இச்சையங்குரமாய் - ஆசையேமுளையாக, உருவமனம் - வடிவமாகியமனது, உணர்விலாமைமாத்தி ரத்தால் - அசம்வேதனத்தினுல், கிஞ்சிலுந்தோன்று - அற்பமுந்தோற்றமா ட்டாது—எ-று.

எ - து. மருட்சிசெய்கின்ற மயக்கந்தீர்ந்த நின்மலசித்தனை சீடனிடத்திற் றெளிவாகத் தெளிந்த உபதேசத்தைக் கொடுத்தல்தற்பணத்தின் பக்கத்திற் றயிலவிந்துவைப்போல விஸ்ராந்தி யடையுந்தெளிவுள்ள ஞானத்தினுவிச்சநமயக்கத்தைவிட்டு ஆசையே முளையாக வடிவமாகிய மனது அசம்வேதனத்தினுல் அற்பமுந்தோற்றமாட்டாது—எ—ம்.

இ - ம். ஆசாரியருபதேசார்த்தத்தைச் சிந்திக்கச்சிந்திக்கச்சிந்தனாதீதசுகபோத உதயமான அசம்வேதனத்தால்இச்சாத்யம்வருமென்பதாம், ஆசிரியருபதேசவாக்கியார்த்தத்தைக்கேட்டு இருந்தது தெரிந்தபடியாற் சத்தேசித்தேன்றுந் தெளிவு சுகமாயெழுகின்றபடியாற் சித்தேயானந்த மென்றுமானந்தமே யாவருக்குஞ்சுபாவமாய் விளங்குதலா லதுவேசித்தென்றும்அச்சித்திலியாவருஞ்சஞ்சரித்திருத்தலி னதுவே சத்தென்று மிங்ஙனஞ் சச்சிதானந்த வயிக்கிய ஸ்வரூபமே தனதுஸ்வரூப மெனச்சிந்தித்து, சிந்தித்தபடி காக்ஷியுற்றுத் தெளிந்து, தெளிந்தபடி யதுவாய்ச் சுகித்திருக்குஞ் சமாதியடைந்து, அச்சமாதியினின்று வெளிப்படும்போதில் ஏகதேச விடயாநந்தங் கணீக்கி யேகாகாரமான பிரமானந்தமாகவும் ஏகதேசமான விடய ஞானநீக்கி ஏகாகாரமான பிரமஞானமாகவு மிவ்விரண்டு மொன்றான நிரதிசயாநந்த சைதன்யமே சுவானுபூதி பிரத்யக்ஷமாகச் சிந்திக்கச்சிந்திக்கச் சிந்தனா தீதமான சுகபோதமாக விளங்கியசாக்ஷாத்காரமே அசம்வேதனமென்பதாம்.

இதுவுமது.

ஊறுவநத்தந்தருமிச்சை யொருகால்வரினுமப்பொழுதே
யாறாவிடயத்துணர்வின்மை யானவதனாலறுத்திடுவாய்
கூறுமிச்சைபலவடிவாய்த் தோற்றமெனினுமிவ்வுடலின்
மாறாதானவாதனையை மாற்றாதிராதுவுணர்வின்மை

இ - ள். ஊறுவநத்தந்தரும் - கெடாதவநர்த்தத்தைக்கொடுக்கின்ற, இச்சை - ஆசையானது, ஒருகால்வரினும் - ஒருபோது வந்தாலும், அப்போதே - அக்கணத்தே, ஆறாவிடயத்து - நீங்காத விடயத்தில், உணர்வின்மையான - அசம்வேதனமாகிய, அதனாலறுத்திடுவாய் - அதனாற்கெடுப்பாய், கூறுமிச்சை பலவிதமான ஆசையானது, பலவடிவாய் - அநேகவுருவாய், தோற்றமெனினும் - தோற்றுக் கொண்டிருந்தாலும், இவ்வுடலின் - இச்சரீரத்தின், மாறாதானவாதனையை - நீங்காமலிருக்கின்ற வாசனையை, உணர்வின்மை - அசம்வேதனமானது, மாற்றாதிராது - நீங்காமலிராது—எ-ம்.

எ — து. கெடாத அநர்த்தத்தைக்கொடுக்கின்ற ஆசையானது ஒருபோது வந்தாலுமக்கணத்தே நீங்காத விடயத்தி லசம்வேதனமாகிய அதனாற்கெடுப்பாய், பலவிதமான ஆசையானதநேகவுருவாய்

க்கோற்றுக்கொண்டிருந்தாலு மிச்சரீரத்தி னீங்காமலிருக்கின்றவாச னையை அசம்வேதனமானது நீக்காமலிராது—எ-ம்.

இ-ம். இச்சாவாசனை யசம்வேதனத்தாற் கெடுமென்பதாம். (55)

## அசம்வேதனத்தையடையு முபாயங்கூறல்.

தள்ளுமுடிவின்றியினித்தைக் சவத்தின்றிரளைவிருப்பறல்போற்
றெள்ளும்பிரத்தியாகாரத் திறத்தினுலேவாதனையை
நள்ளுமிச்சைமாத்திரமாய் நயவாதிருக்குமப்போதே
யுள்ளுவெறிதேயிருப்பதுவே யுணர்விலாமையுறுமுயற்சி.

இ - ள். சவத்தின்திரளை - பிரேதக்கூட்டங்களை, விருப்பறல்போல் - இச்சியாததுபோல, முடிவின்றின் - முடிவில்லாமலிருக்கின்ற, இத்தை - இந்த வாசனையை, தள்ளு - விரும்பாளீக்குவாய், தெள்ளு தெளிவாகிய, பிரத்தியாகாரம் - பிரத்தியாகாரமென்னும், திறத்தினுல்-காரணத்தினுல், வாதனையை-வாசனையை, நள்ளுமிச்சைமாத்திரமாய் - விரும்புகின்றவாசனையி னளவாகக்கருதி, நயவாதிருக்கும் - யாசியாதிருக்கும், அப்போதுள் வெறிதிருப்ப - அக்காலமனஞ் சும்மாயிருக்கும், அதுவேயுணர்விலாமை- அதுவே அசம்வேதனத்தை, உறுமுயற்சி - அடைகின்ற முயற்சியாகும் — எ-று.

எ - து. பிரேதக்கூட்டங்களை இச்சியாததுபோலமுடிவில்லாமல் இருக்கின்ற விந்தவாசனையை விரும்பாளீக்குவாய், தெளிவாகியப்பிரத்தியாகாரமென்னுங் காரத்தினுல் வாசனையை விரும்புகின்ற வாசனையினளவாகக்கருதி யாசியாதிருக்குமக்காலமனஞ்சும்மாயிருக்கும் அதுவே அசம்வேதனத்தையடைகின்ற முயற்சியாகும்—எ-ம்.

இ-ம். சுகபோதவயிக்கியத்தில் அசைவற்றிருப்பதே யதீதமுண்டாகுநெறி யென்பதாம்.

## சங்கற்பநாசமே சிவமாமெனல்.

எனதீதென்னுமறிவுதனை யிடர்கற்பனையென்றுரைசெய்வார்
கனமாமறிவின்பாவனையாற் காண்பதெல்லாங்கையகவி
லனகாதிபனேகற்பனைக ளற்றதென்றுருயர்நல்லோர்
மனமாளினைவேசங்கற்ப மனத்தினினைவற்றதுசிவமே.

இ - ள். எனதிதென்னும் - ஈதெனதென்கின்ற, அறிவுதனை அறிவை, இடர்கற்பனையென்று - துன்பம்பொருந்திய கற்பனையென்று, உரைசெய்வர் - (சத்துக்கள்) சொல்லுவார்கள், கனமாமறிவின்பாவனையால் - வியாபகஞான பாவனையினால், காண்பதெல்லாம் - காணப்பட்ட சகலமும், கையகலில் - நீங்கினால், அனகாதிபனே - களங்கமற்ற இராசாவே, உயர்நல்லோர் - மேலாகிய சத்துக்கள், கற்பனைகளற்றதென்றார் - கற்பனைகணசித்ததென்றுசொன்னார்கள், மனமாநினைவே - மனோபாவமே, சங்கற்பம் சங்கற்பமாகும், மனத்தினினைவற்றது - மனத்தினதுபாவனையற்றலே, சிவம் - சிவமாகும்.

எ - து. ஈதெனதென்கின்ற வறிவைத் துன்பம் பொருந்தியகற்பனையென்று சத்துக்கள் சொல்லுவார்கள். வியாபகஞான பாவனையினாற் காணப்பட்ட சகலமும் நீங்கினாற் களங்கமற்ற இராசாவே! மேலாகிய சத்துக்கள் கற்பனைகணசித்ததென்று சொன்னார்கள், மனோபாவமே சங்கற்பமாகும், மனத்தினது பாவனையற்றலே சிவமாகும்

இ-ம். ஞானபாவனையால் அதன் சங்கற்ப ரூபமாகிய விடயங்கணீங்கிற்சர்வம் பிரமமயமாய் பிரகாசிக்கு மென்பதாம். (57)

## அறிவறியாமை நீங்கினவறிவாய் விளங்குவா யெனல்.



எட்டியறிந்ததறியாத திரண்டும்பாவிப்பது நினைவாம்
பட்டமரம்போலிவையிரண்டிற் பற்றுநினைவுதனைமறந்து
வட்டமிடுமியாவையும்விரைவின்மறந்துசான்றமதியுடைத்தாய்த்
திட்டமுறத்தோன்றுதலில்லாத் திறத்தோனாகிநிலைநிற்பாய்.

இ - ள். எட்டி - விடயத்தைத்தாவி. அறிந்தது - உணர்ந்ததும், அறியாதது - உணராததுமாகிய, இரண்டும் பாவிப்பது - இரண்டையும் பாவனைசெய்வதே, நினைவாம் - பாவனையாகும், பட்டமரம்போல் - பட்டுப்போன விருக்ஷத்தைப்போல, இவையிரண்டில் - இந்தவறிவறியாமை யிரண்டிலும், பற்றுநினைவுதனைமறந்து - பொருந்தாநின்ற பாவனையைவிட்டு, வட்டமிடுமியாவையும் - சுழலாநின்ற சகலத்தையும், விரைவின்மறந்து - சீக்கிரத்தின் மறந்து, சான்றமதியுடைத்தாய் - பேரறிவையுடையவனாய், திட்டமுறத்தோன்றுதலில்லா - நிலவரமாக்கூடுமான, திறத்தோனாகி நிலைநிற்பாய் - குணத்தோனாய் நிலைபெற்றிருப்பாய்—எ-று.

எ - து. விடயத்தைத்தாவி யுணர்ந்ததூ முணராததுமாகிய இரண்டையும் பாவனைசெய்வதே பாவனையாகும். பட்டுப்போன விருக்ஷத்தைப்போல இந்த அறிவறியாமையிரண்டிலும் பொருந்தாநின்ற பாவனையைவிட்டுச் சுழலாநின்ற சகலத்தையுஞ் சீக்கிரத்தின் மறந்து

பேரறிவை யுடையவனும் நிலவரமாகக் கூடுமான குணத்தோனாய் நிலைபெற்றிருப்பாய்—எ-ம்.

இ - ம். விடயத்தையறிதலுந் தன்னையறிந்துமான இரண்டையு நீக்கத் தானேதானாய் விளங்கிய சுகபோதமான பிரமஞானமாக விளங்குவா யென்பதாம். (58)

## இராமனுக் குபதேசிப்பதை முநிக்கும் பொருட்டு அவையைப்பார்த் ததிசயித் துரைத்தல்.

கேளாநின்றானிவனென்ன வொருவன்கிட்டாமையினாலே
தோளாலுயரக்கையெடுத்துத் தோன்றநின்றுசொல்கின்றோ
மீளாதானவசங்கற்பம் விமலமானபரமபதம்
வாளாவுள்ளேபாவிக்க மாட்டாரதனையென்னம்மா.

இ - ள். இவன் - இவன், கேளாநின்றானென்ன - கேட்கிறவனென்று சொல்லும்படி, ஒருவன் கிட்டாமையினால் - ஒருவருமணுகாததினால், தோளால் - புசங்கள், உயரக்கையெடுத்து - உயரும்படி கரத்தைத்தூக்கி, தோன்ற (சகலருக்குமிந்தஅருத்தந்) தோற்றும்படியாக, நின்றுசொல்கின்றோம் - இருந்து வசனிக்கின்றோம், மீளாதான - திரும்பாததாகிய, அசங்கற்பம் - சங்கற்பபாவமே, விமலமானபரமபதம் - நிர்மலமாகிய பரமபதமாகும், அதனை - அவ்வசங்கற்பத்தை, வாளா - மௌனமாக, உள் - அகத்தில், அம்மா - ஆச்சரியம், என்பா விக்கமாட்டார் - என்பாவனைசெய்யமாட்டார்—எ-று.

எ - து. இவன் கேட்கின்றவனென்று சொல்லும்படி யொருவரு மணுகாததினாற் புசங்களுயரும்படிகரத்தைத்தூக்கிச்சகலருக்குமிந்த அருத்தந்தோன்றும்படியாக இருந்து வசனிக்கின்றோம். திரும்பாததாகிய சங்கற்பபாவமே நிர்மலமாகிய பரமபதமாகும், அவ்வசங்கற்பத்தை மௌனமாக அகத்திலாச்சரியம் என்பாவனை செய்யமாட்டார்—எ-ம்.

இ-ம். இங்ஙனம் போதித்து வந்தவாக்கியார்த்த சூட்சுமம் வெளிப்படும் பொருட்டு அறிவிலசைவற நிற்றல் சுகமாயிருக்க அங்ஙனமில்லாத தேனோவென்றிரங்கிக் கூறினு மென்பதாம். (59)

## சபையைப்பார்த்துரைத்து இராகவனிடமாய் முநிக்கத் தொடங்கிச் சகசநிட்டையைக் கூறுதல்.

செறிபார்முழுதாள்பவன்பதமுந் திரணமென்னப் பரமபதம்
வெறிதேயிருக்குமிருப்பினுன் மேவுமன்றே பேறூர்க்கு

நெறிபோம்பதிகன்றனக்கிருதா ணிணையாதிருக்கநடப்பதுபோற்
பொறிகூர்தனதுதொழினடக்கும் பூணுவாளாவிருந்திடவே.

இ - ள். செறிபார்முழுது - நெருங்கியபூமியெல்லாம், ஆள்பவன் பதமும் - ஆளுகின்ற சக்கரவர்த்திபதமும், திரணமென்ன - துரும்பென்று (சொல்லும்படியாயிருக்கும்), பரமபதம் - பிரமபதமானது, வெறிதேயிருக்குமிருப்பினால் - மவுனமாயிருக்கின்ற விருப்பினால், மேவும் - அடையப்படும், பேரூர்க்கு - மகாநகரத்துக்கு, நெறிபோம் - மார்க்கத்திற்செல்லும், பதிகன்றனக்கு - புருடனுக்கு, இருதாள் - இரண்டுபாதமும், இணையாதிருக்க - எண்ணமலிருக்க, நடப்பதுபோல் - செல்லுவதுபோல, பொறிகூர்-பொலிவுமிகுந்த, தனதுதொழில் - தனதுசெய்கையானது, பூணுவாளாவிருந்திட சேராமற்சும்மாயிருக்க, நடக்கும் - நடந்துவரும்—எ-று.

எ - து. நெருங்கிய பூமியெல்லாமாளுகின்ற சக்கரவர்த்திப்பதமுந்துரும்பென்றுசொல்லும்படியாயிருக்கும். பிரமபதமானது மவுனமாயிருக்கின்ற விருப்பினாலடையப்படும். மகாநகரத்துக்கு மார்க்கத்திற்செல்லும் புருடனுக்கிரண்டுபாதமு மெண்ணமலிருக்கச்செல்லுவதுபோலப் பொலிவுமிகுந்த தனது செய்கையானது சேராமற்சும்மாயிருக்க நடந்துவரும்—எ-ம்.

(இ-ம்.) அசம்வேதனத்தாற் பரமபதத்தை யடையின்அதன் சந்நிதானத்திற் சகலகிருத்தியங்களுந் தானே நடந்துவரு மென்பதாம். (60)

### வாக்கியார்த்த சங்கிரகங் கூறுதல்.

இங்குப்பன்னும்பலவாலென் னியம்புசுருக்கமிதுகேளாய்
சங்கற்பந்தான்பவபந்தஞ் சங்கற்பந்நீர்ந்தது புத்தி
பங்கற்றெல்லையழிவலைவு பவமற்றாறுமறிவுருவே
துங்கச்சகங்களெனநோக்கிச் சுகமெப்படியப்படிநிற்பாய்.

இ - ள். இங்கு-இவ்விடத்தில், பன்னும்பலவாலென் - சொல்லுகின்றபலவற்றினலென்னபிரயோசனம், இயம்புசுருக்கம் - சொல்லாநின்றசங்கிரகமான, இதுகேளாய் - இந்தஅருத்தத்தைநீகேட்பாய், சங்கற்பந்தான் பவபந்தம் - சங்கற்பமேசம்சாரபந்தமாகும், சங்கற்பந்தீர்ந்தது புத்தி - சங்கற்பநாசமேமோக்ஷமாகும், பங்கற்று-பிரிவில்லாமல், எல்லை-முடிவும், அழிவும் - நாசமும், அலைவு-சலனமும், பவம்-சம்சாரமும், அற்று - இல்லாமல், ஆறும் - உபசாந்தமாகின்ற, அறிவுருவே - ஞானஸ்வரூபமே, துங்கச்சகங்களெனநோக்கி - பரிசுத்தமாகிய உலகங்களென்றுபார்த்து, சுகமெப்படி - பிரதிசயாநந்தமெப்படி விளங்குகின்றதோ, அப்படிநிற்பாய்-அந்தப்பிரகாரமிருப்பாய்—எ-று.

எ - து. இவ்விடத்திற் சொல்லுகின்ற பலவற்றினு லென்ன பிரயோசனம்? சொல்லாநின்ற சங்கிரகமான இந்தஅருத்தத்தைநீகே ட்பாய். சங்கற்பமே சம்சாரபந்தமாகும், சங்கற்பநாசமே மோக்ஷ மாகும், பிரிவில்லாமல் முடிவும் நாசமும் சலனமும் சம்சாரமுமில்லா மலுபசாந்தமாகின்ற ஞானஸ்வரூபமே பரிசுத்தமாகிய உலகங்களெ ன்று பார்த்து நிரதிசயாநந்தமெப்படி விளங்குகின்றதோ அந்தப்பிரகா ரமிருப்பாய்—எ-ம்.

(இ-ம்.) காணப்பட்டயாவுஞ் சைதன்யவடிவமாகப் பார்க்கும்போது உத யமான சுகஸ்வரூபமாய் விளங்குவா மென்பதாம். (61)

## சுகபோதமாகச் சஞ்சரிப்பா யெனல்.

ஒழியாநிலையாமுபசாந்த யோகமென்பதுணர்வின்மை
கழியாயோகநிலையினனாய்க் கவர்பற்றொழித்துத்தொழில்செய்வா
யிழியாதியற்றப்படாஉள்ள மிறந்தயோகமுணர்வின்மை
வழியான்மிகவுமதின்மயமாய் வல்லைநிற்பாய்மகிழ்ந்தபடி.

இ - ள். ஒழியாநிலையாம் - நீங்காதநிலைமையாகிய, உபசாந்தயோகமெ ன்பது - உபசாந்தஞானமென்றுசொல்லுவது, உணர்வின்மை - அசம்வேத னமாம், கழியா - முடிவில்லாத யோகநிலையினனாய் - ஞானநிலையையுடை யவனாய், கவர்பற்றொழித்து - கிரகிக்காநின்ற ஆசையைவிட்டு, தொழில் செய்வாய் - (உனக்குள்ள) செய்கையைச்செய்வாய், இழியாதியற்றப்படா - ஈனமாகச்செய்யப்படாத. உள்ளமிறந்தயோகம் - மநோநாசமானஞானமே, உணர்வின்மை - அசம்வேதனமாம், வழியால் - இந்தநெறியினால், மிகவு மதின்மயமாய் - மிகவும் (அவ்வுபசாந்தஞானாகார) மாய், மகிழ்ந்தபடி - ஆநந்தித்தப் பிரகாரமே, வல்லைநிற்பாய் - சீக்கிரத்திலிருப்பாய்—எ-று.

எ - து. நீங்காத நிலைமையாகிய உபசாந்தஞானமென்றுசொ ல்லுவ தசம்வேதனமாம். முடிவில்லாத ஞானநிலையையுடையவனாய் க் கிரகிக்காநின்ற ஆசையைவிட்டு உனக்குள்ள செய்கையைச் செய் வாய். ஈனமாகச் செய்யப்படாத மநோநாசமான ஞானமே அசம்வே தனவாம். இந்தநெறியினால் மிகவும் அவ்வுபசாந்த ஞானாகாரமாயாந ந்தித்த பிரகாரமே சீக்கிரத்திலிருப்பாய்—எ-ம்

(இ-ம்) இக்கணமே யாநந்தாதீதமாக விளங்கும்போ தாகாரமாய்ச்சகல கிருத்தியங்களுஞ் செய்வா மென்பதாம். (62)

## சாக்ஷாத்கார திசையைக்கூறுதல்.

எனக்கீதென்னுமுணர்வுடைமை யிடர்விட்டகலாதுணர்வின்மை
யனர்த்தமில்லாவீடளிக்கு மாசையேதிங்கதுசெய்வாய்
சனிப்பில்சிவமெங்கணுமுளது சாந்தஞ்சுபஞ்சித்துருவென்னுங்
கனத்தவந்தவொருநினைவே கருமத்யாகமிராகவனே.

இ-ள். ஈது இது, எனக்கென்னும் - எனக்கென்கின்ற, உணர்வுடைமை - அறிவுடைமை, இடர்விட்டகலாது - துன்பத்தைவிட்டுநீங்காது, உணர்வின்மை - அசம்வேதனம், அனர்த்தமில்லா - சுயப் பிரயோசனமான, வீடளிக்கும் - மோக்ஷத்தைக்கொடுக்கும், ஆசையேது - (உனது) பிரியம்யாது, இங்கதுசெய்வாய் - இவ்விடத்தில் அதனைச்செய்வாய், சனிப்பில்சிவம் - உதியாத (சுயம்பிரகாசமான) சிவமானது, எங்கணுமுளது - எவ்விடத்திலுமிருக்கின்றசத்து, சாந்தம் - (அதுவேசகலமும் விடுபட்டிருக்கின்ற) உபசாந்தமான, சுபம் - மங்களகரமாகிய (நிரதிசயாநந்தம்), சித்துரு - அதுவேசதோதயமான ஞானஸ்வரூபம், என்னும் - என்றுசொல்லப்பட்ட, கனத்த - கனமாகிய, அந்தவொருநினைவே - அந்த அத்துவிதபாவனையே, இராகவனே - ஸ்ரீராமா, கருமத்யாகம் - கருமத்யாகமாகும்—எ-று.

எ-து. இதுவெனக்கென்கின்ற அறிவுடைமைத் துன்பத்தை விட்டு நீங்காது அசம்வேதனம் சுயப் பிரயோஜனமான மோக்ஷத்தைக்கொடுக்கும்; உனது பிரியமியாது; இவ்விடத்தில் அதனைச்செய்வாய். உதியாத சுயம்பிரகாசமான சிவமானது எவ்விடத்திலுமிருக்கின்றசத்து. அதுவேசகலமும் விடுபட்டிருக்கின்ற உபசாந்தமான மங்களகரமாகிய நிரதிசயாநந்தம். அதுவே சதோதயமான ஞானஸ்ரூபமென்று சொல்லப்பட்ட கனமாகிய அந்த அத்துவிதபாவனையே ஸ்ரீராமா! கருமத்யாகமாகும்—எ-ம்.

(இ-ம்.) நித்தியசுகபோதமான சிவஸ்வரூபமேயாவுமாய் விளங்குமெதென்னும் ஸ்வானுபூதியே கருமத்யாகமென வாக்கியார்த்த உபதேசத்தை வசிட்டமுனிமுனித் திந்தப் பிரகாரஞ் சீவன்முத்தித்தன்மையிலிருந்து இராமா அராசாங்கத்துக்குரித்தான துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனஞ் செய்வாயென்றபடியே ஸ்ரீராமர் செய்து பின்விதேகமுத்தியை யடைந்தாரென்று பாரத்துவாசமுனிக்கு வான்மீகமுனி யனுக்கிரகஞ்செய்ய அந்தப் பிரகாரமே பரத்வாசரும் நிரதிசயாநந்த சைதன்ய சாக்ஷாத்காரமான சீவன்முத்திப் பதத்திற் சுகித்திருந்து பின் விதேகமுத்தியை யடைந்தனரென்பதாம். (63)

## நூலின் வரலாறுரைத்தல்.

என்றுவசிட்டமுனிராமற் கிசைத்தானென்றுவான்மீகி
சொன்னானாறுயிரங்கிரந்தத் தொகையாற்பரத்துவாசனுக்குப்
பின்னாளிலாறுயிரத்தைப் பிரித்தானிவ்வாறுலகுய்யப்
பன்னுமறைதேர்காஸ்மீரப் பண்டிதப்பேர்பரமகுரு.

இ - ள். என்று - இப்படியென்று, வசிட்டமுனி - வசிட்டமுனியானவர், இராமற்கிசைத்தானென்று - ஸ்ரீராமருக்குச் சொன்னாரென்று, நூறாயிரங்கிரந்தத் தொகையால் - இலட்சங்கிரந்தக் கணக்கினால், பரத்துவாசனுக்கு - பரத்துவாசரிஷிக்கு, வான்மீகிசொன்னான் - வான்மீகமுனியானவர்சொன்னார். பின்னாள் - பிற்காலத்தில், அதில் - அந்தவிலட்சங்கிரந்தத்தில், ஆறாயிரத்தை - ஆறாயிரங்கிரந்தத்தை, இவ்வாறு - இவ்வண்ணம், உலகுய்ய - சகத்தில் (உள்ளவாத்மாக்கள்) பிரமாநந்தத்தில்வாழும்படி, பன்னுமறை - சுயமாயுண்டானவேதத்தை, தேர் - ஆராய்ந்தறிந்த, காஸ்மீரப்பண்டிதப்பேர் - காஸ்மீரப்பண்டிதனென்னு நாமத்தையுடைய, பரமகுரு - பரமகுருவானவர், பிரித்தெடுத்தார்—எ-று.

எ - து. இப்படி யென்று வசிட்டமுனியானவர் ஸ்ரீராமருக்குச் சொன்னாரென்று இலட்சங் கிரந்தக்கணக்கினாற் பரத்துவாசரிஷிக்கு வான்மீகிமுனியானவர் சொன்னார். பிற்காலத்தில் அந்த விலட்சங்கிரந்தத்தி லாறுயிரங் கிரந்தத்தை இவ்வண்ணஞ் சகத்திலுள்ள ஆத்மாக்கள் பிரமாநந்தத்தில் வாழும்படிச் சுயமாயுண்டான வேதத்தையாராய்ந்தறிந்த காஸ்மீரப்பண்டிதனென்னு நாமத்தையுடைய பரமகுருவானவர் பிரித்தெடுத்தார்—எ—ம். (64)

## நூலின் மகிமையுரைத்தல்.

சாத்திரத்திற்பெரியதிது தடங்காவியத்திற்பெரியதிது
மாத்திரத்தின்மெய்ஞ்ஞான வழியாற்பெரியதிதுஞான
நேத்திரத்திற்பெரியோர்க்கு நிதிபோற்பெரியதிதுகதிரோன்
கோத்திரப்பொற்பாத்திரத்திற் குறித்தவமுதாம்வாசிட்டம்.

இ - ள். வாசிட்டம் - ஞானவாசிட்டமென்னும், இது - இந்நூலே, சாத்திரத்திற்பெரியது - ஞானசாஸ்திரங்களிற்பெரியதாகும், இது - இதுவே, தடங்காவியத்தில் - விசாலமுள்ள காவியங்களில், பெரியது - பெரியதாம்

இது - இதுவே, மெய்ஞ்ஞானமாத்திரத்தின் - தத்துவஞானமாத்திரத்தின் வழியால் - மார்க்கத்தினால், பெரியது - மகத்தானதாம், இது - இதுவே, ஞானநேத்திரத்தில்' - ஞானதிருஷ்டியில், பெரியோர்க்கு - சத்துக்களுக்கு, நிதிபோல் - சங்கநிதி பத்மநிதியைப்போல, பெரியது - மகத்தானதாம், கதிரோன் — சூரியனது, கோத்திரம் - கோத்திரமென்னும், பொற்பாத்திரத்தில்- கனகபாத்திரத்தில், குதித்தவமுதாம் பாய்ந்தவமுதாம் —எ-று.

எ - து. ஞானவாசிட்டமென்னும் இந்நூலே ஞானசாஸ்திரங்களிற் பெரியதாம் இதுவேவிசாலமுள்ள காவியங்களிற்பெரியதாம்; இதுவே தத்துவஞானமாத்திரத்தின் மார்க்கத்தினால் மகத்தானதாம்; இதுவே ஞானதிருஷ்டியில் சத்துக்களுக்குச் சங்கநிதிபத்மநிதியைப் போல மகத்தானதாம்; சூரியனது கோத்திரமென்னுங் கனகபாத்திரத்தில் பாய்ந்தவமுதாகும்—எ—ம். (65)

## பிரமன் முதலிய ஆசிரியரை வாழ்த்துதல்.

மலரோன்வாழிநாமாது வாழிவசிட்டமுனிவாழி
யுலகாளிராமன்மிகவாழி யுயர்வான்மீகமுனிவாழி
நலமார்பரத்துவாசமுனி நாளும்வாழிவாசிட்டம்
பலமாவாழிகான்மீரப் பண்டிதப்பேர்முனிவாழி.

இ - ள். மலரோன்வாழி - பங்கயாசனன் வாழக்கடவது, நாமாதுவாழி- சாஸ்வதி வாழக்கடவது, வசிட்டமுனிவாழி வசிட்டமுனிவாழக்கடவது, உலகாள் - அரசாங்கஞ்செய்கின்ற, இராமன்மிகவாழி - ஸ்ரீராமர்மிகவும் வாழக்கடவது, யுயர்வான்மீகமுனி - மேலானவான்மீகமுனியானவர், வாழி - வாழக்கடவது, நலமார்பரத்துவாசமுனி நாளும்வாழி - நன்மைநிறைந்த பரத்துவாசமுனிவரென்நாளும் வாழக்கடவது, வாசிட்டம் பலமாய்வாழி - ஞானவாசிட்டம் (ஆதமாக்களுக்கு) பிரயோசனமாகவாழக்கடவது, கான்மீரப்பண்டிதப்பேர் - காஸ்மீரப்பண்டிதனென்னு நாமத்தையுடைய, முனிவாழி - இருஷியானவர் வாழக்கடவது—எ-று.

எ - து. பங்கயாசனன்வாழக்கடவது, சாஸ்வதிவாழக்கடவது, வசிட்டமுனி வாழக்கடவது, அரசாங்கஞ் செய்கின்ற ஸ்ரீராமர் மிகவும் வாழக்கடவது, மேலான வான்மீகமுனியானவர் வாழக்கடவது, நன்மை நிறைந்தபாரத்துவாச முனிவரென்நாளும் வாழக்கடவது,

ஞானவாசிட்டம் ஆத்மாக்களுக்குப் பிரயோசனமாக வழக்கடவது, காஸ்மீரப் பண்டிதனென்னும் நாமத்தையுடைய இருஷியானவர் வழக்கடவது—எ-ம். (66)

## பிரமன்முதலிய ஆசிரியர்வடிவந் தனதுவடிவமா யிருத்தலில் ஆரைவணங்குவே னெனல்.



தேமென்மலரோன்பதம்புகழ்வோ தெளிந்தவசிட்டன்பதம்பரவோ
விராமன்கமலப்பதந்துதிக்கோ வியல்வான்மீகிப்பதமேத்தோ
பாமன்கீர்த்திப்பாத்துவசன் பதமேபழிச்சோவாசிட்ட
நாமம்பெறுநூற்பதவியக்கோ நான்சேர்பதத்தைநன்றென்கோ.

இ - ள். தேமென் - தேன்கணிறைந்த மிருதுவாகிய, மலரோன் - தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமாவினது, பதம்புகழ்வோ - பதத்தைத்துதிப்பனு, தெளிந்த - தெளிந்திருக்கின்ற, வசிட்டன்பதம்பரவோ - வசிட்டமுனி பாதத்தைத் துதிப்பனு, இராமன் - ஸ்ரீராமருடைய, கமலப்பதந்துதிக்கோ - தாமரைமலர்போன்ற பாதத்தைத துதிப்பனு, இயல் - இயல்பையுடைய, வான்மீகிப்பதம் - வான்மீகமுனிவரது பாதத்தை, ஏத்தோ - தோத்திரஞ் செய்வனு, கீர்த்தி - கீர்த்தியையுடைய, பாத்துவசன் - பாரத்துவாசமுனிவரது, பதமேபழிச்சோ—பதத்தைத்துதிப்பனு, வாசிட்டநாமம் - வாசிட்டமென்னும்பெயரை, பெறும் - பெற்றிருக்கின்ற, நூல் - ஞானசாஸ்திரனது, பதம்வியக்கோ - பதத்தை யதிசயிப்பனு, நான்சேர்பதத்தை - யானடைந்திருக்கின்ற பரமபதத்தை, நன்றென்கோ நன்றென்றுசொல்லுவனு—எ-று.

எ — து. தேன்கணிறைந்த மிருதுவாகிய தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமாவினது பதத்தைத்துதிப்பனு! தெளிந்திருக்கின்ற வசிட்டமுனிபாதத்தைத் துதிப்பனு! ஸ்ரீராமருடைய தாமரைமலர் போன்ற பாதத்தைத்துதிப்பனு! இயல்பையுடைய வான்மீகமுனிவரது பாதத்தைத் தோத்திரஞ்செய்வனு! கீர்த்தியையுடைய பாரத்துவாசமுனிவரது பதத்தைத்துதிப்பனு! வாசிட்டமென்னும் பெயரைப்பெற்றிருக்கின்ற ஞானசாஸ்திரத்தினது பதத்தை யதிசயிப்பனு யானடைந்திருக்கின்ற பரமபதத்தைநன்றென்றுசொல்லுவனு—எ-ம்.

## இந்நூலைப்பெற்றவர்களின் பேருரைத்தல்.

பரமமேனிவசிட்டமுனி பச்சைமேனியிராமற்குப்
பிரமஞானமுணர்வித்த பெருவாசிட்டநன்னூலைத்
திரமதாகக்கற்பளவே சீவன்முத்திப்பதஞ்சேர்வ
ருரமதாகவுள்ளுணர்வோ ருறுபேறெங்ஙனுரைப்பதுவே.

இ — ள். பரமமேனி - பிரமஸ்வரூபமாயிருக்கின்ற, வசிட்டமுனி - வசிட்டமுனியானவர், பச்சைமேனி - மேகவண்ணனுன, இராமற்கு - இராமருக்கு, பிரமஞானமுணர்வித்த - பிரமஞானத்தைப்போதித்த, பெரும்-மாட்சிமைப்பட்ட, வாசிட்ட நன்னூலை - ஞானவாசிட்டமென்னு ஞானசாஸ்திரத்தை, திரமதாக - நிலையாக, கற்பளவே - கற்றமாத்திரத்தில், சீவன்முத்திப்பதம் - சீவன்முத்திப்பதத்தை, சேர்வார் - அடைவார்கள், உரமதாக - ஞானமாத்திரமாக, உள்ளுணர்வோர் - உள்ளத்தின்கட்டெளிபவர்கள், உறுபேறு - அடைகின்ற இலாபத்தை, எங்ஙனுரைப்பது - எப்படிசொல்லுவது—எ-று.

எ - து. பிரமஸ்வரூபமா யிருக்கின்ற வசிட்டமுனியானவர் மேகவண்ணனுன ஸ்ரீராமருக்குப் பிரமஞானத்தைப் போதித்தமாட்சிமைப்பட்ட ஞானவாசிட்டமென்னு ஞானசாஸ்திரத்தை நிலையாகக் கற்றமாத்திரத்திற் சீவன்முத்திப்பதத்தை யடைவார்கள். ஞானமாத்திரமாக உள்ளத்தின்கட் டெளிபவர்களடைகின்ற இலாபத்தையப் படிச் சொல்லுவது—எ-ம்.

(இ-கு-க-ம்.) தனது நிரதிசயானந்த சைதன்யத்தை வெளிப்படுத்தின சுருதி குருசுவானுபவத்தை வியந்துரைத்ததாம். (68)

## திருவாணப்பிரகரணம் முற்றிற்று.

ஆ-பிரகரணம் ஆறும் உட்பட கதை 43-க்கு-கவிதை-2055,

சற்குருவே நமா.

# இந்நூலாசிரியர் மரபுகூறல்.

**தாள்வந்தமலரோன் றன்மனத்துதித்தவசிட்டனயன் றன்பாற்கேட்டு**
**நாளவந்தான்போகாத விராமனுக்கங்குபதேசநல்கியிங்கே**
**யாளவந்தான்வீரையின் மாதவப்பட்டன்வம்சமவதாரமாகி**
**மீளவுந்தான்வந்துதமிழ் வசிட்டராமாயணமும்விளம்பினனே.**

இ - ள். தாள்-தண்டையுடைய, வந்த-மாதவனுபியிலுதித்த, மலரோன் றன்-தாமரைப்பூவில் வாசமாகிய பிரமதேவனது, மனத்துதித்த - மனதி லுண்டான, வசிட்டன் - வசிட்டமுனியானவர், அயன்றன்பால் - பிரமாவி னிடத்தில், கேட்டு - (இந்தஞானார்த்தத்தைக்) கேட்டு, நாள் - தினங்கள், அவந்தான்போகாத - வீணாக்கழியாத, இராமனுக்கு - ஸ்ரீராமருக்கு, அங்கு பதேசநல்கி - அவ்விடத்தில் அனுக்கிரகஞ்செய்து, இங்கு-இவ்விடத்தில், ஆள வந்தான் ஆளவந்தானென்னு நாமத்தோடும், வீரையின் - வீரையென்னுநக ரத்தில், மாதவப்பட்டன்வம்சம் - மாதவப்பட்டர்குலத்தில், அவதாரமாகி - அவதாரஞ்செய்து, மீளவுந்தான்வந்து - திரும்பவுந்தானேவந்து. தமிழ்-த மிழில், வசிட்டராமாயணமும் - (அந்த) ஞானவாசிட்ட அமலராமாயணத் தையும். விளம்பினன்-அருளினர் - எ - று.

எ - து. தண்டையுடைய மாதவனுபியிலுதித்த தாமரைப்பூ வில் வாசமாகிய பிரமதேவனது மனதிலுண்டான வசிட்டமுனியா னவர் பிரமாவினிடத்தி லிந்தஞானார்த்தத்தைக் கேட்டுந் தினங்கள் வீணாகக்கழியாத ஸ்ரீராமருக்கவ்விடத்தில் அனுக்கிரகஞ்செய்து இவ் விடத்தில் ஆளவந்தானென்னு நாமத்தோடும் வீரையென்னு நகரத் தில் மாதவப்பட்டர் குலத்தில் அவதாரஞ்செய்து திரும்பவுந்தா னேவந்து தமிழிலிந்த ஞானவாசிட்ட அமலராமாயணத்தையு மருளி னர்— எ-ம்.

(இம்) பிரமனே மிகுந்தகாருண்ணியத்தினல் இப்பூமியின்கண் ஆள வந்தாரென்னுமாசிரியராக அவதரித்து இந்நூலைத் திராவிடபாஷையில் அருளி ச்செய்தன ரென்பதாம். (69)

வெண்பா.

வாசிட்டமென்றளவில் வாழ்வுதரும் வாசித்தால்
நேசித்ததெல்லாநிரம்புமே—யோசித்து
அர்த்தமுணரி லருட்படுமங் கங்கிலையிற்
சித்தநிற்கின்முத்தியுமாம் தேர்.

**ஞானவாசிட்ட மூலமும்-உரையும்,**

முற்றிற்று.